உ

கணபதிதுணை

கடவுண்மாமுனிவர் அருளிச்செய்த

# திருவாதவூரடிகள் புராணம்.

இஃது

ஆசிரியர், ஸ்ரீமத். ம. க. வேற்பிள்ளை

அவர்கள் செய்த

விருத்தியுரையுடன்,

ஷை ஆசிரியரது சிரேஷ்ட புத்திரரும்

யாழ்ப்பாணம்இந்துக்கல்லூரித்தமிழ்ப்போதகாசிரியருமாகிய

திருஞானசம்பந்தப்பிள்ளை

அவர்களின் கேள்விப்படி,

யாழ்ப்பாணம்

வண்ணார்பண்ணை

சண்முகநாதன் புத்தகசாலை அதிபர்

சி. சி. சண்முகம்பிள்ளையால்,

தமது

ஸ்ரீ சண்முகநாத யந்திரசாலையில்

அச்சிடப் பெற்றது.

இரண்டாம்பதிப்பு

இராக்ஷஸ வரு ஆவணிமீ.

1915.

உ

கணபதிதுணை.

கடவுண்மாமுனிவர் அருளிச்செய்த

# திருவாதவூரடிகள் புராணம்.

இது

ஆசிரியர் ஸ்ரீமத். ம. க. வேற்பிள்ளை அவர்கள்

செய்த

## விருத்தியுரையுடன்

யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரித் தமிழ்ப் போதகாசிரியரும்

இந்துசாதனப் பத்திராசிரியருமாகிய

ம. வே. திருஞானசம்பந்தப்பிள்ளையால்

யாழ்ப்பாணம்

சைவப்பிரகாச யந்திரசாலையில்

அச்சிடுவிக்கப்பெற்றது.




மூன்றாம் பதிப்பு.

பிரமாதி ] 1939 [ மார்கழி

உ

# நூன் முகம்.

இத் திருவாதவூரடிகள்புராண விருத்தியுரை இற்றைக்கு நாற்பத்தைந்து வருடங்கட்கு முன் (மன்மதவரு—1895-ம் ஆண்டு) எமது தந்தையாரால் எழுதி வெளியிடப்பட்டது. இந்நூலின் அருமை பெருமைகளை உரையாசிரியர் அக்காலத்திலேயே எழுதியுள்ள உரைப்பாயிரத்தைக் கொண்டு அறிதலாகும். முதற் பதிப்புப் பிரதிகள் இல்லாதொழிய, சென்ற இராக்ஷத வருடத்தில் (1915-ம் ஆண்டில்) வண்ணார்பண்ணையிலுள்ள பிரபல புத்தகசாலையின் அதிபராயிருந்த திரு. S. S. சண்முகநாதனவர்கள் மூலமாக இந்நூலின் இரண்டாம் பதிப்பை அச்சிடுவித்தேம்; அப்பதிப்பை அச்சிடுவித்தற்கு முந்தியே முதற்பதிப்பின் ஒரு பிரதியை, சிதம்பரத்தில் அக்காலத்தில் நாவலர்கலாசாலைத் தலைமையாசிரியராக விருந்த எமது தந்தையாரிடம் அனுப்பினேம்; அவர்கள் அக்காலத்தில் திருவாதவூரடிகள் புராணம் மூலமாகவும், மூலமும் உரையுமாகவும் பிறரால் அச்சிடப்பட்டு வழங்கிய பிரதிகளுட் காணப்பட்ட பாடபேதங்களையும் விபரீத உரைகளையுங் கண்டித்துச் சமாதானமெழுதியும் பல புதிய விஷயங்களைச் சேர்த்தெழுதியும் உதவினார்கள்; அத்திருத்தங்களுடனேயே இரண்டாம்பதிப்பு அச்சிடப்பெற்றது. இரண்டாம்பதிப்புப் பிரதிகளும் இற்றைக்குச் சில வருடங்கட்கு முந்தியே செலவாய்விட, இப்பொழுது மூன்றும் பதிப்பாக இவ்விருத்தியுரையை அச்சிட்டு வெளியிடலானேம். இங்ஙனம் அச்சிடும்போது பிற்பகுதியில் யுத்தங்காரணமாகக் காகிதம், பிரதிகளைக் கட்டுவதற்காகிய உபகரணங்கள் யாவும் மும்மடங்கு விலையேறிவிட்டன; ஆயினும் பிரதியின் விலையை முன்போல விதித்துள்ளேம். சைவநன்மக்களுக்கும் தமிழ் மாணாக்கர்கட்கும் இன்றியமையாததாகிய சிறந்த இந்நூற் பிரதிகளை வாங்கி உபயோகித்து நன்மை யடைவதோடு எம்மையும் ஊக்கப்படுத்துவது அவர்களுடைய கடனும்.

பிரமாதிவரு மார்கழிமீ<br>15 - 12 - 39

ம. வே. திருஞானசம்பந்தன்.

உ

கணபதிதுணை.

## சருக்க அட்டவணை

| பக்கம் | சருக்கம் | பாடற்றொகை. |
|---|---|---|
| | சிறப்புப்பாயிரம் ... | ... |
| | உரைப்பாயிரம் ... | ... |
| ௪. | பாயிரம் ... ... | ௭ |
| ௧௨. | மந்திரிச் சருக்கம் ... | ௪0 |
| ௪௪. | திருப்பெருந்துறைச் சருக்கம் | ௧௩௫ |
| ௧௬௫. | குதிரையிட்ட சருக்கம் ... | ௬௬ |
| ௨0௫. | மண்சுமந்த சருக்கம் ... | ௯௫ |
| ௨௬௫. | திருவம்பலச் சருக்கம் ... | ௭0 |
| ௩0௭. | புத்தரை வாதில்வென்ற சருக்கம் | ௯௬ |
| ௩௭௪. | திருவடிபெற்ற சருக்கம் ... | ௩௫ |

உ

சிவமயம்.

# சிறப்புப் பாயிரம்.

நல்லூர், மகாவித்துவசிரோமணி
ஸ்ரீமத். ச. பொன்னம்பலப்பிள்ளை அவர்கள்
இயற்றியது.

மதிமலி சடைமுடி வரதன தருள்பெறு
துதியமை வாதவூர்த் தோன்றலார் சரிதையைக்
கடவுண்மா முனியெனுந் திடமுடைக் கவிஞன்
புடவியோர் மகிழ்தரப் புராணமா வகுத்தன
னதற்குரை விரிவொன் றிறிறபத் தருகெனப்
புதர்க்குழூ வோர்சிலர் புகன்றனராக
மட்டுவிற் பதிவயிற் சிட்டனு யமர்ந்த
கணபதிப் பிள்ளைவேள் கணிப்பருந் தவத்தா
னணியவேற் பிள்ளையா நற்பெருங் கலைஞன்
பொன்னவ னன்ன நன்மதிப் புலவர்கண்
மெச்சிட வோருரை விரித்தன
னுச்சிமே லறிஞர்கொண் டுவப்புறல் கடனே.

திருவனந்தபுரத்து மஹாராஜா கல்லூரித்
திராவிட பிரதம மகாபண்டிதராயிருந்த
ஸ்ரீமத். புலோலி, வ. கணபதிப்பிள்ளை.

மெய்வைத்த சமயங்கள் பலவற்றின் விழுப்புடைய வேதநூலின்
கைவைத்த சைவமதங் காட்டுமுதற் கடவுளையே கருதியன்பிற்
றெய்வத்தன் மையரான திருவாதபுரேசரது சிறந்தகாதை
யுய்வைத்தந் தருளுதற்கங்குபர்கடவுண்முனிதமிழாலுரைத்தானன்றே.

அன்றுவட மொழிக்கடலி னகத்தியமா முனியுரைத்த வமலகாதை
நன்றுநில வுதற்குவந்து பெரும்புலமைக் கடவுண்முனிநவின்றபாவிற்
சென்றுநிகழ்திருவாதவூரார்புராணப்பொருளைத்தெளிவித்துய்வோ
மென்றுவிரிவுரையியற்றித்தமிழறிவோரகமலர்த்துமென்றாழானேன்.

தேறரிய திரிசொல்லுக்கியற்சொல்லுந்தொகைநிலைக்குவிரியுஞ்சேர்ந்து
கூறரியதொடர்மொழிக்குவேறுவேறும்வகையுங்குறிப்புக்கோர்ந்து
பேறரியவெளிப்படையுமாக்கியிலக்கணமைந்தும்பிழையாதார்ந்து
மாறரியபதினூலின்வகைகளையும்விரித்துரையில்வாய்க்கச்செய்தோன்.

மழைசுரந்துவளம்பெருக்குமட்டுவிலாம்பதியகத்துவாழ்வேளாளப்
பழையபெருநன்மரபுற்பவித்தெழில்காளைப்பருவம்படைத்தநாளிற்
கழைகமுகென்றிடவயிர்ப்புக்காட்டுநல்லூரெனும்பதியிற்கார்த்திகேயத்
தழைமனத்துத்தமிழோசன்றன்னிட நன்னூலாதிதகவாலோதி.

எத்தலமும்புகழ்நிறுத்துமுத்தமிழினியற்றமிழ்நூலெல்லாமாய்ந்து
சித்தனருவுருவனருள்சிவாகமநூலுந்தெளிந்துசிவன்றாளேத்து
முத்தமனுமாறுமுகநாவலன்பாலும்புலவருவப்பாலுச்சி
வைத்தவவன்மருகன்பொன்னம்பலவன்பாலுமிகமகிழ்ந்துகற்றோன்.

வேறு.

இங்கெடுத் துரைத்தமுவ ரிடமிருந்து கற்றபே
றுங்கெடுத் துரைத்தவாத வூரர்மான்மி யத்திலாம்
பங்கெடுத்த விரிவுரைப் பயன்கள் காட்டுமளவிறன்
பங்கெடுத் துணர்ந்துளோர்கள் பரமவின்ப முறுவரே.

வேறு.

மாசத்தார் தொழுதேத்த வரமளிக்கும் பசுபதிவாழ் வளம்புலோலித்
தேசத்தார் நன்மரபிற் செனித்தகண பதிப்பிள்ளைச் செம்மலாற்று
நேசத்தார் தவப்புதல்வ னாயுதித்த வேற்பிள்ளை நிதிமான் பூமி
வாசந்தார் மகிழ்வாத வூரர்கதைக்குரை விரித்துவகுத்தான்மன்னோ.

---

சுன்னாகம்

## ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப்புலவர்.

நிலம்புகழுந் தமிழ்நாட்டி லறிஞரெலாங் கொண்டாடி நியமமாகத்
தலம்புகழு முறையோதிப் பொருளாய்ந்து களிகூருஞ் சைவசாரப்
புலம்பரவு திருவாத வூரடிகள் புராணமுறும் பொருவில் பத்தி
நலம்பரவு கவிகள்பல பிரதிகொடு வழுநீங்க நயப்பா னாய்ந்து.

திருத்தமுறும்பதப்பொருளுங்கருத்துரையுஞ்சரித்திரமுஞ்சிறந்தநுண்மை
யருத்தமுறுமிலக்கணமுஞ்சித்தாந்தசாத்திரமுமரியகாட்டாய்ப் [பக்
பொருத்தமுறுமிலக்கியமுந்தடைவிடையும்பிறநலமும்பொருந்திநிற்
கருத்தமையும்விருத்தியுரையுரைத்தறிஞர்களிப்பவுபகாரியானான்.



யாவரினனிற்சொல்லுதும்யாழ்ப்பாணமுறும்புலோலிநகரேரின்வாழ்
காவலனாயுதித்தகணபதிப்பிள்ளைதவப்புதல்வன்கனகமேனிப் [நர்
பூவனிதைதிருவருளும்பாவனிதைதிருவருளும்பொருந்தும்வள்ள [ன்
றேவுலககற்பகம்போற்கற்பவர்க்குமெய்ப்பொருள்கடெளிக்குந்தேச

நல்லைநகராறுமுகநாவலர்க்குமாமணிபோனல்லோர்கொள்ளுஞ்
சொல்லமர்வித்துவசூடாமணிபொன்னம்பலநாமத்தோன்றனுக்குங்
கல்விதருகுருகார்த்திகேயனுக்குமாணவனாங்கடமைபூண்டு
வல்லமையானிலக்கியலக்கணமுதல்பல்கலைகண்மரபிற்கற்றோன்.

மன்றமரும்புலியூரந்தாதியெனுநூற்குரைமுன்வகுத்தசீலன் [ய்மை
குன்றனையபெருங்குணத்தோன் சைவநெறிமுறையாளன்கோதில்வா
நன்றியறிவருளாண்மைபொறைகேண்மைமுதலாயநலங்கள்பூண்டோ
வென்றிவளஞ்செறிமட்டுவிலினுறையும்வேற்பிள்ளைவித்துவானே [ன்

---

புலோலிநகர்

## ஸ்ரீமத். அரு. சோமசுந்தரப்புலவர்.

பூவினர விந்தமெனப் புனனதியிற் கங்கையெனப்
பாவினரும் வெள்ளையெனப் படர்சுடரிற் பானுவெனத்
தேவினரி யெனத் தருவிற் றிகழ்மலர்க்கற் பகமெனச்சீர்
மேவியபன் னாடுகளின் மேதகைய தென்னாட்டில். (க)

வாய்ந்தமலர்த் தண்டலையும் வளவயலும் பொலிவெய்தி
யேய்ந்தவித ரணநிதியோ ரில்லங்கள் பலகுழுமித்
தோய்ந்தவருஞ் சிவபத்தித் தொண்டர்மடங் குலவிமுன்னா
லாய்ந்தவர்கள் கவிக்கடங்கா தமர்வாத வூரின்கண். (உ)

நீறுமணி கண்டிகையு நிமலவெழுத் தைந்துமுடி
யாறுபடர் சிவன்புகழு மவனியெலாம் பெரிதேற
மாறுபடு பரசமய மயலிருளா ழிப்புறத்தி
லேறுமிரு ளொடுமருவி யெழவஞ்சிக் கிடந்தினைய. (ங)

நந்தலறுங் கடல்புடைசூழ் ஞாலமுளார் பயன்றுய்ப்ப
வந்ததிரு வாதவூர் வள்ளறிரு மான்மியத்தைச்
செந்தமிழி னியல்பாவிற் செய்துவினைக் குரம்பைகொடு
முந்துபுகழ் நிறீஇயினனான் முதுகடவுண் மாமுனியே. (ச)

அந்தவருட் டிருவாத வூரடிகள் புராணமதைச்
சிந்தைதெவிட் டாவமுதைத் தேன்பெருக்கைப் புளிப்பிக்குஞ்
சந்தமிகும் பாடறனைத் தக்கவுரை யொன்றியற்றி
யிந்தநில முயவெழுதா வெழுத்திசைவித் திடுதியென. (௫)

தேவநிலத் தைந்தருவுஞ் சேர்ந்துவடி வொன்றென்றாய்ப்
பாவலரைப் புரந்தருளும் படிபடியி லமர்ந்தனையார்
காவலரு மதித்தபுகழ்க் காமருகார் காத்தாராம்
பூவலய வறிஞர்முதற் பொருவிறந்தோர் போற்றிசைக்க. (௬)

வீடுமனை நிகர்விரதன் வித்தையினன் மாஞானி
பீடுகெழு சாந்தமுதற் பெருங்குணம்பே ரணியானே
னீடுபுகழ்ச் சன்மார்க்க நெறிநின்றோ னிபுணர்பலர்
பாடுபுகழ்க் கார்த்திகே யாசிரியன் றன்பாலும். (௭)

பண்டிதர்தம் போரேறாய்ப் பகர்வித்வ சிரோமணியாய்த்
தெண்டிரையி னமிர்தமெனத் திகழ்தரு லக்கியங்கட்கும்
கண்டருலக் கணங்கட்குங் கரைகாணாக் கலைக்கடலாய்
மண்டியபொன் னம்பலப்பே ராசிரியமணி மாட்டும். (௮)

நிலப்பரப்பின் விரிபுகழா நிருமலன்மா சிவபூசை
நலப்படு தொண்டர்கள்பூசை நாளுநனி நடத்தினோன்
புலப்படுபொய்ந் நாவலர்கள் போலாதோன் றிருநல்லூர்
வலப்படுகல் லாறுமுக மகத்துவநா வலன்மாட்டும். (௯)

கற்றவனைந் திலக்கணமுங் கசடறவைந் திலக்கணமு
முற்றதொரு மட்டுவினன் குறைபதியாக் கொண்டுவப்போன்
றெற்றெனவே சித்தாந்தந் தெளிந்தவன்சீர் விதாலயங்கள்
குற்றமற வதிபதியாக் கொடுநடத்துங் குணசீலன் (௧௦)

பொய்யடரு மழுக்காறு புறமொழிதல் கடுங்குறளை
வெய்யசின முதலியன மிஞிறியென விளங்கினோன்
றுய்யசுவை கெழீஇயதமிழ்த் தோமறுதொன் னூல்பலவு
மையமொடு திரிபகல வாங்குகற்பித் திடுமாசான். (௧௧)

பிறையொன்று செஞ்சடிலப் பெம்மானை யனுதினமு
முறையொன்ற நெஞ்சதனின் முதிருமன்பின் வழிபடுவோ



னறையொன்று கடம்பணிதோ ளம்பெருமான் புராணமதை
நிறையொன்ற வாய்ந்துமன நெகிழ்ந்திறைக்கு நீர்விழியான். (௧௨)

ஒன்றுமதி வள்ளுவர்தா மூருணிநீர் நிறைந்தற்றே
யென்றுவிளம் பியகுறளுக் கியைந்தவிலக் கியமானோன்
மன்றுணட மொழியாத மணிகண்டன் மதவல்லி
யென்றுமினி திற்படர வெழுகொளு கொம்பேயனையான் (௧௩)

வஞ்சகமா தியமாசு மனக்களங்க வழிமறித்தோ
னெஞ்சகத்திற் படுமெவையு நிகழ்த்திடுநீர் னமகொடியன்
விஞ்சுபொருட் செல்வமதை விரவியநன் மாணவர்க்கொன்
றெஞ்சலிலா தீகல்வி யெனுஞ்செல்வ மொடுபடைத்தோன். (௧௪)

முன்னிளமை யிந்நூற்கு முறைமையினோர் பொழிப்புரையு
மன்னுபுலி யூரின்மிசை வாய்த்தவந்தா திக்குரையும்
பன்னுதல்செய் தோன்சிவன்றாட் பத்திமையின் பழுப்புடையோ
னுன்னியதன் மரபிரண்டுஞ் சைவமரபா வுடையோன். (௧௫)

மன்னுதிரு நெல்வேலி மட்டுவின்மான் புலோலியினிற்
றுன்னுநதி குலக்கிளையின் றோற்றமுறு மேற்றத்தான்
றன்னகரில் புலோலிநகர் சார்ந்தகண பதிப்பிள்ளை
முன்னரியற் றியதவத்தின் முதிர்ந்தபெரும் பேறனையான். (௧௬)

உற்றபெரும் பருணிதனை யோங்கியவேற் பிள்ளையுயர்
முற்றவத்தெய் தியவுடற்கு முதிர்ந்தபய னிதினூங்கு
மற்றிலையென் றுணர்ந்துமந்த மதிவாணர் வேண்டுதலை
யற்றமறு தூண்டுகோ லாகமிக வநுசரித்தும். (௧௭)

மூலமதைத் தமிழ்நாட்டு முற்புலவர் பற்பலரு
மேலுமச்சி லியைவித்த வெண்ணரிய பிழைகளெலாம்
சாலமிகும் பழையனவாய்த் தனிமதுரை மாநகரிற்
சீலமிகு சம்பந்த வாதீனஞ் சிராப்பள்ளி. (௧௮)

கச்சியினின் வருவித்த கருதுமுண்மைப் பிரதிகொடு
நச்சியிய லுறத்திருத்தி நன்குமேற் கோணாட்டி
மெச்சியவைந் திலக்கணத்தின் விதிவேண்டு வனவிளக்கி
யுச்சியின் மெய்ப் புலவர்கொள வுரைவிருத்தி யுதவினனே. (௧௯)

———

நல்லூர், மகாவித்துவசிரோமணி

ஸ்ரீமத். ச. பொன்னம்பலப்பிள்ளை அவர்கள் மாணாக்கரும்,

தஞ்சைத் திராவிடநேசப் பத்திராதிபருமாகிய

## உரத்தூர், ஸ்ரீமத். கோ. வைத்தியலிங்கப்பிள்ளை.

திருவளர் சைவச் செந்நெறி தழைக்க
வரவுருக் கொண்டருள் வாதவூ ரடிகடங்
காதையை விளக்கக் கடவுண்மா முனிவரன்
மேதகு புராணமா விரித்துரைத் தருளின
னன்னது பின்ன ரரியுழு வரியெனச்
சென்னா ளேட்டிற் சிதைந்தமை திருத்துபு
முத்தமிழ்ப் புலமைசெ யெத்திறத் தோருஞ்
சித்தங் களிமிகச் செவ்விதி னுளங்கொளீஇப்
பதப்பொரு டெளிவுதாற் பரியப் பொருண்முதல்
விதப்படு பல்பயன் வெளிப்பட முறையே
வேண்டுழி வகைபெற விளக்கிநன் கிலக்கண
நச்சர் பூரணர் நவிற்றுரை கட்கிணை
யிச்சம யத்திது வென்றே யிசைப்பச்
சொற்றன னேருரை தொன்னெறிப் படியே
மல்லன் மிகுபொழி னல்லையி னுதித்திங்
கென்னுளங் குடிகொள் பொன்னம் பலவனும்
புண்ணிய மூர்த்திநற் புலவர் சிரோமணி
யாதிமுச் செல்வர்பா லருந்தமிழ் பயின்றோ
னேமுறக் கற்போர்க் கெடுத்தினி துரைப்போன்
மட்டுவிற் பதிவாழ் மாகண பதிவே
ணற்றவப் பயனாய் நன்மர புதித்தோன்
கற்றவர் வியக்குங் கல்விப் பிரசங்கி
வாலுணர் வின்வழா வள்ளல்
வேலுப் பிள்ளையாம் விற்பன்னர் பிரானே.

திருச்சிற்றம்பலம்.

———

உ

சிவமயம்

# உரைப்பாயிரம்.

மலைமுனி சொலத்தன் டமிழ்மொழி வகுத்த
வுலகுயி ரீன்ற சிலைநுதல் கொழுநன்
பதம்பணிந் தேத்தி யிதந்தரு பனுவல்க
ணம்மனோர் நற்கதி செம்மையிற் புகுமா
நவிற்றிய நல்லை நாவல ராதியாம்
புவிப்பெருங் குரவரெம் புந்திவிட் டகலாச்
செல்வர்கண் மூவரைத் திருவடி வணங்குது
நாதமூர் வாய்மை வாதவூ ரடிகள்
பொலமலி சிவனருள் புராணத்
தெளிவிரி வுரைநனி திகழ்தரற் பொருட்டே.

இத் திருவாதவூரடிகள் புராணம், அதி பரமாப்தராகிய சிவபிரான் அருளிச்செய்த வேத சிவாகமமென்னும் முதனூ லிரண்டனுள் வேதத்திற் குபாங்கமாகிய பதினெண் புராணங் களுக்குட் சிறந்த கந்தபுராணத்துள்ள சங்கர சங்கிதையின் ஒரு கூறாகிய ஆலாசிய மான்மியத்தில் ஒரு பாகமாயுள்ளது. பல அற்புதங்களினாலே சைவ சமயமே மெய்ச் சமயமென்று தாபித் தருளிய உண்மை நாயன்மார்களாகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகண் முதலிய சமய குரவர் நால்வருட் பரமகிருபாலுவாகிய திருவாதவூரடிகளது திவ்விய சரித்திரத்தை விரித்துணர்த்துவது. தமிழிலே அதி நுட்பமாகிய சிருங்கார வருணனைகளையுடைய காவிய நடைபற்றி வரும் புராணநடை போலாகாது, இருடிகள் வாக்காகிய சம்ஸ்கிருத புராணநடைபற்றிப் பெரும்பாலும் வருணனைகளும் திரிசொற் பிரயோகமுமின்றி இயற்சொற் பிரயோகமே கொண்டு, சிவபத்தியே தமக்கொரு வடிவமாகிய கடவுண்மாமுனிவரால் அருளிச் செய்யப்பட்டது. சிவமூல மந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரம் சிவசின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்கள் திருவாசகம் திருக்கோவையா ரென்னும் இவைகளின் மகிமைகளை விளக்கி ஞாபகங் கூர்விப்பது. சிதம்பர ரகசியங்களை விளக்குவது. வேதாந்தத் தெளிவாகிய சிவஞானபோதம் சிவஞானசித்தியார் முதலிய சைவ சித்தாந்த சாத்திரங்கட்குப் பெரிதும் இலக்கியமா யுள்ளது.

சரியை முதலிய நான்கு பாதங்களையுந் தனித் தனி விவகரிப்பது. சிவபத்தி அடியார்பத்திகளை வளர்ப்பது. சைவசித்தாந்திகட்கு நெறிகாட்டியாயுள்ளது, சிவாலயம் விக்கினேசுவராலயம் குகாலயம் முதலிய சைவாலயங்களினும், புண்ணிய நதி தீரங்களினும், திரு மடங்களினும், சுத்த கிருகங்களினும், வருடந்தோறும் மார்கழி மாசத்துத் திருவாதிரை அந்தமான முற் பத்துத் தினங்களினும் பெரும்பாலும் நியமமாக அன்போடு பூசிக்கவும், வாசிக்கவும், அர்த்தஞ் சொல்லவும், கேட்கவும்படுவது. ஆதலின் அவ்வாலயங்கட்கின்றியமையாதது. ஆரம்பத்திலே, செய்யுணடையிற் சிறுவர்கள் வாசிக்கப் பெறுவதற்கும் பொருள் சொல்லப் பழகுவதற்குஞ் சிறந்ததென்றும், சுருங்கியதென்றும், சிறிதும் காம சிருங்கார வருணனைகள் இன்மையினாலே கற்கும் மாணாக்கர்கட்கு உள்ளத்தில் ஒரு சிறிதேனும் சிற்றின்ப ஞாபகம் உதிக்கச் செய்யாததென்றும், எல்லோராலும் விசேஷமாக எடுத்துக்கொள்ளப் பட்டமையின், வித்தியாசாலை வித்தியார்த்திகட்கு இன்றியமையாதது. வேறும் இன்னோரன்ன பல குணதிசயங்களை யுடையது.

இத்துணைப் பெருஞ் சிறப்பினதாகிய இப்புராணத்திற்கு இங்குள்ள அறிஞர் சிலர் வேண்டிக்கொண்ட பிரகாரம் விருத்தியுரை செய்யுமாறு கருதி முதலில் மூலபாடங்களை ஆராயும் பொழுது, அவை தம் மனம் போனவாறே திருத்தி அச்சிற் பதிப்பித்த புலவர்களான் மிகவும் பிறழ்ந்திருப்பக் கண்டு, மதுரைத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் ஆதீனம் முதலிய விசேஷ தானங்கள் சிலவற்றினின்றும் நமது நண்பர்கள் உபகரித்த மிகப் பழைய மூலப் பிரதிரூபங்களைக் கொண்டு ஆராய்ந்து மூல பாடங்களை உள்ளவாறு கண்டு, நஞ் சிற்றறிவிற்குத் தோன்றிய பிரகாரம், பண்டையுரை யாசிரியர்கள் திருவடிகளை மனமொழி மெய்களிற் றொழுது, பெரும்பான்மை பதப்பொருள் பற்றியும், சிறுபான்மை தாற்பரியப் பொருண் முதலிய பற்றியும், ஒரு தொடர்ப் பொருளை அதனை விளக்குதற்கேற்ற மற்றொரு தொடரான் ஒரோவழியமைத்தும், சிலவற்றை விரித்தும், சிலவற்றைச் சுருக்கியும், சிலவற்றை விரிவஞ்சி விரியா தொழிந்தும், இன்னோரன்ன தொன்னெறி மரபொடும், விருத்தியுரையிது வேண்டினமென்க.

திருச்சிற்றம்பலம்,

இங்ஙனம்,
ம. க. வே.

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவாதவூரடிகள் புராணம்

## மூலமும் — உரையும்.

காப்பு.

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
பரந்தநீற் றழகுபச் சுடம்பிற்
றிவளமா துடனின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்திற்
றரித்துயர் கிரிப்புறத் தெழுதுங்
கவளமா களிற்றின் றிருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம்.

இதன் பொருள்:—மால் பவள வரையில் நிலவு எறிப்பது போல் பரந்த நீற்று அழகு - பெரிய பவளமலையின்கண்ணே சந்திரிகை பிரகாசிப்பது போலச் செம்பவளத் திருமேனியிலே பரவப்பூசிய வெண்மையாகிய விபூதியினது கோலமானது, மாது பச்சு உடம்பில் திவள - உமையம்மையினது பசுமையாகிய திருமேனியிலே துவளாநிற்ப, உடன் நின்று ஆடிய பரமன் சிறுவனை - அவ்வம்மையுடனின்று திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமானுடைய திருக்குமாரரை, தவள மா மருப்பு ஒன்று ஒடித்து ஒரு கரத்தில் தரித்து - வெண்மையாகிய பெரிய ஒரு திருக்கொம்பை முரித்து ஒரு திருக்கரத்தில் எழுத்தாணியாகக் கொண்டு, பெரும் பாரதப் போர் உயர் கிரிப் புறத்து எழுதும் - மகாபாரத யுத்த சரித்திரத்தை உயர்ந்த மேருகிரியாகிய ஏட்டின்கண் ணெழுதியருளிய, கவளமா களிற்றின் திரு முகம் படைத்த கடவுளை - கவள வுணவை யுடைய கரிய களிற்றியானையினது திருமுகத்தையுடைய விநாயகக்கடவுளை, நினைந்து - யாம் எண்ணெடுத்துக் கொண்ட இலக்கியம் இடையூறின்றி இனிது முடியும்பொருட்டு மனத்தினாலே தியானித்து, கை தொழுவாம் - கைகளினாலே அஞ்சலி செய்வாம் என்றவாறு.

யாமென்னுந் தோன்றா எழுவாய் "எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி, யவ்விய னிலையல் செவ்விதென்ப" என்பதனால் வருவிக்கப்பட்

டது. நீற்றழகென்னுஞ் சொற் பிரயோகத்திற் கேற்ப நீற்றின தழகென
ஆறுவதன் பொருள்படப் பொருளுரைப்பினும், மேல் வருந் திவளுதல்
வினைக்கு அந்நீறல்லது வினைமுதல் பிறிதொன் றின்மையின், அழகையுடைய
நீறென்பதே கருத்தாகக் கொள்க. ஆடிய வென்னும் பெயரெச்சம் கால
வழுவமைதி; விடமுண்டருளியவழிக் கைலைக்க ணிகழ்ந்த திருநடனமெனக்
கொண்டு வழாநிலையென் றுரைப்பினுமமையும். போரெழுதுங் கடவுளென
முடிக்க. போர் ஆகுபெயர். வினைந்து கைதொழுவா மெனவே, இனம்
பற்றி வாக்காற் றுதித்தலும் ஈண்டுக் கொள்ளப்படும். மூத்த மகன்மாட்டுத்
தந்தைக்கும் இளைய மகன்மாட்டுத் தாய்க்கும் அன்பு மிகுமென்னும் உல
கியல்பு பற்றிச் சேட்ட புத்திரராகிய விநாயகக்கடவுளைப் "பரமன் சிறுவ"
னென்றார். அது "முன்னீன்ற தநயர்பாற் றந்தையருண் முழுதிருத்தப்,
பின்னீன்ற தநயர்பாற் றாயுவக்கும் பெரிதென்பார்" என்னும் உபதேசகாண்
டச் செய்யுளானும் "மூத்தமக னிடத்தார்வ மீன்றெடுத்த பிதாமகற்கு
முதிருமாற்றால்" என்னும் பார்க்கவபுராணச் செய்யுளானு மறிக. இக்கருத்
தைப்பற்றியன்றே ஆசிரியர் இளைய மகற்கு வணக்கங் கூறுமிடத்துத் தாயை
விதந்து "மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்" எனக் கூறியதூஉ
மென்க. கவளவுணவு வாய்கொண்டவளவுணவு; ஈண்டுக் கவளமென்றது
பாசஞானத்தோ டொருங் கெண்ணப்படும் பசுஞானத்தை. அது "தறுகட்
பாசக் கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணையென்னும்,
வெள்ளமதம் பொழிசித்தி வேழ" மென்பதனானு முணர்க. பாசஞான
மாவது: வேத முதலிய சொற்பிரபஞ்சமும் நிலமுத லாதமீறாகிய பொருட்
பிரபஞ்சமும் பற்றி நிகழுஞ் சுட்டுணர்வாகிய ஏகதேச ஞானமாம். பசு
ஞானமாவது: ஆன்மா தற்சொரூபமே அறியமாட்டாதுமேற்கூறிய
இருவகைப் பிரபஞ்சங்களினும் முத்தனாகிய தான் மேற்பட்டதென்னுஞ்
செருக்காற் பதியைப்போல நானும் பிரமமாவேனெனத் தன்னைக் கடிதின்
மதிக்க வருஞ் சிவசமவாத ஞானமாம். அது "வேதசாத்திரமிருதி புராண
கலை ஞானம் விரும்ப சவை வைகரியா தித்திறங்கண் மேலா, நாதமுடி வான
வெல்லாம் பாசஞான நணுகியான்மா விவை கீழ்நாடலாலே, காதலினு
னன்பிரம மென்னுஞானங் கருதுபசுஞானம்" என்பதனா னறிக. மங்கல
மொழிமுதல் வகுத்துக் கூறவேண்டுமாதலிற் பவளமால்வரை எனவும்,
விபூதி சமயசாதனத் திருவருட் சின்னமாகலின் அதுவாயிலாகச் சமயக் கட
வுளைக் கூறுதல் ஈண்டைச் சமயநிலைக் கியைபுடைத்தென்னுங் கருத்தாற்
பாந்த நீற்றழகு பச்சுடம்பிற் றிவள எனவும், பசுநூலாகிய பாரதசரித்திரத்
தைக் கொம்பை முரித்துத் தாமே மலைமீ தெழுதிய கடவுள் இச் சிவபுரா
ணத்தை யாங் கூறுதற் கருள்செய்வரென்பது சொல்லவும்வேண்டுமோவென்
பார் அது தோன்றப் "பாரதப் பெரும்போர் மருப்பொன் றொடித்துக் கிரிப்
புறத் தெழுதுங் கடவு" ளெனவுங் கூறினர். இன்னும், "பவளமால் வரையி



னிலவெறிப்பதுபோற் பாந்த நீற்றழகு" என்பதனான் யோக வடிவமும், "பச்
சுடம்பிற் றிவள மாதுடனின்றாடிய" என்பதனாற் போகவடிவமும் குறிக்கப்
படுமாதலின் தமக்கென ஒரு வடிவமுமின்றி ஆன்மாக்கள் பொருட்டு இவ்
வடிவங்களைத் தாமே கொண்டருளும் பரமகருணாநிதியாகிய சிவபெருமா
னுடைய திருக்குமாரராகலின், அவர், தந்தை குணமே மைந்தற்கு மிகும்
என்பதுபற்றி யாம் ஈண்டெடுத்துக்கொண்ட இவ்விலக்கியம் இடையூ
றின்றி இனிது முடியும்பொருட்டு ஒருதலையான் அநுக்கிரகஞ்செய்வரென்ப
தினிது விளக்கிய, "பவளமால்வரையி னிலவெறிப்பதுபோற் பாந்தநீற்றழகு
பச்சுடம்பிற், றிவளமா துடனின்றாடிய பரமன் சிறுவன்" என்றாரெனக் கோ
டலுமாம். கயமுகனைக் கொல்லும்பொருட்டு முரித்த கொம்பை ஈண்டுப்
பாரதமெழுதும் பொருட்டு முரித்ததென்றது புராணபேதம் பற்றியென்க.
இந்நூலின்கண் மேல்வரும் மலைவுகளும் இங்ஙனமே பெரும்பான்மையும்
புராணபேதம் பற்றியே வருமென்ப துய்த்துணர்ந்து சோடற்கு இஃதீண்டு
முதற்கண் வைக்கப்பட்டது. "ஏதிலாக்கற்ப மெண்ணில சென்றன, வாத
லாலிக் கதையு மனந்தமாம் பேதமாகும்" "வேதமொடு தந்திரமு மவற்
றின் சார்பு மிருதிகளும் பிறநூலும் வேறுவேறு, வோதிடு மண்டத்தியற்கை
மலைவோ வென்று லுண்மை தெரிந்திடிற் படைப்பு முலப்பில்பேத, மாதலி
னலவ்வவற்றின் றிரிபுகாடி யறிந்த வுனக் கீண்டுண்மை யதுவே சொற்றாம்"
என்பனவற்றாற் புராணபேத மின்னதென்ப தினிது விளங்கும். இங்ஙனமே
சிவாகமங்கள் தம்முண் மலைவனவற்றிற்கும் பெரும்பான்மையும் ஆகமபேதத்
தின் மேல் வைத்தே சமாதானஞ் செய்யப்படும். அது "மற்றைய மாதங்க
ளொரு நான்கும் வழுவவற்று, ளூற்றிடு நற்காலங்களும்" என்னுஞ் சைவ
சமயநெறிக் குறளுரையானும், "பலவாஞ் சிருட்டி பகாரகமமும், பலவித
மாய்த் தோன்றுமெனப் பார்" என்னுங் குறள் முதலியவற்றானு முய்த்
துணர்க. இனி, இதற்கிங்ஙனமன்றி, ஒடித் துயர் தவளமா மருப்பொன்
றொரு காத்திற் றரித்துப் பெரும் பாரதப்போர் கிரிப்புறத்தெழுதுங் கடவு
ளெனக் கொண்டுகூட்டிப் பொருள்கொண்டு, ஒடித்த கொம்பு துட்ட நிக்
கிரக சிட்டபரிபாலனஞ்செய்து மேம்பட, ஒடியாத மற்றைக் கொம்பிற்கு
அம்மேம்பாடின்மையின், இதினும் அது உயர்ந்ததென்பார் ஒடித்துயர்
என்றா ரென்றுரைத்தலு மொன்று. ஒடித்துயர் ஒடித்தலி னுயர்ந்ததென்க.
ஆசிரியர் தாம் ஈண்டு முதற்கட் செய்துகொண்ட கடவுள் வாழ்த்தை இங்ங
னஞ் செய்யுளான் விளக்கியது மாணாக்கற் கறிவுறுத்தற் பொருட்டென்க.
இத்தலைச் செய்யுள் எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்; "கழிநெடி லடி
நான் கொத்திறின் விருத்தமஃ தழியாமரபின தகவலாகும்" என்பதிலக்கண
மாகலின், பவள வரையுந் தொக்குநிற்குந் திருமேனியுமாகிய உவமான உவ
மேயங்கட்கிடையினும், நிலவெறித்தலும் நீற்றழகுமாகிய உவமான உவ
மேயங்கட்கிடையினும் ஒப்பவாராது. அவற்று ளோரிடத்து மாத்திரம்

போலு மென்னு முவமைச் சொல் வந்தமையின் இஃது 'ஒருவயிற் போலி' யென்னு மலங்காரமாம். ஈண்டுப் பொதுத்தன்மையும் உவமேயமுந் தொக்க தொகையாகலின், இது விரி தொகை யென்னு மிரண்டனுள் 'தொகை யுவமை' யின்பாற் படுமென்க.

இக் காப்புச் செய்யுளின் ஈற்றடியிற் கவளமா களிற்றின் றிருமுகம் படைத்த கடவுள் என்னும் பாடத்தை மாற்றிக் கவளமாமுகத்தின் றிரு முகம் படைத்த கடவுள் எனப்பாடங்கொள்வாருமுளர். அது ஆசிரியரது பாடமன்றென்பதற்குத் தமிழ்த்தேயமே சான்றாகலானும், பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லாத பாடங்கோடல் ஆன்றோ ராசார மன்மையானும், அது "சித்திர மிலகு செவ்வாய்ச் சிறடிப் புதல்வர்" என்றற் றொடக்கத்த மூல பாடங்களைச் சித்திரவிலவுச் செவ்வாய்ச் சீறடிப் புதல்வர் என்றற்றொடக்கத் தனவாக ஆன்றோர் திருத்தாது வாளாபோதலான் அறியக்கிடத்தலானும், "முன்னூலினில்லாப் பொருளை மொழிவாரேரு, ரின்னுரைரயத் திழிந்து" "திங்களொடு ஞாயிறன்ன வாய்மையும் ... துலைநாவன்ன சமநிலை யுளப்பட, எண்வகை யுறுப்பினவாகி" என்றற் றொடக்கத் தான்றோர் வாக்குக்களை அவரங்ஙனந் திருத்தாது வாளா போதற்குக் காரணமென்பது நாம் ஊகித் துணர்தற்பால தொன்றாகலானும், இன்னோரன்ன பிறவாற்றானும், பொருட் சிறப்பு முதலியன நோக்கியாதல் பிறிதொரு காரணம்பற்றியாதல் பண்டை அருட் பெரும் புலமை ஆசிரியர்களது மூலபாடங்களைத் தத்தம் மனம்போன போக்கின் வண்ணமே புத்திபூர்வமாகப் புதுக்கி விபரீதபாடப் பிரயோகங் கோடல் இகபரமிரண்டினும் உய்தியில் குற்றமேயாமென்க. அல்லதூஉம், கவளமா என்பதற்கு யானையெனப் பொருள் கோடலே ஈண்டைக் கின்றி யமையாததொரு விசேஷார்த்தமா மென்பது அவர் கருத்தாயின், ஆசிரிய ரது கவளமாகளிற்றின் றிருமுகமென்னும் மூலபாடத்தையே களிற்றுக் கவளமாவின் முகமென அந்நுவயஞ்செய்து களிற்றியானையின் முகமெனப் பொருளுரைக்க, அவ்வர்த்தம் தானே யமையுமென்க.

---

## பாயிரம் — சபாபதி.

வேறு.

இதந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்புபோல்
விதம்படுல கங்களின் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொடு துந்துபி வளங்கெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழ லிறைஞ்சுவாம்.

இ—ள்: இதம் தரு மடந்தை ஒடு இயைந்து — ஆன்மாக்கட்கு இன் பத்தைத்தருஞ் சிவகாமியம்மையோடு கூடி, விதம்படு உலகங்களின் உடம்பு உயிர்போல் விரிந்து ஒளி விளங்குவார் - பலவகைப்பட்ட உலகங்களி னெல்



லாம் உடம்பின்கண் உயிர்போல வியாபித்து நின்று அறிவுருவாய் விளங்குஞ் சபாநாயகரது, மதங்கம் ஒடு துந்துபி வளம் கெழ முழங்க - மிருதங்கத் தோடு தேவதுந்துபிகள் வளம்பொருந்த ஒலிக்க, சிதம்பர நடம்பயில் செழும் கழல் இறைஞ்சுவாம் - சிதம்பரத்தின்கண்ணே திருநடனஞ் செய் தருளுகின்ற செழுமையாகிய திருவடிகளை யாம் வணங்குவாம் எ—று.

ஒளிபோல விளக்கலின் அறிவை ஈண்டொளி என்றார். இயற்பெய ராக வைத்துச் சோதியாய் விளங்குபவரென் றுரைப்பினு மமையும். விளங் குவாரது கழலென வியையும். விளங்குவாரென்பது வினையாலணையும்பெயர். மிருதங்க மென்னும் வடமொழி மதங்கமெனத் தற்பவமாயிற்று. மிருதங்க முந் துந்துபியு ளடங்குமாயினும் நடனத்துக் கின்றியமையாச்சிறப்புடைமை தோன்ற அதனை ஒடுக்கொடுத்துப் பிரித்து வேறு கூறினர். துந்துபிகள்: தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, கண்டக்கருவி என்பன. வளமென்றது ஈண்டு நாடகநூற் சதிவிதியை; அதற்கது செல் வம் போறலின் வளமெனப்பட்டது. பஞ்சகிருத்திய நடன வாத்தியமாக லின் அவ்விசேடம்பற்றி வளங்கெழ என்றார் எனினுமமையும். ஏகாரம் அசைநிலை. சிதம்பரமெனினும் ஞானகாசமெனினு மொக்கும். போக மோக்ஷ மென்னு மிரண்டனுள் மோக்ஷம் சிவத்தின் காரியமாக, வினைப் போகஞ் சத்தியின் காரியமாகலிற் சத்தியை இதந்தரு மடந்தை யென்றும், அக்கினியுஞ் சூடும்போலத் தம்முட் பின்னமறக் கலத்தலின் இயைந்தென் றும், உடம்பெங்கும் உயிரது வியாபக முண்மைபோல உலகெங்குந் தமது வியாபகமுண்மையின் உயிருடம்புபோல் விதம்படுலகங்களின் விரிந்தென் றும், அங்ஙனம் வியாபித்து நிற்பினும் அவற்றின்கட் டொடக்குண்டு சூக் கும அதிசூக்கும சித்தாந் தன்மையிற் சிறிதுந் திரிபின்றி விளங்குதலின் ஒளி விளங்குவார் என்றும், வேண்டுவார் வேண்டியாங் கீயும் வள முடை மையிற் செழுங்கழ லென்றுங் கூறினர். இது கலிவிருத்தம். "அளவடி நான்கின கலிவிருத்தம்மே" என்பதோத்தாகலின். (க)

## சிவகாமியம்மை.

ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலா
நாடக னனந்தசுக நன்குபுனை பங்கினு
ளேடக மணம்பொருவ வெங்கணு மியைந்துளாள்
பாடக மிலங்குசிறு பங்கய மிறைஞ்சுவாம்.

இ—ள்: ஏடு அகம் மணம் பொருவ எங்கணும் இயைந்துளாள் - மல ரின்கண் மணம் போல் உலகெங்கும் வியாபித்து நிற்பவரும், அணங்கு இலா நாடகன் அனந்த சுகம் நன்குபுனை பங்கினுள் - உள்ளவாறே தரிசித்த ஆன் மாக்கட்குப் பிறவித் துன்பத்தை இன்மை செய்யும் திருநடனத்தை யுடைய

சபாநாயகரது வரம்பிலின்பத்தை இனிதாக அனுபவிக்கும் (அவரது) வாம பாகத்தையுடையவரும், சிதம்பர ஆடக அணங்கு உமை - சிதம்பரத்தின்க ணுள்ள கனகசபையிலே நிருத்த சாக்ஷியாய் நின்றருளுபவருமாகிய அழகை யுடைய சிவகாமியம்மையினது, பாடகம் இலங்கு சிறு பங்கயம் இறைஞ்சு வாம் - வேதமாகிய பாதகடகங்கள் விளங்குஞ் சிறிய திருவடித்தாமரைகளை யாம் வணங்குவாம் எ—று.

ஆடகம் ஆகுபெயர். ஈறு தொக்க இலாத என்னும் பெயரெச்சம் நாடக னென்பதன் முதனிலையாகிய நாடகமென்னுங் கருத்தாப்பெயர் கொண் டது. இலாநாடகம் இன்மையாகச் செய்த நாடகமெனப் பண்படியிற் பிறந்த பெயரெச்சம். ஏடு - பூவிதழ். அகம் ஏழனுருபு. பங்கய மென்னும் ஆகு பெயர்ப் பொருள் ஈண்டுக் 'குறிப்புருவகம்'. அனந்தசுகம் சுத்தசாட்குண் ணியங்களு ளொன்று. இதனுள் ஏடக மணம்பொருவ வெங்களு மியைந் துளாள் என்பது பண்புபற்றி வந்த 'விரியுவமாலங்கார' மென்க. (௨)

## சுப்பிரமணியக்கடவுள்.

துங்கமத கும்பவுயர் தும்பிமுகர் தம்பிசீர்
தங்குஞெகி ழுஞ்சிறு சதங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதா
ளங்கைமலர் கொண்டுமிகு மன்புட னிறைஞ்சுவாம்.

இ—ள்: துங்க மத உயர் கும்ப தும்பிமுகர் தம்பி - சுத்தமாகிய மதம் பில்கும் உயர்ந்த மத்தகத்தையும் யானை முகத்தையுமுடைய விநாயகக் கடவுளுக்குத் தம்பியாகிய சுப்பிரமணியக்கடவுளது, சீர் தங்கு ஞெகிழம் சிறு சதங்கைகள் புலம்ப - அழகிய சிலம்புகளும் சிறு சதங்கைகளும் சத்திக்க வும், மங்கை உமை கண் குளிர வந்து உலவுகின்றதாள் - நித்திய கன்னிகை யாகிய உமையம்மையினது திருக்கண்கள் குளிரவும், அவர் முன் வந் துலாவி விளையாடியருளும் திருவடிகளை, அங்கை மலர் கொண்டு மிகும் அன்பு உடன் இறைஞ்சுவாம் - அகங்கையிற் பூக்களைக் கொண் டருச்சித்து மிக்க அன்போடு யாம் வணங்குவாம் எ—று.

புலம்ப வந்து குளிர உலவுகின்ற தம்பி தாளென கிரணிறையாக்கி முடிக்க. புலம்பவும் குளிரவும் வந்துலவுகின்ற தம்பிதாளென முடிப்பினு மமையும். உலாவுகின்ற எனற்பாலது உலவுகின்ற எனக் குறுகிற்று. உடன் என்னுஞ் சொல்லுருபு ஒடுவுருபின் விசேடப் பொருட்கண் வந்தது. கண் குளிர்தல் காதன்மிக நோக்கிக் களித்தல். இச்சாஞானக் கிரியைகளுள் ஒன் றாகலின் மதமென வாளா கூறாது துங்கமத மென்றும், சிவ சத்திகட்கு வணக்கஞ் செய்த பின்னர் மறித்தும் விநாயக வணக்கஞ் செய்தே சுப்பிர மணிய வணக்கஞ் செய்தன் முறையாயினும், இது சுருங்கிய நூலாகலின்



விரிவஞ்சுவார், அவ்விநாயகவணக்கமுமாமா றொருவாறு தோன்றச் சுப்பிர மணியக் கடவுட்குப் பிறவடைகொடாது தும்பிமுகர் தம்பி யென்றும், என்று மிளையோ ராகலின் ஞெகிழஞ் சிறுசதங்கைகள் புலம்ப வென்றும், இளைய திருக்குமாரரது திருவடிகளாகலின் மங்கையுமை கண்குளிர வந் துலவுகின்றதாள் என்றும், தமிழ்மொழியா னூலியற்றுந் தமக்கும், அத் தமிழ்மொழிக் கதிபராகிய அகத்திய முனிவருக் கதனைச் செவியறிவுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரியராகிய சுப்பிரமணியக்கடவுளுக்குமுள்ள சீடகுருத் துவ சம்பந்தமும் விசேட வழிபாடுந் தோன்ற இறைஞ்சுவாமென் றொழி யாது அங்கைமலர் கொண்டுமிகு மன்புட னிறைஞ்சுவா மென்றுங் கூறினர்.

"தும்பிமுகர் தம்பி" என்னும் பாடத்தைத் தும்பிமுக னெம்பி எனப் பாடந்தந்து அதனுள் எம்பி என்பதற்குத் தம்பி எனப் பொருளுரைத்து அது அப்பொருள் பயந்ததற்கு "எம்பியு மனுசனு மிளையோன் பெயரே" என்னும் பிங்கலந்தைச் சூத்திரப் பிரமாணமுமொன்று காட்டிச் சாதிப்பாரு முளர். எனக்குத் தந்தையென்னும் பொருளில் என் என்னுந் தன்மைச் சொல்லோடு தொடர்ந்து தானும் அத்தன்மையின்பாற்படும் தந்தை யென் னும் முறைப்பெயர் அத்தொடர்ச்சிக்கண் அந் நிலைமொழியோடு விகார மேற்று எந்தை என மரூஉமொழியாய் வந்தாற்போல, எனக்குத் தம்பி என்னும் பொருளில் என் என்னுந் தன்மைச்சொல்லோடு தொடர்ந்து தானும் அத்தன்மையின்பாற்படுந் தம்பிஎன்னும் முறைப்பெயர் அத்தொடர்ச் சிக்கண் அந்நிலைமொழியோடு விகாரமேற்று எம்பி என மரூஉமொழியாய் வந்தமையான், அது அத்தன்மையிடப் பொருடருவதல்லது படர்க்கையிடப் பொருடாராமையானும், ஈண்டுத் தன்மையிடப் பொருள்கோடல் சிறிதும் பொருந்தாமையானும், "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்" "ஆதனும் பூதனுங் கூறிய வியல்பொடு" என்னும் முதற்குறிப்புடைய தொல் காப்பியப் புள்ளிமயங்கியற் சூத்திர விதிபற்றி, "மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியா ததனையும் முட்டின்று முடித்தல்" என்னும் தந்திரவுத்தியான் அத்தொடர் மரூஉமொழி என்பது அறியக்கிடத்தலானும், "நீபமலர் மாலைபுனையுந், தந்தைநம வாறுமுந வாதிநம சோதிநம தற்பர மதா, மெந்தைநம வென்றுமிளை யோய்நம குமாரநம வென்று தொழுதார்" என வரும் இவ்வொரே செய்யுளிற்றானே தந்தைக்கும் எந்தைக்கும் தம்முள் வேற்றுமை இனிது தெளியப்படுதல்போல, "எம்பிக்கு மென்னன்னை தனக்கு மிறுதிக்கோ, ரம்புய்க்கும் போர்வில்லிதனக்கு மயனிற்குந், தம்பிக் கும் நம்மாண்மை தவிர்ந்தே சயமிற்கும்" என வரும் இவ்வொரே செய்யு ளிற்றானே தம்பிக்கும் எம்பிக்கும் தம்முள் வேற்றுமை இனிது தெளியப் படுதலானும், மற்றும் இலக்கியங்க ளுள்ளும் தம்பி என்னும் பொருளில் எம்பி என்னும் சொற்பிரயோகம் யாண்டுங் காணப்படாமையானும், "எம் பியை யிங்குப்பெற்றே னென்னெனக் கரியதென்றான்" என்னுஞ் சீவகசிந்தா

மணிச் செய்யுளில் எம்பி என்பதற்கு என்றம்பி என்றே நச்சினார்க்கினியர் பொருளுரைத்தமையானும், பிங்கலந்தையின் வழிநூலாகிய சூடாமணி நிகண்டு நூலுடையார் அப்பிங்கலர் இளையோற்குப் பரியாயப்பெயராக வைத்தோதிய எம்பி என்பதை அஃதப் பொருடாராமை கண்டு, தமது சூடாமணி நிகண்டில் தம்பியின் பெயர் விகற்பங் கூறும்வழித் தாமும் எடுத்தோதாது தள்ளிவிட்டமையானும், திவாகர முதலிய ஏனை நிகண்டுகளினும் அவ்வாறே அப்பொருளில் அச்சொல்லை எடுத்தோதாமையானும், இவ்வாறே தொல்காப்பிய முதலிய இலக்கணங்களோடும் பேரிலக்கியங்களோடும் மாறுபட்டதொன்றியாது அது கொள்ளற்பாலதன்றித் தள்ளற்பாலதொன்றாகலானும், இன்னோரன்ன பிறவாற்றானும் அவர் பாடம் பொருந்தாமை காண்க. இத்துணையுங் கடவுள் வாழ்த்து. (௩)

தென்பொதிய மாமுனி சிறக்கவரு ளெண்ணெண்
ணின்பவிளை யாடல தெனுங்கட லுணேயன்
மின்பயிலு மாமதுரை மேவுதமிழ் மாறன்
றுன்பமற நல்குகதை சொல்லலுறு கின்றேன்.

இ—ள்: தென்பொதிய மாமுனி சிறக்க - தெற்கின்கணுள்ள பொதியமலை வாசராகிய அகத்தியமகாமுனிவர் வாயிலாக உலகம் படிமுறையானே கேட்டு முத்தியடைய, அருள் - சுப்பிரமணியக்கடவுள் அம்முனிவர்க்குத் திருவாய்மலர்ந்தருளிய, எண் எண் இன்பவிளையாடலது எனும் கடலுள் - இந்திரன் பழிதீர்த்த திருவிளையாடன்முதல் வன்னியுங் கிணறு மிலிங்கமுமழைத்த திருவிளையாட லீறாக மதுரைச் சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய நிரதிசய வின்பந்தரும் அறுபத்துநான்கு திருவிளையாடல்களை யுடையதாகிய ஆலாசிய மான்மியமென்னுஞ் சமுத்திரத்தினுள்ளே, மின்பயில் உ - மீனாக்ஷியம்மை வலப்பாகத்திற் பொருந்துஞ் சோமசுந்தரக் கடவுளானவர், மா - நரிப்பரிகளை, மதுரை மேவு தமிழ் மாறன் துன்பம் அற நல்கு கதை-மதுரையாகிய இராசதானியிலே அரசவீற்றிருந்த அரிமர்த்தனபாண்டியனது பிறவித்துன்பம் பற்றற அவ்வரசனுக்குக் கொடுத்தருளிய திருவிளையாடலை, நாயேன் சொல்லலுறுகின்றேன் - நாயினுங் கடையேனாகிய தமியேன் தமிழ்மொழியிற் பத்தியரூபமாகக் கூறத் தொடங்கினேன் எ—று.

இரட்டித்துக் கூறும்வழி எண்ணெட்டென வருமொழி யியல்பாகற் பாலது எண்ணெண்ணென மரீஇயிற்று; "தம்மியல் கிளப்பிற் றம்முற்றும் வரூஉ, மெண்ணின் றொகுதி யுளப்படப்பிறவு, மன்னவையெல்லா மரூஉவின் பாத்திய, புணரிய னிலையிடை யுணரத்தோன்றா" என்னும் அதிகாரப் புறனடையாற் கொள்க. ஒருவன் பெறும் பேறுக ளெவற்றினுஞ் சிறந்தமையின் முத்தி சிறப்பெனப்பட்டது. அருளென்னும் இறந்தகால வினைத்தொகை விளையாடலதென்னும் வினைக்குறிப்புமுற்றின் பகுதியோடு முடிந்தது. மின்-பெண். அது "மின்பாலன்ப, ரானவரடியார்" என ஆசிரியர் கூறுமாற்றானும், "மின்னே யுனக்கு மிகுகற்புடை மீனுமொவ்வாள்" எனப் பிறர் கூறுமாற்றானு மறிக. உ - சிவன். அது, "ஆலுக்கணிகலம் வெண்டலைமாலை" என்பதனானு மறிக. இனி "மின் பயிலு ம" என்பதற்கு மின்னல்போலுங் குதிரை என்பாரு முளர். அப்பொருட்கு, நல்கென்னும் வினைக்கு வினைமுதல் வருவித் துரைக்கவேண்டுதலின், அது அத்துணைச் சிறப்பன்றென்க. அருள் என்னும் வினைக்குச் சுப்பிரமணியக்கடவுள் என்னும் வினைமுதல் ஈண்டு வருவிக்கப்பட்டவா றென்னையெனின், அது சொல்லில்வழியதாகலான் உய்த்துணர்ந்து வினைமுதல் வருவிக்கப்பட்டது. சொல்லுள் வழி அச்சொற்கு அநாவசியகமான பொருள்கூறிக் கழித்து, ஆண்டவசியமான வினைமுதன் முதலியன வருவித்தல் குற்றமாமென்பது, "சொல்லில் வழிய துய்த்தலென மறுக்க" எனச் சேனாவரையர் கூறியவாற்றா னறிக. முனிசிறக்க முனியாற் சிறக்க. மா என்பது ஈண்டுக் கதைத்தொடர்பாற் பாய்மாவை யுணர்த்திநின்றது. கதைப்பரப்புச் சொற்பொருளாழம் அரும்பொருட்கிடக்கை முதலியவற்றாற் பேதமின்மையின் அம்முதனூல் கடலாக வுருவகஞ் செய்யப்பட்டது. சுப்பிரமணியக்கடவுள் அகத்தியமுனிவருக்கு மதுரைச் சோமசுந்தரக்கடவுளது திருவிளையாடல் அறுபத்துநான்கையும் திருவாய்மலர்ந்தருளினா ரென்பது "அத்தலத்தனைய மூவகைச்சிறப்பு மளவிலா வுயிர்க்கெலாங் கருணை, வைத்தவன் செய்த திருவிளையாட்டும் வரையுரங்கிளிய வேலெடுத்த, வித்தகனெனக்கு விளம்பியவாறே விளம்புவ னுமக்கெனவந்த, வுத்தம முனிவர் யாவருங் கேட்க வுணர்த்துவான் கடலெலா முண்டான்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றா னறிக. இது வழிகூறியவாறு. ஈண்டுக் குதிரை கொடுத்த திருவிளையாடலைக் கூறுவேனென்ற வாசிரியர் பின்னர் மண்சுமந்த திருவிளையாடலையுங் கூறியது மிகைபடக்கூறலாம் பிறவெனின், அற்றன்று. மண்சுமந்த திருவிளையாடல் ஈண்டுக் குதிரை கொடுத்த திருவிளையாடலி னொழிபாகலி னென்க. அற்றேல், ஏனை மந்திரிச்சருக்கம், திருப்பெருந்துறைச்சருக்கம் முதலியனவோவெனின், அவை, நுதலியபொருளாகலின் ஈண்டைக் கெய்தாமையின் அது கடாவன்றென்க. நுதலிய பொருள் திருவாதவூரடிகளது சரித்திரம். அதனை வருஞ் செய்யுளிற் காண்க. இதனுள் "விளையாடலதெனுங் கடலு" ளென்புழி எனுமென்னும் மாட்டேற்றுச்சொல் விரிந்து வந்தமையின், இது 'விரியுருவகாலங்கார' மென்க. (௪)

அற்புத னிருந்தருள் பெருந்துறை யடைந்தே
சிற்பர முணர்ந்துதிரு வாசக முரைப்பார்
முற்பக லருந்தவ முயன்றுபெறு மன்பா
லற்பவ மொழிந்தமை மொழிந்திட ரொழிப்பாம்.

இ—ள்: அற்புதன் இருந்தருள் பெருந்துறை அடைந்து - ஞானமே திருமேனியாகவுடைய ஜனவன்னாதசுவாமி எழுந்தருளி யிருக்கப்பெற்ற

திருப்பெருந்துறையென்னும் ஸ்தலத்தை யடைந்து ஞானோபதேசம்பெற்று, சித் பரம் உணர்ந்து திருவாசகம் உரைப்பார் - சூக்குமசித்தாகிய சிவத்தைத் திருவருளானறிந்து திருவாசக மருளிச்செய்பவராகிய திருவாதவூரடிகள், முன்பகல் அரும் தவம் முயன்று பெறும் அன்பால் - பூர்வ சன்மங்களிலே அரிய சிவபுண்ணியங்களைச் செய்து பெற்ற விசேட சிவபத்தி வாயிலாக, உற்பவம் ஒழிந்தமை மொழிந்து - பிறவியொழிந்துய்ந்த சரித்திரத்தைப் புராணமாகப் பாடி, இடர் ஒழிப்பாம் - நாமும் நமது பிறவித்துன்பத்தை நீக்கிக்கொள்வாம் எ—று.

படிமுறையானன்றி இவ்வொரு பிறப்பிற் செய்த தவந்தானே அமையாதென்ப துணர்த்துதற்கு முற்பகலென விசேடிக்கப்பட்டது. அது, "பாழ்ச்செய்விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக், கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத், தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்றலையா, லாட்செய் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே." என்னுந் திருவாக்கானு மறிக. முற்பகல் பின்மொழியாகுபெயர். தவமென வாளா கூறாது அருந்தவமென்றார் பதிபுண்ணியங்களென் றறிவித்தற்கென்க. ஈண்டுப் பதிபுண்ணியங்களென்றது சரியை கிரியா யோகங்களை. இவை சுவர்க்காதி புவன போகங்களைப் பயந்து விரைவின்மீளப் பிறவியினுறுத்தும்; பசுபுண்ணியங்களாகிய ஏனைத் தவங்கள் கன்மயோகங்கண் முதலியனபோலன்றி முறையானே சாலோக முதலிய பதமுத்திகளைப் பயந்து முடிவின்கணவ்வாற்றானும் ஞானம் வாயிலாகச் சாயுச்சியமாகிய பரமுத்தியைப் பயந்தேவிடும் முத்திசாதனங்களாமென்ப தறிக. அது "தானமியா கந்தீர்த்த மாச்சிரமந் தவங்கள் சாந்தி விரதங் கன்ம யோகங்கள் சரித்தோர், ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வ ரீசனியோ கக்கிரியா சரியையினி னின்றோர், ரூனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லா மொடுங்கும்போ தரன்முனிலா தொழியினுற்பவித்து, ஞானநெறி யடைந்தடைவர் சிவனையங்கு நாதனே முன்னிற்கி னணுகுவர்நற்றோனே" "சுருதிவழி யொழுகினவர் சுவர்க்கத்தா ராகமநூற், சரியை கிரியாயோகர் சாலோக சாமீப, வுருவமை வினராக வுதவுதுமெம் முடனுகும், பெருகியஞா னிகளெம்மைப் பெற்றார்போக் கற்றாரே" என்பனவற்றா னறிக. திருப்பெருந்துறையினெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு ஜனவன்னாதரென்பது அபிஷேகத்திருநாமம். இது ஆலாசியமான்மியத்திற் கண்டது. . இனி இவருக்கு அபிஷேகத்திருநாமம் ஆன்மநாதரென்பது கன்னபாரம்பரையென்க. நுதலிய பொருள் கூறியவாறு. (௫)

கொண்டலன கண்டனருள் கொண்டுதமிழ் பாடித்
தொண்டுபடு மன்பர்செயல் சொன்னநெறி தன்னால்
வண்டமிழ் தெரிந்தவர்கள் மற்றெனுரை குற்ற
முண்டெனினு நன்கிதென வுள்ளுவர்க ளெள்ளார்.



இ—ள்: கொண்டல் அன கண்டன் அருள் கொண்டு தமிழ் பாடி - முகில்போலுங் கரிய திருக்கண்டத்தையுடைய கைலாசபதியினது திருவருள் பெற்றுத் தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் பாடி, தொண்டுபடும் அன்பர் செயல் சொன்ன நெறி தன்னால் - அடிமைத்திறம் பூண்ட திருவாதவூரடிகளது திவ்விய சரித்திரத்தைத் தமியேன் புராணமாகக் கூறிய முறைமையினால், என் உரை குற்றம் உண்டு எனினும் - எனது இந்நூலின்கட் குற்றமுளதாயினும், வண் தமிழ் தெரிந்தவர்கள் இது நன்கு என உள்ளுவர்கள் - வளவிய தமிழ்நூல்களை ஓதியுணர்ந்த கவிஞர் இது குணமுடையதேயாமென்று நன்கு மதிப்பர், எள்ளார் - அஃதொழிந் திகழார் எ—று.

உவமவுருபு இடைக்குறைந்து நின்றது. தமிழ் இருவழியும் இனிமை. அது "தமிழ்தழிய சாயலவர்" என்பதனானு மறிக. அது இனிமையையுடைய பாஷையை யுணர்த்தி ஆகுபெயராய் நின்றது. வளமென்றது ஈண்டுச் சொற்சுவை பொருட்சுவைகளை. மற்று அசை. உம்மை ஐயவும்மை. உரை கருவியாகுபெயர். குற்றம் சொற்குற்றம் பொருட்குற்றம் முதலியன. இந்நூல் குற்றமுடையதாயினும், அடிமைத்திறத்தோடு மெய்யன்பு மொருங்குடைய திருவாதவூரடிகளது திவ்விய சரித்திரத்தைக் கூறுங் குணமுடைமைபற்றிச் சான்றோர் கைக்கொள்வர் என்பதாம். "ஈசனுக் கன்பில்லா ரடியவர்க் கன்பில்லா ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்கு மன்பில்லார், பேசுவதென் னறிவிலாப் பிணங்களை நா மிணங்கிற் பிறப்பினினு மிறப்பினினும் பிணங்கிடுவர் விடுநீ, யாசையொடு மானடியா ரடியாரை யடைந்திட்டவர் கருமமுன் கருமமாகச் செய்து, கூசி மொழிந்தருண் ஞானக் குறியினின்று கும்பிட்டுத் தண்டமிட்டுக் கூத்தாடித்திரியே" "மறைநான்கும் பயின்றொழுகி யிட்டிகளும் பலவியற்றி மல்லன்ஞாலத், திறவாத புகழ்படைத்து மீசனிடத் தன்பிலரை யெண்ணாதுள்ளம், புறமோதிக் கொலைபயின்று மதுமாந்துங் கொடும்பாவப் புலையரேனு, மறவாணன் திருவடிக்கீ ழன்பினரேலவரெம்மை யடிமைகொள்வார்" என்பனவற்றானும் மெய்யன்பு மடிமைத்திறமு மொருங்குடைய சிவபத்திமான்களது விசேடமும், அவையில்லாதாரதிழிவு மினிது விளங்குதல் காண்க. அவையடக்கங் கூறியவாறு. அவையடக்கம் நூல்செய்தபின்னர்ச் செயப்படுவ தொன்றாகலிற் சொன்னநெறி தன்னால் என இறந்தகாலத்தாற் கூறினார். (௬)

இந்தவள நற்கதை யியம்பினர் நயந்தே
சிந்தையி னினைப்பவர் செவிப்புல நிறைப்போர்
புந்திமகி ழப்புவி புரப்பருடல் விட்டா
லந்தவுல கந்தனி லரன்சபையில் வாழ்வார்.

இ—ள்: இந்தவள நல் கதை நயந்து இயம்பினர் - இந்த வளவிய நல்ல சிவபுராணத்தை அன்புகூர்ந்து வாசிப்பவர் பொருள் சொல்பவர்

களும், செவிப்புலம் நிறைப்போர் - செவிமடுப்பவர்களும், சிந்தையில் நினைப்பவர் - மனத்தாற் சிந்திப்பவர்களும், புந்தி மகிழப் புவி புரப்பர் - இம்மைக்கண் மனமகிழப் பூமியைப் பாதுகாப்பர், உடல் விட்டால் அந்த உலகத்தினில் அரன் சபையில் வாழ்வார் - தேக நீக்கத்தின்கண் அந்தச் சிவ லோகத்திலே சிவசந்நிதியில் வாழ்வார்கள் எ—று.

நயந்தென்பதை வினையிடத்துங் கூட்டுக. பின்னர் உடல் விட்டால் என்பதனுன் முன்னர் இம்மைக்கண் என்பது பெற்றும். சுட்டிரண்டனுட் பின்னையது பண்டறிசுட்டு. செவிப்புலம் செவியாகிய இடம். பயன் கூறியவாறு. 'தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளு, மெய்த வுரைப் பது தற்சிறப்பாகும்" என்பவாகலின், இவையனைத்தும் பாயிரமேயா மென்க. (எ)

பாயிர முற்றிற்று.

---

உ

# மந்திரிச் சருக்கம்.

முக்கணொரு நான்குபுய வைந்துமுக முன்னேன்
சொக்கனரு ளன்மைபெறு தொன்மைதிகழ் நன்னு
டக்கடு விடத்தையர னுக்கருள்வ தென்றே
மைக்கடலின் வைகலொழி வைகைவள நாடு.

இ—ள்: முக்கண் - சோம சூரியாக்கினிகளாகிய மூன்று திருக்கண் களும், ஒரு நான்கு புயம் - ஒப்பற்ற நான்கு திருப்புயங்களும், ஐந்து முக முன்னேன் சொக்கன் - ஈசானம் தற்புருஷம் அகோரம் வாமதேவம் சத்தி யோசாதமென்னு மைந்து திருமுகங்களுமுள்ள முதல்வராகிய சொக்கநாத சுவாமியினது, அருள் நன்மைபெறு தொன்மை திகழ் நல் நாடு - திருவரு ளாகிய நன்மையைப் பெறும் பழமை விளங்காநின்ற நல்ல நாடாவது, அக் கடு விடத்தை அரனுக்கு அருள்வது என்று - அந்தக் கொடிய ஆலகால விஷத்தைச் சிவபெருமானுக்கு உணவாகக் கொடுத்ததென்று வெறுத்து, மைக்கடலில் வைகல் ஒழி வைகை வளநாடு - கரிய சமுத்திரமாகிய தன்னு யகனிடத்துச் சென்று தங்குதலொழிந்த வைகைநதி பிரவாகிக்கும் பாண்டி வள நாடேயாம் எ—று.

அக்கடுவிடம் என்பது கொடுமையான் எல்லாரானும் முன்னரே அறி யப்பட்ட அவ்விடமென்னுங் கருத்திற்றாகலின், அகரவிடைச்சொற் பண் டறிசுட்டு. நாடிரண்டுந் தனித்தனி எழுவாயும் பயனிலையுமாதற் கேற்பன வாய்த் தடுமாறுதல், "செய்யுண் மருங்கினும் வழங்கியன் மருங்கினும்" என்னும் அதிகாரப் புறனடையாற் கொள்க. வருஞ் செய்யுளினு மீ தொக் கும். இடையாய காலத்தன்றிப் படைப்புக்காலந்தொட்டுச் செல்வ முதலிய நல்லநாட்டமைதிக ளாறனையும் ஒருங்குடைய நாடென்பது விளக்குவார் தொன்மைதிகழ் நன்னுடென்றும், பாற்கடல் கொடுத்த நஞ்சின்பொருட்டுப் பெயர்ச்சார்புபற்றிக் கருங்கடலாகிய தன்னுயகனேடு சங்கமியாத விசேட மூடைய நதி என்பார் 'அக்கடு விடத்தை யரனுக் கருள்வதென்றே மைக்கட லில் வைகலொழி வைகை' என்றுங் கூறினர். நதியைப் பெண்பாற்படுத்திக் கூறுதல் வடமொழிவழக்கு. அறுவகைநாட் டமைதிகளாவன: செல்வம், விளைநிலம், செங்கோன்மை, நோயின்மை, வளமுடைமை, குறும்பின்மை என்பன. வளம் ஆகரங்களிற் படுவனவும் வயலினும் தண்டலையினும் விளை வனவுமாம். முக்கணொரு நான்குபுய வைந்துமுக மென்பன முரண் டொடை. ஈண்டாசிரியர் தங்குறிப்பை நதிமே லேற்றிக் கூறுதலின் "இது பெயர்பொருட் டற்குறிப்பேற்ற"மென்னு மலங்காரமென்க. (க)

நீண்டகயி லைக்கிறை நிகழ்த்தவரு ளாலே
பூண்டமுனி மெய்த்தமிழ் புகன்றதிரு நாடு
மூண்டபகை செற்றுலக முற்றுமர சாளும்
பாண்டிய னலங்குலவு பாண்டிவள நாடு.

இ—ள்: நீண்ட கயிலைக்கு இறை அருளால் மெய்த் தமிழ் நிகழ்த்த— நெடிய கைலாசகிரிக்குத் தலைவராகிய ஸ்ரீகண்டபாமசிவனுனவர் உலகங் கடைத்தேறல் வேண்டுமென்னுந் திருவருளினுலே மெய்ம்மையாகிய தமிழ் மொழிக் கிலக்கணத்தைப் போதித்தருள, பூண்டமுனி புகன்ற திருநாடு— அதனைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்துகொண்ட அகத்திய மகாமுனிவர் அதனை நன்மாணுக்கர்களுக்குக் கற்பித்துப் பரப்பிய நாடாவது, மூண்ட பகை செற்று உலகம் முற்றும் அரசாளும் - முயன்று வந்த பகைவரைக் கொன்று உலக முழுவதையு மரசுசெய்த, பாண்டியன் நலம் குலவு பாண்டி வளநாடு - சோமசுந்தர பாண்டியரது நன்மை எஞ்ஞான்றும் விளங்கா நின்ற பாண்டிவளநாடேயாம் எ—று.

கயிலை போலி. கைலை முக்கியஸ்தானமாகலின் அதுபற்றிக் கைலைக் குத் தலைவரென்றார். தமிழ் இருமடி ஆகுபெயர். நலம் நீதி முதலியன. தமிழ்மொழிக்கருத்தா அகத்திய முனிவரும் பிறிதுபாடையும் வேறுசமயக் கடவுளரும் என்பார் மதங்களை மறுத்தற்பொருட்டுக் கயிலைக்கிறை நிகழ் த்த என்றும், உலகிற்கு அவாதருளுடனுள்ளதாகலின், உலகமெஞ்ஞான் றுள்ளதோ அத்தமிழ்மொழியு மஞ்ஞான்றுள்ளதென அதன்றொன்மை விளக் குவார் நிகழ்த்தவென் றொழியாது அருளால் என்றும், கேட்டன் மாத்தி ரையி னமையாது சிந்தித்துத் தெளிந்துகொண்டமை தோன்றப் பூண்ட

முனி என்றும், ஏனைய மொழிகள்போலன்றித் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமாரவேளும், மகத்தியல்கும்பத் தகத்திய முனிவனும் பிறரும் முச்சங்கமிரீஇ ஆராய்ந்து வழூஉக்களைத் தர்க்கஞ்செய்து கொண்ட சிறப்புடைமை தோன்ற மெய்த்தமிழென்றும், உலகமுற்று மாசாளுதல் பசுபதிக்கன்றி நரபதிகட்கேலாமையின் அப்பசுபதியை உலகமுற்று மாசாளும் பாண்டியனென விசேடித்துங் கூறினார். (உ)

வேறு.

மேவுமூர் வளம்பலவு மிருந்துளநா டதனினலம்
பாவுமூர் பழமறைதே ரந்தணர்கள் பயின்றுளவூர்
தாவுமூர் விடையேறி தங்கியவூ ரங்குறையுந்
தேவரூ ரினுமேன்மை சிறந்ததிரு வாதவூர்.

இ—ள்: வளம் பலவும் மேவும் ஊர் மிருந்துள நாடு அதனின் — பல வளங்களும் பொருந்திய ஊர்கண் மிகப்பெற்றுள்ள அப்பாண்டி நாட்டின் கண்ணே, நலம் பாவும் ஊர் - பலதிற நன்மைகளும் மிக்கவூரும், பழமறை தேர் அந்தணர்கள் பயின்றுள ஊர் - பழைய வேதங்களை அத்தியயனஞ் செய்யும் பிராமணர்கள் மிக வசிக்கப்பெற்ற ஊரும், தாவும் ஊர் விடையேறி தங்கிய ஊர் - தாவுகின்ற விட்டுணுவாகிய இடபத்தை வாகனமாகக்கொண் டிவர்ந்தருளும் சிவபெருமான் எழுந்தருளி யிருக்கப்பெற்ற ஊருமாயுள்ளது, அங்கு உறையுந் தேவர் ஊரினும் மேன்மை சிறந்த திருவாதவூர் - அங்கே வசிக்குந் தேவர்களது அமராவதியினும் மகிமை சிறந்துள்ள திருவாதவூரானது எ—று.

விட்டுணுவாகிய விடை யென்பது போதாத் தாவுமூர் விடை என விசேடிக்கப்பட்டது. தாவும் விடை ஊர் விடை எனத் தனித்தனி முடிக்க. தாவுதல் வினைக்கு உலகமும், ஊருதல் வினைக்குக் கலுழனுமாகிய செயப்படுபொருள்களை வருவித்துரைக்க. ஏறி பெயர். அங்கென்றது திருவாதவூரை; அதன் விசேடம்பற்றித் தேவர்கள் அங்கே வசித்தலின்; அது அத்தலபுராணத்துட் காண்க. ஐந்தனுருபு உறழ்பொருட்கண் வந்தது. பல வளமென்றது நாடுபடுதிரவிய முதலிய ஐவகைத்திரவியங்களையும். இது தரவுகொச்சகக்கலிப்பா; "தரவே தரவிணை தாழிசை தாமுஞ், சிலவும் பலவுஞ் சிறந்து மயங்கியு, மற்றும் விகற்பம் பலவா வருகவுங், கொச்சக மென்னுங் குறியினவாகும்" என்றாராகலின். (ங)

அந்நகரின் மறையோரி லருள்புனைமாத் தியர்குலத்திற்
றன்னிகரில் சைவநெறித் தலைவனவன் றனித்தேவி
மின்னனையா டிருவயிற்றின் மென்கொடிபங் கினனருளாற்
றென்னவன்செங் கோன்முதல்வர் திருவவ தாரஞ்செய்தார்.



இ—ள்: அந்நகரில் - அந்தத் திருவாதவூரிலே, மறையோரில் - பிராமண வருணத்திலே, அருள்புனை மாத்தியர் குலத்தில் - பாண்டியர்களது அருளைப்பெறும் ஆமாத்தியரது குடியிலே, தன் நிகரில் சைவநெறித் தலைவன் - தனக்கு நிகரில்லாத சைவசமயத்தை மேற்கொள்ளும் தலைவராகிய சம்புபாதாசிரயர் என்னும் ஒருவருளர்; அவன் தனித்தேவி மின் அனையாள் திரு வயிற்றில் - அவருக்கு அவரது ஒப்பற்ற மனைவியாராகிய மின்போலும் சிவஞானவதியாரது திருவயிற்றினின்றும், மென் கொடி பங்கினன் அருளால் - உமா சமேதராகிய சிவபெருமானுடைய திருவருளினாலே, தென்னவன் செங்கோன் முதல்வர் திருவவதாரஞ் செய்தார் - அரிமர்த்தன பாண்டியனது செங்கோலை நடத்தும் முதன்மந்திரியாகுமோர் சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார் எ—று.

அமாத்தியர் மாத்தியரெனத் தலைக்குறை. அமாத்தியர் சூழ்ச்சித்துணைவர்; கூடவிருப்பவரென்பது பொருள். குலம் - குடி. அது "சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறு மாதமிலி நாயேனை" என்பதனானு மறிக. தன்னென்றது சைவத்தை. உளன் என்னும் பயனிலை அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. "எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி, யவ்விய னிலையல் செவ்விதென்ப" என்னுஞ் சூத்திரத்து மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியா ததனையு முட்டின்று முடித்தலென்பதனாற் கொள்க. சைவநெறித் தலைவனென்பதனைத் தலைச்சைவன் என விகுதி பிரித்துக் கூட்டி, ஆதிசைவரெனப் பொருள்கோடலுமொன்று. சைவர்: அநாதிசைவர், ஆதிசைவர், மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர் என எழு வகையர். அவருள் அநாதிசைவராவார் சதாசிவமூர்த்தி; ஆதிசைவராவார் சிருஷ்டி யாரம்பத்திலே அவ்வநாதிசைவரது சத்தியோசாத முதலிய பஞ்சவத்திரங்களினின்றும் தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் என்னும் பஞ்சரிஷி கோத்திரத்துப் பிறந்த சிவப்பிராமணர். மகாசைவராவார்: பிரமா முகத்திற் றோன்றிய வைதிகப்பிராமணருள்ளே சிவதீக்ஷைபெற்றவர். அநுசைவராவர்: சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியருமாம். அவாந்தரசைவராவார்: சிவதீக்ஷைபெற்ற சூத்திரர். பிரவரசைவராவார்: சிவதீக்ஷை பெற்ற அநுலோமர். அந்தியசைவராவார்: சிவதீக்ஷைபெற்ற மற்றையோர். அது "அரிய சதாசிவனென்போ னநாதிசைவ னவன்பா லவதரித்த சிவமறையோ ராதிசைவ ரிவர்பா, லுரியசிவ தீக்கைபெற்ற விப்பிரர்மா சைவருயர்ந்தவர சன்வணிக னநுசைவ ராவார், பெரியகுவ லைப்புயத்தோ னவாந்தரசைவன் சீர்பெறுசவன னுதி யநுலோமர் பிரவராம், விரியவனிமிசை யொழிந்தோ ரந்தியசை வத்தோர் விரிந்திடு மேழ் சைவவித மிவையென நூல் விளம்பும்" என்பதனானுமறிக. சைவர் சிவனை வழிபடுவோர். நெறி சன்மார்க்கம். மென்கொடி 'உருவகம்'. அவதாரம் -

இறங்குதல். பாண்டியர்களுக்குப் பரம்பரையானே சூழ்ச்சித்துணையாய் அவரோடு கூடவிருக்குங் குடி என்பார் அருள்புனை மாத்தியர் குலம் என்றும், கல்வி, அறிவு, ஒழுக்கங்களாற் சிறந்த ஆதிசைவரென்பார், "சைவ நெறித் தலைவன்" என்றும், நற்குண நற்செய்கைகளையுடை அழகிற் சிறந்த சதீத்துவரத்தினம் என்பார் "தனித்தேவிமின்னனையாள்" என்றும், புண்ணிய லோகங்களாகிய மேலுலகங்களினின்றுஞ் சிவாஞ்ஞையினாற் பூமியில் வந்தார் என்பார் "மென்கொடி பங்கின னருளாற் றிருவவதாரஞ் செய்தார்" என்றுங் கூறினர். மேலுலகங்களிலிருந்து சிவாஞ்ஞையினாற் பூமியில் வந்தார் என்பது 'அந்தரர்தம் பதியினிழிந் தருள்புனைமாத் தியர்குலத்தில், வந்தருளி' 'வாமுடன் புவியிற் றேன்று மறைபவர்க் கிறைவர்' என முன்னர் வருவனவற்றானுமுணர்க. (௪)

வேறு.

பொய்ம்மையா முலகின்மாயப் பொங்கிரு ளகலவன்னோர்
தம்மையாழ் நரகிற்றள்ளுஞ் சமயதா ரகைமழுங்க
வெம்மையா ளுடையானன்ப ரிதயதா மரைகளெல்லாஞ்
செம்மையாய் மலரஞான தினகர ருதயஞ்செய்தார்.

இ—ள்: பொய்ம்மை ஆம் உலகின் மாயப் பொங்கு இருள் அகல - பொய்ப்பொருளாகிய உலகின்கணுள்ள அஞ்ஞானமாகிய மிக்க அந்தகாரமானது ஒட்டெடுக்கவும், அன்னோர் தம்மை ஆழ் நரகில் தள்ளும் சமய தாரகை மழுங்க - அவ்வந்தகாரத்துளகப்பட்ட சம்போவிகளை ஆழ்ந்த நரகமாகிய படுகுழியின்கண் வீழ்த்துக் கெடுக்கும் உலோகாயதம் முதலிய பரசமயங்களாகிய நக்ஷத்திரங்கள் ஒளி மழுங்கவும், எம்மை ஆள் உடையான் அன்பர் இதய தாமரைகள் எல்லாம் செம்மையாய் மலர - பசுக்களாகிய எம்மை அநாதியே அடிமையாகவுடைய பதியாகிய சிவபெருமானது அடியார்களுடைய இருதயகமலங்களெல்லாஞ் செவ்வையாய் விகசிக்கவும், ஞான தினகரர் உதயம் செய்தார் - அச்சற்புத்திரராகிய ஞானசூரியர் உதித்தார் எ—று.

மாயம் ஆகுபெயர். அகல, மழுங்க, மலர என்னுஞ் செயவெனெச்சங்கள் காரியப்பொருள். இன்னதன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை இருளாகவும், பொருணிச்சயஞ் செய்யுங் கருவியாகாமையிற் சமயங்களை நக்ஷத்திரங்களாகவும், அந்தரியாகபூசையில் அன்பரிருதயங்களை, நிலமுதற் சத்திதத்துவமீறாகிய முப்பத்தைந்தினையுங் கிழங்குமுதற் பீசமீறாகிய அவயவங்களாகவுடைய திப்பியகமலங்களாக ஆகமங் கோடலின், அதுபற்றி அன்ப ரிதயங்களைத் தாமரைகளாகவும், புறவிருளோட்டுதன் முதலிய இம்முத்தொழில்செய்பு மேனைச் சூரியனுலாகாத அகவிருளோட்டுதன் முதலிய இம்முத்தொழில்களை இப்புதல்வர் செய்தலின் அவரை ஞானசூரியராகவும், அதற்கேற்பப் பிறத்தலை உதயஞ்செய்தலாகவு



முருவகஞ் செய்யப்பட்டவாறு. அந்தரியாகபூசையிலே அன்ப ரிருதயம் கமலமாகச் சிவாகமங் கோடலை 'நாட்டுமித யந்தானு நாபியினி லடியாய் ஞாலமுத றத்துவத்தா லெண்விரனு ளத்தாய், மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய் முழுவிதழெட் டக்கரங்கண் முறைமையினி லுடைத்தாய்க், காட்டுகம லாசனமேல்' என்பதனு னறிக. மாயப் பொங்கிருளகலுதலும் சமயதாரகை மழுங்குதலும் இதயதாமரைக ளலர்தலும் ஞானதினகரரது உதயத்தா லியைதலின், இது 'இயைபுருவகாலங்கார' மென்க. இவ்விடங்களின் ஆகியவென்னும் மாட்டேற்றுச் சொற்றொக்கு நின்றமையின், இது தொகையுருவகத்தின் பாற்படும். (௫)

மருவாத நெறிபூண்ட மத்தனெனும் புத்தனுடன்
பெருவாது வென்றுசிவன் பெருநாம மிகவளர
வொருவாத பிறவியிற்சென் றொருநாம முறுதவர்க்குத்
திருவாத வூரரெனுந் திருநாமந் தரித்தார்கள்.

இ—ள்: சிவன் பெரு நாமம் மிக வளர - சிவமூலமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரம் உலகெங்குந் தழைத்தோங்க, மருவாத நெறிபூண்ட மத்தன் எனும் புத்தன் உடன் பெருவாது வென்று - அளவைகட்குச் சிறிதும் பொருந்தாத பொய்ச் சமயாநுசாரத்தை மேற்கொண்ட உன்மத்தனாகிய புத்த குருவுடனே பெரிய வாதஞ்செய்து வென்று, ஒருவாத பிறவியில் சென்று ஒருநாமம் உறுதவர்க்கு - விட்டு நீங்காத பிறவியின்கட் பிரவேசித்து இனி ஒரு நாமதேயமும் பொருந்தப்பெறாத அப்புதல்வருக்கு, திருவாதவூரர் எனும் திருநாமம் தரித்தார்கள் - ஞாதியர் திருவாதவூரரென்னுந் திருநாமகரணஞ் செய்தனர் எ—று.

செய்தென்பது சொல்லெச்சம். மத்தம் - மயக்கம். அளவை - தருக்கம். விட்டு நீங்காமை எளிதி னீங்காமை. பௌத்தம் நாத்திக மதங்களுளொன்றாகலின் அதனை மருவாத நெறி என்றும், அம் மத குருவாகலின் மத்தனெனும் புத்தனென்றும், சமயவாதமாகலிற் பெருவாதென்றும், சிவமூலமந்திரமாகலிற் பெருநாமமென்றும், அநாதியே சகசித்ததாகலின் ஒருவாத பிறவி என்றும், இனிப் பரமுத்தி யடைவாராதலிற் பிறவியிற்சென்றொருநாம முறுதவர் என்றுங் கூறினர். திருவாதவூரரென்பது கருவூரர் என்புழிப்போல ஊரால் வருபெயர். இவர் பின்னர்ப் பரமத கண்டனம் சுவமத ஸ்தாபனம் முதலிய அற்புதங்களைச் செய்து சமயகுரவரானமை பற்றித் திருவாதவூரடிகளென விசேடிக்கப்பட்டார். திருவாதபுரேசர் வாதவூ ரிறைவர் என்றற் றொடக்கத்தனவு மிக்கருத்தேபற்றி வந்தன. மாணிக்கவாசகரென்பது திருப்பெருந்துறையிலே பரமாசாரியரா லிடப்பட்ட தீக்ஷாநாமம். அதன் பொருளுங் காரணமும் "பழுதிலாதசொன் மணியினைப் பத்திசெய்தன்பு, முழுதுமாகிய வடத்தினுன் முறைதொடுத்

தலங்க, லழுதுசாத்தமெய் யன்பருக் ககமகிழ்ந்தையர், வழுவிலாதபேர் மாணிக்கவாசகனென்ருர்" "பின்னுமவர் கனவின்கண் மன்றுணடம் பிரியாத பெருமான்வந்து, முன்னவனைப் பெருந்துறையிற் குருந்தடியிலாட்கொண்ட முறையினனு, மின்னிசைவண் டமிழ்மணிபோற் பாடுங்காரணத்தானு மியா மன்றிட்ட, மன்னியபேர் மாணிக்கவாசகனென் றழைமின்கள் வருவனென்ருர்" என்பனவற்ரு னறிக. இச்சற்புத்திரருக்குப் பூர்வசன்மத் திருநாமம் குடமுழாநந்தீசர் என்பது; அது "குடமுழாநந்தீசனை மணிவாசகனுகத் தந்தாய்" என்னும் திருநாவுக்கரசுநாயனுர் தேவாரத்தானு மறிக. நாமகாரணங் கூறியவாறு. (௬)

வேறு.

தவமெனும் பெரிய வித்துட் டங்கியே யங்கு ரித்துப்
பவமெனும் பங்க நீங்கிப் பயிலருட் குருத்துண் டாகி
யவமெனும் களைக ணீங்கி யாக்குவோ னருளா லுண்மைச்
சிவமெனும் விளைவுண் டாக வளர்ந்தது தெய்வச்சாலி.

இ—ள்: தவம் எனும் பெரிய வித்துள் தங்கி அங்குரித்து - தவமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பெரிய வித்தினுள்ளே தங்கியிருந்து முளைத்து, பவம் எனும் பங்கம் நீங்கி - பிறவியாகிய சேற்றினின்று நீங்கி, பயில் அருள் குருத்து உண்டாகி-பொருந்திய திருவருளாகிய குருத்து வளரப்பெற்று, அவம் எனும் களைகள் நீங்கி - நானுவித விக்கினங்களாகிய களைகளினின்று நீங்கி, ஆக்குவோன் அருளால் - தம்மை உண்டாக்குபவராகிய சிவபெருமானென்னும் உழவாது திருவருளினலே, உண்மைச் சிவம் எனும் விளைவு உண்டாக - பரமுத்தியென்று விதந்து கூறத்தகும் விளைவு பின்னர் உளதாவதாக, தெய்வச்சாலி வளர்ந்தது - அச்சற்புத்திரராகிய தெய்வத்தன்மையை யுடைய செந்நெற்பயிரானது வளர்ந்தது எ—று.

அங்குரித்தல் - முளைத்தல். சிவம் - முத்தி. சாலி ஆகுபெயர். இது போற் சிறந்ததும் பெரும்பயன் றருவதும் பிறிதோர் வித்தின்மையினலே தவவித்தென்னுது தவமெனும் பெரிய வித்தெனவும், பரமுத்தியென்ப தறிவித்தற்குச் சிவமென்னுது உண்மைச் சிவமெனவும் விசேடிக்கப்பட்டன. சிவவிளைவாகிய காரியத்திற் கின்றியமையாத காரணமாகலின் நிஷ்காமிய புண்ணியமாகிய தவத்தை வித்தாகவும், அதனை வித்தென்றதற் கேற்பப் பிறத்தலை முளைத்தலாகவும், அப்பிறவி கன்மபேதங்களைப் புசிப்பித்துத் தொலைப்பித்தற்குக் கருவியாகலின், அதனைச் சேருகவும், மேலும் மேலும் புதிது புதிதாகப் பதிந்து விரிதலினலே திருவருளைத் தளிராகவும், தேகாதிப் பிரபஞ்சமாகிய பொய்ப்பொருளை மெய்ப்பொருளெனக்கொண் டோம்புவது காலக்கழிவாய்க் கேடு பயத்தலின் அவற்றைக் களைகளாகவும், தனு



காண புவன போகங்களைக் கூட்டி முடிப்பவராகலிற் சிவபெருமானை உழவராகவும், அத்தவவித்து முதலிய சாதனங்களாற் சாதித்துப் பெறும் மெய்ப்பயனுகலிற் பரமுத்தியை உண்மைச் சிவவிளைவாகவும், ஏனை விளைவுகள்போலன்றி இது சிவவிளைவாதலானும், அவ்விளைவை யுறுவது அச்சற்புத்திரராகலானும் அவரைத் தெய்வத்தன்மை பொருந்திய நெற்பயிராகவும் உருவகஞ் செய்தார். தங்கியிருத்தல் உரிய காலம் வருந்துணையும் முளையா தடங்கியிருத்தல். நானுவித விக்கினங்களை "காலைமலமொடு கடும்பகற் பசிநிசி வேலைநித்திரை யாத்திரை பிழைத்தும்" என்னும் திருவாக்கின்கட் காண்க. இது அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம். (௭)

வேறு.

தேனினெடு கரும்பினெழுஞ் செழும்பாகு முக்கனியு
மானினறும் பாலுமுட னளவியுளங் களிகூர
வீனமிகும் பலயோனிப் பிறவியெனும் பசிதீர
ஞானவமு துண்பார்க்கு நயந்தமுது நுகர்வித்தார்.

இ—ள்: ஈனம் மிகும் பல யோனிப் பிறவி எனும் பசி தீர ஞான அமுது உண்பார்க்கு - இழிவு மிகுந்த பல யோனிகளிற் சென்று பிறக்கும் பிறவியாகிய பெரும் பசி நீங்கச் சிவஞானமாகிய திருவமுதை இனி உண்பவராகிய அப்புதல்வருக்கு, தேனின் ஓடு கரும்பின் எழும் செழும் பாகும் - தேனும் கரும்பினின்று முளதாகுஞ் செழுமை பொருந்திய சருக்கரையும், முக்கனியும் - மா வாழை பலா என்னு மிவற்றின் முப்பழங்களும், ஆனின் நறும் பாலும் உடன் அளவி - பசுவினது நல்ல பாலுமாகிய இவற்றை அன்னத்துடன் கலந்து, உளம் களிகூர - மனங் களிப்பு மிக, நயந்து - விரும்பி, அமுது நுகர்வித்தார் - அன்னப்பிராசனஞ் செய்வித்தனர் எ—று.

ஒடு எண்ணெடு; மேலுஞ் சென்றியைந்தது. அமுதென முன்னர் வருகின்றமையின் உடனளவியென வாளா கூறினர்; பின்னும் பின்னும் பிறத்தலிற் பிறவி பசியாகவும், அப்பிறப்பை யொழிப்பதொன்ருகலின் ஞானம் அமுதாகவும் உருவகஞ் செய்யப்பட்டன. அன்னப்பிராசனங் கூறியவாறு. அன்னப்பிராசனம் - சோற்றை யுண்பித்தல். (௮)

காயமுட னுயிர்முயலுங் கருமமெலாம் பரனருளாற்
றூயமனத் துணர்ந்துவினைத் தொகையெழுதி நாடோறு
மாயதுயர் சுகமளிக்கும் யமன்கணக்கி லரும்பாவத்
தீயசிகை யில்லார்க்குச் சிறந்தசிகை வருவித்தார்.

இ—ள்: காயம் உடன் உயிர் முயலும் கருமம் எலாம் - உடம்போடுயிர் கூடிநின்று செய்யுங் கன்மபேதங்களையெல்லாம், பரன் அருளால் தூய

மனத்து உணர்ந்து - சிவபெருமானது திருவருளினாலே சுத்தமாகிய மனத்தினாலறிந்து, வினைத் தொகை நாள் தோறும் எழுதி - அக்கன்மபேதங்களாகிய நல்வினை தீவினைகளின் றொகைகளை நாடோறு மெழுதி, ஆய சுகம் துயர் (நாள்தோறும்) அளிக்கும் யமன் கணக்கில் - அந்நல்வினை தீவினைகளுக் கீடாகப் பொருந்திய இன்பத் துன்பங்களை நாடோறும் அநுபவிக்கும்படி கொடுக்கும் யமனது அக்கிரசந்தானி என்னும் கணக்கேட்டிலே, அரும் பாவத் தீய சிகை இல்லார்க்கு - அநுபவித்தற்கரிய கொடிய தீவினையை எழுதிய பிடி இல்லாத அப்புதல்வருக்கு, சிறந்த சிகை வருவித்தார் - அழகிய குடுமி வைத்தலாகிய சௌளகன்மஞ் செய்வித்தனர் எ—று.

எழுதி அளிக்கும் யமன்கணக்கென முடிக்க. சிகை முன்னையது ஈண் டேட்டுப்பிடி; சேடமெனினுமாம். உடம்போடு கூடியவழி யல்லது உயிர் ஒரு கன்மமுஞ் செய்யமாட்டாமையிற் "காயமுட னுயிர்முயலுங் கரும" மென்றும், அக்கன்மபேதங்களையெல்லாஞ் சிற்சத்தி பதிந்தவழி யல்லது தன்னியல்பானறிதல் கூடாமையிற் "கருமமெலாம் பானருளா லுணர்ந்"தென்றும், அங்ஙன முணர்ந்தவற்றை ஒருபாற் கோடாது நடுவுநிலைமையோடு நின்று நிகழ்த்துமனமாகலிற் றூயமனமென்றும், வினைத்திறம் பலவாகலின் வினைத்தொகை என்றும், இன்ன வினைப்பயனை இன்ன காலத்து இன்ன ஆன்மா இன்ன பிரகாரம் அநுபவிக்கவேண்டுமென்னும் ஆதிசங்கற்பமொன்றுண்மையின், அதன்வழி யொழுகுங் கணக்கை எழுதி நாடோறு மாய துயர் சுகமளிக்கும் யமன்கணக்கென்றும், அப்புதல்வர் பூர்வசன்மங்களிலே பாவசேட மில்லாதவராகலின் யமன்கணக்கி லரும்பாவத் தீயசிகை யில்லார்க்கென்றும், உரிய காலத்து விதிப்படி செய்தமை தோன்றச் சிறந்த சிகை என்றுங் கூறினர். சௌளகன்மங் கூறியவாறு. (௯)

குவலயமங் கையைநீடு கோலஞ்செய் தரும்பொன்னு
நவமணியுங் குவைசெய்து நன்குடன்மங் கலநாளிற்
றவமணமுந் திருநீற்றின் றன்மணமுந் தவறாத
சிவமணமும் பெறக்கல்விச் செல்விமணம் புணர்வித்தார்.

இ—ள்: குவலய மங்கையை நீடு கோலஞ் செய்து - பூமிதேவியை மிக அலங்கரித்து, அரும் பொன்னும் நவமணியும் குவை செய்து - அரிய பொன்னையும் நவரத்தினங்களையுங் குவித்து, மங்கல நாளில் - ஓர் சுபதினத்திலே, தவ மணமும் - தவ சம்பந்தமும், திரு நீற்றின் மணமும் - விபூதி சம்பந்தமும், தவறாத சிவமணமும் பெற - தவறற்ற சிவ சம்பந்தமுமாகிய புத்திரர்களைப் பெறும்பொருட்டு, நன்கு உடன் கல்விச் செல்வி மணம் புணர்வித்தார் - நன்மையோடு அப்புதல்வருக்குக் கல்வியாகிய பெண்ணை விவாகஞ் செய்வித்தனர் எ—று.



சிவம் ஈண்டும் முத்தி. கல்விச்செல்வி மணம் புணர்தல் ஒருபாத்தியாயர் வாயிலாக வித்தியாரம்பஞ் செய்தல். பொன்னையும் நவரத்தினங்களையுங் குவித்தல் அதன்மீது முதற்கண் நிலவெழுத் தெழுதுதற்பொருட் டென்க. அது தண்டுலத்தின்மே லெழுதும் இக்கால வழக்கானுமறிக. மற்றை உலோகங்களுட் சிறந்ததாகலின் அரும்பொன்னென்றும், பாமுத்தியென்பதறிவித்தற்குத் தவறாத சிவமென்றும், கல்விச் செல்வி மணம்புணர்தல் வினை நாமகரணம் முதலியனபோலன்றித் திருவாசகம் வாயிலாகத் தவமண முதலிய மூன்றையுந் தமக்கும் பிறர்க்குந் தரும் விசேட நன்மைத்தாகலின் நன்குடன் என்றுங் கூறினர். குவலய மங்கை, கல்விச் செல்வி யென்பன வடமொழி வழக்கு. வித்தியாரம்பங் கூறியவாறு. மணம் புணர்வித்தாரென்னும் வினையுரிமையால் வித்தியாரம்பத்தை விவாகமாகவும், கல்வியை மணமகளாகவும் உருவகஞ்செய்து, அவ்வுருவகத்தானும், பெறவென்னும் வினையுரிமையானும் கல்விப்பயன்களாகிய தவமண முதலிய மூன்றையும் புத்திரர்களாக உருவகஞ் செய்தமையின், இது 'சிறப்புருவக' மென்னு மலங்காரமென்க. மணமென்னும் சொல்லும் பொருளும் பலகால் வருதலிற் 'சொற்பொருட்பின்வருநிலை' யென்னு மலங்காரமும், இவை யிரண்டுங் கலந்து வருதலிற் 'சங்கீரண' மென்னு மலங்காரமும் இச்செய்யுளின் வந்தமை காண்க. (௧௦)

இதுநான்மற் றல்லது நா லில்லையெனு மறுசமய
விதநூலுந் தலநூலும் விரிந்தபுரா தனநூலும்
பொது நூலென் றுலகனைத்தும் புகழ்மறைநா லுஞ்சைவ
முதுநூலுந் தரிப்பார்க்கு முந்நூலுந் தரித்தார்கள்

இ—ள்: இது நூல் அல்லது மற்று நூல் இல்லை எனும் அறு சமய விதநூலும் - இதுவே மெய்ச்சமயநூல் இதுவல்லது மெய்ச்சமயநூல் பிறிதில்லையென்று தனித்தனி வாதிக்கும் அறுசமயநூலையும், தல நூலும் - தலபுராண நூலையும், விரிந்த புராதன நூலும் - பரந்த பதினெண்புராண நூலையும், பொது நூல் என்று உலகு அனைத்தும் புகழ் மறை நூலும் - சாமானிய சுருதியென்று உயர்ந்தோர் அனைவருந் துதிக்கும் வேதநூலையும், முது சைவ நூலுந் தரிப்பார்க்கு - விசேட சுருதியாகிய பழைய சிவாகம நூலையுங் கற்று அவைகளின் பொருளை மனத்திலே நன்கு தரித்துக்கொள்பவராகிய அப்புதல்வருக்கு, முந்நூலும் தரித்தார்கள் - முப்புரி நூலைத் தரித்தலாகிய உபநயனமுஞ் செய்தார்கள் எ—று.

இதுவே யென்னும் பிரிநிலை யேகாரம் விகாரத்தாற் றொக்கது. மற்று பிறிதென்னும் பொருட்டு. முந்நூலு மென்னு மும்மை இறந்ததுதழீஇயிற்று. புராதனம் பழைமை புராண மென்பன ஒருபொருட்கிளவி. சமய நூன் முதலிய ஐந்தும் ஒன்றற்கொன்று இம்முறையானே சிறந்தமையின்,

அம்முறையே முறையாக வைக்கப்பட்டன. அறுசமய விதங்களை "அறு வகைச் சமயத்தோர்க்கும்" என்பதன் பொழிப்புரையிற் காண்க. உபநய னங் கூறியவாறு. இது சொற்பொருட் பின்வருநிலை. இறுதிக்கணுள்ள முந் நூலைத் தலைப்பெய்தவழிச் சொற்பின்வருநிலையுமாம். சொற்பின் வருநிலை யைப் 'பதாவிருத்தியலங்கார' மெனவும், பொருட்பின் வருநிலையை 'அர்த் தாவிருத்தி யலங்கார' மெனவும், சொற்பொருட் பின்வருநிலையை 'உபயா விருத்தி யலங்கார' மெனவும் வடநூலார் கூறுப. (௧௧)

மிக்கலையுஞ் செழுநீரு மதிக்கலையு மிலைக்குமவ
ரக்கலையுந் தோளர்புலி யதட்கலையர் நல்லருளா
லொக்கலையும் பிறக்கலையு மொழித்திடுமா கமகலையு
மெக்கலையுங் கற்றுணர்ந்தா ரீரெட்டாண் டெல்லையினில்.

இ—ள்: மிக்கு அலையும் செழு நீரும் மதிக் கலையும் மிலைக்கு மவர் – நதிகளுட் சிறந்து அலைமறிகின்ற செழுமையாகிய கங்காசலத்தையும் ஒரு கலையாகிய பிறையையுந் தரித்தவரும், அக்கு அலையும் தோளர் - பிரம விஷ்ணுக்களது எலும்புமணி மாலைகளையுந் திருப்புயங்களை யுடையவரும், புலி அதள் கலையர் நல் அருளால் - புலித்தோலாகிய வஸ்திரத்தை யுடைய வருமாகிய சிவபெருமானது நல்ல திருவருளினாலே, ஒக்கலையும் பிறக் கலையும் ஒழித்திடும் ஆகம கலையும் - தேகபந்துக்களையும் சனன மரணங்களை யும் பக்குவான்மாக்கட்கு நீக்குஞ் சிவாகம கலைகளையும்,. எக்கலையும் - மற்று மெவ்வித கலைகளையும், ஈர் எட்டு ஆண்டு எல்லையினில் கற்று உணர்ந்தார்— அப்புதல்வர் பதினாறு வயசினுள்ளே கற்றுத் தெளிந்தார் எ—று.

வீடு பேற்றிற்கு முக்கிய கருவிநூலாகலின் ஆகமகலை வேறெடுத் தோதப்பட்டது. திருவருளை முன்னிட்டுநின்று ஓதினாராகலிற் பதினாறு வயசினுள்ளே சிவாகம முதலிய சகல கலைகளையுஞ் சந்தேக விபரீதமறக் கற் றுத் தெளிந்தா ரென்பார் 'நல்லருளா' லென்றார். சகலகலைகளாவன: வேதம், வேதாங்கங்களாகிய சிக்ஷை, கற்பம், வியாகரணம், சந்தசு, சோதிடம், நிருத்தி, தருக்கம், தருமசாத்திரம், புராணம், மீமாஞ்சை, ஆயுர்வேதம், தனுர் வேதம், நானாதேசபாஷை, இராசநீதி முதலியன. (௧௨)

உழைக்கரனுக் கன்பாகி யுண்மையறிந் துலகமெலாம்
பிழைக்கவருட் கவிபாடும் பெரியவர்தஞ் செயலெல்லாந்
தழைத்தகலைத் தமிழ்மாறன் றக்கோர்க ளுரைக்கவறிந்
தழைத்துரிமைத் திறநல்கி யகலாநண் பாயினான்.

இ—ள்: உழைக் கரனுக்கு அன்பு ஆகி - மான்கன்றை யேந்திய திருக்கரத்தை யுடைய சிவபெருமானிடத்து அன்பு கொண்டு, உண்மை அறிந்து - வேதசிவாகமங்களின் மெய்ப்பொருளைத் திருவருளா லுணர்ந்து,



உலகம் எலாம் பிழைக்க - எதிர்காலத்து இவ்வுலகின்கணுள்ளவரெல்லாம் கடைத்தேற, அருள் கவி பாடும் பெரியவர் தம் செயல் எல்லாம் - அம் மெய்ப்பொருளைத் திருவாசகமாகிய அருட்பாவாகப் பாடியருளும் பெருந் தகைமையையுடைய திருவாதவூரடிகளது நற்குண நற்செய்கைகளை யெல் லாம், தழைத்த கலைத் தமிழ் மாறன் தக்கோர்கள் உரைக்க அறிந்து - பரந்த கலைகளையுடைய தமிழை வளர்க்கும் அரிமர்த்தன பாண்டியன் ஆப் தர்களாகிய பெரியோர்கள் சொல்லக் கேட்டறிந்து, அழைத்து - அவ ரைத் தன்மாட்டு வருவித்து, உரிமைத் திறம் நல்கி - அவருக்குத் தன் னோடு உரிமைத் திறங்கள் சிலவற்றைச் செய்து, அகலா நண்பு ஆயினான் - தான் அவரோடு பிரியாநட்பை யுடையனாயினான் எ—று.

தம் மென்பது ஈண்டுக் கட்டுரைச்சுவைக்கண் வந்தது. குணம் செய லான் விளங்குதலின் அதனைச் செயலுளடக்கிக் கூறினார். மேல்வருவது மது. அறுபத்துநான்கு கலைகளென் றறிவித்தற்குத் தழைத்த கலையென விசேடிக்கப்பட்டது. நல்கல் ஈண்டு வினைச்சொல்லாகிய வொப்புமை பற்றிச் செய்தலின் மேற்று; 'சொல்லவா வுரகதுவச' என்புழிப் போல நூற் புறனடையாற் கொள்க. உரிமைத்திறம் நட்பாதற்கேற்பன. (௧௩)

சங்கோல மிடும்பழனத் தடம்புடைசூழ் வாதவூ
ரெங்கோவின் செய்கையறிந் தியல்புடையா ரெனநாடிப்
பொங்கோத வேலைநிலம் புரந்துபெரும் பகைதுரந்து
செங்கோலை முறைநடத்துஞ் செழுந்தலைமைத் திறநல்கி.

இ—ள்: சங்கு ஓலம் இடும் பழனம் தடம் புடை சூழ் வாதவூர் எம் கோவின் செய்கை நாடி - சங்குகள் சத்திக்கின்ற வயல்களுந் தடாகங்களும் இடங்கடோறுஞ் சூழப்பெற்ற திருவாதவூரிலே திருவவதாரஞ்செய்த நந் தலைவரது நற்குண நற்செய்கைகளைப் பாண்டியராசன் பரீக்ஷித்து, இயல்பு உடையார் என நாடி - தகுதியுடையவரென்று நன்றாக அறிந்து, பொங்கு ஓத வேலை நிலம் புரந்து - மோதாரிக்கும் அலைகளையுடைய கடல் சூழ்ந்த பூமியைப் பாதுகாத்து, பெரும் பகை துரந்து - பெரிய பகைவர் களை ஓட்டி, செங்கோலை முறை நடத்தும் செழும் தலைமைத் திறம் நல்கி - தனது செங்கோலை நீதிவழுவாமற் செலுத்தும் மாட்சிமை பொருந்திய முதன்மந்திரியாய உத்தியோகத்தை அவருக்குக் கொடுத்து. எ—று

பழனந்தடம் பழனத்தடமென ஓசைபற்றி வலிந்து நின்றது; இயல்பாக வைத்துரைப்பினு மமையும். எம்மென்றது எனைச் சைவரையெல்லாம் உளப்படுத்தியென்க. தலைமைத்திறமென முன்னர் வருகின்றமையின் இயல் புடையாரென வாளா கூறப்பட்டது. இது குளகம். அது 'குளகம் பல பாட்டொருவினை கொள்ளும்' என்பதனானறிக. (௧௪)

வேறு.

தென்னவன் பிரம ராயனென் றருள் சிறந்த நாம
மன்னவர் மதிக்க நல்கி வையக முய்வ தாக
மின்னவ மணிப்பூ ணாடை வெண்மதிக் கவிகை தண்டு
பொன்னவிர் கவரி வேழ மளித்தனன் பொருநை நாடன்.

இ—ள்: பொருநை நாடன்-தாமிரபர்ணிநதி பிரவாகிக்கும் நாட்டை யுடைய பாண்டியராசன் (அதன்பின்னரும்), வையகம் உய்வதாக - உலகங் கடைத்தேறுவதாக, தென்னவன் பிரமராயன் என்று அருள் சிறந்த நாமம்-தென்னவன் பிரமராயனென்றழைக்கப்படும் ஓர் சிறப்புப்பெயரை, மன்னவர் மதிக்க நல்கி - மற்றை அரசர்களும் நன்குமதிக்கும் வண்ணம் அவருக்குக் கொடுத்து, மின் நவ மணிப் பூண் - ஒளி பொருந்திய நவரத்தினாபரணம், ஆடை - பீதாம்பரம், வெள் மதிக்கவிகை—சந்திரன்போலும் வெண் கொற்றக்குடை, தண்டு - முத்துச்சிவிகை, பொன் அவிர் கவரி - பொற்காப்பு விளங்குஞ் சாமரம், வேழம் அளித்தனன் - யானைகளாகிய இவைகளையுங் கொடுத்து மிகவுஞ் சன்மானித்தனன். எ-று.

அருளென்னும் வினைத்தொகை வினைச்சொல்லாதலாகிய ஒப்புவமை பற்றி ஈண்டழைத்தன்மேற்று. மன்னவருமென்னு முயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. பொன் விடாதஆகுபெயர். இனிப் பொன்னவிரென்பதனைப் பொன் நவிரெனப் பிரித்து, நவிர்வாளென் றுரைப்பாருமுளர். அரசன் தன்கீழ்வாழ்தலினும் இவர்கீழ் வாழ்தலே தன்னாட்டிற் குவப்பென்பதுபற்றி இவைகளைக் கொடுத்தானென்பார் வையகமுய்வதாக என்றார். தென்னவன் பிரமராயன் பாண்டியனது பிராமண வருணத்து முதலதிபதி. (௧௫)

இந்திரச் செல்வம் போல வியைந்துள வின்பமெய்தி
மந்திரத் தலைமை பூண்ட வண்புகழ் வாத வூரர்
தந்திரத் தொகுதி சூழத் தாரகா கணங்க ளோடு
மந்தரத் திழிந்து மண்மே லமர்ந்த வெண்மதிய மொத்தார்.

இ—ள், மந்திரத் தலைமை பூண்ட வண்புகழ் வாதவூரர் - முதன் மந்திரியாய வுத்தியோகத்தைப் பெற்ற வளவிய புகழையுடைய திருவாதவூரடிகள், இந்திர செல்வம் போல இயைந்துள இன்பம் எய்தி - இந்திரசம்பத்தைப்போலத் தமக்குக் கிடைத்த பெருஞ் செல்வத்தினாலே தாமநுபவித்தற்குரிய விசேஷ இன்பங்களை அநுபவித்து, தந்திரத் தொகுதி சூழ - சேனா சமூகங்கள் சூழ, (மேலுலகத்தினின்று மவதாரஞ்செய்து விபூதியை உத்தூளனஞ்செய்த திருமேனி யுடையவராய் அரசனது அத்தாணியின்கண் நடுநாயகமாக வீற்றிருத்தலால்), தாரகா கணங்களோடும் அந்தரத்து இழிந்து மண்மேல் அமர்ந்த வெள் மதியம் ஒத்தார் - நக்ஷத்திர சமூகங்களோடும் ஆகாயத்தினின்று மிறங்கிப் பூமியின்கண் வந்திருக்கும் வெண்மையாகிய ஒரு பூரணசந்திரனை ஒத்தனர் எ—று.



உவமையடை பொருட்கும் கொள்ளப்பட்டது. திருவாதவூரடிகள் இன்பத்தானும், தலைமையானும், நிறத்தானும், தந்திரத்தொகுதி சூழுதலானும், பிறவாற்றானும் பூலோகத்தமர்ந்த சந்திரனென் றுளதாயின் அதனை நிகர்த்தாரென்பது கருத்து. அந்தரத் திழிந்து மண்மே லமர்தல் மதிக்கு அபூதமாகலின், 'இது அபூதவுவமாலங்கார' மென்க. அபூதம்-சம்பவியாதது.

பெருங்கட னாகநீதி பெருக்கியே தருக்கு நல்கி
யிருங்கட கத்தோள் மேல்வைத் தீண்டருள் பூண்டகோவுங்
கருங்கட நாக மெட்டுங் காளமா நாக மெட்டும்
பரங்கெட வுலக பாரம் பரித்தனர் திருத்த மிக்கார்.

இ—ள்: இரும் கடகத் தோள் மேல் வைத்து ஈண்டு அருள் பூண்ட கோவும் - பெரிய கங்கணமணிந்த புயங்களின்மீது வைத்துத் தாங்கி மிக்க சீவகாருண்ணியத்தை மேற்கொண்ட பாண்டியராசனும், கரும் கட நாகம் எட்டும் - கரிய மதத்தையுடைய அட்டயானைகளும், காளமா நாகம் எட்டும் பரம் கெட - நஞ்சையுடைய அட்டமா நாகங்களும் தாம் மேற்கொண்ட பூமிபாரத்தினின்று நீங்கி யின்பமடைய, திருத்தம் மிக்கார் - சீர்திருத்த மிகுந்த திருவாதவூரடிகள், பெருங்கடன் ஆக நீதி பெருக்கி - தமக்கு முக்கிய கடமையாக இராசநீதியை விருத்திசெய்து, தருக்கு நல்கி - அரசனுக்கும் பிரஜைகட்கும் மகிழ்ச்சியைக் கொடுத்து, உலக பாரம் பரித்தனர் - பூமி பாரம் முழுதுந் தாமே தாங்கினர் எ—று.

உலகபாரமென முன்னர் வருகின்றமையின் வைத்தென வாளா கூறினார். அரசனைத் தழீஇக் கோடற்கு நீதி பெருக்கலும், குடிகளைத் தழீஇக் கோடற்குத் தருக்கு நல்கலும் பெரும்பான்மையும் வேண்டப்பட்டன. திருத்தம் தங்கடமைகளைச் சோரவிடாமை. அதனை வருஞ் செய்யுளிற் காண்க. ஈண்டுப் புகழ் பொருள் திருவாதவூரடிகளாகலின், நீதி பெருக்கித் தருக்கு நல்குதலைக் கோவாகிய அல்பொருட்கேற்றுதல் சிறிதும் பொருந்தாதென்க. கடவுள்யானை எட்டாவன: ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன. கடவுட்பாம் பெட்டாவன: வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பன. தருக்கு பிரமுதிதம் மகிழ்ச்சி என்பன ஒருபொருட் கிளவி. (௧௭)

காதலித் தறஞ்செய் வோர்க்குக் கவசமுங் கண்ணு மாகி
யேதிலர்க் கிடும்பை யாகி யிறைஞ்சினர்க் கின்ப மாகி
யாதுலர்க் கன்னை யாகி யரனடிக் கன்பு மிக்கார்
பூதலத் திறைவ னாணை பொதுவற நடத்து நாளில்.

இ—ள்: அரன் அடிக்கு அன்பு மிக்கார் - சிவபெருமானுடைய திருவடிகளுக் கன்புமிகுந்த திருவாதவூரடிகள், காதலித்து - விருப்பங்கூர்ந்து, அறம் செய்வோர்க்குக் கவசமும் கண்ணும் ஆகி - தருமஞ் செய்பவர்களுக்கு வச்சிரகவசமும் கண்களுமாகியும், ஏதிலர்க்கு இடும்பை ஆகி - அத்தருமத்துக்கும் அரசனுக்கும் பகையாயினோர்க்குத் துன்பமாகியும், இறைஞ்சினர்க்கு இன்பமாகி - தம்மரசனை வழிபடுகின்றவர்க் கின்பமாகியும், ஆதுலர்க்கு அன்னை ஆகி - ஏழைகட்கு மாதாவாகியும், இறைவன் ஆணை பூதலத்துப் பொது அற நடத்தும் நாளில் - அவ்வரசனது ஆஞ்ஞாசக்கரத்தைப் பூமியின் கண்ணே (அது) பலர்க்கும் பொதுமை நீங்க நடத்திவருங் காலத்தில் எ—று.

பகைவரது படைக்கலம் புக்குத் துன்பஞ்செய்யவொட்டாது தடுத்துச் சரீரத்தைப் பாதுகாக்கும் வைரச் சட்டைபோலப் பெரும் பாவிகளது வினைகள் புக்குத் துன்பஞ்செய்யவொட்டாது தடுத்துத் தருமஞ்செய்வோரைப் பாதுகாத்தலின் அறஞ்செய்வோர்க்குக் கவசமாகி என்றும், தீநெறிக்கண் வரும் ஏதங்களைக் காட்டித் தடுத்து நன்னெறிக்கட் செலுத்துங் கண்போலப் பாவநெறிக்கண் வரு மேதங்களை எடுத்துக் காட்டி அதன்கட் புகவொட்டாது தடுத்துத் தருமநெறிக்கட் செலுத்துதலிற் கண்ணாகி என்றும், பகைவரைக் கண்ணோடாது தண்டித்தலின் ஏதிலர்க் கிடும்பையாகி என்றும், இராசநீதியின்வழியமைந் தொழுகுவாரை, இனிய சொற் செயல்கொண்டு மகிழ்வித்தலின் இறைஞ்சினர்க் கின்பமாகி என்றும், இயற்கை யன்பு கொண்டு வேண்டுவ கொடுத் தெஞ்ஞான்றும் ஒருபெற்றியே தன்னினுந் தன் பிள்ளைகளைக் குறிக்கொண் டோம்புந் தாயைப்போல இயற்கையருள் கொண்டு வேண்டுவ கொடுத் தெஞ்ஞான்று மொருபெற்றியே தம்மினும் தங்கீழ் வாழும் தரித்திரர்களைக் குறிக்கொண் டோம்புதலின் ஆதுலர்க் கன்னையாகி என்றும், இவைகளை இங்ஙனம் பிறர்க்கு நடித்துக் காட்டுதற் பொருட்டன்றி உள்ளவாறே நெஞ்சொத் தியற்றலிற் காதலித் தென்றுங் கூறினார். ஈண்டிறைஞ்சல் அரசன் சொல்வழி அடங்கி ஒழுகுதல். அறஞ் செய்வோரையும் இறைஞ்சினரையும் ஆதுலரையும் நட்பினராகவும், பாவஞ் செய்வோரைப் பகைவராகவும் கொண்டொழுகினாரென்பது கருத்தென்க. ஆதுலரை ஓம்புதல் ஏனையவற்றினும் உத்தம புருஷர்களுக்குச் சிறந்த இலக்கணமாகலின், அதனை இறுதிக்கட் டந்து கூறினார். இது, ஏதுக்களோடு



கூடி வந்த 'பலபொருளுருவக' மென்னு மலங்காரமென்க. அவ்வேது விளக்கிய மொழிகள் ஈண்டுத் தொக்குநின்றன. (கஅ)

பற்பல பொருளா யுள்ள பாசமு மதனை மேவி
யுற்பவ பேத மான வுடம்புயி ரொடுங்கு மாறு
மற்புத புத்தி முத்தி யளித்தரு ளாலே மேலாந்
தற்பர னடத்து மாறு முணர்ந்தனர் சைவ நூலின்.

இ—ள்: பற்பல பொருளாய் உள்ள பாசமும் - ஜநகம், தாரகம், போக்கியம் என நானுபேதமாய் விரிந்த பாசத்தையும், அதனை மேவி உற்பவ பேதம் ஆன உடம்பு உயிர் ஒடுங்கும் ஆறும் - அநாதியே அப்பாசத்தாற் பந்திக்கப்பட்டு நால்வகைத் தோற்றம் எழுவகைப் பிறப்பு எண்பத்துநான்கு நூறுயிரயோனிபேதமாகிய உடம்புகளோடு கூடி உயிர்கள் பிறந்து பின்னர் இறக்குந் தன்மையையும், மேலாம் தற்பரன் - சமயக்கடவு ளெவரினு மிக மேலாகிய சிவபெருமான், அருளால் - தமது கைம்மாறற்ற திருவருளினாலே, அற்புத புத்தி முத்தி அளித்து நடத்தும் ஆறும் - அவற்றுள் அபக்குவான் மாக்கட்கு இருவினைக்கீடாகத் தனு கரண புவன போகங்களையும், பக்குவான்மாக்களுக்கு ஞானம்வாயிலாக மோக்ஷத்தையுங் கொடுத்துப் பஞ்சகிருத்தியங்களையும் நடத்தியருளுந் தன்மையையும், சைவ நூலின் உணர்ந்தனர் - திருவாதவூரடிகள் சைவாகமங்களை ஓதி, அவைகளிலே சந்தேக விபரீதமற நன்கு தெளிந்தனர் எ—று.

இஃ தேழனுருபு. இதனைத் திருக்கோவையாரினும், திருவள்ளுவரினும் காண்க. எடுக்குமாறெனவும் பாடம். அற்புதம் - ஞானம். புத்தி - அநுபவம். தற்பரன் ஆன்மாக்கட்கு மேலானவன். நால்வகைத்தோற்றம்: அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பன. எழுவகைப் பிறப்பு: தேவர், மனிதர், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. எண்பத்துநான்கு நூறுயிரயோனி அத்திமுதல் எறும்பீறு யுள்ளவை யனைத்துமாம். நால்வகைத் தோற்றம் தொகையும், எழுவகைப்பிறப்பு வகையும், எண்பத்துநான்கு நூறுயிரயோனிபேதம் விரியுமென்க. பாசமானது ஆணவம், மாயை, கார்மியம், வைந்தவம், திரோதாயியெனப் பலவாறு விரிதலிற் பற்பல பொருளாயுள்ள பாசமென விசேடிக்கப்பட்டதெனினு மமையும். முன்னர் ஆகமக்கலையும் என்புழிக் கல்வி அறிவின்பொருட்டுப் பொதுவகையானும், ஈண்டு ஆன்மலாபத்தின்பொருட்டுச் சிறப்புவகையானும், சைவாகமங்களை ஓதி உணர்ந்தாரென்ப தினிது விளங்குதலின், இது கூறியது கூறலென்னுங் குற்றமாகாமை தெளிக. சிறப்புவகையா னுணர்தலாவது திரிபதார்த்தலக்ஷணங்களைச் சைவாகமத்தின் ஞானகாண்டம் பற்றியுணர்தல். (கசு)

அவ்விய மனத்தி னாலே யனைத்துரு வங்கள் கூடி
யிவ்வுயிர் பிறந்து மீள விறந்திடு மென்றி ரங்கி
வெவ்வெயில் வருத்த முற்றார் மென்னிழல் விரும்பு மாபோ
னவ்விய மழுவுமேந்து நம்பனுக் கன்பு மிக்கார்.

இ—ள்: இவ்வுயிர் - இந்த உயிரானது, அவ்விய மனத்தினாலே அனைத்து உருவங்கள் கூடிப் பிறந்து மீள இறந்திடும் என்று இரங்கி - மித்தியாஞானத்தையுடைய மனங் காரணமாக எல்லா வுடம்புகளோடுங் கூடிப் பிறந்து மீள இறந்துவிடுமென்று திருவாதவூரடிகள் ஆன்மவிசாரங் கொண்டு இரங்கி, வெவ் வெயில் வருத்தம் உற்றார் மெல் நிழல் விரும்புமா போல் - கொடிய வெய்யிலின்கட் சூடுண்டு வருந்ினவர் விருக்ஷத்தினது மெல்லிய நிழலை விரும்புவதுபோலப் பிறப் பிறப்புப் பிணி மூப்புக்களாகிய இடும்பைகட்கஞ்சி, நவ்வியும் மழுவு மேந்தும் நம்பனுக்கு அன்பு மிக்கார் - மானையும் மழுவையுந் தாங்கும் சிவபெருமானிடத்துப் பேரன்புடையராயினார் எ—று.

அவ்வியம் போலி. இரங்கி மிக்காரென முடிக்க. விரும்புமாறு விரும்புமா எனக் கடைக்குறைந்து நின்றதோர் செய்யுண் முடிபு. அவ்வியம்-பொய்; என்றது, ஈண்டு யா னெனதென்னும் அகங்கார மமகாரங்களாகிய தற்போத முனைப்பை. இவ்வுயிரென்றது மூவகை யான்மாக்களுட் சகலவர்க்கத் துட்பட்ட தம்மை. மீமாம்சக மதத்தர்களாகிய தாருகாவனத்து இருடிகள் அபிசார ஓமத்தினின்றும் எழுப்பித் தம்மைக் கொல்லும்வண்ணம் விடுத்த கொலைக்கருவிகளாகிய மான் மழு என்பனவற்றாற் கொலையுண்ணாத அதிபராமாப்தராகலின், அவரே நித்தியரும் நம்பற்பாலரென்பதும் பெறப்பட்டமையின், தமது தேகாநித்தியத்தை நீக்குதற்பொருட்டு, அந்நித்தியரிடத்தே பேரன்பு செய்தார் என்பார் "நவ்விய மழுவு மேந்து நம்பனுக் கன்புமிக்கார்" என்றார். நம்பன் பழையோனென்றுமாம். "நிழலருமை வெய்யிற்றனி னின்றாலே யீசன், கழலருமை யின்னலிலே காண்" எனப் பிறருமிங்ஙனங் கூறுதல் காண்க. முன் பிரயோகித்த பொருட்கொப்பதோர் பொருள் பின் பிரயோகிக்கப்பட்டமையின், இது "மறுபொரு ளுவமை" யென்னு மணியென்க. (உ0)

தீத்திற வினையி னாலே சிறைப்படு முயிரை யெல்லாம்
பார்த்தன ருலக வாழ்விற் பயனிலை யென்று தேர்ந்து
கூத்தினர் தன்மை வேறு கோலம்வே றாகு மாபோ
னீத்தனர் மனத்தின் முன்போ னிகழ்த்தினர் வழுதி நீதி.

இ—ள்: தீத் திற வினையினாலே சிறைப்படும் உயிரை எல்லாம் பார்த்தனர் - கொடிய இருவினைகளினாலே சரீரமாகிய சிறையின்கண் அகப்பட்டுப் பிறந்திறந் துழலும் ஆன்ம கோடிகளையெல்லாம் திருவாதவூரடிகள் உற்று நோக்கி, உலக வாழ்வில் பயன் இலை என்று தேர்ந்து - மாயாகாரியமாகிய இந்தப் பிரபஞ்சவாழ்விலே ஒரு பிரயோசனமுமில்லையென்று நன்கு தெளிந்து, கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆகுமா போல்-கூத்தாடிகளது உண்மைத்தன்மைவேறு அவரது புறவேஷம் வேறாயினாற் போல, மனத்தின் நீத்தனர் - தமது மனத்தினின்றும் இப்பிரபஞ்சப்பற்றை முழுதும் நீக்கிவிட்டனர் (அங்ஙனம் நீக்கிய வழியும்), வழுதி நீதி முன்போல் நிகழ்த்தினர் - பாண்டியனது இராசநீதியை முன்போலப் புறத்தே நடத்தி வந்தனர் எ—று.

நல்வினை தீவினை என வினைப்பகுதி இரண்டாகலின், தீத்திறவினை என்றார். திறம் - கூறுபாடு. காமியமாகிய நல்வினையும் சிறைப்படுதற்குக் காரணமாதலினாலே தீவினையின்பாற் பட்டது. உண்மைத் தன்மை அவரது சுபாவவியற்கை. அவை இன்னான் மகனின்னா னென்றற் றொடக்கத்தன. கோலத்தன்மை ஒத்த வேடமும் ஆடல் பாடலும் அபிநயித்தலும் முதலியன. இவை யிரண்டுந் தம்முட் பெரிதும் வேறுபட்டாற்போலத் திருவாதவூரடிகளது அகமும் புறமும் பெரிதும் வேறுபட்டமையிற் "கூத்தினர் செய்கைவேறு கோலம்வே றாகுமாபோ னீத்தனர் மனத்தின் முன்போ னிகழ்த்தினர் வழுதி நீதி" என்றார். தம்மரசனுக்குத் தீங்கு செய்தல் வேண்டுமென்னும் சிந்தை யொரு சிறிது மின்றி அதன்கட் பற்றற்று நின்றே நடத்தினா ரென்பது கருத்தாதலின், இராசநீதியை அகத்தின்கண் நீக்கிப் புறத்தே நடத்தல் உட்பகை யென்னுங் குற்றமாகாமை யறிக. இதுவுமவ்வணி யென்க. (உக)

வரமுடன் புவியிற் றோன்று மறையவர்க் கிறைவ ருண்மை
தருமுணர் வென்னு நாலாஞ் சத்திநி பாத மெய்தி
பரமவஞ் செழுத்து மொன்றும் பராபர முணர்த்து ஞான
குருபரன் றிருத்தாள் சென்று கூடுதல் வேண்டு மென்று.

இ—ள்: வரம் உடன் புவியில் தோன்றும் மறையவர்க்கு இறைவர் - சிவாநுக்கிரகத்தினாலே இப்பூமியின்கண் வந்து அவதாரஞ்செய்த பிராமணோத்தமராகிய திருவாதவூரடிகள், உண்மை தரும் உணர்வு என்னும் நாலாம் சத்திநிபாதம் எய்தி - உண்மைப் பொருளைத் தவறாது தரும் மெய்யுணர்வின் காரியமாகிய நான்கு சத்திநிபாதங்களுள் இறுதிக் கண்ணதாகிய அதிதீவிர பக்குவத்தை அடைந்து, பரம அஞ்சு எழுத்தும் ஒன்றும் ஆம் பராபரம் உணர்த்தும் - சத்த கோடி மகாமந்திரங்களெவற்றினும் மிக மேலாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமும் ஏகாக்ஷரமாம் பரமசிவத்தைப் போதிக்கும், ஞான குருபரன் திருத்தாள் சென்று கூடுதல் வேண்டும் என்று - ஏனைக் கிரியாபாத ஆசாரியரின் மேம்பட்ட ஞானாசாரியரது திருவடி

களை இனி ஒருதலையாக நாம் தேடிச் சென்று தலைப்படுதல் வேண்டு மென்று தம்முட் சிந்தித்து எ—று.

என்று சொல்லலுற்றாரென வருஞ் செய்யுளின் முடிக்க. ஒடு ஒடுருபு களின் சொல்லுருபாகிய உடனென்பது ஈண்டு ஆல் ஆன் உருபுகளின் கருவிப் பொருட்கண் வந்தது. உண்மைப் பொருள் - முத்தி. சத்திநிபாதம்- சத்தி பதிதல்; சத்தி - திருவருள்; நிபாதம் - பதிதல்; விழுதல் என்னும் பொருளே சிறந்ததென்பர் திராவிடமகாபாடியகாரர். சத்திநிபாதம் நான் காவன: மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்பன. தீவிரதரமெனி னும் அதிதீவிரமெனினு மொக்கும். அவற்றுள் மந்ததரமாவது நமக்குப் பெறுபேறாயுள்ள பதியொருவ ருண்டென் றறிவொழிந்திருத்தல். மந்த மாவது அப்பதியை யடைதற்கு வழி எங்ஙனமென்றாராய்தல். தீவிரமாவது அங்ஙனமாராய்ந்தறிந்த பதியை யடையும்பொருட்டு அதற்குத் தடையா யுள்ள பிரபஞ்சத்தை அகத்தான் வெறுத்துப் புறத்தாற் றழுவுதல். தீவிர தரமாவது: அப்பிரபஞ்சத்தை அகம் புறமென்னு மிரண்டானும் முற்றத் துறந்து, ஞானாசாரியரொருவரையே பொருட்படுத்துத் திரிகரணங்களி னானும் வழிபடுதல். மந்ததரம் வாழைத்தண்டினும், மந்தம் பச்சை விற கினும், தீவிரம் உலர்ந்த விறகினும், தீவிரதரம் கரியினும் நெருப்புப் பற்றுதல் போல்வனவாம். இருவினை யொப்பும், ஆணவமல பரிபாகமும் உற்றவிடத்தே சத்திநிபாதம் உண்டாம். சத்திநிபாதமாவது ஆன்மாவி னது ஞானத்தைத் தடுக்கும் ஆணவமலசத்தி நழுவும் அவசரத்தில் முற் பிற் பாடறச் சிவத்தினது சிற்சத்தி பதிந்து அவ்வான்மாவினது நித்திய ஞானக் கிரியையை விளக்குவதாம். இனிப் பஞ்சாக்ஷரமும் ஏகாக்ஷரமா மாறு: வகாரத்தில் நகாரமும், யகாரத்தில் மகாரமும், சிகாரத்தில் வகார மும், அதில் யகாரமு மொடுங்குதலாம். அது, "நகரமொடு மகாரமது சடந் தருகா ரணமா நாடுமவை நீங்கியிடு வகையை நவிலுதுங் கேள், வகாரமதி னகாரமுதல் யகாரத்திற்றானே மகாரமுநீங் கிடுமரிய சிகா மருத் தன்னால், யகரலயம் வகாரமுந்தான் சிகாரத்தி லொடுக்க மாகும்". "மாயநட் போரையு மாயாமல மெனுமாதரையும், வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய் யருளாந், தாயுடன் சென்று பின் றாதையைக் கூடிப் பின்றாயை மறந், தேயுமதே நிட்டை யென்றானெழிற் கச்சி யேகம்பனே". என்பனவற்றா னறிக. இவை இங்ஙன மொடுங்க நின்ற பதியக்ஷரமாகிய சிகாரமானது: தூல, சூக்கும, காரண, மகாகாரண, மகாமநு என்னும் பஞ்சாக்ஷரபேத மைந்தனுள் இறுதிக்கண்ணதாகிய மகாமநுவென்க. இம் மகாமநுவின் பொருள் பரசிவனாகலின், அப்பரசிவனைப் 'பரமவைஞ்செழுத்துமொன்றாம் பராபர' மென்றும், அப்பராபரத்தை ஞானகுருவல்லது கிரியாகுரு போதித் தல் கூடாமையிற் 'பராபர முணர்த்து ஞான குருபரன் றிருத்தாள் சென்று கூடுதல் வேண்டு மென்று' சிந்தித்தார் என்றுங் கூறினார். வகாரம் பரை



யக்ஷரமும், யகாரம் சீவாக்ஷரமும், மகாரம் மலவக்ஷரமும், நகாரம் திரோ தாயி யக்ஷரமுமாம். (௨௨)

மற்கட விலங்கு தன்னால் வளங்கெழு விளவின் மேவு
நற்கனி கொள்ள வேண்டி நயந்துகல் லெறிவார் போலச்
சற்குரு வுள்ளோ வென்று நடுவார் தர்க்கமெல்லாஞ்
சொற்கலை ஞான சைவர் தம்முடன் சொல்ல லுற்றார்.

இ—ள்: வளம் கெழு விளவின் மேவும் நல் கனி கொள்ள வேண்டி - வளம் பொருந்திய விளா மாத்தின்கண்ணுள்ள நல்ல பழங்களைக் கவர அகத்தே விரும்பி, நயந்து - அதனைப் புறத்தே மறைக்கக் கருதி, மற்கட விலங்கு தன்னால் கல் எறிவார் போல - அவ்விளாமரத்திருக்குங் குரங்காகிய விலங்கின்மேல் வைத்துப் பழங்களை உதிர்க்கும் பொருட்டுக் கல்லால் எறிபவர்போல, சற்குரு உளரோ என்று நாடுவார் - திருவாத வூரடிகள் சற்காரியவாதகுரு உண்டோ என்று ஆராய்பவராகி, தர்க்கம் எல்லாம் சொல் கலை ஞான சைவர் தம் உடன் சொல்லலுற்றார் - தருக் கங்களை யெல்லாம் இலக்கணம் முதலிய நூல்களில் வல்ல ஞானாசாரியர் களோடு பேசுவாராயினார் எ—று.

நாடுவார் எச்சமுற்று. நயத்தல் - மதித்தல். சொல்-இலக்கணம்; சொல் லப்படுங் கலையெனினு மமையும். இங்ஙனம் பலநாட் கழிந்த தென்பார் சொன்னாரென்னாது சொல்லலுற்றார் என்றார். இதுவுமவ்வலங்காரம். சற் காரியவாதம்: உள்ளபொருளினின்று காரியந் தோன்றுமென்று வாதித்தல். இதன் விரிவைச் சிவஞானசித்தி முதலிய நூல்களிற் காண்க. (௨௩)

வளங்கெழு புவியி னுள்ள வாவியுங் காவுமோடி
விளங்கிசை வண்டு தண்டேன் மிகுமலர் தேடுமாபோ
லுளங்கொள நிமல னன்னூ லோதின ருண்மையெல்லா
மளந்தறி வுணர்ந்தநீரர் யாவரென் றாயு நாளில்.

இ—ள்: விளங்கு இசை வண்டு - விளங்காநிற்கும் இசையினையுடைய வண்டு, வளம் கெழு புவியில் உள்ள வாவியும் காவும் ஓடி - வளம் பொருந் திய பூமியின்கணுள்ள தடாகங்களினுஞ் சோலைகளினும் விரைந்து போய், தண் தேன் மிகு மலர் தேடு மாபோல் - தண்ணிய தேன்மிக்க பூவைத் தேடுமாறு போல, உளம் கொள நல் நிமலன் நூல் ஓதினர் - மனங் கொள்ள நல்ல சிவாகமங்களை ஓதியுணர்ந்த திருவாதவூரடிகள், உண்மை யெல்லாம் அளந்து அறிவு உணர்ந்த நீரர் யாவர் என்று ஆயும் நாளில் - அச்சிவாகமங்களிலுள்ள மெய்ப்பொருள்களை யெல்லாம் அளவைசெய்து அநுபூதியினும் வைத்தறிந்த ஞானாசாரியர் யாவரோ என்று இங்ஙனம் ஆராயுங் காலத்தில் எ—று.

அளவைசெய்தறிதல் தருக்க நூலுட் கூறியவாறுபற்றி ஊழான் உள்ள வாறுணர்தல். யுத்தியும் ஒரு பிரமாணமாகலின் உளங்கொள என்றும், அநாதி நித்தியமாகலிற் பதி பசு பாசங்களை உண்மை யென்றுங் கூறினர். ஞானசாரியர் சிலரிடத்துச் சிவாகமப்பொருள் காணப்படினும், அவ்வளவி னமையாது அவை முழுவதும் ஒருங் கநுபூதியினும் வைத்துணர்ந்த பரம ஞானசாரியர் ஒருவரைத் தேடினர் என்பார், "வண்டு தண்டேன் மிகுமலர் தேடுமாபோ லுண்மை யெல்லா மளந்தறி வுணர்ந்த நீரர் யாவரென் றுயு நாளி" லென்றார். இதுவுமவ் வலங்கார மென்க. (௨௪)

வேறு.

மேதகு வனிதைய ரெங்கணும் விசிய கவரி யசைந்தெழ
மர்தவ முனிவர்க ளந்தணர் மாசறு கவிஞர் செறிந்திட
வேதமின்மதிகுல புங்கவ னேர்கெழு மணிமுடி யின்திர
ளாதவன் மிசையெழ வந்தரி யாசன மதனி லிருந்தனன்.

இ—ள்: மேதகு வனிதையர் எங்கணும் வீசிய கவரி அசைந்து எழ - மேன்மை பொருந்திய நடன ஸ்திரீகள் இரு மருங்கினும் இரட்டுகின்ற சாமரங்கள் தாழ்ந்து எழவும், மாதவமுனிவர்கள் அந்தணர் மாசு அறு கவிஞர் செறிந்திட - பெரிய தவத்தையுடைய இருடிகளும் பிராமணர்களும் கசடற்ற புலவர்களும் தற்சூழவும், ஏர் கெழு திரள் மணி முடி இன் ஆதவன் மிசை எழ - அழகு பொருந்திய திரண்ட இரத்தினமகுடமாகிய இனிய சூரியன் சிரசிலே உதயமாகவும், ஏதம் இல் மதிகுல புங்கவன் வந்து - குற்றமற்ற சந்திர குலத் தரசனாகிய அரிமர்த்தன பாண்டியன் ஒரு தினம் அத்தாணியின்கண் வந்து, அரி ஆசனம் அதனில் இருந்தனன் - சிங்காசனத்தில் வீற்றிருந்தான் எ—று.

அசைதல் - சோர்தல். மேன்மை: ஆடல் பாடல் அழகு முதலியவற் றான் வரும் விசேடம். முடியின்திரள் என்பதற்கு முடியுறுப்பைந்தன் கூட்டம் எனப் பொருள் கூறுவாருமுளர். இது சொன்னோக்கம் பற்றாது தம் மன நோக்கம்பற்றிக் கூறுவார் கூற்றேயாமென மறுக்க. முடிமுதல் ஆசன மீறாகிய இராசசின்ன மிருபத்தொன்றனுள் ஆதி யந்தங்களினுள்ள முடியும் ஆசனமுமாகிய அவ்விரண்டனையுங் கிளந்தெடுத்தோதி, அவை வாயிலாகச் சாமரம் முதலிய ஏனையவற்றுள் ஈண்டைக்கேற்பன வேறு சிலவற்றையுந் தழீஇக்கோடல் குறிப்பிப்பார் "கவரியசைந்தெழ, முடியின்திர ளாதவன் மிசையெழ வந்தரி யாசன மதனி லிருந்தனன்" என்றும், நன்மக்களது சக வாசமுடைய னென்பார், "மாதவ முனிவர்க ளந்தணர் மாசறு கவிஞர் செறிந்திட" என்றும், சிவபெருமானது திருமுடி மீதிருக்கும் மறுவற்ற சந்திரகுலமென்பார் "ஏதமின் மதிகுல" மென்றும், பாண்டியரு ளுயர்ந்தவ



னென்பார் புங்கவனென்றும், ஏனை வெப்பஞ்செய்யுஞ் சூரியனோ டிதனிடை விசேடமுண்மை விளக்குவார் இன் ஆதவன் என்றுங் கூறினர். இனிமை ஈண்டுயிர்களுக்குப் பலவாற்றானுந் தட்பஞ்செய்தல். ஆசனமது ஆசனமாகிய அது. இராசசின்ன மிருபத்தொன்றாவன: முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கிரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசனம் என்பன. இதுவும் அறுசீரடி ஆசிரியவிருத்தம். முடியை ஆதவனாக அபே தஞ் செய்தமையின், இது உருவகாலங்காரமென்க. (௨௫)

தாதகி மார்ப னெடும்புவி சார்தரு மாழ்கட லின்கரை
தீதில மாதுர கங்கொடு சீர்கெழு மாரியர் வந்தன
ரேதமி லாயது கண்டனம் யாமென வேதொழு தன்பொடு
மேதினி காவலன் முன்சில மேதகு தூதர்வி ளம்பினர்.

இ—ள்: மேதகு சில தூதர் - அத்தருணத்து மேன்மை பொருந்திய சில தூதுவர், மேதினி காவலன் முன் அன்பொடு தொழுது - இந்நிலவுலக வரசனாகிய பாண்டியனுக்கு முன் வந்து அன்போடு வணங்கி, ஏதம் இலாய் - ஒரு குற்றமுமில்லாத நம்மரசனே, சீர் கெழும் ஆரியர் - செல்வத்தையுடைய ஆரியதேச வர்த்தகர், தாதகி மார்பன் நெடும் புவி சார்தரும் ஆழ் கடலின் கரை - ஆத்திமாலையை யணிந்த மார்பையுடைய சோழனது நெடிய நாட்டைச் சூழ்ந்த ஆழமாகிய கடலினது கரையிலே, தீது இல மா துரகம் கொடு வந்தனர் - குற்றமற்ற நல்ல குதிரைகளைக் கொண்டுவந் திறங்கினார், அது யாம் கண்டனம் என விளம்பினர் - அதனை நாம் நேரே கண்டேமென்று விண்ணப்பஞ் செய்தனர் எ—று.

தமிழ்நாட்டு மூவேந்தாளுந் தேயங்களுட் பெருந் தேயமென்பார் நெடும்புவியென்றும், மேற்கூறும் சந்திரசுழி முதலிய குற்றம் முற்றுமற்ற குதிரைகளென்பார் தீதில மாதுரக மென்றும், செல்வராகலின் உயர்ந்த சாதிக் குதிரைகளைக் கொண்டுவருதல் கூடுமென்பது குறிப்பிப்பார் சீர்கெழு மாரிய ரென்றும், நாமிங்ஙனஞ் சொல்வனவற்றின் பலாபலங்களைப் பாகு படுத்துணரும் விவேகசத்தி முதலிய நல்லிலக்கணங்களை யெல்லா மொருங் குடையை யென்பார் அதனை எதிர்மறைமுகத்தின் வைத்து ஏதமிலாயென் றும், அது கேள்விப்பட்டதன்று நேரே நம்மாற் காணப்பட்டதென்பார் அது கண்டனம் யாமென்றும், இத்தூதுவர், தான் வகுத்துக்கூறுவான், கூறி யது கூறுவானென்னு மிருதிறத்தருட் சிறந்த முன்னைய ரென்பார் சில மேதகு தூதுவர் என்றுங் கூறினர். (௨௬)

ஏவல்செய் வார்களி லிங்கிவ ரேபரி வானவ ரென்றிகன்
மேவிய தூதரை வன்திறன் மீனவர் கோனு மகிழ்ந்துபின்

வாவுநன் மாதுர கங்கொடு வாருமெ னுவுட லுந்தன
தாவியு மாயர னன்புடை யார்முக நாடி மொழிந்தனன்.

இ—ள்: வல் திறல் மீனவர் கோனும் - இங்ஙனந் தூதுவர் கூறக் கேட்ட மிக்க வலிமையையுடைய பாண்டியராசனும், ஏவல் செய்வார்களில் இங்கிவரே பரிவானவர் என்று - நம் பணி செய்பவர்களுள் இவர்களே எம்மிடத் தன்புள்ளவர்களென்று நன்கு மதித்து, இகல் மேவிய தூதரை மகிழ்ந்து - சொல்வன்மையை யுடைய அத்தூதுவர்களை மனமகிழ்ந்து நோக்கி, பின் - அதன்பின்பு, தனது உடலும் ஆவியுமாய் அரன் அன்புடையார் முகம் நாடி - தனதுடம்பு முயிருமாகி அதன்மேற் சிவபத்திமானுமாகிய திருவாதவூரடிகளுடைய முகத்தைப் பார்த்து, வாவும் நல் மா துரகம் கொடு வாரும் எனு மொழிந்தனர் - நீர் தாவுகின்ற நல்ல பெரிய குதிரைகளை இவர் கூறிய இடத்துச் சென்று விலைக்கு வாங்கிக் கொண்டுவாரும் என்று கூறினன் எ—று.

இங்கிவர் ஒருசொன்னீர்மைத்து. ஏகாரம் பிரிநிலை. உம்மை உயர்வு சிறப்பு. தனக்காவ தொன்றனைத் தாமே அறிந்து கூறினாராகலின் மகிழ்ந்தென்றும், தான் அவரென இரண்டற அரசன் மதித்திருக்கின்றமை தோன்ற உடலுந் தனதாவியுமா யென்றும், ஏனை யமைச்சரினும் அரசன் மிகவும் விசுவசித்தற் கேதுவாய் அவர்மாட்டுள்ள விசேடந் தோன்ற அர னன்புடையா ரென்றுங் கூறினார். (௨௭)

மீனவர் கோன்மொழி யின்படி வேணிய னேச ரியைந்தபி
னானன சோதி யுடன்புவி யாள்பவன் வாசி கொளும்படி
வானவி மான மெனுந்திரு வாழ்வுள கோயில் புகுந்துதன்
னீனமி லாநெறி வந்தபொன் னேழெழு கோடி வழங்கினன்.

இ—ள்: மீனவர் கோன் மொழியின் படி வேணியன் நேசர் இயைந்த பின் - பாண்டியராசனது சொல்லின்வண்ணமே சடையையுடைய சிவபெருமானது அன்பராகிய திருவாதவூரடிகள் உடம்பட்டபின்னர், புவி ஆள்பவன் ஆனன சோதியுடன் - அவ்வரசன் முகமலர்ச்சியோடு, வாசி கொளும்படி - குதிரை கொள்ளும்பொருட்டு, வான விமானம் எனும் திரு வாழ்வு உள தன் கோயில் புகுந்து - தேவ விமானமென்று சொல்லத்தகும் திருமகள் வாழுந் தனது திரவியசாலையுட் புகுந்து, ஈனம் இலா நெறி வந்த பொன் ஏழ் எழு கோடி வழங்கினன் - தருமநெறியா னீட்டிய திரவியத்தில் நாற்பத்தொன்பது கோடி பொன் கொடுத்தனன் எ—று.

எனுமென்னும் பெயரெச்சம் கோயிலென்னு மிடப்பெயர்கொண்டது. வானவிமானமென்பதற்கு விண்ணிழி விமானமெனினு மமையும். மீனவர்



கோன் அரசர்க்கரசன். தன்கேள்விக்கு அவர் உடம்பட்டமையின் ஆனன சோதியுடனென்றும், மகாலங்காரத்தோடு பொன்மயமுமா யிருத்தலின் வானவிமானமென்னும் கோயிலென்றும், திருமகள் எஞ்ஞான்றும் விட்டு நீங்காது வசிக்கப்பெறுதலின் திருவாழ் கோயிலென்னாது திருவாழ்வுள கோயிலென்றும், பின் சிவபுண்ணியவிஷயத்திற் செலவழிக்கப்படுதலின் முன் அவை தருமநெறியா னீட்டப்பட்ட பொன்னென்ப தினிது விளங்குமென்பார் எதிர்மறைமுகத்தான் ஈனமிலாநெறி வந்த பொன்னென்றுங் கூறினார். ஒரு பொன் ஒரு வராகனெடை கொண்டது. (௨௮)

விற்படை வெற்றி மடந்தையு மிக்க மலர்த்திரு வும்பயின்
மற்புய வெற்பின னங்கயல் வைத்த வலத்தன் வழங்கிய
பொற்பு மிகுத்த தனங்கொடு பொற்க வனப்பரி கொண்டிட
நற்பய ணத்தை முயன்றனர் நக்கனை நெக்குணர் கின்றவர்.

இ—ள்: நக்கனை நெக்கு உணர்கின்றவர் - திகம்பராகிய சிவபெருமானை மனம் நெக்குநெக்குருகித் தியானிக்கும் திருவாதவூரடிகள், வில் படை வெற்றி மடந்தையும் மிக்க மலர்த் திருவும் பயில் மல்புய வெற்பினன் - வில்லாகிய படையோடு வீரலக்குமியும் செந்தாமரை யாசனியாகிய மகாலக்குமியும் வசிக்கும் மல்யுத்தஞ் செய்யும் புயகிரிகளையுடையவனும், அம் கயல் வைத்த வலத்தன் வழங்கிய - அழகிய மீனக்கொடியை யுயர்த்த வலப்பாகத்தை யுடையவனுமாகிய பாண்டியன் கொடுத்த, பொற்பு மிகுத்த தனம் கொடு பொன் கவனப்பரி கொண்டிட - பொலிவு மிக்க திரவியத்தைப் பெற்றுக்கொண்டு அழகிய வேகத்தையுடைய குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு, நல் பயணத்தை முயன்றனர் - நல்ல பிரயாணத்தை முயன்றனர் எ—று.

பிரயாணம் பயணமெனத் தற்சமமாயிற்று. விற்படை வெற்றிமடந்தை என்பதற்கு வில்லின்கட் டங்கும் வீரலக்குமியெனவும், அங்கயல்வைத்த வலத்தன் என்பதற்கு அழகிய கயன்மற்சக்கொடியை எங்கும் நிறுத்திய வெற்றியையுடையவனெனவும் பொருள்கோடலுமாம். வீரலக்குமி வில்லின்கட் டங்குதலை 'தாக்கணங் கமர்சிலை தன்னைச் சின்னமே யாக்கினன்'' என்பதனானு மறிக. இப்பொருட்கு விற்படை என்புழி ஐ சாரியை. இன்னும் வில்லின்கட் டங்குஞ் சயமகளும் மலரின்கட் டங்குந் திருமகளும் அவற்றை வெறுத்தொழிந்து வந்து தங்குதற்கேற்ற சிறந்த புயகிரிகளென்பார் விற்படை வெற்றி மடந்தையு மிக்கமலர்த்திருவும்பயின், மற்புய வெற்பினனென்றார் எனக் கோடலு மொன்று. முயறல் - தொடங்கல். திகம்பரர் திக்கை ஆடையாக வுடையவர். நீர்ப்பூக்களுட் டாமரைப்பூவும் தாமரைகளுட் செந்தாமரைப்பூவும் சிறந்தமையின், அதனை மிக்கமலரென்றும், திருப்பெருந்துறையை அடைந்து ஞானோபதேசம் பெறுதற்கு இப்பயணமேதுவாயினமையின் நற்பயணமென்றுங் கூறினார். (௨௯

மெய்த்தவ ருற்ற பெருந்துறை வித்தக ரைக்குறு கும்படி
யித்தகு நற்பொருள் கொண்டுநி ரிப்படி யிற்செலு மென்றவி
னத்தகு புத்தி யொழிந்துயி ரற்புத முத்தி பெறும்படி
யுய்த்துள சத்தி யுடன்பொரு வொத்தன னுத்தம பஞ்சவன்.

இ—ள்: மெய்த் தவர் உற்ற பெருந்துறை வித்தகரைக் குறுகும்படி - மெய்ம்மையாகிய தவத்தையுடைய பெரியோர்கள் வாழும் திருப்பெருந்துறையிலே சாதுரியராகிய ஞானதேசிகரை யடையும்படி, இத்தகு நல் பொருள் கொண்டு - இந்தத் தகுதியாகிய நல்ல பொன்னைக் கைக்கொண்டு, அத் தகு புத்தி ஒழிந்து - அம்மந்திரி யுத்தியோகத்துக்கு வேண்டும் சூழ்ச்சிகளை இதுபொழுது மிகவுந் தவிர்ந்து, நிர் இப்படியில் செலும் என்றவின் - நீர் இந்நெறியானே செல்லுமென்று திருவாதவூரடிகளைச் செலுத்துதலினால், உயிர் அற்புத முத்தி பெறும்படி உய்த்துள சத்தி உடன் - பக்குவான்மாவைப் பரமுத்தி பெறும்படி செலுத்தும் பிரேரகசத்தியோடு, உத்தம பஞ்சவன் பொருவொத்தனன் - உத்தமபுருஷனாகிய பாண்டியன் உவமை பொருந்தினன் எ—று.

படி ஆகுபெயர். சத்தியைக் குறிக்குங்காற் பொருள் சிவாகமப்பொருளும், படி தன்மையும், புத்தி அனுபவமுமாம். சிவாகமப்பொருள்கொண்டு, வினைப்போகங்க டொலையப் பரமுத்தி பெறும்படி, இத்தன்மைத்தாகிய ஒழுக்கநெறியாற் செல்லுகவென்று பக்குவான்மாவைச் சிவசத்தி செலுத்துதல்போலச் செல்வப்பொருள் கொண்டு, அமைச்சுக்குரிய சூழ்ச்சிகடவிர, ஞானதேசிகரை அடையும்படி, திருப்பெருந்துறைக்கேகும் இந்நெறியானே செல்லுகவென்று திருவாதவூரடிகளை அரசன் செலுத்துதலின், அதனோடு உவமையாயினனென்பார் பொருவொத்தன னென்றார். ஒத்தல் - பொருந்தல். மாயாமலமாகிய அழுக்கைக்கொண்டே மூலமலமாகிய அழுக்கைக் கழுவுதலின் வித்தகர் என்றும், அறிஞர் கைப்படின் இருமையும் பயத்தற் சிறப்புடைமையின் இத்தகு நற்பொருளென்றும், பரமுத்தியாகலின் அற்புத முத்திஎன்றும், பக்குவமுண்மையின் உத்தம பஞ்சவனென்றுங் கூறினார். இவ்வரிமர்த்தனபாண்டியன் பக்குவமுடைய உத்தமபுருஷ னென்பதனை "கதிரை மறைத்தன்ன சோதி கழுக்கடை கைப்பிடித்துக், குதிரையின் மேல் வந்து கூடிடு மேற்குடி கேடுகண்டீர், மதுரையர் மன்னன் மறுபிறப் போட மறித்திடுமே." என வரும் திருவாக்கா னுய்த்துணர்க. நீர் என்பது நிர் எனக் குறுகிற்று. (௫0)

பற்றிலர் பெற்ற சிவன்கழல் பற்றின ரைக்கலை வண்டமி
ழுற்ற மலைக்கிறை வன்றனை யொக்க மதித்தருள் கொண்டலை



விற்றுவ சத்த னெடும்படை மிக்க புலிக்கொடி யன்படை
மற்றுள கொற்றவர் தம்படை வர்க்கமு முற்கொ டெழுந்தன.

இ—ள்: பற்று இலர் பெற்ற சிவன் கழல் பற்றினரை - இருவகைப் பற்றுமற்ற மெய்ஞ்ஞானிகள் அத்துவிதமாய்க் கலக்கப்பெறும் சிவபெருமானுடைய திருவடிகளை இறுகப் பற்றினவரும், கலை வண் தமிழ் உற்ற மலைக்கு இறைவன் தனை ஒக்க மதித்தருள் கொண்டலை - கலைகளையுடைய வளவிய தமிழ்மொழி இருந்து பரவப்பெற்ற பொதிய மலைக்குத் தலைவனாகிய பாண்டியன் தன்னைப்போல நன்குமதித்த கிருபாமேகமுமாகிய திருவாதவூரடிகளை, வில் துவசத்தன் நெடும்படை (வர்க்கமும்) - விற்கொடியையுடைய சேரனது தொகைமிக்க சேனாசமூகமும், புலிக் கொடியன் மிக்க படை (வர்க்கமும்) - புலிக்கொடியையுடைய சோழனது தொகைமிக்க சேனாசமூகமும், மற்றுள கொற்றவர் தம்படை வர்க்கமும் முன் கொடு எழுந்தன - மற்றுமுள்ள சாமந்தர்களது சேனாசமூகங்களும் தமக்கொரு முதலாகக்கொண் டெழுந்தன எ—று.

பற்றிலர் என்புழி இரண்டென்னுந் தொகைச் சொல்லும் முற்றும்மையும், முற்கொடு என்புழி ஆக்கச்சொல்லும், விகாரத்தாற் றொக்கன. பற்றிலாற் பெறப்படுதல் நிச்சயமாகலின், அத்தெளிவுபற்றிப் பெற்ற என இறந்த காலத்தாற் கூறினார். தன்னைப்போல நன்குமதித்தல் அமைச்சனாக வன்றி அரசனாக மதித்தல். அரசன் அவ்வாறு மதிக்கவே, சேனைகளும் அங்ஙனம் மதித்தன என்பார் "முற்கொடெழுந்தன" என்றும், தமிழ் முனிவராகிய அகத்தியர் தங்கியிருந்து, அத்தமிழைப் பரப்பிய முக்கிய ஸ்தானமாகலின், பொதியமலையைக் "கலை வண்டமிழுற்றமலை" என்றும், அம்மலையைத் தனது தசாங்கங்களு ளொன்றாக வுடையனாகலிற் பாண்டியனை "மலைக்கிறைவன்" என்றும், எதிர்காலத்தவர் ஓதியுய்யும்வண்ணம் திருவாசகமழை பொழிபவராகலின் திருவாதவூரடிகளைக் "கொண்ட"லென்றும், சேர சோழர்களிருவரும் சார்வபௌமனாகிய பாண்டியனைப்போல நெடுநில வரசர்களாகலின் அதனை விளக்குதற்கு "விற் றுவசத்த னெடும்படை மிக்க புலிக்கொடியன் படை" என அவர்கள் சேனைத் தொகையையும் நாமதேயங்களையும் விதந்தும், மற்றை யரசர்கள் சாமந்தர்களாகிய குறுநிலவரசர்களாகலின் அங்ஙனம் விதவாது வாளா "மற்றுள கொற்றவர்" என்றுங் கூறினார். மலைக்கிறைவனை அகத்தியமுனிவரெனக் கோடலுமொன்று. இப்பொருட்குத் தன் சாரியை. சார்வபௌமன் - நெடுநிலவரசன். சாமந்தர் - குறுநில மன்னர். இது பயனடியான் வந்த 'விரியுவமாலங்கார' மென்க. (௫௧)

உக்கிர நச்சுர கங்களி னுச்சி பனிப்ப வசைந்தடி
வைக்கு முரத்தன வெங்கய மைக்கிரி யொக்க மலிந்தன
பக்கமு முற்பிற குந்துடி பற்பல கொட்ட வியங்குவ
தக்க மனத்தில் விரைந்துள தத்து பரித்திரள் வந்தன.

இ—ள்: உக்கிர நச்சு உரகங்களின் உச்சி பனிப்ப அசைந்து அடி வைக்கும் உரத்தன வெம் கயம் - கொடிய நஞ்சையுடைய சேஷன் முதலிய பாம்புகளின் முடிகள் சுமக்கலாற்றாது நடுங்க, உடம்பு தள்ளாடிக் கால்களைப் புடைபெயர்த்து வைக்கும் வலியை யுடையனவாகிய வெவ்விய யானைகள், மைக்கிரி ஒக்க மலிந்தன - தோற்றத்தாற் கரிய மலைகளைப் போல நிறைந்தன, துடி பற்பல கொட்ட பக்கமும் முன் பிறகும் இயங்குவ - உடுக்கைகள் மிகப் பலவற்றை இயம்ப இரு பக்கங்களிலும் முன்னரும் பின்னரும் அவற்றின் றாளகதிக்கேற்ப இயங்கி நடிப்பனவும், தக்க மனத்தில் விரைந்துள - தகுதியாகிய மனோகதியைப் போல விரைந்து செல்வனவுமாகிய, தத்து பரித்திரள் வந்தன - தாவுகின்ற குதிரைக் கூட்டங்கள் சென்றன எ—று.

தள்ளாடுதல் வலியின்மையினாலன்று பேருடம்புடைமையினா லென்பார் பின்னர் உரத்தன என்றும், ஐங்கதிகள் போலன்றி அவற்றினுஞ் சிறந்த கிளர்ச்சியையுடைய மனோகதிபோ லென்பார் "தக்க மனத்தி' லென்றும், தாளகதிக்கேற்ப நடித்தல் செயற்கையாயினும் மனோகதிபோல விரைதல் அவற்றிற்கியற்கை யென்பார் விரைந்தென்னாது "விரைந்துள" என்றுங் கூறினார். ஐங்கதிகளை, "மயிலி ருஞ்சா முயலொடு யூகமற்றொழிலைப், பயில் பரித்தொகை" என்பதனானுமறிக. அசைத்தடி என்னும் பாடமும் செயற்கைப் பாடமே, இயற்கைப்பாடமன்று. இதனுட் கயமைக்கிரி ஒக்க என்பது 'விரியுவமாலங்கார' மென்க. (௩௨)

வேறு.

கொங்கணர் கலிங்கரொடு கொங்கர்துளு நாடர்
சிங்களர்க ளொட்டியர் தெலுங்கரொடு சீனர்
தங்குதிறன் மாளவர் மலாடர்தமி லொன்றா
யெங்கணு மிடைந்தவர்க ளெண்ணமுடி வில்லார்.

இ—ள்: கொங்கணர்களும் கலிங்கர்களும் கொங்கர்களும் துளுவர்களும் சிங்களர்களும் ஒட்டியர்களும் தெலுங்கர்களும் சீனர்களும் மாளவர்களும் மலாடர்களும் தம்முட்கலந்து எவ்விடத்தும் நெருங்கிய பதாதி வீரர்கள் இவ்வளவினரென்று எண்ணக்கடைபோகாதவர் எ—று.



ஒடு எண்ணொடு. மலயமானொடு மலாடெனமரீஇயிற்று. மலயமான் - சேரன். மலயமானாடு மலையாளம். தங்கு திறல் என்பதனைத் திறல் தங்கு என மாறுக. பொருளாதியாறும் பிறவுங் காரணமாகப் பொருட்கு வரும் பெயர்களுள் இதை இடப்பாகுபாட்டினு ளொன்றாகிய தேயத்தால் வரு பெயரென்பது விளக்குவார் "நாடர்" என்றும், இவர்தாம் பலதிறத்தராயினும் ஈண்டன்ன ரல்ல ரென்பார் "தமிலொன்றா" யென்றும், இறப்பப் பலர் என்பார் 'எண்ணமுடிவில்லா' ரென்றுங் கூறினார். இது கலிவிருத்தம்.

இத்திற மெழுந்தபடை யெங்கணு நெருங்கத்
தத்துபரி மீதுள தமிழ்க்கவிஞர் சூழச்
சித்திர மடந்தையர் திரண்டிரு மருங்கு
மொய்த்துவர வீணைகுழன் முன்னரிசை கொள்ள.

இ—ள்: இத்திறம் எழுந்த படை எங்கணும் நெருங்க - இந்தப் பிரகாரமெழுந்த மூவகைச் சேனைகள் எவ்விடத்தும் நெருங்கவும், தத்து பரி மீது உள தமிழ்க் கவிஞர் சூழ - தாவுகின்ற குதிரைமேல் விவர்ந்த தமிழ்ப் புலவர்கள் தம்மைச் சூழவும், சித்திர மடந்தையர் திரண்டு இரு மருங்கும் மொய்த்து வர - அழகையுடைய நடனஸ்திரீகள் தம்முட் கூடி இரு மருங்கினும் நெருங்கிவரவும், வீணை குழல் முன்னர் இசை கொள்ள - யாழ்களும் குழல்களும் எதிரே ஒலிக்கவும் எ—று.

திருவாதவூரடிகள் ஏனையவற்றினும் தமிழின்கண் மிக விருப்பமுடைய புலவர் திலகராகலின், அவ்வியைபுபற்றி அத்தமிழ்ப் புலவர்களே அவரை அகத்துச் சூழ்ந்தன ரென்பார் அவரை முதற்கண் விதந்துகூறினார். இனி நங்கடவுட்கும் ஏனைய மொழிகளினும் அத் தமிழ் மொழிக் கண்ணேயே விருப்பமிக்குண்டென்பது "தொண்டர்நாதனைத் தூதிடைவிடுத்தது முதலை யுண்டபாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக், கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித், தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" என்பது முதலிய எதுக்களா னுய்த்துணர்க. (௩௪)

கட்டுமள கத்தினர் கனத்துள தனத்தார்
பட்டுடை மருங்கினர் பனிக்கவரி வீச
வட்டமதி வெண்குடை வயங்கமுர செங்குங்
கொட்டவுயர் காளமொடு கோடுகள் கறங்க.

இ—ள்: கட்டும் அளகத்தினர் - கைசெய்து முடிக்கப்பட்ட கூந்தலையுடையவரும், கனத்துள தனத்தார் - கனத்த தனங்களை யுடையவரும், பட்டு உடை மருங்கினர் - பட்டு வஸ்திர முடுத்த இடையை யுடையவருமாகிய நடன ஸ்திரீகள், பனிக் கவரி வீச - குளிர்ச்சி பொருந்திய சாம

ரங்களை இரட்டவும், வட்ட மதி வெண் குடை வயங்க - பூரண சந்திரன் போலும் வெண்கொற்றக்குடை பிரகாசிக்கவும், முரசு எங்கும் கொட்ட— பேரிகைகள் எவ்விடங்களினும் மொத்துண்ணவும், உயர் காளம் ஒடு கோடுகள் கறங்க - உயர்வாகிய சிறுசின்னங்களோடு சங்குகள் சத்திக்கவும் எ—று.

கனக்கவேண்டுந் துணையும் கனத்தொழிந்த தனமென்பார் கனதனமென்னாது 'கனத்துள தன' மென்றும், சைத்தியோபசாரங்களுள் ஒன்றாகலிற் 'பனிக்கவரி' யென்றும், கொட்டுதல் பிரயாண நிமித்தம்பற்றியுமென்பார் முரசு கொட்டவென்னாது 'முரசெங்குங் கொட்ட' என்றும், மங்கல வாத்தியங்களுட் சிறந்தனவாகலின் 'உயர் காளமொடு கோடுகள் கறங்க' என்றுங் கூறினார். கோடு கொம்பெனினு மமையும். (௫௫)

மிண்டியுள பாடகர் வியந்துகர வாரங்
கொண்டுபுடை சூழவெழில் சேர் குழலர் பாடத்
தண்டரள மல்கிய தனிச்சிவிகை மேல்கொண்
டெண்டிசை மிகப்புகழ் கயற்கொடி யிலங்க.

இ—ள்: மிண்டி உள பாடகர் கரவாரம் கொண்டு வியந்து புடை சூழ - தம்முள் நெருங்கியிருக்கும் மாகதர் கைகொட்டுதல் கொண்டு துதித்துப் பக்கத்தே சூழவும், எழில் சேர் குழலர் பாட - அழகுபொருந்திய கூந்தலையுடைய விறலிகள் பாடவும், எண் திசை மிகப் புகழ் கயல் கொடி - அட்ட திக்கினரும் மிகவும் புகழும் பாண்டியனது மீனக்கொடி, தண் தரளம் மல்கிய தனிச்சிவிகை மேல் கொண்டு இலங்க - மிகக் குளிர்ச்சி பொருந்திய ஒப்பற்ற முத்துச்சிவிகையிலே உயர்த்தப்பெற்று விளங்கவும் எ—று.

கரவாரம் என்புழி ஆர் ஒலி. அது ஆர்த்தலென்னும் தொழிற்பெயர்ப் பகுதியானு மறிக. கரவாரம் என்பதனை உத்தரத்தார் கரகோஷம் என வழங்குப. இனிக் கர்வாரம் என்பதனைக் கர வாரம் எனப் பிரித்து, வாரம் வாரப்பாட்டென்றலு மொன்று. அது "வாரம் பாடுந் தோரிய மடந்தையும்' என்பதனு னறிக. வாரமாவது பற்று. அஃது ஓரொற்று வாரமும், ஈரொற்று வாரமுமென இருவகைப்படும். அவை தாளத்து ஒரு மாத்திரையும் இரு மாத்திரையும் பெற்றுவரும். மாகதர் - நின்றேத்துவார். விறலிகள் - பாடன்மகளிர். சிவிகை - பல்லாக்கு. இனி மேல்கொண்டென்னும் செய்தெனெச்சத்திற்குத் திருவாதவூரடிகளை வினைமுதலாகக் கொள்வாருமுளர். அங்ஙனங் கொள்ளின், அச் செய்தெனெச்சம் வருஞ் செய்யுளின் 'மங்கல தினத்தி னெடு மாளிகை யகன்றே' என்புழி அகன்றென்னும் செய்தெ னெச்சத்தையும், அவ்வகன்றென்னும் செய்தெனெச்சம் சொக்கரை வணங்கி என்புழி, வணங்கி என்னும் செய்தெனெச்சத்தையுங் கொள்ள



வேண்டுதலானும், அங்ஙனங் கொள்ளின், திருவாதவூரடிகள் சிவாலய தரிசனஞ் செய்யச் செல்லும்போது சிவிகைமீ திவர்ந்து சென்றாரெனப் பொருள்பட்டுச் சிவாகம விரோதமாய் முடியுமாகலானும், சிவிகைமீ திவர்தல் பின்னர் எழில் சிறக்கும் வென்றி வளவன் புவியின் மேன்மையொடு செல்வா ரென்புழி மேன்மையொடு செல்வார் என்பதனாற் குறிப்பிக்கப் படுதலானும், தேரின்மையிற் சிவிகை யல்லது மீனக்கொடி யுயர்த்தற்கு வேறிடமின்மையானும், மீனக்கொடி விளக்கமும் ஈண்டு ஒருதலையாகக் கூறப்படல் வேண்டுமாதலானும், பிறவாற்றானும் அது பொருந்தாதென்க. அற்றேல், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முத்துச்சிவிகைமீ திவர்ந்து சிவாலய தரிசனஞ்செய்யச் சென்றாராலெனின், வாகனமேறிச் சென்று சிவாலய தரிசனஞ்செய்தல் பாவமென்று அதனை விலக்கிய சிவபெருமானே அந் நாயனாருக்குச் சிவிகை கொடுத்து 'இதன்மே லிவர்ந்து சிவாலய தரிசனஞ் செய்க' என்று பணித்தமையின், அவரது அந்நிலைமை பத்திமார்க்கமும், இவரது இந்நிலைமை விதிமார்க்கமுமாமாகலின், அது கடாவன்றென்க. (௫௬)

மங்கல தினத்தினெடு மாளிகை யகன்றே
துங்கமணி யக்கையணி சொக்கரை வணங்கி
யங்குவிடை பெற்றுமறை யந்தணரின் மிக்கார்
திங்கண்மர பிற்குரிசில் கோயிலுழை சென்றார்.

இ—ள்: மறை அந்தணரில் மிக்கார் - வேதங்களை அத்தியயனஞ் செய்யும் பிராமணர்களுள்ளே சிரேஷ்டராகிய திருவாதவூரடிகள், மங்கல தினத்தில் நெடு மாளிகை அகன்று - பிரயாணத்துக்கேற்ற ஒரு சுபதினத்திலே தமது நெடிய திருமாளிகையை விட்டகன்று திருவாலவாயின்கட் சென்று, அங்கு துங்கமணி அக்கை அணி சொக்கரை வணங்கி விடை பெற்று - அங்கே உயர்வாகிய உருத்திராக்க மணியையும் எலும்பையு மணிந்த சொக்கநாதசுவாமியை வணங்கி அநுமதிபெற்றுக்கொண்டு, திங்கள் மரபில் குரிசில் கோயில் உழை சென்றார் - சந்திரகுலத்தரசனாகிய அரிமர்த்தன பாண்டியனது மாளிகையின்கட் சென்றார் எ—று.

சொக்கர் - அழகர். மேன்மாடமென்பார் நெடு மாளிகை என்றும், மணிகள் பலவற்றுள்ளும் உயர்ந்தமணி என்பார் உருத்திராக்கமணியைத் 'துங்க மணி' என்றுங் கூறினார். (௫௭)

சென்றுதமிழ் மாறனருள் பெற்றெழில் சிறக்கும்
வென்றிவள வன்புவியின் மேன்மையொடு செல்வார்
குன்றனைய மாடமொடு கோபுர நெருங்கு
நன்றிமது ரைப்பதியை நன்கொடு கடந்தார்.

இ—ள்: சென்று தமிழ் மாறன் அருள் பெற்று - திருவாதவூரடிகள் அங்ஙனஞ் சென்று தமக்கினிய பாண்டியனது அருட் பிரசாதம்பெற்று, வென்றி வளவன் புவியில் எழில் சிறக்கும் மேன்மையொடு செல்வார் - வெற்றியையுடைய சோழனது புனனாட்டின்கண்ணே மேற்கூறிய இராசோபசாரங்களோடு செல்பவராகி, குன்று அனைய மாடம் ஒடு கோபுரம் நெருங்கும் நன்றி மதுரைப் பதியை - மலைகளையொத்த மாடங்களோடு கோபுரங்கள் நெருங்கப்பெறும் நல்ல மதுரையாகிய இராசதானியை, நன்கொடு கடந்தார் - நன்மையோடு நீங்கினார் எ—று.

தமிழ்மாறன் தமிழ்மொழியை யுடைய பாண்டியனெனினு மமையும். எழில் சிறக்குமென்னும் விசேடம் மேன்மை என்னும் ஆகுபெயர்ப் பொருளை விசேடித்துநின்றது. ஆகுபெயர்ப் பொருள் முத்துச்சிவிகை முதலியன; ஈண்டுப் புகழ் பொருட்கேற்பதோரடையை அல்பொருட்கேற்றுதல் வழுவாகவினென்க. நெருங்க, சூழ, வர, கொள்ள, வீச, வயங்க, கொட்ட, கறங்க, சூழ, பாட, இலங்கச் செல்வார் என அச்செயவெனெச்சங்களை யெல்லாம் ஈண்டுத் தந்து முடிக்க. அவை மேலைச்செய்யுளின் அகன்றென்னு மெச்சத்தோடு முடியாமை மேலுங் காட்டப்பட்டது. அரசன் நேரே விடைதந்து, பிரியக்கண்டு, சகிக்கமாட்டாதவனாகலின், அவனிடத்து விடைபெற்றென்னாது அருள்பெற்றென்றும், உத்தம சிவக்ஷேத்திர மாகலின் 'நன்றி மதுரைப்பதி' என்றும், புறப்படுகின்றுழிச் சுபசகுன நிகழ்ச்சியோடு புறப்பட்டு அவ்விடத்தைவிட்டகன்றார் என்பார் 'நன்கொடு கடந்தா' ரென்றுங் கூறினார். புறப்படுகின்றுழிச் சுபசகுன நிகழ்ச்சியோடு புறப்பட்டாரென்பதனை "ஆதிசைவனொ ருச்சக னொருவனே ரணைந்து, பூதி யீந்தனனெமக்கிது போலிலை நிமித்த, மீதுநன்னெறிக் கேதுவென் றிருகையேற்றணிந்து" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானுமறிக. மதுரை - கலக்கப்பட்டது. அது ஈண்டுத் தகுதிபற்றி நனைக்கப்படுதலின்மேற்று. அது சிவபெருமான் தமது திருச்சடையின்கணுள்ள பாலசந்திரனது அமுதைப் புரோக்ஷித்துக் கலந்து சாந்திசெயப்பெற்ற புனிதத்தின்மேற்றென்க. மத என்னும் வடமொழித்தாது கலத்தலென்னும் பொருட்டு. அதனை, "பொன் மயமான சடைமதிக் கலையின் புத்தமு துகுத்தன ரதுபோய்ச், சின்மயமான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போற், றன்மயமாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர, நன்மயமான தன்மையான் மதுரா நகரென வுரைத்தனர் நாமம்" என்பதனானறிக. (௩௮)

நெடுங்குட திசைக்கட னிறைந்தொலி சிறந்தே
யுடைந்துதய நற்றிசையி னுற்றுவரு மாபோன்
மிடைந்தபதி யுங்கடமும் வெற்புமிவை யெல்லாங்
கடந்துவதி சென்றுபல காவத மகன்றார்.



இ—ள்: நெடும் குட திசைக் கடல் - நெடிய மேற்றிசைக் கடலானது, நிறைந்து ஒலி சிறந்து உடைந்து - முன்னையினும் நீர் நிறைந்து ஒலி மிகுந்து அணையுடைந்து, நல் உதய திசையில் உற்று வருமாபோல் - நல்ல பூருவதிக்கிலே புரட்டெடுத்துப் பாய்ந்து வருமாறுபோல, வதி சென்று - திருவாதவூரடிகள் சேனைகளோடு வழிக்கொண்டு சென்று, மிடைந்த பதியும் கடமும் வெற்பும் இவை எல்லாம் கடந்து - நெருங்கிய ஊர்களும் காடுகளும் மலைகளுமாகிய இவைகளையெல்லாங் கடந்து, பல காவதம் அகன்றார் - பல காவததூரம் போனார் எ—று.

நிறைந்து, சிறந்து, உடைந்தென்னுஞ் செய்தெனெச்சங்கள் சினைவினையாகலின் உற்றுவருமென்னும் முதல்வினையோடு முடிந்தன. உறுதல் - மிகுதல். உதயநற்றிசை என விசேடித்தார், சுபகருமஞ் செய்கின்றுழி எதிர்நோக்கப்படும் மங்கலதிக்காகலினென்க. சோழநாட்டுக்குப் பாண்டிநாடு மேற்கின்கண்ணதாகலின் அப்பாண்டி நாட்டினின்று சோழநாட்டுக்கு வருஞ் சேனையை 'நெடுங்குடதிசைக் கடலுதய நற்றிசையில் வருமாபோ' லென்றும், மிகுதியும் ஒலியும் வேகமுங் கொண்டுவருதலின் 'நிறைந்தொலி சிறந்தே யுடைந்து வருமாபோ' லென்றுங் கூறினார். நெல் எட்டுக் கொண்டது ஒரு விரல்; விரல் பன்னிரண்டு கொண்டது ஒரு சாண்; சாண் இரண்டு கொண்டது ஒரு முழம்; முழம் இரண்டு கொண்டது ஒரு சிறுகோல்; சிறுகோல் நான்கு கொண்டது ஒரு தண்டம்; தண்டம் ஐந்து கொண்டது ஒரு காண்டம்; காண்டம் பத்துக்கொண்டது ஒரு வர்த்தம்; வர்த்தம் பத்துக் கொண்டது ஒரு குரோசம்; குரோசம் நான்கு கொண்டது ஒரு காவதமென்க. எனவே, பதினாறாயிரம் முழங்கொண்டது ஒரு காவதமாம். காவதமெனினும் காதமெனினு மொக்கும். காவதம் நான்கு கொண்டது ஒரு யோசனை. (௩௯)

என்றுமுள பொன்றுமுட லென்னுநகர் தோறுஞ்
சென்றவழி மாறியொரு தெய்வவழி செல்வார்
நன்றியுள முத்திபெற நம்பர்தம தன்பா
லன்றுயர் பெருந்துறை யடைந்தபடி சொல்வாம்.

இ—ள்: என்றும் உள பொன்றும் உடல் என்னும் நகர் தோறும் சென்ற வழி மாறி - எஞ்ஞான்றும் காரணத்தின்கணுளவாகிக் காரியப்பட்டுப் பிறந்திறக்கும் சரீரங்களாகிய நகரங்கடோறும் இதுகாறுஞ் சென்ற வனைச் சமயவழி தப்பி, ஒரு தெய்வவழி செல்வார் நன்றி உள முத்தி பெற - இதுபொழுது ஒப்பற்ற தெய்வத் தன்மைபொருந்திய சித்தாந்த சைவவழியிற் செல்பவராகிய திருவாதவூரடிகள் பரமுத்தி பெறும் பொருட்டு, தமது அன்பால் - அவரது பத்திமை காரணமாக, நம்பர் அன்று உயர் பெருந்துறை அடைந்த படி சொல்வாம் - கைலாசபதி அத்தினத்தின் கண் உயர்வாகிய திருப்பெருந்துறையை அடைந்த சரித்திரத்தை இனி யாங் கூறுவாம் எ—று.

உளவாகிப் பொன்றுமென ஆக்கம் வருவித்துரைக்க. நன்றியுள முத்தி நன்றியினால் வரும் முத்தி. நன்றி - நன்மை; என்றது சிவபுண்ணியத்தை. எற்புழிக்கோடலான் அஃதீண்டு ஞானத்தின்மேற்று. பாமுத்திக்கேதுக் கூறியவாறு. தம்மென்றது ஈண்டுச் சுட்டின் பொருள்பட நின்று திருவாதவூரடிகளை யுணர்த்திற்று; மேற் செல்வாரென வந்தமையின். சிரத்தை அன்புடைமையும் இருவினை யொப்புடைமையும் வேறன்மையின் முன்னர் இருவினையொத் தருள்வயத்தா லென்பதனோடு இது மலையாமையறிக. காரணம்: மாயை. காரியம்: தனு காண புவன போகங்கள். உயிராகிய ஆதேயத்துக்கு உடம்புகள் ஆதாரமாகலின் அவை அதற்கு நகராகவும், அந்நகரங்கள் உயிர்க்கு எனைச் சமயச் சார்பான் வருவனவாகலின், அச்சார்பை அந்நகரங்கட்குச் செல்லும் வழியாகவும், பாமுத்திக்கு நேரே வாயிலாகிய தத்துவ ஞானத்தைப் பயப்பது சைவ சித்தாந்தம் ஒன்றேயாகலின், அது அதற்கு வழியாகவும் உருவகஞ் செய்யப்பட்டன. "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம, வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ், சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும்வேத சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத், திறத்தடைவரிதிற்சரியை. கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்பதனானு மிஃதுய்த்துணர்க. (௫௦)

மந்திரிச் சருக்க முற்றிற்று.



௨

# திருப்பெருந்துறைச் சருக்கம்.



பழமறை முழுதுண ரந்தணர் பலர்தொழ நடமுயல் கின்றவர்
மழுவுழை கரமிசை கொண்டிட மருவிய கவுரி மகிழ்ந்திட
விழைதரு மிரசித பொங்கொளி விடுமுயர் கயிலை விலங்கலி
னழகுறு தபனிய மண்டப மதனிடை யருள்கொ டிருந்தனர்.

இ—ள்: பழ மறை முழுது உணர் அந்தணர் பலர் தொழ நடம் முயல்கின்றவர் - பழைய நான்கு வேதங்களையும் ஓதியுணர்ந்த மகாபண்டிதர்களாகிய தில்லைவாழந்தணர்கண் மூவாயிரவர் தரிசித்து வணங்கக் கனகசபையிலே பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்தருளும் சிவபெருமானனவர், மழு உழை கா மிசை கொண்டு - மழுவையும் மானையும் திருக்கரங்களிற் கொண்டு, இடம் மருவிய கவுரி மகிழ்ந்திட - தமது வாமபாகத்திற் பொருந்திய உமையம்மை திருவுளம் மகிழாநிற்ப, விழை தரும் இரசித பொங்கு ஒளி வீடும் உயர் கயிலை விலங்கலில் - எவரும் விரும்பத் தகும் வெள்ளியினது மிக்க ஒளியை வீசும் உயர்ந்த கைலாச கிரியின்கண்ணே, அழகு உறு தபனிய மண்டபம் - அழகு பொருந்திய சுத்தமாயாமயமாகிய செம்பொற் றிருக்கோயிலொன் றுண்டு, அதன் இடை அருள் கொடு இருந்தனர் - அதன்கண் மந்திர சிங்காசனத்தின்மீதே ஆன்மாக்களது தியானதிகட்குத் தாமகப்படுதல் வேண்டுமென்னும் திருவருளினாலே சத்திகாரியமாகிய உருவத்திருமேனிகொண்டு ஸ்ரீகண்டசரீரியாய் வீற்றிருந்தருளினார்.

முழுதுமென்னு முற்றும்மையும், விழைய என்னும் பெயரெச்சத்தீறும் மண்டபமென்பதன் பயனிலையும் விகாரத்தாற் றொக்கன. மண்டபமதனிடை என்புழி அது பகுதிப்பொருள் விகுதியுமாம். வேதம் அநாதினூலாகலிற் பழமறையென்றும், நான்கையுந் தழீஇக் கோடற்கு முழுதுமென்றும். இங்ஙனங் காணப்பட்ட தொன்றுகொண்டு காணப்படாததொன்றை அறிவிக்கின், அது அறிபவர்க் கினிது விளங்குமாகலின், காணப்பட்ட கனகசபையின்கண்ணே திருநடனஞ் செய்தருளும் சிவபெருமானனவர் காணப்படாத கைலாசகிரியின்கண் வீற்றிருந்தருளினார் என்றுங் கூறினார். இது அறுசீரடியாசிரிய விருத்தம். (௧)

மதுமலர் கரமிசை கொண்டுநின் வழிவழி யடியவ ரென்றுதம்
முதுமறை தெரிய மொழிந்தெதிர் முறைமுறை முனிவர் வணங்கின
ரிதுபர னருளை வழங்குவ தெனவரி பிரமரெ ழுந்துநம்
பதநிலை பெறவரு ளென்றிரு பரிபுர கழல்கள் பணிந்தனர்.

இ—ள்: முனிவர் மது மலர் கா மிசை கொண்டு நின் வழி வழி அடியவர் என்று - அப்பொழுது இருடிகள் தேன்பொருந்திய நறுமலர்களைக் கையிற்கொண்டு அடியேங்கள் தேவரீருக்குப் பாம்பரையாக வழித்தொண்டரென்று விண்ணப்பஞ்செய்து அருச்சித்து, தம் முதுமறை தெரிய மொழிந்து எதிர் முறைமுறை வணங்கினர் - தமக்குரிய பழைய வேதங்களை அப்பொரு டோன்றப் பாராயணஞ்செய்து துதித்துச் சந்நிதியிலே பலமுறை நமஸ்காரஞ் செய்தனர், அரி பிரமர் பரன் அருளை வழங்குவது இது என எழுந்து - அதுகண்ட விஷ்ணு பிரமா என்னு மிருவரும் சிவபெருமான் நமக்குத் திருவருள் செய்தற்கு இதுவே உசித சமையமென்று விரைந்தெழுந்து, நம் பத நிலை பெற அருள் என்று பரிபுர இருகழல்கள் பணிந்தனர் - நம் பதவிகள் நமக்கெஞ்ஞான்றும் நிலைபெறத் தேவரீர் திருவருள் செய்யுமென்று பிரார்த்தித்து வேதங்களாகிய சிலம்புகள் தரித்த உபயதிருவடிகளை வணங்கினார் எ—று.

அப்பொருள் பதியாகிய சிவபெருமானுக்குப் பசுக்களாகிய தாம் வழித்தொண்டரென்னும் பொருள், ஒரோவழிப் பரம்பொருள் யாமே என்று

மயங்கும் பிரம விஷ்ணுக்களாகிய நம்போலன்றி, இருடிகள் சிவபெருமானொருவரே பரமபதியென்றும், நாமெல்லாம் அநாதியே பஞ்சபாசங்களினாற் பந்திக்கப்பட்ட பசுக்கள் என்றும், ஆகலின் அப்பதிக்கு நாம் என்றும் மீளா அடிமைகள் என்றும் வேதாகமங்கள் கூறுமுண்மையை ஒருபோதும் மறவாத உத்தம சிவபத்திமான்களாகலின், அவ்விருடிகள் வணங்கி யருள் பெறும்போதே அச்சார்புபற்றி நாமும் வணங்கி யருள்பெறவேண்டுமென வுட்கொண்டு, இது பரனருளை வழங்குவதென்றுரொன்க. அக்கருத்து "வேண்டத்தக்க தறிவோய்நீ வேண்டமுழுதுந் தருவோய்நீ, வேண்டுமயன் மாற் கரியோய்நீ வேண்டியென்னைப் பணிகொண்டாய்" "திருப்பெருந் துறை யுறைவான், வானோர்களு மறியாததொர் வளமீய்ந்தன னெனக்கே" 'சுடர்பொற் குன்றைத் தோளாமுத்தை வாளாதொழும் புகந்து, சடைபட் டேனை யாண்டுகொண்ட கருணாலயனைத் திருமால்பிரமன், றடைபட்டின் னுஞ் சாரமாட்டாத் தன்னைத்தந்த வென்னாரமுதை' 'பூமே லயனொடு மாலும் புகலரிதென், றேமாறிநிற்க வினையே னிறுமாக்க, நாய்மேற் றவிசிட்டு நன்றுப் பொருட்படுத்த, தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத் தும்பீ' 'அரிக்கும் பிரமற்கு மல்லாத தேவர்கட்குந், தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்து நமை, யுருக்கும் பணிகொள்ளு மென்பதுகேட் டுலகமெல் லாஞ், சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ' என்பனவற் றுனு மறிக. பதம் வைகுண்டமும் சத்தியவுலகமுமாம். (உ)

பரவரு மணிகள் விளங்கிய பணவர வணியர னங்கமு
மருவிய தரள வடந்திகழ் மதிநுதன் மலைமகளங்கமு
மிரவியு மதியு மிருந்தென வெதிரெதி ரிலகுதல் கண்டன
ரரகர சிவசிவ வென்றுள மயர்வுற வழுதன ரன்பினர்.

இ—ள்: பரவு அரும் மணிகள் விளங்கிய பண அரவு அணி அரன் அங்கமும் - விலை சொல்லுதற்கரிய இரத்தினம் விளங்கும் படத்தையுடைய பாம்பை ஆபரணமாக வணிந்த சிவபெருமானது திருமேனியும், மருவிய தரள வடம் திகழ் மதி நுதல் மலை மகள் அங்கமும் - வாமபாகத்திற் பொருந்திய முத்துவடம் விளங்கும் மதிபோலும் நெற்றியையுடைய பார்ப்பதியம்மையினது திருமேனியும், இரவியும் மதியும் இருந்து என எதிர்எதிர் இலகுதல் கண்டனர் - சூரியனுஞ் சந்திரனு மொருங் கியைந் திருப்பதுபோல ஒன்றற்கொன்று சமீபமாகத் தமக்கெதிரே விளங்குதலைத் தரிசித்து, அன்பினர் அரகர சிவசிவ என்று உளம் அயர்வு உற அழுதனர் - சிவபத்தர்கள் அரகர சிவசிவவென் றுச்சரித்து மனோலயம் பொருந்த விம்மி அழுதார்கள்.

இருந்தது எனற்பாலது இருந்து என விகாரமாயிற்று. சூரிய சந்திரர்க ளிருவரும் திருமேனிக ளிரண்டற்கும் முறையே செம்மை தண்மைகளும் அதிக அற்ப விளக்கமும் பற்றிவந்த பண்புவமை. கண்டனர் முற்



றெச்சம். உள மயர்வுற என்பதனை உளம் மயர்வுற எனப் பிரிப்பினு மமையும். மயர்வு - பற்று, நிரனிறையணி. இதனை வடநூலார் யதாசங்கியாலங்காரமெனவும், கிரமாலங்காரமெனவும் கூறுப. (௩)

அடியொழி மரமென நொந்துபி னவனியில் விழுவதொ ழிந்துநின்
னுடனுறை பெருமை வழங்குவ துளதுகொ லெனநினை நெஞ்சொடு
மடலவிழ் கடிகம ழைந்தரு மலர்பல முறைமுறை சிந்திமுன்
னிடமிஃ தெனமகி ழிந்திர னிமையவ ரெவரு மிறைஞ்சினர்.

இ—ள்: இஃது இடம் என மகிழ் இந்திரன் இமையவர் எவரும் - நாம் பெறற்பாலனவற்றைச் சிவபெருமானிடத்துப் பெறுதற் கிதுவே நல்ல சமையமென்று மனமகிழு மிந்திரன் முதலிய தேவர்க ளனைவரும், பின் - முன்னை நல்வினைக்கீடாகிய இன்ப மீண்டனுபவிக்கப்பட்டு முடிந்தபின்னர், நொந்து - இன்னும் நெடுங்கால மீண்டிருந் தின்பங்களை அநுபவித்தற்கேதுவாகிய நல்வினைகளை முன்னர் மிகவுஞ் செய்திருந்தேமில்லையே யென்று மனம் நொந்து, அடி ஒழி மரம் என அவனியில் விழுவது ஒழிந்து - இனி அடியற்ற மரம்போல இப்போகபூமியினின்றுங் கன்மபூமியின்கண் வீழ்வதைத் தவிர்ந்து, நின் உடன் உறை பெருமை வழங்குவது உளது கொல் என நினை நெஞ்சு ஒடு - தேவரீரோ டிருக்கும் சாமீபமாகிய பதமுத்தியை எமக்குத் தந்தருளுவது மொருகாலத்துண்டு கொல்லோவென் றிங்ஙனம் பலதலையான் மேல்விளைவு கருதும் மனத்தோடும், மடல் அவிழ் கடி கமழ் ஐந்தரு மலர் பல சிந்தி முன் வணங்கினர் – இதழ் விரிகின்ற நறுமணங்கமழும் பஞ்சதருக்களின் மலர்கள் பலவற்றைப் பல முறைதூவிச் சந்நிதியில் வணங்கினர்கள் எ—று.

பெருமை ஆகுபெயர். வழங்குவது மென்னும் சிறப்பும்மை விகாரத் தாற் றொக்கது. ஐந்தருமலருக்குக் கடிகமழுதல் சாதியடை. இடம் ஈண்டுக்காலத்தின்மேற்று. இடமிஃதென மகிழிந்திர னிமையவர் என்பதற்குச் சிவபெருமான் தம் மெய்யன்ப ரொருவருக்குத் திருவருள் செய்யத் தொடங்கு மிக்காலமே அச்சார்புபற்றி எம்போலிகளும் திருவருள் பெறுங் காலமாகலின், இதுவே அதற்கு நல்ல சமையமென்று மனம் மகிழுகின்ற இந்திரன் முதலிய தேவர்களென விரித்துரைத்துக்கொள்க. மேல் இது பரனருளை வழங்குவதென்றதற்கும் இதனையே கருத்தாகக் கூறுதலுமொன்று. கன்மபூமி பாரதகண்டம். அது, 'நாலிரு கண்டத்தோரும் விண்ணுளோரு நாகினரு மவ்விடத்தி னண்ணி வைகி, மேலையிரு வினையாற்றி யவற்றிற் கேற்ற வியன்பயன்க டுய்ப்பரென விளம்பு மாற்றாற், சில மிகு பாரதமாங் கண்டமொன்றே தீவினைநல் வினையாகுஞ் செயற்கைக் கெல்லா, மூலமொரு குறைபெறினே வந்து தேவர் முனிவர்களுந் தவம் பூசை முயல்வ ரங்கண்' என்பதனானு மறிக. (௪)

வேறு.

திண்டிறன் மிகுஞ்சுரிகை யுந்திகழ் பிரம்புங்
கொண்டகுரு நின்றுகுரு நந்தியருள் கூரப்
புண்டரிக மாதுபுவி மங்கையெழில் சிங்கா
வண்டர்மட வார்களுல கன்னைபுற மன்ன.

இ—ள்: குரு நந்தி - சைவசித்தாந்த பிரதம சிவாசாரிய சுவாமிகளாகிய திருநந்திதேவர், திண் திறல் மிகும் சுரிகையும் திகழ் பிரம்பும் கொண்டு அருகு நின்று அருள் கூர - திண்ணிய வலிமிக்க உடைவாளையும் பொற்றகடு மருவி விளங்கும் பிரம்பையும் திருக்கரங்களிற் கொண்டு ஒதுக்கித் திருமருங்கினின்று சந்நிதியை அடைந்தோர்க்குத் திருவருள் சுரக்கவும், புண்டரிக மாது புவி மங்கை எழில் சிங்கா அண்டர் மடவார்கள் - செந்தாமரை யாசனியாகிய இலக்குமியும் பூமிதேவியும் அழகு குன்றுத ஏனைத் தேவமகளிரும், உலகு அன்னை புறம் மன்ன - உலகமாதாவாகிய உமையம்மைக் கருகே சேவித்து நிற்கவும் எ—று.

பரமகிருபாலுவாகிய திருநந்திதேவர் அணுக்கத் திருத்தொண்டரொன்பது விளக்குவார் சுரிகையுந் திகழ்பிரம்புங்கொண் டருகுநின்று குரு நந்தியருள்கூர என்றார். திண்மை - உறுதிப்பாடு. சிங்கல் - குறைதல். இது கலிவிருத்தம். (௬)

துன்னுபல பூதகண நாதர்புடை சூழக்
கின்னரர்கள் கந்தருவர் கீதவிசை பாட
மின்னுமுடி மன்னுநதி வீசுதிரை நன்னீ
ரென்னவொளிர் சாமரை யெழுந்தழகு செய்ய.

இ—ள்: துன்னு பல பூத கணநாதர் புடை சூழ - நெருங்கிய பல பூதகணாதிபர்கள் பக்கத்தே சூழவும், கின்னரர்கள் கந்தருவர் கீத இசை பாட - கின்னரர்களும் கந்தருவர்களும் சாம வேத கீத இசைகளைப் பாடவும், மின்னு முடி மன்னு நதி வீசு நல் நீர் திரை என்ன - மின்போலும் சடாமுடியிற் பொருந்திய கங்காநதி வீசும் நல்ல நீர்த்திரைகளைப்போல, ஒளிர் சாமரை எழுந்து அழகு செய்ய - விளங்குகின்ற வெண்சாமரங்கள் இரட்டப்பட்டுச் சபையை அலங்கரிக்கவும் எ—று.

மின்னுகின்ற எனப் பெயரெச்ச முடிபாக வைத்துரைப்பினு மமையும்.

இந்தவள மல்குசபை யின்னல்கெட மன்னுந்
தந்தைமணி மன்றினுறை தாண்டவ பதத்தோன்
செந்தமிழில் வந்தசிவ ஞானவமு துண்டா
மந்தமி லருட்கடலை யாண்டருள வேண்டி.



இ—ள்: இந்த வளம் மல்கு சபை - இங்ஙனம் நாம் கூறிய வளங்க ணிறைந்த தேவ சபையின்கண்ணே, இன்னல் கெட மன்னும் தந்தை - ஆன்மாக்களது பிறவித் துன்பம் நீங்கும்பொருட்டு உருவத்திருமேனிகொண்டு வீற்றிருந்தருளும் பரமபிதாவும், மணி மன்றில் உறை தாண்டவ பதத்தோன் - அழகிய கனகசபையின்கண்ணே தங்கும் அசவாத தாண்டவஞ் செய்தருளுபவருமாகிய சிவபெருமான், வந்த சிவ ஞான அமுது செந்தமிழின் உண்டாம் அந்தம் இல் அருள் கடலை - தம்மினின்றும் ஆரிய மொழிவடிவில் வெளிவந்த சிவஞானமாகிய அமுதம் அத்தியற்புத அதி மதுரச் சுத்தச் செந்தமிழ் மொழிவடிவில் உண்டாகப்பெறும் கரையற்ற கிருபாசமுத்திரமுமாகிய திருவாதவூரடிகளை, ஆண்டருள வேண்டி - அடிமை கொண்டருளத் திருவுளங்கொண்டு எ—று.

கூர, மன்ன, சூழ, பாட, செய்ய, மன்னுந்தந்தை என மேலைச்செயவெனெச்சங்களை யெல்லாம் ஈண்டுத் தந்துமுடிக்க. தம்மால் ஆரியமொழி வடிவில் வெளிவந்த சிவஞானம் என்றது வேதத்தின் ஞானகாண்டத்தை; அது கேட்போர்க்குக் கழிபெருஞ் சுவையோடு முத்தியாகிய உறுதிபயத்தலின், உண்போர்க்குக் கழிபெருஞ் சுவையோடு சடிதினிறவாமை யாகிய உறுதிபயக்கும் அமுதாக உருவகஞ்செய்யப்பட்டது. அச்சிவஞானமாகிய அமுதமே செந்தமிழ்வேதமாகிய திருவாசகம் திருக்கோவைகளாகத் திருவாதவூரடிகளிடத்துத் தோன்றுதலானும் அமுது தோன்றுமிடம் பாற்கடலாதலானும் அத்திருவாதவூரடிகளை அமுது செந்தமிழி னுண்டாங்கடல் என்றும், அத்தேவாமுதத்தோடும் அது தோன்றும் பாற்கடலோடும் இவற்றிடை விசேடந்தோன்றச் சிவஞானவமுது எனவும், அந்தமி லருட்கடல் எனவும் விசேடித்துக் கூறினார். (எ)

மைத்தகடன் மண்ணவர்க டம்முருவில் வம்மென்
றத்தகைய பத்தர்கண நாதரை யழைத்தே
சித்திதரு தேசிக சிறந்தவடி வங்கொண்
டுத்தம நெடுங்கயிலை யோங்கலது நீங்கி.

இ—ள்: அத் தகைய பத்தர் கண நாதரை அழைத்து - நாம் முற்கூறிய அத் தகுதி பொருந்திய அன்பர்களாகிய கணநாதர்களை விளித்து, மைத்த கடல் மண்ணவர்கள் தம் உருவில் வம் என்று - நீங்கள் கரிய கடல் சூழ்ந்த மண்ணுலக வாசிகளாகிய மனிதரது வடிவமாக நம்முடன் வாருங்களென்று பணித்து, சித்திதரு சிறந்த தேசிக வடிவங்கொண்டு - தாமும் பக்குவான்மாக்கட்கு முத்திகொடுக்கு மழகிய ஞானதேசிகத் திருமேனி கொண்டு, உத்தம நெடும் கயிலை ஓங்கல் நீங்கி - தமது வாசஸ்தானங்கள் எவற்றினும் மிக முக்கிய ஸ்தானமாகிய நெடிய கைலாசகிரியை விட்டு நீங்கி எ—று.

வேண்டி, கொண்டு, நீங்கி என ஈண்டுத் தந்து முடிக்க. (அ)

கொன்னெறுழி தன்னுருவு கொண்டொருவர் தேடும்
பொன்னடி யெனுஞ்சலச மண்மிசை பொருந்தப்
பன்னுமறை வல்லவர் பரிந்தழல் வளர்ப்பார்
மன்னுமொரு தெய்விக வளம்பதியில் வந்தார்.

இ—ள்: கொன் எறுழி தன் உருவு கொண்டு ஒருவர் தேடும் பொன் அடியெனும் சலசம் மண்மிசை பொருந்த - பெரிய பன்றியினது வடிவங்கொண்டு விஷ்ணு தேடி யறிதற்கரிய பொன்போலுந் திருவடித் தாமரைகள் பூமியிற் பொருந்த நடந்தருளி, பன்னும் மறை வல்லவர் - ஓதப்படும் வேதங்களில் வல்லவரும், பரிந்து அழல் வளர்ப்பார் மன்னும்- உலகத்தவர் மீது அன்பு கூர்ந்து நித்தியாக்கினி வளர்ப்பவருமாகிய பிராமணர்கள் மிக்கிருக்கும், ஒரு தெய்விக வளம் பதியில் வந்தார் - தெய்வத் தன்மை பொருந்திய வளத்தையுடைய ஓர் திருப்பதியின்கண் வந்து சேர்ந்தருளினர் எ—று.

அங்ஙனம் அரிய திருவடிகள் இங்ஙன மெளிவா நடந்தன என்பார் ஒருவர் தேடும் பொன்னடி யெனுஞ்சலச மண்மிசை பொருந்த என்றும், நித்தியாக்கினி உலக நன்மையின்பொருட்டு வளர்க்கப்படுதலின் பரிந்தழல் வளர்ப்பாரென்றுங் கூறினர். ஒருவரென்பது தொகைக்குறிப்புப் பெயர்.

வெம்பிறவி வேலைதனில் வீழ்பவர்க ளெல்லா
நம்புசிவ நாமமெனு நற்புணை பிடித்தா
லெம்பர னருட்கரையி லேறுதுறை யாமா
லம்புவி மொழிந்துள பெருந்துறை யதன்பேர்.

இ—ள்: அதன் பேர் - அத்திருப்பதியின் பெயர், வெம்பிறவி வேலை தனில் வீழ்பவர்கள் எல்லாம் - கொடிய பிறவியாகிய சமுத்திரத்தின்கண் வீழ்ந்தழுந்துகின்ற நம்போலிகளெல்லாம், நம்பு சிவ நாமம் எனும் நல் புணை பிடித்தால் - மெய்ஞ்ஞானிகள் நம்புகின்ற சிவமூல மந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷர மென்னும் நல்ல தெப்பத்தைத் தமக்கு ஆதாரமாகப் பற்றிக் கொண்டால், எம் பரன் அருள் கரையில் ஏறு துறை ஆம் ஆறு - எம்முடைய சிவபெருமானது திருவருளான் வரும் முத்திக்கரையில் அவர் ஏறுமிடமாயிருக்கு மவ்வேதுவினால், அம்புவி மொழிந்துள பெருந்துறை - அழகிய பூமியின்கணுள்ள அறிஞர் கூறிய திருப்பெருந்துறை என்பதாம் எ—று.

ஆற்றினால் என மூன்றுவது விரிக்க. ஆமால் எனப் பாடாந்தரங் கொண்டு, ஆல் என்பதற்கு அக்காரணத்தால் எனப் பொருளுரைப்பாரும், ஆலை அசையென்றொழித்து, பெருந்துறை என்னும் ஏதுப்பெயரை வாளா பெயராக்கி யிடர்ப்படுவாருமாயினர். ஆல் காரணத்துக்குப் பெயரன்மை



யானும், காரணப்பொருளில் வந்த மூன்றும் வேற்றுமை யுருபெனின், அது பெயரோடல்லது வினையுடனும் தனித்தும் வாராமையானும், அது இலக்கண நுட்பமில்லாதார் கூற்றேயாமென மறுக்க. புவி ஆகுபெயர். மொழிந்துள என்பதனை மொழிந்து உள எனப் பிரித்து, கூறி வழங்கப்படுகின்ற எனப் பொருளுரைப்பினு மமையும். தன்னுள் வீழ்ந்தாரையும் ஒரோவழிக் கொல்லுதல் செய்யும் ஏனைச் சமுத்திரம்போலன்றிப் பிறவி வேலை எஞ்ஞான்றும் அனைவரையும் தப்பாது தன்னுள் வீழ்த்துக் கொல்லுங் கொடுமைபற்றி அதனை வெம்பிறவி வேலையென்றும், அதனைக் கடக்க மாட்டாத ஏனைத் தெப்பங்கள் போலன்றித் தப்பாது கடக்குமாற்றலொருங் குடைமையிற் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை "நற் புணை" யென்றுங் கூறினர். பிடித்தாலென்பது பிடிப்பதனருமை விளக்கிநின்றது. பிடித்தல் மனத்தை யொருக்கிச் செபித்தல். புணையாக உருவகஞ் செய்துகொண்டமைக்கேற்பப் 'பிடித்தா' லென்றார். பவசாகரத்தின்வாய் வீழ்ந்தழுந்துகின்ற நம் போலிக ளெல்லாம் தன்மாட்டிருந்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி செபித்து வழிபடின், அது தெப்பமாக, முத்திக் கரையிலேறுந் துறையாகிய திவ்விய சிவக்ஷேத்திர மாதலின், இவ்வேதுபற்றித் திருப்பெருந்துறையெனக் காரணக் குறியாயிற் றென்பதாம். (௧௰)

ஈனமில் பெருந்துறை யெனும்பதியின் ஞாங்கர்
கானமிகு புன்னைவளர் கந்தமுள சந்தம்
வானமுயர் சண்பக மரந்திகழ் நரந்தந்
தேனின மூன்றெழு செருந்திகள் பொருந்தி.

இ—ள்: ஈனம் இல் பெருந்துறை எனும் பதியின் ஞாங்கர் - குற்றமற்ற அத் திருப்பெருந்துறை யென்னும் ஸ்தலத்தின் கண்ணே, கானம் மிகு புன்னை - வாசனை மிகுந்த புன்னை மரங்களும், வளர் கந்தம் உள சந்தம் - வளராநின்ற மணத்தையுடைய சந்தன மரங்களும், வானம் உயர் சண்பக மரம் - ஆகாயத்தின்கணுயர்ந்த சண்பக மரங்களும், திகழ் நரந்தம் - செய்மைக்கண் விளங்கும் நாரத்தைகளும், தேன் இனம் மூன்று எழு செருந்திகள் பொருந்தி - வண்டுக்கூட்டங்கள் ஒலித்தெழுகின்ற செருந்தி மரங்களும் பொருந்தி எ—று.

ஞாங்கர் என்பது ஈண்டு ஏழனுருபு; "அன்ன பிறவும்" என்பதனாற் கொள்க. செருந்தி செங்கோடு.

கோடுகவி னும்பெரிய கோங்குமிக வோங்கும்
பாடல நெடும்பலவு பைங்கமுகு தெங்கு
நீடளி யிரைத்தெழு நிரைக்குரவு ரூத
மேடவிழ் செழுங்கவி ரிலஞ்சிகண் மலிந்து.

இ—ள்: கோடு கவினும் பெரிய கோங்கு - கொம்பர்கள் விளங்கும் பெரிய கோங்கமரங்களும், மிக ஓங்கும் பாடலம் - மிகவுயர்ந்த பாதிரி மரங்களும், நெடும் பலவு - நெடிய பலாமரங்களும், பைங் கமுகு - பசிய கமுகுகளும், தெங்கு - தென்னைகளும், அளி இரைத்து எழு நிரை நீடு குரவு - வண்டுகளொலித்தெழும் வரிசையாகிய நெடிய குராமரங்களும், ஏடு அவிழ் செழும் கவிர் - இதழ் விரிகின்ற செழுமையாகிய முருக்குக்களும், இலஞ்சிகள் மலிந்து - மகிழ மரங்களும் நிறைந்து எ—று. (௧௨)

மாக்கவின் மிகுங்கலப மஞ்ஞைசிறை யன்னங்
கூக்குரல் செயுங்கரிய கோகில நெருங்க
மீக்குலவு மந்தியின முந்துதொறு மேன்மே
லார்க்குஞிமி றெங்கணு மடர்ந்திசை தொடங்க.

இ—ள்: மா கவின் மிகும் கலப மஞ்ஞை - நீலநிறம் பொருந்திய அழகு மிக்க தோகையினையுடைய மயில்களும், சிறை அன்னம் - சிறகுகளையுடைய அன்னங்களும், கூக்குரல் செயும் கரிய கோகிலம் நெருங்க - காமிகளைக் கூவிக் கலகஞ் செய்யுங் கரிய குயில்களும் நெருங்கவும், மீக் குலவும் மந்தி இனம் உந்து தொறும் - மரங்களின்மீது சஞ்சரிக்குங் குரங்குக் கூட்டங்கள் பாயுந்தோறும் எழுந்து, மேல் மேல் ஆர்க்கு ஞிமிறு எங்கணும் அடர்ந்து இசை தொடங்க - மேலும் மேலும் சத்திக்கும் வண்டுகள் எவ்விடத்தும் பரந்து இராகங்களைப் பாடும்படி தொடங்கவும் எ—று.

கலாபம் கலபமெனக் குறுகிற்று. அடர்தல் - திரிதல். (௧௩)

வீழ்ந்தநற வத்துளி விழிப்புனல தாகச்
சூழ்ந்துமுரல் வண்டினிசை தோத்திரம தாகத்
தாழ்ந்துமல ரேந்தியிறை தன்றிருமு னின்றே
வாழ்ந்துருகு மன்பரென மன்னுமொரு பூங்கா.

இ—ள்: வீழ்ந்த நறவத் துளி விழிப்புனல் ஆக - பூங்கொத்துக்களினின்றும் வீழ்ந்த தேன் துள்ளிகள் கண்ணீராகவும், சூழ்ந்து முரல் வண்டின் இசை தோத்திரம் ஆக - அவைகளைச் சூழ்ந்து சத்திக்கும் வண்டுகளினது கீதம் தோத்திரமாகவும், மலர் ஏந்தித் தாழ்ந்து - மலர்களைத் தாங்கிப் பணிந்து, இறை திருமுன் நின்று - சிவசந்நிதியினின்று, வாழ்ந்து உருகும் அன்பர் என - பேரானந்தப் பெருவாழ்வடைந்து மனம் நெக்கு நெக்குருகுஞ் சிவபத்தர்களைப்போல, ஒரு பூங்கா மன்னும் - ஒரு பூஞ்சோலை தங்கும் எ—று.

தாழ்தல் அன்பர்மேற் செல்லுங்கால் வணங்குதலும், பூங்காவின் மேற் செல்லுங்கால் மலரைத் தாங்குதலினாலே பாரமெய்திக் கீழே பணிதலுமாக வுரைக்க. ஒரு பூங்காவானது பொருந்தி, மலிந்து, நெருங்கவும்,



தொடங்கவும், ஆகவும், ஆகவும், தாழ்ந்து, ஏந்தி அன்பரெனப் பெருந்துறையெனும்பதியின் ஞாங்கர் மன்னும் எனக் கொண்டுகூட்டி முடிக்க. இதனுட்டாழ்ந்து மலரேந்தி என்புழிச் சொற்கணின்றுங்கு நிற்பப் பொருள் இருதிறப்படுதலின், இது 'செம்மொழிச்சிலேடை' என்னும் அலங்காரமும், அன்பரென மன்னுமொரு பூங்கா என்பது 'விரியுவமாலங்கார' முமாம். சிலேடையோடு கூடி உவமாலங்காரம் வருதலை "அற்புதஞ் சிலேடை யதிசயம் விரோத, மொப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம், விலக்கே யேதுவென வேண்டவும் படுமே." என்பதனா னறிக. (௧௪)

வாய்த்தவள மிவ்வகை வயங்குமத னப்ப
ணேத்தரு தவச்சினைக ளெங்கணு நெருங்க
மீத்திக ழறக்குழை தழைத்துமிளிர் மெய்ம்மை
பூத்தறிஞர் போன்றெழில் பொருந்துமொர் குருந்தம்.

இ—ள்: வாய்த்த வளம் இவ் வகை வயங்கும் அதன் நாப்பண் - சிறந்த வளங்கள் இங்ஙனம் விளங்கும் அதன் மத்தியிலே, ஏத்து அருதவச் சினைகள் எங்கணும் நெருங்க - சொல்லுதற்கரிய தவமாகிய கிளைகள் எவ்விடத்தும் நெருங்க, மீத் திகழ் அறக் குழை தழைத்து - மேலாக விளங்கும் தருமமாகிய இலைகள் பொதுளி, மிளிர் மெய்ம்மை பூத்து - இருவகைக் குற்றமுமற்று விளங்கும் மெய்ஞ்ஞானமாகிய பூக்களைப் பூத்து, அறிஞர் போன்று - அறிஞர்களை யொத்து, ஒரு குருந்தம் எழில் பொருந்தும் - ஓர் குருந்தமரம் அழகுட னிற்கும் எ—று.

ஏத்து முதனிலைத் தொழிற்பெயர். ஏ-உயர்ச்சி என்பாருமுளர். நாப்பண் பொருந்துமென வியையும். மெய்ம்மை ஆகுபெயர். எழிலோடென மூன்றுவது விரிக்க. ஐம்பொறிகட்கும் மனத்துக்கு மினிய வளமென்பார் வாய்த்தவளமென்றும், எவரானுந் தன்பெருமை கூறுதற்கரிய தவமென்பார் ஏத்தருதவமென்றும், அறம் பொருள் இன்பம் வீடென்னும் புருஷார்த்தம் நான்கனுள்ளும் இறுதிக்கண்ணதாகிய வீட்டுக் கேதுவாய், ஏனைப்பொருளின்பங்களிரண்டினும் மிக மேலாய், முதற்கண் வைக்கப்பட்டு விளங்கும் அறமென்பார் மீத்திகழறமென்றும், அவ்வறங்கள் பலவற்றுள்ளும் தனக்கொப்புயர் வின்றிச் சந்தேக விபரீதமாகிய இரு குற்றமு மற்று விளங்கும் மெய்ம்மையென்பார் மிளிர்மெய்ம்மை என்றும் கூறினார். அக்குருந்து பரமாசாரியர் தன்கீழ் வீற்றிருக்கப்பெறுதலாகிய அரும் பெரும் பேற்றையுடைமையான், அதற்கு அத்தவம் முதலியவற்றைச் சினை முதலியவாக வருவகஞ்செய்து, அவைகளையுடைய அறிஞரைப்போன் றழகுட னிற்குமென் றிங்ஙனம் விசேடித்தார் என்க. குருந்தின்மேற் செல்லுங்கால் ஏத்து அருதவச்சினைகள் என்பதற்கு உன்னதமான அரிய மிக்க சாகைகள் என்றும், அறக்குழை என்பதற்கு அதிபத்திரமென்றும், மெய்ம்மைபூத்தென்பதற்குப் பொய்ப்பூவன்றிக் காய்க்கும் பூவைப் பூத்து எனவு முரைக்க. இதுவும் மேலையலங்காரம். (௧௫)

ஆர்வமுடன் வந்தின மகப்பட வழைக்கும்
பார்வையென மாந்தர்படி வங்கொடு நடந்தார்
ஏர்வரு குருந்தமொ டிலங்குமுயர் காவிற்
சேர்குவ மெனத்திரு வுளத்தருள் சிறந்து.

இ—ள்: ஆர்வமுடன் வந்து இனம் அகப்பட அழைக்கும் பார்வை என - பிறர் குறிப்புடன் வந்து தன்னினம் அவர்கை அகப்படும்படி அதன் குரலான் அழைக்கும் பார்வை மிருகத்தைப்போல, மாந்தர் படிவம் கொடு நடந்தார் - மேற்கூறியபிரகாரம் திருவாதவூரடிகளை அடிமைகொள்ளும் பொருட்டு அவர்போலும் மானுடவடிவங்கொண் டெழுந்தருளிவந்த சிவ பெருமானனவர், ஏர் வரு குருந்தம் ஒடு இலங்கும் உயர் காவில் சேர்குவம் எனத் திரு உளத்து அருள் சிறந்து - அழகுபொருந்திய அக்குருந்தமரத் தோடு சேர்ந்து விளங்கும் உயர்வாகிய அப்பூஞ்சோலையின்கண்ணே நாமடைவோமென்று திருவுள்ளத்தின்கட் கிருபைகூர்ந்து எ—று.

அழைத்தல்-விளித்தல். தன்னினம் தன்சாதிவிலங்கு. பார்வை தீபகம். அது "ஒங்கும்விஞ் ஞானிகட்கோர் மலநீக்க வொளியுருவந், தாங்கும் பிரளையர்க்கிர் மலநீக்கச் சதுர்ப்புயங்கொண், டாங்கதிநீக்குஞ் சகலர்க்கு மும்மல மாய்ந்தறுக்கப், பாங்குறு தீபகம்போ லுருக்கொண்டு பரன் வருமே" என்பதனானும், "போக்குமீட்சியுட் புறம்பிலாப் பூரண வடிவ, மாக்கினுமொரு தீபகம்போல்வரு மண்ணல்" என வழிநூலாசிரியர் கூறிய வாற்றானு மறிக. இது தொழில்பற்றி வந்த உவமாலங்காரமென்க. (௧௬)

வந்துதிகழ் தொண்டர்புடை சூழமகிழ் வெய்திக்
கொந்தலர் மலர்ப்பொலி குருந்தடி பொருந்தி
யந்தமுத லில்லவ ரருட்டமி ழுரைப்பார்
பந்தமறு மெல்லையது பார்த்தினி திருந்தார்.

இ—ள்: முதல் அந்தம் இல்லவர் - ஆதிமத்தியாந்தரகிதராகிய பரமாசாரியர், திகழ் தொண்டர் மகிழ்வு எய்திப் புடை சூழ வந்து - திருத்தொண்டர்கள் மனமகிழ்ச்சிகொண்டு தம் பக்கத்தே சூழ இங்ஙனம் வந்து, கொந்து அலர் மலர்ப் பொலி குருந்து அடி பொருந்தி - கொத்துக்களின் மலர்ந்த பூக்களினாற் பொலியும் அக்குருந்தமரத்தினடியை அடைந்து, அருள் தமிழ் உரைப்பார் பந்தம் அறும் எல்லை இனிது பார்த்து இருந்தார் - அருட்பாவாகிய திருவாசகத்தைப் பாடியருளும் திருவாதவூரடிகளது பாசக்கட்டறுங் காலவரையறையை முற்பிற்பாடற எதிர்நோக்கி இருந்தருளினார் எ—று.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்னு முபலக்கணத்தான் அந்த முத லில்லவர் என்பதற்கு ஆதிமத்தியாந்த ரகிதரெனப்

2449



பொருளுரைக்கப்பட்டது. கைலாசகிரியினின்றும் ஈண்டெழுந்தருளினமை தோன்றத் தன்மையிடத்திற்குச் சிறந்த வந்தென்னு மெச்சத்தாற் கூறினாரென்க. கொத்து பூங்கொத்து. (௧௭)

பொங்குபுனல் யாறுபல போய்விழு கடற்போ
லெங்குமுள நல்லுயிர்க ளெய்துமொளி யாகுந்
திங்களணி வேணிய ரிருப்பவடி சேருந்
துங்கமறை யாளர்பலர் துன்றுநெறி சென்றார்.

இ—ள்: பொங்கு புனல் யாறு பல போய் விழு கடல் போல் - மிக்க நீரையுடைய ஆறுகள் பல போய் வீழ்கின்ற ஒரு சமுத்திரத்தைப்போல, எங்கும் உள நல் உயிர்கள் எய்தும் ஒளி ஆகும் திங்கள் அணி வேணியர் இருப்ப - உலகெங்குமுள்ள பக்குவான்மாக்க ளனைத்தும் சென்று மீளாது கலக்கும் நின்மலவொளிவடிவாகிய பாலசந்திரனை யணிந்த சடையையுடைய பரமாசாரியர் இங்ஙனம் வீற்றிருப்ப, அடி சேரும் துங்க மறையாளர் - அவருடைய திருவடிகளை இனி அடையப்பெறும் பிராமணோத்தமராகிய திருவாதவூரடிகள், பலர் துன்றும் நெறி சென்றார் - பலரும் போக்குவரவு செய்யும் அந்நெறிக்கட் போயினார் எ—று.

ஆற்றுநீர் தன்கட் சென்று பின்னர் மீளப்பெறாத கடல்; ஆன்மா தன்கட் சென்று பின்னர்க் கருவிக்கொத்தின் மீளப்பெறாத சிவத்திற்குத் தொழிற்சார்புபற்றி வந்த பொருளுவமை யென்க. அது "முன்னிறை நீர் சிறைமுறிய முடுகி யோடி முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்" என்பதனானுமறிக. இதனுட் பொங்குபுனல் யாறென உவமையைப் புகழ்ந்து சிறப்பித்தமையின், இது 'புகழ்பொருளுவமாலங்கார'மென்க. (௧௮)

வேறு.

செம்மனத்து வாதவூர்ச் செல்வர்தமைப் புல்லாத
பொய்ம்மயக்கந் தரும்பாசம் போலமலர்ந் தனபூவை
யெம்மயக்கு மொழிப்பவருக் கினிப்பிறவி யில்லையெனக்
கைம்மறிக்கு மவர்போல மலர்ந்தனவங் குளகாந்தள்.

இ—ள்: செம் மனத்து வாதவூர்ச் செல்வர் தமைப் புல்லாத பொய்ம் மயக்கம் தரும் பாசம்போல - சித்தசுத்தியையுடைய அருட்செல்வராகிய திருவாதவூரடிகளை இனிப் பந்தியாத பொய்யாகிய மயக்கத்தை விளைவிக்கும் பாசங்களைப்போல, அங்கு உள பூவை மலர்ந்தன - அந்நெறியின்கணுள்ள காயாக்கள் கரிய பூக்களை மலர்ந்தன, எம் மயக்கும் ஒழிப்பவருக்கு இனிப் பிறவி இல்லை எனக் கைம்மறிக்கு மவர்போல - பெண் பொன் மண்ணென்னும் எவ்வகை மயக்கங்களையும் ஒருசேர நீக்கியருளு மவ்வடிகளுக்கு இனிச் சனனமில்லையென்று கையமைத்துத் தடுத்துக் காட்டுபவரைப் போல, காந்தள் மலர்ந்தன - அங்குள்ள காந்தட்செடிகள் மலர்ந் தசைந்தன.

செம்மனம் செம்மையாகிய மனம். வாதவூர்ச்செல்வர் வாதவூரி லவதரித்த செல்வர். அவரைப் புல்லிய பாசம் இதுபொழுது மலராமையின் உவமையாகா என்பார், செல்வர்தமைப் புல்லாத பொய்ம்மயக்கந் தரும் பாசம்போல என்றும், உண்மைதெளிந்தவழிக் கயிற்றி லரவுபோலக் கெடுதலின் நிலையற்ற மயக்கமென்பார் பொய்ம் மயக்கமென்றும், மூவேடணையல்லது மயக்க விளைவிற்கு வித்து வேறொன்றின்மையின் எல்லாம் இவையே என்பார் எம்மயக்கும் என்றும் கூறினர். எடணை-விருப்பம்; பிணக்கென்பாரு முளர்; இப்பொருட்கு மூவேடணை-அருத்தவேடணை, புத்திரவேடணை, உலகவேடணை என்பனவாம். புல்லாத மயக்கமென முடித்தலு மொன்று. காந்தள் கைக்குவமையாகலின் இங்ஙனங் கூறினர். இது தரவு கொச்சகம். இதனுட் பொய்ம்மயக்கந் தரும் பாசம்போல என உவமையைப் பழித் துவமித்தலின், இது 'நிந்தையுவமாலங்கார'மாம். இன்னும், எம்மயக்கு மொழிப்பவருக் கினிப்பிறவி யில்லையெனக், கைம்மறிக்குமவர்போல மலர்ந்தனவங் குளகாந்தள் என்பது தற்குறிப்பேற்றத்தை அடியாகவும், நுட்பமென்னு மலங்காரத்தை அங்கமாகவும் கொண்ட விரியுவமாலங்காரமென்க. "தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினு, மரிதுணர் வினைத்திற நுட்பமாகும்" என்பதனான் நுட்பமென்னு மலங்காரவியல்பு தெள்ளிதிற் பெறப்படும். (௧௯)

விற்காட்டுங் காத்துமத னம்பாகி வெம்பிறவி
யிற்காட்டி யாவரையு மாகுலஞ்செ யெம்பாவ
நிற்காட்டி லொழிப்பவர்யார் நீயருள்க வெமக்கென்று
பற்காட்டி நிற்பவர்போன் மலர்ந்தனமென் பனிமுல்லை.

இ—ள்: மதன் காத்து வில் காட்டும் அம்பு ஆகி - காம், மன்மதனது கையின்கணுள்ள வில்லானது தன்கட்கொண்டு காட்டும் புஷ்பபாணங்களாகி, யாவரையும் வெம் பிறவி இற்கு ஆட்டி - ஆடவர் மகளிர் அனைவரையும் கொடிய பிறவியைத் தரும் இல்லறத்தின்கட் கூத்தாட்டி, ஆகுலம் செய் எம் பாவம் - வியாகுலஞ்செய்யு மெமது பாவத்தை, நின் காட்டில் ஒழிப்பவர் யார் - தேவரீரினும் பார்க்க நீக்கவல்ல பரமாசாரியர் வேறு யாவருளர் (ஒருவருமிலர் ஆகலான்), நீ எமக்கு அருள்க என்று பல் காட்டி நிற்பவர் போல் - நீரே யெமக் கருள்செய்கவென்று பல்லைக் காட்டிக் கெஞ்சி நிற்பவரைப்போல, மெல் பனி முல்லை மலர்ந்தன - மென்மையாகிய பசிய முல்லைக்கொடிகள் மலர்ந்தன எ—று.

முதலடியை இங்ஙனங் கொண்டுகூட்டாது யாற்றுநீர்ப் பொருள்கோளாகவைத்துரைப்பினு மமையும். இற்கென்னும் நான்கனுருபு ஏழனுருபாகத் திரிக்கப்பட்டது. இல் இல்லறம். நின்னீறு ஈண்டியல்பா



காது திரிதல் "உறவே" என்னும் இலேசாற் கொள்க. காட்டில் என்பது முன்னர் ஐகாரம் பெற்று, ஐந்தனுருபின் எல்லைப்பொருட்கண் வருவதோர் சொல்லுருபு; "கிளந்தவல்ல வேறுபிற தோன்றினும்" என்பதனாற் கொள்க. நீயேயென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது. முல்லையரும்பே பற்குவமையாயினும், பல்லை யிழித்துக் காட்டி நெடிது நிற்றற்காயின் மலரு முவமையாமென்பார் நிற்பனபோன் மலர்ந்தன என்றார். முல்லைக்கொடிகட்கு வர்க்கசுபாவமான அலர்தலின்மேற் கவி தாங் கருதிய பற்காட்டி நிற்றலை ஆரோபித்தலின், இது 'அல்பொருட் டற்குறிப்பேற்றமென்னு மலங்கார' மென்க. இதனை வடநூலார் உத்பிரேக்ஷாலங்காரமென்பர். (௨௦)

பொற்புடைய தமிழ்பாடும் புண்ணியரெப் பொருளினுமாஞ்
சிற்பரனுண் மையில் விழிக்குந் திருநயனஞ் சேர்தலினு
னிற்பதுவாம் பிறவியிது வென்றிரங்கி நீண்மரங்கள்
கற்பனையை யுணர்ந்துமலர்க் கண்ணீர்கள் பொழிந்தனவால்.

இ—ள்: நீள் மரங்கள் - அந்நெறியின்க ணிற்கும் நெடிய மரங்கள், பொற்பு உடைய தமிழ் பாடும் புண்ணியர் - அழகையுடைய தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் பாடியருளும் புண்ணியபுருஷராகிய திருவாதவூரடிகளது, எப்பொருளினும் ஆம் சித் பரன் உண்மையில் விழிக்கும் திருநயனம் சேர்தலினால் - சகல பிரபஞ்சப்பொருளினும் வியாபித்து நிற்கும் சூக்குமசித்தாகிய சிவபெருமானது சத்தியநிர்வாணம்போலும் மலர்ந்த திருக்கண்ணோக்கம் பெற்ற விசேடத்தினால், இது பிறவி நிற்பது ஆம் என்று (உணர்ந்து) - எம்முடைய இப்பிறவி நிலையியற் பொருளாகிய தாவரப் பிறவியென் றறிந்தும், கற்பனையை உணர்ந்து இரங்கி - அது முத்திக் கருகமற்றதென்னும் ஆகம விதியை அறிந்தும் இரக்கங்கொண்டு, மலர்க் கண்கள் நீர் பொழிந்தன - மலர்களாகிய கண்களினின்றுந் தேனாகிய நீரைப் பொழிந்தனபோலும் எ—று.

பொற்பு சுருங்கச்சொல்லன் முதலிய அழகு. இல்லென்னும் ஐந்தனுருபு உவமப்பொருட்கண் வந்தது. போலுமென்னும் செய்யுமென்முற்றெஞ்சிநின்றது. புண்ணியரது நயனமென வியையும். உண்மை ஆகுபெயர். சத்தியநிர்வாணம் சிவதீக்கைகளுட் சிறந்ததொன்று. அது தன்னைப் பெற்ற பக்குவர்க்கு உடனே முத்திப்பயன் கொடுத்தல்போலத் திருக்கண்ணோக்கமும் தன்னைப் பெற்ற அம்மரங்கட்கு உடனே அறிவுப்பயன் கொடுத்ததென்பது பெறப்படுதலின், இது பயனுவமையென்க. உணர்ந்தென்பது முன்னும் கூட்டப்பட்டது. திருவாதவூரடிகள் செல்லும் அந்நெறிக்கணிற்கும் மரங்கள் பூந்தேனைப் பொழிதல் அவ்வடிகளது திருக்கண்ணோக்கம் பெற்ற விசேடத்தாலே தாம் அவ்வடிகளைப்போலன்றி முத்திக் கருகமற்ற நிலைமையை யறிந் திரங்குவனபோலு மென்பதாம். உமாபதிசிவாசாரிய சுவாமிகளாலே தாவரப்பொருளாகிய முள்ளிச்செடி முத்தி

பெற்ற தென்னையென்னும் ஆக்ஷேபத்தை ஒழித்தற்குக் கற்பனையை உணர்ந்தென விசேடிக்கப்பட்டது. இது சிலேடையோடு கூடிவந்த தற்குறிப்பேற்றமென்னு மலங்காரமென்க.

இதற் கின்னுமோ ருரை வருமாறு:—நீள் மரங்கள் - அந்நெறியின்கணிற்கும் நெடிய மரங்கள், பொற்பு உடைய தமிழ் பாடும் புண்ணியர் - அழகையுடைய தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் பாடியருளும் புண்ணிய புருஷராகிய திருவாதவூரடிகள், எப்பொருளினும் ஆம் சித் பரன் உண்மையில் விழிக்கும் திருநயனம் சேர்தலினல் - சகல பிரபஞ்சப்பொருளினும் திலதைலம்போல வியாபித்து நிற்கும் சூக்குமசித்தாகிய சிவபெருமான் உண்மையாக நோக்கியருளும் திருநயனதீக்ஷையாகிய சாக்ஷுஷி தீக்ஷையை இனிப் பெறுதலினல், இது பிறவி நிற்பது ஆம் என்று - இவர்க்கநாதியாக வரு மிப்பிறவி இனி இவ்வளவி னொழிவதாமென்று கருதி, கற்பனையை உணர்ந்து - தாவரப்பொருளாகிய தமக்கு இங்ஙனம் முத்தி சித்தியாதென்னும் விதியை அறிந்து, மலர்க் கண்கள் நீர் பொழிந்தன - மலர்களாகிய கண்களினின்றும் தேனாகிய நீரைப் பொழிந்தனபோலும் என்பதாம்.

புண்ணியர் சேர்தலினல் எனவியையும். நயனம் ஆகுபெயர். அவ்வடிகளை அநாதியே பந்தித்த பாசத்தை நீக்கும் தீக்ஷாநோக்கமாகலின் உண்மையில் என விசேடிக்கப்பட்டது. இரங்கல் மாமிரங்கல். அம்மரங்கள் அவ்வடிகள் பெறும் பேற்றைத் தாம் பெறுமைக்குத் தம்மை நொந்திரங்குவனபோலும் என்பதாம். (௨௧)

முன்னைவினைப் பெருங்காடு மூடுறவைம் புலவேடர்
துன்னியலைத் திடர்செய்யுந் துன்பவழி செல்லாம
லுன்னருநற் சிவஞான வுபதேசந் தமிழ்செய்வா
ரின்னவகைத் துளகான மெய்தியவந் நெறிநீங்கி.

இ—ள்: உன் அரும் நல் சிவஞான உபதேசம் தமிழ் செய்வார் - இத்தன்மைத்தென்று நம்மனோரா னினைத்தற்குமரிய சிவஞானோபதேசத்தைத் தமிழிலே திருவாசகமாக மொழிபெயர்த்துச் செய்பவராகிய திருவாதவூரடிகள், முன்னை வினைப் பெருங் காடு மூடுற - பழைய இருவினையாகிய பெரிய காடு மூட, ஐம்புல வேடர் துன்னி அலைத்து இடர் செய்யும் துன்பவழி செல்லாமல் - ஐம்புலன்களாகிய வேட்டுவர் அதனுண் மறைந்து நின்று ஆறலைத்துப் பலதிறத்தனவாகிய இடும்பைகளைச் செய்யும் பிறவிநெறிக்கட் பிரவேசியாமல், இன்ன வகைத்து உள கானம் எய்திய அந்நெறி நீங்கி-இத்தன்மைகளையுடைய வனத்தின்கட் சென்ற அந்நெறியைவிட்டு நீங்கி எ—று.

மூடுற ஒருசொன்னீர்மைத்து; நன்குமூட என்றதாம். அறிவுப்பெருஞ்செல்வத்தை முழுவதுங் கொள்ளைகொள்ளுதலின் ஐம்புலன்களை வேட்டுவ



ராகவும், அதற்கின்றியமையாத மறைவிடமாந் துணைசெய்து நிற்றலின் இருவினைகளைக் காடாகவும் உருவகஞ்செய்தார். அங்ஙனம் துணைசெய்துநிற்றல் அநாதியாக வுண்மையின் வினைக்காடு பெருங்காடென விசேடிக்கப்பட்டது. புலனும் துன்பமும் ஆகுபெயர். (௨௨)

வேறு.

விரிந்தகட லுக்கிடை விழுந்திட ருழந்தே
திரிந்தவர் நயந்துகரை சென்றணுகு மாபோல்
வருந்தவுழல் வித்தவினை யொத்தருள் வசத்தா
லருந்தவர் பெருந்துறை மருங்கினி லணைந்தார்.

இ—ள்: விரிந்த கடலுக்கு இடை விழுந்து இடர் உழந்து திரிந்தவர் - பரந்த சமுத்திர மத்தியின்கண் வீழ்ந்து துன்பத்தை யநுபவித்துத் திரையான் மொத்துண்டு அச்சமுத்திரமெங்கும் அலைந்து திரிந்தவர்கள், கரை நயந்து அணையு மா போல் - பின்னர்க் கரையை யடையுங்கால் மிக விரும்பி யடையுமாறுபோல, அரும் தவர் - அரிய தவத்தையுடைய திருவாதவூரடிகள், வருந்த உழல் வித்த வினை அருள் வசத்தால் ஒத்து - இதுகாறும் சனன மரணங்களில் வருந்தும்படி மூன் றுலகினு முழலச்செய்த தமதிருவினைகளும் இதுபொழுது திருவருள்வாயிலாகத் தம்மு ளொத்துவரப்பெறுதலான், பெருந்துறை மருங்கினில் (நயந்து) அணைந்தார் - திருப்பெருந்துறையின் சமீபத்தில் அதனை மிக விரும்பி அடைந்தார் எ—று.

ஒத்தலான் என்பது ஒத்தெனத் திரிந்து நின்றது; "எழுவாரையெல்லாம் பொறுத்து" என்புழிப்போல. இருவினையொப்பு முன்னர்க் கூறுதும். இது கலிவிருத்தம். இது மறுபொரு ளுவமையணி. (௨௩)

இந்தவுல கஞ்சிவ னிருக்குமுல காகச்
சிந்தையருள் கொண்டுதிரு வாசக முரைப்பார்
பந்தமற வந்தமில் பரங்குறுக வென்றே
வந்துள பெருந்துறையின் வண்மையுரை செய்வாம்.

இ—ள்: சிந்தை அருள் கொண்டு திருவாசகம் உரைப்பார் - உலகங் கடைத்தேறும்பொருட்டுத் திருவுள்ளத்திற் கிருபைகூர்ந்து திருவாசகம் பாடியருளுந் திருவாதவூரடிகள், பந்தம் அற அந்தம் இல் பரம் குறுக என்று - பாசக்கட்டறுக மீளாத பரமுத்தி பெறுக எனத் திருவுளத்தடைத்து, இந்த உலகம் சிவன் இருக்கும் உலகு ஆக வந்துள - இப்பூலோகஞ் சிவலோகமாகச் சிவபெருமான் நேரே எழுந்தருளிவந்து வீற்றிருக்கப் பெற்ற, பெருந்துறையின் வண்மை உரை செய்வாம் - திருப்பெருந்துறையின் வளத்தைச் சிறிது சொல்வாம் எ—று.

அற, குறுக என்பன அகரவீற்று வியங்கோள். திருவாதவூரடிகள் பந்தமறுக, பரமுத்தி பெறுக என முடிக்க; செயவெனெச்சங்களாக வைத்

துறைப்பினு மமையும். சிவனென மேல் வந்தமையின் வருதல் வினைக்கு வினைமுதல் கூறுதொழிந்தார். சிந்தையருள்கொண்டு வந்துள பெருந்துறை எனச் சிவன்மேலேற்றி முடித்தலுமாம். திருப்பெருந்துறை சிவபெருமான் சிவலோகத்தில் வீற்றிருத்தல்போல உருவத்திருமேனிகொண்டு நேரே எழுந்தருளிவந்து தன்மாட்டு வீற்றிருக்கப்பெறுதலின், அதனைத் தனக்கங்கமாகவுடைய பூலோகத்தைச் சிவலோகமென்னும் பொருள்பட இந்தவுலகஞ் சிவனிருக்கு முலகாக வந்துள பெருந்துறை என்றும், பாசநீக்கமாத்திரையே முத்தியென்பார் மதத்தை மறுத்தற்பொருட்டுப் பந்தமறவென்றவளவினமையாது அந்தமில் பரக்குறுகவென்றும் கூறினார். இவ்வுலகஞ் சிவனிருக்குமுலகாக வந்தருளினமையை "அப்பாண்டிநாட்டைச் சிவலோகமாக்குவித்த, வப்பார் சடையப்பனுனந்த வார்கழலே, யொப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கு, மப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காணம்மானாய்" என்னுந் திருவாக்கானு மறிக. (௨௪)

மாத்தியர் குலத்தலைவர் வன்பிறவி யெவ்வந்
தீர்த்துலக வையரருள் செய்யுமிட மென்றே
தோத்திர முரைத்தும்பிசை வந்துசுரர் சிந்தும்
பூத்திர ளுதிர்ந்தவகை போன்றதலர் பொங்கர்.

இ—ள்: அலர் பொங்கர் - நாம் மேலே சுட்டிய அப் பூஞ்சோலையானது, மாத்தியர் குலத் தலைவர் வல் பிறவி எவ்வம் தீர்த்து - ஆமாத்திய குல முதல்வராகிய திருவாதவூரடிகளது வலிய சனனதோஷத்தை யொழித்து, உலக ஐயர் அருள் செய்யும் இடம் என்று - விச்சுவாதிகராகிய சிவபெருமான் திருவருள்செய்யுமிட மிதுவென்று கருதி, சுரர் மிசை வந்து தோத்திரம் உரைத்துச் சிந்தும் பூத்திரள் உதிர்ந்த வகை போன்றது - தேவர்கள் ஆகாயத்தில் வந்து நின்று தோத்திரஞ் செய்து சொரியும் பூவினது கூட்டம் உதிர்ந்து கிடந்ததை ஒத்தது எ—று.

அநாதியாக வருகின்றமையானும் உலகவையா தருளானன்றிப் பிறிதொன்றாற் றீராமையானும் வன்பிறவியெவ்வமென விசேடிக்கப்பட்டது. வண்டுகளின் துச்சவிசையுண்மையிற் றோத்திரமுரைத்தென்றார். வகை தன்மை. மலர்களின் விசேடமும் மிகுதியும் கூறியவாறென்க. (௨௫)

வேறு.

பேறறிந்து தவமுயல்வோ மென்றுபெருந் துறைநாடி
யாறியங்கி யிளைக்குமவர்க் களிக்கவெதிர் நிற்பவர்போற்
கூறுமின்ப நிழல்செய்து குறையாத பத்தியுட
னீறணிந்து சோறேந்தி நின்றனதுன் றியகைதை.



இ—ள்: பேறு அறிந்து தவம் முயல்வோம் என்று - பெறற்பாலதின்னதென்றறிந்து அதனைப் பெறும்பொருட்டுத் தவஞ் செய்வோமென்று கருதி, பெருந்துறை நாடி ஆறு இயங்கி இளைக்குமவர்க்கு அளிக்க எதிர் நிற்பவர்போல் - திருப்பெருந்துறையை நோக்கி வழிநடந்து பசி தாகங்களான் மெலியுந் திருவாதவூரடிகளுக்கு அம்மெலிவு நீங்க வேண்டுவ கொடுத்துபசரிக்கும்படி எதிர்வந்து நிற்கும் அடியார்க்கடியவரைப் போல, துன்றிய கைதை - நெருங்கிய தாழைகள், கூறும் இன்ப நிழல் செய்து - விதந்து கூறத்தகும் இன்பம் பொருந்திய நிழலைச்செய்து, குறையாத பத்தி உடன் - நிறைந்த பத்தியுடனே, நீறணிந்து சோறு ஏந்தி நின்றன - நீற்றை யணிந்து சோற்றைத் தாங்கி நின்றன எ—று.

நிற்பவர்மேற் செல்லுங்கால் நிழல் பந்தர்நிழலும், பத்தி சிரத்தையும், நீறு விபூதியும், சோறு திருவமுதுமாம். கைதைமேற் செல்லுங்காற் பத்தி வரிசையும், நீறு மகரந்தமும், சோறு துணர்ச்சோற்றியுமாம். பந்தர் நிழல் வெய்யில் வெப்பத்தையும் தாகத்தையு மொருங்கு நீக்கும் நீர்ப்பந்தர் நிழலென்பது விளக்குதற்குக் கூறுமின்ப நிழலென விசேடிக்கப்பட்டது. பேறறிந்து தவமுயல்வோமென்றது தாழை. இது தாவுகொச்சகம். இது செம்மொழிச் சிலேடையோடு கூடிவந்த 'மறுபொருளுவமாலங்கார' மென்க. (௨௬)

நிலந்தனில்வந் தொருகுருந்த நீழலிலே யெவ்வுலகுங்
கலந்தபொரு ளிருந்தபடி கண்டுமனங் களிப்பெய்தித்
துலங்கியதங் கண்ணீருஞ் சொரிந்துகரங் குவித்துமுக
மலர்ந்தபெருந் தவர்போல மலர்ந்தனபுண் டரிகங்கள்.

இ—ள்: எவ் உலகும் கலந்த பொருள் - சர்வலோகங்களினும் மணியுமொலியும் போல வியாபக வியாப்பியமாய்க் கலந்திருக்கும் பரம்பொருளாகிய சிவபெருமான், நிலந்தனில் வந்து ஒரு குருந்த நீழலில் இருந்தபடி கண்டு - இந்நிலவுலகத்தின்கண் வந்து திருப்பெருந்துறையில் ஓர் குருந்தமாநிழலில் எழுந்தருளியிருந்தமையைத் தரிசித்து, மனம் களிப்பு எய்தி - மனங் களிகூர்ந்து, துலங்கிய தம் கண் நீரும் சொரிந்து - தம் மனத்தின்கணுள்ள அன்பைப் புறத்தே விளக்கும் கண்ணீரையும் பொழிந்து, கரம் குவித்து - கை குவித்து, முகம் மலர்ந்த பெருந்தவர் போல - முகமலர்ச்சியடைந்த பெரிய தபோதனரைப்போல, புண்டரிகங்கள் மலர்ந்தன - தடாகங்களினுள்ள செந்தாமரைகள் விகசித்தன எ—று.

துலக்கிய என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது. இனி ஆனந்தபாஷ்பமென்பது விளக்குதற்குத் துலங்கியவென விசேடிக்கப்பட்டதெனக் கோடலுமாம். உம்மை எச்சவும்மை. புண்டரீகம் புண்டரிகமெனக் குறுகிற்று. புண்டரீகங் கண்மேற் செல்லுங்காற் கண்ணீர் தேனுகிய நீரெனவும்,

காங்குவித் தென்றது ஒப்புமைபற்றி அரும்புகளை யுணர்த்தி நின்றதெனவும், முகமலர்ந் தென்றது நாண்மலரை யுணர்த்தி நின்றதெனவுங் கொள்க. இது சுவையணியோடு கூடிவந்த 'மறுபொருளுவமாலங்கார' மென்க. (௨௭)

ஆன்றபயன் பிறர்நுகர வகத்தினிமை யுளதாகத்
தோன்றியநல் லறிவினர்போற் றுவன்றியெழுந் தனகன்ன
லேன்றகுல மாதர்தம திறைவர்முக நாடிலவர்
வான்றகைய நிலையென்ன வளைந்துவிளைந் தனசெந்நெல்.

இ—ள்: ஆன்ற பயன் பிறர் நுகர - மிக்க தம் பிரயோசனங்களைப் பிறரனுபவிக்க, அகத்து இனிமை உளதாகத் தோன்றிய நல் அறிவினர் போல் - அது கொண்டு மனத்தின்கண் வெறுப்புத் தோன்றாது மகிழ்ச்சியே நிலைபெறத் தோன்றப் பெறும் நல்ல அறிவையுடைய மேன்மக்களைப்போல, கன்னல் துவன்றி எழுந்தன - வயல்களிலே கரும்புகள் தம் பயனைப் பிறர் அநுபவிக்கத் தாம் மதர்த்து வளர்ந்தன, ஏன்ற குல மாதர் தமது இறைவர் முகம் நாடில் - பயின்றுவரும் குலமகளிர் தங்காதலர் தம் முகத்தை நோக்கியவழி, அவர் வான் தகைய நிலை என்ன - நாணியொல்கும் அவரது பெருந் தகைமை நிலையைப்போல, செந் நெல் விளைந்து வளைந் தன - செந்நெற்கள் விளைந்து தலைவணங்கின எ—று.

தோன்றிய அறிவெனப் பகுதியோடு முடிக்க; வினையெச்ச மென்றல் ஈண்டுப் பொருந்தாது. வளைந்து விளைந்தன என்பது பொருட்கேற்ப விளைந்து வளைந்தன என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. வான்றகைய நிலை எஞ்ஞான்றும் பயின்று வரினும் புதுப் புணர்ச்சிக்கட்போல நாணி யொல்கி நிற்கும் பயிர்ப்புநிலை. அது "எஞ்ஞான்று மெங்கணவ ரெந்தோண் மேற் சேர்ந்தெழினு, மஞ்ஞான்று கண்டனம்போ னாணுதுமால்" என்பத னானுமறிக. அந்நிலை அவர்க்கு மேம்பாட்டைத் தருதலின் 'வான்றகையநிலை' என விசேடிக்கப்பட்டது. "மகிழ்நர் வந்துழிக், கையுறுமுவகையாற் பணி யுங் கற்பினோர், மெய்யுறுபரிவென விளைந்து சாய்ந்தவே" எனப் பிறரும் இங்ஙனங் கூறுதல் காண்க. துவன்றல் - பொலிதல். முகம் நாடலை இடக்க ரடக்கலென்றலு மொன்று. (௨௮)

முலைக்கிரியுங் கருங்கூந்தன் மொய்வனமு மரணாகக்
கொலைப்புருவ வெஞ்சாபங் குனித்துவிழிக் கணையேவி
நிலைப்படுநற் பொருடேட நினைந்துதவ நீணெறியிற்
றலைப்படுவார் தமைவருத்துந் தன்மையினர் வயன்மாதர்.

இ—ள்: முலைக் கிரியும் கரும் கூந்தல் மொய் வனமும் அரண் ஆக - தம் முலையாகிய மலையும் கரிய கூந்தலாகிய நெருங்கிய காடும் முறையே மலையரணும் காட்டரணுமாக, (அவற்றைப் பொருந்தி நின்று), கொலைப் புருவ வெம் சாபம் குனித்து - சாக்காடென்னும் அவத்தையைச் செய்யும் புருவமாகிய கொடிய வில்லை வளைத்து, விழிக் கணை ஏவி - கண்ணாகிய அம்பைத் தொடுத்துச் செலுத்திக் காம யுத்தஞ் செய்து, நிலைப்படு நல் பொருள் தேட நினைந்து தவம் நீள் நெறியில் தலைப்படுவார் தமை - நித்தியப் பொருளாகிய நல்ல முத்தியைத் தேடும்படி கருதித் தவமாகிய மேல் நெறிக்கணொழுகும் முனிவர்களையும், வருத்தும் தன்மையினர் - அம்மே னெறியினின்றும் தம்மாட்டு மீட்கும் பேரழகையுடையவர், வயல் மாதர் - அத் திருப்பெருந்துறைக்கட் கடைசியர்களும் எ—று.

தலைப்படுவார் தமையுமென்னு முயர்வுசிறப்பும்மையும், மாதருமென்னு மிழிவுசிறப்பும்மையும் விகாரத்தாற் றொக்கன. தலைப்படுவாரையும் எனவும் பாடம். பகைவரை வெல்லக் கருது மரசர்க்கு இன்றியமையாத இடத் துணைகளாகிய ஐந்தரண்களுள்ளும் வில் முதலிய படைத்துணைகளுள்ளும், மாதர்க்கு முலை மலையையும், கூந்தல் காட்டையும், புருவம் வில்லையும், கண் அம்பையும் வடிவாலொத்து, முனிவர்களாகிய பகைவர்களை மயக்கி நிலையழித்து வசீகரித்தற்கு இன்றியமையாப் போர்த் துணைகளாய்ச் சிறந்தமையின், முறையே அம்முலையும் கூந்தலும் மலையரணும் காட்டரணுமாகவும், புருவமும் கண்ணும் வில்லும் அம்புமாகவும் உருவகஞ் செய்யப்பட்டன. அரண்களைந்தாவன:—நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண், மதிலரணென்பன. வருத்துதல் - தங்கண் வரச்செய்தல்; வருந்தச்செய்த லெனினு மமையும். மாதராகிய பொருட்கு அழகுமோர் பண்பாகலின், அவ்வழகைத் தன்மை என்றார். சாக்காடு ஆசிரியர் பொருளதிகாரத்துட் கூறிய பத்தவத்தைகளி னொன்று. அது "ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" "வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலிதல், லாக்கஞ் செப்பனா ணுவரை யிறத்த, னோக்குவ வெல்லா மவையே போறன், மறத்தன் மயக்கஞ் சாக்காடென்றிச், சிறப்புடை மரபினவை, களவென மொழிப" என் பதனானறிக. இது "உருவகாலங்கார" மென்க. (௨௯)



வேறு.

இன்னவகை மன்னிவளர் காவுமெழின் மேவுங்
கன்னல்வய லுந்திகழ்தல் கண்டுவகை கொண்டே
யின்னலுட லம்பெற வினிப்புவியில் வாரா
மன்னவர் பெருந்துறை வளம்பதியில் வந்தார்.

இ—ள்: இன்ன வகை மன்னி வளர் காவும் - இத்தன்மைகள் பொருந்தி வளராநின்ற சோலையும், எழில் மேவும் கன்னல் வயலும் திகழ்தல் கண்டு உவகை கொண்டு - அழகு பொருந்திய கரும்புகளை யுடைய வயலும் விளங்குதலைக் கண்டு மகிழ்ந்து, இன்னல் உடலம் பெற இனிப் புவியில் வாரா மன்னவர் - துக்கமயமாகிய சரீரத்தை யெடுத்தற்பொருட்டு இனிப் பூமியின்கண் வாராத திருவாதவூரடிகள், பெருந்துறை வளம்பதி யில் வந்தார் - திருப்பெருந்துறையாகிய வளவிய சிவக்ஷேத்திரத்தில் வந்து சேர்ந்தார் எ—று.

வேதத்துக்கும் முத்திக்கும் அதிகாரியாகலின் திருவாதவூரடிகளை மன்னவர் என்றார்; தென்னவன்பிரமராயன் என்னும் சிறப்புப் பெயர் பற்றி மன்னவனென்றாரெனினு மமையும். இது கலிவிருத்தம். (௯0)

மாதவர் மிகும்பதி புகுந்துழி மருங்கே
நாதனுறை தண்டலையி னன்குபுனை தொண்ட
ரோதுறு சிவாகம வொலிப்பொலிவு கேளா
யாதிஃ தறிந்துரைமி னேவலர்க ளென்றார்.

இ—ள்: மாதவர் மிகும் பதி புகுந்துழி - திருவாதவூரடிகள் பெரிய தபோதனர்கண் மிக்கிருக்கும் அத்திருப்பதியின்கட் சென்றருளியபொழுது, மருங்கே நாதன் உறை தண்டலையில் - பக்கத்தே பரமாசாரியர் வீற்றிருக்கும் பூஞ்சோலையில், நன்கு புனை தொண்டர் ஓதுறு சிவாகம ஒலிப் பொலிவு கேளா - எண்வகைப் பத்திகளையுடைய திருத்தொண்டர்கள் ஓதுகின்ற சிவாகமத்தினது சிறந்த ஒலியைக் கேட்டு, ஏவலர்கள் இஃது யாது அறிந்து உரைமின் என்றார் - ஏவலாளர்களே இவ்வொலி யாது அறிந்து சொல்லுங்களென்று பணித்தருளினார் எ—று.

நன்கு ஆகுபெயர். புனைதல் மேற்கோடல். எண்வகைப் பத்திகளாவன: "தொண்டரடி தொழல் பூசைத்தொழின் மகிழ்த லழகார் துளங்கிய வர்ச்சனை புரித லுருகுதி நியமங்கள், கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன் குணமருவு மருங்கதையைக் குலவிக் கேட்டு, மண்டி விழி துளும்பன் மயிர்சிலும்ப லுன்னன் மருவுதிருப் பணிகாட்டி வருவவாங்கி, யுண்டிகொளா தொழிதலென விவையோரெட்டு முடையரவர் பத்தரென வுரைத்துளாரே" என்பதனைஅறிக. இனி, இயற்பெயராகவே கொண்டு, எல்லா நன்மைகளையுமெனப் பொருளுரைத்து, அந் நன்மைகளை யெல்லாம் மேற்கோடலாவது மனவாக்குக் காயமென்னும் திரிகரணங்களாலும் தமக்கும் பிறர்க்கும் பயன்படும் நன்மைகளையே செய்தலெனக்கோடலு மொன்று.

சென்றவர்கள் வந்துசிவ பத்தர்பலர் சூழக்
கொன்றைமுடி வைத்தகுண வெற்பைநிக ரொப்பார்
நின்றதொர் குருந்தமர நீழலி லிருந்தா
ரென்றலு மகிழ்ந்தன ரினிப்பிறவி யில்லார்.

இ—ள்: அவர்கள் சென்று வந்து - அவ்வேவலாளர்கள் உடனே போய் மீண்டுவந்து, சிவ பத்தர் பலர் சூழ - சிவனடியார் பலர் சூழ்ந்து சேவிக்க, கொன்றை முடி வைத்த குண வெற்பை நிகர் ஒப்பார் - கொன்றை மாலிகையைத் திருமுடியிலே தரித்த குணமலையாகிய சிவபெருமானை முழுவதுமொத்த ஒரு சிவயோகியார், நின்றது ஓர் குருந்த மர நீழலில் இருந்தார் என்றலும் - அங்கே நிற்கின்றதொரு குருந்தமரநிழலில் வீற்றிருக்கின்றாரென்று விண்ணப்பஞ் செய்தலும், இனிப் பிறவி இல்லார் மகிழ்ந்தனர் - இனிப் பிறவாத திருவாதவூரடிகள் அவ்வுரை முடிவதன் முன்னரே பரமானந்த மடைந்தார் எ—று.



என்றலு மென்பது உம்மீற்று வினையெச்சம்; புதியன புகுதலாற் கொள்க. அவ்வுரை முழுவதும் செவிப்புலனுவதன் முன்னரே மகிழ்ந்தார், அம்மகிழ்ச்சியின் பின்னரே மிகுதி முழுவதும் கேட்டறிந்தார் என்பார் என்றலு மகிழ்ந்தனர் என்பதை இச்செய்யுளிற் கூறி, ஏவலருரைத்த மொழி கேட்டென்பதை வருஞ்செய்யுளிற் பின்னர்க் கூறினாரென்க. ஆண்டுக் கேட்கப்படுமொலியை யறிந்துரைமி னென்றார்க்கு ஒரு சிவயோகியார் இருக்கின்றாரென்று ஏவலர் கூறுதல் விடை வழுவாம் பிறவெனின், அவரங்ஙனம் வாளா கூறாது, சிவபத்தர் பலர்சூழ என விதந்துகூறுதலின், அப்பத்தர் கூட்டத்து நிகழுமொலியே அவ்வொலி என்பது தானே சித்தித்தலின், விடைவழுவா மாறியாண்டையதெனக் கூறி மறுக்க. இது 'ஆநந்தரசாலங்கார' மென்க. (௯௨)

ஏவல ருரைத்தமொழி கேட்டரனை யெய்து
மாவலொடு காவினை யணைந்தக மலர்ந்து
மேவிய மணிச்சிவிகை விட்டினி திழிந்தே
தேவர்பர வும்பரமர் தெய்வசபை கண்டார்.

இ—ள்: ஏவலர் உரைத்த மொழி கேட்டு - ஏவலாளர்கள் கூறிய வார்த்தையைத் திருவாதவூரடிகள் பின்னர் முழுவதும் கேட்டு, அரனை எய்தும் ஆவல் ஒடு காவினை அணைந்து - பக்குவான்மாக்களது பாசத்தை யரிக்கும் சிவபெருமானை அடையவேண்டுமென்னும் வேணவாவோடு அச் சோலையை யடைந்து, அகம் மலர்ந்து - பின்னரும் மனமகிழ்ந்து, மேவிய மணிச்சிவிகை விட்டு இழிந்து - தாமிவர்ந்து வந்த முத்துச் சிவிகையை விட்டிறங்கி, தேவர் பரவும் பரமர் தெய்வ சபை இனிது கண்டார் - அரி பிரமேந்திராதி தேவர்களும் வழிபடும் பரமாசாரியரது தெய்வத்தன்மை பொருந்திய மகாசபையை நேரே கண்டார் எ—று.

அரனை என்றது ஈண்டுக் கவிகூற்று. (௯௩)

வேறு.

அண்டமெலாங் கடந்தபொருள் பகரு நூலி
னளவுரைப்பார் தெளிந்தயர்வா ராய்வா ராகித்
தொண்டுபடு மடியார்க ளாற்றொன் பான்மேற்
றொண்ணூற்றொன் பானென்னுந் தொகுதி சூழ
வொண்டொடிபங் கினனிருப்ப விருப்பா லெய்தி
யுடனுரைத்துச் சிவஞான முணர்வா ரன்பு
மண்டியநெஞ் சினில்வணங்கி வணங்கார் போல
மந்திரியா மேன்மையுடன் வந்து நின்றார்.

இ—ள்: அண்டம் எலாம் கடந்த பொருள் பகரும் நூலின் அளவு
உரைப்பார் - சகல வண்டங்களையும் தமது வியாபகத்து ளடக்கித் தாம்
அவற்று ளடங்கி வியாப்பியமாகாத அகண்டாகார நித்த வியாபக சச்சிதா
னந்தப் பிழம்பாகிய சிவபெருமான் அருளிச்செய்த ஆகமங்களின் அளவை
களைக் குரு சந்நிதியில் ஓதுபவர் சிலரும், ஆய்வார் - சிந்திப்பவர் சிலரும்,
தெளிந்து அயர்வார் ஆகி - தெளிந்து தம்வயமழிவார் சிலருமாகி, தொண்டு
படும் அடியார்கள் ஒன்பான் நூற்று மேல் தொண்ணூற்று ஒன்பான் என்
னும் தொகுதி சூழ - அடிமைத்திறம் பூண்ட திருக்கூட்டத்தினர் தொளா
யிரத்துத் தொண்ணூற்றொன்பதின்ம ரென்னுந் தொகையினையுடையவர்
தம்மைச் சூழ்ந்து சேவிக்க, ஒள் தொடி பங்கினன் இருப்ப - ஒளி பொருந்
திய வளையலைத் தரித்த உமாதேவி பாகராகிய சிவபெருமான் வீற்றிருக்க,
விருப்பால் எய்தி - திருவாதவூரடிகள் விருப்பத்தோடு சமீபத்திற் போய்,
உடன் உரைத்துச் சிவஞானம் உணர்வார் - அவரோடு சம்பாஷித்து அதி
சூக்குமமாகிய சிவஞானத்தை அநுபூதியின் வைத்துணருங் கருத்தினராகி,
அன்பு மண்டிய நெஞ்சினில் வணங்கி - அன்பு நிறைந்த மனத்தினால் அவரை
வணங்கி, வணங்கார் போல - காயத்தான் வணங்காதார் போன்று, மந்
திரி ஆம் மேன்மை உடன் வந்து நின்றார் - தம்மதிகாரத்திற்கேற்ற பெரு
மிதத்தோடு பின்னும் அதிசமீபத்திற் சென்று நின்றனர் எ—று.

மந்திரியார் எனவும் பாடம். சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதி
என்னும் மும்மாயா புவனங்கட்கும் அப்பாற்பட்டவர் என்பார் அண்டங்
கடந்த பொருளென்னாது அண்டமெலாங் கடந்த பொருளென்றும், தெளி
தலே சமாதியுமாமென்பார் தெளிவார் என்னாது தெளிந்தயர்வார் என்றுங்
கூறினார். மும்மாயாபுவனங்கட்கும் அப்பாற்பட்டவர் என்பதை "அப்பாலைக்
கப்பாலைக் கப்பாலானை யாரூரிற் கண்டடியே னடைந்தவாறே" "பாதாள
மேழினுங் கீழ்ச் சொற்கழிவு பாதமலர், போதார் புனை முடியு மெல்லாப்
பொருண் முடிவே" "ஏதமினிய குயிலே கேட்டியே லெங்கள் பெருமான்,
பாதமிரண்டும் வினவிற் பாதாளமேழினுக் கப்பாற், சோதி மணிமுடி சொல்
லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை, யாதி குணமொன்றுமிலா னந்த
மிலான் வரக்கூவாய்" என்னுந் திருவாக்குக்களானறிக. அளவு காட்சி
முதலிய பிரமாணங்கள். அவைகளை "அளவை காண்டல் கருத லுரை யபா
வம் பொருளொப் பாறென்ப, ரளவை மேலு மொழிபுண்மை யைதிகத்தோ
டியல் பெனநான், களவை காண்ப யிவையிற்றின் மேலு மறைவ ரவை
யெல்லா, மளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே"
என்பதனானறிக. ஈண்டளவென்றது அளக்கப்படுபொருளை என்பது முன்
னர் ஆய்வார் தெளிந்தயர்வார் என்பனவற்றான் இனிது விளங்குதலின்,
அதனை இயற்பெயராகக் கொள்ளாது ஆகுபெயரெனக் கொள்க. அள
வுரைப்பார் ஆய்வார் தெளிந்தயர்வார் என்றிங்ஙனம் வைத்தலே முறையா



யினும் செய்யுளாகலிற் பிறழவைத்தார். வீடுபேற்றிற்கு நிமித்தகாரணமாய
முதற்பொருளை அறிவார்க்கு அறிதற்குபாயம் மூன்று. அவை கேள்வி, விம
ரிசம், பாவனை என்பன. அவற்றுட் கேள்வி அளவுரைப்பார் என்பதனானும்,
விமரிசம் ஆய்வார் என்பதனானும், பாவனை தெளிந்தயர்வார் என்பதனா
னும் ஈண்டுக் கூறப்பட்டன. "அருளினா லாகமத்தே யறியலா மருளினா
லுந், தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே, மருளெலா
நீங்கக் கண்டு வாழலாம்" என்பதனானு மிஃதறிக. விமரிசம் - சிந்தித்தல்;
விமரிசனமெனினு மொக்கும். பாவனை - தெளிதல். தொண்டுபடுமடி
யார்கள் என்புழி அடியார்களென்பது "உலகளந்தான்றுயது" என்புழிப்
போல வாளா பெயராய் நின்றது. 'தொகுதியினர்' என நிற்கற்பாலது
'தொகுதி' என நின்றது "இயல்பாகு நோன்பிற் கொன்றின்மை" என்
புழிப்போல. திருவாதவூரடிகளோடு ஆயிரவரெனக் கோடற்குத் தொளா
யிரத்துத் தொண்ணூற் றொன்பதின்ம ரென்னும் தொகை கொண்டது
போலும். மனத்தால் வணங்கல் பிறர்க்குப் புலனாகாவண்ணம் வணங்கின
தாகப் பாவித்தல். "இன்னிசை வீணையர் யாழினரொருபா லிருக்கொடு
தோத்திர மியம்பின ரொருபாற், றுன்னிய பிணைமலர்க் கையின ரொருபாற்
றொழுகைய ரழுகையர் துவள்கைய ரொருபாற், சென்னியி லஞ்சலி கூப்
பின ரொருபாற் றிருப்பெருந் துறையுறை சிவபெருமானே" "சிரிப்பார்
களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் றிருவார்த்தை, விரிப்பார்
கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்துன் றிருநாமந், தரிப்பார் பொன்
னம்பலத்தாடுந் தலைவா வென்பா ரவர்முன்னே, நரிப்பாய் நாயேனிருப்
பேனோ நம்பியினித்தா னல்காயே" எனவரும் அடிகள் திருவாக்கானும்
திருத்தொண்டர்களது இன்னோரன்ன வழிபாடுண்மை தெளிக. இஃது
எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம். (௬௪)

உருத்திரநற் றிருமணியை யிலங்கு காதி
லொண்சிரத்திற் கந்தரத்தி லொளிகொள் மார்பிற்
கரத்திலணிந் திலகுதிரு முண்ட மங்கிக்
கண்கரந்த நன்னுதன்மேற் கவினச் சாத்தித்
திருத்திகழும் வேதியனா ரம்பொன் மேனி
திகழ்வதுகண் டகமகிழ்வார் செங்கைமீது
பொருத்தமுறும் புத்தகமே தையா வென்னப்
பொய்ம்மையிலாச் சிவஞான போத மென்றார்.

இ—ள்: நல் உருத்திர மணியை - நல்ல உருத்திராக்கமணியை,
இலங்கு காதில் - விளங்காநிற்குந் திருச்செவிகளினும், ஒள் சிரத்தில் -
அழகிய சிரசினும், கந்தரத்தில் - திருக்கழுத்தினும், ஒளிகொள் மார்பில்-
ஒளி பொருந்திய திருமார்பினும், கரத்தில் அணிந்து - திருக்கரங்களினும்
தரித்தும், இலகு திரு முண்டம் - வெள்ளொளி விளங்குந் திரிபுண்

டாத்தை, அங்கிக் கண் கரந்த நல் நுதல்மேல் கவினச் சாத்தி - அக்கினிக் கண்ணை மறைத்த நல்ல திருநெற்றியிலே சிவாகமவிதி விளங்கத் தரித்தும், திருத் திகழும் வேதியனுர் அம்பொன் மேனி திகழ்வது கண்டு அகம் மகிழ்வார் - குருலக்ஷணம் விளங்கும் அநாதிசைவராகிய சிவபெருமானது மாற்றுயர்ந்த பொன்போலும் ஞானதேசிகத் திருமேனி பேரொளி செய்வதைத் தரிசித்து மேலும் மனம் களிகூரும் திருவாதவூரடிகள் அவரை நோக்கி, ஐயா செங்கைமீது பொருத்தம் உறும் புத்தகம் ஏது என்ன - சுவாமீ உமது சிவந்த திருக்கரத்திற் பொருந்தும் திருமுறை யாதென்று வினவ, பொய்ம்மை இலாச் சிவஞானபோதம் என்றார் - அதற்கு அவர் இது மெய்ம்மையாகிய சிவஞானபோதமென்று கூறியருளினார் எ—று.

உருத்திராக்க மணியென்னுந் தொடர்மொழி இடைக்கட் சிதைந்து உருத்திர மணியென மரீஇயிற்று. புத்திரதீபமணி சாளக்கிராமமுதலியவற்றினும் மிக விசிட்டமுடையதாகலின் நன்மணியெனவும், சிவசின்னங்களுள் ஒன்றாகலிற் றிருமணியெனவும் விசேடிக்கப்பட்டது. திரிபுரத்தசுரர்களாலே தமக்கு நிகழ்கின்ற துன்பத்தைத் தேவர்கள் கைலாசபதிக்கு விண்ணப்பஞ் செய்துகொண்டபொழுது அவர் திருவுளமிரங்கிப் பதினென்கு தேவவருடந் திருக்கண்களை மலர்த்திக்கொண்டிருப்ப அக்கண்களிலிருந் தொழுகிய கண்ணீரினின்றுந் தோன்றினமையால் உருத்திராக்கமணியெனக் காரணக் குறியாயிற்றென்க. அம்மணிகளைத் தரிக்கும்போது செவிகளின் அவ்வாறும் சிரத்தினுங் கழுத்தினும் மார்பினும் தனித்தனி முப்பத்திரண்டும் கைகளில் ஏவ்வெட்டும் விதிப்படி வடமாக்கித் தரித்தல் வேண்டும். இங்ஙனமன்றித் தரிக்கப்படும் அவயவங்களின் பிரமாணமே மணிப் பிரமாணமாகக் கொண்டு தரித்தலுமாம். கண்டென்னுஞ் செய்தெனெச்சம் காரணப்பொருட்டு. சிவாகமங்கள் கூறும் ஆசாரிய புருஷ லக்ஷணம் முழுவதும் அமைந்திருத்தலைத் தரிசித்து, அதனானும் இவர் பரமாசாரியரென அகமகிழ்ந்தார் என்பார் ‘அம்பொன்மேனி திகழ்வதுகண் டக மகிழ்வார்’ என்றார். மகிழ்வார் என்பது வினையாலணையும் பெயர். கண் கரந்த நுதலென்றது இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின்மே லேற்றிக் கூறப்பட்டது. முண்டம் திரிபுண்டரம். அது “சைவவெண்டிரு நீற்று முண்டத் தொளித் தழைப்பும்” என்பதனானுமறிக. திரிபுண்டரம் முக்குறித் தொகுதி. திரி - மூன்று. புண்டரம் - கீறு. சிவஞானபோதம் ரௌரவாகமத்திலே பாவவிமோசன படலத்திலே சர்வாகம சாரமாய் விளங்கும் பன்னிரண்டு சூத்திரமென்க. [இதனைச் சர்வஞ்ஞதையுடைய பரமபதியாகிய பரமாசாரியரே தமதருமைத்திருவாக்கினாலே ‘பொய்ம்மையிலாச் சிவஞானபோத’ மென விதந்து கூறியருளுவாராயின், சிற்றறிவுடைய பசுவர்க்கத்துள்ளும் மிகவுந் தாழ்ந்த பருவத்தையுடைய புழுத்த நாயினுங் கடையேமாகிய நாமா விதந்து கூற வல்லேம்.] (௫)



என்றலுமே சிவமேது ஞான மேதிங்
கிலங்கியிடும் போதமே தியம்பு வீரே
லன்றுவட நீழலில்வந் திருந்தார் நீரே
யடியேனு முமக்கடிமை யாவே னென்ன
நின்றசிவ மொன்றதனைத் தேர்தன் ஞான
நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளித லாமென்
றொன்றியநற் பொருள்வினவி நிற்பார் சிந்தை
யுருகும்வகை யுரைசெய்தா ருவமை யில்லார்.

இ—ள்: என்றலும் - என்றிங்ஙன முத்தரமளித் தருளலும், சிவம் ஏது - அதுகேட்ட திருவாதவூரடிகள் சுவாமீ சிவஞானபோதமென்னும் அம் மும் மொழித் தொடரினுண் முதற்கணின்ற சிவமாவதியாது, ஞானம் ஏது - இடைக்கணின்ற ஞானமாவதியாது, இங்கு இலங்கியிடும் போதமேது - இறுதிக்கண் விளங்கும் போதமாவதியாது, இயம்புவீரேல் - இம்முத்திறவினாக்கட்கும் பிரதியுத்தரமளித் தருளுவீராயின், அன்று வட நீழலில் வந்து இருந்தார் நீரே - சனகர் முதலிய முனீந்திரர் நால்வருக்கும் வேதார்த்தங்களிற் சமுசயம் பிறந்த அக்காலத்துக் கைலாசகிரியின் தக்ஷிணசிகரத்தினிற்கும் கல்லாலவிருக்ஷ நிழலி லெழுந்தருளிவந் திருந்துகொண்டு அச்சமுசயந் தீர்த்த தக்ஷிணாமூர்த்தியுந் தேவரீரே, அடியேனும் உமக்கு அடிமை ஆவேன் என்ன - தமியேனுந் தேவரீருக்கு மீளாவடிமை யாவேனென்று விண்ணப்பஞ் செய்ய, உவமை இல்லார் - அதற்குச் சமானதிகரகிதராகிய பரமாசாரியர், நின்ற சிவம் ஒன்று - அவ்வாசகமுதற்கணின்ற சிவமாவது நித்தமுத்த சுத்த சித்தாகிய ஒரு வஸ்து, அதனைத் தேர்தல் ஞானம் - அவ்வஸ்துவைச் சந்தேக விபரீதக் காட்சிகளின்றி அதனருள்வழிப்பட்டு நின்று உள்ளவாறு அறிதலே இடைநின்ற ஞானமாவது, நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளிதல் ஆம் என்று - இனி இறுதிக்கண் விளங்கும் போதமாவது அங்ஙனம் ஆகமவளவையின் வைத்தறிந்ததனை அநுபூதிநிலையில் வைத்து நிச்சயஞ்செய்தலேயாமென்று, ஒன்றிய நல் பொருள் வினவி நிற்பார் சிந்தை உருகும் வகை உரை செய்தார் - சிவஞானபோதமென்னும் அவ்வாக்கியத்திற் பொருந்திய உண்மைப்பொருளை ஐவகை வினாக்களுள் ‘அவனறிவுதான் கோடல்’ என்னும் வினாவான் வினவிநிற்குந் திருவாதவூரடிகளுடைய மனம் நெக்கு நெக்குருகும் வண்ணம் பிரதியுத்தரமளித்தருளினார் எ—று.

முதற்கணின்ற ஏகாரம் இசைநிறை. சனகர் முதலிய முனீந்திரரும் பிறருமேயன்றி நாயேனும் அடிமையாவேனென்னும் பொருடந்து நிற்றலின் அடியேனு மென்னுமும்மை இழிவு சிறப்போ டெச்சமுமாமென்க. ஒன்றென்பது ஈண்டு நித்தமுத்த சுத்த சித்தாகிய ஒன்றென்பதை எடுத்தலோசை வகையாற் கூறிக் காண்க. ஐவகை வினாக்களை ‘அறியான் வினாவலறிவொப்புக் காண்ட, லையமறுத்த லவனறிவு தான் கோடன், மெய்ய

வற்குக் காட்டலோ டைவகை விளுவே' என்பதனு னறிக. ஒப்பின்மை கூறவே உயர்வின்மை தானே பெறப்படுமாகலின் உவமையில்லா ரென்ளுழிர்தார். உத்தரப்பொருட் டின்மையானன்றிச் சொற்சாதுரிய வகையானும் வசீகரித்தன ரென்பார் சிந்தை யுருகும்வகை யுரைசெய்தா ரென்ளுர். இக்கருத்து, வருஞ்செய்யுளில் உத்தம ரின்னவா றுரைத்தலு மென்றமையாது இன்னவாறிங் குரைத்தலு மென விசேடித்து விளக்கியவாற்ருனுமறிக. அநுபூதி அநுபவம். இனி நின்றசிவ மொன்று என்பதற்கு மகா சங்காரகாலத்தின் கண்ணே அச்சங்கரித்தற் ளுழிற்குச் செய்வோனுய் நிற்பதல்லது ஒருவாற்ருனும் செயப்படுபொருளாவதின்றிச் சேஷித்து நின்ற சிவமாவது ஒரு வஸ்து எனப் பொருள்கொண்டு, பதிப்பொருளாவது நிருவிகற்ப சவிகற்பங்களுள், நிருவிகற்பமா யல்லது சவிகற்பமா யுணர்த்துதற் கரியதொரு பொருளாகலின் சிவமொன்றென் ளுழிந்தார் என விசேடங் கூறுதலுமொன்று. "சொல்லு நூல்களிற் பெரியதே தரிய மெய்ச்சுருதி யில்லறத்தினுக் கியைவதே தில்லுடை யில்லாண், மல்லன் மாலையின் மணமுளதே து வண்சாதி, நல்ல மாதவ மேதுதங் குலம்புரி நடையே" என்புழிப் போல இவை யிரண்டும் விளுவுத்தா மென்னும் சொல்லணியின்பாற் படுமென்க. (௬௬)

வேறு.

உத்தம ரின்னவா றிங் குரைத்தலு முவந்து நாலாஞ்
சத்திநி பாதமெய் துந் தன்மைய ராதலாலே
யத்திரு மன்றுளாடு மையரிங் கென்னையாள
வித்திரு மேனிகொண்டா ரென்பது மனத்திலெண்ணி.

இ—ள்: உத்தமர் இன்ன ஆறு இங்கு உரைத்தலும் - தேசிகோத்தமராகிய சிவபெருமான் இந்தப் பிரகாரந் திருவாய்மலர்ந்தருளுதலும், உவந்து - திருவாதவூரடிகள் அதுகேட்டு மிகவும் மனமகிழ்ந்து, நாலாஞ் சத்திநிபாதம் எய்தும் தன்மையர் ஆதலால் - அவர் சத்திநிபாதம் நான்கனுள் இறுதிக்கண்ணதாகிய அதிதீவிரபக்குவம் பொருந்தப்பெற்ற திரிகரணசுத்தியை யுடையாராதலினல், அத்திரு மன்றுள் ஆடும் ஐயர் - அக்கனக சபையின்கண்ணே பஞ்சகிருத்திய நிருத்தஞ்செய்தருளுஞ் சபாநாயகரே, என்னை ஆள இத்திரு மேனி கொண்டார் என்பது மனத்தில் எண்ணி - தமியேனை அடிமைகொண்டருளும் பொருட்டு இத்தேசிகத் திருமேனி கொண்டருளினரென்பதைத் தம் மனத்திற் சிந்தித்து எ—று.

ஆதலால் எண்ணி என முடிக்க. சத்திநிபாதம் நான்காவன: மந்ததரம் மந்தம், தீவிரம், தீவிரதரம் என்பன. சத்திநிபாதம் நான்கனுள் மந்ததரமாவது: பாலின்கண் ணெய் ஒருவாறு தோன்றியும் தோன்ருதும் மறைந்துடனிற்றல்போல ஆன்மாவின்கட் சிவம் ஒருவாறு தோன்றியும் தோன்ருதும் மறைந்துடனிற்றலாம். மந்தமாவது: பழத்தினிரதம் உய்த்துணரும்



வழி விளங்கித் தோன்றுவதா யுடனிற்றல்போல ஆன்மாவின்கட் சிவம் உய்த்துணரும்வழி விளங்கித் தோன்றுவதா யுடனிற்றலாம். தீவிரமாவது: எள்ளின்க ணெண்ணெய் இனிது விளங்கித் தோன்றினும் பிரித்தறியப் படா துடனிற்றல்போல ஆன்மாவின்கட் சிவம் இனிது விளங்கித் தோன்றினும் பிரித்தறியப் படா துடனிற்றலாம். தீவிரதரமாவது: தீ இரும்பைத் தன்வண்ணமாக்குதல் போலச் சிவம் ஆன்மாவைத் தன்வண்ணமாக்கிச் சிவானந்தம் மேலிடச் செய்து நிற்றலாம். அது "இந்தனத்தி னெரி பாலி னெய் பழத்தி னிரத மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன், வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவேயருளு மலமறுப்போ ரான்மாவின் மலரடி ஞானத்தாற், சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித் தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன் றன்னைப், பந்தனையை யறுத்துத் தானுக்கித் தன்னுருவப் பாப்பெல்லாங் கொடுபோந்து பதிப்ப னிவன் பாலே" என்பதனுனுமறிக. இதனுள் இந்தனத்தினெரி இந்நான்கு பருவத்துள்ளும் வாராத சாமானியர்க்குச் சிறிதும் தோன்ருத வாறு மறைந்துடனிற்றற் குவமையாய் வந்ததென்க. இன்னும் இப்பருவங்கட்கு முறையே வெய்யிலில் வெதும்பு மரக்கும், வெய்யிலிலுருகும் மெழுகும், சூட்டிலுருகும் நெய்யும், இடையரு தொழுகும் தைலதாரையும் உவமானமாகக் கூறப்படுதலும்; வாழைத்தண்டில் அக்கினி பற்றுதலும், பச்சை விறகில் அக்கினி பற்றுதலும், உலர்ந்த விறகில் அக்கினி பற்றுதலும், கரியில் அக்கினி பற்றுதலும் உவமானமாகக் கூறப்படுதலும் ஆகமங்களுட் காண்க. சிவானந்தம் மேலிடச் செய்தலாவது இறைவன் தனக்குரிய முற்றுணர்வு முதலிய எண்குணங்களும் படிகம்போலச் சார்ந்ததன்வண்ணமா மியல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவித வியைபானே ஆன்மாவின்மாட்டு விளங்கித் தோன்றச் செய்தல். திருவாதவூரடிகளுக்கு இந்நான்கனுள் நாலாஞ் சத்தி பதிந்தமையை "பித்திது வெனப் பிறர் நகைக்கவரு நாலாஞ் சத்தி பதிய" என வழிநூலாசிரியர் கூறியவாற்ருனு முணர்க. இது அறுசீரடியாசிரியவிருத்தம். (௬௭)

மின்னினு நிலைமை யில்லா விழுப்பொருள் யாவும் வேண்டே
னுன்னடி யடைந்து நாயே னுறுபவ மொழித்தல் வேண்டு
மென்னையின் றடிமைக்கொள்வா யெம்முயிர்க் கிறைவா வென்று
முன்னுற வணங்கி நின்ருர் முகமெலாங் கண்ணீர் வார.

இ—ள்: எம்முயிர்க்கு இறைவா - எமதான்மநாயகரே, நாயேன் - புழுத்த நாயினுங் கடையேனுகிய தமியேன், மின்னினும் நிலைமை இல்லா விழுப்பொருள் யாவும் வேண்டேன் - தோன்றியாங்கழியும் மின்னலினும் விரைந்தழிதன் மாலையவாய விழுமிய பிரபஞ்சப் பொருள்களினுள் ஒன்றையும் விரும்பமாட்டேன், உன் அடி அடைந்து உறுபவம் ஒழித்தல் வேண்டும் - தேவரீருடைய திருவடிகளையே புகலிடமாக வடைந்து அநாதியே

சகசித்தபிறவியை நீக்குதல்வேண்டும் ஆதலினால், என்னை இன்று அடிமைக் கொள்வாயென்று - தமியேனை இதுபொழுது அடிமைக்கொண்டருளும் என்று, முகம் எலாம் கண் நீர் வார முன் உற வணங்கிநின்றார் - முகமுழு வதும் கண்ணீரொழுகக் குருசந்நிதியிலே மறித்தும் வணங்கிநின்றனர் எ-று.

எம்மென்றது எனை ஆன்மகோடிகளையும் தழீஇக்கொண்டென்க. அது முன்னர் என்னையின் றடிமைக்கொள்வாயெனத் தழுவாது கூறியவாற்றானு மறிக. கல்வி முதலிய சிறந்த பொருளாயினும் என்றற்கு விழுப்பொருள் என விசேடிக்கப்பட்டது. அவ்வுடையுரிமை கல்விக்கே சிறந்ததென்பது "கேடில் விழுச்செல்வம் கல்வி" என்பதனானு மறிக. இனி விழுப்பொருள் என்பதற்குத் துன்பத்தைத் தரும் பொருளென்றலு மொன்று. இப் பொருட்கு நிலைமொழி விழுமம். இதுவும் 'ஆனந்தரசாலங்கார' மென்க. (௬௮)

இவ்வகை புகன்று முன்னோன் முன்னுற விரங்கி நிற்பத்
திவ்விய தரமே யான செய்தியா ரென்று நாடி
யவ்வடி யவரின் மிக்கா ரொருவரிவ் வடிமை தன்னை
வெவ்வினை யகற்றி யாள வேண்டுமென் றிறைஞ்சி நின்றார்.

இ—ள்: இவ்வகை புகன்று முன்னோன் முன்னுற இரங்கி நிற்ப - திருவாதவூரடிகள் இந்தப் பிரகாரம் விண்ணப்பஞ் செய்து பரமாசாரியரது சந்நிதியிலே இரக்கமுற்று நிற்ப, அவ் அடியவரின் மிக்கார் ஒருவர் நாடி - அத்திருத்தொண்டர்களுக்குட் சிறந்தவரொருவர் அது கண்டு, திவ்விய தரம் ஆன செய்தியர் என்று - இவர் தீவிரதரமான பக்குவத்தை யுடையவ ரென் றனுமானித்து, வெவ்வினை அகற்றி இவ் அடிமை தன்னை ஆள வேண்டும் என்று - கொடிய வினைகளை நீக்கி இவ்வடியவரைத் தேவரீர் அடிமைகொண்டருள வேண்டுமென்று பிரார்த்தித்து, இறைஞ்சி நின்றார் - வணங்கிநின்றார் எ—று. (௬௯)

கருப்புக நினையார் தம்மேற் கண்ணருள் செய்து நெஞ்சிற்
பரப்பற மிதித்தல் வேண்டி யெடுத்தபொற் பாதங் கொண்டு
திருப்புனை மறையோர் போற்றத் தில்லையம் பலத்தே நின்ற
வருட்பரா னந்த வாரி யாதலி னதற்கி சைந்தார்.

இ—ள்: கருப்புக நினையார் மேல் கண் அருள் செய்து - கருப்பாசயத் தின்கட் பிரவேசிக்க விருப்பமில்லாத பக்குவான்மாக்கண்மீது கிருபா நோக்கஞ் செய்து, எடுத்த பொன் பாதம் கொண்டு நெஞ்சில் பரப்பு அற மிதித் தல் வேண்டி - தூக்கிய திருவடியைக்கொண்டு அவரது சித்தவிருத்தி குன் றும் வண்ணம் சிரசில் வைத்துத் தீக்ஷை செய்யத் திருவுளம் பொருந்தி, திருப்புனை மறையோர் போற்ற - திருவுடை யந்தணர் துதித்து வழிபட, தில்லை அம்பலத்து நின்ற அருள் பர ஆனந்த வாரி ஆதலின் - சிதம்பரத்திலே கனகசபையின்கண்ணே அநவரதமும் நின்றருளுகின்ற சிவகாருண்ணியத்



தை யுடைய சிவானந்த சமுத்திரமாகலின், அதற்கு இசைந்தார் - பிரோரகா சாரியரது வேண்டுகோளுக்குப் பரமாசாரியர் உடம்பட்டருளினர் எ—று.

பொற்பாதம் என்புழிப் பொன் - பொலிவு; உலகெங்கும் விரிந்தபாத மென்றதாம். அது "மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்" என்பதனானு மறிக. வேண்டி, நின்ற, வாரியென முடிக்க. இங்ஙனமன்றி வேண்டி, கொண்டு, நின்ற, வாரியென முறையே முடித்தலு மொன்று. ஈண்டுச் சக்ஷு தீக்ஷை யின்றித் திருவடிதீக்ஷை செய்தலாகாமையின் அதுவு முடன் கூறப்பட்டது. கருப்புக நினையாமை பிறவிக்கேற்பவைகளைச் செய்ய முயலாமை. பக்குவான்மாக்கட்குத் திருவடிதீக்ஷை செய்தருளுங் கடப் பாடு பூண்டு கனகசபையின்கண்ணே அநவரதமும் வெளிநின்றருளுஞ் சிவ காருண்ணிய சமுத்திரமாகலின், பரமாசாரியர் அதற்கு உடம்பட்டா ரென் பதாம். இனி நினையாரென்றது திருவாதவூரடிகளை என்பாருமுளர். (௭௦)

அத்தகு பகலோன் முன்ன ரலர்செயு மம்பு சாத
மொத்தவர் தம்மை நாடி யுன்னையின் றடிமை கொள்ள
வித்தலத் தணைந்தோ நீமுன் னியற்றிய தவத்தி னாலே
சித்தம திரங்கல் வேண்டா வெனத்திரு வாய்ம லர்ந்தார்.

இ—ள்: அத்தகு பகலோன் முன்னர் அலர் செயும் அம்பு சாதம் ஒத்தவர் தம்மை நாடி - அத்தகுதியை யுடைய சூரியனது சந்நிதிமாத்திரை யிலே அலருதல் செய்யும் தாமரை மலரையொத்த திருவாதவூரடிகளைப் பரமாசாரியர் நோக்கி, நீ முன் இயற்றிய தவத்தினாலே இன்று உன்னை அடிமை கொள்ள இத்தலத்து அணைந்தோம் - அன்பனே நீ பூர்வ சன்மங் களிற் செய்த நிஷ்காமமா புண்ணிய வசத்தினாலே இத்தினம் உன்னை அடி மை கொள்ளும் பொருட்டு நாம் இப்பெருந்துறையின்கண் வந்தேம் ஆத லால், சித்தம் இரங்கல் வேண்டா எனத் திருவாய் மலர்ந்தார் - இனி மனமிரங்குதலை ஒழிவாயாகவென்று திருவாய்மலர்ந்தருளினார் எ—று.

அகரம் பண்டறிசுட்டு. அலர் முதனிலைத் தொழிற்பெயர். அம்பு-நீர் சாதம் - தோன்றுதல். ஈண்டும் தவமென்றது சரியை கிரியா யோகங்களா கிய பதிபுண்ணியங்களை. சூரியன் நவக்கிரகங்களினும் மற்றும் ஒளியுடைப் பொருள்கள் பலவற்றினும் மிக்குத் தோன்றுதலும் இராக்காலம் போலத் தம்பதிகளைக் காமநெறிக்கட் செலுத்தாதும் பிறவுமாகிய தகுதியுடைமை எல்லாராலும் அறியப்பட்டதொன்றாகலின் அதுபற்றி அச்சூரியனை அத் தகு பகலோனென்றும், அச்சூரியனது சந்நிதிமாத்திரையின் மலரும் தாம ரை போலத் திருவாதவூரடிகள் பரமாசாரியரது சந்நிதிமாத்திரையின் முக மலர்ச்சி யடைந்தமையின், அவரைப் பகலோன் முன்ன ரலர்செயு மம்பு சாத மொத்தவர் என்றும், பரமாசாரியர் பரமதயாநிதியாகலின், நீ முன்

ணியற்றிய தவத்தினாலே யுன்னையின் றடிமைகொள்ள வித்தலத் தனைந் தோம் என்றமையாது பின்னரும் விதந்து சித்தம திரங்கல் வேண்டா வெனத் திருவாய் மலர்ந்தார் என்றுங் கூறினார். நிஷ்காமனை புண்ணியம் வேறு பயனை இச்சியாது செய்த புண்ணியம். (சக)

வந்துநான் வறுமை யுற்றேன் மாற்றென திலம்பா டென்று
சிந்தையா குலமுற் றுன்கைச் செழும்பொரு ளீதல் செய்வாற்
கிந்தநா ளளிக்க வேண்டு மெனவிதி யின்மை யாலே
யந்தநா ளிந்நா ளாக வடிமைகொண் டருள வெண்ணி.

இ—ள்: வந்து - தன்னை நாடி வந்து, நான் வறுமை உற்றேன் - நான் மிகவும் வறுமை யடைந்தேன், எனது இலம்பாடு மாற்று என்று - எனது வறுமையை நீக்குகென்று யாசித்து, சிந்தை ஆகுலம் உற்றுன் கைச் செழும் பொருள் ஈதல் செய்வார்க்கு - மனோவியாகுலமடைந்த ஒரு நித்தியதரித்திரன் கையிலே செழுமையாகிய திரவியத்தைக் குறைவறக் கொடுக்கும் தாதாவுக்கு, இந்தநாள் அளிக்க வேண்டும் என விதி இன்மையால் - இன்னநாள்களின் மாத்திரங் கொடுத்தல் வேண்டும் அல்லுழிக் கொடுக்கலாகாதென்னும் விதியில்லாமையினாலே, அந்த நாள் இந்நாள் ஆக அடிமை கொண்டு அருள எண்ணி - அந்நாளே இதற்கும் நாளாகப் பரமாசாரியர் திருவாதவூரடிகளை அடிமைகொண்டருளத் திருவுளங் கொண்டு எ—று.

அந்தநாள் என்றது வறியவர்கட் கீதற்குப் பொதுவகையான் விலக் கப்பட்டு, மிக வறியவர்கட் கீதற்குச் சிறப்புவகையான் விலக்கப்படாத நாளை. இந்தநாள் என்றது பக்குவிகட் குபதேசித்தற்குப் பொதுவகை யான் விலக்கப்பட்டு, அதிதீவிரபக்குவிகட் குபதேசித்தற்குச் சிறப்புவகை யான் விலக்கப்படாத நாளை. என் சொல்லியவாறோவெனில், ஞானா சாரியர் ஞானதீக்ஷை செய்யத் தொடங்குமுன் தீக்ஷிக்கப்படும் மாணாக்கன் அந்தணனாயின் மூன்று வருடமும், க்ஷத்திரியனாயின் ஆறுவருடமும், வைசி யனாயின் ஒன்பது வருடமும், சூத்திரனாயிற் பன்னிரண்டு வருடமும் பக்கு வாபக்குவம் பரீக்ஷித்துப் பக்குவனாயினன்றே தீக்ஷித்தல் வேண்டுமென்னும் ஆகமவிதிக்கு விரோதமாக ஈண்டுப் பரீக்ஷையின்றி ஞானதீக்ஷை செய்யத் தொடங்கியதென்னையென நிகழும் ஆட்சேபத்திற்குச் சமாதானம் கூறிய வாறென்க. ஈண்டு ஞானாசாரியராவார் முற்றுணர்வு முதலிய எண்குணங் களையுடைய கைலாசபதியே யாகலானும் மாணாக்கர் அதிதீவிர பக்குவத் தை யுடையவ ரென்பது தெற்றென விளங்குதலானும் பரீட்சை எற்றுக் கென்பது கருத்தென்க. ஈண்டு விதியென்றது சிறப்புவிதியை என்பது முதன் மூன்றடிகளானும் இனிது விளங்குமென்க. இலம்பாடு - வறுமை. அது "இலம்பாடொற்கமா யிரண்டும் வறுமை" என்பதனானுமறிக. (சஉ)



அத்தகு தொண்டர்க் கெல்லா மதிபரா மவரைநோக்கி
யித்தவ முடையோ னெய்து மிடரொழித் தாள்வ திந்நாள்
வித்தக விதற்கு வேண்டுங் கருமநீ விரைவிற் செய்கென்
றுத்தம வடிவங் காட்டு முண்மையா ருரைத்தல் செய்தார்.

இ—ள்: உத்தம வடிவம் காட்டும் உண்மையார் - ஞானதேசிகத் திரு மேனியைத் தரிசிப்பித்தருளும் மெய்ப்பொருளாகிய சிவபெருமானானவர், அத்தகு தொண்டர்க்கு எல்லாம் அதிபராம் அவரை நோக்கி - அத்தகுதியை யுடைய திருத்தொண்டர்களுக் கெல்லாம் முதல்வராகிய அப்பிரோகாசாரி யரைப் பார்த்து, வித்தக - சாதுரியனே, இத்தவம் உடையோன் எய்தும் இடர் ஒழித்து ஆள்வது இந்நாள் - தவத்தையுடைய இவ்வன்பன் பொருந் தும் பிறவித்துன்பத்தை நீக்கி நாம் அடிமை கொள்வது இத்தினமே, இதற்கு வேண்டும் கருமம் நீ விரைவில் செய்கு என்று உரைத்தல் செய்தார் - இதற்கு வேண்டுங் காரியங்களை நீ ஒரு சிறிதும் காலநீட்டமின்றிப் பிரயத்தனஞ் செய்யக் கடவையென்று பணித்தருளினார் எ—று.

செய்க என்னும் வியங்கோளீறு குறைந்து நின்றது. செய்யா யென் னும் முன்னிலை வினைமுற்று விகுதி குன்றிக் குகரச் சாரியை பெற்று நின்ற தெனினு மமையும். ஞானதீக்ஷாகருமத்தையே இடரொழித் தாள்வதென்று ராகலின் ஈண்டிதுவென்றது தீக்ஷையை என்க. அதற்கு வேண்டுங் கருமங் கள் இவை என்பது முன்னர்க் கூறுப. தொளாயிரத்துத் தொண்ணூற் றொன்பதின்மரென மேலே விதந்து கூறிய அத்திருத்தொண்டர் என்பார், அத்தகு தொண்டர் என்றும், அவர்களுள்ளும் முன்னிறைஞ்சி நின்ற அவரை என்பார், அதிபராமவரை என்றும், இடரொழித் தாளத்தகும் பக் குவன் என்பார், திருவாதவூரடிகளை இத்தவ முடையோன் என்றும், இதற்கு வேண்டுங் கருமங்களைச் செய்தற்கு நீயே வல்லை யென்பார், வித்தக என்றும், இருவினையொப்பும் மலபரிபாகமும் முற்பிற்பாடற நிகழும் இப் பொழுதே யென்பார், விரைவில் என்றும், ஞானாசாரியருக்கு ஆகமங்கள் விதித்த புருடாகிருதி முதலிய அனைத்திலக்கணங்களும் ஒருங்கமைந்த வடி வம் என்பார், உத்தம வடிவமென்றுங் கூறினார். அத்திருத்தொண்டர்கள் வரலாறு முன்னர்க் கூறுதும். (சங)

முன்னவன் புகன்ற வாறு முயல்குவ மென்றே யந்த
மன்னிருந் தவத்தின் மிக்கார் வகைமலர்த் தெரியலானும்
பொன்னிடை யழுத்தி முத்தம் புனைந்தபல் பட்டினானு
மந்நெடுங் காவி னூடங் கானபூங் கோயில் செய்தே.

இ—ள்: அந்த மன் இரும் தவத்தின் மிக்கார் - நிலைபெற்ற பெரிய தவத்தான் மேம்பட்ட அந்தப் பிரோகாசாரியர், முன்னவன் புகன்ற ஆறு முயல்குவம் என்று - முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொரு

ளாகிய பரமாசாரியர் பணித்தருளிய பிரகாரஞ் செய்யக்கடவோமென்று, வகை மலர்த் தெரியலானும் - நானாவிதமாகிய பூமாலைகளினாலும், பொன் இடை அழுத்தி முத்தம் புனைந்த பல் பட்டினாலும் - பொன்னிழைகளை இடையிடையே செறித்து முத்துக்களைக் கொண்டு விளிம் பிழைத்த நானாவிதமாகிய பட்டுவஸ்திரங்களினாலும், அங்கு அந்நெடுங்காவின் ஊடு ஆன பூங்கோயில் செய்து - அங்கே உயர்வாகிய அச் சோலையின் கண்ணே தீக்ஷைக் கியைந்த ஒரு பூங்கோயிலைச் செய்து எ—று.

முயல்குவம் என்பது உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. அத்திருக்கூட்டத்துட் பிரேரகாசாரியராகிய முதன்மை பெறுதற்குரிய பூர்வசன்ம புண்ணிய விசேடத்தை யுடையவரென்பார், அந்த மன் இருந்தவத்தின் மிக்கார் என்றும், இவ்வரும் பெரும்பேற்றைப் பெறுதற்கிடமாகிய சோலை என்பார் அந்நெடுங்கா வென்றும், தீக்ஷாமண்டபத் திலக்கணம் பொருந்தச் செய்த கோயிலென்பார் ஆனபூங்கோயிலென்றுங் கூறினர். பொன்னிடையழுத்தி என்பதற்குப் பொன்னைத் தகடுசெய் திடையிடையே அழுத்தி யெனப் பொருள் கோடலு மொன்று. (சச)

செய்தநற் கோயி லூடு சிறந்தவா சனமுஞ் சேர்த்து
மெய்தகு தொண்டர்க் கெல்லா மிக்கவ ரிறைவற் சார்ந்து
கைதவ முடையார் நெஞ்சிற் கனவிலுங் காண நில்லா
மைதரு களத்தாய் கோட்டஞ் சமைந்தது வாய்ப்ப வென்றார்.

இ—ள்: மெய் தகு தொண்டர்க்கு எல்லாம் மிக்கவர் - மெய்யறிவையுடைய திருத்தொண்டர்களுக்கெல்லாம் அதிபர், செய்த நல் கோயில் ஊடு சிறந்த ஆசனமும் சேர்த்து - இங்ஙனஞ் செய்யப்பட்ட நல்ல கோயிலினுள்ளே திவ்விய ஒரு ஆசனத்தையு மமைத்து, இறைவற் சார்ந்து - பரமாசாரியரை யடைந்து, கைதவம் உடையார் நெஞ்சில் கனவிலும் காண நில்லா மைதரு களத்தாய் - கபடிகளது மனத்தின்க ணிகழுஞ் சொப்பனத்தினும் அவர் காணுதற் கொரு சிறிது வெளி நில்லாத காளகண்டத்தையுடையவரே, கோட்டம் வாய்ப்பச் சமைந்தது என்றார் - கோயில் தீக்ஷாமண்டபத் திலக்கணம் பொருந்தச் செயப்பட்டு முடிந்தது என்று விண்ணப்பஞ் செய்தார் எ—று. மெய் - ஆகுபெயர். தகுதல் - பொருந்துதல். (சரு)

ஆயிடைக் குடபால் வெற்பி லாதபன் கரந்து ஞாலம்
பாயிருள் பரந்த பின்பு கடிகையோர் பதினைந் தாகி
மேயநல் லுயிர்க ளெல்லாம் விழித்துயில் பயிலுங் காலைத்
தூயதொன் டர்க்கு மாயை தொலையுநல் லமையந் தோன்ற.

இ—ள்: ஆயிடைக் குடபால் வெற்பில் ஆதபன் கரந்து - அப்பொழுது மேற்குத் திக்கிலுள்ள அஸ்தமயன கிரியிலே சூரியன் மறைத

லால், ஞாலம் இருள் பரந்த பின்பு - பூமியிலே இருள் பரந்த பின்னர், கடிகை ஓர் பதினைந்து ஆகி - அத்தயாமமாகப்பெற்று, மேய நல் உயிர்கள் எல்லாம் விழித்துயில் பயிலுங் காலை - பகற் காலத்து வேண்டுமிடங்களிற் சஞ்சரித்த நல்ல ஆன்மவர்க்கங்க ளெல்லாம் கண்களை முகிழ்த்து நித்திரை செய்யும்போது, தூய தொண்டர்க்கு மாயை தொலையும் நல் அமையம் தோன்ற - சித்தசுத்தியையுடைய திருவாதவூரடிகளுக்கு மாயாமலம் சத்தி குன்றும் நல்ல தருணம் வந்து சம்பவிக்க எ—று.

ஆயிடை என்புழிக் காலம் இடப்பெயராற் கூறப்பட்டது. கரத்தலால் என்பது கரந்தெனத் திரிந்து நின்றது. ஆகிப் பயிலுங்காலை என முடிக்க. முற்பிற் பாடற உலகெங்கும் ஏககாலத்து வியாபித்தலிற் பாயிருளென விசேடித்தார். ஒளியினது அபாவமாகிய இருளை ஈண்டுப் பாயிருளென்ற திலக்கணை பற்றியென்க. (சசு)

இங்கிவன் றன்னையாளுங் காலமீ தென்று தெய்வ
சங்கம தகன்று முன்னோன் மஞ்சனச் சாலை சார்ந்து
குங்குமம் புழுகு சாந்தங் குழைத்துமெய்ம் முழுதும் பூசிக்
கங்கையி னன்னீர் வாசங் கலந்தமென் பனிநீ ராடி.

இ—ள்: முன்னோன் இங்கு இவன்றன்னை ஆளும் காலம் ஈது என்று - பரமாசாரியர் இங்கே இவ்வன்பனை நாம் அடிமைகொள்ளுங்காலம் இதுவேயென்று திருவுளத்தடைத்து, தெய்வ சங்கம் அகன்று மஞ்சனச் சாலை சார்ந்து - அத் தேவசபையை விட்டு நீங்கி ஸ்நான மண்டபத்தை அடைந்து, குங்குமம் புழுகு சாந்தம் குழைத்து மெய் முழுதும் பூசி - குங்குமத்தையும் சாவிப்புழுகையுஞ் சந்தனத்தையுங் குழைத்துத் திருமேனியெங்கும் அர்ப்பணஞ் செய்து, நல் வாசம் கலந்த கங்கையின் நீர் மெல் பனி நீர் ஆடி - நல்ல வாசனையையூட்டிய கங்கா தீர்த்தத்தினாலும் நொய்மையாகிய பனி நீரினாலும் ஸ்நானஞ் செய்தருளி எ—று.

திவ்வியமென்னும் வடமொழி ஈண்டுத் தெய்வமென்றாயிற்று. (சஎ)

மெய்ப்புன றுகிலான் மாற்றி விலைமதிப் பில்லா நல்ல
வொப்பருஞ் செம்பட் டாடை யுடுத்துயர் கோட்ட மெய்திச்
செப்பிள முலையாள் பாகன் றென்றிசை யதனை நோக்கி
யப்பெருந் தவிசின் மேலங் கழகுற விருந்த பின்னர்.

இ—ள்: செப்பு இள முலையாள் பாகன் - கடைந்த நீலரத்தினச் செப்பை நிகர்த்த இளமையாகிய ஸ்தனங்களையுடைய உமாதேவிபாகராகிய சிவபெருமான், மெய்ப்புனல் துகிலான் மாற்றி - திருமேனியிற் பொருந்திய நீரைத் திருவொற்றாடையினாலே ஒற்றி நீக்கி, விலை மதிப்பு இல்லா நல்ல ஒப்பு அரும் செம்பட்டு ஆடை உடுத்து - விலைமதித்தற்கரிய நல்ல ஒப்பற்ற

செம்மையாகிய பட்டுப் பரிவட்டத்தைத் திருவரையிலே சாத்தி, உயர் கோட்டம் எய்தி - உயர்ச்சிபொருந்திய தீக்ஷாமண்டபத்தை அடைந்து, பெரும் அத்தவிசின் மேல் தென்திசை யதனை நோக்கி அங்கு அழகு உற இருந்தபின்னர் - பெருமைபொருந்திய அவ்வாசனத்தின்மீதே தெற்குத் திக்கை நோக்கி அங்கே யோகாசனமாக வீற்றிருந்தருளியபின்னர் எ—று.

அங்கழகுற வென்பதற்கு அத்தவிசிற் கழகுபொருந்த எனவும், நோக்கப் பட்ட அத்தென்றிசைக் கழகுபொருந்த எனவும் பொருள் கூறினும் பொருந் தும். செப்பென வரையாது கூறினும் கடைந்த நீலரத்தினச் செப்பென் பது ஏற்புழிக் கோடலாற் பெற்றாம். இன்னும் செப்பிள முலை என்பதற்கு ஏனை மகளிர் முலைபோலாகாது என்றும் ஒரே பெற்றியவாய்ச் சாயாத முலையென ஆன்றோர் செப்பும் இளமுலை என்றலும் ஒன்று. (சஅ)

அண்டரு மலர்தூ யேத்து மன்பருந் தூநீ ராடி
வெண்டுகில் புனைந்து நீறு விளங்கிய மெய்ய ராகி
முண்டக மலர்த்தாள் வைத்து முத்திதந் தருள மேனி
கொண்டவர் திருமுன் சென்று குறுகியங் குவகை கூர்ந்து.

இ—ள்: அண்டரும் மலர் தூய் ஏத்தும் அன்பரும் - தேவர்களும் புஷ்பாஞ்சலிசெய்து துதிக்கத்தரும் சிவபத்திமானாகிய திருவாதவூரடிக ளென்னுஞ் சீடரும், தூநீர் ஆடி - சுத்தமாகிய நீரிலே ஸ்நானஞ்செய்து, வெண் துகில் புனைந்து - வெண்மையாகிய இரண்டு வஸ்திரங்களைத் தரித்து, நீறு விளங்கிய மெய்யர் ஆகி - விபூதி பிரகாசிக்கின்ற திருமேனியை யுடை யவராகி, முண்டக மலர்த்தாள் வைத்து முத்தி தந்தருள மேனி கொண்ட வர் திருமுன் குறுகிச் சென்று - செந்தாமரைமலர்போலுந் திருவடிகளைச் சிரசின்மீது சூட்டித் திருவடிதீக்ஷைசெய்து தமக்குப் பாமுத்தி பிரசாதித் தருளும்வண்ணங் குருமூர்த்தங்கொண் டெழுந்தருளிய சிவபெருமானது சந்நிதியிலே அதி சமீபத்திற் சென்று, அங்கு உவகை கூர்ந்து - அங்கே மகிழ்ச்சி மிகுந்து எ—று.

பாவத்திற்குக் கருமையும் சுசியின்மையும், புண்ணியத்திற்கு வெண் மையும் சுசியுண்மையும் இயல்பாகலின், பாவ சம்பந்தமாகிய பிறவிநீக்கத் துப் புண்ணிய சம்பந்தமாகிய வீடுபேற்றைத் தலைப்படுவார்க்கு அவ்வீட் டிற்கு வாயிலாகிய தீக்ஷாகாலத்து வெண்டுகிற்றாரணம் சுசியுடைமைக்கும் சாத்துவிக சம்பந்தத்திற்கும் அறிகுறியாக வேண்டப்படுதலின் வெண்டுகில் புனைந்தென்றும், விபூதிதாரணம் பசுமலநீக்கத்துச் சிவத்துவ விளக்கத் திற்கு அறிகுறியாக வேண்டப்படுதலின் நீறு விளங்கிய மெய்யராகி என் றும், அபிஷேக அருச்சனைகளின்பொருட்டும் திருவடிப்பேற்றின்பொருட் டும் தீக்ஷாகாலத்துக் குருசந்நிதியைச் சீடர் அதி சமீபத்திற் குறுகவேண்டு தலின் மேனிகொண்டவர் திருமுன் சென்றென் றமையாது குறுகியென்றும், தமது பூர்வகால சிந்திதமனோரதம் ஈண்டு நன்கு சித்திக்கப்பெறுதலின்



அதற்கு மிக மகிழ்ந்தென்பார் அங்குவகை கூர்ந்தென்றுங் கூறினார். குறு கல் - அணுகல். சிந்திதம் - சிந்திக்கப்பட்டது. மனோரதம் - மன இச்சை.

விண்ணவ ரதிபன் பொற்றாள் விளக்கியர்ச் சனைமுன் செய்து
தண்ணறும் பனிநீர் தோய்ந்த சாந்தமெய்ம் முழுதுஞ் சாத்தி
வண்ணமென் கழுநீர் மாலை வளம்பெற வணிந்து பின்னர்க்
கண்ணுறு பரிவு தீரக் கண்டுள மகிழ்ச்சி கொண்டு.

இ—ள்: முன் விண்ணவர் அதிபன் பொன் தாள் விளக்கி அர்ச்சனை செய்து - முன்னரே தேவநாயகராகிய சிவபெருமானுடைய பொன்போ லுந் திருவடிகளை அபிஷேகஞ்செய் தருச்சித்து, தண் நறும் பனிநீர் தோய்ந்த சாந்தம் மெய் முழுதுஞ் சாத்தி - தட்பமாகிய நறிய பனிநீர் கலந்த சந்தனக்குழம்பைத் திருமேனி முழுவதுஞ் சாத்தி, வண்ணம் மெல் கழுநீர் மாலை வளம் பெற அணிந்து - அழகிய மிருதுவாகிய செங்கழுநீர் மாலையை அது அழகுபெறத் தரித்து, பின்னர் - அதன்பின்னர், கண் உறு பரிவு தீரக் கண்டு - கண்களைப் பெற்று இதுகாறும் பாதுகாத்த துன்பந் தீரத் தரிசித்து, உளம் மகிழ்ச்சி கொண்டு - அதனான் மனத்திலே பேரா னந்தங் கொண்டு எ—று.

முன்னர் அபிஷேகம் அருச்சனை அலங்காரங்களைச் செய்து முடித்துப் பின்னர்த் தரிசித்து மகிழ்ந்தார் என்பார் முன், பின்னரென இங்ஙனம் பிரித்து விசேடித்தார். தீக்ஷாகாலத்திலே ஞானாசாரியர் செம்பட் டுடுத்துச் செங்கழுநீர்மாலை தரித்தல் வேண்டுமென்பது சிவாகமநூற் றுணிபென்க. ()

பருப்புட னொளி கேரப் பழச்செழுந் துருவல் சேர்த்துச்
சருக்கரை கலந்து பாலிற் சமைத்தநல் லமுது தன்னை
யிருத்திய கனகக் கான்மே லிலங்குபொற் கலத்தின் மீது
விருப்பொடு படைத்து நெய்யு மிக்கமுக் கனியும் பெய்து.

இ—ள்: பருப்பு உடன் செழும் நாளிகேரப் பழத்துருவல் சேர்த்து - பருப்போடு செழுமையாகிய தேங்காய்த்துருவலைச் சேர்த்து, சருக்கரை கலந்து பாலில் சமைத்த நல் அமுது தன்னை - சருக்கரையைக் கலந்து பால் கொண்டு சமைத்த நல்ல திருவமுதை, இருத்திய கனகக் கால்மேல் இலங்கு பொன் கலத்தின்மீது விருப்பொடு படைத்து - வைக்கப்பட்ட சுவர்ண முக்காலியின்மீது விளங்குகின்ற பொற்பாத்திரத்தின்கட் பிரீதியோடு படைத்து, நெய்யும் மிக்க முக்கனியும் பெய்து - அதன்மீது அன்னசுத்தி யாகிய நெய்யையும் முப்பழங்களையும் விநியோகித்து எ—று.

துருவல் ஆகுபெயர். கால் முக்காலி. அது, "பரிகலங்க ளாரின் விளங்கத் திருத்திக் காலிரண்டுபடிய வேற்றுதலும்" என்பதனானு மறிக. காலியைக் காலென்றார் ஆதேயமாகிய பரிகலத்திற்குத் தான் ஆதாரமாய வழி அதனது கால்போன்று நிற்றலினென்க. இக்கருத்துப்பற்றியன்றே

காலியைப் பரிகலக்கா லெனவுங் கூறுப. அது "பரிசுவிளங்கப் போனக முந் திருத்திப் பாவாடையி லேற்றித், தெரியும்வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போ னகமுங் கறியமுதும், வரிசையின் முன் படைத்தெடுத்து மன் னும் பரிகலக் கான்மேல், விரிவெண் டுகிலின் மிசைவைக்க விமலர் பார்த் தங் கருள்செய்வார்" என்பதனானு மறிக. காலி காலையுடையது. சமைத் தற்குப் பால் முக்கியப்பொருளாகலின் அதனை எதுவின்பாற்படுத்திப் பாலிற் சமைத்த என்றும், மகா நைவேத்தியமாகலின் நல்லமுதென்றும், தமது ஆன்மபோதத்தை நிவேதிப்பதாகப் பாவித்துப் படைத்தலின் விருப்பொடு படைத்தென்றும், முக்கனியெனப் பொதுப்படக் கூறினும் வாழைப்பழம் மாம்பழம் பலாப்பழமாகிய அவை தம்மையே சுட்டும் வழக்குவலி மிகுதியும், சுவை மிகுதியு முடைமைபற்றி மிக்க முக்கனியென்றுங் கூறினார். நாளி கேரம் என்பதற்கு உட்டுளையினாலே நீரை இழுப்பதென்பது பொருள். அது "தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத், தலையாலே தான் றருதலால்" என்பதனானு மறிக. (௫௧)

மாலயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன்னா
ளாலமுண் டவனே நல்ல வமுதமுண் டருளா யென்று
சீலமா மகிழ்ச்சி பொங்குஞ் சிந்தையி னுரைப்பக்கால
காலனு முண்டு நீராற் கரமலர் கழீஇய பின்னர்.

இ—ள்: மால் அயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன்னாள் ஆலம் உண்டவனே - அரிபிரமேந்திராதி தேவர்கள் உய்யும்பொருட்டு முன்னோர் காலத்திற் கொடிய ஆலகாலவிஷத்தை யுண்டவரே, நல்ல அமுதம் உண்டருளாய் என்று - இந்த நல்ல திருவமுதை யுண்டருளுமென்று, சீலமா மகிழ்ச்சி பொங்கும் சிந்தையின் உரைப்ப - ஞானசாரசம்பந்தமான பெருமகிழ்ச்சி பொலிகின்ற மனவிருப்பத்தோடு திருவாதவூரடிகள் பிரார்த் திக்க, கால காலனும் உண்டு நீரால் கரமலர் கழீஇய பின்னர் - காலகால ராகிய சிவபெருமானும் திருவமுதுசெய்து நீரினாலே திருக்கைமலர் சுத்தி செய்யப்பெற்ற பின்னர் எ—று.

சிந்தை ஆகுபெயர். ஈண்டுண்ணுதல் திருக்கரத்தாற் பரிசித்தவத்தன் மாத்திரை யல்லது உட்கொள்ள லன்றென்க. அஃது ஈண்டு வாக்குச்சுத்தி கூறாது கரசுத்திமாத்திரையே கூறியதனானும், "மறைநெறி யினையவாற் றுன் மலைமக னுய்த்து மற்றெம், மிறையிவை நுகர்தல்வேண்டு மெனத் தொழ வினிதே யென்னாக், கறைமிட றணிந்த மேலோன் கரத்தினாலவற் றைத் தொட்டாங், குறுபெருங் கருணைசெய்தே யுவந்தனங் கோடியென் றான்" "தொன்மைகொ ளருளி னீராற் றுய்த்தன வாகத் தொட்ட, நின்மல வுணவை" எனப் பிறண்டும் கூறுமாற்றானு மறிக. வேற்றுமை தோன்ற இடையே மற்றையென்னும் இடைச்சொற் பெய்து பிரித்தும், ஒரோவழித் தாமே பரம்பொருளென்று மயங்கிக் கர்விக்கும் விட்டுணு பிரமா முதலிய



தேவர்களும் உய்யும்பொருட்டுக் கொடிய ஆலகாலவிஷத்தை யுண்டருளின சீவகாருண்ணிய சமுத்திரமாகிய தேவரீர் என்றும் மீளா ஏழை அடிமை யாகிய தமியே னுய்யும்பொருட்டு நல்ல திருவமுதை உண்டருளுவது சொல்லவும்வேண்டுமோவெனப் பிரார்த்தித்தார் என்பது தொனிக்க மா லயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன்னா, ளாலமுண்டவனே என இங்ஙனம் விளிதந்துங் கூறினாரென்க. (௫௨)

வெள்ளிலை பழுக்காய் நல்கி விரைதரு தூப தீபங்
கொள்ளுநற் றேசு காட்டிக் கோலநன் னீறு சாத்தித்
தெள்ளொளி விளங்கு மாடி திருந்தமுன் றிகழ்வித் தெங்கு
முள்ளவர் முடிமே லோங்க வொண்குடை கவித்தல் செய்து.

இ—ள்: வெள்ளிலை பழுக்காய் நல்கி - வெற்றிலை பாக்குக்களை நிவே தித்து, விரை தரு தூப தீபம் கொள்ளும் நல் தேசு காட்டி - அகின் முத லிய சுகந்தவர்க்கப் பொடி தூவிய தூபத்தையும் தீபத்தையும் ஞான கஞ் சுக பாவனையாகக் கொள்ளப்படும் நல்ல கர்ப்பூரதீப சோதியையும் திருமுகம் முதலிய அங்கங்கடோறுந் தந்து பிரணவாகிருதியாகச் சுற்றி ஆராதித்து, கோல நல் நீறு சாத்தி - உத்தமாங்கம் முதலிய அவயவங்களிலே அழகிய நல்ல விபூதியைச் சாத்தி, தெள் ஒளி விளங்கும் ஆடி திருந்த முன் திகழ் வித்து - தெளிவாகிய ஒளிவிளங்குங் கண்ணாடியைத் திருத்தமுற அபிமுகத் திற் பிரதிவிம்பித்து, எங்கும் உள்ளவர் முடிமேல் ஓங்க ஒண் குடை கவித் தல் செய்து - சிதசித்துப் பிரபஞ்ச மெங்கும் வியாபகமாகிய சிவபெருமா னது திருமுடிமேல் உயா ஒளிபொருந்திய குடையைக் கவித்து எ—று.

தேஜஸ் - பிரகாசம். (௫௩)

கற்றைவெண் கவரி செம்பொற் காம்புநீ டால வட்டம்
பற்றியன் புடனே வீசிப் பரிவுட னடியார் சூழப்
பொற்றவி சிடையே மேவும் புண்ணியன் றிருமுன் பைம்போ
துற்றகை யுடனே வாத வூரரங் கிருந்த பின்னர்.

இ—ள்: கற்றை வெண் கவரி - தொகுதியாகிய வெள்ளிய சாமரத் தையும், செம்பொன் காம்பு நீடு ஆலவட்டம் அன்பு உடனே பற்றி வீசி - மாற்றுயர்ந்த பொன்மயமாகிய காம்பு நெடிய ஆலவட்டத்தையும் அன்போடு பற்றிப் பணிமாறி, அடியார் பரிவு உடன் சூழப் பொன் தவிசு இடை மேவும் புண்ணியன் திருமுன் - திருத்தொண்டர்கள் அன்போடு திருமருங்கிற் சூழப் பொன்னாசனத்தின்மீது வீற்றிருக்கும் புண்ணியவடிவினராகிய பரமா சாரியாரது திவ்விய மகாசந்நிதியிலே, வாதவூரர் பைம்போது உற்ற கை உடன் அங்கு இருந்த பின்னர் - திருவாதவூரடிகள் பசிய மலர்பொருந்திய திருக்கரத்துடனே அபிமுகத்திற் சுகாசனமாக விருந்தபின்னர் எ—று.

மலர் திருவடி சூட்டும்போது அருச்சித்தற்கென்க. கற்றை ஈண்டு மயிர்த்தொகுதி. (ருச)

மந்திரம் பதங்கள் வன்னம் புவனங்க டத்து வங்க
ளைந்துநற் கலைக ளென்னு மறுவகை யகற்றி யந்தச்
சிந்தனைக் கரிய மேலைச் சிவத்துட னறிவு சேரப்
பந்தனை யொழிவார் தம்மேற் பரிந்தருட் பார்வை செய்து.

இ—ள்: தவப்பெரு வடிவங் கொண்டார் - நங்கவிநாயகராகிய திருவாதவூரடிகளது அனந்தகோடி பூர்வசன்ம தவத்தானே மிகு மகத்துவம் பொருந்திய ஞானதேசிகத் திருமேனிகொண் டெழுந்தருளிய கைலாசபதியாகிய பரமாசாரியரானவர், மந்திரம் பதங்கள் வன்னம் புவனங்கள் தத்துவங்கள் ஐந்து நல் கலைகள் என்னும் அறுவகை அகற்றி - மந்திராத்துவா பதாத்துவா வர்ணாத்துவா புவனாத்துவா தத்துவாத்துவா நல்ல பஞ்சகலாத்துவா என்னும் சடத்துவாக்களினுங் கட்டுப்பட்டிருக்கின்ற போகங்களனைத்தையும் ஏககாலத்திலே புசிப்பித்துத் தொலைத்தலாகிய அத்துவசுத்தியைச் செய்து, சிந்தனைக்கு அரிய சிவத்துடன் அந்த அறிவு மேலைச் சேர - மனாதீதமாகிய சிவசைதன்னியத்தோடு அந்த ஆன்ம சைதன்னியம் துவாதசாந்தபரியந்தம் பொருந்த யோசித்து, பந்தனை ஒழிவார் தம்மேல் பரிந்து அருட்பார்வை செய்து - பாசக்கட்டவிழும் பக்குவராகிய அச்சீடர்மீது அன்புகூர்ந்து கிருபாநோக்கஞ் செய்தலாகிய சக்ஷுதீக்ஷையைச் செய்தருளி எ—று.

வினைமுதல் வருஞ் செய்யுளினின்றும் வருவிக்கப்பட்டது. தவத்தாலென மூன்றாவது விரிக்க. அகற்றிச் செய்தென முடிக்க. தவப்பெரு வடிவமென விசேடித்தார் ஞானதேசிகமூர்த்த மென்பது விளக்குதற் பொருட்டு. சடத்துவா-ஆறத்துவா. அத்துவா-வழி. இவற்றுள் மந்திரம் பதினொன்றும், பதங்கள் எண்பத்தொன்றும், வன்னங்கள் ஐம்பத்தொன்றும், புவனங்கள் இருநூற்றிருபத்துநான்கும், தத்துவங்கள் முப்பத்தாறும், கலைகள் ஐந்துமென வறிக. அது "வய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்க ளெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத்தொன்றாகு, மாய்ந்தபுர மிருநூற்றே டிருபத்து நாலா மறிதருதத் துவமுப்பத் தாறுகலை யைந்தே" என்பதனானறிக. பதினொரு மந்திரங்கள் ஈசான மந்திரம் முதல் அஸ்திர மந்திரம் ஈறாயின. எண்பத்தொரு பதங்கள் பிரணவாதி பிரணவாந்தமாகிய ஓம், வியோம வியாபினே என்பன முதல் ஓம் சிவாய நமோ நம: ஓம் என்பன ஈறாயின. ஐம்பத்தோரக்ஷரங்கள் அகாரம் முதல் க்ஷகாரம் ஈறாயின. இருநூற்றிருபத்துநான்கு புவனங்கள் காலாக்கினி புவனம் முதல் அநாசிருதா புவனம் ஈறாயின. முப்பத்தாறு தத்துவங்கள் பிருதுவிதத்துவ முதற் சிவதத்துவம் ஈறாயின. பஞ்சகலைகள் நிவிர்த்திகலைமுதற் சாந்தியதீதாகலை ஈறாயின. பதினான்கு பிறத்து யோனிகளினுற்பத்தியை நிவிர்த்தி செய்து சமுசாரபந்தத்தில் வெறுப்பையுண்டாக்கி ஆன்மாவுக்கு மோக்ஷத்தில் உன்முகஞ்செய்தலால் நிவிர்த்திகலை எனவும், இடையறாத தியானத்தான் அநுக்கிரகிக்கப்பட்டு, மோக்ஷத்தில் உன்முகமான ஆன்மாவைக் கீழ்த்துவாவிற் சமுசாரபந்தத்தைத் தடுத்து நிறுத்துதலாற் பிரதிட்டாகலை எனவும் மூவகை விடயமாகிய வாசகஞானத்தை விடுத்து (ப்பாரிசேஷத்தாற்) சாட்சாத்காரமான அசேஷபதார்த்த ஞானத்தை விளக்குதலால் வித்தியாகலையெனவும், ஆன்மாவுக்கு எல்லாத் துக்கங்களினும் சாந்தியைச் செய்தலாற் சாந்திகலை எனவும், இவைகளையெல்லாங் கீழ்ப்படுத்து ஆன்மாவை மேலே செலுத்துதலாற் சாந்தியதீதாகலை எனவும் பெயராயின. இம்மந்திரம் முதலிய ஆறத்துவாக்களுள் முன் மூன்றும் சொல்வடிவமும் பின் மூன்றும் பொருள்வடிவமுமாகி, ஆன்மாக்கள் இருவினைப்பயன்களை நுகர்தற்கு இவை ஏதுவாமென்பதூஉம் பிறவும் "சிவத்துக்குமே லில்லைத் தெய்வம் சிவஞான, சித்திக்குமே லில்லை நூல்" என ஆன்றோ ரெடுத்தேத்தும் சிவஞானசித்தியார் முதலிய விரிந்த ஞானநூல்களுட் காண்க. அசுத்தம் மிச்சிரம் சுத்தமென்னும் மூவகை யத்துவாக்களும் இங்ஙன மைவகைப்பட்டு ஒன்றினொன்று வியாத்தியாய் முறையானே பஞ்சகலைகளு ளடங்குதலின், அவ்விசேடம்பற்றிக் கலைகளை நற்கலைகளென்றார். வியாத்தி சமநிறைவு. மந்திரம் என்பதற்கு நினைப்பவனைக் காப்பதென்பது பொருள். பதினான்கு பிறத்தி யோனிகள் மிருகம் முதற் றாவரம் ஈறாகிய வைந்தும், மானுஷியமொன்றும், பைசாசமுதற் பிரமா ஈறாய எட்டுமாம். உன்முகம் மேன்முகம். மூவகை விடயம்: ஆத்தவிடயம், சத்தவிடயம், கெம்மியவிடயமென்பன. சாட்சாத்காரம் பிரத்தியக்ஷம். அசேஷபதார்த்தம் சேஷியாத பதார்த்தம். சேஷித்தல் - விஞ்சுதல். அத்துவசுத்தியாவது இவ்வாறத்துவாக்களினும் கட்டுப்பட்டிருக்கின்ற போகங்களையெல்லாம் ஏககாலத்திலே புசிப்பித்துத் தொலைத்து மோக்ஷத்தைக் கொடுத்தலாம். இதுவே நிர்வாணதீக்ஷை எனப்படும். நிர்வாணம் - மோக்ஷம். சட்சுதீக்ஷையாவது மாந்திரிகன் பாம்பினாற் கடிக்கப்பட்டவனைக் கருடபாவனையினாலே பார்த்து விஷந் தீர்த்தல்போல ஆசாரியர் சீடனைச் சிவபாவனையினாலே பார்த்துப் பாசவிமோசனஞ் செய்தலாம். அந்தச் சிந்தனைக் கரிய மேலைச் சிவத்துடனறிவு சேர என்பதனான் மானசதீக்ஷை கூறப்பட்டது. மானசதீக்ஷையாவது ஆசாரியர் தமது இரேசகவாயுவினாலே புறப்பட்டுச் சீடனுடைய பூரக வாயுவினாலே அவனுடைய இருதயத்திற் பிரவேசித்துச் சீடசைதன்னியத்தை வாங்கித் துவாதசாந்தபரியந்தம் பிராசாதோச்சாரண சகிதமாகக் கொண்டுபோய்ப் பின்பு தம்முடைய இருதயத்திலே சிவசைதன்னியத்துடன் கலந்ததாகப் பாவித்துப் பின்னர் அச்சீடசைதன்னியத்தைச் சீடதேகத்திலே பிரதிட்டை செய்தலாம். யோசித்தல் - சேர்த்தல். சைதன்னியம் - அறிவு. கலை - ஏவுவிப்பது; போக்குவது. (ருரு)

எவர்க்குமெய்ஞ் ஞான மாமஞ் செழுத்தையு முணர்த்த வேண்டி
யவத்தொழி லகற்றி யாளுஞ் சிவத்தைமுன் னாக மாறித்
தவப்பெரு வடிவங் கொண்டார் தண்டமிழ் பாடு மன்பர்
செவிப்புலன் வழியே சிந்தை யுறத்திரு வாய்ம லர்ந்தார்.

இ—ள்: தவப்பெரு வடிவங் கொண்டார் - பரமாசாரியர் அதன்பின்னர், எவர்க்கும் மெய்ஞ்ஞானம் ஆம் அஞ்செழுத்தையும் உணர்த்தவேண்டி - எவர்கட்கும் மெய்ஞ்ஞானத்தைத் தரும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உபதேசித்தலாகிய வாசிக தீக்கைசெய்யத் திருவுளங்கொண்டு, அவத்தொழில் அகற்றி - சூக்குமபஞ்சாக்கரத்திலே இறுதிக்கண்ணிற்கும் கேட்டைத்தரும் திரோதாயியக்கரமாகிய நகரத்தையும் மலவக்கரமாகிய மகரத்தையும் நீக்கி, ஆளும் சிவத்தை - யகரவக்கரப் பொருளாகிய ஆன்மாவை அடிமைகொண்டருளும் பதியக்கரமாகிய சிகரத்தையும் பரையக்கரமாகிய வகரத்தையும், முன் ஆக மாறி - அவ்யகரத்துக்கு முன்னாக அம்முறை மாறி, தண் தமிழ் பாடும் அன்பர் செவிப்புலன் வழியே சிந்தை உற - தண்ணிய தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் பாடியருளும் சமயாசாரியராகிய அத்திருவாதவூரடிகளது செவிப்புலனாகிய சத்தவிடயத்தின் வழியே மனஞ் சென் றொடுங்க, திருவாய் மலர்ந்தார் - உபதேசித்தருளினார் எ—று.

மெய்ஞ்ஞானமா மஞ்செழுத்தென்றது காரிய காரண வுபசாரம். ஈண்டஞ்செழுத் தென்றது சூக்குமபஞ்சாக்கரத்தை. அது, "சூக்கமாகு மைந் தெழுத்தினிற் சுற்றிய பாச, வீக்கநீக்கிமெய் யானந்தம் விளைநிலத் துய்த் துப், போக்கு மீட்சியுட் புறம்பிலாப் பூரணவடிவ, மாக்கினுமொரு தீபகம் போல்வரு மண்ணல்" என்பதனானு மறிக. அவம் கேடு; என்றது சனன மரணங்களை. தொழில் ஆகுபெயர். அகற்றி மாறி என முடிக்க. ஆளு மென்பது சிவத்திற்கடை. சிவத்தை என்றது சிகர வகரங்களை. ஈண்டு முன் என்றது இடமுன்னை. மாறுதல் அந்நகர மகரங்களின்று நீங்கிய இடத்திலே சிகர வகரங்களை அம்முறை மாறிநிற்கச் செய்தலாம். அது, "பொருளரு ளான்மாப் பொருந்திடுந் திரோதை, மருவிரு மலமாய் வயங்கு மைந் தெழுத்திற், றிரோதையு மலமுந் தீர்த்ததனிடத்தில், வரோதையமான வாசியை நிறுவி, வளம்பொலி சிவாய வாசியென் றுளத்தில், விளம்புக நின்னை விளக்குமா னந்த முத்தியைந் தெழுத்து மொழிந்தன மிதனைச், சித்தசாந்தியினிற் செப்பென மொழிந்தான்" என்பதனானு மறிக. இருதலைமாணிக்க மென்பதும் முத்திபஞ்சாக்கரமென்பது மிதுவே. வாசிக தீக்கையாவது வருணாச்சிரமாநுகுணமாகப் பதினொரு மந்திரத்தோடு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உபதேசித்தலாம். மூவகை யான்மாக்கட் கெல்லாம் மெய்ஞ் ஞானத்தைக் கொடுப்பது ஸ்ரீபஞ்சாக்கரமே யென்பார், எவர்க்கு மெய்ஞ் ஞானமா மஞ்செழுத்தென்றும், செவிக் கின்பஞ் செய்யுந் தமிழென்பார் தண்டமிழென்றும், மனம் மற்றை விடயங்களின் வழி யன்றிச் சத்த விடயத்தின் வழியே சென் றொடுங்க உபதேசித்தார் என்பார் செவிப்புலன் வழியே சிந்தை யுறத் திருவாய்மலர்ந்தார் என்றுங் கூறினார். ஈண்டுக்கூறிய



ஸ்ரீபஞ்சாக்கரத்தின் அக்கரமாறுதலை அறியும் அறிவுமதுகை யுடையரல்லாதார் சிவத்தை முன்னாகமாறி யவத்தொழில்அகற்றி என அந்நுவயஞ்செய்து அதற்கேற்பப் பொருளுரைப்பாரும், ஆற்றொழுக்காக வைத்துப் பொருள் கொள்ளுங்காலும் அவத்தொழிலை நீக்கி யடிமைகொள்ளுகின்ற சிவ என்பதனை முன்னிற்கும்படி மாறி என வுரைப்பாருமாய் விஷயஞானரகிதராய்த் தமக்கது இவ்வுரை வாயிலாகத்தானும் புலனாகாமையை வெளிப்படுத்துவர்.

வேறு.

விரவு மன்பொரு வடிவுகொண் டணைவார்
விழித்த பார்வையின் விளக்கின்முன் னிருள்போற்
சுருதி செந்தமி ழாக்கிய மொழியார்
தொலைவி லாதவெந் துயர்ப்பவ மொழிந்து
பரவி மென்பதம் பணிபவர் படிமேற்
படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர் பரிவான்
மருவு மிங்கிவர் சென்னியி லிருதாள்
மகிழ வைத்தனர் மதிநதி முடிப்பார்.

இ—ள்: விரவும் அன்பு ஒரு வடிவு கொண்டு அணைவார் விழித்த பார்வையின் - திருவாதவூரடிகளிடத்துப் பொருந்திய திருவருளையே தமக்கோர் வடிவமாகக் கொண் டெழுந்தருளிய பரமாசாரியர் செய்த சாக்ஷுஷதீக்ஷையினாலே, சுருதி செந்தமிழ் ஆக்கிய மொழியார் தொலைவு இலாத வெம் துயர்ப்பவம் விளக்கின் முன் இருள்போல் ஒழிந்து - வடமொழி வேதத்தைத் தென்மொழி வேதமாக்கும் மாணிக்கவாசகசுவாமிகள் இதுகாறுந் தம்மை விட்டுநீங்காத கொடிய துன்பத்தைத் தரும் பிறவி இதுபொழுது விளக்கின் முன் னிருள்போல விட்டு நீங்கப்பெற்று, பரவி மெல் பதம் பணிபவர் படிமேல் படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர் - துதித்து மென்மையாகிய திருவடிகளை வணங்குபவர் பூமியிலே எட்டுறுப்புந் தோயச் சந்நிதியில் வீழ்ந்து நமஸ்கரித்துப் பெரு வாழ்வை அடைந்தனர், மதி நதி முடிப்பார் மருவும் இங்கிவர் சென்னியில் இருதாள் மகிழப் பரிவால் வைத்தனர் - அதுபொழுது அக்குருமூர்த்திகள் தீவிரதர பக்குவம் பொருந்திய இவ்வடிகளது சிரசிலே தம்முடைய ஞானசத்தி கிரியாசத்திகளாகிய இரண்டு திருவடிகளையும் அவர் மனமகிழுமாறு ஆதாரவோடு சூட்டுதலாகிய திருவடி தீக்ஷை செய்தருளினார் எ—று.

உவமை பிறவி தானே ஒழிதற் கெடுத்துக்காட்டப் பட்டது. இங்கிவர் ஒரு சொல். ஆக்கிய என்பது காலமயக்கம். இஃதறியாதார் கவிகூற் றென்பர். இருதாள்களுமென்னு முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. அன்பின் முதிர்ச்சியாகிய அருள், ஈண்டுக் காரணகாரிய ஒற்றுமைபற்றி அன்பென உபசரித்துக் கூறப்பட்டது. நமஸ்காரவிதியை "வலஞ்செய்து தண்டதனை மானவிதி வழி தழுவத் தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகாமற் றிருகன்னந் — தலங்குமுகம் வாய்புயங்க ளனுமெட்டுந் தோயமயி—ரிலங்கு

சிரங் காமுழந்தா ளொனுமைந்து மியைந்திடவே" என்பதனுனும், "சிரங் கா முழந்தாண் மண்ணைத் திண்டிற் பஞ்சாங்கமாகுஞ் சிரந்தனிற் கரங்கள் கூப்பிற் றிரிவித வங்கமாகுஞ், சிரந்தனைத் தாழ்த்து நிற்கை தேரினேகாங்க மாகும், வரம் பெறு மெட்டு மைந்து மத்திம மூன்றே கம்பின்" என்பத னுனுமறிக. திருவாதவூரடிகளுக்குப் பரமாசாரியர் திருவடிதீக்ஷை செய் தருளினமையை "இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே, துணை யான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தே, னணையார் புனற்றில்லை யம் பலத்தே யாடுகின்ற, புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ" என்றற் றொடக்கத்தனவாக வரும் அவ்வடிக டிருவாக்குக்களானு மறிக. இத்திருவடி தீக்ஷையே மூலமலமாகிய ஆணவமல சத்தியைக் குன்றுவித்து முத்தி பயத்தற்கண் மிகவும் சிறப்புடைத்தென்க. சுருதியெனப் பொது வகையாற் கூறினும் ஈண்டுத் தலைமை பற்றிப் பிரபல சுருதியாகிய உப நிஷத்துக்களையே எற்புழிக் கோடலாற் கொள்ளப்படுமென்க. இது எண் சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம். (௬௭)

மன்னு முன்னுள வுயிர்க்கர ணங்கள்
மாய்ந்து பொய்ம்முத லறிவிழந் தருளாற்
றுன்னு மின்னருட் சிவகர ணங்க
டோன்ற லாற்சுக வறிவதிற் றோன்றிச்
சென்னி யின்மிசை மேவிய பாதந்
திருந்து கண்ணிணை சேர்த்திரு கரத்தா
லுன்னல் செய்திடு மிதயமே லணைவித்
துவகை கூர்ந்துமெய் யுணர்ச்சியி னெழுந்தார்.

இ—ள்: மன்னும் முன் உள உயிர்க் கரணங்கள் மாய்ந்து - மிக வும் முன்னுள்ள பசுகரணங்கள் தந்தன்மை மறையப் பெற்றும், முதல் பொய் அறிவு இழந்து - பழைய மித்தியா ஞானமாகிய சந்தேக விபரீதங் கள் தவிரப்பெற்றும், அருளால் இன் அருள் துன்னும் சிவ கரணங்கள் தோன்றலால் - திருவருளினலே இனிய சிற்சத்தி பதியுஞ் சிவகரணங்களா கத் தோன்றுதலினலே, சுக அறிவு அதில் தோன்றி - கைவல்லிய சுகத் தைத் தரும் சிவஞானம் அக்கரணங்களினின்றுந் தோன்றப்பெற்று, சென் னியின் மிசை மேவிய பாதம் இரு கரத்தால் திருந்து இணை கண் சேர்த்து- சிரசிற் பொருந்திய திருவடிகளை இரண்டு கைகளினலுந் திருந்திய இரு கண்களினு மொற்றி, உன்னல் செய்திடும் இதயமேல் அணைவித்து - தியானித்தற் கருவியாகிய இருதய ஸ்தானமாயுள்ள மார்பிலணைத்து, உவகை கூர்ந்து மெய் உணர்ச்சியின் எழுந்தார் - திருவாதவூரடிகள் சிவா னந்தக் களிகூர்ந்து திருவடி ஞானத்தோ டெழுந்தார் எ—று.

சிவகரணங்க டோன்றலால் என்புழி ஆக்கச்சொற் றொக்கது. மாய் தல் - மறைதல்; ஈண்டுத் திரிதன்மேற்று. இதயம் ஆகுபெயர். ஈண்டுக் கர



ணங்களாவன அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் என் பன. இவை, நானே பிரமமென்னும் பசுஞானத்தோடு கூடிய வழிப் பசு கரணங்களாயும், உண்மைச் சிவோகம் பாவனைபற்றி நிகழும் சிவஞானத் தோடு கூடியவழிச் சிவகரணங்களாகியுந் தன்மை திரிவனவென்க. அது "பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங், காலனையன் றேவிக் கராங்கொண்ட - பாலன், மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங், கா ணம்போ லல்லாமை காண்" என்பதனுள்ளுங் குறிப்பிக்கப்பட்டவாற்று னுய்த்துணர்க. கரணம் ஈண்டு விசேடகருவி. பசுகரணங்கள் அநாதியே சூக்குமதேகமாய்ச் சகசித்துள்ளனவாகலின் முன்னுளவென் றமையாது மன்னு முன்னுள வுயிர்க்கரணமென்றும், அவை திரியுந் தன்மையவாகலின் மாய்ந்தென்றும், திரிதலாவது பழைய மித்தியாஞானத்தை யொழிவதாக லிற் பொய்ம்முத லறிவிழந் தென்றும், சிவகரணங்களாதலாவது சிற்சத்தி பதிதலாகலின் றுன்னுமின்னருட் சிவகரணங்க டோன்றலா னென்றும், அச்சிற்சத்தியே நிரதிசயவின்ப சுகத்திற்குக் காரணமாதலின் சுகவறிவ திற் றோன்றியென்றும், திருவடிகள் ஒற்றப் பெறுதற்குரிய தவத்தாற் றிருந்திய கண்ணென்பார் திருந்து கண்ணென்றும், அத்திருவடிகளின் அருமை விளக்குவார் கண்ணிணை சேர்த்தென்றும், அத்திருவடிகள் அகத் தே தியானிக்கப்படு பொருளா யிருத்தலைப் புறத்தே குறிப்பிப்பார் உன் னல் செய்திடு மிதயமே லணைவித்தென்றும், பண்டைநினைவு நினைந்த வாறே ஈண்டுச் சித்தித்தமையின் மிக மகிழ்ந்தார் என்பார் உவகை கூர்ந் தென்றும், அத்திருவடி ஞானமயமாய் எழுந்தாரென்பார் மெய்யுணர்ச்சியி னெழுந்தார் என்றுங்கூறினர். அருமைபற்றிக் கண்ணினும் ஆசைபற்றி மார் பினுங் கொள்ளப்பட்டனவென வேற்றுமை தெரித்துக் கூறுவார் அவ் வேறுபாடு தோன்றத் திருந்துகண்ணிணை சேர்த்தென்றும், இதயமேலணை வித்தென்றும் கூறினர் எனக் கோடலுமா மென்க. பாத மிருகரத்தாற் கண்ணிணை சேர்த்தென்பதனனே அக்கரம் முன்னர்த் தாங்கிய மலர் ஈண் டருச்சிக்கப்பட் டொழிந்தமையும் பெறப்பட்டதென்க. (௬௮)

மேலை யத்தலத் திந்திர னிமையோர்
மீதெ லாம்பொழி விரைமலர் மழையே
போல வித்தலம் புதையவந் துதிரப்
பூதருங்கண நாதரும் புகழச்
சால நற்குணம் புனையுநல் லடியார்
தங்கள் செங்கையி லொலியனுஞ் சயங்கு
மால வட்டமுங் கவரியு மிருபா
லசைய மாமுனிக் கணமடி வணங்க.

இ—ள்: மேலைய தலத்து இந்திரன் இமையோர் மீது பொழி விரை மலர் எலாம் - அத்தருணத்து மேலுலகின் கண் வசிக்கும் இந்திரன் முத

லிய தேவர்கள் ஆகாயத்திலிருந் திறைக்கும் வாசனைபொருந்திய பூக்களெல்லாம், மழையேபோல இத்தலம் புதைய வந்து உதிர - விடாமழையேபோலத் திருப்பெருந்துறையென்னு மிந்தச் சிவஸ்தலம் மறையும்படி வந்திறவும், பூதருங் கணநாதரும் புகழ - பூதர்களும் கணநாதர்களும் புகழவும், சால நல் குணம் புனையும் நல் அடியார் தங்கள் செம் கையில் ஒலியலும் தயங்கும் ஆலவட்டமும் கவரியும் இருபால் அசைய - மிகவும் நற்குணங்களைத் தமக்கணிகலமாக மேற்கொள்ளும் நல்ல திருத்தொண்டர்களுடைய சிவந்த கைகளிலுள்ள பீலிக்குச்சங்களும் பிரகாசிக்கின்ற ஆலவட்டங்களும் சாமரங்களு மிருபக்கங்களினும் இரட்டப்படவும், மாமுனிக் கணம் அடி வணங்க - முனிபுங்கவர்களது கூட்டங்கள் திருவடிகளை வணங்கவும் எ—று.

இனி மேலையத்தலமென்பதை மேலை அத்தலம் எனக் கண்ணழித்து அகரம் பண்டறிசுட்டெனப் பொருளுரைத்தலுமொன்று. உதிரவும், புகழவும், அசையவும், வணங்கவும், இருந்த என வருஞ்செய்யுளில் முடிக்க. நற்குணம் சாத்துவிககுணம். அவை ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறியடக்கம் என்பன. சாலநற்குணம் சாத்துவிகத்திற் சாத்துவிக குணம். (௫௯)

இருந்த வப்பெருங் கருணைய னெதிரே
  யெய்தி யன்புடை யியல்பின ரிறைஞ்சிச்
சிரந்த னிற்றம திருகரங் குவியாச்
  சிறந்தபேரரு ணிறைந்தசிந் தையராய்
வருந்தி யித்தல மகழ்ந்துமேற் பறந்து
  மால யன்றொழ வரியநீ யடியே
னருந்து யர்ப்பவ மகற்றவிங் குருவ
  மாவ தேயென வழுதுநெஞ் சழிந்தார்.

இ—ள்: இருந்த அப் பெருங் கருணையன் எதிரே அன்பு உடை இயல்பினர் எய்தி இறைஞ்சி - வீற்றிருக்கின்ற அந்தப் பரமகருணாநிதியாகிய பரமாசாரியரது சந்நிதியிலே இயற்கையன்புடைய திருவாதவூரடிகள் வலம் வந்து வணங்கி, தமது சிரந்தனில் இரு கரங் குவியா - தம்முடைய சிரசிலே இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிட்டு, சிறந்த பேர் அருள் நிறைந்த சிந்தையர் ஆய் - சீரிய பெரிய திருவருணிறைந்த மனத்தையுடையராகி, மால் அயன் வருந்தி இத்தலம் அகழ்ந்தும் மேல் பறந்தும் தொழ அரிய நீ - விஷ்ணுவும் பிரமாவும் முறையே பன்றியு மன்னமுமாகி வருத்தமுற்று இப்பூமியை அகழ்ந்தும் ஆகாயத்திற் பறந்தும் அடிமுடிகளைத் தரிசித்து வழிபடுதற்கரிய பெருந்தகைமை யுடைய தேவரீர், அடியேன் அருந்துயர்ப்பவம் அகற்ற இங்கு உருவம் ஆவதே என அழுது நெஞ்சு அழிந்தார் - புழுத்த நாயினுங் கடையேனாகிய தமியேனது நீக்கு



தற்கரிய பிறவியை நீக்கும்பொருட்டு மானுடச் சட்டை சாத்திக் குருமூர்த்தங்கொண்டு இங்கெழுந்தருளுவதா ஐயையோ இஃதென்னை தகவின்மையென்று பிரலாபித்து மனோலயமடைந்தார் எ—று.

எதிரே யிறைஞ்சியென வியையும். ஐயையோ இஃதென்னை தகவின்மை என்பதிசையெச்சம். மார்ச்சார சம்பந்தமாக வந்து தமக்கு உபகரித்தருளிய உயர்வொப்பற்ற நன்றியை முழுவதும் சிந்திக்கும் மனத்தராயென்பார் சிறந்த பேருரு ணிறைந்த சிந்தையராயென்றும், எத்துணையும் பெரிய தேவரீர் எத்துணையுஞ் சிறிய தமியேனையுமொரு பொருட்படுத்துப் பிறவி நீக்கத்தின் பொருட்டு மானுடச்சட்டை சாத்திக் குருவடிவங்கொண் டெளிவந்து வெளிவந்தருளினமை அடியேன் வாயினாற் சொல்லுந்தரமன்றெனப் பரிதபித் திரங்கிச் சித்தவிருத்தி யொடுங்கினாரென்பார் 'வருந்தி யித்தல மகழ்ந்து மேற் பறந்து மாலயன் றொழ வரியநீ யடியே னருந்துயர்ப் பவமகற்ற விங் குருவ மாவதே யென வழுதுநெஞ் சழிந்தார்' என்றுங் கூறினார். மனோலயம் - மனவொடுக்கம். இங்கென்பது இடஞ்சுட்டிமொழிதல். ஈண்டுப் பரவசமின்மையின், குவிய என்னும் பாடம் போலிப்பாடமென்றொழிக. (௬௦)

ஐயனேயெனை யாண்டருள் புரியு
  மாதி யேயுழை யணிமழு விருக்குங்
கைய னேகொடுங் காலனை முனியுங்
  கால னேயிரு கண்ணினுண் மணியே
செய்ய னேயடி போற்றியென் பெரிய
  செல்வ மேயடி போற்றிபொய் யினர்தம்
பொய்ய னேயடி போற்றியெவ் வுயிர்க்கும்
  போத மேயடி போற்றியென் றழுதார்.

இ—ள்: ஐயனே - பரமபிதாவே, எனை ஆண்டு அருள் புரியும் ஆதியே - தமியேனை அடிமைக்கொண் டநுக்கிரகஞ் செய்தருளும் முதல்வரே, உழை அணி மழு இருக்கும் கையனே - தாருகாவனத் திருடிகள் அபிசார வோமாக்கினியினின்று மெழுப்பிக் கொல்லும்பொருட் டனுப்பிய மானும் மழுவுந் தங்கிய திருக்கரங்களை யுடையவரே, கொடும் காலனை முனியும் காலனே - கொடிய யமனை வெகுண் டுதைத்த திருவடியை யுடையவரே, (என்) இரு கண்ணின் உள் மணியே - எனதிரு கண்மணியா யுள்ளவரே, செய்யனே அடி போற்றி - சிவந்த திருமேனியை யுடையவரே தேவரீருடைய திருவடிகள் அடியேனாற் றுதிக்கற்பாலன, என் பெரிய செல்வமே அடி போற்றி - எனது பெருஞ் செல்வமாயுள்ளவரே தேவரீருடைய திருவடிகள் அடியேனாற் றுதிக்கற்பாலன, பொய்யினர்தம் பொய்யனே அடி போற்றி - நாஸ்திகருக்கு நாஸ்திகராயுள்ளவரே தேவரீருடைய திருவடிகள் அடியேனாற் றுதிக்கற்பாலன, எவ்வுயிர்க்கும் போதமே அடி போற்றி

என்று அழுதார் - சர்வான்மாக்கட்கும் அறிவுக்கறிவா யுள்ளவரே தேவரீருடைய திருவடிகள் அடியேனுற் றுதிக்கற்பாலனவென்று திருவாதவூரடிகள் புலம்பினுர் எ—று.

முனியுமென்பது காரணகாரிய வுபசாரம். பொய்யினர்தம் பொய்யனெனவே மெய்யினர்தம் மெய்யனென்பதூஉம் பெற்ரும். அது "மையமர் கண்டனை வானநாடர் மருந்தினை மாணிக்கக் கூத்தன்றன்னை, மையனையையர்பிரானை நம்மை யகப்படுத் தாட்கொண் டருமை காட்டும், பொய்யர்தம் பொய்யனை மெய்யர் மெய்யைப் போதரிக் கண்ணிணைப் பொற்றொடித்தோட், பையரவல்குன் மடந்தை நல்லீர் பாடிப்பொற் சுண்ண மிடித்தும் நாமே" என்றற் றொடக்கத்தனவாக வரும் திருவாக்குக்களானு முணர்க. மெய்யினர் - ஆத்திகர். பொய்யினர் - நாத்திகர். ஆத்திகராவார்: கடவுளும் புண்ணிய பாவங்களும் சுவர்க்க நரகங்களும் இவைபோல்வன பிறவும் உண்டென்போர். நாத்திகராவார் அவையில்லை யென்போர். அது "பொன்னுலகம் வெந்நரகம் புண்ணியபா வம்புரிவார், நின்மலனு முண்டென்று நிச்சயித்தா—ரிந்நிலைமை, யாத்திகரே யார்கண்டா ரம்மைப் பலனென்பார், நாத்திகரென் றேயுளத்து ணுடு" என்பதனுனு முணர்க. இனிப் பொய்யினர்தம் பொய்யனென்பதற்குப் பொய்ச்சமயிகட்கு அவர் கற்பித்துக் கூறுங் கடவுளாய் நிற்பவரெனப் பொருள் கூறுதலுமொன்று. தீநெறிக்க ணீக்கி நன்னெறிக்கட் செலுத்துங் கண்மணிகளைப் போலப் பிறவிநெறிக்க ணீக்கி முத்தி நெறிக்கட் செலுத்தலின் இரு கண்ணினுண்மணியே யென்றும், சிற்றின்பத்துக் கேதுவாகிய பொருட் செல்வம் போலன்றிப் பேரின்பத்துக் கேதுவாகலின் செல்வமென வாளாகூருது என் பெரிய செல்வமே யென்றும், தூலசித்தாகிய ஆன்மாக்களுக்குச் சூக்கும அதிசூக்கும சித்தாய் நின்றறிவை விளக்குதலின் எவ்வுயிர்க்கும் போதமே என்றுங் கூறினுர். (சுக)

அற்றை ஞான்றிருள் வைகறை யெனும்போ
 தணைத லும்பர னருட்குரு வடிவந்
துற்ற சாந்துடன் முயங்குசெங் கழுநீர்த்
 தொடைய லின்சுமை பொருதெனத் துளங்கிக்
கற்றைமான்கரத் தேந்திய விறைவன்
 கவின்கொண் மார்பணி மலர்த்தொடை கழித்தங்
குற்ற வான்றுய ரகன்றுநல் லடியா
 ருடன்வி ளங்கினர் களங்கமொன் றில்லார்.

இ—ள்: அற்றை ஞான்று இருள் வைகறை எனும்போது அணைதலும் - அத்தினத் திருள்கழிகின்ற புலரிக்காலஞ் சமீபித்தலும், களங்கம் ஒன்று இல்லார் - காம வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களுள் ஒரு குற்றமு மில்லாத திருவாதவூரடிகள், பரன் அருள் குருவடிவம் துற்ற சாந்து உடன் முயங்கு செங்கழுநீர்த் தொடையலின் சுமை பொருது எனத் துளங்கி - சிவபெருமானது சத்திகாரியமாகிய தேசிகத்திருமேனியானது செறியப் பூசிய சந்தனக்குழம்போடு புரளுகின்ற செங்கழுநீர்மாலையினது பாரத்தைத் தாங்கமாட்டாதென்று மனம் விதிர்விதிர்த்து, கற்று மான் காத்து எந்திய இறைவன் கவின்கொள் மார்பு அணி மலர்த் தொடை கழித்து - மான்கன்றைத் திருக்காத்திலே தாங்கிய அச்சிவபெருமானது அழகு பொருந்திய திருமார்பிலணிந்த பூமாலையைக் கழித்து, அங்கு உற்றவான் துயர் அகன்று - அங்ஙனம் பொருந்திய பெரிய மனவருத்தத்தை ஒழிந்து, அடியார் உடன் விளங்கினர் - திருத்தொண்டர்களோடு கூடி விளங்கினுர் எ—று.

அன்று கன்று என்னும் மென்றொடர்க் குற்றியலுகர மொழிகள் அல்வழிப் புணர்ச்சிக்கண் முறையே அற்று கற்று என வன்றொடர்க் குற்றியலுகரமொழிகளாயின; "மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்றெல்லாம், வல்லொற்றிறுதி கிளையொற்ருகும்" என்பதனுற்கொள்க. அற்றை ஞான்றென்பது அன்ருகிய ஞான்றெனப் பண்புத்தொகை. ஐ சாரியை. கற்றுமானென்பதுமது. இதனை முன் பின்னுகத் தொக்க ஆரும் வேற்றுமைத் தொகையாய் அல்வழியுள் அடங்காவழியென்பாருமுளர். அற்றைநாட் பொழுது தன்னெல்லையோடு கழிந்தறுதலின் விடியல் வைகறை யெனப்பட்டதென்பார் அற்றைஞான்றிருள் வைகறை யெனும்போதென்றும், சாந்துடன் முயங்குசெங் கழுநீர்த் தொடையலின் சுமைபொருதெனவே, தொடையலில்வழிச் சாந்தினைப் பொறுக்கு மென்பது தானே பெறப்படுதலின் மார்பணி மலர்த்தொடை கழித்தென்றுங் கூறினுர். இரண்டனையுஞ் சேரத் தாங்கமாட்டாதென்ப தவ்வடிகள் கருத்தென்க. (சுஉ)

வேறு.

வாத வூருறை யிறைவர்தம் பெரிய
 மாயை போலிருண் மாய்ந்துபின் னவர்பாற்
போத மாகிவந் துறுசுடர் விளக்கம்
 போல வேயினன் புணரியிற் றோன்ற
வேத நாதர்த மிருபத மிறைஞ்சு
 மெய்ம்மை யாளரை வேறுகொண் டிருந்தங்
கோது மாகமத் தறிவரும் பொருளை
 யுரைக்க வேறினைந் தாரற முரைத்தார்.

இ—ள்: வாதவூர் உறை இறைவர் தம் பெரிய மாயை போல் இருள் மாய்ந்து - அப்பொழுது திருவாதவூரடிகளுடைய பெரிய மாயாமலத்தைப் போல இருள் மறைய, பின் - அதன் பின்னர், அவர்பால் போதம் ஆகி வந்து உறு சுடர் விளக்கம் போல இனன் புணரியில் தோன்ற - அவ்வடிகளிடத்துச் சிவஞானமாகிவந்து பொருந்துகின்ற தீபத்தின் பிரகாசத்தைப் போலச் சூரியன் கிழக்குச் சமுத்திரத்திலே உதிக்க, வேத நாதர் அறம்

உரைத்தார் - வேத முதல்வராகிய சிவபெருமான் முன்னரும் தருமோபதேசஞ் செய்தார் ஆதலின், தம் இரு பதம் இறைஞ்சும் மெய்ம்மையாளரை வேறு கொண்டு இருந்து - தம்முடைய உபய திருவடிகளை வழிபடும் அம்மெய்யன்பரைத் தனியிடத் தழைத்துக் கொடுசென்றிருந்து, ஓதும் ஆகமத்து அறிவு அரும் பொருளை அங்கு உரைக்க நினைந்தார் - தாம் அருளிச்செய்த மூலாகமங்களிலே எளிதில் அறிந்துகோடற்கரிய சித்தாந்தப் பொருளை அங்கே போதித்தலாகிய சாத்திர தீக்ஷை செய்யத் திருவுளங் கொண்டருளினார், (அஃதெங்ஙனமெனின்) எ—று.

வாதவூருறை யிறைவர் என்பதனைச் சொற்கிடக்கை முறையானே விரித்துரைத்துக் கொள்க. மாய வென்னுஞ் செயவெனெச்சம் மாய்ந்தெனத் திரிந்து நின்றது; "சொற் றிரியினும் பொரு டிரியா வினைக்குறை" என்பதனாற் கொள்க. இருந்து, உரைக்க, நினைந்தார் என முறையானே முடிக்க. ஆதலின் என்பது சொல்லெச்சம். சாத்திர தீக்ஷையாவது: சைவாகமாதி சிவசாத்திரப் பொருளை ஞானசாரியர் நன்மாணாக்கனுக்கு இனிது போதித்தலாம். சிவபெருமான் முன்னரும் சனகர் முதலிய முனீந்திரர் நால்வர்க்கும் பிறர்க்குந் தருமோபதேசஞ் செய்தாராதலின், அங்ஙனமே ஈண்டுந் திருவாதவூரடிகளுக்கு ஆகமோபதேசஞ்செய்தல் புதுமையன்றெனவே, இவ்வடிகள் அம்முனிவரோ டொத்தவரென்பது தாற்பரியத்தான் விளக்குதற்கு வேதநாதரொன் றுழியாது அறமுரைத்தா ரென்றும், அவாதடிமைத்திறம் சிரத்தையன்புசட் கேற்ப வனைத் திருத்தொண்டர்களினும் வேறாக ஓர் ஏகாந்த ஸ்தானத்தில் அழைத்துக் கொடுசென் றிருந்தென்பார் 'தமிருபத மிறைஞ்சு மெய்ம்மையாளரை வேறுகொண் டிருந்' தென்றும், முற்றறிவையுடைய பதியாகிய தம்மாலருளிச் செய்யப்பட்ட சைவாகமங்களின் முடிந்த முடிபாகிய சித்தாந்தப் பொருளைச் சிற்றறிவுடைய பசுவர்க்கங்களாற் றாமாக உள்ளவாறறிதல் கூடாதென்பார் அதனை ஓதுமாகமத் தறிவரும் பொருளென்றுங் கூறினார். மாயைக் கிருளையும் போதத்திற்கு இனனையும் தொன்றுதொட்டு உவமானமாகக்கூறும் வழக்கை விபரீதஞ்செய்து, ஈண்டிருளுக்கு மாயையையும் இனனுக்குப் போதத்தையும் உவமானமாக்கிக்கூறுதலின், இது விபரீதவுவமா லங்காரமென்க. (௬௩)

களிம்பு தோய்ந்தசெம் பெனவுனை மருவுங்
கருமை கூர்மலங் கண்டது கலக்கும்
பளிங்கு போன்றதுன் றன்மையம் மலத்தின்
பற்றி னுடல் பலவெடுத் துழன்றாய்
வளங்கு லாம்புவ னங்தொறுஞ் செயுமுன்
வல்வி னைப்பயன் வருமுறை நெறியே
யளந்து நாந்தர நுகர்ந்துமே னுகர்வு
மாக்கி யேதிரிந் தனைமன வழுக்கால்.



இ—ள்: செம்பு தோய்ந்த களிம்பு என கருமை கூர் மலம் உனை மருவும் - செம்புள்ளளவுமன்றே அதனோடு சகசித்த களிம்பைப்போல இருண்மயமாகிய மலமானது ஆன்மாவாகிய உன்னை அநாதியே சகசித்திருக்கும், உன் தன்மை கண்டது கலக்கும் பளிங்கு போன்றது - ஆதலான் உன்னியல்பானது சார்ந்ததன்வண்ணமாய் நிற்கும் படிகம்போல நின்னாற் சாரப்பட்ட கருவிகளின் வண்ணமேயாய் நின்றது, அம் மலத்தின் பற்றினால் உடல் பல எடுத்து வளங் குலாம் புவனந்தொறும் உழன்றாய் - அம்மலவாசனையினாலேயே உடம்புகள் பலவற்றை யெடுத்துப் பிறந் திறந் திதுகாறும் வளம் பொருந்திய சுவர்க்க மத்திய பாதலங்களிற் சுழன்று திரிந்தாய், செயும் முன் வல் வினைப்பயன் - அப்புவனங்கடோறும் நீ முன் செய்துகொண்ட இருவினைப்பயன்களாகிய சுக துக்கங்களை, வரு முறை நெறியே நாம் அளந்து தர நுகர்ந்தும் - நுகாவரும் வினைவிளைவின் கிரமந் தவறாமலே நாம் நியதிசெய்து தர நீ அநுபவித்தும், மன அழுக்கால் மேல் நுகர்வும் ஆக்கியே திரிந்தனை - அங்ஙன மநுபவிக்குமிடத்து யா னென தென்னும் முனைப்பாகிய மனக்குற்றங்களினாலே மேல் உடம்பெடுத் தநுபவித்தற் கேதுவாகிய ஆகாமியவினை விளைவுகளையும் நின் கருத்துவகையாற் செய்து திரிந்தனை எ—று.

நுகர்வு ஆகுபெயர். மலம் துடைக்கப்படுவதென்னும்பொருட்டு. செம்புக்குக் களிம்பு சகசமே யென்பது காட்சிப்பிரமாணத்தால் எளிதி னறியக்கிடத்தலின் அதனை யெடுத்துக் கூறி விளக்கி, அவ்வாறே ஆன்மாவுக்கும் மல மநாதியென்பார் களிம்பு தோய்ந்த செம்பென வுனை மருவுங் கருமை கூர் மலமென்றும், அஃதங்ஙனமாகவே, தன்னையடுத்த பன்னிறங்களினியல்பே தன்கட்கொண்டு காட்டித் தன்னொளி தோன்றாது நிற்கும் படிகம் போல நீயும் நின்னாற் சாரப்பட்ட கருவிகளினியல்பே நின்கட் கொண்டு காட்டி நின்னியல்பு தோன்றப்பெறாது நின்றனை யென்பார் கண்டது கலக்கும் பளிங்குபோன்ற துன் றன்மை என்றுங் கூறினார். களிம்பு தோய்ந்த செம்பென வுனைமருவுங் கருமைகூர் மலமென்றது ஆணவமாகிய மூல மலத்தை. இதனைக் கருமைகூர் மலமென்றார் "இருளொளிர விருண்ட மோகமாய்" என்பது அதனியல்பாகலி னென்க. புவனந்தொறுஞ் செயுமுன் வல்வினையென்றது கன்மமலத்தை. பயன்வருமுறைநெறியே யளந்து நாந்தர நுகர்ந்தென்றது பிராரத்தவினையை. மேனுகர்வென்றது ஆகாமிய வினையை. சகசித்தல் - உடன் கலந்து நிற்றல். (௬௪)

செய்து ளோர்பெறும் வினைப்பய னொருவர்
சேர்க்க வேண்டுவ தில்லெனி னிதுமே
லெய்து மேலிது நுகர்வதென் றறிவ
தில்லை நீவினை யெனிற் சடமறியா

வுய்த லாகிய நன்னெறி யுணரா
வுனையு முன்வினைப் பயனையு முணர்ந்து
மைத வாமல மொழித்தரு ளகலா
வாழ்வு நல்குவம் யாமென மதிப்பாய்.

இ—ள்: செய்துளோர் பெறும் வினைப் பயன் ஒருவர் சேர்க்க வேண்டுவது இல் எனில் - தம்மைச் செய்துகொண்டவர் தாமே அநுபவிக்கத்தகும் வினைப்பயன்களை மற்றொரு கடவுள் இடையே நின்று கூட்டவேண்டுவதில்லை அவரும் அவையுந் தாமே கூடுதல் பெறப்படுமெனின், நீ இது மேல் எய்தும் இது மேல் நுகர்வது என்று அறிவது இல்லை - நீ முற்றறிவுடையையல்லை யாகலின் அவ்வினைப்பயன்களுள் இவ்வினை மேல் வரற்பாலது அதற்கீடாக இன்ன பயன் மேல் அநுபவிக்கற்பாலது என்றறியமாட்டாய், வினை எனில் சடம் அறியா - அவ்வினைப்பயன்க டாமறிந்து கூடாவோவெனின் அவை அசேதனப்பொருளாகலின் அறியவுங் கூடவுமாட்டா, நாம் உய்தல் ஆகிய நல் நெறி உணரா உனையும் உன் வினைப்பயனையும் உணர்ந்து - இங்ஙனமாகலின் முற்றறிவையுடைய நாமே கடைத்தேறும் நன்னெறியை யறியாத உன்னையு முன் வினைப்பயன்களையும் காலக்கிரமத்தோடு பொருந்த அறிந்து கூட்டிப் புசிப்பித்துத் தொலைத்து, தவா மை மலம் ஒழித்து - உன்னை விட்டு நீங்காத கரிய மலவலியைக் குன்றுவித்து, அகலா அருள் வாழ்வு நல்குவம் என மதிப்பாய் - நித்தியமாகிய நிரதிசயவின்ப வாழ்வை உனக்குத் தருவோமென்று நீ யறிந்துகொள்வாயாக எ—று,

வினு நிகழ்ச்சிக்கட் செய்துளோர் எனப் படர்க்கைப் பலர்பாலாற் கூறி, விடை நிகழ்ச்சிக்கண் அறிவதில்லை நீயென முன்னிலை யொருமையில் வைத் தடிகளை எதிர்முகமாக்கியது உபதேசப்பொருளை வலியுறுத்துதற்கென்க. நடுகின்ற வினை ஆகுபெயர். அது முன்னர் உனையு முன் வினைப் பயனையு முணர்ந்து என்பதனானு முணர்க. மைம்மலம் தவாமலமெனவும், அகலா வாழ்வு அருள்வாழ்வு எனவும் தனித்தனி கூட்டுக. அசேதனம் அறிவில் பொருள். சடம், அசித்து, அசேதனம் என்பன ஒருபொருட்கிளவி. ஆன்மவர்க்கங்கள் வினைகளை ஈட்டு மிவ்வியல்பு தொன்றுதொட்டு வீடுபெறெய்துமளவும் இடையறவுபடாது தொடர்ச்சியாய் வருமென்பார் செய்தவரென்னுது செய்துளோரென்றும், வினைமுதல் செயப்படுபொருள் பயன்கட்குப் பிறர்மதமேற்கொண் டியைபுடைமை விளக்குவார் செய்துளோர் வினைப்பயனென்னுது செய்துளோர் பெறும் வினைப்பயனென்றும், முற்றறிவின்மையின் உயிர்களும், சடமாகலின் வினைப்பயன்களுந் தாமாக அறிந்து கூடுமாறில்லையெனவே, அறிந்து கூட்டிப் புசிப்பித்துத் தொலைத்து மலசத்தியை நலித்துப் பேரின்ப வாழ்வைக் கொடுத்தல் முற்றறிவும் பெருங் கருணையுமுடைய தமக்கே கடப்பாடென்பார் உய்தலாகிய நன்னெறி



யுணரா வுனையு முன்வினைப்பயனையு முணர்ந்து மைதவாமல மொழித்தருளகலா வாழ்வு நல்குவம் யாமென மதிப்பாய் என வினுவில்வழியும் விதந்துங் கூறியருளினுர். உணரா, உணர்ந் தென்புழி முறையே உயிர்க்குச் சிற்றறிவுடைமையுந் தமக்கு முற்றறிவுடைமையும் பெறப்படுதலின், வேறு விதந்திலர் என்க. (௬௫)

எவர்க்கு மிம்மலஞ் சேரவிங் கொழியா
திருப்ப தென்னெனி லின்னல்கொள் பிறவித்
துவக்கெ னுந்தம திருவினைப் பயனும்
துலைபுகும் பொரு ளெனநிறை நிகர்த்தா
லவர்க்கு நம்பதங் கொடுத்திட ரொழிப்போ
மதுவி லாதவ ரழுங்கியவ் வளவும்
பவப்பெ ருங்கடல் வீழ்வர்தம் பருவம்
பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாரார்.

இ—ள்: எவர்க்கும் இம் மலம் சேர இங்கு ஒழியாது இருப்பது என் எனில் - சமஸ்தருக்கும் இம்மலத்தை ஒருசேர இங்ஙனம் நாம் நீக்காதிருப்பதென்னையெனின், இன்னல் கொள் பிறவித் துவக்கு எனும் தமது இரு வினைப்பயனும் துலை புகும் நிறை பொருள் என நிகர்த்தால் - துன்பத்தையுடைய சனனபந்தத்துக் கேதுவாகிய தமது இருவினைப்பயன்களுந் தராசுகோலின் இரு தட்டுக்களினு மிட்ட சமநிறையுடைய பொருள்போலத் தம்முளொக்குமாயின், அவர்க்கு நம் பதங் கொடுத்து இடர் ஒழிப்போம் - அவ்வொப்புமையுடைய பக்குவர்களுக்கு நமது திருவடிதீக்ஷை செய்து மலத்தை நீக்குவோம், அது இலாதவர் அவ்வளவும் அழுங்கி பெரும் பவக் கடல் வீழ்வர் - அவ்விருவினை யொப்பில்லாத அபக்குவரெல்லாம் அஃதடையுங்காறும் வருந்திப் பெரிய சனனசாகரத்தில் வீழ்வர், தம் பருவம் பார்க்கும் எம்மையும் தம்மையும் பாரார் - அஃதொழிந்து தம திருவினை யொப்பு மலபரிபாகங்களைத் தம்பொருட்டு எதிர்நோக்கியிருக்கும் பதியாகிய நம்மையும் சனன மரண வேதனைப்பட் டுழலும் பசுக்களாகிய தம்மையும் விசாரியார்; ஆகலின் எவர்க்கு மிம்மலஞ்சேர விங்கொழியேம் என்பது அறிவாயாக எ—று.

ஒழியாதென்பது அந்தர்ப்பாவிதணிச்சு; "குடி பொன்றிக் குற்றமு மாங்கே தரும்" என்புழிப்போல. அது முன்னர் ஒழிப்போமென்னும் பயனிலையானும், மலமொழித் தருளகலா வாழ்வு நல்குவம் யாமெனத் தம்மேல் வைத்து மேலைச் செய்யுளிற் கூறியவாற்றானு முணர்க. ணிச்சு பிறவினை விகுதி. பிறவிக்கேதுவாகிய துவக்குப் பிறவித்துவக்கெனக் காரணம் காரியமாக வுபசரிக்கப்பட்டது. துவக்கு-கட்டு. எனு மென்பது பெயரெச்சம்; என்ருகமங் கூறுமெனப் பொருள்கொண்டு முற்றென்பாரு முளர். அவர், அவ்விருவிற் கது நேர் விடையாகாமையும் ஆகமத்தின்மேல் வைத்துரைத்

தல் ஈண்டுச் சிறப்பின்மையும், தம திருவினைப்பயனுந் துலைபுகும் பொருளென நிறைநிகர்த்தா லவர்க்கு நம்பதங் கொடுத் திட லொழிப்போ மென முன்னர்க் கிளந்து கூறுதற்கோ ரியைபின்மையும், ஒழிப்போமென வினைப் பயனிலை கொடுத்துப் பின் முடிக்கப்படுதலும், பிறவும் நோக்கிற்றிலர். வினைப்பயன் சுகதுக்கங்கள். இடர் ஆகுபெயர். அதுவிலாதவ ரழுங்கி யவ்வளவும் பவப்பெருங் கடல் வீழ்வர் தம்பருவம் பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாரார் என்பதனால் அபக்குவர்க்கு ஒழியேமென்பது நன்கு பெறப்பட்டது. படவே, எவர்க்கு மிம்மலஞ் சேர விங்கொழியா திருப்பதென் னென்னும் வினாவிற்குச் செவ்வனிறையாயவாறு கண்டுகொள்க. இனி, அதுவிலாதவர்தம்பருவம் பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாராராய் அவ்வளவு மழுங்கிப் பவப்பெருங்கடல் வீழ்வரென முடித்தலு மொன்று. இருவினையொப்பாவது நல்வினையால் வரும் இன்பத்திலும் தீவினையால் வருந் துன்பத்திலும் முறையே விருப்பும் வெறுப்புமின்றிச் சமபுத்திபண்ணுவது. ஓடும் பொன்னும் ஒப்ப நோக்குவது மது. அது "ஓடும் பொன்னு முறவும் பகையுமோர், கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும், வீடுங் கானமும் வேறற நோக்குதல், கூடுந் தன்மை கொளுமன நன்மனம்" என்பதனு முய்த்துணர்க. (௬௬)

என்று கூடுமிப் பருவமென் றியம்பில்
யாமி ருந்துள விடந்தொறு மிறைஞ்சி
நன்றி சேர்சிவ புண்ணியம் புரியு
நன்மை யாலிது நணுகுமென் றறிநீ
மன்றி லானவெம் மியல்புனக் குரைக்கின்
மாசி லாவுரு மூன்றவற் றருவ
மொன்று பேரொளி யொன்றரு வுருவ
மொன்று தானரு ளுருவமென் றுணர்வாய்.

இ—ள்: இப்பருவம் என்று கூடும் என்று இயம்பில் - இம்மலபரிபாகமொருவற் கெஞ்ஞான்று வந்து பொருந்துமென்று நீ வினவின், யாம் இருந்துள இடம் தொறும் இறைஞ்சி - நாம் வீற்றிருக்கும் ஸ்தலங்கடோறும் சென்று நம்மைத் தரிசித்து வணங்கி, நன்றி சேர் சிவபுண்ணியம் புரியும் நன்மையால் இது நணுகும் என்று நீ அறி - நன்மைபொருந்திய சிவபுண்ணியங்களைச் செய்யும் விசேஷத்தினாலே இது வந்து பொருந்துமென்று நீ அறிவாயாக, அது நிற்க, மன்றின் ஆன எம் இயல்பு உனக்கு உரைக்கின் - கனகசபையின்கட் பொருந்திய நமது தடத்த லக்கணமாகிய பொதுவியல்பை உனக்குச் சொல்லப்புகின், மாசு இலா உரு மூன்று - நமக்குக் குற்றமற்ற வடிவங்கள் மூன்றுள்ளன, அவற்றுள் ஒன்று அருவம் - அம்மூன்றனுள் ஒரு வடிவம் அருவமாகும், ஒன்று பேர் ஒளி அருவுருவம் - மற்றொரு வடிவம் தேசோமயமாகிய அரூபரூபமாம், ஒன்று தான் அருள் உருவம்



என்று உணர்வாய் - ஒழிந்த மற்றொன்று தான் அருண்மயமாகிய உருவம் என்று நீயறிவாயாக எ—று.

ஊரும் பேரும் உருவும் இல்லாத தாம் அவற்றைக் கொண்டருளினமை ஆன்மாக்களை உய்விக்கவேண்டு மென்னும் திருவருண் மயமாகிய பஞ்ச கிருத்திய நிகழ்ச்சியின் பொருட்டே என்பார் அத்தொடர்பு தோன்ற மன்றிலான வெம்மியல்பென்றார். ஈண்டு மன்றென்றது பராசத்தியின் மேற்று. அவற்றுளென எழனுருபு விரிக்க. தான் என்பது அம்மூவகையுங் கூறப்பட்டொழிகின்றமை யுணர்கின்றது. சிவபுண்ணியங்களை வருஞ் செய்யுட்களிற் காண்க. இப்பதிபுண்ணியங்களைச் சிவத்தலயாத்திரை செய்யும்வழித் திருவருளை முன்னிட்டு நின்றியற்றின், அவற்றாற் றப்பாது தானே இப்பருவம் வருமென்பார் யாமிருந்துள விடந்தொறு மிறைஞ்சி நன்றிசேர் சிவபுண்ணியம் புரியு நன்மையா லிது நணுகுமென் றறிநீ யென்றும், இம்மலபரிபாகத்தைக் கொடுக்கமாட்டாத பசுபுண்ணியம் போலாது கொடுக்க வல்ல பதி புண்ணியங்களை நன்றிசேர் சிவபுண்ணியமென விசேடித்தும், காம வெகுளி மயக்கங்களாகிய குற்றங்களுள் அகப்படுத்தும் பசுக்களது மாயாகாரியமாகிய உருவம்போலன்றி அக்குற்றங்களற்ற அருட்சத்திகாரியமாகிய வடிவங்கள் என்பார் மாசிலாவுரு என்றும் அருளுருவமென்றுங் கூறினார். அருவுருவைப் பேரொளி யருவுருவெனச் சிறப்பித்தார். யான் எனதென்னுஞ் செருக்குற்ற பிரம விஷ்ணுக்களுக்கிடையே தோன்றி அச்செருக்கை அடக்கிய அக்கினிப் பிழம்புவடிவமும் இதுவேயென்று விளக்குதற்பொருட்டென்க. (௬௭)

இந்த மூன்றினி லுருவுனக் கறிய
விசைந்த பேரரு ளியம்புமிவ் வுருவம்
வந்தி யாவரும் பணிவதற் கெளிதாய்
வரமெ லாந்தர வருமரு வுருவம்
பந்த மாகிய மலவிரு ளகற்றும்
பரிதி யாயுள பல்லுயிர்க் குயிரா
யந்த மாதிக ளளப்பரு மொளியா
யமல மாகுமவ் வருவெனு முருவம்.

இ—ள்: இந்த மூன்றினில் உரு இசைந்த உனக்கு அறிய பேர் அருள் இயம்பும் இவ் உருவம் - மேலே தொகுத்தும் வகுத்துங் கூறிய இம்மூவகை வடிவங்களுள்ளும் உருவடிவமாவது பக்குவத்தை யுடைய உனக்கு விளங்குமாறு பெருங் கருணையினாலே சாத்திர தீக்ஷை செய்கின்ற இக் குருவடிவமேயாம், அருவுருவம் யாவரும் வந்து வணங்குதற்கு எளிது ஆய் வரம் எலாம் தர வரும் - அருவுருவ வடிவமாவது சகலரும் வந்து தரிசித்து வணங்குதற்கு எளிவந்ததாய்ச் சகல வரங்களையும் கொடுக்குஞ் சிவலிங்க வடிவமேயாம், அவ் அரு எனும் உருவம் - அவ்வருவடிவமாவது, பந்

தம் ஆகிய மல இருள் அகற்றும் பரிதி ஆய் - அநாதி பந்தமாகிய ஆணவ மலவிருளை நீக்கும் ஞான பானுவாய், உள பல் உயிர்க்கு உயிர் ஆய் - அநாதியாயுள்ள பலதிறத்தான்மாக்களுக்கும் அந்தரான்மாவாய், ஆதி அந்தங்கள் அளப்பு அரும் ஒளி ஆய் - ஆதிமத்தியாந்த ரகிதமாகிய பேரொளியாய், அமலம் ஆகும் - நிருமலமாயிருக்கும் எ—று.

இவ்வுருவமெனச் சுட்டியது போக வடிவம், கோர வடிவம், யோக வடிவங்களனைத்தையுந் தொகுத்தென்க. அருவம் அவ்வியத்தமெனவும் நிஷ்களமெனவும், ரூபாரூபம் வியத்தாவ்வியத்தமெனவும் சகளநிஷ்களமெனவும், உருவம் வியுத்தமெனவும் சகளமெனவும் கூறப்படும். வரம் - கருதிய பேறு. தரவ்ருமென்பது ஒருசொன்னீர்மைத்து. (௯௮)

ஆவ லாலெமக் காமலர் மரங்க
ளாக்க லம்மலர் பறித்தலம் மலராற்
றாவி லாவகை தார்பல சமைத்த
றணப்பி லெம்புகழ் சாற்றலன் புடனு
மேவு மாலய மலகிடன் மெழுகல்
விளங்க நல்விளக் கிடுதலெம் மடியார்க்
கேவ லானவை செய்தலிச் சரியை
யியற்ற வல்லவர்க் கெம்முல களிப்போம்.

இ—ள்: ஆவலால் எமக்கு ஆம் மலர் மரங்கள் ஆக்கல் - அவாவினால் எமக்கருகமாகிய பத்திர புட்பங்களையுடைய விருக்ஷங்களை வைத்து வளர்த்தலும், அம்மலர் பறித்தல் - அப்பத்திர புட்பங்களைக் கொய்தலும், அம் மலரால் தா இலா வகை பல தார் சமைத்தல் - அம்மலர்களினாலே விதிப்படி இண்டை, தொடை, கண்ணி, பந்து, தண்டு, பிணையல் முதலிய பலவகைத் திருமாலைகளைக் கட்டுதலும், தணப்பு இல் எம் புகழ் சாற்றல் - இடையறாது எமது கீர்த்திப் பிரதாபமாகிய தோத்திரங்களைப் பாடுதலும், நாம் மேவும் ஆலயம் அன்பு உடன் அலகிடல் மெழுகல் - நாம் வீற்றிருக்கும் ஆலயங்களை அன்போடு திருவலகிடுதலுந் திருமெழுக்குச் சாத்துதலும், விளங்க நல் விளக்கு இடுதல் - அவ்வாலயங்களிற் பிரகாசிக்கும்படி நல்ல தீபமேற்றுதலும், எம் அடியார்க்கு ஏவலானவை செய்தல் - நம்மடியவர்க்கு அவரேவிய தொண்டுகளைச் செய்தலுமாகிய, இச்சரியை இயற்ற வல்லவர்க்கு - இச்சரியாபாதத்தை அநுட்டிக்க வல்லவர்களுக்கு, எம் உலகு அளிப்போம் - எம்முடைய சிவலோகத்திருத்தலாகிய சாலோக பதத்தைக் கொடுப்போம் எ—று.

ஆவல் இச்சைப் பெருக்கம். தாவிலாவகை என்பதை இடைநிலைத் தீபமாகக்கொண்டு ஏனையவற்றோடு மொட்டுக. தமக்காமலர் மரங்கள்:



வில்வம், பாதிரி, கோங்கு, பன்னி, கொன்றை, சண்பகம், மகிழ், புன்னை, வெட்சி, கடம்பு, ஆத்தி, செருந்தி முதலியன. வெண்டாழை, கருந்துளசி தமக்காகாதவைகளாதலின் அவற்றை நீக்குதற்கு எமக்காமலர் மரமென விசேடிக்கப்பட்டது. மரங்களை விதிப்படி வைத்து வளர்த்தலாவது சண்டாளபூமி, சுடுகாடு, மலசலபூமிகளுக்கு அணிமைக்கணில்லாததாய், நான் கெல்லையும் சுவரினாலேனும் வேலியினாலேனும் சூழப்பட்டதாய், கீழே ஆழமாக வெட்டி எலும்பு முதலிய குற்றங்களறப் பரிசோதிக்கப்பட்டதாய், பசுநிரை கட்டப்பெற்றுக் கோசல கோமயங்களினாலே சுத்தியடைந்ததாயுள்ள நிலத்திலே விருக்ஷங்களை வைத்து, புலையர் புறச்சமயிகள் தூரஸ்திரீகள் முதலாயினோர் உள்ளே பிரவேசியாமலும், எச்சில், மூக்குநீர், மலசலமுதலியவற்றான் அசுசிப்படுத்தாமலும், அங்ஙனமுள்ள பத்திர புட்பங்களைக் கடவுட்பூசை முதலியவற்றிற்கன்றிப் பிறவற்றிற்கு உபயோகப்படுத்தாமலும், அவைகளிற் சலந்தெறிக்கும்படி வஸ்திரந் தோயாமலும், வஸ்திரத்தைப் போடாமலும் பாதுகாத்து நீர்விடுகை முதலியவற்றாற் குறைவுறாது வளர்த்தலாம். இங்ஙனம் கோட்டுப்பூவைத்தரும் மரங்களை வைத்து வளர்த்தல் கூறவே "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்னும் உபலக்கணத்தால் நிலப்பூவைத் தரும் அலரி, நந்தியாவர்த்தம், வெள்ளெருக்கு, பட்டி, நாயுருவி, பொன்னூமத்தை, செவ்வந்தி, வெட்டிவேர், இலாமிச்சை, துளசி, தருப்பை, மருக்கொழுந்து, சிவகரந்தை, விட்டுணுகாந்தி, மாசிப்பச்சை, திருநீற்றுப்பச்சை, பூளை, அறுகு முதலிய செடிகளையும்; கொடிப்பூவைத் தரும் மல்லிகை, முல்லை, இருவாட்சி, பிச்சி, வெண்காக்கொன்றை, கருங்காக்கொன்றை, கருமுகை, தாளி, வெற்றிலை முதலிய கொடிகளையும்; செந்தாமரை, வெண்டாமரை, செங்கழுநீர், நீலோற்பலம், செவ்வாம்பல், வெள்ளாம்பன் முதலிய நீர்ப்பூக்களையும்; விதிப்படி வைத்து வளர்த்தலும் கொள்ளப்படுமென்க. விதிப்படி பூக்கொய்தலாவது நான்குவருணத்துட்பட்டவராயும், சிவதீக்ஷை பெற்றவராயும், நியமாசாரமுடையவராயு மிருப்பவர் சூரியோதயத்துக்கு முன்னே ஸ்நானஞ்செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரந் தரித்துச் சந்தியாவந்தனம் முடித்து இரண்டு கைகளையுங் கழுவித் திருப்பூங்கூடையை எடுத்து ஒரு தண்டு நுனியிலே மாட்டி உயரப்பிடித்துக்கொண்டேனும் அரைக்குமேலே கையிற் பிடித்துக்கொண்டேனும் திருநந்தனவனத்திற் போய்ச் சிவபெருமானை மறவாத சிந்தையோடு பத்திரபுட்பங்களை யெடுத்து அவைகளைப் பத்திரத்தான் மூடிக்கொண்டு திரும்பிவந்து கால்களைச் சுத்திசெய்துகொண்டு உள்ளே புகுந்து திருப்பூங்கூடையைத் தூக்கிவிடுதலாம். இது "பெரும்புலர்காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி" என்னுந் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தானுமறிக. பத்திரபுட்ப மெடுக்கும்போது மனம் பிறிதுபடன் மிகவும் குற்றமாம். அது "கொந்தலர் கொய்யும் போது கூர்விழி மையலாலே, பைந்தொடி மடவார் தம்மைப் பார்த்தலாற் கயிலை வெற்பிற்,

சுந்தரன் பட்டகாதை யறிதிரே துணர்மென்போதா, லந்தணர் கீழ்களாவார் கீழ்கவந் தணர்களாவார்" என்பதனுனுமறிக. விதிப்படி திருமாலை கட்டுதலாவது திருமாலைக்குறட்டைச் சுத்தசலத்திலே அலம்பி இடம் பண்ணித் திருப்பூங்கூடையிலுள்ள பத்திர புட்பங்களை யெடுத்து அதில் வைத்துக் கொண்டு மௌனியாயிருந்து சாவதானமாக ஆராய்ந்து புழுக்கடி முதலிய பழுதுள்ளவைகளை அகற்றிவிட்டு மேற்கூறிய திருமாலைகளைக் கட்டுதலாம். தா - குற்றம். அக்குற்றங்களாவன: பேசுதல், சிரித்தல், சிவபெருமானுடைய திருவடிகளினன்றிப் பிறவற்றிற் சிந்தை வைத்தல், கைகளால் உடம்பையேனும் வஸ்திரத்தையேனுந் தீண்டுதன் முதலியனவாம். தணப்பு - நீக்கம். இல்லென்னும் பண்படி இன்றியென வினையெச்சப் பொருடந்து நின்றது. புகழ் ஆகுபெயர். விதிப்படி தோத்திரம் பாடலாவது, தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருத்தொண்டர் பெரியபுராணம் என்னும் அருட்பாக்களை மனங்கசிந்துருகக் கண்ணீர் வார உரோமஞ் சிலிர்ப்பப் பண்ணோடு பாடுதலாம். விதிப்படி திருவலகிடுதலாவது சூரியோதயத்துக்குமுன் ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனம் முடித்துக்கொண்டு சிவாலயத்தினுட்புகுந்து மிருதுவாகிய துடைப்பத்தாற் கிருமி கீடங்கள் சாவாமல் மேற்பட அலகிட்டுக் குப்பையை வாரித் தூரத்துக் கொடுபோய்க் குழியிலிடுதலாம். அலகு - துடைப்பம்; மார்ச்சனியென்பதுமது. விதிப்படி திருமெழுக்குச் சாத்தலாவது ஈன்றணியதும் நோயற்றதுமாகிய பசுவின் சாணியைப் பூமியில் விழுமுன் இலையிலேந்தியாயினும், அதுகூடாவழிச் சுத்தநிலத்து வீழ்ந்த சாணியை மேல்கீழ்தள்ளி நடுப்படவெடுத்தாயினும் வாவி நதி முதலியவற்றில் வடித்தெடுத்துவந்த சலத்துடன் கூட்டிச் செங்கற்படுத்த நிலத்தையும் சுண்ணம்பு படுத்த நிலத்தையும் மண்படுத்த நிலத்தையும் மெழுகுதலாம். கருங்கற்படுத்த நிலத்தைச் சலத்தினாலே கழுவுக. கருங்கல்லிற்பட்ட சாணி மலத்துக்கொக்கும். விதிப்படி தீபமேற்றுவதாவது தாமரை நூல், வெள்ளெருக்குநூல், பருத்திநூலென்பவற்றுள் இருபத்தோரிழையாலேனும், பதினன்கிழையாலேனும், ஏழிழையாலேனும் கற்பூரப் பொடிகூட்டித்திரி பண்ணி அழுக்கின்றி விளங்கும் அகலிலிட்டு உத்தமோத்தமமாகிய கபிலைநெய் முதலியவற்றை அவ்வகலுள்வார்த்துச் சுடர்கொளுவிப் பிரகாசிக்கச் செய்தலாம். திருவிளக்குக்குக் கபிலைநெய் உத்தமத்தின் உத்தமமும், மற்றைப் பசுக்களின் நெய் உத்தமத்தின் மத்திமமும், ஆட்டுநெய் எருமைநெய்கள் உத்தமத்தின் அதமமும், வெள்ளெள்ளின் நெய் மத்திமத்தின் உத்தமமும், மற்றையெள்ளின் நெய் மத்திமத்தின் மத்திமமும், மரக்கொட்டைகளின் நெய் அதமத்தின் அதமமுமென்க. கபிலை - கபிலநிறமுடைய பசு. கபிலநிறம் - கருமையோடு கூடியபொன்னிறம். ஏனைத் தீபங்களோ டிவற்றிடை வேற்றுமை தோன்ற நல்விளக்கென்றும், அநுட்டித்தற் கருமைதோன்ற வல்லவரென்றுங் கூறினர். இச் சிவபுண்ணியங்களின்



மகிமையை, "நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சேநீவா நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப், புலர்வதன்மு னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கராசய போற்றி போற்றி யென்று, மலைபுனல்சேர் செஞ்சடையெம்மாதியென்று மாரூரா வென்றென்றே யலறு நில்லே" "விளக்கினாற் பெற்றவின்ப மெழுக்கினாற் பதிற்றியாகுந், துளக்கினன்மலர் தொடுத்தாற் றூயவிண் ணேறலாகும், விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகு, மளப்பிலை கீதஞ் சொன்னார்க் கடிகடா மருளுமாறே" என வருந் திருநாவுக்கரசு நாயனார் தேவாரங்களானறிக. விதிப்படி அடியார்க்கேவலாயின செய்தலை, முத்திநாதனாகிய பகைவனால் வஞ்சிக்கப்பட்டிறந்து வீழ்கின்ற மெய்ப்பொருளாயனாரது ஏவற்குறிப்பைக் கடவாது அவனைப் புறத்தே கொடுசென் றுய்வித்த தத்தன் முதலாயினோர்கட் காண்க. இதனானே நான்குபாதங்களுட் சரியாபாதமாவது புறத்தொழின் மாத்திரையானே உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடென அதனிலக்கணமும் பயனுங் கூறியவாறு. அது "தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன்றன் கோயிற்றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ்சாத்திப், போதுகளுங் கொய்து பூந்தார்மாலை கண்ணி புனிதர்க்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித், தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ் செய்து திருவேடங்கண்டாலடியேன் செய்வ, தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு மியற்றுவதிச் சரியை செய்வோ ரீசனுல கிருப்பர்" என்பதனானுமறிக. (௬௬)

கந்த வர்க்கமுங் கிளர்மணப் புகையும்
கவின்கொ டீபமும் புனிதமஞ் சனமுங்
கொந்த விழ்ந்தநன் மலருமற் றுளவுங்
கொண்டு மாயையின் குணங்களொன் றிலரா
யைந்து சுத்திசெய் தகம்புற மிறைஞ்சி
யங்கி யின்கடன் கழித்தருள் வழிநின்
றிந்த நற்பெருங் கிரியையன் புடனே
யியற்ற வல்லவ ரெம்மரு கிருப்பார்.

இ—ள்: கந்தவர்க்கமும் - வாசனைத்திரவியவர்க்கங்களும், மணம் கிளர் புகையும் - நறுமணங் கமழுந் தூபமும், கவின் கொள் தீபமும் - பிரகாசம் பொருந்திய தீபமும், புனித மஞ்சனமும் - பரிசுத்தமாகிய திருமஞ்சனமும், கொந்து அவிழ்ந்த நல் மலரும் - கொத்துக்களின் மலர்ந்த சுகந்த புஷ்பமும், மற்று உளவும் கொண்டு - மற்றுமுள்ள பூசோபகரணங்களையுங் கைக்கொண்டு, மாயையின் குணங்கள் ஒன்று இலர் ஆய் - மாயாகாரியமாகிய காமம் முதலிய துர்க்குணங்களுள் ஒன்றுமில்லாதவராய், ஐந்து சுத்தி செய்து - பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி இலிங்கசுத்தி

யென்னும் பஞ்ச சுத்திகளையுஞ் செய்து, அகம் புறம் இறைஞ்சி - அகப் பூசை புறப்பூசைகளைச் செய்து, அங்கியின் கடன் கழித்து - அக்கினிகாரிய முஞ் செய்து, அருள் வழி நின்று - திருவருளை முன்னிட்டு நின்று, பெரும் நல் இந்தக் கிரியை இயற்ற வல்லவர் எம் அருகு இருப்பார் - பெரிய நன் மையை யுடைய இந்தக் கிரியாபாதத்தை அநுட்டிக்க வல்லவர் எமது சமீபத் திருத்தலாகிய சாமீப பதத்தை அடைவார் எ-று.

புனிதம் என்பதனை இடைநிலைத் தீபகமாகக் கொண்டு கந்தவர்க்க முதலியவற்று ளேற்பனவற்றோ டொட்டுக. நின்றியற்ற வல்லவரென எச்ச முடிபுசெய்க. கந்தவர்க்கங்கள்: சந்தனம், பனிநீர், குங்குமப்பூ, கோரோசனை, பச்சைக்கற்பூரம், புழுகு, சவ்வாது; கஸ்தூரி முதலியன. வர்க்கம் - வகை. திருமஞ்சனம் - அபிஷேகம். அது ஈண்டுச் சம்பிரதாயத்தான் அபிஷேக தீர்த்தத்தின்மேற்று. அபிஷேகதிரவியங்கள்: சுத்தோதகம், எண்ணெய்க்காப்பு, மாக்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட்காப்பு, பஞ்சகௌவியம், இரசபஞ்சாமிர்தம், பலபஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, தமரத்தம்பழச்சாறு, குளஞ்சிப்பழச்சாறு, மாதுளம்பழச்சாறு, இளநீர், சந்தனக் குழம்பு, உஷ்ணோதகம் முதலியன. இவற்றுட் பஞ்சகௌவியமென்பது விதிப்படி கூட்டி அமைக்கப்பட்ட பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பனவற்றினது தொகுதியாம். கோசம்பந்தம் கௌவியமென்க. இது பிரம கூர்ச்சமெனவும் பெயர்பெறும். பால் ஐந்து பலமும், தயிர் மூன்று பலமும், நெய் இரண்டுபலமும், கோசலம் ஒரு பலமும், கோமயம் கைப்பெருவிரலிற் பாதியளவுங் கொள்க. இரசபஞ்சாமிர்தமென்பது விதிப்படி கூட்டி அமைக்கப்பட்ட பால், தயிர், நெய், தேன், சர்க்கரை யென்பவற்றினது தொகுதியாம். பல பஞ்சாமிர்தமென்பது முற்கூறிய இரசபஞ்சாமிர்தத்தோடு கூட்டி அமைக்கப்பட்ட வாழைப்பழம், மாம் பழம், பலாப்பழமாகிய முப்பழங்களினது தொகுதியாம். தாமிரபாத்திரத் தில் விடப்பட்ட பாலும், வெண்கலப் பாத்திரத்தில் விடப்பட்ட இளநீரும் கள்ளுக்குச் சமமென்க. இளநீரை முகிழ்திறந்து தனித்தனி அபிஷேகிக்க. நெய் அபிஷேகஞ் செய்தவுடன் இளவெந்நீர் அபிஷேகஞ் செய்தல் வேண்டும். இளநீர் அபிஷேகித்ததின்பின் எண்பத்தொருபத மந்திர முச்சரித்துச் சகச்சிரதாரைகொண்டு சுத்தோதகத்தால் அபிஷேகிக்க. சந்தனக்குழம்பின் பின் விதிப்படி தாபிக்கப்பட்ட நவகலசத்தினாலும், விசேஷார்க்கியத்தினாலும் அபிஷேகஞ் செய்க. கொத்து - பூங்கொத்து. அது எதுகை நோக்கிக் கொந்தென மெலிந்து நின்றது. எடுத்துவைத் தலர்ந்த பூவும், தானே வீழ்ந்து கிடந்த பூவும், உதிர்ந்த பூவும், அரும்பும் கடவுட்பூசைக் காகாமையின் அவற்றை விலக்குதற்குக் கொந்தவிழ்ந்த மலரென்றும், தாழ்ந்தசாதியார், சிவதீக்ஷை பெறாதவர், ஆசௌசமுடையவர், நித்தியகருமம் விடுத்தவர், ஸ்நானஞ் செய்யாதவர், தூர்த்தர் எடுத்த



பூவும், இரவிலெடுத்த பூவும், கை சீலை எருக்கிலை ஆமணக்கிலைகளிற் கொடுவந்த பூவும், காற்றினடியுண்ட பூவும், புழுக்கடி எச்சம் சிலந்திநூல் மயிர் என்பவற்றோடு கூடிய பூவும், மோந்தபூவும், காகம் கோழி நாய் கழுதை பன்றி குரங்கு பூனை முதலியன தீண்டிய பூவும் பூசைக்காகாமையின் அவைகளை விலக்குதற்கு நன்மலரென்றும் விசேடித்தார். திருக்கோயிலினும் அதன் சமீபத்தினுமுள்ள பூ ஆன்மார்த்த பூசைக்காகாதென்க. சூரியோதயத்திலாயினும், விடிய மூன்று நாழிகைக்கு முன்னாயினும், இரண்டு நாழிகைக்கு முன்னாயினும், ஒருநாழிகைக்கு முன்னாயினும், எடுத்த புஷ்பமே உத்தமம். மத்தியான காலத் தெடுத்த புட்பம் சிவபெருமானுக்கும் தேவர்களுக்கும் பிதிர்களுக்கும், மனிதர்களுக்கும் ஆகா. உதயத்தில் நந்தியாவர்த்தப் பூவும், வெள்ளெருக்கம் பூவும் உத்தமம். மத்தியானத்தில் அலரிப் பூவும், தாமரைப்பூவும், தும்பைப்பூவும் உத்தமம். சாயங்காலத்தில் மல்லிகைப்பூவும், கருமத்தம்பூவும், சண்பகப்பூவும் உத்தமம். அர்த்தராத்திரியில் கடப்பம்பூவும், பொன்மத்தம்பூவும், சிறுசண்பகப்பூவும், பிச்சிப்பூவும் உத்தமமென்க. விநாயகருக்குத் துளசியும், சிவபெருமானுக்குத் தாழம் பூவும், உமாதேவியாருக்கு அறுகும், நெல்லியும், வைரவருக்கு நந்தியாவர்த்தமும், சூரியனுக்கு வில்வமும், விஷ்ணுவுக்கு அக்ஷதையும், பிராமணருக்குத் தும்பையும் ஆகாவாம். திங்கட்கிழமை, சதுர்த்தி, அட்டமி, நவமி, ஏகாதசி, சதுர்த்தசி, அமாவாசி, பௌர்ணிமை, மாசப்பிறப்பு என்னும் இக் காலங்களில் வில்வமெடுக்கலாகாது. ஆதலின் இவையல்லாத மற்றைக் காலங்களில் வில்வம் எடுத்து வைத்துக்கொள்க. வில்வமரத்தடியடைந்து நாடோறும் ஹரஹரவென்னு மொலியோடு பிரதக்ஷிணஞ் செய்பவர் பாவத்தினின்றும் நீங்குவர். மரிக்கும்போது வில்வத்தடி மண்ணை உடம்பிற் பூசினோர் சிவபுரத்தடைவர். வில்வபத்திரம் சிவபெருமானது இச்சாஞானக் கிரியை வடிவாயிருக்குமென்க. ஞாயிறு, திங்கள், செவ்வாய், வெள்ளிக்கிழமைகளினும், திருவோண நக்ஷத்திரத்தினும், சத்தமி, அட்டமி, துவாதசி, சதுர்த்தசி, அமாவாசி, பௌர்ணிமைத் திதிகளினும், விதிபாத யோகத்தினும், மாசப்பிறப்பினும், பிராதக்காலம், சாயங்காலம், இராத்திரிகளினுந் துளசி யெடுக்கலாகாது. ஆகலின் இவையல்லாத மற்றைக் காலங்களிலே துளசி யெடுத்து வைத்துக்கொள்க. இரண்டிலை கீழேயுள்ள துளிசிக்கதிர் எப்பொழுதும் எடுக்கலாம். வில்வமும் கொக்கிறகுமந்தாரையும் ஆறுமாதத்திற்கும், வெண்டுளசி ஒருவருஷத்துக்கும், தாமரைப்பூ எழு நாளிற்கும் அலரிப்பூ மூன்றுநாளிற்கும் வைத்துச் சாத்தலாம். இனி உட்பூசைக்கு மலரென்றது கொல்லாமை முதலிய அட்டபுட்பங்களை. அவ்வட்டபுட்பங்களாவன: கொல்லாமை, ஐம்பொறியடக்கம், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பனவாம். மற்றுமுள்ள பூசோபகரணங்களாவன பாத்தியாசமனார்க்கிய திரவியங்களும், நைவேத்தியங்களும் பிறவுமாம். பாத்தியத் திரவியங்கள் வெண்கடுகு, இலாமிச்சம்வேர், சந்தனம்,

அறுகு எனுமிந்நான்குமாம். ஆசமனத்திரவியங்கள்: சாதிக்காய், கிராம்பு, ஏலம், பூலாங்கிழங்கு, சண்பகமொட்டு, பச்சைக்கற்பூரம் எனு மிவ்வாறுமாம். அருக்கியத் திரவியங்கள்: சலம், பால், தருப்பைநுனி, அக்ஷதை, எள், யவம், சம்பாநெல், வெண்கடுகு எனுமிவ்வெட்டுமாம். நைவேத்தியங்கள்: சுத்தான்னம், சித்திரான்னவகைகள், நெய், காய்ச்சுப்பால், தயிர், முப்பழம், தேங்காய்க்கீறு, சர்க்கரை, கறியமுதுகள், அபூபவர்க்கங்கள், பானகம், பானீயம், வெற்றிலைபாக்கு, முகவாசங்களும் பிறவுமாம். அபூபம்-பண்ணிகாரம். சித்திரான்னவர்க்கங்கள்: முற்கான்னம், குளான்னம், காயசான்னம், ஆமிலான்னம், தத்தியன்னம், சர்ஷபான்னம், மாஷான்னம், பாயசான்னம் என்பனவாம். இவற்றுள் முற்கம் - பயறு. குளம் - சர்க்கரை. காயசம் - மிளகு. ஆமிலம் - புளி. ததி -தயிர். சர்ஷபம் - கடுகு. மாஷம்-உழுந்து. பண்ணிகாரவர்க்கங்கள்: மோதகம், பிட்டு, அப்பம், வடை, தேன்குழல், அதிரசம், தோசை, இட்டலி முதலியன. பானீயமென்பது ஏலம், சந்தனம், பச்சைக்கற்பூரம், பாதிரிப்பூ, செங்கழுநீர்ப்பூ என்பன இடப்பெற்ற சலமாம். முகவாசமென்பது ஏலம், இலவங்கம், பச்சைக்கற்பூரம் சாதிக்காய், தக்கோலம் என்பவற்றின் பொடியைப் பனிநீரோடு கூட்டிச்செய்த குளிகையாம். காமம்முதலிய துர்க்குணங்கள் காமக்குரோத லோப மோக மத மாற்சரியங்களென்பன. இவற்றுட் காமம் - சிற்றின்பவேட்கை. குரோதம் - கோபம். உலோபம் - திரவிய வாஞ்சையாற் கொடாமை. மோகம் - மயக்கம். மதம் - செருக்கு. மாற்சரியம் - பொறாமை குணங்களுளொன்றுமென வருபு மும்மையும் விரித்துரைக்க. இனி மாயையின் குணங்களொன்றிலராய் என்பதற்கு மாயா குணங்களோடு தொடர்பில்லாதவராய் எனப் பொருளுரைப்பினு மமையும். இனிப் பஞ்சசுத்திகளுட் பூதசுத்தியாவது பிருதுவி முதலிய பஞ்சபூதங்களாகிய வித்துடையதும், படைத்தல் காத்தல்களைச் செய்யும் பிரம விஷ்ணுக்களால் உண்டாக்கப்பட்ட முளையுடையதும், விருப்பு வெறுப்புச் சோதிட்டோம யாகமுதலிய தருமம் பிரமகத்தி முதலிய அதர்மம். அநித்தம் அசுத்தம் துக்கமென்னுமிவற்றிக்குக் காரணமாகிய மோகமென்னும் இவைகளாகிய வேருடையதும், சத்தகோடி மகாமந்திரங்களாலும் அனந்தேசர்முதலிய மந்திரேசர் எண்மர்களாலும் போஷிக்கப்படுவதும், கலை முதலிய தத்துவங்களாகிய நிலையுடையதும், காரணதன்மாத்திரைகளாகிய மகா சாகைகளும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களாகிய உபசாகைகளு முடையதும் காரிய தன்மாத்திரையாகிய சத்தாதி விடயங்களைப் பற்றும் வடிவாகிய வியாபாரங்களைத் தளிராகவுடையதும், புத்தி குணங்களாகிய தன்மம் ஞானமுதலிய எட்டின் விகாரங்களாகிய முந்நூறு பாவங்களின் கூட்டத்தைப் பூவாகவுடையதும், புத்திதத்துவத்திற்றோன்றும் சித்தத்தால் அவதானிக்கப்படும் பொருள்களையே பழமாகவுடையதும், புருடனாகிய பறவையினாலே அநுபவிக்கப்படுவதும், போகவிடயமாகிய சரீரத்தையும் போககிரியையின்



கர்த்தாவாகிய ஆன்மாவையும் இரசமாகவுடையதும், மேனோக்கும் வேருடையதும், கீழ்நோக்கும் கொம்பருடையதுமாகிய ஆலமரரூபத்தைத் தியானித்து, கும்பகம் பூரகம் இரேசகமென்னு மிவற்றின் பாதியிரட்டைகளாற் பஞ்சகலாமந்திரங்களைப் பிருதுவி முதலிய தத்துவங்களோ டிருக்குங் கந்தமுதலிய குணங்களி னிலையோடு முறைப்படி சேர உச்சரித்து, பத்திர முதலியன ஒழிந்த பாவனையினாலும், உலர்ந்த பாவனையினாலும் தகித்து நீறாக்கி, ஒழிந்த பாவனையினாலும், சுத்தாகாசசொரூப பாவனையினாலும், சத்தியா னனைக்கப்பட்ட மந்திரமயமான சரீரமுடையவனாகித் தன் இருதயத்திலே துவாதசாந்தத்தி னின்றுஞ் சோதிலிங்கமாவாகித்துப் பாவனையினால் வந்த மலர் முதலியவற்றாற் புறம்போலருச்சித்து, நாபிகுண்டத் தக்கினியின் ஞானக்கினியை வைத்தோமஞ் செய்து சிவார்ப்பணம் பண்ணி அச்சிவனைப் புறத்தே வந்து பூசனைகொண்டருள அனுமதி கோடலாம். பூதசுத்தி இன்னுமொரு பிரகாரம் ஆகமங்களிற் கூறப்படும். அது பிருதிவி முதல் ஆகாயமீறாகிய பஞ்சபூதங்களையும், அவ்வப்பூதங்களின் நிறம், குணம், குறி, தெய்வம், வடிவங்களோடு தியானித்து, அவ்வப்பூதங்களுக்குரிய கலாமந்திரங்களை அவ்வக்கலா பீசங்களோடு முறைப்படி சேர உச்சரித்து, அப்பூதங்களை விதிப்படி சுத்திசெய்வதாம். தானசுத்தியாவது அஸ்திரமந்திரங்களினாலே தாளத்திரயஞ்செய்து அங்குநின்றுமிடையூறகற்றி அஸ்திர மந்திரத்தால் எம்மருங்குஞ் சொலிக்கும் அக்கினி வண்ணமாகிய மதிலையும், கவசமந்திரத்தால் அகழையுஞ்செய்து, சத்தி மந்திரத்தான் மேலுங் கீழுஞ் சத்திகளினிறைவாகப் பாவித்துச் சிவலிங்கத்துக்கு முன் மண்டலமிட்டுப் பூமிதேவியைச் சகலாபரண சகிதையாகத் தியானித்து, இருதய மந்திரத்தாற் கந்தமுதலியவற்றைக்கொண் டருச்சித்து அஸ்திர மந்திரத்தினாலே திக்குப்பந்தனஞ் செய்தலாம். திரவியசுத்தியாவது சுவர்ண முதலியவற்றாலியற்றிய அருக்கிய முதலிய பாத்திரங்களை அஸ்திர மந்திரத்தாற் கழுவி விந்தமிர்தமாகியநீரை வௌஷடந்த இருதய மந்திரத்தா னிறைத்துத் திரவியங்களிட்டுப் பஞ்சப்பிரம முதலிய மந்திரங்களான் முறைப்படி பூசித்துச் சங்கிதாமந்திரத்தா லபிமந்திரித்துத் திக்குப்பந்தனமும் அவகுண்டனமுஞ்செய்து தேனுமுத்திரை கொடுத்து அருக்கியசலத்தாலே தன்னையும் பூசோபகரணங்களையும் புரோக்ஷித்துக் கவசத்தால் அப்பியுக்கணமும் இருதயத்தால் அபிமந்திரித்தலும் கவசத்தால் அவகுண்டனமும் தேனுமுத்திரையால் அமிர்தீகரணமுஞ்செய்து, புஷ்பத்தால் அருக்கிய நீரெடுத்துத் திருமஞ்சனக் குடத்தின்கணிட்டுத் தேனுமுத்திரை கொடுத்தலாம். மந்திரசுத்தியாவது தன்னாசனத்திற் சிவாசனமும் மார்பிற் சிவமூர்த்தியும் நியசித்துச் சந்தனத் திலகமிட்டு மூலத்தாற் சிரசிலே புஷ்பமிட்டு ஆன்மபூசை செய்து, குறில், நெடில், அளபெடை யென்னும் மாத்திரைகளின் முறைப்படி பிரணவவாதியாகவும் நமோந்தமாகவும் மந்திரங்களை உச்சரித்தலாம். இலிங்கசுத்தியாவது ஸ்நானவேதிகையில் விரித்த வஸ்திரத்திலே ஷடுத்தாசனங் கற்பித்து இலிங்கத்தை யெழுந்தருளப்பண்ணி அந்த ஸ்நானவேதிகையில் வைத்து விதிப்படி பூசித்து, நின்மாலியங் கழித்து,

இலிங்கத்தையும் ஆவுடையாரையும் அலம்பிச் சாமானியார்க்கியத்தாலுஞ் சுத்தோதகத்தாலும் அபிஷேகஞ்செய்து, தைலம் முதல் அருக்கிய சலமீறாக முறைப்படி அபிஷேகஞ்செய்து, திருவொற்றாடை சாத்திப் பீடத்திலெழுந் தருளப்பண்ணி ஓர் புஷ்பஞ் சாத்துதலாம். இவை புறப்பூசையின்கட் பஞ்சசுத்தியென வறிக. இனி அகப்பூசையின்கட் பஞ்சசுத்திகளாவன பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி யென்பன வாம். அவற்றுட் பூதசுத்தியாவது முப்பத்தாறு தத்துவங்கள் நாமல்ல, அவையனைத்தும் சடம், அவையும் தாமாகக் காரியப்படமாட்டாவென்றறித லாம். ஆன்மசுத்தியாவது அப்படியறிதல் திருவருளானன்றி ஆன்மபோதத் தாலன்றென் றறிதலாம். திரவியசுத்தியாவது ஆன்மபோதத்தாற் றானே யறிதற்குச் சேட்டையில்லையென்று கண்டதுகொண்டே ஆன்மாவுக் கறி வில்லையென்றறிந்து, கண்டு கேட் டுண் டுயிர்த் துற்றறிவ தெல்லாம் திரு வருளென் றறிதலாம். மந்திரசுத்தியாவது ஐந்தெழுத்தைச் சிகாரமுதலாக மாறி அதனுண்மையை விசாரித்தறிதலாம். இலிங்க சுத்தியாவது பதி எங்கும் பூரணமாய்ப் பசுபாசங்க ளிரண்டினும் பிரிவற நின்று அவற்றைச் சேட்டிப்பித்துநின்ற தன்மை யறிந்து, அத்தகைய சிவம் இலிங்கத்தினு மெழுந்தருளி யிருக்குமென் றறிதலாம். அகப்பூசை யெனினும் அந்தரி யாக பூசையெனினு மமையும். அந்தரியாக பூசையாவது நிலமுதற் சத்தி தத்துவமீறாகிய முப்பத்தைந்தினையும் கிழங்கு முதற் பீசமீறாகிய அவய வங்களாயுடைய இதயகமலம் ஆசனமும், அதன்மேற் சத்திமூர்த்தியும், சிவன்மூர்த்திமானுமாகக்கொண்டு செய்யப்படும் பூசையாம். அது "நாட்டு மித யந்தானு நாபியினி லடியாய் ஞாலமுத் றத்துவத்தா னெண்விரனு ளத்தாய், மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய் முழுவித ழெட் டக்கரங்கண் முறைமையி னுடைத்தாய்க், காட்டுகம லாசனமே லீசர் சதா சிவமுங் கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுகும் சத்தி, வீட்டை யருள் சிவன்மூர்த்தி மானுகிச் சக்தி மேலாகி நிற்ப னிந்த விளைவறிந்து போற்றே" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தினுட் குருமுக மாகப் பெற்றுக்கொள்க. அங்கியின் கடனுங் கழித்தென எச்சவும்மை வரு வித்துரைக்க. அது "எரியில்வரு காரியமும் பண்ணி" என்பதனுள்ளுங் காண்க. கடனென்றூர் பூசாந்தத்திற் றப்பாது செய்யப்படும் நியமவிதி யாதலை நோக்கியென்க. அக்கினி காரியம் அக்கினியிற் செய்யப்படுங் காரியமென விரியும். அஃதாவது:- நாடோறும் புறப்பூசையின் முடி விலே உரிய திக்கொன்றில் விதிப்படி குண்டமமைத்து, வேண்டு முபகா ணங் கொண்டு, குண்ட சமஸ்காரஞ்செய்து, அக்குண்டத்தினுள் நான்கு பக் கங்களினும் அக்ஷகபாடமிட்டு, அக்குண்டமத்தியில் உலக மாதாபிதாக்களாகிய வாகீசுவரி வாகீசுவரர்களை ஆவாகித்து, பின்பு பூதாக்கினியைக் கொணர்ந்து சமஸ்காரஞ் செய்து, அவ்வாகீசுவரர் வாகீசுவரியோடு சையோகித்த தாகப் பாவித்து, அங்ஙனஞ் சையோகிக்கும் வழி வாகீசுவரர் வாகீசுவரி யின் கருப்பநாடியிலே தமது வீரியத்தை விடும் பாவனையாகக் குண்டமத்தி யிலே அக்கினியைப் பிரதிட்டைசெய்து, ஏனைய கருமங்களு மியற்றி,



கர்ப்பாக்கினியைப் பூசித்து, வாகீசுவரியின் கையிலே தருப்பைக்காப்பிட்டு, கருப்பாதான முதற் சாதகன்ம மீறாகிய சம்ஸ்காரங்களைச் செய்துமுடித்து, அதன் பின்னர் அத்தருப்பைக் காப்பை நீக்கிப் பொற்காப்பிட்டு, குண் டத்தின் நான்கு பக்கங்களினும் தருப்பைகளைப் பரப்பி, பரிதிகளையும் விட்டரங்களையும் சூழவைத்து, பஞ்ச சமித்துக்களால் ஓமித்து, அப்பரிதி விட்டரங்களின் முறையே பிரமா முதலிய விசேடதேவர்களையும் இந்திராதி திக்குப் பாலகர்களையும் பூசித்துச் சிவாஞ்ஞைப்படி அக்கினியாகிய குழந் தையைப் பாதுகாக்கக் கடவீர்களென்று விஞ்ஞாபித்து, சுருக்குச் சுருவ சுத்தியும் ஆச்சியசுத்தியுஞ் செய்து, அக்குழந்தையின் சத்தியோசாதம் முத லிய ஐம் முகங்கட்கும் அபிகாரக்கிரமமாகவும் அநுசந்தானக் கிரமமாகவும் ஏகீகரணக்கிரமமாகவும் முறையே ஆகுதிசெய்து, பின்பு நாமகரணமுஞ் செய்து, சிவகரும யோக்கியதை யுடையதாகப் பாவித்து, அதன்மேல் அவ் வாகீசுவரி வாகீசுவரர்களை உத்துவாசனஞ் செய்துவிட்டு, அவ்வக்கினியின் இரணியை, கனகை, இரத்தை, கிருஷ்ணை, சுப்பிரபை, அதிரத்தை, வெகு ரூபை என்னும் எழுவித நாக்குக்களுள் வெகுரூபை என்னும் நாக்கிலே சூடாகரும மீறாகிய சமஸ்காரங்கள் பூரணமாகும்பொருட்டுப் பூரணாகுதியும் அக்கினித் தியானமும் பிறவுஞ்செய்து அவ்வக்கினியின் இருதய கமலத்திற் சிவனை ஆவாகித்து, சரு முதலியவற்றால் ஓமித்து, பின்னும் பூரணாகுதி செய்து, இரக்ஷை எடுத்தணிந்து, சிவனையும் அக்கினியையும் யோகித்து, பரிதிவிட்டரங்களிலிருக்குந் தேவர்களையும் உத்துவாசனஞ் செய்துவிட்டு, உட்பலி புறப்பலி இடுதலாம். சம்ஸ்காரம் - சுத்தி. அக்ஷகபாடம் - தருப் பைகளால் அமைக்கப்படுந் திரைப் புடைவை. பூதாக்கினி என்பது அரணி சூரியகாந்தம் முதலியவற்றினின்றும் உண்டாக்கப்படும் அக்கினி. கருப்பநாடி கருவுண்டாகும் நரம்புத்தானம். பரிதி - யாகதருக்கொம்பர். விட்டரம் - ஓர் வகைத் தருப்பாசனம். சுருக்குச் சுருவம் - நெய்யாகுதிக் கருவிகள். அபிகாரம்-ஒவ்வொரு முகங்கட்கும் தனித்தனி முறையே ஆகுதி செய்தல். அனுசந்தானம் - ஐம்முகங்களையும் விதிப்படி தொடர்ச்சியாகக் கலந்து ஆகுதிசெய்தல். ஏகீகரணம் - ஐம்முகங்களையும் ஒன்றாக்கி ஆகுதி செய்தல். சரு, அவிசு, இரக்ஷை - காப்பதென்னும் பொருட்டு. அஃதா வது சிவாக்கினியிலே தருப்பையை இட்டுத் தகித்து நெய் சேர்த்துக் குழைத்துத் திலகமிடுதலாம். இங்ஙனம் அக்கினிகாரியம் ஒருவாறு சுருக்கிக் கூறப்பட்டது. இதன் விரிவைச் சமந்திரகமாகச் சிவாகமங்களுட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்; ஏனையவுமன்ன. இதனானே புறத்தொழில் அகத்தொழிலென்னு மிரண்டானும் அருவுருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியையெனப்படுமென அதனிலக்கணமும் பயனுங் கூறியவாறு. அது "புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போதுபுகை யொளிமஞ் சன மமுது முதல்கொண் டைந்து, சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ் சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த, பத்தியினு லர்ச்

சித்துப் பாவிப் போற்றிப் பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி, நித்தலுமிக் கிரியையினை யியற்றுவோர்க ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங்காலே" என்பதனானு மறிக. (௭௦)

முக்கு ணம்புல னைந்துட னடக்கி
　　மூல வாயுவை யெழுப்பிரு வழியைச்
சிக்கெ னும்படி யடைத்தொரு வழியைத்
　　திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த்
தக்க வஞ்செழுத் தோரெழுத் துருவாந்
　　தன்மை கண்டரு டரும்பெரு வெளிக்கே
புக்க ழுந்தின ரெமதுருப் பெறுவார்
　　புவியில் வேட்டுவ னெடுத்தமென் புழுப்போல்.

இ—ள்: முக்குணம் புலன் ஐந்து உடன் அடக்கி - சாத்துவிகம் இராசதம் தாமத மென்னு முக்குணங்களையும் சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களாகிய ஐம்புலன்களோடு சேர அடக்கி, மூலவாயுவை எழுப்பு இரு வழியைச் சிக்கெனும்படி அடைத்து - மூலாதாரத்தினின்றும் பிராணவாயுவை மேலெழுப்புகின்ற இடை பிங்கலையாகிய இரு நாடிகளையுஞ் செவ்வே அடைத்து, ஒரு வழியைத் திறந்து - சுழிமுனையாகிய நடு நாடியைத் திறந்து, தாண்டவச் சிலம்பொலி உடன் போய் - தியானத் தானமாகிய புருவமத்தியிற் சூக்குமவகையாற் செயப்படும் அநவரத தாண்டவச் சிலம்பொலியோடு போய், தக்க அஞ்செழுத்து ஓர் எழுத்து உருவாம் தன்மை கண்டு - தகுதியாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரங்களும் ஏகாக்ஷரமாந் தன்மையை ஞானக் கண்ணினாலே தரிசித்து, அருள் தரும் பெரு வெளிக்கே புக்கு அழுந்தினர் - திருவருள் சுரக்கும் பரவெளியின்கட் புகுந்து லயித்த சிவயோகிகள், புவியில் வேட்டுவன் எடுத்த மென் புழுப்போல் எமது உருப் பெறுவார் - இப்பூமியின்கண் வேட்டுவனென்னும் செந்துவினா லெடுக்கப்பட்ட புழுப் பின்னர் அவ்வேட்டுவ னுருவைப் பெறுதல் போல எமதுருவைப் பெறுதலாகிய சாரூபத்தை யடைவர் எ—று.

முக்குணம் புலனைந்துட னடக்கலாவது அவற்றை மனஞ்சென்ற வழிச் செலுத்தாது தடுத்துத் தாரணைக்கணிறுத்தலாம். எழுப்பிருவழியென இடம் கருத்தாவாயிற்று. இருவழியை யடைத்தென்பதனால் அவை முன்னர்த் திறக்கப்பட்டிருந்தன என்பதூஉம், ஒருவழியைத் திறந்தென்பதனால் அது முன்னர் அடைக்கப்பட்டிருந்ததென்பதூஉம் பெற்றாம். திருச்சிலம்பொலியை "ஓசை யெலாமற்றொ லொலிக்குந் திருச்சிலம்பி, னோசை வழியேசென் றொத்தொடுங்கி—னோசையினி, லந்தத்தா னத்தா னரிவையுடனம்பலத்தே, வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து" என்பதனானுமறிக. தகுதி சத்தகோடி மகாமந்திரங்களுள் விசேடத்தன்மை. அஞ்செழுத்தோரெழுத்



தாதலை, மேற் பரமவஞ்செழுத்து மொன்றாம் பராபரமுணர்த்து ஞான குருபரன் என்புழிக் கூறினும், ஆண்டுக் காண்க. பரவெளியின்கட் புக்கழுந்தலாவது தியானிப்போனாகிய தானுந் தியானமும் தோன்றாது தியானப் பொருளாகிய சிவம் ஒன்றே விளங்கப்பெறுதல். வெளிக்கென்பதுருபு மயக்கம். உவமை ஒன்று மற்றொன்றாகாது ஒன்றினது தன்மை மற்றொன்றினது தன்மையாதற் கெடுத்துக்காட்டியது. முக்குணங்களும் முறையே சுகதுக்க மோகங்கட்குக் காரணமாகலின் அவற்றை ஐம்புலன்களைப் போலக் குறிக்கொண்டு பாதுகாக்கவேண்டுமென்பார் முக்குணம்புலனைந்துட னடக்கி என முக்கியப் பொருளாக வைத்துக் கூறினார். மேல் இச்சரியை இந்த நற்பெருங்கிரியை என்றாற்போல இவ்வியோகர் இவ்வித்தகரெனச் சுட்டு வருவித்துரைக்க. இவ்வியோகபாதத்தை "கட்டளைகப்பணங் கட்டளையிட்டுத், தட்டுறுமலந்தீர் சாதனமொழிந்து, கடுங்கொலைவெறும் பொய் களவுகட்காமம், படும்பெயர் பஞ்சபாதகந்தீர்த்துக், காமங்கோபங் கசடுறு முலோபங், தீமனமோகஞ் சேர்மதமாற்சரிய, மீண்டிவைமுதலா வெண்ணில் பாவம், பூண்டனவொழியப் புந்திதந்தருளி, மன்னுகீழரணி வருத்தமிலுணர்வாய்ப், பின்னுமேலரணி பிரணவமாகக், கடையவேஞானக் கனலெழுமென்றே, தடைபடாப்பாச தகனஞ்செய்தா, னருளெனுந்தலத்திலறிந்துகான்மடக்கி, யிருளறவிருக்கு மியற்கையும்விண்டான், பன்னிரண்டங்குலம் பறிந்திடும்பிராணன், பின்னதினான்கும் பிரிந்துபோமதனா, லாயுளும்குறைந்திட்டாக்கையுந்தளர்ந்து, சாயுமென்றுரைத்துச் சாகாதிருக்க, நாடியோர்பத்து நாடிநாடிகள்புக், கோடியவாயு வொருபதுந்தேர்ந்து, சொன்னநாடிகளிற் சுழிமுனைநடுவா, மின்னதின்பக்கத் திடைபிங்கலையா, மக்கினிதிங்க ளாதவன்கலைகள், புக்கமுச்சாரமும் போய்மீண்டியங்கு, மூலகுண்டலியா முரகமூச்செறிந்து, வாலதுமேல்கீழ் மண்டலமிட்டுப், படந்தனைச் சுருக்கிப் படுத்துறங்குவது, நடந்துமேனோக்கி ஞானவீடளிக்கு, மண்டலமூன்று மருவுதாண்புகவக், குண்டலியெழுப்புங் கொள்கையீதென்றான், முன்னதிரேசக முப்பத்திரண்டு, பின்னதுபூரகம் பேசுமீரெட்டுக், கும்பகநாலோ டறுபதாக்கூறுந், தம்பமாத்திரையின் றன்மையுமுணர்த்தி, மூலமேமுதலா முடிநடுவுச்சிப், பாலளவினுநீள் படுதுளை நோக்கி, மூலாதாரத்தின் முச்சுழிச்சுடரை, மேலாதாரத்தின் மெல்லெனத்தூண்டி, யிருவழிக்காலு மொருவழிநடத்திக், கருவழியடைத்துக் கமலமாறுருவிப், பன்னிரண்டந்தம் பரிதியுமதியு, மன்னியொன்றான வண்ணமுந்தெரிந்து, கமடமைந்தடக்குங் கருத்தெனப்பொறியின், மமதைகளடக்கி மனோலயமாக்கி, மூலக்கனலான் முழுமதியுருக்கிப், பாலைப்பருகும் பண்புதந்தருளி, யிட்டகாமியமு மெண்ணெண்கலையு, மட்டமாசித்தியு மன்புறக்கொடுத்துப், பன்னிருபட்சியும் பறவாவண்ண, மென்னுளேசிறுத்து மியற்கையும் விண்டான், மூலமேமுதலா மூவிருதலத்தின், கோலமும்பூதக் குறி

களுமதன்பா, லேம்பதோடொன்று மக்ஷரவிதமும், பொன்பொலிகமலப்
பூவிருமூன்றுங், தாரகவெழுத்துஞ் சார்பெழுத்தைந்தும் வாரணமுக
வன் மலரோன்றிருமால், வருத்தமிலுருத்திரன் மகேசுவரன்சதாசிவ,
னுருத்தெளிந்திடநம் முருவேயாகு, மாறுமாமுகத் தமர்ந்ததுமிதுவே,
வேறிலையென்று மெய்ம்மொழிசெப்பி, யிலங்குமாயிரத்தெட் டிதழ்த்
தாமரைமேற், றுலங்கிடுநடன சோதியுங்காட்டி, யிருபத்தோரா யிரத்தறு
நூறுய், மருவிநாடோறும் வளர்சுவாசத்தைச், சங்கெனவாங்கிச் சமனுறக்
கும்பித், தங்கென்றெழுப்பும் சபையுமருளிப், பொருளருளான்மாப் பொருந்
திடுந்திரோதை, மருவிருமலமாய் வயங்குமைந்தெழுத்திற், றிரோதையு
மலமுந் தீர்த்தத னிடத்தில், வரோதையமான வாசியைநிறுவி, வளம்பொலி
சிவாய வாசியென்றுளத்தில், விளம்புகின்னே விளக்குமானந்த, முத்தியைந்
தெழுத்து மொழிந்தனமிதனைச், சித்தசாந்தியினிற் செப்பெனமொழிந்
தான், வாசிவாவென்ன வழங்குமூன்றெழுத்தும், பேசுதன்முதிர்ந்த
பேறெனமொழிந்தா, னின்பமாம்வாசி யெனுமீரெழுத்தி, லன்புறுமகிமை
யதிசயமென்றான், சீயெழுத்தொன்றே சிந்தையிற்கருதத், தூயநற்சுட
ராய்த் தோன்றுவையென்றான், விந்துவுநாதமு மேவியவெளியிற், சிந்
தையைநிறுவிச் சிவன்வடிவாகித், தாக்குவைமூல நோக்குவை யதீதம்,
போக்குவை பிறவி யாக்குவையின்பெனத், தராப்புகுநார்போற் சமனுற
நிற்கு, மிராப்பகலற்றவிடத்தே யிருத்தி, நலம்படர்சோதி நடனகுஞ்சிதத்
தாட், சிலம்பொலிகேட்குந் திறம்பாலித்தான், மயற்பொறிபுலன்வாய்
மனம்புகுநனவி, லியற்றிடுதவங்க ணியமநிட்டையதாஞ், சார்பொறிவிடுத்த
சாக்கிரக்கனவு, சேர்தருகருத்தாற் செய்தவநியமம், நீங்காக்கரண
நீங்கவே நனவிற், றூங்காத்தூக்கச் சுழுத்தியாசனமா, மறிந்துதொண்ணூறு
மாறும்வேருக்கிப், பிறிந்துதற்கண்டு பிரமமேதானுய்ச், சாதனம்விடுத்த
சாக்கிரதுரியம், பேதமற்றிருக்கை பிராணயாமஞ், சான்றுசாக்கிரம்போய்த்
தானிருந்தமையுந், தோன்றிடாதுலகைச் சுழற்றுங் கால்போற், பறந்திடுங்
காலாற் பரமறந்தளவிற், பிறந்திடுமதீதம் பிரத்தியாகாரம், வரனெனு
மகண்ட வடிவுகொண்டெங்குந், தானென்றிருக்கை தாரணையாகுங், காட்சிக
ளனைத்துங் கண்ணதாய்விளங்கி, யாட்சியினமைந்த ததுவேதியானந், தற்ப
தந் தொம்பதஞ் சார்ந்திடுமுபாதி, கற்பனைதீரக் கண்டசிற்பதமாஞ் சச்சிதா
னந்த சமரசநிலைதோர்ந், துற்றசிற்பதம்பெற் றுறங்குதல்சமாதி, மன்னிடு
சாம மறையுபநிடதஞ், சொன்னவாக்கியத்தின் றெகையிதேஞான, யோக
வெட்டங்க முண்மைநீ யுணர்தி, யேகசாரூப்பிய மிதுவெனமொழிந்தான்"
என்பதனுனுமுணர்க. இதனுனே அகத்தொழின் மாத்திரையானே அரு
வத் திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடே யோகமென அதனிலக்க
ணமும் பயனுங் கூறியவாறு. அது "சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்து
வழியிரண்டுஞ் சலிப்பற்று முச்சதுர மூலாதாரங்க, ளகமார்க்க மறிந்தவற்றி
னரும்பொருள்க ளுணர்ந்தங் கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண்



டலத்தின், முகமார்க்க வமுதுடல முட்டத்தேக்கி முழுச்சோதி நினைந்
திருந்தன் முதலாக வினைக, ளுகமார்க்க வட்டாங்கயோகமுற்று முழத்த
வழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்" என்பதனுனுமறிக. (எக)

பரந்த வான்கலை முழுதுமா கமநூற்
பகுதி யும்பல சமயசாத் திரமுந்
தெரிந்து தேர்ந்ததில் வாய்ந்தமுப் பொருளின்
செய்தி யேபொரு ளெனமனந் தெளிந்து
புரிந்து போந்துள சிற்றறி வனைத்தும்
போக்கி யவ்வறி வெனச்சிவ போதம்
விரிந்து தோன்றுநெஞ் சுடையவித் தகரே
மேன்மை யானநம் மெய்ப்பதம் பெறுவார்.

இ—ள்: பரந்தவான் கலை முழுதும் - மிகவும் விரிந்த பெரியகலைக
ளனைத்தையும், ஆகமநூற் பகுதியும் - ஆகமநூற் பாகுபாட்டையும், பல
சமய சாத்திரமும் - பலதிறத்தனவாகிய சமயநூல்களையும், தெரிந்து
தேர்ந்து - ஓதியுணர்ந்து, அதில் வாய்ந்த முப்பொருளின் செய்திஎ
பொருள் என மனந்தெளிந்து - அந்நூல்களிற் பிரதிபாதிக்கப்பட்ட பதி
பசு பாசமென்னுந் திரிபதார்த்த லக்ஷணமே முக்கியப்பொருளென்று
மனத்திநிச்சயித்து, புரிந்து போந்துள சிற்றறிவு அனைத்தும் போக்கி -
முன்செய்து போந்த சிற்றறிவு சிறுதொழில்களனைத்தும் பயனிலவென்று
கண்டு கழித்து, அவ்வறிவு எனச் சிவபோதம் விரிந்துதோன்றும் நெஞ்சு
உடைய வித்தகரே - முன்னர் அச்சிற்றறிவின் விரிவைப்போலப் பின்னர்ச்
சிவஞானம் விரிந்து தோன்றப்பெறும் மனத்தையுடைய சாதுரியர்களாகிய
சிவஞானிகளே, மேன்மையான நம் மெய்ப்பதம் பெறுவார் - அப்பதமுத்தி
மூன்றுக்கும் மேலாகிய எமது சத்தியமுத்தியைத் தலைப்படுவார் எ—று.

அது சாதியொருமை, செய்தி காரியம். சிற்றறிவு விடாதவாகுபெயர்.
புரிவு விருப்பமுமாம். வேதமுதலிய அறுபத்துநான்கு கலைஞானங்களு
மென்பார் பரந்தவான்கலை முழுதுமென்றும், விசேஷ வித்தையாகிய சிவா
கம மவற்றுள் அடங்காமையின் அதனையு மடக்குதற்குப் பின்னர் ஆகம
நூலென விதந்தும், அம்முதனூலாகிய மூலாகமந்தான் சிவபேதம் உருத்திர
பேதமென இருவகைப்படுதலின் அது விளக்குதற்கு ஆகமநூற்பகுதி
யென்றும், சமயம் புறப்புறம் புறம் அகப்புறம் அகமென நால்வகைப்படுத
லின் அச்சமயசாத்திரங்களும் பல திறத்தனவென்பார் பல சமயசாத்திர
மென்றும், அவைகளையெல்லாங் கேட்டுச் சிந்தித்து ஆவனவற்றைத் தெளி
தல் வேண்டுமென்பார் தெரிந்து தேர்ந்ததில் வாய்ந்த முப்பொருளின்
செய்தியே பொருளென மனந் தெளிந்தென்றும், கீழுள்ளனவற்றைக்
கீழெனக்கண்டு கழித்தாலன்றி மேலுள்ளன பயன்படாவென்பார் புரிந்து

போந்துள சிற்றறிவனைத்தும் போக்கியென்றும், பெத்தநிலைக்கணான்மபோத வியாபகம்போல முத்திநிலைக்கட் சிவபோத வியாபகமாகிய நிட்டை கூடுதல் ஒருதலையான் வேண்டப்படுமென்பார் உவமை யெடுத்துக்காட்டி அவ்வறிவெனச் சிவபோதம் விரிந்து தோன்றும் நெஞ்சுடைய வித்தகரே என்றும், இதுவே பரமுத்தியாகிய சாயுச்சியமென்பார் மேன்மையான நம் மெய்ப்பதமென்றுங் கூறினார். ஈண்டு மெய்ப்பதம் பெறுதலென்றது அத்துவிதமா யியைதலே. அத்துவிதமா யியைதலாவது ஆன்மபோதமும் கண்ணொளியும் போலச் சிவமும் ஆன்மாவும் தம்முளிரண்டற ஒற்றுமைப்பட்டு நிற்றலாம். பிரமமும் ஆன்மாவுமெனப் பொருளிரண்டில்லை ஒன்றேயெனக் கூறுவர் மாயாவாதிகள். சிவமும் ஆன்மாவும் வேறுபொருளெனவும் அவ்விரு பொருளே இரண்டெனை வேற்றுமைப்படாது அதுவிதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றாய் நிற்குமெனவுங் கூறுவர் சைவசித்தாந்திகள். அத்துவிதமென்னுஞ் சொற்கு இரண்டின்மையெனப் பொருள்கொள்வர் மாயாவாதிகள். இரண்டன்மையெனப் பொருள்கொள்வர் சைவசித்தாந்திகள். வேதமுதலிய அறுபத்துநான்கு கலைகளாவன: வேதம், புராணம், வியாகரணம், நீதிநூல், சோதிடம், கணிதம், தருமசாத்திரம், யோகசாத்திரம், மந்திரசாத்திரம், வைத்தியசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், நிருத்தம், பூமிபரீக்ஷை, ஆகருஷணம், பரகாயப்பிரவேசம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம் முதலியன. சிவாகமம், காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம். சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாதம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளமென இருபத்தெட்டாம். இவற்றுட் காமிக முதலிய பத்தும் விஞ்ஞானகலருட் பரமசிவனது அநுக்கிரகத்தைப் பெற்ற பிரணவர் முதலிய பத்துச் சிவன்களுக்கும் அருளிச் செய்யப்பட்டமையாற் சிவபேதமெனவும், விசயமுதலிய பதினெட்டும் இவ்வாறு பரமசிவன்பால் உபதேசம் பெற்ற அநாதி ருத்திரர்முதலிய பதினெட்டு ருத்திரர்களுக்கும் அருளிச் செய்யப்பட்டமையால் உருத்திரபேதமெனவுங் கூறப்படும். இச்சிவாகமங்கள் சித்தாந்தமெனவும், மாந்திரமெனவும், தந்திரமெனவும், பெயர்பெறும். இவற்றுட் காமிகத்துக்குப் பரார்த்தமும், யோகசத்துக்கும் சிந்தியத்துக்கும் மகுடத்துக்கும் முகவிம்பத்துக்கும் வாதுளத்துக்கும் தனித்தனி இலக்ஷமும், காரணத்துக்கும் நிச்சுவாசத்துக்கும் தனித்தனி கோடியும், அசிதத்துக்கும் தீப்தத்துக்கும் வீரத்துக்கும் தனித்தனி நியுதமும், சூக்குமத்துக்குப் பதுமமும், சகச்சிரத்துக்குச் சங்கமும், அஞ்சுமானுக்கு ஐந்திலக்ஷமும், சுப்பிரபேதத்துக்கும் விஜயத்துக்கும் சந்திரஞானத்துக்கும் தனித்தனி மூன்றுகோடியும், சுவாயம்புவத்துக்கும் சித்தத்துக்கும் தனித்தனி ஒன்றரைக்கோடியும், ஆக்கினேயத்துக்கு முப்பதினாயிரமும்,



ரௌரவத்துக்கு எட்டர்ப்புதமும், விமலத்துக்கும் புரோற்கீதத்துக்கும் மூன்றிலக்ஷமும், லளிதத்துக்கு எண்ணாயிரமும், சந்தானத்துக்கு ஆறாயிரமும், சர்வோக்தத்துக்கு இரண்டிலக்ஷமும், பாரமேசுரத்துக்குப் பன்னிரண்டிலக்ஷமும், கிரணத்துக்கு ஐந்துகோடியும் கிரந்தசங்கியைகளாம். சங்கியை - அளவு. இவை ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம் சரியாபாதமெனத் தனித்தனி நான்குபாதங்க ளுடையனவா யிருக்கும். இவற்றுள் ஞானபாதத்திலே பரமசிவனுடைய சொரூபமும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரென்னு மான்மாக்களின் சொரூபமும், ஆணவம் காமியம் மாயேயம் வைந்தவம் திரோதானசத்தியென்னும் பஞ்சபாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும் சிவதத்துவமுதற் பிருதிவி தத்துவ வரை முப்பத்தாறு தத்துவங்களது உற்பத்தியும், இவை ஆன்மாக்கள் போகம்புசிக்கைக்குக் கருவியாமுறைமையும் புவனங்கள் புவனேசர் சொரூபங்களும், புவனங்களின் யோசனைப் பிரமாணங்களும், அதமப் பிரளயம் மத்தியமப்பிரளயம் மகாப்பிரளயங்களின் சொரூபமும், அந்தப் பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டிபா முறைமையும், பாசுபதம் மகாவிரதம் காபால முதலிய மதங்களின் சொரூபமுங் கூறப்படும். கிரியா பாதத்திலே, மந்திரங்களி னுத்தாரணம், சந்தியாவந்தனம், பூசை செபமோமங்களும், சமய விசேட நிருவாண ஆசாரியாபிடேகங்களும் புத்தி முத்திகளுக் குபாயமாகிய தீக்கையும் கூறப்படும். யோகபாதத்திலே இந்த முப்பத்தாறு தத்துவங்களும், தத்துவேசுரரும், ஆன்மாவும், பரமசிவனும், சத்தியும், சகத்துக்குக் காரணமாகிய மாயை மகாமாயைகளைக் காணும் வல்லமையும், அணிமாதி சித்திகளுண்டா முறைமையும், இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதிகளினுடைய முறைமையும், மூலாதாரமுதலிய ஆறாதாரங்களின் முறைமையுங் கூறப்படும்; சரியாபாதத்திலே, பிராயச்சித்தவிதியும், பவித்திர விதியும், சிவலிங்கலக்கணமும், உமாமகேசுர முதலிய வியத்தாவ்வியத்த லிங்கங்களின் இலக்கணமும், நந்திமுதலிய கணநாதரிலக்கணமும், செபமாலை யோகபட்டம் தண்டம் கமண்டலம் முதலியவற்றின் இலக்கணமும், அந்தியேட்டி விதியும், சிராத்த விதியுங் கூறப்படும். சிவபெருமானுக்குக் காமிகம் திருவடிகளும், யோகஜம் கணைக்கால்களும், சிந்தியம் திருவடி விரல்களும், காரணம் கெண்டைக்கால்களும், அசிதம் முழந்தாள்களும், தீப்தம் தொடைகளும், சூக்குமம் குய்யத்தானமும், சகச்சிரம் கடித்தானமும், அஞ்சுமான் முதுகும், சுப்பிரபேதம் கொப்பூழும், விசயம் உதரமும், நிச்சுவாசம் நாசியும், சுவாயம்புவம் முலைகளும், ஆக்கினேயம் கண்களும், வீரம் கழுத்தும், ரௌரவம் செவிகளும், மகுடம் திருமுடியும், விமலம் கைகளும், சந்திரஞானம் மார்பும், முகவிம்பம் திருமுகமும், புரோற்கீதம் திருநாக்கும், லளிதம் கபோலங்களும், சித்தம் திருநெற்றியும், சந்தானம் குண்டலமும், சர்வோக்தம் உபவீதமும், பாரமேசுவரம்

ஆரமும், கிரணம் இரத்தினாபரணங்களும், வாதுளம் திருப்பரிவட்டமும், காலோத்தரம் திருமேற்பூச்சும்; மற்றை உபாகமங்களெல்லாம் பரிமளதிரவியங்களும் புஷ்பங்களும், சைவசித்தாந்தம் நைவேத்தியமுமாமென்க. இன்னும், ஆகமநூலென்றமையாது ஆகமநூற்பகுதியு மென்றதனானே உபாகமங்களும் அட்டப்பிரகரணங்கண் முதலியனவுமாகிய வழிநூல் சார்புநூல்களையுங் கொள்க. உபாகமங்கள் நரசிங்கமுதல் விசுவான்மகம் ஈறாகிய இருநூற்றேழுமாம். இவற்றின் பெயர்களைக் காமிக முதலியவற்றுட் காண்க. அட்டப்பிரகரணங்களாவன: தத்துவப்பிரகாசிகை, தத்துவசங்கிரகம், தத்துவத்திரய நிர்ணயம், போககாரிகை, மோக்ஷகாரிகை, நாதகாரிகை, பரமோக்ஷநிராசகாரிகை, இரத்தினத்திரயம் என்பனவாம். புறப்புறச்சமயம் உலோகாயதம், நால்வகைப் பௌத்தம், ஆருகதமென அறுவகைப்படும். நால்வகைப்பௌத்தம் சௌத்திராந்திகம், யோகசாரம் மாத்மீகம், வைபாடிகமென்பன. புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை ஏகான்மவாதம், சாங்கியம், யோகம். பாஞ்சராத்திரமென அறுவகைப்படும். இவற்றுள் ஏகான்மவாதம் மாயாவாதமும், பாற்கரியவாதமும், கிரீடாப்பிரமவாதமும், சத்தப்பிரமவாதமுமென நால்வகைப்படும். அகப்புறச்சமயம் சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், என அறுவகைப்படும். அகச்சமயம் பாடாணவாதசைவம் சங்கிராந்தவாத சைவம், அவிகாரவாத சைவம், பரிணமவாத சைவம், சுத்த சைவம், பேதவாத சைவமென அறுவகைப்படும். ஆசீவகம், பாட்டம், பிரபாகரம், துவிதவாதம், சாக்தேயம், காபாலிகம், சூரியவாதம், மிச்சிரவாதம், கருமவாதம், சிவசமயவாதம் முதலிய ஏனைச்சமயங்களுந் தம்முட் சிறிது சிறிது வேறுபாட்டோடு இந்நான்குகூற்றுச் சமயங்களுள் அடங்குமென்க. உலோகாயதமுதல் ஐக்கியவாதமீறாகிய புறப்புறம் புறம், அகப்புறமென்னு முக்கூற்றுச் சமயங்களெல்லாம் பூதமுதல் அசுத்த மாயாதத்துவமீறாயுள்ள ஒவ்வோர் தத்துவங்களிலே நிலைபெறும். அவ்வத்தெய்வங்கள் நிலைபெறுந் தத்துவமே அவ்வச் சமயங்களுக்கு முத்திநிலையாகும். இவற்றையெல்லாம் கடந்துநின்றது சைவசித்தாந்தமென்க. அது "அறுசமயத்திற் கடந்த சைவத்தினன்றி வீடிலதெனத் தெளிந்து" என்பதனானுமறிக. இச் சைவசித்தாந்த சமயசாத்திரம் விந்துவினின்றும் நாதந்தோன்றி விந்துவும் பிரணவமும் வன்னங்களுமாக முறையே பரிணமித்து அநட்டுப்புச் சந்தசாய்ச் செய்யப்பட்ட முற்கூறிய ஆகமங்கள் இருபத்தெட்டுமாம். உலோகாயத முதலிய மற்றைச் சமயநூல்களெல்லாம் பொய்ந்நூல்களென்க. அது "பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல் வழியனைத்தும் பிழையேயன்றி, வாயன்மை தெளிந்துசைவ சித்தாந்த வழிதேறி" என்பதனானுமறிக. இச்சமயநூல்களையெல்லாம் விளங்கியவழியல்லது மெய்ச்சமயநூலுயர்வு தெற்றென விளங்காமையின் ஞானி இந்நூற்பகுதிகளையெல்லாம் அறிதல் வேண்டுமென்பார் பரந்தவான் கலைமுழுது மாகம நூற்பகுதியும் பலசமய சாத்திரமுந் தெரிந்



தென்றார். இதனானே புறத்தொழில் அகத்தொழி லிரண்டு மின்றி அறிவுத்தொழின் மாத்திரையானே அம்மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு ஞானபாதமென அதனிலக்கணமும் பயனுங் கூறியவாறென்க; அது "சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து, பன்மார்க்கப் பொருள் பலவுங் கீழாக மேலாம் பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு, நன்மார்க்க ஞானத்தா னாடி ஞான ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம், பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப் பெருமையுடை யோர் சிவனைப் பெறுவர் காணே" என்பதனானு முணர்க. (எஉ)

உருப் பொலாதவ ரிழிகுலத் தவர்நல்
லொழுக்க மில்லவ ரென்றுநம் மளவில்
விருப்பி லாதவ ரெனினுமெய்ந் நீறு
மிக்க சாதன வேடமுங் கண்டாற்
றரிப்பி லாதுசென் றெதிருற வணங்கித்
தக்க போனக மளித்தவர்க் கெளிதா
யிருப்பர் தாமவர்க் கடியவர்க் கடியா
ரென்பர் யானென தெனுஞ்செருக் கறுப்பார்.

இ—ள்: உருப்பொல்லாதவர் - சரீரக் குற்றமுடையவர், இழிகுலத்தவர் - தாழ்ந்த வருணத்தவர், நல் ஒழுக்கம் இல்லவர் - துராசாரமுடையவர், என்றும் நம் அளவில் விருப்பு இலாதவர் எனினும் - எஞ்ஞான்றும் நம்மிடத்து அன்பில்லாதவர்களே யாயினும், மெய்ந்நீறும் மிக்க சாதன வேடமும் கண்டால் - அவருடைய சரீரத்திலே விபூதியையும் ஒழிந்த சமய சாதனத்தோடு கூடிய திருவேடத்தையுந் தரிசிக்கப்பெறின், தரிப்பு இல்லாது சென்று எதிர் உற வணங்கி - சிறிதுந் தடைப்படாது எதிர்கொண்டு வணங்கி, அவர்க்குத் தக்க போனகம் அளித்து - அவர்களுக்குத் தம்மா லியன்ற திருவமுது படைத்து, அவர்க்கு எளிது ஆ இருப்பர் தாம் அடியவர்க்கு அடியார் என்பர் - இங்ஙன மவருக் கடிமையாக வழிபட் டொழுகுபவரே நம்மடியவர்க்கு அடியவரென்று சிறப்பித்துச் சொல்லப்படுவர், யான் எனது என்னும் செருக்கு அறுப்பார் - அவர் யான் என்னு மகங்காரமாகிய தனு கரணங்களும் எனது என்னு மமகாரமாகிய புவன போகங்களுமாகிய மயக்கத்தை ஒழிப்பார் எ—று.

எனினு மென்பதனை ஏனையவற்றோடுந் தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க. அது, உருப்பொல்லாமை இழிகுலம் ஒழுக்கமின்மை விருப்பமின்மைகளின் இழிவையும், திருவேடத்தின் உயர்வையுங் காட்டிநின்றது. இந்நான்கையு மொருங்குடையராயினுந் திருவேடமுள்வழி ஒரு தலையான்

வணங்கற்பால ரென்பதூஉம் போதா அவ்வேட மீண்டிறுதிக்கண் வைக்கப் பட்டதெனக. ஒழிந்த சாதனம் உருத்திராக்கம், காஷாய வஸ்திரம் முதலாயின. சாதனம் - அடையாளம். எளிது - எளிமை. ஆகவென்னுஞ் செயவெனெச்சம் ஆவெனக் குறைந்துநின்றது. இருப்பரென்பது ஈறு திரியாத வினையாலணையும் பெயர். தாமென்பது தேற்றப் பொருட்கண் வந்தது; அவன்றானிவன் என்புழிப்போல. சரீரக்குற்றம் - அங்கவீனத்துவம் முதலாயின. இழிகுலம் சண்டாள குலம் முதலாயின. நல்லொழுக்கம் அன்னை தந்தையை வழிபடுதல் முதலாயின. திருவேட மகிமையை, "எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறுங் கண்டிகையுங் கண்டாலுள்கி, யுவராதே யவரவரைக் கண்டபோது முவந்தடிமைத்திற நினைந்திங் குவந்து நோக்கி" என்றற் றொடக்கத்துத் திருவாக்குக்களினும், "உவர்மட் பொதிகரைந் துவரதூறிய, வண்ணான்மேனி வெண்ணிறம் படைத்தலு, மிவர்சிவனடியார் வேடமு மிதுவென, நகர்வலம்புரியும் புகர்முகக் களிற்றி, னெருத்தத்திருந்து குதித்துநனி விரைந்து, கர கமலங்கள் சிரமிசைக் கூம்ப, நிலனுற வீழ்ந்தைம் புலனற வணங்கலும், ஆரென நினைந்த தடிவண்ணானெனச், சேரலர் தாமு மடிச்சே ரலனென, ஞாபகந்தந்த பேருதவியினீர், வருந்தாதேகுமி னெனவழி விடுத்த, பெருந்தகைச் சேரமான் பெருமா ணாயனார்" முதலிய உண்மைநாயன்மார்களிடத்துங் காண்க. திருவேடத்தை ஞாபகங் கூர்வித்தலிற் போலிவேடமும் வழிபடுவார்பாற் பயனுடைத் தென்பது பத்திமார்க்க வழக்காகலின், 'வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்' என்பது முதலியன வேடநெறி நில்லார்க்குப் பயனில்லாமையை விளக்குதலின் முரணாகாமை யறிக. இதனானே திருவேட மகிமை கூறுமுகத்தாற் சிவனடியார்க் கடியவரிலக்கணமும் பயனுங் கூறியவாறெனக. (எ௬)

விரிந்த சஞ்சித வினைகளன் புடனாம்
விழிக்க வெந்தன விரவுமிப் பிறப்பிற்
பொருந்தும் வல்வினை யுடலுட னகலும்
புந்தி சேரருள் வருவினை போக்கு
மருந்து யர்ப்பொரு ளுயிருடம் புனவே
யல்ல நம்மன வாகுமிங் குனைப்போ
லிருந்த நங்குரு வடிவைநின் கருத்தி
லிருத்து வாய்பொரு ளிதுவென மொழிந்தார்.

இ—ள்: விரிந்த சஞ்சித வினைகள் அன்பு உடன் நாம் விழிக்க வெந்தன - புத்தி தத்துவம் பற்றுக்கோடாக மாயையிலே பரந்துகிடந்த நின் சஞ்சித கன்மங்க ளெல்லாம் நாம் முன்னரே நின்னிடத் தன்புகொண்டு நயன தீக்ஷை செய்யவே ஞானக்கினியினாலே தகிக்கப்பட் டொழிந்தன, விரவும் இப்பிறப்பில் பொருந்தும் வல்வினை உடல் உடன் அகலும் - எடுத்த இப் பிறப்பின்கண் முகந்து கொண்ட பிராரத்த கன்மங்கள் இச் சரீர



நீக்கத்து அதனோடு அநுபவிக்கப்பட்டுத் தொலையும், புந்தி சேர் அருள் வருவினை போக்கும் - உன் மனத்திற் பதிந்த நம்மருளானது இனி ஆகாமிய கன்மங்கள் ஏறவொட்டாது தடுக்கும், உடல் பொருள் உயிர் உனவே அல்ல நம்மன ஆகும் - உடல் பொருள் ஆவி என்னுமிம்மூன்றும் இனி உன்னுடையவைகளல்ல நம்முடையனவாகும், (அது நிற்க), இங்கு உனைப் போல் இருந்த நம் குரு வடிவை நின் கருத்தில் இருத்துவாய் - இங்கே உன்னைப்போல மானுடச் சட்டைசாத்தி யெழுந்தருளிவந்திருக்கின்ற நங் குருவடிவத்தை உன் மனத்திற் பதிப்பாய், இது பொருள் என மொழிந்தார் - இதுவே ஆகமங்களி னறிந்து நோடற்கரிய சித்தாந்தப் பொருளாமென்று பரமாசாரியர் வாதவூரடிகளாகிய சீடருக்குப் போதித்தலெனப் படும் வாசிகதீக்ஷை செய்தருளினார் எ—று.

அருந்துயர்ப்பொருள் - அநுபவித்தற்கரிய துன்பத்தையுடைய பொருள். அது "ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக் காத்தலு மாங்கே கடுந்துன்பங்—காத்தல், குறைபடிற்றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக், குறைபதி மற்றப் பொருள்" "இன்னாதரும் பொருளை யீட்டுவதுந் துன்பமே, பின்னதனைப் பேணுவதுந் துன்பமே—யன்ன, தளித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா, விழத்தலுந் துன்பமேயாம்" என்பவற்றானு மறிக. ஆணவ கன்ம மாயை யென்னு மும்மலங்களுட் கன்மமாவன ஆன்மாக்கள் மனவாக்குக் காயமென்னுந் திரிகரணங்களினானும் செய்துகொண்ட புண்ணிய பாவங்களாம். இவை, எடுத்த பிறப்பிலே செய்யப்பட்டபோது ஆகாமியமெனவும், பிறவிதோறு மிங்ஙன மீட்டப்பட்டுப் பக்குவப்படும் வரையும் புத்தி தத்துவம் பற்றுக்கோடாக மாயையிலே கிடக்கும்போது சஞ்சிதமெனவும், இச்சஞ்சித கன்மங்களுள்ளே பக்குவப்பட்டவை, மேலெடுக்கு முடம்பையும் அதுகொண் டனுபவிக்கப்படும் இன்ப துன்பங்களையும் தந்து பயன்படும்போது பிராரத்தமெனவும் பெயர்பெறு மெனக. திருவருள் புந்திபிற்பதியவே, தற்போதங்கெட்டுச் சிவபோதம் மேலிட்டுச் சீவச் செயலெல்லாம் சிவச்செயலாய் விடுதலின், ஆகாமியமேறமாட்டாவென்பார் புந்திசே ரருள் வருவினை போக்குமென்றும், நின்மனம் பற்றுதற்குரிய வடிவென்பார் இங்குனைப்போலிருந்த நங்குருவடிவென்றும், அநாதியாயுள்ள மலவாதனை பயிற்சி வயத்தான் மீளவும் வந்து தாக்காமைப் பொருட்டுச் சிவோகம் பாவனை செய்யென்பார் நங்குருவடிவை நின்கருத்தி லிருத்துவா யென்றும், பரந்த வாகமங்களினெல்லாம் முடிந்த முடிபாகிய சித்தாந்தப் பொருள் இதுவே யென்பார் பொருளிதுவெனச் சுட்டி விதந்துங் கூறினார். ஈண்டுப் பரமாசாரியர் திருவாதவூரடிகளது உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்புக்கொண்டமையை, "அன்றேயென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றேயனையா யென்னை யாட்கொண்ட போதே கொண்டிலையோ, வின்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்கணெம்

மானே, நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானே விதற்கு நாயகமே" என அவ்வடிகளே கூறிய திருவாக்கானு முணர்க. விரும்பி முற் செனனம், புரிந்த வல்வினை என்னும் பாடம் போலிப்பாடமென விடுக்க. (எச)

அத்த னார்திரு வாய்மலர்ந் தருளு
மமல வாசகங் கேட்டக மகிழும்
பத்த னார்தமக் கெழுபிறப் பறுக்கும்
பாதமீ துறப் பணிந்தெதி ரெழுந்து
பித்த னனவென் பிழைதனக் கிரங்கும்
பிஞ்ஞ காமிகப் பேதைமை யுடையேன்
முத்த னாகமெய் காட்டினை யெனவே
மொழிந்த ழிந் துகைம் முடிமிசைக் குவித்தார்.

இ—ள்: அத்தனார் திருவாய் மலர்ந்தருளும் அமல வாசகம் கேட்டு அகம் மகிழும் பத்தனார் - பரமபிதாவாகிய சிவபெருமான் இங்ஙனந் திருவாய்மலர்ந்தருளிய நிருமலமாகிய உபதேசவாக்கைக் கேட்டு மன மகிழுஞ் சிவபத்திமானாகிய திருவாதவூரடிகளானவர், தமக்கு எழுபிறப்பு அறுக்கும் பாதம் மீது உற எதிர் பணிந்து எழுந்து - தமக்கெழுவகைப் பிறப்பையும் பற்றறச்செய்து உபகரித்த திருவடிகளிற் சிரசு தோயச் சந்நிதியிலே வீழ்ந்து வணங்கி யெழுந்துநின்று, பித்தன் ஆன என் பிழை தனக்கு இரங்கும் பிஞ்ஞகா - பிரபஞ்ச பிராந்தியையுடையேனாகிய தமியேனது குற்றத்திற்குத் திருவுள மிரங்கியருளுங் கருணாநிதியே, மிகப் பேதைமை உடையேன் முத்தன் ஆக மெய் காட்டினை என மொழிந்து - மிகவும் அஞ்ஞானத்தையுடைய தமியேன் மலமுத்தனாகும்படி ஆகமங்களின் மெய்ப்பொருளாகிய சித்தாந்த நெறியைச் சந்தேக விபரீதமறப் புலப்படுத்தி யருளினீரென்று விண்ணப்பஞ் செய்து, அழிந்து -தம்வசமழிந்து, கை முடிமிசைக் குவித்தார் - பயிற்சிவயத்தாற் கைகளைச் சிரசிலே குவித்துக் கும்பிட்டார்.

எழுவகைப்பிறப்பு மேலே காட்டப்பட்டது. பிழை முத்தியெய்துதற்கு இதுகாறும் உன்முகஞ்செய்யாமை; உடல் பொருள் ஆவி மூன்றையும் இதுகாறும் என்னுடையவைக ளென்றெண்ணி யிருந்தமை என்றுமாம். சந்திரன் கங்கை முதலிய தலைக்கோலங்கள் ஆன்மாக்கண் மீது கொண்ட கருணை மிகுதியால் நேர்ந்தனவாகலிற் பிஞ்ஞகா என்பதற்குக் கருணாநிதியே எனப் பொருளுரைக்கப்பட்டது. மலமுத்தன் மலத்தால் விடுக்கப்பட்டவன்; சீவன்முத்தனாக எனினுமமையும். மெய்காட்டினை யென்பதற்குக் குருவடிவத்தைத் தரிசிப்பித்தருளினீ ரெனினும் பொருந்தும். உன்முகம்- மேன்முகம். அது ஈண்டு முயற்சியின்மேற்று. (எரு)



என்ன வாகமுன் னினைந்துள பொருளு
மில்ல தாகிய வுடலமும் யானு
நின்ன வாகநின் னருள்கொடு நினைந்தே
னின்ம லாவென நின்றுநின் றுருகா
மன்னு தானைதம் மேலணி கலன்கள்
மதுரை மீனவன் வான் பொரு ளிறையோன்
முன்ன தாகவைத் திறைஞ்சின ரறஞ்சேர்
முதல்வ னார்முக மலர்வுகொண் டிருந்தார்.

இ—ள்: முன் என்ன ஆக நினைந்து உள பொருளும் - தமியேன் பெத்தகாலத்து என்னுடையனவாகக் கருதியிருந்த பொருளும், இல்லது ஆகிய உடலமும் - யானல்லாததாகிய இந்தச் சரீரமும், யானும் - ஆன்மாவாகிய யானும், நின்மலா - மலரகிதரே, நின்ன ஆக நின் அருள் கொடு நினைந்தேன் என - இதுபொழுது தேவரீருடையனவாகத் திருவருளானறிந்து சமர்ப்பித்தேனென்று விண்ணப்பஞ்செய்து, நின்று நின்று உருகா - ஆன்மபோத மொழிந்து நின்று மனம் நெக்கு நெக்குருகி, தம் மேல் மன்னு தானை அணிகலன்கள் மதுரை மீனவன் வான் பொருள் - தம் முடம்பின்மீது புனைந்த வஸ்திராபரணங்களையும் மதுரையை இராசதானியாகவுடைய அரிமர்த்தன பாண்டியனது திரவியத்தையும், இறையோன் முன் ஆக வைத்து இறைஞ்சினர் - குரு சந்நிதியிற் பொருந்த வைத்துத் திருவாதவூரடிகள் வணங்கினார், அறம் சேர் முதல்வனார் முகம் மலர்வு கொண்டு இருந்தார் - ஈண்டுத் துறவறத்தைப் பொருந்திய யோகமூர்த்தியாகிய பரமாசாரியர் சீடரது பக்குவமுதிர்ச்சியைக் கண்டு முகமலர்ச்சி கொண்டு வீற்றிருந்தருளினார் எ—று.

உடல் பொருள் ஆவி மூன்றும் இனி உன்னுடையவைகளல்ல என்ற துணையானே அங்ஙனஞ் சமர்ப்பித்தா ராகலிற் பக்குவமுதிர்ச்சி விளங்கிற்றென்க. சமர்ப்பித்தல் - ஒப்பித்தல். நின் றிரண்டனுண் முன்னையது ஒழிந்தென்னும் பொருட்டு. அது "விரவுப் பெயரின் விரிந்து நின்று மன்னபிறவு மாகுமையுருபே" என்பதனானுமறிக. ஆன்மபோத மென்பது அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. அடுக்கெனக்கொண்டு காலநீட்டமென்பது மொன்று. ஒருகாலைக் கொருகால் அதிகமாக வுருகியெனக் கோடலுமாம். பக்குவான்மாக்கட்கு முத்தி கொடுக்கும்போது யோகியாதலை "போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார், யோகியாயிருந்து முத்தியுதவுத லதுவுமோரார்" என்னுந் திருவாக்கானறிக. அது என்பன சாரியை. (எசு)

வேறு.

பெருந்துறை யுறைவா ரன்பு பெறுந்திரு வடிய ராகி
யிருந்தவர் தம்மின் மேன்மை யெய்தினர் முகத்தை நாடித்

திருந்திய பொருளி தெல்லாந் திருப்பணிக் களியு மேலா
மருந்தவர்க் குதவு மில்லா தலந்தவர்க் கருளு மென்றார்.

இ—ள்: பெருந்துறை உறைவார் - இச்சமையத்துத் திருப்பெருந்துறையின்கண் வீற்றிருக்கின்ற கைலாசபதியானவர், அன்பு பெறும் திரு அடியர் ஆகி உறைந்தவர் தம்மின் மேன்மை எய்தினர் முகத்தை நாடி - அன்பையுடைய திருத்தொண்டர்களாகி அங்கே இருக்கின்றவர்களுள் மகிமையையுடைய ஒருவரது முகத்தைப் பார்த்து, திருந்திய பொருள் இது எல்லாந் திருப்பணிக்கு அளியும் - திருத்தமாகிய இப்பொருள்களை யெல்லாந் திருப்பணிக்குக் கொடுங்கள், மேலாம் அருந் தவர்க்கு உதவும் - மேலாகிய அரிய தவத்தையுடைய சற்பாத்திரங்கட்குக் கொடுங்கள், இல்லாது அலந்தவர்க்கு அருளும் என்றார் - நுகரப்படும் பொருள் ஒன்றுமின்றிச் சுழலுகின்ற வறியவர்களுக்குக் கொடுங்களென்று பணித்தருளினார் எ—று.

ஒருவர் முன்சொன்ன ஒருவர். இதெல்லாம் பன்மை யொருமை மயக்கம். மேலா மருந்தவம் சரியை, கிரியை, யோகங்கள். திருப்பணி முதலியவைகளுக்கு உபயோகிக்கப்படுதற் கேற்ப நன்னெறியானீட்டிய பொருளென்பார் திருந்திய பொருளென்றார். பொருளைத் திருப்பணியின் பொருட்டு, அத்திருப்பணி செய்வார்க்குக் கொடுக்கும் பலத்தை, "திருப்பணி செய்வார்க்குஞ் சிவனையுன்னிச் செம்பொன், விருப்புட னீவார் பெறுகவீடு" என்பதனானும், மேலாமருந்தவர்க்குதவும் பலத்தை, "சிவஞானச்செயலுடையோர் கையிற்றானந் திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து. பவமாயக் கடலிலழுந்தாதவகை யெடுத்துப் பரபோகந்துய்ப்பித்துப் பாசத்தையறுத்துத், தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணிச் சரியை கிரியாயோகந் தம்மினுஞ் சாராமே, நவமாகுந் தத்துவஞானத்தை நல்கிநாதனடிக்கமலங்கணணுகுவிக்குந்தானே" என்பதனானும், நுகரப்படும் பொருளொன்றுமில்லா தலந்தவர்க்குதவும் பலத்தை "வறியார்க்கொன்றீவதே யீகை மற்றெல்லாங், குறியெதிர்ப்பை நீரதுடைத்து" என்பதனானுமறிக. இவற்றுள் வறியவர்க் கீதல் இரக்கவயத்தானென்பது விளக்குதற் பொருட்டன்றே ஈண்டருளுமென்னும் வினைச்சொற் பிரயோகித்துக் கூறியதூஉமென்க. இது அறுசீரடியாசிரியவிருத்தம். (எஎ)

தம்பெரு முதல்வர் சொல்லுந் தகுமொழிப் படியே யுள்ள
செம்பொருள் யாவு மன்பின் றிறத்துளார் தொலைத்த பின்னர்
அம்பர னளித்த ஞான மருந்தினை யருந்திப் பாச
வெம்பிணி யகற்று மிந்த வித்தகர் முத்த ராஞர்.

இ—ள்: அன்பின் றிறத்துளார் - பத்திவலியையுடைய திருத்தொண்டர்கள், தம் பெரு முதல்வர் சொல்லும் தகு மொழிப்படியே - தம் முழுமுதலாகிய பரமாசாரியர் பணித்தருளிய திருவாக்கின் வண்ணமே, உள்ள செம் பொருள் யாவும் தொலைத்த பின்னர் - அங்குள்ள செவ்விய பொருள்களையெல்லாங் கொடுத்து முடித்தபின்னர், அம்பரன் அளித்த ஞான மருந்தினை அருந்தி - அச்சிவபெருமானாகிய அநாதிவைத்தியர் கொடுத்தருளிய சிவஞானமாகிய பரம ஔஷதத்தை உட்கொண்டு, பாச வெம் பிணி அகற்றும் இந்த வித்தகர் முத்தர் ஆனார் - ஆணவமுதலிய பஞ்ச பாசமாகிய மகாரோகத்தை நிவிர்த்திசெய்த சாதுரியராகிய இத்திருவாதவூரடிகள் சீவன்முத்தராயினார் எ—று.

"மிகுஞ், சுத்தனாகியே தொலைவிலாருயிர், முத்தியெய்தினன் முழுதுணர்ந்துளான்" என்றதூஉம் இந்நிலையை யென்க. அப்பான் அம்பரனெனத் தொடை நோக்கி மெலிந்து நின்றது; சிதம்பரேசுவரர் என்றுமாம். அளித்தல் ஈண்டீயாதீதல். (எஅ)

திருத்திகழ் கவிகைக் கீழுஞ் சிறந்தபொற் சிவிகை மேலும்
வரத்திரு மேவு தானை மன்னவ னென்ன வந்தார்
உருத்தெரி யாத நீறுங் கோவண வுடையுங் குஞ்சி
விரித்துள சிரமுந் தூநீர் மிகப்பொழி விழியு மானார்.

இ—ள்: திரு மேவு தானை வர - வெற்றிபொருந்திய சேனை பக்கத்தே சூழ்ந்து வர, திருத் திகழ் கவிகைக் கீழும் சிறந்த பொன் சிவிகை மேலும் மன்னவன் என்ன வந்தார் - அழகு விளங்குகின்ற தவளச்சத்திரத்தின் கீழும் அழகிய முத்துச்சிவிகையின் மேலும் பாண்டியராசனைப் போல முன் மகாலங்காரத்தோடு வந்த திருவாதவூரடிகள், உருத் தெரியாத நீறும் - இதுபொழுது திருமேனி மறையப் பூசிய விபூதியும், கோவண உடையும் - கௌபீன வுடையும், குஞ்சி விரித்துள சிரமும் - மயிர் விரிக்கப் பெற்ற சிரசும், தூ நீர் மிகப் பொழி விழியும் ஆனார் - ஆநந்த பாஷ்பம் மிகவும் பொழிகின்ற கண்களுமுடையராயினார் எ—று.

கீழும் மேலும் என்புழி இடைச்சொற்க ளிரண்டும் வந்தாரென்னும் வினைகொண்டன. பின்னைய திரு வீரலக்குமி. மன்னவனென்றது ஈண்டு நெடுநிலவரசன் என்னும் பொருட்டு. தவளச் சத்திரம் நிழற்ற முத்துச் சிவிகையின் மேலேறி வந்தாரென ஓதற்பாலது வேறோர் நயம்பற்றி இங்ஙனங் கூறப்பட்டது; இரு பக்கமும் முன்னும் பின்னும் கீழு மேலுமாகிய அறுவகையிடத்தும் அதி பிரபுத்துவத்துடன் முன் வந்தா ரென்பார் திருத்திகழ் கவிகைக்கீழும் சிறந்தபொற் சிவிகை மேலும் வரத் திருமேவு தானை மன்னவனென்ன வந்தாரென்றும், அவரே பின் அதற்கு மாறாக அதி விபுத்துவ முடையராயினார் என்பார், உருத் தெரியாத நீறுங் கோவண வுடையுங் குஞ்சி விரித்துள சிரமுந் தூநீர் மிகப்பொழி விழியுமானார் என்றுங்கூறினார். அரசனைப்போல வந்தவர் ஆண்டியைப்போலாயினார் என்பது கருத்து. வரத் திருமேவு மன்னவனென் றியைத்து வரத்தினாற் கிடைத்த மகைசுவரிய

சாமந்த வேந்தனென்னும்படி எனக் கோடலுமாம். திருத்திகழ் கவிகைமே லுஞ் சிறந்தபொற் சிவிகை மீழும், வரத்திரு மேவுதானை மன்னவ னென்ன வந்தார் எனவும் பாடம். இனித் திருத்திகழ் கவிகை என்பதற்கு அரூபியா கிய திருமகள் ரூபியாய் விளங்கும் குடை எனப்பொருள் கோடலுமொன்று. இக்கருத்து "இச்சையாங் கட்புலப் படாளென் றெண்ணினும்" என்னும் இரகுவம்மிசச் செய்யுளால் இனிது துலங்கும். (எக)

அன்புட னோக்கி நிற்ப ரழுவர்கை தொழுவர் வீழ்வ
ரின்புற வெழுவர் பின்பா லேகுவ ரிரங்கி மீள்வர்
நன்பகல் கங்குல் காணார் ஞானநல் லறிவே கண்டு
கொன்புனை பித்தர் பாலர் பிசாசர்தங் கொள்கை யானார்.

இ—ள்: அன்பு உடன் நோக்கி நிற்பர் - திருவாதவூரடிகளாகிய சீடர் தமது ஞானதேசிகரை அன்போடு நெடிது நோக்கி நிற்பார், அழு வர் - பின்னழுவார், கைதொழுவர் - கைகளைக் குவித்துக் கும்பிடுவார், வீழ்வர் - வீழ்ந்து வணங்குவார், இன்புற எழுவர் - இன்பம் மிகமறித்தெழு வார் - பின்பால் ஏகுவர் - குருசந்நிதிக்குப் புறங் காட்டலாகாமையின் முன் காட்டிப் பின்னுக்கு நடப்பார், இரங்கி மீள்வார் - பிரிவாற்றாமையிற் பரி தபித்து மீண்டு வருவார், ஞான நல் அறிவே கண்டு நல் பகல் கங்குல் கா ணார் - இங்ஙனம் சிவஞானமாகிய நல்ல பேரறிவையே பார்த்து நல்ல பக லையும் இராவையும் பாராதவராகி, கொன் புனை பித்தர் பாலர் பிசாசர் தம் கொள்கை ஆனார் - பிறர்க்கு அச்சத்தை மிகுவிக்கும் உன்மத்தர் பாலர் பிசாசரென்னு மிவரது கோட்பாட்டை யுடையராயினர் எ—று.

பகலிரவு என்றது ஈண்டுச் சகல கேவலங்களாகிய அவத்தைகளையுமாம். "இராப்பகலற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே" "இருப்ப திரவு பக லற்ற விடத்தி லொருப்பட்ட மனத்துடன்" என்புழியும் இராப்பக லென் றது சகல கேவலங்களை. இராப் பக லற்ற விடமென்றது சுத்தாவத்தையை. "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங் கள் பாரார்" என்பதனானுமறிக. கொள்கை - குணம். பித்தர் குணம் ஒருகாற்செய் தொருகாலொழிதற்கும், பாலர்குணம் அறவொழிதற்கும், பிசாசர்குணம் செயலிழப்பினின்று செய்தற்கு முவமையாய் வந்தன. அது "பாலருன்மத்தர் பிசாசரிலெனவு, முறங்கினோன்கை வெறும்பாக் கெனவுந், தானே தவிராதானால்" "பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப் பாட லினொடாடலிவை பயின்றிடினும் பயில்வார்" என்பவற்றானு மறிக. (அ0)

மன்னுமிந் நிலைமை யுற்றார் வன்படைச் சுற்ற மாகித்
துன்னின ரெல்லாம் வந்து தோன்றலைத் தொழுது நோக்கித்
தென்னவன் முனியா முன்னஞ் செழும்பரித் திரள்கொண் டேக
லென்னும தொன்றுந் தோரா விதுபழு தென்றி ரங்கி.



இ—ள்: மன்னும் இந் நிலைமை உற்றார் - திருவாதவூரடிகள் இவ் வாற்றானே பெத்தநிலையொழிந்து நித்தியமாகிய முத்திநிலையை அடைந் தார், வன் படைச் சுற்றம் ஆகித் துன்னினர் எல்லாம் வந்து - வலிய சேனைவீரராகிய சுற்றமா யுடன்சென்றவ ரெல்லாம் அதிசமீபத்திற்சென்று, தோன்றலைத் தொழுது நோக்கி - அவ்வடிகளை வணங்கி, அவரது நிலை மையை உற்று நோக்கி, தென்னவன் முனியா முன்னம் செழும் பரித் திரள் கொண்டு ஏகல் என்னும் அது ஒன்றும் தோரா இது பழுது என்று இரங்கி - பாண்டியராசன் நம்மைக் கால நீட்டம்பற்றி வெகுள்வதன் முன்னமே செழுமையாகிய குதிரைக் கூட்டங்களை நாங் கொண்டுபோத லாகிய அச்செயலை நீர் ஒரு சிறிதுஞ் சிந்தியாமையாகிய இது குற்றமா மென்று மிகவும் பரிதபித்து எ—று.

முனியாமுன்னம் முனியாத முன்னமெனப் பெயரெச்சமுடிவு. தே ராமை என்பது தொழினிலையொட்டுந் தொழிற்பெயர்; விகுதி விகாரத்தாற் றொக்கது; "பொச்சாவாக் கருவி" என்புழிப்போல. குதிரை கொண்டு செல்லாமை மாத்திரையே யன்றித் திரவியத்தையு மொருங் கிழந்தமையிற் செழும் பரித்திரள் கொண்டேக லென்னும தொன்றுந் தோரா விது பழு தென்று கூறினார். ஈண்டுச் சுற்றமென்றது அரசனது சுற்றமாகிய சேனா வீரரை என்பது "திரண்டு நின்ற காவலன் றமர்களை நேர்ந்தனர் நோக்கா" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானுமறிக. அரசற்குச் சுற்றமைவர். அவர்: மந்திரி, புரோகிதன், சேனாபதி, தூதன், சாரணன் என்பவர். அது, "மந் திரி புரோகிதன் சேனாபதியொடு, தந்துறை தூதன் சாரண னென்ன, அர சர்தஞ் சுற்றமிவ் வைவராகும்" என்பதனானறிக. (அக)

ஐயர்நீர் வருதல் வேண்டு மென்றவ ரழைத்த போதிற்
றெய்வநீ றணிவார் தானைத் திறத்தினர் தம்மை நோக்கி
மையலா முணர்வின் மிக்கீர் யாவர்நீர் மாயா பேதப்
பொய்யெலா முரைத்தல் வேண்டாம் போமினி யகல வென்றார்.

இ—ள்: ஐயர் நீர் வருதல் வேண்டும் என்று அவர் அழைத்த போ தில் - சுவாமீ! நீர் எம்மோடு வருதல்வேண்டுமென்று அவரழைத்த சமயத் தில், தெய்வ நீறு அணிவார் தானைத் திறத்தினர் தம்மை நோக்கி - தெய் வத் தன்மைபொருந்திய விபூதியை உத்தூளனமாகத் தரித்த திருவாதவூ ரடிகள் சேனாவீரரைப் பார்த்து, மையல் ஆம் உணர்வின் மிக்கீர் நீர் யாவர் - மயக்கமாகிய அறிவான் மேம்பட்டவரே நாம் உம்மோடு வருதற்கு நீவிர் யாவர், மாயா பேதப் பொய் எலாம் உரைத்தல் வேண்டாம் - மாயா காரியமாகிய இப் பலதிறப் பொய்களை யெல்லாம் நீரிங்கே பிதற்றுதல் வேண்டாம், இனி அகலப் போம் என்றார் - இனி அகலப் போய்விடு மென்று கடிந்து கூறினார் எ—று.

பொய் ஈண்டு அநித்தியமுமாம். மயக்க வறிவையுடைய நம்மோடு வருதற்கு நமக்கும் நுமக்கும் ஓர் சம்பந்தமுமில்லையே யென்பார் மையலா முணர்வின் மிக்கீர் யாவர் நீரென்றும், கழிகாமத்த ராயினார்க்கு அத்தொடர் புடையாரது இணக்கம் அக்காமப் பைங்கூழை வளர்க்கும் நீராதல்பற்றி அதன்கட் கழிபேருவகையும், அல்லாதாரது இணக்கம் அதனைப் பாறச்செய்யுங் களையாதல்பற்றி அதன்கண் வெறுப்பு மிகுதியும் உளவாமாறு போலச் சிவானுபவச் செல்வராய் இறைவன் மலரடிக்கீ ழிருக்கப் பெறுந் தமக்கு அதனை வளர்க்கும் நீர்மையராகிய அத்தொடர்புடையாரோடு இணங்குதற்கண் உவகைமிகுதியும், அதனைக்கெடுக்கும் நீர்மையராகிய இவ்வன்னியரோ டிணங்குதற்கண் வெறுப்புமிகுதியும் இயல்பானுளவாகலின், மாயாபேதப் பொய்யெலா முரைத்தல் வேண்டாம் போமினி யகல வென்றுங் கூறினா ரென்க. வெகுளிபற்றிக் கடிந்து கூறினாரல்லரென்பது கருத்து. (அ௨)

என்னிவர் புகல்வ தென்றே யாவரு நின்றிரங்கித்
துன்னுநற் றானை வீரர் தம்முளே துயர மெய்திப்
பன்னுநம் மொழியுங் கேளார் பரிவில ரென்று நீங்கித்
தென்னவற் கின்ன வாறு செப்புவோ மென்று சென்றார்.

இ—ள்: துன்னும் நல் தானை வீரர் யாவரும் - அது கேட்ட நெருங்கிய நல்ல சேனாவீரர்களனைவரும், இவர் புகல்வது என் என்று நின்று இரங்கித் தம்முள் துயரம் எய்தி - நம்மொடு நீர் வருகவென்று நாம் வினாயதற்கு இவர் உத்தரமாகக் கூறியது எத்தன்மையதென்று சிறிது நின்று பொருமித் திகைத்துத் தம்முள் அனுதாபப்பட்டு, பன்னு நம் மொழியும் கேளார் பரிவு இலர் என்று நீங்கி - கூறுகின்ற நமது சொல்லையும் பொருட்படுத்துகின்றிலர் அதன்மேல் நம்மிடத்துப் பழைய பற்றுமிலராயினார் என்று நொந்து அவ்விடத்தைவிட்டு நீங்கி, தென்னவற்கு இன்ன ஆறு செப்புவோம் என்று சென்றார் - நமது பாண்டியராசனுக்கு இந்தச் சமாசாரத்தை விண்ணப்பஞ் செய்வோமென்று போனார் எ—று.

பரிவுமிலரென்னும் எச்சவும்மை வருவிக்கப்பட்டது. தம் வினாவுக்கியைபின்மை மேலும் அன்பற்ற விடையளித்தாராகலின் என்னிவர் புகல்வதென்றும், இதுபோலக் கடிந்து கூறும் விடையைத் தாம் இதுகாறும் இவர் சொல்லக் கேட்டறியாமையின் இதற்குக் காரண மென்னையோ வென்று சிறிதுநேரம் நின்று ஆலோசித்தா ரென்பார் அது தோன்ற நின்றென்றும், தங்காத லமைச்சற் கெய்திய கேட்டிற்குத் தாங் கவலை கூர்தல் புறத்துப் பரவின் அதனை வெளிப்படுத்தியதா மாகலின், அது புறத்துப் பரவாமைக் காத்தாரென்பார், தம்முளே துயரமெய்தி என்றுங் கூறினார். (அரு)

சென்றவர் வைகை நாடன் றிருந்தவை முன்ன ரெய்தி
வன்றிறன் மன்ன போற்றி மாமது ரேச போற்றி
யென்றுபின் வாத வூர ரெய்திய செய்தி யெல்லா
மொன்றிய கவற்சி கூரு முளத்தொடு மோத லுற்றார்.



இ—ள்: சென்றவர் வைகை நாடன் திருந்து அவை முன்னர் எய்தி - இங்ஙனஞ் சென்ற சேனாவீரர்கள் வைகைநதி பிரவாகிக்குஞ் செந்தமிழ் நாட்டையுடைய பாண்டியனது நீதிதிருந்திய சபைக்கெதிரே போய், வன் திறல் மன்ன போற்றி மா மதுரா ஈச போற்றி என்று - மிகு பராக்கிரமத்தையுடைய மகாராசாவே போற்றி மதுரைக் கரசனே போற்றி என்று துதித்து, பின் - அதன்பின்னர், வாதவூரர் எய்திய செய்தி எல்லாம் - திருவாதவூரடிகளிடத்து நிகழ்ந்த விருத்தாந்தங்களை யெல்லாம், ஒன்றிய கவற்சி கூரும் உளத்தொடும் ஓதல் உற்றார் - அவ்வடிகள் வாயிலாக வந்து தம்மாட்டுப் பொருந்திய கவலை ஒருகாலைக்கொருகால் மிகப்பெறும் மனத்தோடும் விண்ணப்பஞ் செய்வாராயினார் எ—று.

வன்றிறல் ஒருபொருட் பன்மொழி. இனித் திறல் யுத்தகளத்து விழித்தகண் வேல்கொண் டெறிய விழித் திமையாது நிற்குந் தைரியமுமாம். போற்றி பரிகாரம்; "நீணில மன்னபோற்றி நெடுமுடிக் குரிசில் போற்றி" என்புழிப்போல. திரவியமிழந்தமைக்கும் அதனாற் குதிரை வாராமைக்கும் பரிகாரமாக ஈண் டிருகாற் போற்றி என்றார். அடிகள் வாயிலாகத் தங்கட் கெய்திய கவலை யழுந்திய மனமென்பார், ஒன்றிய கவற்சிகூரு முளமென்றார். (அச)

நின்பெயர் புனைந்தோ ராகி நின்னெடுங் கருமஞ் செய்வா
ரென்பவர் செய்கை தம்மை யெங்ஙனம் யாங்கள் சொல்வோம்
பொன்பொலி மௌலி யாய்நின் புடைவிடைகொண்டு போந்து
மன்பெருந் துறையா மந்த வளநகர் புகுந்தபின்னர்.

இ—ள்: பொன் பொலி மௌலி ஆய் - பொன்னாற் செய்து இரத்தின கசிதமாகிய ஐவகை யுறுப்புக்களாற் பொலிந்த முடியையுடைய நம் மரசனே, நின் பெயர் புனைந்தோர் ஆகி நின் நெடும் கருமம் செய்வார் என்பவர் செய்கை தம்மை யாங்கள் எங்ஙனம் சொல்வோம் - தென்னவன் பிரமராய னென்னும் நின் சிறப்புப்பெயர் பெற்றவராகி நின் முதன்மந்திரியாய உத்தியோகத்தைச் செவ்வனே நடத்துபவரென்று நின்னால் விசுவசிக்கப்பட்ட திருவாதபுரேசரது செயல்களை யாமெவ்வாறு நினக்கு வாயாற் சொல்வோம், நின்புடை விடைகொண்டு போந்து மன் பெருந்துறை ஆம் அந்த வள நகர் புகுந்த பின்னர் - அவர் நின்மாட்டனுமதி பெற்றுக்கொண்டு சென்று திருப்பெருந்துறையாகிய வளவிய அந் நகரத்தை யடைந்த பின்னர் எ—று.

முடிக்கு ஐவகையுறுப்புக்களைத் "தாமம் பதும மகுடங் கிம்புரி, கோட ரிவைமுடிக் கைவே றுருவே" என்பதனா னறிக. புடை எழனுருபு. பொன் பொலிதற்குக் காரணமான மௌலி என்றுமாம். (அரு)

அந்நகர் மருங்கோர் காவி லணைந்துள குருந்தி லீசன்
றன்னடி யார்க ளாகுந் தாபதர் பலருஞ் சூழ
மன்னியங் கொருவர் மேலா மாதவ வேடம் பூண்டு
முன்னுற விருத்தல் கண்டு முடிவிலா மகிழ்ச்சி கொண்டு.

இ—ள்: அந்நகர் மருங்கு காவில் அணைந்துள ஓர் குருந்தில் - அந்நகரத்தின் பக்கத்துள்ள சோலையின்க ணிற்குமோர் குருந்தமர நீழலில், ஈசன் அடியார்கள் ஆகும் தாபதர் பலரும் சூழ - சிவனடியார்களாகிய சைவ முனிவர்களெல்லாம் பக்கத்தே சூழ்ந்து சேவிக்க, மன் இயங்கு ஒருவர் - தலைமைப்பாட்டையுடைய ஒரு பெரியவர், மேலாம் மாதவ வேடம் பூண்டு முன் உற இருத்தல் கண்டு - அவர்களெவரினும் மிகமேலாகிய தவவேடங் கொண்டு எவரும் நன்கு மதிக்க நடுநாயகமாக வீற்றிருத்தலைத் தாங் கண்டு, முடிவு இலா மகிழ்ச்சி கொண்டு - முடிவற்ற பெரு மகிழ்ச்சி கொண்டு எ—று. முன் - முதன்மையுமாம். (௮௬)

அங்கவர் தாமுந்தாமு மன்பொடு சிலசொற் கூறிச்
சங்கர சிவனே போற்றி யென்றவர் தாளில் வீழ்ந்து
செங்கரம் குவித்துச் சென்னி சேர்த்துவந் தனைகள் செய்து
பொங்கொளி மணிப்பூணுடை பொருளெலா முவந்து நல்கி.

இ—ள்: அங்கு அவர் தாமும் தாமும் அன்பு ஒடு சிலசொல் கூறி - அங்ஙனம் அப்பெரியவருந் தாமும் ஒருவர்மாட்டொருவர் அன்போடு சில சொற்களைக்கொண்டு சம்பாஷித்து, செம் கரம் குவித்துச் சென்னி சேர்த்து அவர் தாளில் வீழ்ந்து வந்தனைகள் செய்து சங்கரசிவனே போற்றி என்று - பின்பு தாம் சிவந்த கைகளைக் கூப்பிச் சிரசின்மேல் வைத்துக் கும்பிட்டு அவருடைய பாதங்களிற் சிரசு தோயும்படி நிலத்தில் வீழ்ந்து பல முறை வணங்கிச் சங்கரசிவனே போற்றி என்று துதித்து, பொங்கு ஒளி மணிப்பூண் ஆடை பொருள் எலாம் உவந்து நல்கி - மிக்க வொளியை யுடைய இரத்தினுபரணம் வஸ்திரம் நிதிரவியங்களை யெல்லாம் மனமுவந்து அவருக்குக் கொடுத்து எ—று.

கூறி யென்னுஞ் செய்தெனெச்சம் குவித்தென்னும் வினைமுதல் வினை கொண்டது. அடிகளாகிய ஒருவரது குவித்தென்னும் வினை தாமுந் தாமுமென்னும் இருவர் வினையாகிய கூறி யென்னுஞ் செய்தெனெச்சத்திற்கு வினைமுதல் வினையாயவாறென்னை யெனின்? அக்கூறுதலுள் அவ்வடிகளது வினையுமுண்மையின், அது வினைமுதல் வினையேயாம்; "முதனிலைமூன்றும் வினைமுதன் முடிபின" என்புழி வினைமுதல் வினையென்னுந் துணையேயல்லது பிறிதொன்றற்குப் பொதுவாகாது வினைமுதற்கே வினையாதல் வேண்டுமென்னும் யாப்புறவின்மையி னென்க. சேனுவீரர் தமக்கு அவ்விருவரும் கூறிய விஷயாகாரந் தோன்றுமையின், விஷயத்தின் மேல் வைத்து இன்னது கூறியென்னுது சொன் மேல் வைத்துச் சிலசொற் கூறி யென்றொழிந்தார் என்க. விஷய ஆகாரம் விஷய சொரூபம். (௮௭)



குறைவிலா வாடை நீத்துக் கோவண முடுத்துச் சென்னி
நறைமயிர் விரித்து நீற்றை மெய்யலா நயந்து பூசி
முறைமையன் றிவைதா மென்று மொழிந்தவெம் முகமும் பாரார்
நிறையழி பித்த ராஞர் நிருபவென் றிறைஞ்சி நின்றார்.

இ—ள்: குறைவு இலா ஆடை நீத்துக் கோவணம் உடுத்து - விலையுயர்ந்த வஸ்திரத்தைக் களைந்து கௌபீன மாத்திரந் தரித்து, சென்னி நறை மயிர் விரித்து - சிரசின்கணுள்ள நறுமண மூட்டிய மயிரை முடித்த குடுமியை விரித்து, நீற்றை மெய் எலாம் நயந்து பூசி - விபூதியை உடம்பெங்கும் விரும்பி உத்தூளனமாகப் பூசி, இவை தாம் முறைமை அன்று என்று மொழிந்த எம் முகமும் பாரார் - இச்செயல்கடாஞ் சிரேட்ட மந்திரியாகிய உமக்கு நீதியன்றென்று கூறிய எம்முகத்தையும் நோக்காதவராய், நிறை அழி பித்தர் ஆஞர் நிருப என்று இறைஞ்சி நின்றார் - நிறையென்னு மாடூஉக் குணமழிந்த பித்தராயினர் மகாராசாவே அவரது விருத்தாந்தங்கள் இவைதாமென்று சேனுவீரர் விண்ணப்பஞ் செய்து மறித்தும் வணங்கி நின்றார் எ—று.

அன்றென்பது பன்மை யொருமை மயக்கம். முகமுமென்னுமும்மை எச்சவும்மை. சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தலென்பதனுல் ஆடூஉக்குணம் நான்கனுட் சிறந்த நிறையொன் றழிதன்மாத்திரையே யெண்டுத்துக் கூறினுரேனும், உரையிற்கோட லென்பதனுற் பொறை முதலிய வேனை மூக்குணங்களு மழிந்தாரென்பதூஉந் தழீஇக்கொள்க. தழுவவே நிறை பொறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஆடூஉக்குணம் நான்கு மழிந்த பித்தராயினு ரென்பது சேனுவீரர் கருத்தாக்குக. வேறு வஸ்திர மின்றிக் கௌபீன மாத்திரையே உடையாகக் கொண்டார் என்பார் கோவண முடுத் தென்றார். (௮௮)

கேட்டலு மதுரை மாறன் கிளர்ந்த மெய்ம் முழுதும் வேர்வு
காட்டிட வெகுளி பொங்கிக் கண்கனல் வடிவ மாகி
வாட்டிறன் மன்னர்க் கின்ன வண்மைய ருளரேல் வைய
மீட்டுறு செல்வந் தானை யெவையில வென்று நக்கான்.

இ—ள்: மதுரை மாறன் கேட்டலும் - மதுரைமாநகரத்துக் கரசனாகிய பாண்டிய னிவற்றைக் கேட்டலும், கிளர்ந்த மெய்ம் முழுதும் வேர்வு காட்டிட வெகுளி பொங்கிக் கண் கனல் வடிவம் ஆகி - விளங்குகின்ற சரீரமெங்கும் வெயர்வை தன்னைப் பிறர்க்குக் காட்டுமாறு கோபம் வீறிக் கண்கள் அக்கினி மயமாய்ச் சிவந்து, வாள் திறன் மன்னர்க்கு இன்ன வண்மையர் உளரேல் - வாள்வலியையுடைய அரசருக் கிப்படிப்பட்ட கொடையையுடைய மதிமந்திரிகள் உளராயின், வையம் ஈட்டுறு

செல்வம் தானை எவை இல என்று நக்கான் - நாடும் ஈட்டப்படுஞ் செல்வமும் சேனையும் முதலிய ஆறங்கங்களுள் எவைதா மூளவாகா என்று அட்டகாசஞ் செய்தான் எ—று.

கேட்டலு மென்பது உம்மீற்று வினையெச்சம். வாள் படைக்கலப் பொது எனினுமமையும். ஆறங்கம்: அமைச்சு, நட்பு, பொருள், நாடு, அரண், தானை என்பன. அரசர் தாம் கருவிச்சிறப்புடையராயினும் தமது நீதியை நடத்துதற் கின்றியமையாத இவ்வாறங்கங்களுள் ஏனை யைந்தங்கங்களையு மோம்பும் முதலங்கமாகிய அமைச்சே இங்ஙனம் உட்பகையாய் அற்றம் பார்த்துக் கேடுசூழுமாயின், இவ்வமைச்சை யுடைய அரசற்கு ஏனை யைந்தங்கங்களும் வேறு கெடுப்பாரின்றியுந் தாமே கெடுமென்பது குறிப்பாற் றோன்ற வாட்டிறன் மன்னர்க்கின்ன வண்மைய ருளரேல் வைய, மீட்டுறு செல்வந் தானை யெவையில வென்று நக்கா னென்றார், வண்மை என்பதனை இரட்டுற மொழிந்து கொடையும் குணமுமெனப் பொருள்கொண்டு, மதியைக் குணத்தின்பாற் படுத்துக. இப்படிப்பட்ட கொடை ஒருவன் பொருளை அவனுடம்பாடின்றி மற்றொருவன் கொடுக்குங் கொடை. மாறன் மாறை யென்னுமூரை யுடையவன். (அக)

அடுபரி கொள்வா னீந்த வருப்பொருள் கவர்வ தாகக்
கெடுமதி யுரைப்பார் தஞ்சொற் கேட்டுமா லெய்தி னானைக்
கொடுமைகொ ளிந்த வோலை கொடுத்தொரு தினத்து நம்பாற்
கடுநடைத் தூத ரேகிக் கைக்கொடு வம்மி னென்றான்.

இ—ள்: அடு பரி கொள்வான் ஈந்த அரும் பொருள் கவர்வது ஆகக் கெடு மதி உரைப்பார் தம் சொல் கேட்டு மால் எய்தினானை - போரிலே பகைவரைக் கொல்லும் குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு நாங் கொடுத்த அரிய திரவியங்களைக் கவர்ந்துகோடலே கருத்தாகக் கெடுபுத்தி கூறிய வேஷதாரிகளது கபடவார்த்தைகளைப் பொருட்படுத்துக் கேட்டு மதிமயங்கிய நம் மந்திரியை, கடு நடைத் தூதர் ஏகிக் கொடுமைகொள் இந்த ஓலை கொடுத்து ஒரு தினத்து நம்பால் கைக்கொடு வம்மின் என்றான் - வேகம் பொருந்திய நடையையுடைய தூதுவர்கள் சென்று காடின்னிய வசனங்களை யுடைய இந்த ஓலையைக் கொடுத்து இவ்வொரு தினத்தினுள்ளே நம்மாட்டு உடனழைத்துக் கடுக வருகவென் றரசன் ஆஞ்ஞாபித்தான் எ—று.

எய்தினானைக் கைக்கொடென உருபு முடிக்க. கொடுமை ஆகுபெயர். அரும்பொருளென்னும் அடையுரிமை கல்விப்பொருட்கே யுரியதாயினும், தான் அறநெறியானீட்டிய அருமையும் மிகுதியும் தோன்ற அரசனீண்டுச் செல்வப் பொருட்குக் கொடுத் தோதியது வழுவமைதி யென்க. இக் கருத்தைக் "சொற்பயில்விப்பவ னெப்படிச் சொற்றன, னப்படி யொழுகி யரும்பொருள் பெறுக" என்பத னுள்ளுங் காண்க. (கூ௦)



ஏவலிற் சென்ற தூத ரெழிற்பெருந் துறையி லெய்தி
யாவலிற் சிவன்றா ளேத்து மண்ணலைக் கண்டி றைஞ்சி
மேவலர்க் குருமே றன்ன வெங்தொழில் வேந்தன் வாய்மைக்
காவலர்க் கதிபன் மாறன் றிருமுகங் காண்க வென்றார்.

இ—ள்: ஏவலில் சென்ற தூதர் எழில் பெருந்துறையில் எய்தி - அரசனது ஆஞ்ஞையினாலே சென்ற தூதுவர்கள் அழகிய திருப்பெருந்துறையை யடைந்து, ஆவலில் சிவன் தாள் ஏத்தும் அண்ணலைக் கண்டு இறைஞ்சி - பேரவாவினோடு சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கித் துதித்து வழிபடும் பெருமையிற் சிறந்த திருவாதவூரடிகளைக் கண்டு வணங்கி, மேவலர்க்கு உருமேறு அன்ன வெங் தொழில் வேந்தன் - பகைவர்களாகிய சர்ப்பங்கட் கிடியேறுபோலுங் கொடுந் தொழிலையுடைய நெடுகிலவரசனும், வாய்மைக் காவலர்க்கு அதிபன் மாறன் திருமுகம் காண்க என்றார் - சத்தியத்தையுடைய அரசர்க்கரசனுமாகிய அரிமர்த்தன பாண்டியனது திருமுகம் இதனைக் காணுக என்றனர் எ—று.

நீரு மவ்வரசனோடு மாறுபடிற் றப்பாது தண்டிக்கப்படுவீர்; அத் தண்டத் தொழிற்கு மற்றோரரசனது சகாயம்பற்றித் தப்புதலுங் கூடாதெனத் தூதுவர் தம்முள்ளுறையை முன்னர் அறிவுறுத்துவார் 'மேவலர்க் குருமே றன்ன வெங்தொழில் வேந்தன் வாய்மைக் காவலர்க் கதிபன் மாறன்' என்றார். வேந்தனை உருமேறாக உருவகஞ் செய்ததற் கேற்ப மேவலரைச் சர்ப்பமாக வுருவகஞ் செய்யாமையின் இஃதேகதேச வுருவக மென்னு மலங்காரமென்க. (கூக)

அற்றமில் கொள்கை மிக்கா ரரன்றிரு முகம தன்றி
மற்றொரு முகமுங் காண மனமில ரிதன்மே லன்பு
பற்றிலர் பிறிதோ ரோலைப் படியெடுத் துரைமி னென்ன
வுற்றத னியல்பு வல்லா னெழுதிய துவந்து சொல்வான்.

இ—ள்: அற்றம் இல் கொள்கை மிக்கார் அரன் திருமுகம் அது அன்றி மற்று ஒரு முகமும் காண மனம் இலர் - பரமுத்திபெறுதற்கண் விடாமுயற்சியை யுடைய திருவாதவூரடிகள் பக்குவான்மாக்களது பாசத்தை யரிக்குஞ் சிவபெருமானது திருமுகமாகிய அஃதொன்றை யல்லது மற்றொரு திருமுகத்தையுங் காண மனமில்லாதவ ராகலின், இதன்மேல் அன்பு பற்றிலர் பிறிது ஓர் ஓலைப்படி எடுத்து உரைமின் என்ன - இது அரசனது திருமுகமென் றொருசிறிதும் அன்பு கூராதவராய்ச் சாமானியமாகிய பிறிதோர் முடங்கல் போலக் கொண்டு அதனை எடுத்து வாசியுங்களென்று கூறியருள, அதன் இயல்பு வல்லான் உற்று எழுதியது உவந்து சொல்வான் - அவ் வாசித்தற் றொழிலில் வல்ல கரணனொருவன் சமீபத்திற் போய் அதன்கணெழுதிய பாசுரத்தை மகிழ்ந்து வாசிப்பானாயினன் எ—று.

பொதுவாக உரைமினென்ன, அதனியல்பு வல்லானொருவன் வாசிக்
கின்றானாகலிற் பன்மையொருமை மயக்கமாகாமை யுணர்க. இஃதறியா
தார் வல்லா ரோதிய துவந்து சொல்வார் எனப் பாடத்தைப் பலர்பாற்படத்
திரித்தோதுவர். ஒரு ஓலையைப் பலர் வாசித்துக் கேட்பித்தல் சுருதி யுத்தி
யநுபவங்கட்கு விரோதமாமென மறுக்க. அற்றமில் கொள்கை - சோர்வற்ற
குணம். திருமுகம் - பத்திரம். இரட்டுற மொழிதலாற் றிருமுகம் என்ப
தற்குத் திருமுகப் பாசுரமென்றும் திருவதனமென்றும் பொருள்கொள்க.
இக்கருத்தும் இனிது போதருதற்கன்றே மற்றொரு திருமுகமென்னாது மற்
றொருமுகமென விகாரவகையாற் கூறியதூஉமென்க. அரசனது திருமுகத்
தைப் பிரதானமாகக் கொள்ளாது அப்பிரதானமாகக் கொண்டா ரென்
பார், இதன்மே லன்பு பற்றிலர் பிறிதோரோலைப்படி யெடுத்துரைமின் என்
றும், கரணன் வாசித்தற் றொழிலிற் கைவந்தவனாகலின் இப்பாசுரத்தை
வாசிக்கின் றழியே சொற்சுவை பொருட்சுவைகளை யறிந்து அதற்கு மன
மகிழ்ந்து வாசிப்பானாயினானென்பார் அதனியல்புவல்லா னெழுதிய துவந்து
சொல்வா னென்றுங் கூறினார். பாசுரம் - வசனம். கரணன் - வாசிப்போன்.
அதி, "இருண்மறை மிடற்றினான்கை யோலைகண் டவையோரேவ, வருள்
பெறு கரணத்தானு மாவணந் தொழுதுவாங்கிச், சுருள்பெறு மடியை நீக்கி
விரித்தனன் றொன்மை நோக்கித், தெருள்பெறு சபையோர் கேட்க வாச
கஞ் செப்ப லுற்றான்" என்பதனானுமறிக. (கஉ)

தென்னவ னெழுது மோலை தென்னவன் பிரம ராய
னென்னுநம் மமைச்சர் காண்க வெல்லையி றனங்கொண் டேகிக்
கொன்னுறு பரிகொ ளாமற் கோவணங் கொண்டீ ரீது
மன்னர்தங் கருமஞ் செய்வார் வண்மையென் றுவகை யுற்றேம்.

இ—ள்: தென்னவன் எழுதும் ஓலை தென்னவன் பிரமராயன் என்
னும் நம் அமைச்சர் காண்க - அரிமர்த்தன பாண்டியனாகிய நானெழுது மிவ்
வோலையைத் தென்னவன் பிரமராயன் என்னும் நம் முதன்மந்திரியானவர்
காணுக, எல்லை இல் தனம் கொண்டு ஏகிக் கொன் உறு பரி கொளாமல்
கோவணம் கொண்டீர் - நீர் எமது திரவிய சாலையிலிருந்து அளவற்ற
திரவியங்களைக் கொண்டு சென்று மாட்சிமை பொருந்திய குதிரைகளைக்
கொள்ளாமல் அதற்குப் பிரதியாக ஒரு கௌபீனம் கொண்டீர், ஈது
மன்னர் தம் கருமம் செய்வார் வண்மை என்று உவகை உற்றேம் - இது
வே இராச தருமத்தை நடத்தும் பிரதான மதிமந்திரிகட்கு இலக்கணமென்
றறிந்து நாம் மனமகிழ்ச்சி யடைந்தேம் எ—று.

அரசன் தன் குழுவையும் தன்னோடு சேர்த்து உவகை யுற்றேமெனப்
பன்மையாற் கூறினானாகலின், தென்னவ னென்னு மொருமையோடு அது
ஒருமைப் பன்மை மயக்கமாகாமையறிக. இனித் தென்னவன் பிரமராய
னென்பது அரசனாற் கொடுக்கப்பட்ட சிறப்புப்பெய ராகலானும், அத



னுட் பின்னிற்கும் பிரமராயனென்பது முன்னிற்கும் தென்னவன் என்பது
போல ஒருமைப்பாலாற் கூறப்படுவதல்லது பிரமராயரெனப் பன்மைப்
பாலாற் கூறுதல் தகாமையானும், தென்னவன் பிரமராய னென்னு நம்
மமைச்சர் என்றது ஒருமைப்பன்மை மயக்கமேயாமென்க. அது, "ஒருமை
சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகு மிடனுமா ருண்டே" என்பத
னாற் கொள்க. கொன் அச்சமுமாம். வண்மை ஆகுபெயர். தனக்கு அவர்
மீது இதுபொழுது வெறுப்பு நிகழினும் அதுபற்றி அவரை நைச்சிய வச
னத்தாற் கூறாது பூச்சிய வசனத்தாற் கூறுதலே நன்மகனாகிய தனக்கழகா
மாகலின், தென்னவன்பிரமராய னென்னுநம் மமைச்சர் காண்க என்றும்,
நங் காரியதரிசியாகிய நீர் நமக்குச் செய்த விசுவாசகாதகம் போலும் அப
ராதம் பிறிதொன் றின்மையின் அமைச்சியல்பழிந்த நும்மைப் பெரிதும்
வெறுத்தொழிந்தோ மென்பது குறிப்பாற் றோன்ற ஈது மன்னர்தங் கருமஞ்
செய்வார் வண்மையென் றுவகை யுற்றேமென்றுங் கூறினானென்க. (கங)

வையக மன்ன ராகி வாழ்தலின் மனைக டோறு
மெய்திய வுதரத் தீயா லிரப்பது பெருமை யென்று
மெய்தகத் தம்மை யாண்ட வேந்தரைப் பிழைத்து வேறு
செய்வது பலிக்கு மென்றுந் தேர்ந்தநூற் றுணிவுங் கண்டேம்.

இ—ள்: வையக மன்னர் ஆகி வாழ்தலின் - இந்நிலவுலக வரசராகி
மகிமையோடு நீர் வாழ்தலினும், எய்திய உதரத் தீயால் மனைகள் தோறும்
இரப்பது பெருமை என்றும் - சுவாலிக்கின்ற உதராக்கினி தணிக்கும்
பொருட்டு வீடுகடோறும் யாசிப்பது மகிமை யென்றும், மெய் தகத்
தம்மை ஆண்ட வேந்தரைப் பிழைத்து வேறு செய்வது பலிக்கும் என்
றும் - உறுதிபெற உள்ளன்பானே தம்மைச் சம்ரக்ஷணை செய்த அரசர்க்குத்
துரோகஞ் செய்துவிட்டு அவர்க் கந்நியமாகிய பிறிதொன்றைச் செய்வது
அநுகூலமாகுமென்றும், தேர்ந்த நூல் துணிவும் கண்டேம் - நீரோதிய
நீதிநூற் றுணிவையும் நாங் கண்டேம் எ—று.

இன் உறழ்பொருட்டு. மெய் ஆகுபெயர். தக தகுதலினால். துணிவு
மென்னுமும்மை எச்சத்தோ டிழிவுசிறப்புமாய் நின்றது. ஏனையவிரண்டு
மெண்ணும்மை. ஒருவர்க்கு அரசராகி உலகபரிபாலனஞ் செய்து வாழ்
தலின் மிக்க பெருமையும், பசிநிமித்தம் வீடுகடோறும் யாசித்தலின்
மிக்க சிறுமையும் உலகநடையி லின்மையின், கல்விமானாகிய நீர் அதற்கு
மாறாக அச்சிறுமையைப் பெருமையாக விபரீதக்கிரகணஞ் செய்துகொண்
டமையும், தமக்கு முக்கிய சகாயரா யெல்லா நன்மைகளையுஞ் செய்து
பாதுகாத்த அரசர்க்கு அந்நன்றியை மறந்து துரோகஞ் செய்துவிட்டுப்
பிறிதொன்றிற் பிரவேசிப்பது அநுகூலமாதலும் நுந்துணிபல்லது நூற்
றுணிபாகாதென்பது குறிப்பாற்றோன்ற இரப்பது பெருமை யென்றும்,

வேறு செய்வது பலிக்குமென்றுந் தேர்ந்தநாற் றுணிவுங் கண்டேமென் றும் அரசன் எழுதினனென்க. கல்விமானாகிய நமக்கு இவையிரண்டும் ஒரு சிறிதுந் தகாவென்பது கருத்து. (கூச)

மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சநஞ் சுமிழு நாகந்
தன்னுடன் மருவி வாழுந் தன்மையென் றுணர்தி ராயிற்
றுன்னுமிவ் வோலை காணும் பொழுதுநந் தூதர் தம்மோ
டிந்நகர் வருக மாற னெழுத்தென வியம்பி நின்றான்.

இ—ள்: மன்னரை அடைந்து வாழ்தல் வஞ்ச நஞ்சு உமிழும் நாகம் தன்னுடன் மருவி வாழுந் தன்மை என்று உணர்திர் ஆயின் - மன்னரைச் சேர்ந்தொழுகி அவர்கீழ் அதிகாரஞ்செய்தல் வஞ்சகம் பொருந்திய நஞ்சை யுடைய பாம்போடு கூடிவாழுந் தன்மைபோலுமென்று நீரறிதிராயின், துன்னும் இவ் ஓலை காணும்பொழுது நம் தூதர் தம்மோடு இந்நகர் வருக- நம்மால் விடுக்கப்பட்டுவரும் இவ்வோலை நுங் கட்பொறிக்கு விடயமாகு மந்தக்ஷணமே நந் தூதுவர்களோ டிந்நகரத்தின்கட் கடுக வருக, மாறன் எழுத்து என இயம்பி நின்றான் - இங்ஙனம் அரிமர்த்தனபாண்டியன் என்று கையெழுத்தையும் வாசித்துக் கரணன் நின்றான் எ—று.

நஞ்சிற்கு வஞ்சகம் கடிவாயினன்றி அல்லுழி உமிழப்படாமை. இனி வஞ்சகத்தை நாகத்திற்கடையாக்கி, அதற்கு மறைவெனப் பொருள்கொண்டு, மறைந்துறைதலையுடைய நாகமென வுரைத்தலுமாம். அது "நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்" என்பதனானுமறிக. பாம்பு தன்னோடு பழகினோரையும் அப்பழக்கம்பற்றி விடாது மந்திரத்தானய தடை தீர்ந்த வழித் தப்பாது கொலை சூழ்தல் போல அரசரும் தம்மோடு பழகினோரையும் அப்பழக்கம்பற்றி விடாது தமது ஆணைகடந்தவழித் தப்பாது தண்டிப்பர் என்பதறிக என்றதாம். இத்தூதுவரோடு கடிது வாராதொழியிற் றப்பாது தண்டிக்கப்படுவீர் என்பது தாற்பரியமென்க. (கூரு)

மீனவ னெழுது மோலை கேட்டபின் மின்பா லன்ப
ரானவ ரடியா ரெம்மை யடிமையா வுடைய ரல்லாற்
றானெனக் கண்ண லென்றுந் தன்னையான் பிழைத்தே னென்று
மாநில மன்னன் சொன்ன தென்னென மனத்தி லெண்ணி.

இ—ள்: மீனவன் எழுதும் ஓலை கேட்டபின் - இவ்வாறு அரிமர்த்தன பாண்டியன் எழுதிய ஓலையின் பாசுரத்தைத் திருவாதவூரடிகள் கேட்ட பின்னர், மின்பால் அன்பர் ஆனவர் அடியார் எம்மை அடிமை ஆ உடையர் அல்லால் - துவளுகின்ற மின்போலும் உமாதேவிமாட் டன்புடைய சிவபெருமானுக்கு அடியவர் தமக் கெம்மை அடிமையாக வுடையாரல்லது, தான் எனக்கு அண்ணல் என்றும் தன்னை யான் பிழைத்தேன் என்றும் -



தான் எனக்கதிபதி யென்றும் தனக்கு யான் குற்றஞ் செய்தேனென்றும், மாநில மன்னன் சொன்னது என் என மனத்தில் எண்ணி - இந்நெடுநில வரசன் கூறிய தென்கொலோவென்று மனத்தின்கட் சிந்தித்து எ—று.

எம்மையெனப் பன்மையாற் கூறியது எனை யடியவர்க் கெளியாரையும் தழீஇயாகலிற் பின்வரும் எனக்கு, யான் என்பவற்றோடு பன்மை யொருமை மயக்க மாகாமை யறிக. ஆக என்பது ஆ எனக் குறைந்து நின்றது. தன்னை என்ப துருபு மயக்கம். உலகநடைபற்றி அரசனெழுதிய வோலை வேதநடைபற்றிய தமக்கு வேறுபட்டுத் தோன்றுமாகலின் மாநில மன்னன் சொன்ன தென்னென மனத்திலெண்ணி என்றார். பிழை-குற்றம். அரசனுக்குத் தான் ஒரு குற்றமும் செய்யவில்லையென்பது கருத்து. அற்றேல், பாண்டியன் குதிரைகொள்ளும்பொருட்டுக் கொடுத்த திரவியங்களைத் திருவாதவூரடிகள் அவ்வரசனது கருத்துக்கு மாறாகப் பரமாசாரியரிடத் தொப்பித்தமை குற்றமாகாதோவெனின், ஆகாது; என்னை? அவர் ஆண்டுத் தஞ்செயலிழப்பினின் றங்ஙனஞ் செய்தாராகலினென்க. தஞ்செய லிழப்பி னிற்றலாவது மோகனஞ் செயப்பெற்றானொருவன் தன்வசமின்றி அம்மோகன வித்தைக்காரன்வசமாய் நிற்றல்போலவும், பேய்பிடியுண்டவன் செயலெல்லாம் பேயின் செயலாவதல்லது அவன்செய லாகாதவாறுபோலவும் ஆண்டு இறைநிறைவில் அழுந்தித் தம்வசமின்றி நிற்கும் திருவாதவூரடிகள் செயலெல்லாம் இறைவன் செயலாவதல்லது அவ்வடிகள் செயலாகாதிருத்தலா மென்க. அவ்வடிகள் அங்ஙனம் பசுகரணமற்றுச் சிவகரணமுற்றுத் தஞ்செயலிழப்பி னின்றதனை, "அன்புட னோக்கிநிற்ப ரழுவர்கை தொழுவர் வீழ்வ, ரின்புற வெழுவர்பின்பா லேகுவரிரங்கி மீள்வர், நண்பகல் கங்குல் காணார் ஞானநல் லறிவேகொண்டு, கொன்புனை பித்தர்பாலர் பிசாசர்தங் கொள்கையானார்" எனஆசிரியர்மேற்கூறியவாற்றானும்,"முன்பணிந்தனரணிந் தனரஞ்சலிமுடிமே, லென்புநெக்கிடவுருகினரினியராயெளிவந், தன்பெனும் வலைப்பட்டவரருள்வலைப்பட்டார், துன்ப வெம்பவ வலையறுத்திட வந்த தூயர்" 'பார்த்தபார்வையாலிரும்புண்டநீரெனப்பருகுந், தீர்த்தன்றன்னை யுங்குருமொழிசெய்ததூர்தம்மைப், போர்த்தபாசமுந்தம்மையுமறந்துமெய்ப் போத, மூர்த்தியாயொன்றுமறிந்திலர்வாதவூர்முனிவர்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. அற்றேல், அங்ஙனம் பரமாசாரியர் கவர்ந்து கொண்டமைதான் குற்றமாகாதோ வெனின், அதுவுங் குற்றமாகாது. என்னை? அங்ஙன மவர் கவர்ந்துகொண்டமை அப்பொருள்வாயிலாகவே அவ்வடிகளை அதிட்டித்துநின்று அவ்வரசனுக்கு முத்திகொடுத்தற்பயத்ததாகலினென்க. அது "அந்தரார்தம் பதியினிழிந் தருள்புனைமாத் தியர்குலத்தில், வந்தருளித் தமியேற்கு மந்திரியாய் மகிழ்வெய்தி, யெந்தைவயப்பரியேறல் காட்டியெனக்கொழியாத, பந்தமறத்திருவுள்ளம்பற்றினைநற்றவத்தோனே" என ஈண்டுக் கூறுமாற்றானும், "ஆனமந்திரக்கிழார்பொருட்டன்றியும் வென்றி, மீனவன்பிறப்பறுக்கவும்வார்கழல்வீக்கி" "தித்திக்குமணிவார்த்தை யின்னஞ் சின்னாட்டிருச்செவியினருந்தவுங்கைச்செம்பொனெல்லாம், பத்திப்

பொன்பளித்துக் கவர்ந்து வேண்டும் பணிகொடு பாண்டியனை யிவர்பண்பு தேற்றி, முத்திக்கே விடுத்திடவும்” “அம்மகனை முடிசூட்டி யரசாக்கி வாதவூ ரமைச்சர் சார்பான், மெய்ம்மைநெறிவிளங்கி யிருவினை யொப்பி லரன்கருணை விளைந்த நோக்கான், மும்மைமலத்தொடர்நீங்கிச் சிவானந்தக் கடற்படிந்து முக்கண்மூர்த்தி, செம்மைமலர்த் தாளடைந்தான் றிறலரிமர்த்தனனென்னுந் தென்பார்வேந்தன்” என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. அற்றேல், பொருள் கவராது முத்தி கொடுத்தாற் படுமிழுக்கென்னை யெனின், பொருள் கவராதொழியிற் பக்குவம் முதிராதாகலின், அஃதொரு தலையாற் கவர்தல்வேண்டுமென்பது; அக்கருத்து: “அகாமாயிர மந்தணர்க் கீயினுஞ், சிகர கோபுரம் செய்து முடிக்கினும், பரம ஞானி பகலூண் பெறுவது, நிகரில்லை நிகரில்லை நிச்சயந்தானே” என்னும் திருமந்திரம் முதலியவற்றானும், மேலாமருந்தவர்க்குதவும் என்புழி ஆண்டுங் கூறியவாற்றானும் அறிக. அங்ஙனமாயினும், அவன் பொருளை அவனறியக் கவராது அறியாது கவர்ந்தமை குற்றமாகாதோ வெனின், அறியாது கடாயினாய்! ஓர் சிறுவன் மடமையான் நஞ்சுண்டு சாவக்கருதி அந்நஞ்சு வாங்கிவரும் பொருட்டு மற்றொருவன் கைக்கொடுத் தனுப்பிய பொருளை, அஃதறிந்த அவன் றந்தை ஆண்டு மகனறியாதே தான் கவர்ந்துகொண்டு, அந்நஞ்சென் றமிர்தத்தை மறைத்துக் கொடுத்து அவனை இரக்ஷித்தல் அவன்மேற் கொண்ட அன்புபற்றியல்லது அன்பின்மைபற்றியன்றாகலின், அது குணமேயாவதல்லது குற்றமாகாமைபோல அரசன் பொருளைப் பரமாசாரியர் அவனறியாது கவர்ந்துகொண்டமையும் அவன்மேற்கொண்ட திருவருள்பற்றியல்லது அருளின்மைபற்றியன்றாகலின், அதுவும் குணமேயாவதல்லது குற்றமாமாறு யாண்டையதென மறுக்க. கருணைபற்றிச் செய்யும் அகிதம் போல்வனவும் இதமே என்பது “மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட், கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போலவீசன்” என்பதனானு மறிக. இன்னும் சுந்தரமூர்த்திநாயனாரைத் தடுத்தாட்கொண்டருளுங்காற் சிவபெருமான் அங்ஙனஞ் செய்தருளிய அகிதம்போல்வனவும் பின் இதமேயாய் முடிந்தமையானும் பிறவாற்றானு மிஃ தாய்ந்துணர்ந்து கொள்க. (கூசு)

அந்தக னெழுது மோலை கொண்டவன் றூதர் தாமும்
வந்தெமை யணுக மாட்டா ருடையவர் மதுகை யாலே
வெந்தொரு கணத்தில் வீழ மேவலர் புரங்கள் செற்றார்
தந்தம ரொருவர்க் கஞ்சத் தகுவரோ வென்று சாற்றி.

இ—ள்: உடையவர் மதுகையாலே - எம்மை அடிமையாக வுடைய சிவபெருமானது சர்வவல்லமையினாலே, அந்தகன் எழுதும் ஓலை கொண்டு அவன் தூதர் தாமும் வந்து எமை அணுக மாட்டார் - யமனெழுதும் மாண வோலையைக் கொண்டு அவனது தூதுவர்தாமும் வந்தெம்மைச் சமீபிக்க மாட்டார், மேவலர் புரங்கள் ஒரு கணத்தில் வெந்து வீழச் செற்றார்தம



தமர் - தாரகாக்கன் கமலாக்கன் வித்தியுன்மாலி யென்னும் பகைவரது பொன் வெள்ளி இரும்பாலய முப்புரங்களும் ஓர் கணப்பொழுதில் எரிந்து துகள்பட்டு விழும்வண்ணம் திருப்புன்னகை யக்கினியினா லழித்த சிவபெருமானுடைய அடியவர் - ஒருவர்க்கு அஞ்சத்தகுவரோ என்று சாற்றி - மற்றெத்திறத்தினர்க்கு மஞ்சற்பாலரோவென்று தம்முட் கூறி எ—று.

சாற்றிப்போயென வருஞ் செய்யுளில் முடிக்க. உடைமைப்பொருள்களாகிய பசுக்களது கண்டிதவலிமையோடு உடையானாகிய பசுபதியினது அகண்டிதவலிமைக்கு வேற்றுமை தெரித்துக் காட்டுவார் உடையவர் மதுகையாலே என்றும், அவ்வகண்டிதவலிமைக் கநுபவங் காட்டுவார் வெந்தொரு கணத்தில் வீழ மேவலர் புரங்கள் செற்றார் என்றும், காப்பவரது வலிமைக்கஞ்சிக் காக்கப்படுவாரை மற்றொருவர் நலிதல் கூடாமையிற் றமினி யுலகத் தொருவர்க்கு மொருசிறிது மஞ்சவேண்டாமென்பார் செற்றார் தந் தமரொருவர்க் கஞ்சத்தகுவரோ வென்றும் கூறினார். “நாமார்க்குங் குடியல்லோ நமனையஞ்சோ நரகத்திலிடர்ப்படோ நடலையில்லோ, மேமாப் போம் பிணியறியோம் பணிவோமல்லோ மின்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற்சங்க வெண்குழை யோர்காதிற், கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே” “செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்களறுத் தீசனேசரொடுஞ் செறிந்திட், டங்கவர்தந் திருவேட மால யங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி, யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோ மியாவர்க்கு மேலானோமென் றிறுமாப் பெய்தித், திங்கண்முடி யாரடியா ரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோரே” என்னும் திருவாக்குக்களும் இவ்விரு செய்யுட் கருத்தேபற்றி வந்தன. கண்டிதம் வரையறுக்கப்பட்டது. அகண்டிதம் வரையறுக்கப்படாதது. முப்புரத்தசுரர் வாணன்முதன் மூவர் என்பது ஒருசா ராசிரியர் கருத்தென்க. (கூஎ)

போயரன் றிருத்தா ளேத்திப் புண்ணிய வடிவே போற்றி
யாயிரஞ் சுடிகைப் பாம்பை யலரென முடித்தாய் போற்றி
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ னெழுது மோலைப்
பாயிர மிதுகே ளென்று மொழிந்தனர் பழுதி லாதார்.

இ—ள்: பழுது இலாதார் போய் அரன் திருத்தாள் ஏத்தி - நிர்த்தோஷராகிய திருவாதவூரடிகள் அதி சமீபத்திற் போய்த் தம் பாசங்களை யரித்த பரமாசாரியரது திருவடிகளை வணங்கி, புண்ணிய வடிவே போற்றி - தருமஸ்வரூபரே காத்தருளுக, ஆயிரம் சுடிகைப் பாம்பை அலர் என முடித்தாய் போற்றி என்று ஏத்தி - ஆயிரந் தலைகளையுடைய பெரும் பாம்பை மலர்மாலைபோல இனிது சூடினவரே காத்தருளுக என்று துதித்து, மா இரு ஞாலம் காக்கும் மன்னவன் எழுதும் ஓலை இது பாயிரம் கேள் என்று

மொழிந்தனர் - மிகவும் பெரிய பூமியைப் பாதுகாக்கும் பாண்டியனெழுதிய ஓலையாகிய இதனது வரலாற்றைத் திருச்செவிசாத்தியருளுகவென்று பிரார்த்தித்து அதனை வாசித்தனர் எ—று.

ஒருவர்கூறை எழுவருடுத்தென்றாற்போல ஆயிரமென்ப தநேகமென்னும் பொருட்டெனினு மமையும். எத்தியென்பதனால் வணங்கி என்பது உபலக்கணம்பற்றி வருவிக்கப்பட்டது. குருசந்நிதியினின்று பிறிதொன்று செய்வது குருநிந்தையாய் முடியுமாகலின், அதனைப் பரிகரிக்கும்பொருட்டு முன்னர்ச் சிறிதிடையிட்டுநின் றரசன்றூதுவர்க் கெதிர்ப்பட்டவர், பின்னர் அச்சேய்மைக்கணின்றாங்குநின் றரசனோலையைத் தாம் வாசித்துக் கேட்பித்தலுங் குருநிந்தையாய் முடியுமாகலின், அதனையும் பரிகரிக்கும்பொருட்டு அதிசமீபத்திற் சென்றென்பார் போய் என்றும், இங்ஙனம் குருசிஷ்யக்கிரமங்களிற் றவறுவாரல்லரென்பார் பழுதிலாதார் என்றுங் கூறினார். (கூஅ)

கேடிலா வியல்பி னாருங் கேட்டிள முறுவல் பூத்துப்
பாடலா லேத்துந் தெய்வப் பான்மையர்க் குவந்து சொல்வார்
பீடிலா தவர்போ லுள்ளம் பேதுற லொழிதி யிந்த
நாடெலா மதிக்க நாமே நற்பரித் திரள்கொண் டேகி.

இ—ள்: கேடு இலா இயல்பினாரும் கேட்டு இள முறுவல் பூத்து - நிர்விகாரமாகிய திருவருட்குணங்களையுடைய பரமாசாரியரும் அதனைக் கேட்டருளித் திருப்புன்னகைசெய்து, பாடலால் ஏத்தும் தெய்வப் பான்மையர்க்கு உவந்து சொல்வார் - திருவாசகம் திருக்கோவையாராகிய செந்தமிழ்ப் பாடல்களினாலே தம்மைத் துதிக்குந் தெய்வப்புலமையையுடைய திருவாதவூரடிகளுக்குத் திருவுளமகிழ்ந்து அருளிச்செய்வாராயினார், பீடு இலாதவர்போல் உள்ளம் பேதுறல் ஒழிதி - அறிவாகிய உள்ளீடற்ற மக்கட்பதடிகளைப்போல மகனே நீ இனி மனமயங்குதலை யொழிவாயாக, இந்த நாடு எலாம் மதிக்க நாமே நல் பரித்திரள் கொண்டு ஏகி - இத்தேசவாசிகளெல்லாம் நன்கு மதிக்கும்படி இனி நாமே நல்ல குதிரைக் கூட்டத்தைக் கொண்டு சென்று எ—று.

குணம் வாய்மை முதலியன. கேடிலா வியல்பினார் நாசமின்றிய சுயம்பு. பீடு-தைரியமுமாம்; "மோடுடை நகரினீங்கி முதுமரந் துவன்றியுள்ளம், பீடுடையவருமுட்கப் பிணம்பலபிறங்கியெங்குங், காடுடையெல்லையெல்லாங் கழுகிருந் துறங்கு நீழற், பாடுடைமயிலந்தோகை பயப்பயவீழ்ந்ததன்றே" என்பதனானும் அறிக. (கூகூ)

தென்னவற் களித்து மீள்வோஞ் செழுந்திறற் றூத ரோடு
மன்னனைக் குறுகி யென்பால் வரவிடு மோலை தன்னான்
முன்னுறக் கடிது வந்தே னாவணித் திங்கண் மூல
மென்னுமத் தினத்தி லிங்கே யெய்துநற் பரிக ளென்பாய்.



இ—ள்: தென்னவற்கு அளித்து மீள்வோம் - அரிமர்த்தனபாண்டியனுக்குக் கொடுத்துத் திரும்புவோம், செழும் திறல் தூதரோடு மன்னனைக் குறுகி - நீ இப்பொழுதே மிக்க வலியையுடைய இத்தூதுவர்களோடு அவ்வரசனை யடைந்து, என்பால் வரவிடும் ஓலைதன்னால் முன் உறக் கடிது வந்தேன் - அரசனே நீ என்மாட்டு வரவிடுத்த ஓலையினால் முன்னாக விரைந்து வந்தேன், ஆவணித் திங்கள் மூலம் என்னும் அத்தினத்தில் இங்கே நல் பரிகள் எய்தும் என்பாய் - ஆவணிமாசத்து மூலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் நக்ஷத்திரத்தை யுடைய அவ்விசேட தினத்தில் இங்கே நல்ல குதிரைகள் வருமென்று சொல்லக்கடவை எ—று.

செழுமை - வலிமை. ஒரு காதம் ஒரு நாழிகையிற் கடக்குந் தூதரென்பார் செழுந்திறற் றூதரென்றார்; "காவதமோரொரு கன்னலினாகப், போவது செய்து" என்றார் பிறரும். (க00)

தொன்மதிக் குலத்து மன்னன் றுயர்செய்வா னென்று சற்று
நின்மனக் கவற்சி கொள்ளா தொழிகென நீறு சாத்திப்
பொன்மணிக் கலன்கள் மிக்க பூந்துகில் பிறவு நல்கி
மன்மனத் துவகை கூர மந்திரிப் பான்மை செய்து.

இ—ள்: தொல்மதிக் குலத்து மன்னன் துயர் செய்வான் என்று சற்றும் நின்மனக் கவற்சி கொள்ளாது ஒழிக என நீறு சாத்தி - பழைய சந்திர வம்மிசத் தரசனாகிய பாண்டியன் நின்னை வருத்துவானென்று நீ சிறிதும் மனத்தின்கட் கவலைகூராதொழிக வென்று பரமாசாரியர் தமது திருமைத் திருக்கரத்தினாலே நெற்றியில் விபூதி சாற்றுதலெனப்படும் சிவகஸ்தமத்தக சம்யோகமாகிய பரிசதீக்ஷையுஞ் செய்தருளி, பொன் மணிக் கலன்கள் மிக்க பூம் துகில் பிறவும் நல்கி - பொன்னாபரணம் இரத்தினாபரணம் விலைமிக்க பொலிவாகிய பீதாம்பரங்களோ டொழிந்தன பிறவற்றையுங் கொடுத்து, மன் மனத்து உவகை கூர மந்திரிப்பான்மைசெய்து - அரசனது மனத்தின்கண் மகிழ்ச்சி மிகும்படி மந்திரிக்கோலங் கொள்வித்து எ—று.

ஒழிகவென்னும் வியங்கோளீறு விகாரமாயிற்று. செய்வித்தென்பது பிறவினை யுணர்த்தும் விவ்விகுதி தொக்குச் செய்தென நின்றது. செய்தெனத் தன்வினையாதலே கருத்தெனிற் பொன்மணிக் கலன் முதலியவற்றை நல்கியென்ற தெற்றுக்கென மறுக்க. தமது வாக்கை ஸ்திரப்படுத்துதற்கு நீறு சாத்தினாரெனக் கோடலுமாம். பரிசதீக்ஷையாவது பரிசனவேதியினாலே தாமிராதி லோகங்களைப் பரிசித்துக் களிம்பை நீக்கிப் பொன்னாக்குதல் போல ஆசாரியர் தமது கையைச் சிவன்கையாகப் பாவித்து அங்ஙனமே அருச்சனைசெய்து அதனைச் சீடனுடைய தலையில் வைத்து எங்கும் பரிசித்து அவனது பாசத்திரயத்தை நீக்கி அவனைச் சிவனாக்குதலாம். ()

தென்றிசைக் கதிபன் றன்பாற் சென்றிது கொடுத்துக் காண்டி
யென்றுமா மணியு நல்கி யேகென விடுத்த பின்னர்க்
கன்றகல் புனிற்று வென்னக் கசிந்திரு கண்ணீர் வார
நின்றுநின் றிறைஞ்சி யையா நீத்தியோ வென்று நொந்து.

இ—ள்: தென் திசைக்கு அதிபன் பால் சென்று இது கொடுத்துக் காண்டி என்று மாமணியும் நல்கி - தெற்கின்கணுள்ள தமிழ் நாட்டுக்கரசனாகிய பாண்டியனிடத்துச் சென்று இதனைக் கையுறையாகக் கொடுத்துக் காண்பாயாகவென்று ஒரு மாணிக்க மணியையுங் கொடுத்து, ஏகு என விடுத்த பின்னர், இனிச் செல்வாயாகவென்று விடை கொடுத்தருளிய பின்னர், கன்று அகல் புனிற்று ஆ என்னக் கசிந்துஇரு கண் நீர்வார நின்று நின்று இறைஞ்சி - இளங்கன்றை விட்டு நீங்குந் தலையீற்றுப் பசுவைப் போல மனம் நெக்கு நெக்குருகி இரு கண்களினின்று நீரொழுக இடையிடையே நின்றுநின்று அடிக்கடி வணங்கி, ஐயா நீத்தியோ என்று நொந்து - சுவாமீ தமியேனைக் கைவிடுகின்றீரோவென்று மனம் வருந்தி எ—று.

செய்யுளாகலிற் சுட்டு முன்வந்தது. புனிற்றுவகல் கன்றென மாற்றிப் பொருள் கொள்வாருமுளர். கசிதல் ஆவுக்கல்லது கன்றுக்கின்மையின் அது போலியுரையென்க. அது, "புனிற்றுக்கன்றை நீங்கியவாவெனக் கரைந்த சிந்தையராய்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. அடுக்கு பன்மைபற்றி வந்தது. முன் வருவதுமது. (௧௦௨)

விழிப்புனல் சிந்தச் சிந்த விண்ணவன் விடைபெற் றேகிச்
சுழிப்புனல் கொழிக்கும் வாவி சூழ்பெருந் துறையை நீங்கி
வழிக்குறு துணையா யுள்ள வள்ளலைந் தெழுத்து மோதிப்
பழிச்சுறு தூத ரோடு மதுரையம் பதியிற் போனர்.

இ—ள்: விழிப் புனல் சிந்தச் சிந்த விண்ணவன் விடை பெற்று ஏகி - திருவாதவூரடிகள் இடையறுதொழுகுந் தைலதாரை போலக் கண்களினின்றும் நீர் ஒழுகவொழுகச் சிதாகாசப் பொருளாகிய கைலாசபதியினது செலவுபெற்றுச்சென்று, சுழிப் புனல் கொழிக்கும் வாவி சூழ் பெருந் துறையை நீங்கி - சுழிக்குமியல்பு பொருந்திய நீர் முத்துக்களைக் கொழிக்குந் தடாகங்கள் சூழும் திருப்பெருந்துறையை விட்டு நீங்கி, வழிக்கு உறு துணை ஆய் உள்ள வள்ளல் ஐந்து எழுத்தும் ஓதி - வழிக்குயிர்த்துணையாயுள்ள சிவமூலமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரங்களையுஞ் செபித்துக்கொண்டு, பழிச்சுறு தூதரோடு மதுரை அம்பதியில் போனர் - தம்மைத் துதிக்குந் தூதுவரோடும் மதுரைமாநகரத்திற் சென்றார் எ—று.

வள்ளல் - கொடையை யுடையவர். ஐந்தெழுத்தும் என்புழி உம்மை முற்றும்மை. வழியென்றது இங்கே மோக்ஷவழியை யென்க; "பயந்த



தனிவழிக்குத் துணை" என அநுபூதிச்செல்வராகிய அருணகிரியார் கூறியதும் அவ்வழியையேயாம். உறு துணை - பெருந் துணை, நிச்சயமான துணை; ஐந்தெழுத்தே முத்திநெறிக்குத் தவறாத் துணை யென்பது, "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி—ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது—வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது—நாத னாம நமச்சிவாயவே" எனவும், "நல்லவர்தீயரெனாதுநச்சினர் — செல்லல்கெடச்சிவமுத்திகாட்டுவ — கொல்ல நமன்றமர்கொண்டுபோமிடத் — தல்லல்கெடுப்பனவஞ்செழுத்துமே" எனவும், "முன்னெறியாகியமுதல்வன்முக்கணன் — றன்னெறியேசரணாதறிண்ணமே — யந்நெறியேசென்றங்கடைந்தவர்க்கெலாம் — நன்னெறியாவதுநமச்சிவாயவே" எனவும் வருந் திருப்பாசுரங்களானும், "ஐந்தெழுத்தினுண்ணெறிவிஞ்ஞமாருயிர்சென்று — சிந்தைகாணருஞ் சிவபதஞ் செறிந்திடுந்திறத்தால்......" எனவும், "கருப்ப யோனியிற் சுழிப்படு பவக்கடல் கடப்பப்—பொருப்பி னெம்பிரா னுயிர்க்கெலாம் புணையெனப் புகன்ற— விருப்ப ஞானவஞ் செழுத்தினை......" எனவும், "முத்தி நன்னெறிக் கொருதுணை மோகவா ரிதிக்கு — வைத்த செஞ்சிகை வடவனல் விளைவனத் திற்குப் — பொத்தி நுங்குவெங் கதழெரி புனைமதிக் கண்ணி — யத்த னெந்தை யஞ்செழுத் திதுகடைப் பிடித்தறிவீர்" எனவும், "ஊனநீக்கியசிவமுன்னார்நமவினையுரைக்கின் — ஞானமெய்திடுமனைவர்க்குநம்பனூர்நயக்குந்— தானமெய்திநற்குரவராற்பெற்றவர்தங்கட் — கானசித்தியுமுத்தியுமக்கணத்தாமால்" எனவும் வரும் பிரமோத்திரகாண்டச் செய்யுட்களானும், "இனையமந்திரத்தியல்புணர்ந்தோர்பொழுதிசைப்போர் — அனையர்தம்முறைப்புண்ணியம் யாவையுமடங்கும் — வினையுநீங்குவர்மேதினிபுரந்தினிதளிப்பார் — புனையுமேற்பதம்புகுவர்முத்தேவரிற்பொலிவார்" என வரும் உபதேசகாண்டச் செய்யுளானும் பிற வேதுக்களானும் உணர்தற்பாலதாமென்க. (௧௦௫)

மதுரைமன் னவன்முன் னேகி மனமிலா வணக்கஞ் செய்து
கதிர்மதிச் சடையோ னீந்த கவின்கொண்மா மணிகைந் நல்கி
யெதிருற நின்ற போதி லின்புற வழுதி நோக்கி
விதிமுறை யிருமிங் கென்ன விருந்தனர் விரிந்த நூலார்.

இ—ள்: விரிந்த நூலார் - பரந்த நூல்களிலே மகாபாண்டித்தியத்தையுடைய திருவாதவூரடிகள், மதுரை மன்னவன் முன் ஏகி மனம் இலா வணக்கம் செய்து - அம் மதுரையை இராசதானியாக வுடைய பாண்டியனுக்கு எதிரே போய்ப் பிரீதியற்ற வணக்கஞ்செய்து, கதிர் மதிச் சடையோன் ஈந்த கவின்கொள் மாமணி கை நல்கி எதிர் உற நின்ற போதில் - ஒரு கலையாகிய பாலசந்திரனை யணிந்த சடையையுடைய சிவபெருமான் கொடுத்தருளிய அழகிய மாணிக்க மணியைக் கையிற் கொடுத்தெதிரே நின்றபோது, வழுதி இன்பு உற நோக்கி விதிமுறை இங்கு இரும் என்ன இருந்தனர் - பாண்டியன் இனிதாகப் பார்த்து இங்கே யிருமென்று விதிப்படி சொல்ல இருந்தார் எ—று.

வணக்கமென்றது ஈண்டுக் கனஞ் செய்தலை; சிவஞானச் செல்வரும் ஆதிவருணத்தவருமாகிய அடிகள் அரசனை நமஸ்காரஞ்செய்தல் விதியன்மையி னென்க. சிவபெருமான் சடையிலணிந்த மதி ஒருகலையாகிய மதி என்பது "வன்றிறற் றக்கன் முன் வழங்கு தீச்சொலாற், றுன்றிருங் கலையெலாந் தொலைந்து போந்திட, வொன்றிவ ணிருந்ததா லுதுவுந்தேய்ந்திடு, மின்றினி வினையினேன் யாதுசெய்வதே" "எஞ்சியவிக்கலை யிருக்கத் தேய்தரு, விஞ்சிய கலையெலா மேவநல்குதி, தஞ்சநின் னலதிலை யென்னத் தண்மதி, யஞ்சலை யென்றன னருளி னூழியான்" "தீர்ந்தன வன்றியே திங்கடன்னிடை, யார்ந்திடு கலையினை யங்கையாற்கொளா, வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினன், சார்ந்தில தவ்வழித் தக்கன் சாபமே" என்பனவற்றானறிக. சேனாவீரரும் பிறருந் தனக்குக் கூறிய தாபத வேடமாக வன்றி முன்போல வமைச்சுவடிவமாகவே காணப்பட்டமையானும், உயர்ந்த மாணிக்கமணியாகிய கையுறையானும் பாண்டியன் வெறுப்பகன் றுவந்து நோக்கின னென்பார் இன்புற வழுதி நோக்கி யென்றும், விதிக்கு அவிரோதமாகிய வழக்கம் விதியாதற் கிழுக்கின்மையிற் பண்டை வழக்கப் பிரகாரமென்பார் விதிமுறை யென்றுங் கூறினர். (க௦௪)

விலைமதிப் பில்லா வந்த மேதகு மணியைப் பல்கா
னிலையுற வியந்து நோக்கி நெஞ்சினு ளுவகை யெய்தித்
தலைவனைச் சிந்தை யுள்ளே தரிப்பவர் தம்மை நாடிச்
சிலைமுகக் கரத்து மன்னன் செய்ததே துரைமி னென்றான்.

இ—ள்: சிலை முகக் கரத்து மன்னன் - விற்றழும்பு பொருந்திய கையையுடைய பாண்டியராசன், விலை மதிப்பு இல்லா அந்த மேதகு மணியைப் பல்கால் நிலையுற நோக்கி - விலைமதித்தற்கரிய மகிமை பொருந்திய அம்மாணிக்கமணியைப் பலகால் உற்று நோக்கி, நெஞ்சினுள் வியந்து உவகை எய்தி - தன் மனத்தினுள்ளே அதிசயித்து மகிழ்ச்சி கூர்ந்து, தலைவனைச் சிந்தை உள் தரிப்பவர் தம்மை நாடி - ஆன்மநாயகராகிய சிவபெருமானை இருதயத்து ஞானக்கண்ணாற் றரிசிக்குந் திருவாதவூரடிகளை நோக்கி, செய்தது எது உரைமின் என்றான் - குதிரை கொள்ளுமாறு சென்றபின் இதுகாறும் நீர் செய்ததென்னை கூறுமென்றான் எ—று.

இருதயத்திற் றரிசித்தல் சிவோகம்பாவனை பண்ணுதல். இனித் தரித்தல் தியானித்தலுமாம். மகாராசாவாகிய தான் மற்றொருவரது மணியை வெளிப்பட வியக்கின் அது தன்பெருஞ் செல்வானுபவ முடைமைக்கு இழுக்காய்முடியு மாகலானும் பிறர் மதித்துரைக்குமுன் றான் மதித்துணரும் ரத்தின பரீக்ஷை யுடையனாதலானும் வெளிப்படாது தன்னுள்ளே வியந்தென்பார் நெஞ்சினுள் வியந்தென்றும், சேனாவீரரது கூற்றோடு மாறுபடுதலிற் குணமும், குதிரையோடு வாராமையிற் குற்றமுமாகிய இவ்விருநிலை



யினு மொன்றில் வைத்து இவரதியற்கையை இந்நிலைமைக்கட் டுணிதல் கூடாமையின் அவ்விருநிலைமைக்கும் பொதுவகையாற் செய்ததே துரைமின் என வினவினா னென்றுங் கூறினர். (க௦௫)

மலக்கொடும் பகையை வெல்வார் மன்னவன் முகத்தை நோக்கி
நிலத்தொளிர் புகழின் மிக்காய் நீதரு நிதிகொண் டேகி
யிலக்கணக் குறைபா டின்றி யீரிரு கதியு முண்டாங்
குலப்பரி யினங்கள் யாவும் விலைக்குறக் கொண்ட பின்னர்.

இ—ள்: மலக் கொடும் பகையை வெல்வார் மன்னவன் முகத்தை நோக்கி - மும்மலமாகிய கொடிய பகையை வெல்பவராகிய திருவாதவூரடிகள் இங்ஙனம் வினவிய அவ்வரசனது முகத்தை நோக்கி, நிலத்து ஒளிர் புகழின் மிக்காய் நீ தரு நிதி கொண்டு ஏகி - தமிழ் நிலத்தின்கண் மிக்கொளிரும் புகழான் மேம்பட்ட அரசனே நீ தரு திரவியத்தை நாங் கொண்டு சென்று, இலக்கணக் குறைபாடு இன்றி ஈரிரு கதியும் உண்டாம் குலப் பரி இனங்கள் யாவும் விலைக்குறக் கொண்ட பின்னர் - அசுவ லக்கண நூலிற் கூறிய இலக்கணங்களு ளொன்றானுங் குறைவற்று நான்கு கதிகளையு முடையனவாகிய உயர்ந்த சாதிக் குதிரைக் கூட்டங்களை யெல்லாம் நாம் விலைக்குத் தகக் கொண்ட பின்னர் எ—று.

அநாதியா யுடனின்று கெடுத்த உட்பகையாகலிற் கொடும்பகை யென்றும், ஏனைத் தமிழ்நிலத்துச் சோழ சேரர்களது புகழினு மிக்கொளிரும் பெரும் புகழையுடையா யென்பார் நிலத்தொளிர் புகழின்மிக்காய் என்றும், அதிகவிலைக்குக் கொள்ளாமையும் நாற்பத்தொன்பது கோடி பொன்னுக் கெஞ்சாமைக் கொண்டமையும் விளக்குவார் விலைக்குறக்கொண்டபின்னர் என்றுங் கூறினர். கதி நான்காவன: மயூரகதி, சரகதி, சசகதி, வானரகதி என்பன. தூரககதியை இந்நான்கென்பாரும், இந்நான்கனோடு மல்லகதியையுஞ் சேர்த்து ஐந்தென்பாருமென இருதிறத்தராசிரியர். அது "மயிலிருஞ்சரமுயலொடுயூகமற்றொழிலைப், பயில்பரித்தொகை யளப்பிலவயின் றொறும் பரவும்" என்பதனானு மறிக. (க௦௬)

அரும்பரித் தொகுதி யெல்லா மணிதிகழ் மதுரைக் கேகப்
பொருந்திய தினமே தென்னப் பூசுரர் விதியிற் றேர்ந்து
திருந்துமா வணியாந் திங்கண் மூலநற் றினமா மென்ன
விருந்தன னதனை நாடிப் பெருந்துறை யென்னு மூரில்.

இ—ள்: அரும் பரித் தொகுதி எல்லாம் அணி திகழ் மதுரைக்கு ஏகப் பொருந்து நல் தினம் எது என்ன - பெறுதற்கரிய குதிரைக்கூட்டங்களெல்லாம் அழகிய மதுரைமாநகரத்திற் செல்லுதற்கேற்ற சுபதினம் யாதென்று வினவ, பூசுரர் விதியில் தேர்ந்து திருந்தும் ஆவணி ஆம் திங்கள்

மூலம் நல்தினம் ஆம் என்ன - பூசுராராகிய கணிதர் சோதிடநூல்விதியா ஞராய்ந்து திருத்தமாகிய ஆவணிமாதத்து மூலநக்ஷத்திரதினம் அதற்குத் தக்கதென்று கூற, அதனை நாடிப் பெருந்துறை என்னும் ஊரில் இருந்த னன் - அம்மூலநக்ஷத்திரத்தை எதிர்நோக்கித் திருப்பெருந்துறையென்னு மூரில் இதுகாறு மிருந்தேன் எ—று.

ஈண்டுத் திருவாதவூரடிகள் பூசுரர் என்றது தங்கருத்துக்குப் பரமா சாரியரை. அற்றாகலினன்றே கணிதர் சோதிடரென்னாது பூசுரரென் றொழிந்ததூஉமென்க. (௧௦௭)

நின்படைச் சுற்ற மெல்லா நீடுமிந் நகருக் கெய்து
மன்பினிற் கடிது மீண்டா ரவர்பெரும் படிறு கூற
மன்பெரு முனிவா லோலை வரைந்தனை யதனால் வந்தேன்
கொன்பரித் திரளிங் கெய்துங் கூறுமந் நாளி லென்றார்.

இ—ள்: நின்படைச் சுற்றம் எல்லாம் நீடும் இந்நகருக்கு எய்தும் அன் பினில் கடிது மீண்டார் - அச்சமயத்து நின் சேனைவீராகிய சுற்றத்தவ ரெல்லாரு முயர்வாகிய இவ்விராசதானிக்குத் தாம் வருதல்வேண்டுமென் னும் வேணவாவினாலே விரைவாக மீண்டு வந்தனர், அவர் பெரும் படிறு கூற - அவர் தம்மைத் தப்புவித்தற்பொருட் டென்னைக் குறித்துப் பெரும் பொய்களை வகுத்துக் கூற, மன் பெரு முனிவால் ஓலை வரைந்தனை அதனால் வந்தேன் - அரசனே நீ பெருங் கோபங்கொண்டு திருமுகமெழுதி விடுத் தனை அதுபற்றி முன்வந்தேன், கொன் பரித் திரள் கூறும் அந்நாளில் இங்கு எய்தும் என்றார் - மாட்சிமைபொருந்திய குதிரைக்கூட்டம் மேற்கூறிய மூலநக்ஷத்திரதினத்தில் இங்கே தப்பாது வருமென்று திருவாதவூரடிகள் கூறினார் எ—று.

மன் அண்மைவிளி; நிலைபேறுமாம். படிறு - பொய். அரசனுக் கிவ் வாறு பொய்கூறிய திருவாதவூரடிகள் மெய்கூறிய சேனைவீரர் கூற்றைப் பொய்யென்றது தப்பன்றோவெனின், அரசனுக் கங்ஙனங் கூறுமாறு பணித்தருளிய பரமாசாரியரது திருவாக்கை உண்மையென் றுள்ளபடி விசுவசித்த அவ்வடிகட்கு அதற்கு மாறாகக் கூறிய சேனைவீரர் கூற்று ஒரு தலையாகப் பொய்யாகவே தோன்றுமாகலின், அப்பொய்யைப் பொய்யென் றது தப்பன்றென்க. அல்லதூஉம், சிவஞானச்செல்வராகிய திருவாதவூ ரடிகளுக்குத் தீமை பயக்குஞ் சேனைவீரர் சொன் மெய்போலத் தோன்றி னும், "வாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந், தீமையிலாத சொலல்" என்பவாகலின், அது எவ்வாற்றானும் பொய்யேயாமென்க. அற் றேற் பரமாசாரியர் அங்ஙனம் பொய் கூறுவித்தது தப்பன்றோவெனின், அஃதவ்வரசனுக்குப் பின்னர் ஒருதலையாற் புரைதீர்ந்த நன்மையே பயக்குஞ் சிறப்புடைமையின் மெய்யெனவே படுமாகலின், அம்மெய்யை மெய்யெனக் கூறுவித்ததூஉந் தப்பன்றென்க. அதனைப் "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்பதனானு மறிக. (௧௦௮)



என்பது கேட்டு மாற னும்மிடை யெமக்குண் டான
மன்பெரு நண்பு நீங்க நினைத்துள மனத்தார் சொல்லா
லன்பிலர் போல வோலை யெழுதின மதுகொண் டின்னே
துன்புற லொழிவீ ரென்று நன்மையாத் தொன்மை கூறி.

இ—ள்: என்பது மாறன் கேட்டு - என்றிங்ஙனந் திருவாதவூரடிகள் கூறுவதைப் பாண்டியன் கேட்டு, உம்மிடை எமக்கு உண்டான மன் பெரு நண்பு நீங்க நினைத்துள மனத்தார் சொல்லால் - உம்மிடத் தெமக்குளதாகிய நிலைபெற்ற அந்தரங்கநட்புத் தானே நீங்கும்வண்ணம் உபாயஞ்சூழும் மனத் தையுடைய சிலர் வார்த்தையை விசுவசித்தலினால், அன்பு இலர் போல ஓலை எழுதினம் - உம்மிடத் தன்பில்லாதவர்போலத் தீட்சண்ணிய வசனங்களைப் பிரயோகித்து உமக்கோரோலை யெழுதி யனுப்பினோம், அதுகொண்டு இன்னே துன்பு உறல் ஒழிவீர் என்று நன்மை ஆத் தொன்மை கூறி - அது பற்றி இங்ஙனந் துன்புறுதலை யொழிதிரென்று சமாதானமாகப் பழைய நட் புரிமைகளை யெடுத்துப் பாராட்டி எ—று.

அதுகொண் டின்னே என்பது பாடமாயின் அதுபற்றி ஈண்டு வந்த குற்றமென்னை எனப் பொருள் கூறுக. நன்மை தொன்மை என்பன ஆகு பெயர். சமயம்பார்த்து நண்பு பிரிய நினையும் மாற்சரியமனம் முன்னொட் டுச் சிலர்க்குளதாமென்பது விளக்குதற்கே நினைந்த மனமென்னாது நினைந் துள மனமென்றதென்க. (௧௦௯)

கொன்னெடுங் கோயி லூடு கொடுபுகுந் துரிமை கூரத்
தன்னரு கிருத்தி மேன்மை தக்கநற் கலைக ணல்கிப்
பொன்மணிக் கலங்கள் யாவும் புனையுமென் றளித்து முன்போன்
மன்னுள கருமங் கூறி மனையிடை யேகு மென்றான்.

இ—ள்: கொன் நெடும் கோயில் ஊடு கொடு புகுந்து உரிமை கூரத் தன் அருகு இருத்தி - பிறர்க் கச்சந் தரும் மற்றோர் நெடிய அந்தரங்க மாளி கையின்கண் உடனழைத்துக் கொடுசென் றுரிமைமிகத் தன்பக்கத் திருத்தி, மேன்மை தக்க நல் கலைகள் நல்கி - மாட்சிமைபொருந்திய நல்ல வஸ்திரங் களைத் தரித்துக்கொள்ளுமென்று கொடுத்து, பொன் மணிக் கலன்கள் யாவும் புனையும் என்று அளித்து - வேண்டும் பொன்னாபரணம் இரத்தினா பரணங்களையெல்லாம் அணிந்துகொள்ளுமென்று கொடுத்து, முன்போல் மன் உள கருமம் கூறி மனை இடை ஏகும் என்றான் - முன்னரேபோல இராசதருமங்களைக் குறித்துப் பேசி இனி நீர் நும்மில்லின்கட் செல்லு மென்று பாண்டியன் கூறினான் எ—று.

புனையுமென்றென்பது மேலுங் கூட்டப்பட்டது. ஒருவர்க்கொன்றுபகரிக்குமிடத்தும் அந்தரங்க சூழ்ச்சிகளைக் குறித்துப் பேசுமிடத்தும் அததற்கு வேண்டப்படு மவருடன் மற்றையர் பிரவேசித்தற்கரிய இரகசிய தானத்தை அடையவேண்டுதல் அரசர்க்கு நீதிநூற்றுணிபாகலின், அங்ஙனமே செய்தானென்பார் கோன்னெடுங் கோயிலூடு கொடுபுகுந் தென்றும், தன்காடின்னிய பத்திரிகையாற் பங்கமுற்ற பழைய நட்புரிமைகளெல்லாம் முன்போல வளருமாறு தன்னோடு சமமாகவே யிருத்திப் பீதாம்பரங்களையும் உயர்ந்த ஆபரணங்களையுந் தன்கண்ணெதிரே இப்பொழு தணியுமென்று ஒவ்வொன்றாகக் கொடுத்தானென்பார் உரிமைகூரத் தன்னருகிருத்தி மேன்மைதக்க நற்கலைகணல்கிப் பொன்மணிக்கலன்கள் புனையுமென் றளித்தென்றும், ஒருமகற்கு ஆபாதசூடபரியந்தம் வேண்டப்படும் வஸ்திராபரணங்களெல்லா மென்பார் யாவுமென்றும், முன்போலவே தம்மை அரசன் விசுவசித்தனனென் றடிகள் துணியும்வகை அந்தரங்க வார்த்தைகளைப் பேசினனென்பார் முன்போன் மன்னுள கருமங்கூறி என்றும், பராமுகமின்றித் தானே விடைகொடுத் தனுப்பினனென்பார் மனையிடை யேகுமென்றனென்றுங் கூறினர். கடினசம்பந்தம் காடின்னியமென்க. (கக௦)

தம்பெரு மனையிற் சென்று தாபதர் வைகப் பின்னர்
நம்பரிச் சமூக மெய்து நாளிரண் டென்னு முன்னர்
வெம்படைச் சுற்ற நீங்கி யிருந்துழி விரிந்த நேமி
யம்புவிக் கரசன் றன்மு னமைச்சரி லொருவன் சென்று.

இ—ள்: தாபதர் தம் பெரு மனையிற் சென்று வைக - சைவ முனிவராகிய திருவாதவூரடிகள் தந்திருமாளிகையின்கட் சென்று தங்க, பின்னர் - அதன்பின்னர், நம் பரிச் சமூகம் எய்தும் நாள் இரண்டு என்னும் முன்னர் - நமது குதிரைக்கூட்டம் வருமென் றவ்வடிகள் அரசனுக்கு வரையறுத்துக் கூறிய தினத்துக்கு இன்னுமிரண்டு தினங்களுளவென்று சொல்லப்படுவதன் முன்னர், விரிந்த நேமி அம் புவிக்கு அரசன் வெம் படைச் சுற்றம் நீங்கி இருந்துழி - பரந்த சமுத்திரஞ் சூழ்ந்த அழகிய பூமிக்கரசனாகிய பாண்டியன் வெவ்விய படைஞராகிய தன் பரிவாரத்தைத் தவிர்ந்து ஏகாந்தஸ்தானத்தில் இருக்கும்பொழுது, அமைச்சரில் ஒருவன் முன் சென்று - மந்திரிகளுள் ஒருவன் அவ்வரசனுக் கெதிர் சென்று எ—று.

நம்மென்பது உளப்பாட்டுத் தன்மைப்பன்மைப் பெயர். எய்துநாள் எய்துமென்ற நாளென வருவித்து முடிக்க. நாளுக்கென நான்காவது விரிக்க. அந்நாளென்பது இரண்டு நாளெனப் பின்னுங் கூட்டப்பட்டது. உளவென்னும் பயனிலை அவாய்நிலையான் வந்தது. நாளிரண் டென்னு முன்னரெனவே மூன்றுநாளி லென்பது பெற்றாம். ஈண்டு நாளென்றது ஆவணி மூலநக்ஷத்திர தினத்தை. இருந்த என்னும் பெயரெச்ச வீறு



விகாரமாயிற்று. ஏகாந்த ஸ்தானம் - தனியிடம். அம்மந்திரி தம்முதன்மந்திரி ஒருசிறிதுமறியாதபிரகாரம் தான் இதனை அரசனுக்குத் தனியிடத்துச் சென்று கண்டறிவிக்க எண்ணினனென்பார் அரசன் வெம்படைச் சுற்ற நீங்கி யிருந்துழி யமைச்சரி லொருவன் சென்றென்றார். இனி, நம் பரிச் சமூகம் என்பதனை நம்பு அரிச்சமூகம் எனக் கண்ணழித்து, விரும்பத் தகுங் குதிரைக் கூட்டமெனப் பொருள் கோடலு மொன்று. இப்பொருட்கு நம்பு - விருப்பம். அரி - குதிரை. இனி நன்பரிச்சமூக மென்பது பாடமாயின், மகரத்துக்கு னகரம் இனவெதுகையாய் வந்ததென்று கொள்க; "வருக்கநெடிலினம் வந்தாலெதுகையு மோனையுமென், றுருக்கப் பெயரானுரைக்கப்படும்" என்பதோத்தாகலின். அது "அத்தமும் வாழ்வு மகத்துமட்டே விழியம்பொழுக, மெத்திய மாதரும் வீதி மட்டே விம்மி விம்மி யிரு, கைத்தல மேல்வைத் தழுமைந்தருஞ் சுடுகாடுமட்டே, பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே" என்பதனுள்ளுங் காண்க. இனி முதலடி முதலைத் தன்பெரு மனையெனப் பாடங்கொள்வாருமுளர். அது முன் வரும் தாபதர் என்பதனோடு நிரோதுவான் முரணி ஒருமைப்பன்மை மயக்கம் பெறுதன் முதலிய குற்றமுறுதலின், அது இலக்கணநுட்பங் கூறாதார் பாடமென விடுக்க. (ககக)

போற்றியெம் பொருநை நாட போற்றியென் றிறைஞ்சிக் கூறு
மாற்றமுன் டொன்று நின்பேர் புனைந்துள வரிசை பெற்றோர்
சாற்றருந் துரகங் கொள்ள நேரியன் றலத்திற் சார்ந்து
நீற்றின னடியார் கையி னின்பொருள் யாவு மீந்தார்.

இ—ள்: எம் பொருநை நாட போற்றி போற்றி என்று இறைஞ்சி - தாமிரபர்ணிநதி பிரவாகிக்கும் நாட்டை யுடைய எமதரசனே பாதுகாக்கப்படுக பாதுகாக்கப்படுக வென்று வணங்கி, கூறும் மாற்றம் ஒன்று உண்டு - இங்ஙனந் தமியேன் விண்ணப்பஞ்செயத்தகும் வார்த்தை யொன்றுள்ளது அதுதான் யாதெனின், நின் பேர் புனைந்துள வரிசை பெற்றோர் - தென்னவன் பிரமராயனென்னு நின் சிறப்புப் பெயர் புனையப் பெற்ற மதிப்பையுடைய முதன்மந்திரியானவர், சாற்றரும் துரகம் கொள்ள நேரியன் தலத்திற் சார்ந்து - சொல்லுதற்கரிய குதிரைகளைக் கொள்ளும் பொருட்டுச் சோழதேசத்தை யடைந்து, நீற்றினன் அடியார் கையில் நின் பொருள் யாவும் ஈந்தார் - விபூதியை யணிந்த சிவபெருமானுடைய அடியார்கள் கையிலே உன்திரவியங்களையெல்லாங் கொடுத்தார் எ—று.

போற்றி ஈண்டும் பரிகாரம். திரவியங் கைகடந்தமையும் குதிரை வாராமையுமாகிய இரண்டிற்கும் பரிகாரமாக ஈண்டும் இருகாற் போற்றியென்றானென்க. இனி, இவ்விரகசியத்தை யான் நினக்கு வெளிவரச் செய்தமைபற்றி அச்சிரேட்ட மந்திரியால் எனக்கு யாதாயினுந் தீங்கு சம்

பவிக்குமாயின், அதனை நீயே நேர்நின்று நீக்கி என்னைப் பாதுகாக்க வென்னுங் கருத்தை யுட்கொண்டு அதற்குப் பரிகாரமாகப் போற்றி யெம் பொருளை நாட போற்றியென் றிறைஞ்சினனெனக் கோடலுமொன்று. இப் பொருட்குப் போற்றிய என்னும் வியங்கோள் ஈறு குறைந்து போற்றி என நின்றதாக வுரைக்க. அது நினக்குப் பெரிதும் பயன்படும் வார்த்தை யென்பான் கூறுமாற்றமொன் றுண்டென விதந்து கூறினனென்க. (ககஉ)

நின்பெருந் தூத ரேகி யெழுதுநின் னோலை காட்டும்
பின்புவந் துனது சீற்ற மொழித்துயிர் பிழைக்க வெண்ணி
யன்பினர் போல நின்முன் குறுகி யாவணி மூலத்தி
னன்பரித் திரளிங் கெய்து நானுனக் களிப்ப னென்றார்.

இ—ள்: நின் பெரும் தூதர் ஏகி எழுதும் நின் ஓலை காட்டும் பின்பு - நின் விசேட தூதுவர் சென்று நீ யெழுதிய உன் திருமுகத்தைக் காட்டிய பின்னர் (அச்சங்கொண்டு), வந்து உனது சீற்றம் ஒழித்து உயிர் பிழைக்க எண்ணி - இங்கே வந்து உன் வெகுளியைத் தணித்துத் தாமுயிருய்யக் கருதி, அன்பினர் போல நின்முன் குறுகி - நின்மாட்டன்புடையவர் போல நடித்து நினக்கெதிர் வந்து, ஆவணி மூலத்தின் நன் பரித்திரள் இங்கு எய்தும் - ஆவணி மாசத்து மூலநக்ஷத்திர தினத்திலே நல்ல குதிரைக் கூட்டங்கள் இங்கே வரும், நான் உனக்கு அளிப்பன் என்றார் - நானே யுனக்கவற்றைத் தருவேனென்று உறுதிகூறினர் எ—று.

ஈண்டுத் தூதுவருக்கு விசேடம் கடுநடையினை யுடையராதல். (ககரு)

மற்றவர் மொழிந்த வெல்லாம் பொய்யுரை மன்ன வென்னச்
சொற்றமிழ் வைகை நாடன் றூதரைச் சுழித்து நோக்கி
யற்றமில் சுருதி வல்லா ரருட்பெருந் துறையி லெய்தி
யுற்றவெம் பரிக ளுண்டே லொல்லைவந் துரைமி னென்றான்.

இ—ள்: மன்ன அவர் மொழிந்த எல்லாம் பொய் உரை என்ன - அரசனே அவ்வமைச்சர் இங்ஙனங் கூறியவைகளெல்லாம் பொய்வார்த்தையென்றம்மந்திரி விண்ணப்பஞ் செய்ய, சொல் தமிழ் வைகை நாடன் தூதரைச் சுழித்து நோக்கி - மதுரை முச்சங்கத்தாசிரியர்களாலும் ஆராய்ந்து வழுஉக்களைந் தினிதாக்கஞ் செய்துகொளப்பட்ட செந்தமிழ் மொழியோடு வைகை நதி பெருகுந் தென்னாட்டையுடைய பாண்டியன் அதுகேட்டுச் சமீபத்தில் நிற்குந் தூதுவரை வெகுண்டு நோக்கி, அற்றம் இல் சுருதி வல்லார் அருள் பெருந்துறையில் எய்தி - நிருவாண தீக்ஷை பெற்றுச் சிவாகமங்களைப் போதப்பிரகார நெறியானே குருமுகமாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மகான்களுக்கு மறைப்பற்ற வேதங்களிலே மகாபாண்டித்தியத்தை யுடைய



பெரியோர்கள் வசிக்குந் திருப்பெருந்துறையில் நீவிர் போய், உற்ற வெம் பரிகள் உண்டேல் ஒல்லை வந்து உரைமின் என்றான் - சமுத்திர தீரத்தினின்றுங் கொடுவரப்பட்ட வேகத்தையுடைய குதிரைகளுளவாயின் விரைவாக வந்திங் கெமக் கறிவியுங்களென்று பணித்தான் எ—று.

பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நால்வகைச் சொற்களையுடைய தமிழென்றுமாம். போதப்பிரகாரம் - அறியும் வகை. அது உத்தேசம், இலக்கணம், பரீக்ஷை என மூவகைப்படும். இவற்றின் விரிவைத் தர்க்கநூல்களுட் காண்க. நிருவாண தீக்ஷை பெற்றுச் சிவாகமங்களை ஓதியுணர்ந்தவர்களுக் கல்லது வேதத்தின் ஞானகாண்டத் துண்மைப் பொருள் ஒருவாற்றானும் விளங்காதென்பது "நிருவாண தீக்ஷை செயப் பெற்றுச் சிவாகமத்தை ஓதியுணர்ந்தார்க்கன்றி வேதாந்தத் துண்மைப்பொருள் ஒருவாற்றானும் விளங்குதல் கூடாமையானும்" என நங் குருமூர்த்திகள் சைவசமயநெறியுரையிற் கூறியருளியவாற்றானுமறிக. அற்றம்-மறைவு. இனி, அற்றமில் சுருதி என்பதற்கு மறவியையுடைய பசுக்களாற் செய்யப்பட்ட ஏனை நூல்கள் போலன்றி, அம்மறவியின்றிப் பதியாற் செயப்பட்ட சுருதி என்றுமாம். இப்பொருட்கு அற்றம் - சோர்வு. (ககச)

அருந்திறற் றூத ரேகி யத்தினங் கடிது மீண்டு
வருந்திமுன் புகுந்து மன்னர் மன்னனை வணங்கி நின்று
பெருந்துறை யென்னு மூரும் பிறவுள பதியுந் தேடிக்
கருந்தடங் களிற்று வேந்த கண்டிலம் பரிக ளென்றார்.

இ—ள்: அரும் திறல் தூதர் ஏகி அத்தினம் கடிது வருந்தி மீண்டு - அரிய வேகத்தையுடைய தூதுவர் உடனே திருப்பெருந்துறைக்குப் போய் அத்தினமே விரைவாக மனவருத்தத்தோடு திரும்பி வந்து, மன்னர் மன்னனை முன்புகுந்து வணங்கி - மகாராசாவாகிய பாண்டியனை அபிமுகத்திற் புகுந்து வணங்கிநின்று, கரும் தடம் களிற்று வேந்த - கரிய மலைபோலும் யானைப்படையையுடைய அரசனே, பெருந்துறை என்னும் ஊரும் பிற உள பதியும் தேடிப் பரி கண்டிலம் என்றார் - திருப்பெருந்துறை யென்னுமூரினும் அடுத்த பிறவூர்களினுந் தேடியும் நாங் குதிரைகளைக் கண்டிலம் என்று விண்ணப்பஞ் செய்தார் எ—று.

திறல் ஆகுபெயர். தடம் - மலை; பெருமையுமாம். அபிமுகம் - எதிர்முகம். திருப்பெருந்துறையினும் பிற பதிகளினுந் தேடியுங் குதிரைகளின்மையின் அதுபற்றி இனித் திருவாதவூரடிகளுக்கு அரசனால் யாது சம்பவிக்குமோ வெனத் தூதுவர் மீண்டு செல்லும்போது மனவருத்தத்தோடு சென்றாரென்பார் வருந்தி மீண்டென்றார். போனவுடன் திரும்பி வந்தமை பற்றிச் சரீரம் வருந்தி மீண்டென்றுமாம். (ககரு)

பாங்குநின் றின்ன வாறு பகர்தலும் வெகுட்சி யெய்தி
யீங்குநங் கருமஞ் செய்வ னென்றிடர் செய்வான் றன்னைத்
தாங்கருந் துயரஞ் செய்து தகைந்துநந் தனத்தை யெல்லாம்
வாங்குமின் றண்ட லாள ரென்றிகன் மன்னன் சொன்னான்.

இ—ள்: பாங்கு நின்று இன்னவாறு பகர்தலும் - தூதுவர்கள் ஒரு மருங்கொதுங்கி நின்றிந்தப் பிரகாரம் விண்ணப்பஞ் செய்தலும், இகல் மன்னன் வெகுட்சி எய்தி - மாறுபாட்டை யுடைய அரசன் கோபங் கொண்டு, தண்டலாளர் - தண்டத் தலைவர்களே, ஈங்கு நம் கருமம் செய்வன் என்று இடர் செய்வான் தன்னை - இங்கே நங்காரியங்களை அநுகூலஞ் செய்வேனென் றுடம்பட்டுப் பிரதிகூலஞ் செய்து நமக்குத் துன்பம் விளைக்குந் திருவாதபுரேசனை, தாங்கு அரும் தண்டம் செய்து தகைந்து நம் தனத்தை எல்லாம் வாங்குமின் என்று சொன்னான் - சகித்தற்கரிய கொடுந் தண்டனைகளைச் செய்துஞ் சிறை செய்தும் நந் திரவியங்களை யெல்லாம் வாங்குங்களென் றாஞ்ஞாபித்தான் எ—று.

தூதுவர் நாமிதனை விண்ணப்பஞ் செய்யுங்கால் நமக்கும் யாது சம்பவிக்குமோ வென்னு மச்சத்தான் எதிர்முகமாக நில்லா தொருமருங் கொதுங்கி நின்று விண்ணப்பஞ் செய்தா ரென்பார் பாங்குநின் றின்னவாறு பகர்தலு மென்றும், நந் திரவியாபகாரக் குற்றத்தின் மேலும் நங் காரியத்தைச் செய்வேனென் றுடம்பட்டுப் பின்பு செய்யாமை ஒப்பிப்பணி செய்யாமை யென்னுங் குற்றமாகலின் இவ்விரு குற்றங்கட்குந் தகப் பெருங் கொடுந் தண்டனை செய்கவென் றரசன் கூறினனென்பார் ஈங்கு நங் கருமஞ் செய்வா னென்றிடர் செய்வான்றன்னைத் தாங்கருந் தண்டஞ்செய்து தகைந் தென்றும் கூறினார். இனித் தாழ்ந்தோ ருயர்ந்தோர்க் கொன்றனை விண்ணப்பஞ் செய்யுங்கால் வஸ்திரத்தை யொதுக்கி வாய்புதைத் தொல்கிநின்று, அவரை உயர்த்தியுந் தம்மைத் தாழ்த்தியும் மெல்ல விண்ணப்பஞ் செய்தல் வேண்டுமாகலிற் றூதுவ ரங்ஙனமே விண்ணப்பஞ் செய்தாரென்பது விளக்குவார் பாங்குநின் றின்னவாறு பகர்தலு மென்றா ரெனினு மமையும். இப் பொருட்குப் பாங்கென்பது உரிமை. (ககசு)

மன்பெருந் தண்ட லாளர் மறையவர் குலத்தின் மிக்கார்
முன்புநின் றினைய சொல்வார் முனிவுடை முகத்த ராகி
நன்பரித் தொகுதி கொள்ள நயந்துமக் கந்நா ளீந்த
தன்பொரு ளெல்லாம் வாங்கச் சாற்றினன் சீற்ற மன்னன்.

இ—ள்: மன் பெருந் தண்டலாளர் மறையவர் குலத்தின் மிக்கார் முன்பு முனிவு உடை முகத்தர் ஆகி நின்று இனைய சொல்வார் - அரசனது பெரிய தண்டத் தலைவர் பிராமணகுல சிரேட்டராகிய திருவாதவூரடிகளுக்



கெதிரே போய் அவ்வரசனது கோபக் குறிப்புப் பொருந்திய முகத்தை யுடையராய் நின்றிவைகளைச் சொல்வார், - சீற்ற மன்னன் நன்பரித் தொகுதி கொள்ள நயந்து உமக்கு அந்நாள் ஈந்த தன் பொருள் எல்லாம் வாங்கச் சாற்றினன் - கோபத்தை யுடைய பாண்டியராசன் நல்ல குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு விரும்பி உம்மிடத் தன்று தந்த தன்றிரவியங்களை யெல்லாம் வலாற்காரஞ் செய்து வாங்கும்படி இன்றெமக்கு ஆஞ்ஞாபித்தனன் எ—று.

உம்மிடத்து நாங்கொண்ட சீற்றம் அரசன் கொண்ட சீற்றமல்லது நமது சீற்ற மன்றென்பார் சீற்றமன்னனென விசேடித்துக் கூறினார். அக் கருத்தை வருஞ்செய்யுளானு முய்த்துணர்க. (ககஎ)

மற்றிதன் பயன்யா தென்னின் மன்னவன் விடுப்ப வென்றி
யுற்றவன் றூதர் வல்லை யொண்பெருந் துறையி னெய்திக்
கொற்றவெம் பரிகள் காணார் மீண்டனர் கோவு நும்பாற்
பற்றிய நேசம் விட்டான் பாரினி யாள வொட்டான்.

இ—ள்: இதன் பயன் யாது என்னின் - அரசனிங்ஙனங் கூறிய கருத் தென்னையெனின், மன்னவன் விடுப்ப - அவ்வரசன் ஐயுற்றனுப்ப, வென்றி உற்ற வன் தூதர் வல்லை ஒண் பெருந்துறையின் எய்திக் கொற்ற வெம்பரிகள் காணார் மீண்டனர் - வெற்றியை யுடைய வலிய தூதுவர்கள் விரைவாகத் திருப்பெருந்துறையிற் போய் வலிமை பொருந்திய வெவ்விய குதிரைகளைக் காணாதவர்களாய்த் திரும்பி வந்து கூறினர், கோவும் நும்பால் பற்றிய நேசம் விட்டான் - அரசனும் உம்மிடத் திறுகப் பற்றிய தன்னன்பை நீக்கி விட்டான், இனிப் பார் ஆள ஒட்டான் - ஆகலின், முதன்மந்திரியாய் உத்தியோக நிலையோடு இனி நீர் பூமியை அரசாள ஒருபோதும் விடமாட்டான் எ—று. (ககஅ)

தனமினித் தருதல் வேண்டு மென்றுவன் றண்ட லாளர்
சினமுடன் புகல வாளா விருத்தலுந் தீமை கூரு
நினைவுட னமைச்சர் வாழ்வி னீக்கிமெய் வாக்கின் மன்னர்த்
தனியுற வலிதிற் காவற் சாலையி லாக்கி னார்கள்.

இ—ள்: வன் தண்டலாளர் தனம் இனித் தருதல் வேண்டும் என்று சினம் உடன் புகல - வலிய தண்டத்தலைவர்கள் இனி அரசனுடைய திரவியத்தை நீர் இப்பொழுதே தரல்வேண்டுமென்று சினக்குறிப்புடன் கேட்ப, மெய் வாக்கின் மன்னர் வாளா இருத்தலும் - உண்மைவாக்குக் கரசராகிய திருவாதவூரடிகளானவர் அதற்குப் பிரதியுத்தரம் ஒன்றும் பேசாது வாளா விருத்தலும், தீமை கூரும் நினைவு உடன் அமைச்சர் வாழ்வின் நீக்கி வலிதில் தனி உறக் காவல் சாலையில் ஆக்கினார்கள் - அவர்கள் தண்டனைசெய்யு

மெண்ணத்துடன் அவ்வடிகளை ஆமாத்தியவாழ்வினின்று நீக்கிப் பிடர்பிடித் துந்திக் கொடுபோய்த் தனித்திருக்கும்படி சிறைச்சாலையில் அடைத்தார்கள்.

அமைச்சர்வாழ்வு மந்திரிக்கோலம். அக்கோலத்தோ டவரைத் தண் டித்தல் அரசநீதிக் கடாமையின் அமைச்சர் வாழ்வி னீக்கி என்றார். அமைச் சர்க்கு மெய்வாக் கியல்பா னுளதாயினும், அவர் முன்னேதிய மூலநாளிற் பரிகள் வருதல் நிச்சயமாதல்பற்றி மெய்வாக்கின் மன்னரென ஈண்டு விசே டித்தார். இவ்வியல்பினரைச் சிறைசெய்த றகாதென்பது கருத்து. மெய் வாக்குத் திருவாசகமெனினுமாம். வலிது வலாற்காரம். சிவஞானச்செல் வராகிய திருவாதவூரடிகளைப் பிடர்பிடித்துந்திக் கொடுபோய்க் காவற் சாலையி லடைத்தார்களெனக் கூற ஆசிரியர்க்கு நாவெழாமையின் வலிதிற் காவற்சாலையி லாக்கினர்களெனப் பிறிதோர் வாய்பாட்டாற் கூறினார்; "முன்னின்ற பாதகனுந் தன் கருத்தே முற்றுவித்தான்" எனப் பிறரு மிங் ஙனங் கூறுதல் காண்க. மற்றிதன் பயன் யாதென்னும் முற்செய்யுள் இடைப்பிறவரலாய் வந்தமையின் அதன் முற்செய்யுளோ டிச்செய்யுளை இயைத்துப் பொருள் கொள்க. (௧௧௯)

சற்றுமுட் டளர்விலாத தன்மையின் வாதவூரர்
மற்றவர் செலுத்தச்சென்று வன்சிறைச் சாலையெய்த
நற்றவர் வருத்தங்காண நாணமுற் றொளிப்பான்போன்று
பொற்றடந் தேரின்வெய்யோன் போய்க்குட பான்மறைந்தான்.

இ—ள்: வாதவூரர் அவர் செலுத்தச் சற்றும் உள் தளர்வு இலாத தன் மையின் சென்று - திருவாதவூரடிகளானவர் அத்தண்டத்தலைவர் இங்ஙனஞ் செலுத்தாநிற்ப அதற்குத் தா மொருசிறிதும் மனந்தளராத உதாசீனத் தன்மையோடு சென்று, வன் சிறைச் சாலை எய்த - வலிய சிறைச்சாலையை யடைய அத்தருணத்திலே, தடம் பொன் தேரின் வெய்யோன் - விசால மாகிய அழகிய தேரையுடைய சூரியன், நல் தவர் வருத்தம் காண நாணம் உற்று ஒளிப்பான் போன்று போய்க் குடபால் மறைந்தான் - நல்ல தவத்தை யுடைய அவ்வடிகட் கெய்திய துன்பத்தைத் தான் காணுதற்கு வெட்கமுற் றொளிப்பவன்போலப் போய்ப் பச்சிம திக்கின்கணுள்ள அஸ்தமயன கிரி யிலே மறைந்தான் எ—று.

திருவாதவூரடிகள் இருவினையொப்புடைய ராகலின் அத்தண்டத் தலை வர்களது தீ வினைக்குத் தா மொருசிறிதும் நாணி வருந்தாது சமபுத்திபண் ணிச் சென்றாரென்பார் சற்று முட் டளர்விலாத தன்மையின் வாதவூரர் மற்றவர் செலுத்தச் சென் றென்று கூறினார். உலகத்து நல்லவர்க் கோர் தாழ்வு வந்துழி அவரை அந்நிலைமைக்கட் காணுதற் கேனைப் பெரியோர் நாணித் தவிர்வாரன்றே, அதுபோலத் திருவாதவூரடிகட் கெய்திய தாழ் வைக் காண நாணி யொளிப்பவன்போலச் சூரியன் அஸ்தமயனமாயிற்றென் பது கருத்து. தன்னியல்பான் மறையுஞ் சூரியனைச் சிறைச்சாலையை யடைந்த திருவாதவூரடிகளைக் காண நாணி ஒளித்ததாக ஆசிரியர் குறித்த



மையின், இது தற்குறிப்பேற்ற மென்னு மலங்கார மென்க. இச்சூரியனைப் பெயர்பொருளாகக் குறிக்குங்காற் பெயர்பொருட் டற்குறிப்பேற்றமும், அல்பொருளாகக் குறிக்குங்கால் அல்பொருட் டற்குறிப்பேற்றமுமாம். உதா சீனம் - விருப்பு வெறுப்பின்மை. (௧௨௦)

கள்ளுலா மிதழி மாலை கவின்பெற முடித்த வேணி
வள்ளலா ரேவச் சென்று வழுதிமேல் வெகுட்சி கொண்டு
வெள்ளைவான் பிறைப்பற் றோன்ற விழுங்கவங் காந்த பேயின்
கொள்ளிவா யனைய வண்ணங் கொண்டது செக்கர் வானம்.

இ—ள்: செக்கர் வானம் - சூரியாஸ்தமயனகாலத்திலே தோன்றிய செவ்வானம், கள் உலாம் இதழி மாலை கவின் பெற முடித்த வேணி வள்ள லார் வழுதி மேல் ஏவ - தேனொழுகுங் கொன்றைமாலிகையை அது அழகு பெற முடித்த சடையையுங் கொடையையு முடைய சோமசுந்தரக்கடவுள் தம்மெய்யன்பராகிய திருவாதவூரடிகளைச் சிறைசெய்து வருத்தும் பாண்டி யனைக் கொல்லும்படி அவன்மேல் விடுக்க, சென்று வெகுட்சி எய்தி - அவ்வேவலின்வழிச் சென் றரசன்மேற் கோபங்கொண்டு, வெள்ளை வான் பிறைப் பல் தோன்ற விழுங்க அங்காந்த பேயின் கொள்ளிவாய் அனைய வண்ணங் கொண்டது - வெண்மையாகிய பெரிய பிறையென்னும் வக்கிர தந்தம் வெளியே தோன்ற அவ்வரசனை விழுங்கும்படி திறந்த கொள்ளி வாய்ப் பேயினது வாய்போலும் செந்நிறத்தை யுடையது எ—று.

உலாவுமென்னுஞ் செய்யுமெனெச்ச வீற்றுயிர் மெய் கெட்டது. சென் றென்னுமெச்சம் அங்காந்த என்பதனோடும், கொண்டென்னு மெச்சம் விழுங்கவென்பதனோடும் முடிந்தன. (௧௨௧)

தெண்டிரை யுலகி னல்ல திறத்தினர்க் குற்ற தீங்கு
கண்டுணர் சிறியோர் போல நகைத்தன கவின்கொண் முல்லை
யொண்டமிழ் வாத வூரர்க் குற்றதை யுணர்ந்து துன்பங்
கொண்டவ ரிதயம் போலக் குவிந்தன கமல மெல்லாம்.

இ—ள்: கவின் கொள் முல்லை - அம்மாலைக்காலத்தின்கண் அழகை யுடைய முல்லைக்கொடிகளானவை, தெள் திரை உலகின் நல்ல திறத்தினர்க்கு உற்ற தீங்கு கண்டு உணர் சிறியோர் போல நகைத்தன - சமுத்திரஞ் சூழ்ந்த இந்நிலவுலகத்துள்ள நன்மக்கட்கெய்திய தீவினையை நேரே கண்டறிந்து நகைத்து மகிழுங் கீழ்மக்களைப்போல அரும்புகள் விரிந்து விளங்கின, கம லம் எல்லாம் - தாமரை மலர்களெல்லாம், ஒள் தமிழ் வாதவூரர்க்கு உற் றதை உணர்ந்து துன்பங் கொண்டவர் இதயம் போலக் குவிந்தன - செந் தமிழ்க் கொருவராகிய திருவாதவூரடிகளுக்கு எய்திய சிறைத்துன்பத்தைக் கேட்டறிந்து வருந்துகின்ற பெரியோர்களது வாடுகின்ற இதயபங்கயங் களைப் போலக் கூம்பின எ—று.

தெண்டிரை வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தெள்ளல் - கொழித்தல். தெள்ளுதல் வினைக்குச் சங்கு ஒக்கொலை முதலியவற்றுள் ஏற்குஞ் செயப்படுபொருள் வருவித்துக்கொள்க. இக்கருத்தைத் "திரை கொழித்திடுஞ் சிந்துவின் சூழல்" என்றற் றொடக்கத்தனவாகப் பரந்துவரும் ஆன்றோ ரிலக்கியங்களானு மறிக. இனித் தெளிவாகிய திரைகளையுடைய சமுத்திரமெனப் பொருள்கொண்டு பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையென்பார், திரைக்கு அத்தெளிவுடைமை யாண்டுஞ் செல்லாமையின், அவ்வியாத்திக் குற்றந் தங்குமாகலின், அது போலியுரையென் றொழிக. நிகழ்ச்சி யறி பொறிகளுட் கண் காதிரண்டுமே சிறந்தமையிற் சிறியோரைக் கண்டுணர் சிறியோரென விசேடிக்கவே, பெரியோர்க்கு உணர்தல் கேட்டுணர்த லென்பது பாரிசேடத்தாற் பெற்றாம். நேரே கண்டறிந்தும் நகுதலிற் சிறியோரது சிறுமையும், பிறர் சொல்லக் கேட்டறிந்தும் பரிதவிற் பெரியோரது பெருமையும் அறியப்படுமென்பார் இங்ஙனம் விதந்து கூறினர். பிறர்கேட்டிற் கிரங்குதலும் இரங்காமையுமே முறையே நல்லோர் அல்லோர்க் கிலக்கணமாதலமையுமென்பது கருத்தென்க. சாதுக்கடம் பருவரல் கண்டுழிச் சிறியோர் மகிழுதலும், பெரியோர் துன்பங் கொள்ளுதலுமே அவ்வவர்க்குக் கூடு மியற்கையாதலின், இது கூடுமியற்கை தெரிதர வந்த மறுபொருளுவமாலங்காரமென்க. (௧௨௨)

தென்னவன் வைத்த காவற் சிறையினி லுறையுந் தெய்வ
மன்னவ ரொருவர் காணி னாணமுற் றயர்வா ரென்றே
யின்னல்கொள் மனத்தாள் போல விருட்கரங் கொண்டு கூடற்
பொன்னக ருள்ளார் கண்கள் புதைத்தனள் கங்குன் மங்கை.

இ—ள்: கங்குல் மங்கை - இராக்காலமாகிய பெண்ணானவள், தென்னவன் வைத்த காவல் சிறையினில் உறையும் தெய்வம் அன்னவர் - பாண்டியனால் வைக்கப்பட்ட காவலையுடைய சிறையின்கண் வைகும் ஒரு தெய்வத்தை யொத்தவராகிய திருவாதவூரடிகள், ஒருவர் காணின் நாணம் உற்று அயர்வார் என்று இன்னல் கொள் மனத்தாள் போல - ஒருவர் தம்மைக் காணப்பெறின் வெட்கமுற்று வருந்துவரென்று அதற்குத் தான் மனத்திலே துன்பங் கொள்பவள் போல, இருள் கரங் கொண்டு கூடல் பொன் நகர் உள்ளார் கண்கள் புதைத்தனள் - இருளாகிய கைகளைக் கொண்டு நான்மாடக்கூடலாகிய அழகிய மதுராநகரத்தின்கணுள்ளவர்களது கண்களைப் பொத்தினள் எ—று.

தைவதம் என்னும் வடமொழி தெய்வம் என்றாயிற்று. முன், திவ்வியமென்னும் வடமொழி தெய்வமென்றாயதென்றது பிறர் மதம். வடமொழி வழக்குப்பற்றி இராக்காலம் பெண்ணாக உருவகிக்கப்பட்டது. மாலைக்காலத்து மயங்கிருணீங்கி அந்தகாரமாயிற் றென்பது கருத்து. தன்னியல்பிற் றங்குமிருளை மாணிக்கவாசக சுவாமிகளைக் காணாதிருக்குமாறு



மதுரைமாநகரத்துள்ளாரது கண்களைப் புதைத்ததாகக் குறித்தலால் இதுவுந் தற்குறிப்பேற்ற மென்னு மலங்காரமென்க. (௧௨௫)

மன்பகை துரப்ப திந்த மந்திரித் தலைவர்க் குண்டா
மென்பது முளதோ வந்தோ வென்செய்து மென்றி ரங்கி
யன்பரை யகன்று நெஞ்சா லழலெழ வுயிர்த்து மாழ்குந்
துன்புடை மடவார் போலத் துயின்றிலர் மதுரை யுள்ளார்.

இ—ள்: மதுரை உள்ளார் - மதுரை மாநகர வாசிகளாகிய நன்மக்களெல்லாம், இந்த மந்திரித் தலைவர்க்கு மன் பகை துரப்பது உண்டாம் என்பதும் உளதோ - சூழ்ச்சித் தலைவராகிய இந்தத் திருவாதவூரடிகளுக்கு அரசனது பகைமையை நீக்கிக்கோடலுண் டென்பதும் இனி யுளதோ, அந்தோ என் செய்தும் என்று இரங்கி - ஐயகோ இதற்கு எளிவந்த யாங்கள் யாது செய்வோமென்று மனமிரங்கி, அன்பரைப் பிரிந்து அழல் எழ உயிர்த்து நெஞ்சு மாழ்கும் துன்புடை மடவார் போல - தங்காதலரைப் பாத்தையிற் பிரிவு முதலிய பிரிவின்கட் பிரிய விட்டிழந்து செய்வதொன்று மறியாது அக்கினிப் பொறி சிதறத் தம்முள் நெட்டுயிர்ப் பெறிந்து மனமறுகுந் துன்பத்தையுடைய மகளிரைப் போல, துயின்றிலர் - நித்திரை செய்யாதவராயினர் எ—று.

என்பதென்பது ஈண்டெழுவாயுருபின் பொருள்பட நின்றது; எழுத்தென்ப தாவி என்புழிப்போல. ஓகாரம் எதிர்மறை. ஆல் அசை; ஈண்டு உருபென்றல் பொருந்தாது. அந்தோ என்பது சிங்களச் சொல்; இதனை "ஹந்த" என்னும் வடசொல்லின் சிதைவென்பர் ஒருசாரார். அரசனறியாது மனமாழ்குதலிற் றலைவரறியாது மனமாழ்கும் மகளிரை யுவமையாக்கி நெஞ்சு மாழ்குமென்றார். எனவே திருவாதவூரடிகள் அனைவர்க்கும் கண்ணுமிடு கவசமும்போல் உயிர்த்துணையாய் இருந்தாரென்பது பெறப்பட்டது. தம்மின் மிக்காரிருவரையுஞ் சமாதானஞ் செய்து கோடல் தமக்கொருவாற்றானுங் கூடாமையின் வேறு செய்வதொன்றுமின்றி மனமிரங்கினா ரென்பது விளக்கிய அந்தோ வென்செய்து மென்றிரங்கி என்றும், எல்லாரும் இங்ஙனமே என்பார் உள்ளா ரென்றுங் கூறினர். (௧௨௪)

செம்மனப் புனிதர்க் குண்டாந் தீங்குதங் கிழமை யாலே
யைம்முகக் கடவு ளீன்ற வறுமுகக் குரைக்கு மாபோல்
விம்முசெஞ் சூட்டு முட்டாள் வியன்சிறைச் சேவ லெல்லாந்
தம்மனை யிடங்க டோறுந் தழங்கின புலரிக் காலை.

இ—ள்: புலரிக்காலை - அவ்விரவு விடியற்காலையில், விம்முசெம் சூட்டு முள் தாள் வியன் சிறைச் சேவல் எல்லாம் - விம்முகின்ற சிவந்த சூட்டினையும் முட்பொருந்திய கால்களையும் பெரிய சிறகுகளையுமுடைய

சேவற்கோழிக ளெல்லாம், செம் மனப் புனிதர்க்கு உண்டாம் தீங்கு - செவ்விய சித்த சுத்தியையுடைய திருவாதவூரடிகளுக் குளதாகிய சிறைத் துன்பத்தை, ஐம்முகக் கடவுள் ஈன்ற அறுமுகற்குத் தம் கிழமையால் உரைக்குமா போல் - ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோ சாதமென்னு மைந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் றந்தருளிய ஆறுதிருமுகங்களையுடைய சுப்பிரமணியக் கடவுட்குத் தம்முரிமையினாலே விண்ணப்பஞ் செய்யுமாறு போல, தம் மனை இடங்கள் தோறும் தழங்கின - தமது வாசஸ்தானமாகிய இல்லங்கடோறுங் கூவின எ—று.

உரைக்குமாறு உரைக்குமா எனச் செய்யுண்முடிபெய்தி நின்றது. அவ்வைம்முகங்களோ டதோமுகமுஞ் சேர்ந் தாறு முகமாயின வென்க. அது "ஐந்துமுகத்தோ டதோமுகமுந் தந்து, திருமுகங்க ளாறுகி" என்பதனானு மறிக. விம்முதல் இறுகிப் பொலிதல். இயற்கையானே ஐம்புலன் வழியன்றி விவேகத்தின் வழிச் செல்லும் நன்மனமென்பார் செம்மனமென்றும், தலைமைபற்றிய வழக்காற் சித்தசுத்தி கூறவே வினைத் தேகசுத்தி கூறாதே யமைதலின் அதனை வேறுவைத் தெண்ணாது மனப் புனிதரென்றும், சிவனடியாராதி தீங்கைச் சிவகுமாரரதடிமை அவருக்கு விண்ணப்பஞ் செய்தற்குரிமை யுடைமையிற் றங்கிழமையால் என்றுங் கூறினார். இதுவுந் தற்குறிப்பேற்ற மென்னு மலங்காரம். (கஉரு)

சிற்பர முணர்ந்து ஞானச் செந்தமி ழோது நீதிப்
பொற்பினை யுடையோ ரின்னல் பொருதுசென் றுரைப்ப போல
விற்பொலி சடிலன் சூல வேலவ னால வாயி
லற்புதன் கோயின் முன்றி லார்த்தன சங்க மெங்கும்.

இ—ள்: சிற்பரம் உணர்ந்து - சூக்கும சித்தாகிய பரமசிவத்தை அநுபூதியிற் கண்டுணர்ந்து, ஞானச் செந் தமிழ் ஓதும் நீதிப் பொற்பினை யுடையோர் இன்னல் பொறாது சென்று உரைப்ப போல - அவ்வனுபவ ஞானமே பொருளாகச் செந்தமிழ் மொழியினாலே திருவாசகத்தைப் பாடியருளு முறைமையினையே தமக் கணிகலமாகவுடைய திருவாதவூரடிகளது துன்பத்தைக் கண்டு சகிக்கலாற்றாது சமீபத்திற் சென்று விண்ணப்பஞ் செய்வன போல, வில் பொலி சடிலன் சூல வேலவன் ஆலவாயில் அற்புதன் கோயில் முன்றில் எங்கும் - செவ்வொளியாற் பொலிகின்ற சடையை யுடையவரும் சூலப்படையை யுடையவரும் திருவாலவாயில் வீற்றிருக்கின்ற ஞானமே திருமேனியாக வுடையவருமாகிய சோமசுந்தரக் கடவுளது திருக்கோயிற் றிருமுன்றி லெங்கணும், சங்கம் ஆர்த்தன - சங்குகள் சத்தித்தன எ—று.

பொற்பினை யென்னு மிரண்டனுருபைப் பிரித்து நீதி யென்பதனோடு கூட்டி ஆக்கம் வருவித்துரைக்க. பொற்பு - ஆகுபெயர். வேல் படைக்



கலப்பொது. ஆலவாய் - மதுரை. முன்றில் - முற்றம்; என்றது சந்நிதியை. சங்கம் - திருப்பள்ளியெழுச்சிக்கூதும் சங்கம். அது பிரணவ வடிவாகலானும், அப்பிரணவஞ் சிவபெருமானுக் கிருப்பிடமாகலானும், அச்சிவபெருமான் திருவாதவூரடிகளுக் கதிதெய்வமாகலானும், அத்திருவாதவூரடிகள் பிரணவத்துக் குரியராகலானும், தம்முள் இயைபுடைமையின் அவ்வடிகளதின்னலைப் பொறாது சென்றுரைப்ப போல வென்றார். வைகறை யாயிற்றென்பது இவ்விரு செய்யுட்குங் கருத்தென்க. (கஉசு)

எம்மிறை பரியி லேறு நாளிதோ வென்று பார்க்குஞ்
செம்மலர் மடவா ளிட்ட திலகசிந் தூரம் போல
வம்மலை மிசையே வைகி யாடகக் கிரிசூழ் போந்து
மைம்மிகு கடன்மேல் வந்து முளைத்தது வால பானு.

இ—ள்: வால பானு - பால சூரியன், அம்மலை மிசையே வைகி - அவ்வஸ்தமயன கிரியினின்று நீங்கி, ஆடகக் கிரிசூழ் போந்து - பொன்மயமாகிய மேருகிரியைச் சுற்றிச் சென்று, மை மிகு கடல் மேல் வந்து - கருமை மிகுந்த கிழக்குச் சமுத்திரத்தின் மீது வந்து, எம் இறை பரியில் ஏறும் நாள் இதோ என்று பார்க்கும் செம் மலர் மடவாள் - எம் முழுமுதலாகிய சிவபெருமான் குதிரையி லேறியருளும் விசேட தினமிதுவோ வென்றெட்டி நோக்கும் செந்தாமரை மலராசனியாகிய மகாலக்குமி, இட்ட சிந்தூர திலகம் போல முளைத்தது - தன்னுதலின்க ணிட்ட சிந்தூர திலகத்தைப் போல உதித்தது எ—று.

வைகல் - கழிதல். அது, "வைகலை வைத்துணராதார்" என்னும் நாலடியாரானறிக. திலதம் - பொட்டு. வால்-இளமை. அம்மலையெனச் சுட்டிக் கூறினார் வெய்யோன் போய்க் குடபான் மறைந்தான் என மேற்கூறிய அத்தொடர்புதோன்றுதற்கென்க. சிவபெருமானுக்குக் குதிரையேற்றம் புதிதாகலின் நோக்கல் வேண்டிற்றென்க. இதனானே புதிது நோக்குதற்கண் மகளிர்க் கவாமிக் குடைமையும், மறைந்துநின் றெட்டி நோக்குதல் அவர்க் கியற்கை யென்பதும் விளக்கியதூஉமாயிற்று. இங்ஙனங் கூறிய பொருள் வகைக் கேற்ப மகாலக்குமிக் கிடம் கடலாக வைத்துரைக்க. (கஉஎ)

மன்கெழு செங்கோல் வேந்தன் வைகறை யெழுந்து நீராற்
கன்கழல் விளக்கி மூழ்கிக் கண்ணுதல் பூசை செய்து
தன்கதிர் முத்த மாலை தரித்துநற் கலன்க டாங்கி
மின்கிளர் செம்பொற் கோயின் முகப்பினில் வீற்றிருந்தான்.

இ—ள்: மண் கெழு செம் கோல் வேந்தன் - மண்ணுலகெங்குந் தடையின்றிச் செல்லுஞ் செங்கோலை யுடைய பாண்டியராசன், வைகறை எழுந்து - இங்ஙனஞ் சூரியனுதிக்க அதன்முன்னமே பிராமி முகூர்த்தத்

தின் கண் நித்திரைவிட்டெழுந்து, நீரால் கண் கழல் விளக்கி - நீரினாலே கண் கால் முதலிய அவயவங்களைச் சுத்திசெய்து சிவத் தியானாதிகளை முடித்து, மூழ்கிக் கண்ணுதல் பூசை செய்து - விதிப்படி ஸ்நானம்பண்ணி உதயகால சந்தியாவந்தனத்தோடு சிவபூசை முதலிய நித்தியகருமங்களை முடித்துப் போசனஞ் செய்து, தண் கதிர் முத்துமாலை தரித்து நல் கலன்கள் தாங்கி - தண்ணிய ஒளியையுடைய முத்து மாலைகளைத தரித்து ஒழிந்த நல்ல ஆபரணங்களையுந் தாங்கி, விண் கிளர் செம்பொன் கோயில் முகப்பினில் வீற்றிருந்தான் - விண்ணினகணுயர்ந்த செம்பொன் மயமாகிய அத்தாணியின் பூர்வபாகத்து வீற்றிருந்தான் (அதுநிற்க.) எ—று.

பிராமி முகூர்த்தம் - சூரியோதயத்துக்குமுன் ஐந்துநாழிகை தொடங்கிச் சூரியோதயம் வரையுமுள்ள காலம். சிவத்தியானாதிகள்; சிவத்தியானம், சிவமூலமந்திரசெபம், அருட்பாக்களினாலே உச்சவிசையோடு செய்யும் தோத்திரமென்னு மிம்மூன்றுமாம். மண்ணுலகெங்குந் தடையின்றிச் செல்லுஞ் செங்கோலென்பார் மண்ணுலகத்தில் வழிச் செல்லும் செங்கோலென வரைந்து கூறாது வாளா மண்கெழு செங்கோலென்றும், ஆதலின் நெடுநில வரசனென்பார் வேந்தனென்றும், வைகறையி னித்திரைவிட்டெழுந்தவுடன் செய்யப்படுஞ் சிவத்தியானாதிகளி னிமித்தம் ஆண்டுச் சுத்தி செய்யத்தகும் அவயவம் கண்முதற் காலீறாயவற்றுள் ஏற்பன வென்பார் ஆதியந்த அவயவமிரண்டனுள் ஏனை யவயவங்களை யடக்கிக் கண் கழல் என்றும், வைகறையெழுந்து நீராற் கண் கழல் விளக்கி எனக் கிளந்து கூறவே, அதனதாற்றலான், அங்ஙனமெழுந்து சுத்திசெய்வது ஆண்டொருதலையாற் செய்ய வேண்டுஞ் சிவத்தியானாதிகளின் பொருட்டென்பது தானே விளங்குதலின் அச்சிவத்தியானாதிகளை விரியாது தொகுத்தும், நித்தியகருமங்களுள் விசேட கருமங்களை விதந்து கூறவே, உபலக்கணத்தான் ஏனையவுந் தழுவப்படுதலின், அவசியகருமம், சௌசம், தந்தசுத்தி என்னுமிம் மூன்றையும் ஸ்நானத்து ளடக்கி மூழ்கி என்றும், சிவபூசைக்கு முன் செய்யப்படும் உதயகால சந்தியாவந்தனத்தையும் பின் செய்யப்படும் சிவாலய தரிசனம், சிவசாத்திர பாராயணம், போசனம் முதலியவைகளையும் சிவபூசையு ளடக்கிக் கண்ணுதற்பூசை செய்தென்றும், நவரத்தினங்களுண் முத்துப் பாண்டிநாட்டின் கண்ணதாகலின் அப்பாண்டிநாட்டை விசேடவுரிமையானாளும் பாண்டியனுக்கு அம்முத்துமாலை விசேடாபரணமென்பார் அதனை ஏனை யாபரணங்களினின்றும் பிரித்து முன் வேறுவைத் தெண்ணித் தண்கதிர் முத்தமாலை தரித்தென்றுங் கூறினார். இன்னும் உதயகாலத் தணிதற்கு முத்தாபரணம் விசேடமுடைத் தென்பது இரத்தின பரீக்ஷை நூலுடையாரது துணிவாகலின், அதுபற்றி அம்முத்து மாலையை விசேடித்து விளக்கிய, அதனை இங்ஙனம் வேறுபிரித்து முன் வைத்தாரெனக் கோடலுமாம். (கஉஅ)



வன்றிற லாள ரெல்லாம் வான்பரித் திரள்கள் கொள்வான்
சென்றர னடியார்க் கீந்த செழும்பொரு டாரீ ராகி
லின்றுமை வருத்தஞ் செய்து மென்றெறி வெயிலி னூடு
நின்றிடு மென்ன நின்றார் நீள்பெரும் புகழி னிற்பார்.

இ—ள்: வல் திறலாளர் எல்லாம் வாம்பரித் திரள்கள் கொள்வான் சென்று - சூரியோதயத்தின் பின் வலிய தண்டத் தலைவர்களெல்லாஞ் சிறைச்சாலையிலிருக்குந் திருவாதவூரடிகளை நோக்கி நீர் தாவுகின்ற குதிரைக் கூட்டங்களைக் கொள்ளும்பொருட் டிம்மதுரையை விட்டுச் சென்று, அரன் அடியார்க்கு ஈந்த செழும் பொருள் தாரீராகில் - திருப்பெருந்துறையிலே சிவனடியார்களுக்குக் கொடுத்த அரசன் திரவியங்களை இதுபொழுது தாராதொழிதிராயின், இன்று உமை வருத்தஞ் செய்தும் என்று - இன்றைக்கு உம்மைத் தப்பாது தண்டிப்பேமென்று முன்ன ரச்சுறுத்தி, எறி வெயிலின் ஊடு நின்றிடும் என்ன - பின்னர் எறிக்கின்ற இவ்வெய்யிலின் கண் அசைவற நில்லுமென்று கூற, நீள் பெரும் புகழின் நிற்பார் நின்றார் - நெடிதாகிய பெரிய புகழுடம்பான் எஞ்ஞான்றும் நிலைபெறும் திருவாதவூரடிகள் அவ்வாறே நின்றார் எ—று.

வாவும் என்னுஞ் செய்யுமென் வாய்பாட் டெச்சவீற் றுயிர்மெய் கெட்டது. பூதவுடம்பு போல விரைந் தழிதலின்றிப் புகழுடம்பு தனக்காதாரமாகிய உலகம் பொன்றுந்துணையு மாதேயமா யழிவின்றி நிற்றலின் அதனை நீள்பெரும் புகழென விசேடித்தார். புகழ் ஆகுபெயர். (கஉகூ)

அங்குநின் றிளைப்பார் தம்மை யாண்டவா னடிகளை யுன்னி
யிங்குணர்ந் திலையோ நாயே னிடும்பையென் றிரக்க மெய்திச்
சங்கவெண் குழையாய் மன்னன் றனக்குவாம் பரிக ளீத
னங்கட னாகு மென்று நவின்றசொற் பொய்ம்மை யாமோ.

இ—ள்: அங்கு நின்று இளைப்பார் தம்மை ஆண்ட ஆண்டகையை உன்னி - அங்கே வெய்யிற்கணின்று சூடுண்டிளைக்குந் திருவாதவூரடிகள் தம்மை ஆட்கொண்டருளிய சர்வவல்லமையினையுடைய பரமாசாரியரைத் தியானித்து, இங்கு நாயேன் இடும்பை உணர்ந்திலையோ என்று இரக்கம் எய்தி - இங்கே புழுத்த நாயினுங் கடையேனாகிய தமியேன் படுந் துன்பத்தைச் சர்வஞ்ஞதையுடைய தேவரீர் அறிந்திலீரோவென்று தம்முளிரக்கங்கொண்டு, வெண் சங்கக் குழையாய் - வெண்மையாகிய சங்கக் குண்டலத்தை யுடையவரே, மன்னன் தனக்கு வாம் பரிகள் ஈதல் நம் கடன் ஆகும் என்று நவின்ற சொல் பொய்ம்மை ஆமோ - இனிப் பாண்டிய ராசனுக்குத் தாவுகின்ற குதிரைகளைக் கொடுத்தல் நமது கடமையாகு மென்று தேவரீர் தமியேனுக் குறுதி கூறியருளிய திருவாக்குப் பொய்ப்படுமோ எ—று.

திருவாதவூரடிகள் பரமாசாரியரை நோக்கித் தம்மை யிழித்துக் கூறுதல் "நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்து" "நாயிலாகிய குலத்தினுங் கடைப்படு மென்னை நன்னெறி காட்டி" "உடையானே நின்றன்னை யுள்கி யுள்ளமுருகும் பெருங்காத, லுடையா ருடையாய் நின்பாதஞ் சேரக் கண்டிங்கூர்நாயிற், கடையானே னெஞ்சுருகாதேன் கல்லாமனத்தேன் கசியாதேன், மிடையார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்பதாக முடித்தாயே" என்பவற்றானுணர்க. அவ்வடிகளி னிடும்பையை நீக்க வல்லவ ரென்பார் ஆண்டகை யென்றார். இவ்விடும்பையை அறியவல்ல சர்வஞ்ஞத்துவமுடையார் அறியாரல்லர்; அறிந்தே நீக்கா திருக்கின்றாரென வுட்கொண்டு பதைத்தா ரென்பார் இங்குணர்ந்திலையோ நாயே னிடும்பையென் றிரக்க மெய்தி என்றும், எஞ்ஞான்றும் பிறழா மெய்ம்மைசெறிந்த பரிசுத்த வாக்குடையா யென்பார் சங்கவெண் குழையா யென்றுங் கூறினர். (கருo)

ஊனுடம் புடைய வாழ்க்கை யொழித்துனக் கடிமை யென்று
மாநிலம் புகலா நிற்ப வந்துனை யடைந்தேன் றன்னை
மீனவன் றன்பான் மீள விடுத்தனை வேலை நீரு
ளானபி னந்நீ ராற்று நீரென வாவ துண்டோ.

இ—ள்: ஊன் உடம்பு உடைய வாழ்க்கை ஒழித்து - தசைப்பொதியாகிய இந்த வுடம்போடு கூடி வாழும் பிரபஞ்ச வாழ்க்கையைப் பொய்யென்று கண்டுகழித்து, மா இம் நிலம் உனக்கு அடிமை என்று புகலா நிற்ப வந்து உனை அடைந்தேன் தன்னை - பெரிய இந்நிலவுலகத்தவர் தேவரீருக்குத் திருவாதவூரன் அடிமையென்று தம்முட் பேசாநிற்பத் திருப்பெருந்துறையின்கண் வந்து தேவரீரையே புகலிடமென்று சரணடைந்த தமியேனை, மீள மீனவன் தன்பால் விடுத்தனை - மீளவும் பாண்டியனிடத் தனுப்பி யருளினீர், ஆற்றுநீர் வேலைநீர் உள் ஆனபின் அந் நீர் என ஆவது உண்டோ - அணைகோலித் தடுக்க ஆண்டுத் தடையுண்டு தேங்கி நின்ற ஆற்று நீரானது அவ்வணை முறிந்தவழிச் சமுத்திர நீருட் சென்று கலந் தொன்றுபட்ட பின்னர் அது அச் சமுத்திரநீராவதல்லது ஆற்று நீர் எனப்பட்டு வேறு பிரிந்து மீளுவதுமுண்டோ எ—று.

மீளாதென்பது 'சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ், சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து —சிறைவிட், டலைகடலிற் சென் றடங்குமாறு போன் மீளா, துலைவிலரன் பாதத்தை யுற்று" 'முன்னிறைநீர் சிறைமுறிய முடுகியோடி முந்நீர் சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்" என வருஞ் சுருதிகளானும், அனுபவத்தானுந் துணியப்பட்டமையிற் சரணடைந்தபடியே நிற்கவொட்டாது அரசன்பால் மீளுவித்த தேவரீர் மேலதே அவனால் வருந் துன்பங்களை நீக்கிக் காக்குங் கடமை என்பது கருத்தென்க. உடம்புடைய வாழ்க்கை உடம்பையே முதற்காரணமாகவுடைய வாழ்க்கை. ஊனுடைய வுடம்புவாழ்க்கையென மாற்றிப் பொருள்கோடலுமாம். புகலா நிற்ப அடைந்தேனென முடிக்க. இக்கருத்து "ஏசாநிற்ப ரென்னை யுனக் கடியானென்று பிறரெல்லாம், பேசா நிற்ப ரியான்றானும் பேணா நிற்ப னின தருளே, தேசாநேசர் சூழ்ந்திருக்குந் திருவோலக்கஞ் சேவிக்க, வீசாபொன் னம்பலத்தாடு மெந்தா யினித்தா னிரங்காயே" என்னுந் திருவாக்கி னுள்ளுங் காண்க. புகலாநிற்ப என்புழி ஆநில் நிகழ்கால இடைநிலை. (கருக)



அறத்தனிச் செல்வி பாக வன்பிலே னின்பா லென்று
வெறுத்திடி னடியேற் கிங்கு வேறொரு துணையு மில்லை
செறுத்தவர் புரங்க ளெல்லாஞ் செற்றவ ரடியான் றன்னை
நிறுத்தினர் வெயிலி னென்றா னின்புகழ்க் கேற்ற மாமோ.

இ—ள்: அறத் தனிச் செல்வி பாக - தருமபரிபாலனத்தையே தமக்கோர் செல்வமாகவுடைய பெருங்கருணைப் பிராட்டியாகிய உமையம்மையை வாமபாகமாக வுடையவரே, நின்பால் அன்பு இலேன் என்று வெறுத்திடின்-தேவரீர்மாட்டுத் தமியேன் அவபத்தியுடையேனென்று தேவரீர் அடியேனை வெறுத்தல் செய்தொழியின். அடியேற்கு இங்கு வேறு ஒருதுணையும் இல்லை-தமியேனுக்குத் துணையாவார் வேறொருவரு மிங்கில்லை (அதுவுமன்றி), செறுத்தவர் புரங்கள் எல்லாம் செற்றவர் அடியான் தன்னை வெயிலின் நிறுத்தினர் என்றால் - உலகை யொறுத்த பாசண்ட தருமிகளது முப்புரங்களையுந் திருப்புன்னகை யக்கினியினாலே எளிதி னழித்த முடிவிலாற்றலையுடைய சிவபெருமானுக் கடியானொருவனை அரசன் றமர் வெயிலின்கணிறுத்தினர்களென்று லோகவதந்தி நிகழுமாயின், நின் புகழ்க்கு ஏற்றம் ஆமோ - தேவரீரது பிரபல்லிய மாகீர்த்திக்குப் பெருமையாகுமோ எ—று.

ஓகாரம் எதிர்மறையாகலின், ஆகாதென்க. நிறுத்தல் - நிற்கச் செய்தல், அறம் முப்பத்திருவகைத் தருமம். அவற்றுட் பிறர்துயர்காத்தலுமொன்றாகலின் அவ்வறத்தை யோம்புஞ் சத்தியை யுடைய தேவரீருக் கல்லது அஃதில்லாத பிறர்க்கதின்மையிற் காப்பவ ரொருவருமில்லை என்பார் அறத்தனிச்செல்வி பாக வன்பிலே னின்பாலென்று, வெறுத்திடி னடியேற் கிங்கு வேறொரு துணையுமில்லை யென்றும், சர்வவல்லமையையுடைய தேவரீர் தமரை அரசன்றமர் ஒறுத்தல் அச்சர்வ வல்லமைக் கிழுக்காமென்பார் செறுத்தவர் புரங்களெல்லாஞ் செற்றவ ரடியான்றன்னை நிறுத்தினர் வெயிலி னென்றா னின்புகழ்க் கேற்றமாமோ என்றுங் கூறினர். வதந்தி-பேச்சு. உலோக வதந்தி - உலகப் பேச்சு. (கருஉ)

வானநா டவர்க்கு மேலோய் வந்துனக் கடிமை யிப்போ
தானநா னிடும்பை யுற்றா லாருனக் கடிமை யாவார்
நானென மனத்தார் சொல்லு நல்லுரை யன்றி நின்ற
வீனனு மொருவன் சொல்வ தேறுமோ வுளத்தி லென்றார்.

இ—ள்: வான நாடவர்க்கும் மேலோய் - விண்ணுலகவாசிகளாகிய அரிபிரமேந்திராதி தேவர்கட்கும் மேலானவரே, இப்போது வந்து உனக்கு அடிமை ஆன நான் இடும்பை உற்றால் - இதுபொழுது திருப்பெருந்துறையின்கண் வந்து தேவரீருக்குப் புத்தடிமையாகிய தமியேன் அதுமிகுந்த மித் துன்பத்தை அநுபவித்தால், உனக்கு ஆர் அடிமை ஆவார் - இனித் தேவரீருக் கார்தா மடிமையாவார் ஒருவருமாகார், நான் எனு மனத்தார் சொல்லும் நல் உரை அன்றி - யா னெனதென்னுஞ் செருக்கற்ற சித்தசுத்தியையுடைய மகான்கள் உண்மையுணர்ந்து செய்யு மினிய விண்ணப்பவாசகமல்லது, நின்ற ஈனன் ஆம் ஒருவன் சொல்வது ஊத்தில் ஏறுமோ என்றார் - அவ்விரு செருக்கு மொருங்கு நிகழப்பெற்ற இழிவினனாகிய தமியேன் கூறு மினிமையற்ற விண்ணப்பமுந் தேவரீரது திருவுள்ளத்தில் ஏறுமோவென் றிவ்வாறு திருவாதவூரடிகள் குறையிரந்து பிரார்த்தித்தார் எ—று.

என்னுத என்னும் பெயரெச்சம் எனுவென இடை கடை யிரண்டும் குறைந்து நின்றது. ஏறுதல் பொருட்படுத்தப்பெறுதல். புத்தடிமையைக் காப்பவர் குறிக்கொண்டு பாதுகாப்பரன்றே, தமியே னவ்வாறு காக்கப் படாமையற்றி இனி யொருவருந் தேவரீருக் கடிமையாகாரென்பார் வந் துனக் கடிமை யிப்போதான நா னிடும்பையுற்று லாருனக் கடிமையாவாரென்றும், சித்தசுத்தியை யுடையார் மன வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களு மொன்றுபட்டுக் கூறுதலின், அது இனிது கேட்கப்படுமென்பார் நானெனு மனத்தார் சொல்லு நல்லுரை யன்றி என்றும், தமக்கு அச்சுத்தி யெய்தாமைக்குக் காரணம் அவ்விரு செருக்கு மொருங்குநின்ற இழிவே பிறிதில்லையெனத் தம்மை யுபசாரத்தான் ஈண்டிழித்துக் கூறுவார் நின்ற வீனனு மொருவனென்றும், இவ்வாறாகலின் இது இனிது கேட்கப்படாதுபோலு மென்பார் ஒருவன் சொல்வ தேறுமோ வுளத்தி லென்றுங் கூறினர். திருவாதவூரடிகளுக் கவ்விரு செருக்கு மொழிந்தமை "நான்கெட்டவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" "நாமொழிந்து, சிவமானவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" "என்னுடைய, செயன்மாண்டவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ" என வருந் திருவாக்குக்களா னறிக. (கசுரு)

அவத்தொழில் புரியா மேன்மை யன்பருக் கன்பு செய்து
பவக்கட லிடைவி ழாமற் பரிந்தருட் பார்வை நல்கித்
தவப்பெரு வடிவங் கொண்டு தாளளித் தாளு மையர்
செவிப்புலன் புகுந்த வன்பர் செப்பிய மாற்ற மெல்லாம்.

இ—ள்: அன்பர் செப்பிய மாற்றம் எல்லாம் - மெய்யன்பராகிய திருவாதவூரடிகள் இங்ஙனஞ் செய்த விண்ணப்ப வாசகங்களெல்லாம், அவத் தொழில் புரியா மேன்மை அன்பருக்கு பரிந்து அன்பு செய்து - பூர்வ சன்மங்களிலே தமக்கும் பிறர்க்கும் நன்கு பயன்படாத பாவச்செயல்களிற் பிரவேசியாத மேம்பாட்டையுடைய அத்திருத்தொண்டர்பொருட் டிரங்கி யன்புகூர்ந்து, பவக் கடல் இடை விழாமல் நல்கி தவப்பெரு வடிவம் கொண்டு - அவர் பிறவியாகிய கடலின்கண் வீழ்ந் தழுந்தாவண்ணந் திருவுளத் தடைத்து மிகவு மாட்சிமையை யுடைய ஞானதேசிகமூர்த்தங்கொண் டெழுந்தருளிவந்து, அருள் பார்வை தாள் அளித்து ஆளும் ஐயர் செவிப் புலன் புகுந்த - சாக்ஷதீக்ஷையோடு திருவடிதீக்ஷை செய்தருளிய பரமாசாரியாது திருச்செவியின்கட் புக்கு நுழைந்தன எ—று.

நல்கல் - விரும்பல். மேம்பாடு அறிவொழுக்கங்களானாய மேம்பாடு. ஞானதேசிகமூர்த்தமென்பது விளக்குதற்குத் தவப்பெருவடிவமென விசேடிக்கப்பட்டது. பரமாசாரியர் முன்னைத் தொடர்புபற்றித் திருவாதவூரடிகளது விண்ணப்பங்களை உன்முகமாகத் திருச்செவிசாத்தி யருளினரென்பார் இவ்வாறு பரிந்து, அன்புசெய்து, நல்கி, கொண்டு பார்வையோடு தாளளித்தாளுமையர் என முன்னையருட்செயல்களை யெல்லாம் கிளந்தெடுத் தடையாக்கிக் கூறினர். புலன் ஈண்டுப் பொறி. (கசுச)

காம்படு தோளி பாகன் கண்ணுத லண்ண லென்பார்
தாம்படு துயர மெண்ணி யத்துயர் தணிக்க வேண்டித்
தேம்படு மலங்கன் மார்பிற் றென்னவன் றனக்குத் தெய்வ
வாம்பரி யளித்தல் சொல்வாம் வல்வினைப் பகையை வெல்வாம்.

இ—ள்: காம்பு அடு தோளி பாகன் கண் நுதல் அண்ணல் - பசிய இளைய மூங்கிலையும் வென்ற திருத்தோள்களையுடைய மீனாக்ஷியம்மை பாகரும் நெற்றிக்கண்ணையுடைய எப்பொருட்கு மிறைவருமாகிய சொக்கலிங்க மூர்த்தியானவர், அன்பர் தாம் படு துயரம் எண்ணி அத்துயர் தணிக்க வேண்டி - தம் மெய்யன்பராகிய திருவாதவூரடிகள் படுந் துன்பத்தை யறிந்து அதனை நீக்கியருளத் திருவுளங்கொண்டு, தேம் படு அலங்கல் மார்பில் தென்னவன் தனக்குத் தெய்வ வாம்பரி அளித்தல் சொல்வாம் - தேன் பொருந்திய வேப்ப மாலையை யணிந்த மார்பை யுடைய அரிமர்த்தன பாண்டியனுக்குத் தெய்வத்தன்மை பொருந்திய தாவுகின்ற குதிரைகளைக் கொடுத்தருளிய திருவிளையாடலை யாமினிக் கூறுவாம், வல்வினைப் பகையை வெல்வாம் - அங்ஙனங் கூறுதலாகிய சிவபுண்ணிய வலத்தானே இதுகாறும் வென்று கோடற்கரிய வலிய இருவினையாகிய பகையையும் இனி வெல்வாம் எ—று.

காம்பென வாளா கூறினும் பச்சிளங் காம்பென்ப தேற்புழிக் கோடலாற் பெற்றும்; ஒருசிறி துவமிக்கப்பட் டெதிருன்றற்பால ததுவேயாகலின், சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தாமென்பது கட்டுரைச் சுவைக்கண் வந்தது. எப்பொருட்கு மிறைவராதல் உலகமுடிவின்கண் அகில பிரபஞ்சங்களையுந் தகிக்கவல்ல அக்கினியை அடக்கிய கண்ணுதலால் இனிது விளங்குமென்பார் கண்ணுத லண்ணலென்றும், சிவாஞ்ஞையினு லுருத்திரிந்தமை பற்றி நரிப்பரியைத் தெய்வவாம்பரி என்றுங் கூறினர். கண்ணுதலண்ணலை

உம்மைத் தொகை யென்றலுமாம். வென்றி வாம்பரி என்பது பாடமாயின் வென்றியை இனவடையாகக் கொள்க. நுதலிய பொருளாகிய அடிகளது சரித்திரங் கூறவே, அவரை ஆட்கொண்ட கடவுளது சரித்திரமாகிய வழியும் உடன்கூறப்படுதலின், அவ்விரண்டன் பயனுந் தமக்கொருங்குண்டென்பார் மேல் உற்பவமொழிந்தமை மொழிந்திட லொழிப்பாமென நுதலிய பொருட்குக் கூறினாற்போல ஈண்டுத் தென்னவன் றனக்குத் தெய்வ வாம்பரி யளித்தல் சொல்வாம் வல்வினைப் பகையை வெல்வாமென வழிக்குங் கூறினார். ஈண்டு வழி யென்றது குதிரையிட்ட திருவிளையாடலை.

**பெருந்துறையென்னும் பெயர்க் காரணம்:** தமிழ்நாட் டரசர்களாகிய பாண்டியர்களுக்குட் சுகுணபாண்டியன் காலத்திலே, சிவபுரத்தில் எழுந்தருளியிருக்கும், ஆன்மநாதசுவாமிக்கும் சிவயோகாம்பிகை யம்மைக்கும் நித்தியபூசை முதலியவை செய்யும்பொருட்டு, இறக்க முத்திதருந் தலமாகிய காசியினின்றும் முந்நூறு பிராமணர் அவ்வரசனால் வருவிக்கப்பட்டனர். அவர்கள் வந்து சேர்ந்தவுடன் அரசனும் சிவபுரத்தை யடைந்து அவர்களுக்குச் சன்மானஞ் செய்யக் கருதி, முந்நூறு சுவர்ண தட்டங்களில் முந்நூறு பீதாம்பரம் வைத்து, ஒவ்வொருவர்க் கொவ்வொன்றாகக் கொடுத்துக் கொண்டு வரும்பொழுது ஒரு பீதாம்பரம் ஏற்பவரின்றி விஞ்ச, அரசனும் அந்தணருந் திகைத்துப் பலகாலெண்ணியும் ஒருவர் குறையக் கண்டு மயங்கினார்கள். அப்பொழுது பரமகருணாநிதியாகிய ஆன்மநாத சுவாமி குருந்தமரத்தினின்றும் ஓர் பிராமண வடிவங்கொண்டு தோன்றி அரசனுக்கு முன்வந்து, எம்முடன் முந்நூறென்னுந் தொகை நிரம்பிற்றன்றோவென்று மயக்க நிவிர்த்திசெய்து, எஞ்சிய பீதாம்பரமும் பெற்று, அவரோடு தாமுமொருவராய் வீற்றிருந்து விளங்கினார். அதனால் அவ்வான்மநாதசுவாமிக்கு ''மூவாயிரத் தொருவர்'' என்பது போல, "முந்நூற்றொருவர்" என்னுந் திருநாமமுண்டாயிற்று. அதன்பின் சுகுணபாண்டியன், அம் முந்நூற்றுவர்க்கும் முந்நூறு அக்கிரகாரம் கட்டுவித்துக் கொடுத்து, அச்சிவபுரத்தை அவர்களுக்குச் சர்வமானியமாகப் பத்திரமும் பிறப்பித்துக் கொடுத்துவிட்டு, மதுரையை யடைந்தான். அவ்வருச்சகர்கள் சுவாமி கோயிற்றொண்டுகளையும் அம்மை கோயிற் றொண்டுகளையும் இராப்பக லிடையறாது செய்து கொண்டு வருதலினாலே தம் புத்திரர்களுக்கு வேதாத்தியயனஞ் செய்து வைப்பதற்குச் சமயமின்றித் துயரமுற்றுச் சுவாமியைப் பிரார்த்தித்திருந்தனர். அப்பொழுது தம் மெய்யடியார் வேண்டிய வேண்டியாங் கீயும் பரங்கருணைத் தடங்கடலாகிய ஆன்மநாதசிவம் ஓர் வயோதிகப் பிராமணவடிவங் கொண்டு அவ்வந்தணர்களுக்கு முன் எழுந்தருள, அதுகண்ட அவ்வந்தணர் அவரை எதிர்கொண் டழைத்துக் கொடுவந்திருத்தி உபசரித்து, அவரது வேதாத்தியயன வல்லமையைப் பரீக்ஷித்தறிந்து மகிழ்ந்து தம்புதல்வர்களுக்கு வேதாத்தியயனஞ் செய்துவைக்கும் உபாத்தியாயராக அவரை நியோகித்து, அதற்கு வேதனமாக வீட்டுக்கொவ்வொரு நாண் முறையே



மூந்நூறு வீட்டுக்காரரும் அன்னபானாதிகள் கொடுத்து உபசரித்துவர, உபாத்தியாயர், அப்பார்ப்பனப் பிள்ளைகளுக்கு வேதபாராயணத்தில் வேறொருவரும் நிகரில்லை என்னும்படி வேதமோதிக்கொடுத்துக் கொண்டு வந்தார். அதனால் அவ்வான்மநாத சுவாமிக்குச் சத்தநாத ருபாத்தியாயர் என்னுந் திருநாம முண்டாயிற்று. அப்பால் கௌமாரபாண்டியன் காலத்திலே, இச்சிவபுரத்துக் கயலூரில் வசிப்பவனாகிய லுண்டாக்கனென்னும் குறுநிலமன்ன னொருவன் இளம்பிராயமுடைய நெடுநில வரசனாகிய அக்கௌமாரபாண்டியனது நட்புப்பெற்று, அதனால் வலிமை படைத்து வாழ்பவன் அச்சிவபுரத்தைத் தான் கவர்ந்துகொள்ளும்படி கருதி, அம்முந்நூற்றுவரது சன்மான பத்திரத்தோடும் அச்சிவபுரத்தை மெல்லமெல்லக் கவர்ந்து கொண்டான். அப்பொழுது பிராமணர்கள் வருந்தித் தங்கள் உபாத்தியாயர்களோடும் கௌமார பாண்டியனிடஞ் சென்று முறையீடு செய்ய, அவ்வரசன் பிராமணர்களை நோக்கி அச்சிவபுரம் உம்முடைய தென்பதற்கு ஆட்சி, சாட்சி, சாதனம் என்னுமிம்மூன்றனுள் ஒன்றேனும் இங்கே காட்டித் தாபிக்கக் கடவீர்கள் என்றான். அதற்குப் பிராமணர் ஆட்சி இப்பொழுது இவனதாயிற்று; சாட்சி யுண்டு; ஆயினும் இவன் கொன்றுவிடுவான் என்னும் அச்சத்தினாலே ஒருவரும் சாட்சியம் சொல்லமாட்டார்; சாதனம் முன்னமே இவனால் உபாயமாகக் கவர்ந்து கொள்ளப்பட்டது. இனி நாம் செய்வதென்னை என்றார். அப்பொழுது பாண்டியன், பக்கத்திருந்த லுண்டாக்கனைப் பார்த்து இதற்கு நீ சொல்வது யாது? என்று வினவ, அவன் இவர்கள் சிவபுரம் தம்முடையதென்று சாதிப்பார்களாயின், உலகில் முயலுக்குங் கோடுண்டு போலு மென்றான். அப்படியாயின் அச்சிவபுரம் உன்னுடைய தென்பதற்கு நீ ஆதாரங் காட்டென்று வினவ, அதற்கவன் தொன்று தொட்டுள்ள ஆட்சியே எனக் காதாரமென்று கூறினான். அதற்கு அநுபவம் சொல்லென் றரசன் கேட்க, அவன் இரண்டு பனையளவு ஆழமாக வெட்டினாலும், சிவபுரத்திலே தண்ணீரூறாது; இதுவே என்னநுபவமென்றான். அரசன் பிராமணர்களை நோக்கி இனி நீங்கள் உங்கள் அநுபவத்தைச் சொல்லுங்களென்று வினவ, மற்றை அந்தணர் அதற்கு அநுபவம் சொல்ல முடியாமல் மயங்கும்போது, உபாத்தியாயராகிய கிழப்பிராமணர், அச் சிவபுரநிலத்தில் மண்வெட்டிகொண்டு வெட்டினால் அவ்வெட்டுவாய் தோறும் நீரூறும். இதுவே நான் சொல்லும் அநுபவமென்று கையுயர்த்திக் கூறினார். கூறவே, தன்னெண்ணம் முழுதும் நிறைவேறிற்றென்று லுண்டாக்கன் சிரித்தான். பிராமணர்களெல்லாம் நெடுநாளாக நமது வீடுகடோறும் விலாப்புடைக்க உண்டு திரிந்த இந்தத் தடுமாறு கிழவன் யாது சொன்னான். வெட்டுவாய் தோறும் நீர்காட்ட வல்லனோவென்று பதைபதைத்தார்கள். அப்பொழுது கௌமார பாண்டியன் ஐயரே நீர் சொன்னது உண்மையா என்று மீளவும் கேட்க, அவ்வையர் இது சத்தியம்! சத்தியம்!! முக்காலும் சத்தியம்!!! என்றனர். அது கேட்ட பாண்டியன் லுண்டாக்கனைப் பார்த்து இவர் சொல்வது உண்மையேயானால் அப்பாற் சிவபுரம் ஆருக்குரியதென்று வினவ, இவ்வந்தணர்களுக்கே உரியது என்

ரூன். பின்பு பாண்டியன் பிராமணர்களை முன்னே அனுப்பிவிட்டுத் தானும் னுண்டாக்கன் பின்னே வரச் சென்று சிவபுரத்தை யடைந்து, னுண்டாக்கனை மண்டொடுகருவியினுல் வெட்டும்படி பணிக்க, அவன் மேட்டு நிலத்தைச் சார்ந்து வெட்டும்போது உபாத்தியாயராகிய சிவப் பிராமணர் அறுபத்தாறு கோடி தீர்த்தங்களையும் அங்கே வரும்படி நினைத்தருளினுர். அங்ஙனமே தீர்த்தங்கள் வந்தமையினுல், அவ்வெட்டு வாயிலே நீர் தோன்றி அவன் முகங் கலங்கும்படி மோதிற்று. னுண்டாக்கன் மீளவும் வேருேரிடத்து வெட்டுதலும் முன்னையினும் மிக நீரூறிக் குதி கொண்டது. இப்படி அவன் வெட்டும் பொழுதெல்லாம் ஒருகாலைக்கொரு கால் நீர் மிக்குப் பெருகுதலும், அவன் ஓய்வின்றி மேலும் மேலும் அச்சிவ புரமெங்கும் ஓடி ஓடி வெட்டினுன். அவ்வெட்டுவாய்கடோறும் ஊறிய நீர் பெருகி ஒன்றுபட்டு எங்கும் பரந்து ஓர் பெருந்துறையாய் நின்ற காரணத் தினுலே அச்சிவபுரத்தக்குப் பெருந்துறை யென்னுங் காரணப்பெயர் உள தாயிற்றெனவறிக. இப்படி விப்பிரர்கள் பொருட்டு வழக்காடி வென்று நாயகத்தன்மை யடைந்ததனுல் ஆன்மநாத சுவாமிக்கு விப்பிரநாதர் என் னுந் திருநாமமுண்டாயிற்று. மேல் வெம்பிறவி வேலைதனில் என்னுஞ் செய்யுளிற் கூறிய பெயர் ஞானுர்த்தம்பற்றிப் புனைந்துரை வகையான் வந்த பெயரென வறிக. அது "பூவெணுதெதொ ரன்புபூண்டு பொருந்தி நாடொ றும் போற்றவும், நாவெணுதெதொர் நாணமெய்தி நடுக்கடலு ளழுந்திநான், பேவெணுத பெருந்துறைப் பெருந் தோணிபற்றி யுகைத்தலுங், காவெ ணுத் திருக்கோல நீவந்து காட்டினுய் கழுக்குன்றிலே" என்னுந் திருவாக் கினுட் குறிப்பித்த வாற்ருனு மறிக. இன்னும், இத்திருப்பெருந்துறைக்கு அநாதிமூர்த்தஸ்தலம், சிவபுரம், ஞானகேத்திரம், குருந்தவனம், யோக வனம், தென்கைலாயம், வேதபுரம், பவித்திரமாணிக்கபுரம், யோகபீட புரம், பராசத்திபுரம், தேசுவனம், ஆதிகைலை, திரிமூர்த்திபுரம், உபதேசபுரம், சோடசாந்தஸ்தலம் என்றற்றொடக்கத்துப் பல திருநாமங்களுள. இவற்றின் காரணங்களை ஈண்டு விரிப்பின் மிகவும் பெருகுமாதலின் அமைக. இனி இங்கே வீற்றிருக்கும் ஆன்மநாதசுவாமிக்கும் அநாதிமூர்த்ததலேசர், பெருந் துறையீசர், சிவபுரேசர், ஞானகேத்திரேசர், குருந்தவனேசர், யோகவனே சர், தென்கயிலாயநாதர், வேதபுரேசர், பவித்திரமாணிக்கபுரவாசர், யோக பீடபுரவாசர், பராசத்திபுரவாசர், தேசுவனேசர், ஆதிகைலாசநாதர், மும் மூர்த்திபுரவாசர், உபதேசபுரநாதர், முன்னூற்றொருவர், பரமசுவாமி, சக குரு, விப்பிரநாதர், சத்தநாதருபாத்தியாயர், அச்சுவநாதர், மும்மூர்த்தி தேசிகர் என்றற் றொடக்கத்துப் பலதிருநாமங்களுள. இவற்றின் காரணங் களையும் ஈண்டு விரிக்கின் மிகவும் பெருகுமாதலின், அமைக. (கரு௯)

திருப்பெருந்துறைச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஅரு,

திருச்சிற்றம்பலம்.

உ

# குதிரையிட்ட சருக்கம்.

தந்தை யென்பவர் மைந்தர் வாதை தவிர்ப்ப தேகட னுதலா
லந்த மின்றிய காத லன்ப ரழுங்கல் கண்டபி னரியெலாம்
வந்து வெம்பரி யாக வும்பரி வீரர் வானவ ராகவுஞ்
சிந்தை கொண்டன ரந்த மால்விதி தேடு வார்மதி சூடுவார்.

இ—ள்: தந்தை என்பவர் மைந்தர் வாதை தவிர்ப்பது கடனே ஆத லால் - பிதாவென்பவர்க்குத் தம் புதல்வரது துன்பத்தை நீக்கிக் காப்பது முக்கிய கடமையே யாகலான், அந்த மால் விதி தேடுவார் மதி சூடுவார்- அவ்விஷ்ணு பிரமாக்களான் முறையே அடிமுடி தேடி அறியப்படாதவரும் தக்கனு விடருற்று வந்த சந்திரனை அவ்விடர் நீக்கிச் சூடினவருமாகிய சிவ பெருமான், அந்தம் இன்றிய அன்பர் காதல் அழுங்கல் கண்டபின் - முடி வற்ற சிரத்தை யன்புடைய திருவாதவூரடிகளாகிய தம்புதல்வர் அரசனுல் வருந்துதலைக் கண்டருளிய பின்னர், நரி எலாம் வந்து வெம்பரி ஆகவும் வானவர் (எலாம் வந்து) பரிவீரர் ஆகவும் சிந்தை கொண்டனர்-வனத்தின்க ணுள்ள குறுநரிகளெல்லாம் வந்து வெவ்விய குதிரைகளாகவும் தேவர்களெல் லாம் வந்து குதிரைவீரர்களாகவுந் திருவுளங்கொண்டருளினுர் எ—று.

தந்தை யென்பவர் மைந்தர் வாதை தவிர்ப்பதே கடனுதலால் என்றது எது. தேற்றவேகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. காதல் - மகன். வந்து என்பதனுல் வனத்தின்கணுள்ள என்பதும், வெம்பரி என விசேடித்ததனுல் குறுநரி என்பதும் பெறப்பட்டன. அ என்னும் பண்டறிசுட்டு அந்த என மரீஇயிற்று. அத்துவ சுத்தியாகிய நிருவாண தீக்ஷை செயப்பெற்ற சிவபத்தர் சிவகுமாரரென்ப தாகமநூற் றுணிபாகலின், அவ்வியல்புடைய அடிகளைக் காதல் என்றும், யானெனதென்னுஞ் செருக்குற்று, அக்கினிப் பிழம்பாகிய சிவபெருமானது அடி முடிகளைத் தேடி யறியாது தண்டிக்கப்பட்டவ ரெனப் பண்டு எல்லாரானு மறியப்பட்ட விஷ்ணு பிரமாக்க ளென்பார் அந்த மால் விதி என்றும், அன்பரல்லார்க்குத் தூரிய ரென்பார் தேடுவா ரென்றும், சரணடைந்தாரைத் தப்பாது காக்கும் பரமதயாளு வென்பார் மதிசூடுவாரென்றுங் கூறினுர். தேடுவார் மதிசூடுவாரென்னுங் கோபப் பிர சாதத்துள் மதிசூடுவாரென்றதும் அன்பரென்றொழியாது காதல் என்றதும் எதுவை வலியுறுத்தி நிற்றலின், அவையிரண்டும் உதாரணமென்க. வெம் பரியாகவுமென்பது அவ்வேதுவான் வந்த காரியமாகலின், அதுபயனென்க. கோபப் பிரசாதம் துட்ட நிக்கிர சிட்டபரிபாலனம். நிக்கிரகாநுக்கிரகம், சிக்ஷை ரக்ஷை என்பன ஒருபொருட் டொடர்மொழிகள். இது எழுசீரடி யாசிரிய விருத்தம். (க)

தேசி லாநரி வந்து வந்து திரண்டு வெம்பரி யானபின்
னாசி லாவிமை யோர்க டாமு மமைந்த சேவக ராயினர்
மாசி லாமணி மன்ற ராரிய வாசி வாணிகர் போலவே
யேசி லாவுரு மாறினர் மறை யிவுளி யின்புற மேறினர்.

இ—ள்: தேசு இலா நரி வந்து வந்து திரண்டு வெம்பரி ஆனபின் - அழகற்ற குறுநரிகளெல்லாஞ் சிவசங்கற்பத்தான் மேன் மேல் வந்தொருங்கு திரண்டு வேகத்தை யுடைய குதிரைகளாக உருத்திரிந்த பின்னர், ஆசு இலா இமையோர்கள் தாமும் அமைந்த சேவகர் ஆயினர் - குற்றமற்ற தேவர்களும் அழகமைந்த குதிரைவீராராயினர், பின் மாசு இலா மணி மன்றர் ஆரிய வாசி வாணிகர் போல ஏசு இலா உரு மாறினர் - அதன்பின்பு களங்கமற்ற அழகையுடைய வெள்ளியம்பலத் திருக்கூத்தராகிய சோமசுந்தரக் கடவுளானவர் ஆரிய தேசத்துக் குதிரை வர்த்தகரைப் போலப் புகழப் படுந் தந்திருமேனி பிறிதுபட்டவராகி, மறை இவுளியின் புறம் ஏறினர் - வேதமாகிய குதிரையின்மீ திவர்ந்தருளினர் எ—று.

அடுக்குப் பன்மைபற்றி வந்தது. ஏசு முதனிலைத் தொழிற்பெயர். மணிமன்று திருக்குற்றாலத் திரத்தினசபை யெனினு மமையும்; அதுவும் பாண்டிநாட்டின் கண்ணதாகலினென்க; கனகசபையுமாம். மாறி என்னும் வினையெச்சம் மாறினரென முற்றாய்த் திரிந்தது. சேவகர்க்கழகு தம்மதிபதியின்கீழமையும் குணவழகும் குதிரைவீராகும் வடிவழகுமாம். சிவபெருமான் குதிரைவீரர்க் கதிபராகத் தாம் குதிரைவீராய் அவரை நேரே சேவித்துடன் செல்லும் பெரும்பேறுடையவர் என்பார் ஆசிலா விமையோர்களென்றும், அருட்டிருமேனியென்பார் ஏசிலாவுருவென்றுங் கூறினர். (உ)

சேடு கொண்டு திரண்டு வீர ரிரண்டு ஞாங்கர் சிறக்கவே
யூடெ ழுந்துக ளிம்ப ரெங்கணு மும்ப ருங்கிளர் வெய்தவே
கோடு டன்றுடி விம்ம நீடிய கூடல் சூழ்மதில் வாயில்வா
யாடல் வெம்பரி கொண்டு சென்றன ராதியா ருமை பாதியார்.

இ—ள்: ஆதியார் உமை பாதியார் - முதல்வரும் அர்த்தநாரீசுவராமாகிய சிவபெருமானவர், வீரர் சேடு கொண்டு திரண்டு இரண்டு ஞாங்கர் சிறக்க - குதிரைவீரர்கள் கையிற் சவுக்கைக்கொண்டு கூடி இருமருங்கிலும் வரிசையாகச் செல்லவும், ஊடு எழும் துகள் இம்பர் எங்கணும் உம்பரும் கிளர்வு எய்த - குதிரைக் குளம்புகளினிடையே யெழும் பூதுளிகள் இவ்வுலகெங்கும் மேலுலகெங்குங் கிளராநிற்பவும், கோடு உடன் துடி விம்ம - கொம்புகளோடு உடுக்குக ளொலிப்பவும், நீடிய கூடல் சூழ் மதில் வாயில் வாய் ஆடல் வெம் பரி கொண்டு சென்றனர் - நெடிய



மதுரையைச் சூழ்ந்த மதிலின்கணுள்ள கோபுர வாய்தலிலே வெற்றியை யுடைய வெவ்விய குதிரைகளைக் கொடுசென்றருளினர் எ—று.

சேடு - திரட்சி. அஃதாகுபெயராய்ச் சவுக்கை யுணர்த்திற்று. சேடு சவுக்குக் கியற்பெயரெனப் பிரமாணமின்றிச் சாதிப்பாருமுளர். சிறக்கச் சேறலைச் சிறக்கவென்ற துபசாரம். மதிலாலவாய் எனவும் பாடம். கிளர்வு ஈண்டுப் பெருக்கம். பாதியார் ஆதியாரென்பது இணையியைபுத்தொடை.

அங்கு நின்றவர் சென்று நிம்ப வலங்க லானை வணங்கியே
யெங்க ணுந்துகள் பொங்கி விம்ம வெழுந்து காகள மார்ப்பவே
திங்கள் வெண்குடை மன்ன வாரிய தேச வெம்பரி யின்றுநந்
துங்க வன்மதி லின்பு றத்த துவன்றி வந்த வெனச்சொனார்.

இ—ள்: அங்கு நின்றவர் சென்று நிம்ப அலங்கலானை வணங்கி - அங்கே நின்றவர்கள் சென்று செம்பொற் கோயின் முகப்பினில் வீற்றிருக்கும் வேப்பமாலையை யணிந்த பாண்டியனைக் கண்டு வணங்கி, திங்கள் வெண்குடை மன்ன - பூரணசந்திரன்போலும் வெண்கொற்றக் குடையை யுடைய அரசனே, எங்கணும் துகள் பொங்கி விம்ம காகளம் எழுந்து ஆர்ப்ப - எவ்விடங்களினும் பூதுளிகளெழுந்து நெருங்கவும் எக்காளங் கண் மிக்கொலிப்பவும், ஆரிய தேச வெம் பரி இன்று நம் துங்க வல் மதிலின் புறத்த துவன்றி வந்த எனச் சொனார் - ஆரிய தேசத்து வெவ்விய குதிரைகள் இத்தினத்து நமதுயர்ச்சி பொருந்திய வலிய மதிலின் புறத்தனவாய் நெருங்கி வந்தனவென்று விண்ணப்பஞ் செய்தார் எ—று.

புறத்த என்னும் அன்பெறு அகரவீற்று வினைக்குறிப்புமுற்று ஈண்டெச்சப் பொருடந்து நின்றது. காகளம் ஓர்வித ஊதுகுழல். (௪)

வாசி யின்றிரள் வந்த வென்றலும் வாதவூ ருறை யையர்மே
னேசம் வைத்தவர் தம்மை முன்ன ரழைத்து நீள்கலை யாதிதந்
தாசில் வெம்பரி காண வம்மினெ னவெழுந் தெதி ரடையலார்
கூசு தன்படை சூழ வேயிறை கோயி லின்புற மெய்தினன்.

இ—ள்: வாசியின் திரள் வந்த என்றலும் - குதிரைக் கூட்டங்கள் வந்தனவென்று கண்டோர் கூறுதலும், இறை வாதவூர் உறை ஐயர் மேல் நேசம் வைத்து - அதுகேட்ட பாண்டிய ராசன் திருவாதவூரடிகள் மீது பழைய அன்புரிமைகொண்டு, அவர் தம்மை முன்னர் அழைத்து நீள் கலை ஆதி தந்து - அவ்வடிகளைத் தனக்கு முன் வருவித்து உயர்வாகிய வஸ்திர முதலியவைகளைக் கொடுத் துபசரித்து, ஆசு இல் வெம் பரி காண வம்மின் என எழுந்து - குற்றமற்ற வெவ்விய குதிரைகளைக் காணும் பொருட்டு நீர் வருகவென்று கூறிக்கொண் டெழுந்து, எதிர் அடையலார்

கூசு தன் படைசூழ கோயிலின் புறம் எய்தினான் - மேலெதிரும் பகைவர்களும் முன்னெதிர்த்தார் வாய்க் கேட்டஞ்சுதற்குக் காரணமாகிய தன் சேனைகள் சூழ அவ்வரசன் கோயிலின் புறத்தே சென்றான் எ—று.

என்றலு மென்ப தும்மீற்று வினையெச்சம். அது வைத்தென்னும் பிறவினைகொண்டது. உபசரித் தென்பது சொல்லெச்சம். வாதவூருறையையர் முன் வாதவூரிலே யுறைந்தவையர். கூறிக்கொண்டு விரைந்தெழுந் தென்பார் வம்மினென வெழுந்தென்றார். (ரு)

வேறு.

வண்டுபடி யலங்கனெடுந் தடந்தோள் மாறன்
மணிச்சிவிகை மீதேறி மதுரை மூதூர்
கண்டிருகண் களிக்கும்வகை யால வாயிற்
கடவுளிடும் பரிவரவு காண்பா னெண்ணிச்
செண்டுவெளி தனிற்போந்து பனிநீர் தோய்ந்த
செங்கழுநீர் மதுமாலை சிறந்து தூங்குந்
தண்டரள மணிப்பந்தர் நிழற்கீ ழம்பொற்
றவிசின்மிசை யினிதிருந்தான் றானை சூழ.

இ—ள்: வண்டு படி அலங்கல் நெடும் தடந் தோள் மாறன் - வண்டுகள் மொய்க்கின்ற வேப்ப மாலையை யணிந்த நெடிய அகன்ற புயங்களையுடைய பாண்டியராசன், ஆலவாயில் கடவுள் இடும் பரி வரவு காண்பான் எண்ணி - துவாதசாந்த புரமாகிய திருவாலவாயில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரக்கடவுள் கொடுவரும் குதிரைகளின் வரவைக் காணும்படி கருதி, மதுரை மூது ஊர் கண்டு இரு கண் களிக்கும் வகை மணிச் சிவிகை மீது ஏறிச் செண்டு வெளி தனில் போந்து - மதுரையாகிய பழைய நகரவாசிகளெல்லாங் கண்டு தத்தம் இரு கண்களும் களிகூரும் வண்ணம் முத்துச் சிவிகையின்மீதேறி வையாளி வீதியின்கட் சென்று, பனிநீர் தோய்ந்த மது செங்கழுநீர் மாலை சிறந்து தூங்கும் தண் தரள மணிப் பந்தர் நிழல் கீழ் - பனிநீரிலே தோயப்பெற்ற தேனையுடைய செங்கழுநீர் மாலை வரிசையாகத் தூங்குந் தண்ணிய முத்துப் பந்தரின் கீழே, அம் பொன் தவிசின் மிசை தானை சூழ இனிது இருந்தான் - அழகிய சுவர்ணாசனத்தின் மீது சேனைகள் சூழ இனிதாகவிருந்தான் எ—று.

களிக்கும்வகை போந்திருந்தான் என முடிக்க. களிக்கும்வகை இடுமென முடிப்பாருமுளர். ஈண்டுப் புகழ் பொருள் பாண்டியனாகலானும், குதிரையிடுமாறு மன்னரவபந்தமுடனென்னுந் திருவிருத்தத்தால் முன்னர் விசேடிக்கப்படுதலானும் அது முடிபன்றென்க. வையாளிவீதி குதிரை நடத்தும் வீதி. திருவாதவூரடிகள் குதிரைகொள்ளாது தன்றிரவியத்தைக் கொன்



னே கொடுத்தொழித்தாரென் றுட்கொண்டு கோயின் முகத்துக் கோபவீறுடன் முன்னிருந்த வரசன் இதுபொழுது மனமகிழ்ச்சியோ டிருந்தானென்பார் இனிதிருந்தா னென்றார். இது எண்சீரடியாசிரியவிருத்தம்.

முத்தமிழின் றிறநவிலும் புலவர் சூழ
முதுமறையோர் மங்கலச்சொன் முறையிற் கூறக்
கைத்திகழும் வளைபுலம்பக் கலன்கண் மின்னக்
கன்னியர்க ளிருமருங்குங் கவரி வீசக்
கொத்துலவும் பலமலரின் வாசந் தோய்ந்து
குலவுமிளந் தென்றல்வர மாதர் பாட
மெத்துமணி முத்தமெனும் பணிகள் பூண்டு
வெண்மதியின் றோற்றம்போல் வீற்றிருந்தான்.

இ—ள்: முத்தமிழின் திறம் நவிலும் புலவர் சூழ - இயலிசை நாடகமென்னு முத்தமிழின் றிறத்தைக் கூறும் புலவர்கள் தற்சூழவும், முதுமறையோர் மங்கலச் சொல் முறையின் கூற - பழைய வேதபாரகர்களாகிய பிராமணர்கள் மங்கல வாழ்த்துக்களை முறையானே கூறவும், கன்னியர்கள் கைத் திகழும் வளை புலம்பக் கலன்கள் மின்ன இருமருங்கும் கவரி வீச - நடனஸ்திரீகள் கையின்கண் விளங்கும் வளையல்கள் ஒன்றோடொன் றுராய்ந் தொலியாநிற்ப ஒழிந்த ஆபரணங்கள் பிரகாசியாநிற்ப இருமருங்கினும் வரிசையாக நின்று சாமரங்களை இரட்டவும், கொத்து உலவும் பல மலரின் வாசம் தோய்ந்து குலவும் இளந்தென்றல் வர - கொத்தின்கண் மலர்ந்த பலவகைப் புஷ்பங்களின் வாசனையோ டளாவித் தவழும் மந்தமாருதம் வீசவும், மாதர் பாட - மதங்கியர் பாடவும், மெத்து முத்தம் எனும் மணிப் பணிகள் பூண்டு வெண் மதியின் தோற்றம் போல் வீற்றிருந்தான் - அந்நாட்டின்கண் மிக்க முத்தென்னு மிரத்தினாபரணங்களைத் தரித்துத் தன்குல முதல்வனாகிய வெள்ளிய பூரணசந்திரனது தோற்றத்தைப்போலப் பாண்டியராசன் வீற்றிருந்தான் எ—று. திறம் இலக்கணம், பாகுபாடு. (எ)

மங்குல்படி தடம்புரிசை வாத வூரர்
மனங்களிப்ப விழிகளிப்ப மறுவி லாத
திங்களெனுந் தன்மரபு விளங்க வென்றுந்
திருநீறு மஞ்செழுத்துஞ் சிறந்து மல்கச்
சங்கினுடன் காகளங்கண் முழவ மார்ப்பத்
தயங்கியெழுந் துகளுயர்வான் றன்மேற் செல்லத்
துங்கநெடுங் கடல்பரந்து வருதல் போலத்
துவன்றிவரு பரித்திரளின் றோற்றங் கண்டான்.

இ—ள்: மங்குல் படி தடம் புரிசை வாதவூரர் மனம் களிப்ப விழி களிப்ப - முகில்கள் படிகின்ற விசாலமாகிய மதில் சூழ்ந்த திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசக சுவாமிகளது மனமுங் கண்ணுங் களிகூரவும், மறு இலாத தன் திங்கள் எனும் மரபு விளங்க - மறுவற்ற தனது சந்திர வம்மிசம் ஏனையிருவம்மிசங்களினும் பிரகாசிக்கவும், என்றும் திருநீறும் அஞ்செழுத்தும் சிறந்து மல்க - எஞ்ஞான்றும் சிவசின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களும் சிவமூலமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரமும் ஏனைச் சமய சின்னங்களினும் கடவுளர் நாமங்களினும் சிறந் தபிவிருத்தி யடையவும், வெண் சங்கின் உடன் காகளங்கள் முழவம் ஆர்ப்ப - வெண்மையாகிய சங்கு களும் எக்காளங்களும் மிருதங்கங்களு மொலிப்பவும், தயங்கி எழும் தூகள் உயர் வான் மேல் செல்ல - பிரகாசித்தெழும் பூதூளிகள் உயர்ந்த ஆகாயத்தின் மீது செல்லவும், துங்க நெடுங் கடல் பரந்து வருதல் போலத் துவன்றி வரு பரித் திரளின் தோற்றம் கண்டான் - முன்வந்த உயர்ச்சி பொருந்திய நெடிய கடற்றிரை ஈண்டுப் பரந்து வருகின்றமை போல ஒன்றோடொன் றிடையீடின்றி நெருங்கி வருகின்ற குதிரைக் கூட்டங் களின் றோற்றத்தை அரசன் கண்டான் எ—று.

இல்லாதவென்னும் பெயரெச்சம் மரபென்னும் பெயர் கொண்டது. மறுவுடைய குலமுதல்வனுகிய சந்திரன்போலன்றி மறுவின்றி மேம்பட்ட குலமென்பது கருத்து. தன்னென்றது பாண்டியனை. கடல் முன் மதுரை மேல் வருணன் விட்ட கடல். அஃது விடாத வாகுபெயராய்த் திரையை யுணர்த்திற்று. ஏனை வம்மிசம் சூரியாக்கினிகள் வம்மிசம். (அ)

வேறு.

அங்கிளர் மதுரையம் பதியி லாவணித்
திங்களின் மூலநாள் செறிதி னத்தினி
லெங்கணு நீறுமஞ் செழுத்து மோங்கிடச்
சங்கர னிடும்பரிச் சமூகம் வந்தவால்.

இ—ள்: அம் கிளர் மதுரைப் பதியில் ஆவணித் திங்களில் மூல நாள் செறி தினத்தினில் - அழகு விளங்காநின்ற மதுரையாகிய இராசதானி யிலே ஆவணி மாசத்து மூல நக்ஷத்திர தினத்திலே, எங்கணும் நீறும் அஞ்செழுத்தும் ஓங்கிட - எவ்விடங்களினும் விபூதி பஞ்சாக்ஷரங்களிரண் டும் தழைத்தோங்கும்படி, சங்கரன் இடும் பரிச் சமூகம் வந்த - சுகஞ் செய்பவராகிய சோமசுந்தரக் கடவுள் கொடுவரும் குதிரைக் கூட்டங்கள் வந்தன எ—று.

அம் சாரியை. ஆல் அசை. தம் மெய்யன்பராகிய திருவாதவூரடிக ளுக்கு வாக்குத் தத்தஞ்செய்தருளிய பிரகாரமே மதுரைச் சோமசுந்தரக்கட



வுள் குதிரை செலுத்திக் கொடுவந்தமையின், அவரே அடியவர்க் கெளிய மெய்க்கடவு ளென்பதும் அவரை வழிபடுஞ் சைவசமயமே சற்சமயமென்ப தும் உலகிற் கெளிதில் விளங்குதற்கும், விளங்கியவழி யல்லது அச்சமய சாதனங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களும் அவரது திருநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமும் எங்கும் பரவாமையின் அவை பரவுதற்கும், அவ்வரவே காரணமென்பார் எங்கணு நீறுமஞ் செழுத்து மோங்கிடச் சங்கரனிடும் பரிச் சமூகம் வந்த என்றார். இடுதல் - கொடுத்தல். அது "இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்" என்பதனானு மறிக. இது கலிவிருத்தம். (௯)

தூத்திரள் மணிகெழு சோதி மாமுடிப்
பார்த்திபன் விழிநலம் பருக வீதியிற்
கூத்தினர் செயலெனக் குலாவு வாம்பரிச்
சாத்தினர் வரும்பெருந் தன்மை கூறுவாம்.

இ—ள்: தூத்திரள் மணிகெழு சோதி மா முடிப் பார்த்திபன் விழி நலம் பருக - சுத்தமாகிய திரண்ட ரத்தினங் குயிற்றிய பிரபையை வீசும் பெரிய மகுடத்தை யுடைய பாண்டியராசனது கண்கள் நன்கு விருந் தயர, வீதியில் கூத்தினர் செயல் எனக் குலாவு வாம் பரிச் சாத்தினர் வரும் பெரும் தன்மை கூறுவாம் - வையாளி வீதியிலே நாடகாது நடனத் தைப் போலத் தாளகதிக் கேற்ப விநோத நடைநடக்குந் தாவுகின்ற குதிரை ராவுத்தர்கள் வரும் பெருந் தகைமையைச் சிறிது கூறுவாம் எ—று.

யாமென்னு மெழுவாய் வருவித்துரைக்க. வாயின் றொழிலைக் கண் ணிற் கேற்றிப் பருகவென்றார்; "கட்கோ ராரமுதெய்திற் றென்ன வன்னது கண்டே யார்த்தார்" என்றார் பிறரும். மணிக்குச் சுத்தம் ஐவகைக் குற்றங்க ளின்மை. அவைகளை "பிறகிறச்சார்பு புள்ளி புள்ளடி பிறங்கு கீற்று, மறு வறு தராசமென்ன வகுத்த வைங்குற்றம்" என்பதனானுமறிக. பருகுதலா கிய வாயின் றொழிலை விழிக்காரோபித்தலின், இது சமாதியென்னும் குண வலங்காரமென்க. என்னை? "உரிய பொருளன்றி யொப்புடைப் பொருண் மேற், றரும்வினை புணர்ப்பது சமாதியாகும்" என்ப வாகலின். (௧௦)

வேறு.

கட்டிய சுரிகையர் கவின்கொள் வாளினர்
பொட்டணி நுதலினர் பொலன்செய் மேனியர்
பட்டுடை மருங்கினர் பவள நீள்வளம்
விட்டொளி விளங்கிய வியன்கொள் மார்பினர்.

இ—ள்: கட்டிய சுரிகையர் - அரையிலே தொங்கக் கட்டப்பட்ட உடைவாளையுடையவர், கவின் கொள் வாளினர் - கையிலே அழகிய

வாட்படையையுடையவர், பொட்டு அணி நுதலினர் - சிறு பொட்டணிந்த நெற்றியையுடையவர், பொலன்செய் மேனியர் - பொன்மயமாகிய சரீரத்தை யுடையவர், பட்டு உடை மருங்கினர் - பட்டு வஸ்திர முடுத்த அரையை யுடையவர், நீள் பவள வடம் விட்டு ஒளி விளங்கிய வியன் கொள் மார்பினர் - நெடிய பவள மாலைகள் விட்டுவிட் டொளி விளங்குகின்ற பரந்த மார்பை யுடையவர் எ—று.

பொன் னென்னும் சொற் பொலமென்றாய், அது பின்னர்ப் பொலனெனப் போலியாயிற்று. அது "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ் செய்யுண் மருங்கிற் றொடரிய லான" "மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த, னகரத் தொடர் மொழி யொன்பஃ தென்ப, புகரறக் கிளந்த வஃறிணை மேன" என்பனவற்றானறிக. கட்டிய சுரிகையர் என்பதை உறங்கிவாய் பிளந்தானென்பது போலச் சுரிகை கட்டியவர் என விகுதி பிரித்துக் கூட்டிப் பொருளுரைத்தலு மொன்று. இதுவும் கலிவிருத்தம். (கக)

புன்மயிற் பீலியர் புலியின் றோலினர்
பின்மலர்ப் பாசிலை பிணைத்த குஞ்சியர்
வன்மொழிக் குரலினர் வயங்கு தூணியர்
வின்மலி கரத்தினர் வெறித்த பார்வையர்.

இ—ள்: மயிற் புன் பீலியர் - மயிலினது நொய்தாகிய பீலிக்குடையை யுடையவர், புலியின் தோலினர் - புலித்தோற் சட்டையை யுடையவர், மலர்ப் பாசு இலை பிணைத்த பின் குஞ்சியர் - பூக்களோடு பச்சிலைகளை வைத்துப் பின்னிய பின்றூங்குங் குடுமியை யுடையவர், வன்மொழிக் குரலினர் - அதிரப் பேசும் உரத்த குரலையுடையவர், வயங்கு தூணியர் - முதுகில் விளங்கும் அம்புக்கூட்டை யுடையவர், வில் மலி கரத்தினர் - விற்பொருந்திய கைகளை யுடையவர், வெறித்த பார்வையர் - கண்டோரை அச்சுறுத்தும் கூர்த்த நோக்கையுடையவர் எ—று.

பீலியுந் தோலு மாகுபெயர். மயிர்ப்பீலியர் எனவும் பாடம்; "வான் மயிர்ச்செய் கேடகம்" என்றார் பிறரும். (கஉ)

பொன்னியல் குழையினர் பொலன்கொள் மாலையர்
பன்னிறச் சாத்தினர் பணைத்த தோளினர்
சென்னியிற் கதிர்மணி யிலங்கு சேடனைப்
பின்னிவிட் டுளதெனப் பிணைத்த குஞ்சியர்.

இ—ள்: பொன் இயல் குழையினர் - பொற்குண்டலங்களை யுடையவர், பொலன் கொள் மாலையர் - பொன்னரிய மாலைகளை யுடையவர், பல் நிறச் சாத்தினர் - பலநிறம் பொருந்திய தலைச்சாத்துக்களை யுடையவர், பணைத்த தோளினர் - பருத்த புயங்களையுடையவர், கதிர் சென்னியில் மணி இலங்கு சேடனைப் பின்னி விட்டுளது என - ஒளியை யுடைய சிரோரத்தினம் விளங்குகின்ற சேஷனைப் பின்னித் தூங்கவிட்டது போல, பிணைத்த குஞ்சியர் - தூங்கும்படி விட்ட பின்னிய மயிர்க்கயிற்றையுடையவர் எ—று.



தலைச் சாத்தைச் சாத்தென்றது முதற்குறை. தலைச்சாத்து, தலைச்சீரா, தலைப்பாகை என்பன ஒருபொருட் சொற்கள். குஞ்சி - மயிர்; கயிற்றுக் காகுபெயர். இயலல் - செய்தல். (கங)

தூங்கிய சுரிகையுந் துயங்கு வேல்களும்
வாங்கிய சிலைகளுங் கணையும் வாளுமாய்
ஞாங்கரி லிவர்வர நாப்பட் டோன்றினார்
தேங்கிய நதிமதிச் சென்னி யண்ணலார்.

இ—ள்: தூங்கிய சுரிகையும் - அரையிலே தூங்குகின்ற உடைவாள்களும், சுடர் செய் வேல்களும் - ஒளிசெய்கின்ற வேற்படைகளும், வாங்கிய சிலைகளும் - வளைக்கப்பட்ட விற்களும், கணையும் - அவ் விற்களிலே அநுசந்திக்கப்பட்ட அம்புகளும், வாளும் ஆய் - கைகளிலே தாங்கிய வாட்படைகளுமாகி, ஞாங்கரில் இவர் வர - பக்கங்களிலே இக் குதிரை வீரர்கள் வர, தேங்கிய நதி மதிச் சென்னி அண்ணலார் நாப்பண் தோன்றினார் - ததும்புகின்ற கங்காநதியையும் பாலசந்திரனையும் அணிந்த திருமுடியை யுடைய சிவபெருமானனவர் இவர்கட்கு மத்தியிலே தோன்றியருளினார் எ—று. (கச)

வேறு.

நச்சுரக வுச்சிமணி நண்ணுமொரு வண்ணக்
கச்சிடை விசித்துள கவின்கொளுடை வாளும்
பச்சைமுழு நீலமொடு பன்னிற வடஞ்சேர்
செச்சைநிற மன்னிய திரண்டவிரு தோளும்.

இ—ள்: உச்சி மணி நண்ணும் நச்சு உரக வண்ணக் கச்சு இடை விசித்துள கவின் கொள் ஒரு உடைவாளும் - சிரோரத்தினம் பொருந்திய நஞ்சு காலும் பாம்பாகிய அழகிய கச்சின்கண் இறுகக் கட்டித் தூங்கும் விசித்திரமாகிய ஒரு உடைவாளும், பச்சை முழு நீலம் ஒடு பல் நிற வடம் சேர் - பச்சையும் முழுத்த நீலமுமாகிய இவற்றோடு ஒழிந்த பல நிறங்களுமுடைய ரத்தினமாலைகள் பொருந்திய, செச்சை நிறம் மன்னிய திரண்ட இரு தோளும் - செந்நிறம் பொருந்திய திரண்ட இரண்டு திருப்புயங்களும் எ—று.

சேர் தோள் திரண்ட தோளெனத் தனித்தனி முடிக்க. பசுப்பாவின் கட் பெய்யின், அதனையும் தன்னிறமாக்கும் இலக்கணம் நிரம்பிய நீல மென்பார் முழுநீலமென்றார். கலிவிருத்தம். (கரு)

ஒப்பரிய சட்டையு முடுத்திலகு பட்டுந்
தொப்பியு முகத்திடை துலக்கமுள ராகிச்
செப்பரு நலங்குலவு செண்டொருகை கொண்டே
யிப்படியி லிப்படிவம் யாவருள ரென்ன.

இ—ள்: ஒப்பு அரிய சட்டையும் - உவமைகூறுதற்கரிய சட்டையும், உடுத்து இலகு பட்டும் - திருவரையின்க ணுடுத்து விளங்கும் பட்டுவஸ்திரமும், தொப்பியும் - திருமுடிச்சாத்தும், முகத்து இடை துலக்கம் உளர் ஆகி - திருமுகத்திற் பிரபையு முடையவராகி, செப்பு அரு நலம் குலவு செண்டு ஒரு கை கொண்டு - இத்தன்மைத்தென்று நாங் கூறுதற்கரிய அழகு பொருந்திய சவுக்கை ஒரு திருக்கரத்திற்கொண்டு, இப்படியில் இப்படிவம் யாவர் உளர் என்ன - இந்தப்பூமியில் இவ்வழகிய வடிவம் வேறியாவருளரென்று கண்டோர் தம்முள் வியந்து பேச எ-று.

தொப்பி திசைச்சொல். துலக்கமுமென்னு மெண்ணும்மை விகாரத்தாற் றொக்கது. (கசு)

கட்டுபடி மீதின்மணி கச்சைமணி முன்பி
னிட்டவிரு பக்கமணி யின்னொலி புலம்பப்
பட்டிலகு பக்கரை பனிக்கவரி யெட்டும்
விட்டொளி விளங்குமொரு வெண்பரியி லேறி.

இ—ள்: படி மீது கட்டு மணி - அங்கவடியின்மீது கட்டிய மணியும், கச்சை (மீது கட்டு) மணி - கச்சையின்மீது கட்டிய மணியும், முன் பின் இட்ட மணி - முன்னும் பின்னு மிட்டமணிகளும், இரு பக்கம் இட்ட மணி - இருபக்கங்களினு மிட்ட மணிகளுமாகிய இவை, இன் ஒலி புலம்ப - செவிக் கின்னிசையாக வொலிப்ப, பட்டு இலகு பக்கரை பனிக்கவரி எட்டும் விட்டு ஒளி விளங்கும் ஒரு வெண் பரியில் ஏறி - பட்டினாற் செய்து விளங்குகின்ற கலணையின் சூழ லெட்டினு நிறீய குளிர்ச்சி பொருந்திய சாமரங்களெட்டும் அசையுந்தோறும் விட்டுவிட்டொளி விளங்கப் பெறும் வெண்மையாகிய ஒரு குதிரையின்மீ தேறியருளி எ-று.

படி மிதித்தேறுங் குதிரையங்கவடி. கச்சை இடைக்கட்டு வார். பக்கரை - சேணம். சூழல் - சுற்றிடம். எட்டும் எட்டுத்திக்கினு மென்பாருமுளர். (கஎ)



வீசுகவ ரித்திரண் மிடைந்தொளிர மீதே
தேசொடு கவித்துள செழுங்குடை வயங்கப்
பூசல்புரி வெம்பரி பொருந்துபடை யூடே
மாசில்குல வாரியரின் மன்னனென வந்தார்.

இ—ள்: வீசுகவரித்திரள் மிடைந்து ஒளிர - இரட்டுகின்ற சாமரக் கூட்டங்கள் நெருங்கி விளங்க, மீது தேசு ஒடு கவித்துள செழும் குடை வயங்க - திருமுடியின்மீது அழகோடு கவிக்கின்ற செழுமையாகிய குடை பிரகாசிக்க, பூசல் புரி வெம் பரி பொருந்து படை ஊடே - யுத்தஞ் செய்கின்ற வெவ்விய நரிக்குதிரைகள் பொருந்திய சேனைகளின் மத்தியிலே, மாசு இல் குல ஆரியரின் மன்னன் என வந்தார் - குற்றமற்றுயர்ந்த ஆரிய தேச வாசிகளது தலைவனைப்போல வந்தருளினார் எ—று.

இல்லென்னும் பண்படி இன்றியென வினையெச்சப் பொருடந்து நின்றது. குலம் - உயர்ச்சி. தாங்கிய சுரிகை என்னுஞ் செய்யுளினின்றும் அண்ணலாரென்னு மெழுவாயை வருவித்துக்கொண்டு, அண்ணலார் ஆகி, கொண்டு, ஏறி, வந்தாரென ஒரு தொடராக வைத்து முடிக்க. (கஅ)

மன்னவனு மிங்கிவர் வருந்தகைமை கண்டே
தன்னுள மகிழ்ந்திரு தடங்கணிமை யாமே
யன்னமெனு மூர்திநெடு மாலரனை யல்லா
தின்னவெழில் யாவருள ரென்றதி சயித்தான்.

இ—ள்: மன்னவனும் இங்கு இவர் வரும் தகைமை தன் தடம் இரு கண் இமையாமே கண்டு உளம் மகிழ்ந்து - பாண்டியராசனும் இங்ஙனம் இவர் வருந் தன்மையைத் தனது பெரிய இரு கண்களு மிமையாமற் பார்த்து மனமகிழ்ந்து, அன்னம் எனும் ஊர்தி நெடுமால் அரனை அல்லாது இன்ன எழில் யாவர் உளர் என்று அதிசயித்தான் - அன்ன வாகனத்தை யுடைய பிரமாவும் நெடிய விஷ்ணுவும் அரனென்னுந் திருநாமத்தை யுடைய சிவபெருமானு மல்லது இப்பேரழகை வேறியாவருளரென் றற்புத மடைந்தான் எ—று.

ஊர்தி என்பது வினைமுத லுணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டு நின்றது; 'நேமியோ குலிசியோ நெடுங்கணிச்சியோ' என்புழிப் போல. இமையாமே என்பது மேயீற்று வினையெச்சம். இவரென்றது சோமசுந்தரக் கடவுளை. இங்கிவர் ஈண்டு ஒருசொன்னீர்மைத் தன்று. (ககூ)

பண்ணிய தவத்துள பயன்பரியின் மீதே
நண்ணிய தெனத்தமி னயந்தனர் வியந்தா
ரெண்ணிய முடித்தன ரெனக்கருதி நின்றார்
புண்ணிய மறைத்தமிழ் புகன்றதிரு வாயார்.

இ—ள்: புண்ணிய மறைத் தமிழ் புகன்ற திரு வாயார் - சுத்தமாகிய வேதத்தைச் செந்தமிழ் மொழியினாலே திருவாசகமெனப் பெயர்தந்து பாடியருளிய திவ்விய வாக்கையுடைய திருவாதவூரடிகளானவர், பண்ணிய தவத்து உள பயன் பரியின் மீது நண்ணியது என - அனந்த கோடி பூர்வ சன்மங்களிலே நாம் சிவார்ப்பணமாகச் செய்துகொண்ட தவப்பயனே இப்பொழுது கரசரணாதி அவயவங்களோடு பொருந்தி ஒரு குதிரையின்மீதிவர்ந்தெழுந்தருளி வந்ததென்று, தமில் நயந்தனர் வியந்தார் - தம்முட் சிந்தித்தருட்டிறத்தைத் துதித்து, எண்ணிய முடித்தனர் எனக் கருதி நின்றார் - நாமெண்ணிய இரண்டையும் நம் பரமாசாரியர் தப்பாது செய்துமுடித்தருளினரென உட்கொண்டு மகிழ்ந்து வாளாநின்றனர் எ—று.

நண்ணுதல் இரட்டுறமொழிதல். எண்ணிய என்பது அன்பெறு அகர வீற்றஃறிணைப் பன்மைப்பெயர். எண்ணியவிரண்டு சிவப்பேறும், குதிரையீடுமாம். வேதத்துள்ளும் ஞானகாண்டமென்பார் புண்ணியமறை என்றும், அரசனறியாது நயந்து வியந்தாரென்பார் தமினயந்தனர் வியந்தாரென்றும், தூரத்தே காணினும் அத்திக்கு நோக்கி வணங்கற்பாலர் அது செய்யாது வாளாநின்றனரென்பார் கருதி நின்றாரென நிற்றலை விதந்தும்கூறினர். (௨௦)

தூயசுடர் வேல்பல சுழற்றியெதிர் செல்வார்
வாயொலி விளைப்பரிகல் வாளினை விதிர்ப்பார்
நேயமொடு தம்மிலணி நின்றுசமர் செய்வா
ராயின ரரன்புடையி லானபரி வீரர்.

இ—ள்: அரன் புடையில் ஆன பரி வீரர் - சிவபெருமானது திருமருங்கினுள்ள குதிரைவீரர்கள், தூயசுடர் வேல் பல சுழற்றி எதிர் செல்வார் - கறையற்ற ஒளியையுடைய வேற்படைகள் பலவற்றைச் சுழற்றி ஒருவர்க்கொருவர் எதிரே செல்வாரும், வாய் ஒலி விளைப்பர் - வாயினாலே சிங்கநாதஞ் செய்வாரும், இகல் வாளினை விதிர்ப்பார் - வலிய வாட்படைகளை வீசுவாரும், நேயம் ஒடு தம்மில் அணி நின்று சமர் செய்வார் ஆயினர் - ஒருவர்மாட் டொருவர் அன்போடு தம்முளணிவகுத்து நின்று யுத்தஞ் செய்வாருமாயினர் எ—று.

சிங்கநாதம் வீராவேசத்தா லார்ப்பது. சாணை தீர்ந்த வேலென்பார் தூயசுடர் வேலென்றும், விநோதமாகவன்றி உள்ளபடி மாறுபட்டுநின்று யுத்தஞ் செய்வாரல்லர் என்பார் நேயமொடு தம்மிலணி நின்று சமர் செய்வார் என்றுங் கூறினர். (௨௧)

நீறுசிவ நீதிநிலை நிற்கவுல காளு
மாறனு மகிழ்ந்துதவ மன்னரை யழைத்தே
கூறரிய வாரிய குலேசரொரு வீதி
யேறும்வகை சென்றுரையு மென்றினிது சொன்னான்.



இ—ள்: நீறு சிவ நீதி நிலை நிற்க உலகு ஆளும் மாறனும் மகிழ்ந்து - விபூதியும் நஞ் சைவசமய நீதியும் எஞ்ஞான்றும் நிலைபெற உலகத்தை அரசாளும் பாண்டியராசனும் மேன்மேன் மகிழ்ச்சியடைந்து, தவ மன்னரை அழைத்து - தவ முதல்வராகிய திருவாதவூரடிகளைத் தன் சமீபத்தில் வருவித்து, கூறு அரிய ஆரிய குல ஈசர் ஒரு வீதி ஏறும் வகை - தம் பெருமை கூறுதற்கரிய இவ்வாரிய குலாதிபர் ஒரு வீதியிலே குதிரையேற்றஞ் செய்யுமாறு, சென்று உரையும் என்று இனிது சொன்னான் - நீர் சென் றியம்புமென் றினிதாகக் கூறினான் எ—று.

கூறு முதனிலைத் தொழிற்பெயர். நீதி - முறைமை. கொடுவந்த குதிரைகளின் வேக பேதங்களையும் ஏனைப் பயிற்சி வன்மைகளையும் நேரே காணுமாறு ஒரு வீதி ஏறும்படி கூறினானென்க. (௨௨)

என்னிவன் மொழிந்தன னெனத்தமி லிரங்கா
மன்னிய வருந்தவரும் வாண்முக மலர்ந்தே
கன்னலை நலங்கொள்கனி யைக்குறுகி நெஞ்சான்
முன்னுற வணங்கிவிழி முத்துதிர நின்று.

இ—ள்: மன்னிய அரும் தவரும் - (அதுகேட்ட) நிலைபெற்ற அரிய தவத்தையுடைய திருவாதவூரடிகளும், இவன் என் மொழிந்தனன் எனத் தமில் இரங்கா வாள் முகம் மலர்ந்து - இவ்வரசன் எதனைக் கூறும்படி பணித்தானென்று தம்முணைந்து புறத்தே முகமலர்ச்சி காட்டி, நலம் கொள் கன்னலைக் கனியைக் குறுகி நெஞ்சால் முன் உற வணங்கி - தம் மெய்யடியவர்க்குத் தித்திக்குங் கரும்பினது சாறும் முக்கனியுமாகிய பரமாசாரியரை அடைந்து மனத்தான் முன்னர் வணங்கி - விழிமுத்து உதிர நின்று - பின் கண்ணீராகிய முத்துச் சொரிதா நின்று எ—று.

பரமாசாரியரை இன்னது செய்க என்று தமியேனேவும்படி அரசன் பணித்தானே என்பார் என்னிவன் மொழிந்தனனென்றும், காயத்தான் வெளிப்பட ஈண்டு வணங்கலாகாமையின் மானச வணக்கமே செய்தனர் என்பார் நெஞ்சால் வணங்கி என்றும், அங்ஙனம் மறைக்கினும் உண்ணின்ற அன்பு ஒருவாறு வெளிப்படுத்திற் றென்பார் விழிமுத்துதிர என்றும் கூறினார். அன்பு வெளிப்படுத்து மென்பதை "அன்பிற்கு முண்டோ வடைக்குந் தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்" என்பதனானுமறிக. (௨௩)

மன்றன்மல ரோனுநெடு மாலுமுரு வேறு
யன்றுமுத லின்றுமறி யாதவகை நின்றாய்
வென்றிவிடை யன்றியுயர் வெம்பரியின் மீதே
யின்றுனை வணங்கமுன மெத்தவ முயன்றேன்.

இ—ள்: மன்றல் மலரோனும் நெடு மாலும் உரு வேறாய் - மணங் கமழுந் தாமரை மலரை யாசனமாகவுடைய பிரமாவும் நெடிய விஷ்ணுவும் தத்தம் விபரீத ஞானத்தினின்றும் வேறுபடாது வடிவுமாத்திரம் வேறுபட்டு, அன்று முதல் இன்றும் அறியாத வகை நின்றாய் உனை - தாம் மமதையுற்ற அன்று முதல் இன்றுவரையுந் தேடி அறியாத பிரகாரம் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நின்றருளும் அத்துணை அரிய தேவரீரை, வென்றி விடை அன்றி உயர் வெம் பரியின் மீது இன்று வணங்க - வெற்றியையுடைய விஷ்ணுவாகிய இடபவாகனத்தின் மீதன்றி அதனினு முயர்ந்த வேதமாகிய வெவ்விய குதிரையின் மீது தரிசித்து இத்தினம் வணங்குதற்கு, முனம் எத்தவம் முயன்றேன் - பூர்வ சன்மங்களில் என்ன அருந் தவஞ் செய்தேனோ எ—று.

அவ்வருந்தவம் இனையவென் றீண் டறியப் பெறுவேனாயின் இன்னும் அவற்றையே செய்வேனென்பது குறிப்பெச்சம். நின்றாயாகிய வுனையெனக் கூட்டுக. பிரம விஷ்ணுக்களும் அறிதற்கரிய சிவபெருமான் விஷ்ணுவாகிய இடபவாகனத்தின் மீதன்றித் தம்பொருட்டாகவே இன்று புதிதாக வேதமாகிய குதிரையின்மீ திவர்ந்து வெளிவந் தெளிவந்தருளிப் பரிமே லழகியார் என்னுந் திருநாமம் படைத்தமையின், அடிகள் இங்ஙனந் திருவுளைந்துருகிக் கூறினரென வுணர்க. இந்நிமித்தம்பற்றியே சோமசுந்தரக் கடவுட்குப் பரிமேலழகியார் என்னுந் திருநாமம் உளதாயிற் றென்ப தினிது விளக்குதற்கன்றே ஆசிரியர் இச்சருக்கத்துட் குதிரையைக் கூறுகின்றுழி யெல்லாம் வேறு பெயராற் கூறாது பெரும்பாலும் பரி யென்னும் பெயராற் கூறிவருகின்றதூஉ மென்க. இது தன் குறிவழக்க மிகவெடுத் துரைத்த லென்னுந் தந்திரவுத்திக்கினம். இன்னு மிதனை "அண்ணலங் களிற்றாற் கருமறைப் பரிமே லழகியா ரடைவுற விரிப்பார்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. (உச)

வந்தபடி யிவ்வுரு வணங்குமிது வல்லா
லந்தவடி வாகிலுனை யாரறிய வல்லா
ரிந்தவகை கண்டடி யவர்க்கெளிமை யென்றே
சிந்தைதனி லன்பொடு தெளிந்தவுல கெல்லாம்.

இ—ள்: வந்த படி இவ் உரு வணங்கும் இது அல்லால் - ஈண்டெழுந்தருளிவந்தபிரகாரம் இவ்வுருவத் திருமேனியைத் தரிசித்து வணங்குமிஃதொன்றல்லது, அந்த வடிவு ஆகில் உனை ஆர் அறிய வல்லார் - அவ்வருவத் திருமேனியைத் தேவரீர் மேற்கொள்ளின், அங்ஙனந் தேவரீரை யாவ ரறிய வல்லுநர், உலகு எல்லாம் இந்தவகை கண்டு - இவ்வுலகத்தின ரெல்லாம் இப்பெருங்கருணைத் திறத்தை நேரே ஈண்டுக் கண்டறிந்து, அடியவர்க்கு எளிமை என்று சிந்தை தனில் அன்பு ஒடு தெளிந்த - 



தேவரீரை அடியவர்க் கெளியீரென்று முன்னையினுந் தம்மனத்தின் மிக அன்புகொண்டு நிச்சயித்தறிந்தனர் எ—று.

ஒடுவுருபு வேறுவினையுடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது. தெளிந்த துலகெல்லாமென்பது பாடமாயிற் பன்மை யொருமை மயக்கமாகக் கொள்க. வினை முக்கூற்றுப் புறச்சமயிகடாமுந் தெளிந்தா ரென்பார் உலகெல்லாமென்றார்.

என்றுமுக மன்பல வியம்பியரு ளாலே
வென்றிபுனை மீனவன் விளம்புமொழி சொன்னார்
கொன்றைமுடி யாருமதி சைந்துகொடை மாற
னன்றியொடு காணும்வகை நற்பரியு கைத்தார்.

இ—ள்: என்று முகமன் பல இயம்பி - என்றிவ்வாறு திருவாதவூரடிகள் சற்கார வசனங்கள் பலவற்றைக் கூறி, அருளால் - பரமாசாரியரது திருவருளினாலே, வென்றிபுனை மீனவன் விளம்பு மொழி சொன்னார் - வெற்றிமாலையை யணிந்த பாண்டியன் கூறிய வார்த்தையை மெல்ல விண்ணப்பஞ் செய்தார், கொன்றை முடியாரும் அது இசைந்து - கொன்றை மாலிகையைத்தரித்த திருமுடியையுடைய சிவபெருமானும் அதற்குடம்பட்டு, கொடை மாறன் நன்றி ஒடு காணும் வகை நல் பரி உகைத்தார் - கொடையையுடைய பாண்டியராசன் பூர்வ சன்மங்களிலே செய்துகொண்ட நல்வினையாகிய சிவபுண்ணிய வலத்தினாலே நேரே காணும்படி வேதமாகிய நல்ல குதிரையைச் செலுத்தியருளினார் எ—று.

பரமாசாரியர் கூறுகவென்று பணித்தருளிய பின் கூறினரென்பார் அருளால் என்றும், தங்கூற்றாகக் கூறிற் குருசிஷ்யக்கிரமந் தவறுமாகலின் அரசன் கூற்றாகவே கூறின ரென்பார் பொருள்பற்றாது சொல்லே பற்றி மீனவன் விளம்பு மொழி சொன்னாரென்றும், ஈண்டுக் குதிரை யேற்றந் தரிசித்தற்குப் பூர்வசன்ம நல்வினையேயன்றி இம்மையிற் கொடையும் காரணமாமென்பார் கொடை மாறனென விசேடித்துங் கூறினர். நன்றி-நன்மை; ஆகுபெயர். ஒடுவுருபு கருவிப்பொருட்கண் வந்தது. (உரு

மன்னரவ பந்தமுடன் வட்டநெடு வீதி
யென்னுமிவு ளித்தொழில்கள் யாவுமினி தேறி
யுன்னுமன வேகமென வோடுமுயர் பாய்மா
நன்னட மிடும்படி நடாத்தியெதிர் வந்தார்.

இ—ள்: மன் - பதியாகிய சோமசுந்தரக் கடவுள், அரவ பந்தம் உடன் வட்டம் நெடுவீதி என்னும் இவுளித் தொழில்கள் யாவும் இனிது ஏறி - நாகபந்தம், விருத்தம், தீர்க்கவீதி என்னும் பாகுபாட்டையுடைய

குதிரை யேற்றங்களையெல்லாம் இனிதாக வேறிக் காட்டி, உன்னும் மன வேகம் என ஓடும் உயர் பாய்மா நல் நடம் இடும் படி நடாத்தி எதிர் வந்தார் - நினைத்தற்கருவியாகிய மனவேகம்போல விரைந்தோடும் வேதமாகிய குதிரை தாளகதிக் கேற்ப நல்ல நடனமிடும்படி செலுத்திக்கொண்டரசனுக் கெதிர்வந்தருளினர் எ—று.

வீதி - நேரோடல். இனி மன்னை அரவபந்தத்தை விசேடித்ததாகக் கோடலுமொன்று. (௨௭)

வெம்பரியி னண்ணலை வியந்துதமிழ் மாறன்
கம்பமுடி யெய்தவொரு கைவிரல் சுழற்று
வம்பொன்விலை யில்லதொ ரருங்கலை யளித்தா
னெம்பரமர் செண்டின்மிசை யேற்றுநகை செய்தார்.

இ—ள்: தமிழ் மாறன் வெம் பரியின் அண்ணலை வியந்து - அப்பொழுது தமிழையுடைய பாண்டியராசன் அவ்வச்சுவபதியைப் புகழ்ந்து, முடி கம்பம் எய்த ஒரு கை விரல் சுழற்று - சிரக்கம்பஞ்செய்து ஒரு கைவிரலைச் சுழற்றி, விலை இல்லது அரும் அம் பொன் ஓர் கலை அளித்தான் - விலை மதித்தற்கரிய அருமையாகிய அழகையுடைய பீதாம்பரமொன்றைப் பரிசாகக் கொடுத்தான், எம் பரமர் செண்டின் மிசை ஏற்று நகை செய்தார் - எம்முடைய சிவபெருமான் அதனைத் தமது சவுக்கின் மீதேற்றுப் புன்னகை செய்தருளினர் எ—று.

சிர கம்பமுங் கைவிரற் சுழற்சியும் உவகைச் சுவையின் விறல்பற்றி வந்த மெய்ப்பாட்டுத் தொழிற் குறிப்புக்க ளென்க. (௨௮)

வேறு.

ஏற்றவொண் கலையை நேச மெய்தினு னொருவன் சென்று
காற்றென விரைவி னெய்திக் கடிதுதன் கரத்தில் வாங்கிப்
போற்றிலன் முடியின் மீது புனைந்தில னென்று மாற
னீற்றினன் மறைப்பி னாலே நெஞ்சிடை வெகுட்சி கொண்டான்.

இ—ள்: மாறன் - அரிமர்த்தன பாண்டியன், ஒருவன் - மிக ஏழையாகிய இக்குதிரை ராவுத்தன், ஏற்ற ஒண் கலையை - தான் ஏற்ற பீதாம்பரத்தை, நேசம் எய்தினன் - விருப்பங்கொண்டு, காற்று என விரைவில் சென்று எய்தி - காற்றைப் போல விரைந்து வந்து சமீபித்து, கடிது தன் கரத்தில் வாங்கிப் போற்றிலன் - விரைவிலே தன் கையில் வாங்கிப் பேணிலன், முடியின் மீது புனைந்திலன் என்று - சிரசின் மீது அணிந்திலனென்று கருதி, நீற்றினன் மறைப்பினாலே நெஞ்சு இடை வெகுட்சி கொண்டான் - சிவபெருமான் தம்மை மறைத் தெழுந்தருளினமையினாலே தம் மனத்தின்கட் கோபங் கொண்டான் எ—று.



எய்தினனென்ப தெச்சமுற்று. அச்சுவபதி முன் செண்டி லேற்றமையிற் பின்பரசன் கரத்தில் வாங்கிப் பேணிலனென்று னென்க. மறைப்பினலென்பதற்குத் திரோதானசத்தியினு லென்றலு மொன்று. அது வருஞ் செய்யுளான் விளக்குப. மகாராசாவாகிய தான் கொடுத்த பரிசினை அச்சுவபதி அவமதித்தமையினாலே அரசனுக்குக் கோபமுண்டாயிற் றென்பதாம். அற்றேல், "வாசிவா ணிகர்க்குத் தென்னன் வெண்டுகில் வரிசை யாக, வீசினன் பாணற் கேவல் செய்தவர் வெள்கு வாரோ, கூசிலா நேசர்க் காப்பான் குதிரையி னிழிந்தேற் றந்தத், தூசினை யிரண்டாங் கங்கை யென முடி சூடி நின்றார்" என வழிநூல் கூறியவா றென்னை யெனின், "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித், திரிபுவே றுடையது புடைநூலாகும்" என்பவாகலின், அது கடாவன்றென்க. பிறவுமன்ன. ஆலாசியமான்மியம் முதனூலும், திருவிளையாடற்புராணம் வழிநூலும், இவ்வாதவூரடிகள் புராணம் சார்புநூலுமாமென்க. இது அறுசீரடியாசிரிய விருத்தம். (௨௯)

வெளிப்பட வரிய மேனி விண்ணவன் கண்ணு நெஞ்சுங்
களிப்புற வருதல் கண்டுங் கண்டிலன் கன்னி நாடன்
ஒளித்துல கெங்கு நிற்போ னுறுபவ மொழித்து ஞான
மளித்திடி னன்றி யாவ ரவன்றிற மறிய வல்லார்.

இ—ள்: மேனி வெளிப்பட அரிய விண்ணவன் கண்ணும் நெஞ்சும் களிப்புற வருதல் கண்டும் - தந்திருமேனி ஊனக்கண்ணினாலே வெளிப்படக் காணுதற்கரிய சிதாகாச வடிவமாகவுடைய சிவபிரானானவர், கண்ணு மனமுங் களிகூர ஈண்டு வெளிப்பட வெழுந்தருளி வருதலை ஊனக் கண்ணால் நேரே கண்டுவைத்தும், கன்னி நாடன் கண்டிலன் - கன்னிநாட்டையுடைய பாண்டியராசன் ஞானக்கண்ணின்மையினால் உள்ளபடி காணப்பெற்றிலன், உலகு எங்கும் ஒளித்து நிற்போன் உறு பவம் ஒழித்து ஞானம் அளித்திடின் அன்றி - உலகெங்கும் விறகிற் றீயைப் போல மறைந்து நின்றருளும் அம் முதல்வன் அநாதியாய் வரும் பிறவிக்கு நிமித்தமாகிய அஞ்ஞானத்தைப் பற்றறக் கழித்துத் தமது திருவடி ஞானத்தைப் பிரசாதிக்கி னல்லது, யாவர் அவன் திறம் அறிய வல்லார் - யாவர்தாம் அக்கடவுளது உண்மைத் தன்மையைக் கண்டுணர வல்லவர் எ—று.

மேனி விண்ணவன் மேனியாக விண்ணையுடையவன். ஊனக் கண்ணால் உணரப்படாமையை "ஊனக்கண்பாச முணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என்பதனானுமறிக. பவம் ஆகுபெயர். உண்மைத்தன்மை சொரூபலக்கணம். இது புராணிகர் கூற்று. (௩௦)

எண்டிசை மன்ன ரன்பா லீந்தமென் கலைகள் யாவுஞ்
செண்டிடைக் கோட லன்னோர் தேயநல் லியற்கை யென்றே

வண்டமிழ் வாத வூரர் மாமது ரேச னெஞ்சிற்
கொண்டிடு முனிவு தீரக் குறைந்துமுன் னின்று சொன்னார்.

இ—ள்: வண்தமிழ் வாதவூரர் முன் நின்று - அரசனது வெகுட்சியைக் கண்ட செந்தமிழ்மொழிக் கதிபராகிய திருவாதவூரடிகள் அவ்வரசனுக் கெதிர்சென்று செவ்வே நின்று, எண் திசை மன்னர் அன்பால் ஈந்த மென் நல் கலைகள் யாவும் சென்டு இடைக் கோடல் அன்னோர் தேய இயற்கை என்று - அட்டதிக்கினுமுள்ள அரசர்களெல்லாம் தம்மிட்டம் பற்றிப் பரிசுகொடுக்கும் மென்மையாகிய நல்ல வஸ்திரங்களை யெல்லாஞ் சவுக்கின்மீ தேற்றுக் கோடல் அவரது தேசாசாரமென்று, மா மதுரா ஈசன் நெஞ்சில் கொண்டிடு முனிவு தீரக் குறைந்து சொன்னார் - பெருமை பொருந்திய மதுரையை இராசதானியாகக்கொண் டரசுவீற்றிருக்கும் அரிமர்த்தன பாண்டியன் மனத்தின்கட் கொண்ட கோபந் தணியுமாறு குறையிரந்து கூறினார் எ—று.

குறையிரந்தது அரசன்கோபம் தம்மாசாரிய சுவாமிகட் கியாதானு மேதம் பயக்குமோ வென்னும் அச்சம்பற்றி யுளதாய தடுமாற்றத்தா லென்க. அவ்வாசாரியசுவாமிகண்மீது தம்மை விழுங்கி முறுகியெழுந்த பேரன்பே அவ்வச்சத்திற்குக் காரணமென்க. இனிச் "செல்லாவிடத்துச் சினந்தீது" என்பதனால் அரசன்கோபம் அவ்வரசனையே கெடுக்குமென்பதுபற்றி அவன் பொருட்டுப் பரிந்திரங்கிக் குறையிரந்தாரெனக் கோடலுமா மென்க. (௫௧)

நலத்தகு மிந்த நீர்மை கேட்டபி னயந்து மன்னன்
கலக்கமி லிவுளி நன்னூல் கற்றவர் தம்மை நோக்கி
யிலக்கண விதியா லுள்ள விரும்பரி யிழிவு மேன்மை
துலக்குற நும்மி னாடி யெம்முடன் சொல்லு மென்றான்.

இ—ள்: நலத்தகும் இந்த நீர்மை கேட்டபின் மன்னன் நயந்து - விரும்பத்தகும் இந்தச் சமாதானத்தைக் கேட்ட பின்பு பாண்டியராசன் கோபந் தணிந்து, நல் இவுளி நூல் கலக்கம் இல் கற்றவர் தம்மை நோக்கி - நல்ல அசுவ லக்கண நூல்களைக் கலக்கமின்றிக் கற்றவர்களை நோக்கி, உள்ள இரும் பரி மேன்மை இழிவு இலக்கண விதியால் துலக்குற நும்மில் நாடி - இங்குள்ள மகிமை பொருந்திய குதிரைகளின் குணகுணங்களை அசுவலக்கண நூல் விதிப்படி விளங்க நீவிர்பரீக்ஷித்து, எம் உடன் சொல்லும் என்றான் - எமக்குக் கூறுமினென்று பணித்தான் எ—று.

நலத்தகு மென்பது வியத்தகு மென்பது போல நின்றது. கலக்கம் சந்தேக விபரீதம். எமக்கென்பது எம்முடனென மயங்கிற்று. பிறரொடு கலவாது பரீக்ஷித்து எமக்கே கூறுகவென்று னென்பார் நும்மினாடி யெம்முடன் சொல்லு மென்று னென்றார். (௫௨)



சொற்றிகழ் துரக நூலின் றுணிபொரு ளுணர்ந்த வோருங்
கொற்றவெம் பரிகட் குள்ள குற்றமுங் குணமு நாடிப்
பொற்றடங் கிரியின் மீது பொருகயல் பொறித்து மீண்ட
வெற்றிகொள் மன்னர் மன்னன் முன்னிவை விளம்ப லுற்றார்.

இ—ள்: சொல் திகழ் துரக நூலின் துணி பொருள் உணர்ந்தோரும் - பொருள் செறிந்த சொற்கள் விளங்கும் அசுவலக்கண நூல்களின் நிச்சயப் பொருளை யறிந்த பரீக்ஷகர்களும், கொற்ற வெம் பரிகட்கு உள்ள குணமும் குற்றமும் நாடி - வெற்றியையுடைய வேகம் பொருந்திய குதிரைகளிடத்துள்ள குணகுணங்களைப் பரீக்ஷித்தறிந்து, பொன் தடம் கிரியின் மீது பொரு கயல் பொறித்து மீண்ட வெற்றிகொள் மன்னர் மன்னன் முன் இவை விளம்பல் உற்றார் - பொன்மயமாகிய பெரிய மேரு கிரியின் மீது போருக்குரிய கயலை எழுதிய கொடியை யெழுதித் திக்கு விஜயஞ் செய்துமுடித்த அத்துணை வெற்றியையுடைய அரசர்க்கரசனாகிய பாண்டியன் முன்னின் றிவ்வார்த்தைகளை விண்ணப்பஞ் செய்வாராயினார் எ—று.

அரசன் மேருகிரியின்கட் கயல்பொறித்தமை அதனைத் தன்னரசாட்சிக் குத்தர திக்கின் எல்லையாக யாவருங் கோடற்கென்க. பொருவென்னும் அடைமொழி கொடியென்னு மாகுபெயர்ப் பொருளை விசேடித்தது. (௫௩)

வேறு.

தாவினைச்சந் திரசுழியா மண்டா வர்த்தந்
தண்டையடி யிற்சுழியா முடலின் பக்க
மேவுசுழி கௌவகமாங் காகா வர்த்த
மேன்மைதிகழ் முன்வளையச் சுழிதா னாகும்
பாவுசெழுங் கேதாரி யடியிற் சேர்ந்த
பயனில்கொடுஞ் சுழிகேசா வர்த்த மாகும்
பூவமருங் கச்சையிற்பட் டடையே யாகப்
புகன்றசுழி யிச்சுழிகள் புணராவாகி.

இ—ள்: தண்டையடியிற் பொருந்திய கேட்டினைத் தரும் சந்திரசுழி அண்டாவர்த்தச் சுழிகளும் உடம்பின் பக்கத்துப் பொருந்திய கௌவக சுழி காகாவர்த்தச் சுழிகளும் மகிமை விளங்கும் முன்வளையச்சுழி பரந்த செழுமையாகிய கேதாரிச் சுழிகளும் அடியிற் பொருந்திய பயனற்ற கொடிய கேசாவர்த்தச் சுழியும் அழகமரும் கச்சைநிலையிற் பொருந்திய பட்டடைச் சுழியுமென அசுவலக்கண நூலுடையார் கூறிய இவ்வெண்வகைச் சுழிகளும் பொருந்தப்பெறாதனவாகி எ—று.

தண்டை - வால். இது எண்சீரடியாசிரியவிருத்தம். (௫௪)

கொம்புகன்னந் திருகுகன்ன நஞ்ச பாதங்
கொள்ளிக்கால் வெள்ளிக்கண் டீனி குன்ரு
வெம்புதழற் சுடலைமுகம் பரனோர் கண்ட
மண்டப்பாழ் விலங்கிபல வண்ட மாதல்
செம்பொறியா மக்கினிசித் திரங்கண் மூன்று
சிறந்தினிய மட்டிற்பா லறுபா லென்றே
யம்புவியோர் மொழிந்தபழு திவையு மின்றி
யடிநாவிற் குரமிரட்டை யாகா வாகி.

இ—ள்: கொம்புபோல நீண்ட செவிகளும் முறுகிய செவிகளும் நஞ்ச பாதமும் கொள்ளிக்காலும் வெள்ளிய கண்களும் தீனிகுன்ருத சுடுகின்ற அக்கினி சுவாலிக்கும் சுடலைபோலும் அழகற்ற முகமும் நீலகண்டமும் பீசமின்மையும் ஒன்றற்கொன் றேற்றக் குறைவாகிப் பருத்த பீசமுடைமையும் செவ்விய பதுமையும் அக்கினியும் சித்திரமுமாகிய இம்மூன்றையும் போலச் சிறந்து முகம் வால் நான்கு கால்களாகிய இனிய இவ்வுறுப்புக்களிற் சுழியின்மையுமென் றிங்ஙன மழகிய பூமியின்கணுள்ள அறிஞர் கூறிய இக்குற்றங்களும் இவைபோல்வன பிறவுமின்றிக் கழுத்தடியின் மார்க்கண்ட மிரட்டையாகப் பொருந்தப் பெருதனவாகி எ—று.

நஞ்சபாதம் மூன்றுகால் விளர்த் தொருகால் கறுத்திருப்பது. கொள்ளிக்கால் மூன்றுகால் கறுத்து ஒருகால் விளர்த்திருப்பது. தீனி-தின்னப்படுவது. வெம்பு தழற் சுடலை முகப் பரனோர் கண்டமென்பது பாடமாயின் மயானருத்திராது கண்டம்போலுங் கரிய கண்டமென் றுரைக்க. (௩௫)

சிரமதனி லிரண்டுசெழுந் துளைப்பி னான்கு
சிறந்தவுரந் தனிலிரண்டு நுதன்மே லொன்று
குரவமிசை நின்றசுழி யொன்றி னோடு
குலவிய வீரைந்துசுழி குறையா வாகி
நரிவெருகு கருங்காக மலகை யோரி
ஞாளிசெழுங் கேழலெனுங் குரலின் றகி
விரவுபெருந் திரைவேலை மங்குல் சங்கம்
விடைமுழவம் போன்முழக்க மிகவுண் டாகி.

இ—ள்: சிரமதனில் இரண்டு - தலையில் இரண்டு சுழிகளுங், செழுந் துளைப்பின் நான்கு - செழுமையாகிய நாபியின் பின் நான்கு சுழிகளும், சிறந்த உரந்தனில் இரண்டு - அழகிய மார்பில் இரண்டு சுழிகளும்,— நுதல் மேல் ஒன்று - நெற்றியில் ஒரு சுழியும், குரவமிசை நின்ற சுழி ஒன்றினோடு - உதட்டின்கணுள்ள சுழி யொன்றுடனே, குலவிய ஈர் ஐந்து சுழி குறையா ஆகி - விளங்காநின்ற இப்பத்துச் சுழிகளும் குறையப்பெருதனவாகி, நரி வெருகு கரும் காகம் அலகை ஓரி ஞாளி செழும் கேழல் எனும் குரல் இன்று ஆகி - நரியும் வெருகும் கரிய காகமும் பேயும் ஓரியும் நாயும் கொழுத்த பன்றியும் என்னு மிவற்றின் சத்தம் இல்லாதனவாகி, விரவு பெரும் திரை வேலை மங்குல் சங்கம் விடை முழவம் போல் முழக்கம் மிக உண்டு ஆகி - ஒன்றன்பி னொன்ருக வரும் பெரிய திரைகளையுடைய சமுத்திரமும் முகிலும் சங்கும் இடபமும் மிருதங்கமும் போல மிகவுஞ் சத்தமுடையனவாகி எ—று.

குரங்கினுண் முசுப்போல, ஓரி நரியினுள் ஒருசாதியென்க. (௩௬)

உருத்திகல்செய் புலியுளியங் கழுதை செந்நா
யொண்பூனை நரியினுடன் கரிய காகந்
தரித்தவழற் புகைநிறமும் புனையாவாகித்
தருக்கிமருத் தெனுங்கவனத் தன்மை யெய்தி
விரித்தகதிர் வெண்டரளந் திங்க ணீல
மென்கமலத் தாதுசெழுங் கனகங் காயா
வரத்தமலர் நல்லபசுங் கிள்ளை போல
வமைந்தவொளி தயங்கிய வங்கத்த வாகி.

இ—ள்: உருத்து இகல் செய் புலி உளியம் கழுதை செந் நாய் ஒண் பூனை நரியின் உடன் கரிய காகம் அழல் தரித்த புகை நிறமும் புனையா ஆகி - வெகுண்டு யுத்தஞ் செய்யும் புலியும் கரடியும் கழுதையும் செந்நாயும் அழகிய பூனையும் நரியும் கரிய காகமும் அக்கினியின்கணுள்ள புகையுமாகிய இவற்றி னிறம் பொருந்தாதனவாகி, தருக்கி - வீராவேசங் கொண்டு, மருத்து எனும் கவனத் தன்மை எய்தி - வாயுவேகம் பொருந்தி, விரித்த வெண் கதிர்த் தரளம் திங்கள் நீலம் மென் கமலத் தாது செழும் கனகம் காயா அரத்த மலர் நல்ல பசும் கிள்ளை போல - பரப்புகின்ற வெள்ளொளியையுடைய முத்தும் சந்திரனும் நீலரத்தினமும் மெல்லிய தாமரைப் பூவின் மகரந்தமும் செழுமையாகிய பொன்னும் காயாம்பூவும் செவ்வரத்த மலரும் நல்ல பசிய கிளியுமாகிய இவற்றைப்போல, அமைந்த ஒளி தயங்கிய அங்கத்த ஆகி - பொருந்திய ஒளிவிளங்காநின்ற உடம்பை யுடையனவாகி எ—று. நீலம் நீலோற்பலமெனினுமமையும். (௩௭)

நெற்றியகன் றுயர்குரவம் படைத்து வெண்மை
நிறைந்துதமி லொத்திலகு மெயிற்ற வாகித்
துற்றநறுங் கந்தமிகச் சிறந்து நாவுஞ்
சூதவிளந் தளிர்போலு மருணந் தோய்ந்தே

யுற்றவிரண் டிமைமயிருந் தொகையுண் டாகி
    யுக்கிரமாம் விழிப்பார்வை யுடைய வாகி
முற்றுமெயிற் றசையின்றி யுள்வ ளைந்து
    முக்கோண மெனத்திகழு முகத்த வாகி.

இ—ள்: நெற்றி அகன்று - நெற்றி விசாலித்து, உயர் குரவம் படைத்து - உயர்ந்த மேலுதட்டைப் பொருந்தி, வெண்மை நிறைந்து தமில் ஒத்து இலகும் எயிற்ற ஆகி - வெண்ணிற மிகுந்து தம்முட் கடையொத்து விளங்கும் பற்களை யுடையனவாகி, துற்ற நறும் கந்தம் மிகச் சிறந்து - இடையறாது கமழும் நறுமணத்தான் மிகவு மேம்பட்டு, நாவும் சூத இளம் தளிர்போலும் அருணம் தோய்ந்து - நாக்கும் மாவினது இளந் தளிர் போலும் செந்நிறம் வாய்ந்து, உற்ற இரண்டு இமை மயிரும் தொகை உண்டாகி - பொருந்திய இரண்டிமை மயிரும் தம்மு ளடரப் பெற்று, உக்கிரம் ஆம் விழிப் பார்வை உடைய ஆகி - கண்டோ ரஞ்சி மெய்விதிர்க்கத் தகும் கொடிய கட்பார்வையை யுடையனவாகி, மெயில் முற்றும் தசை இன்றி - உடம்பின்கண் மிகவுந் தசைப்பற்றின்றி, உள் வளைந்து முக்கோணம் எனத் திகழும் முகத்த ஆகி - உள் வளையப்பெற்று முக்கோணமாகி விளங்கும் முகத்தையுடையனவாகி எ—று.

நறுங்கந்தமென்றது குங்குமம், கருப்பூரம், அகிற்குழம்பு, மிருகமத மென்னு மிவற்றின் கந்தம்போலும் கந்தத்தை என்க. அது "குங்குமங் கருப்புரங் கொழுந்திண் காரகிற், பங்கமான் மதமெனக் கமழும் பாலதாய்" என்பதனானுமறிக. இன்னும் இவ்விலக்கணங்களுட் சிலவற்றை, "அகலிய நுதலின" "நெய்த்திடு மாந்தளிர் நிறத்த நாவின" "வார்ந்து நேரொத்திடு மெயிற்றின" "புகாறு கோண் மூன் றுகிப் பொர்புறு, முகமுடையன" என்பனவற்றானு மறிக. (௬அ)

உளையினுடன் றலைமயிரு நிறமொன் றாகி
    யுரத்தினுடன் கழுத்துரக படமே போன்று
வளைசிறந்த தொனிபரந்து குவிந்துள் வாங்கி
    மண்டலமுண் டாயுரங்கொள் குரங்கள் சேர்ந்து
கிளைகொணரம் புகள்கரந்து தசைதா னென்றிக்
    கிளர்முழந்தா ளெளித்தபதங் கெழும லின்றி
நெளிமுதுகு புனைந்துதொடை திரண்டு தண்டை
    நீண்டுடல நெய்த்தநிற நீர்மை யாகி.

இ—ள்: உளையினுடன் தலை மயிரும் நிறம் ஒன்று ஆகி - பிடர் மயிருந் தலை மயிரும் ஒரே நிறமாகி, உரத்தினுடன் கழுத்து உரக படம் போன்று - மார்புங் கழுத்தும் ஆகிருதியாற் சர்ப்ப படம் போன்று, வளை



சிறந்த தொனி பரந்து - அவை சங்கைப்போலச் சிறந்த உள்ளொலி விரவப் பெற்று, குவிந்து உள் வாங்கி மண்டலம் உண்டாய் உரங்கொள் குரங்கள் சேர்ந்து - குவிந்து உட்சுழித்து வட்டாகாரமாய் வலிமை பொருந்திய குளம்புகளை யுடையனவாகி, கிளைகொள் நரம்புகள் மறைந்து - கிளைத்த நரம்புகளெங்கும் மறையப்பெற்று, தசை தான் ஒன்றிக் கிளர் முழந்தாள் நெளித்த பதம் கெழுமல் இன்றி - முன்னர் வினைய அவயவங்கட்கு ஆகாவென்று விலக்கிய அத்தசைப்பற்றுத் தான் செறிந் தொன்றிப் பருத்துக் கிளராநின்ற முழந்தாள்கள் உள்வளையப்பெற்ற கால்கள் பொருந்துதலின்றி, நெளி முதுகு புனைந்து - நெளித்த முதுகு பொருந்தி, தொடை திரண்டு - தொடைகள் கடைந்தெடுத்தாற் போலத் திரண்டு, தண்டை நீண்டு - வால் நீண்டு, உடலம் நெய்த்த நிற நீர்மை ஆகி - உடம்பு நெய்ப்புப் பொருந்திய நிறம் வாய்ந்த மெருகை யுடையனவாகி எ—று.

குவிதல் குமிழ் வடிவாதல். முழந்தா ளெளியாமையும் முதுகு நெளித்தலும் இலக்கணமா மென்பார் முழந்தா ளெளித்த பதங் கெழுமலின்றி நெளிமுதுகு புனைந்தென்றார். இச் செய்யுளிற் கூறிய இலங்கணங்களுட் சிலவற்றை "ஆய்ந்த குஞ்சிபோ, னிகாறு கொய்யுளை நிறமொன்றுயின" "உரமுங் கண்டமும், பைத்திடு மாரப்படம் போன்ற" "நாலு கால்களுங் கடைந்தெடுத்து நாட்டினாற், போல்வதாய்" என்பவற்றானுமறிக. (௬௯)

மிக்கசெழு மறைநாவிற் கமல நாதன்
    விழிப்புனலில் விண்ணோர்க ளெண்மர் தம்பான்
மைக்கடன்மே லமிர்தத்தி லங்கி மீதின்
    மல்குகருப் பையினுலக வண்டந் தன்னிற்
றொக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன்றுந்
    தொன்மையவா யிரிரண்டு துணைத்தா ணெற்றி
யொக்கவெளுக் கும்பரிக ளுளவாய் வானி
    லொண்புனலிற் செல்லுநெறி யுளவு மாகி.

இ—ள்: கமல நாதன் மிக்க செழு மறை நாவில் - செந்தாமரை மலரை யாசனமாகவுடைய பிரமாவினது வேதங்களுட் சிறந்த செழுமையாகிய சாமவேதங் கூறும் நாவிலும், விழிப் புனலில் - அவர் யாகஞ் செய்கின்றுழிக் கண்களினின்று மொழுகிய நீரிலும், அங்கி மீதில் - அவரது யாகாக்கினியிலும், விண்ணோர்கள் எண்மர் தம்பால் - இந்திரன் முதலிய திக்குப்பாலக ரெண்மரிடத்திலும், மைக் கடல் மேல் அமிர்தத்தில் - கரிய சமுத்திரத்திற் றோன்றிய அமிர்தத்திலும், மல்கு கருப்பையில் - உரிய மாசம் நிரம்பிய கருப்பையிலும், உலக அண்டந் தன்னில் தொக்க எழு பேதமெனும் இவற்றில் தோன்றும் தொன்மைய ஆய் - இலக்குமி சாபத்தாற் கோட்டான் வடிவமைந்த பிரமா இட்ட முட்டையிலுந் தோன்றிய

எழுவகையாகிய இக்குதிரைகளின் மரபிற் பிறந்த பழைய உற்பத்திக் கிரமத்தை உடையனவாய், ஈர் இரண்டு துணைத் தாள் நெற்றி ஒக்க வெளுக்கும் பரிகள் உள ஆய் - நான்கு கால்களும் முகமும் ஒரு சேர வெண்ணிறம் வாய்ந்திருக்கும் பஞ்சகல்யாணி யென்னுங் குதிரைகளை இக்குதிரைச் சேனு சமூகங்கள் உடையனவாய், வானில் ஒண் புனலில் செல்லும் நெறி உளவும் ஆகி - ஆகாயத்திலும் அழகிய நீரினுஞ் செல்லும் விசித்திர விகற்ப கதிகளை உடையனவுமாகி எ—று.

மைக்கடல் இனவடை. நான்கு கால்களுள் இவ்விரண் டொவ்வோரிணையாகலிற் றுணைத்தாளென்றார். பஞ்சகல்யாணி யென்னுங் குதிரையினிலக்கணத்தை "முக மார் புச்சி வால்காலென் றுரைத்த வெட்டுறுப்பினும் வெண்மை, விரவிய தட்டமங்கலந் தலைவால் வியனிற மென்ற விம்மூன்று, மொருவிய வுறுப்போ ரைந்தினும் வெண்மை யுள்ளது பஞ்சகல்யாணி" என்பதனானறிக. (சo)

மங்காளன் சாரங்கன் கங்கா நீலன்
மௌவழகன் கொங்காளன் சன்ன சம்பான்
குங்குமச்சோ ரன்கரியா னீலன் சாரன்
குலவுமள்ளா னுரஞ்சிவந்தா னல்லான் பொல்லான்
றங்குகருங் காற்சம்பா னென்று கூறுந்
தன்மையுள பன்னிறமும் புனைந்த சாதித்
துங்கமிகும் பரியிவையென் றவற்றின் றன்மைத்
தொன்மையுரைத் தரசனைமுன் றொழுது நின்றார்.

இ—ள்: மங்காளன் ... ... ... தன்மை உள - மங்காளனும் சாரங்கனும் கங்காநீலனும் மௌவழகனும் கொங்காளனும் சன்னசம்பானும் குங்குமச் சோரனும் கரியானும் நீலனும் சாரனும் விளங்குகின்ற மள்ளானும் உரஞ்சிவந்தானும் நல்லானும் பொல்லானும் பொருந்திய கருங்காற்சம்பானுமென்று கூறப்படும் பதினைந்து பாகுபாடு பொருந்திய இலக்கணங்களையுடைய, பல் நிறமும் புனைந்த சாதித் துங்க மிகும் பரி இவை என்று - பல நிறவேறுபாடுகளையுமுடைய உயர்ந்தசாதிக் குதிரைகள் இவையென்று - அவற்றின் தொன்மைத் தன்மை உரைத்து அரசனை முன் தொழுது நின்றார் - அவைகளின் பழைய வரலாற்றுமுறைகளை விண்ணப்பஞ்செய்து பாண்டிய ராசனை எதிரே வணங்கிப் பரீக்ஷகர் நின்றனர் எ—று.

தாவினை என்னும் செய்யுண் முதல் இதுகாறுமுள்ள குளகமாகிய எட்டுச் செய்யுள்கட்கும் சொன்முடிபு பொருண்முடிபுகளை வரையறுத்து அசுவலக்கணங்களை விரித்துரை செய்தற்கு மேற்கோள் யாண்டு மகப்படாமையின், சிறுவர் பொருட்டு, அவற்றின் பழைய உரையினையே பெரும்பான்மையும் ஈண்டுத் தந்து, இனி அப்பாற் செல்லுதுமென்க. (சக)



நற்பரியி னியல்புணர்ந்தோ ரின்ன வாறு
நவின்றமொழி கேட்டுமிக நயந்து வெள்ளி
வெற்பனைய விடையேறி யளிக்குந் தெய்வ
வெம்பரிகள் யாவும்விலை மதித்த பின்னர்ப்
பொற்புடைய தன்பொருண்மே லெண்ம டங்கு
போதுதலாற் பொங்குமகிழ் வெய்தி மாறன்
றற்பரனை முகநாடிக் கயிறு மாறித்
தருகதுர கத்தொகுதி தம்மை யென்றான்.

இ—ள்: நல் பரியின் இயல்பு உணர்ந்தோர் இன்னவாறு நவின்ற மொழி மாறன் கேட்டு - நல்ல அசுவலக்கண நூலை ஓதியுணர்ந்த பண்டிதர்களாகிய பரீக்ஷகர் இந்தப் பிரகாரங் கூறிய வார்த்தைகளைப் பாண்டியன் கேட்டு, மிக நயந்து - முன்னையினும் மிக விருப்பங் கூர்ந்து, வெள்ளி வெற்பு அனைய விடை ஏறி அளிக்கும் தெய்வ வெம்பரிகள் யாவும் விலை மதித்த பின்னர் - வெள்ளிமயமாகிய கைலாசகிரியைப் போலும் இடபத்தை வாகனமாகவூரும் சோமசுந்தரக் கடவுளாகிய அச்சுவபதி கொடுக்கும் வெவ்விய குதிரைகளெல்லாம் விலைமதிக்கப்பட்ட பின்னர், பொற்பு உடைய தன் பொருள் மேல் எண் மடங்கு போதுதலால் - பொலிவை யுடைய தன் திரவியத்தின்மேல் எண்மடங்கு விலைமிகுதலினால், பொங்கு மகிழ்வு எய்தி - பெருமகிழ்ச்சி யடைந்து, தன் பரனை முக நாடி - ஆன்மாவுக்கு மேற்பட்ட சோமசுந்தரக்கடவுளாகிய அவ்வச்சுவபதியை முகத்திற் பொருந்தப்பார்த்து, துரகத் தொகுதி தம்மைக் கயிறு மாறித் தருக என்றான் - குதிரைக் கூட்டங்களை இனிக் கயிறு மாறித் தருகவென்று கூறினான் எ—று.

கயிறு மாறுதலாவது அக் குதிரைக் கூட்டத்துள் ஒரு குதிரையை அலங்கரித்துப் பூசித்து, அதன் கயிற்றைப்பற்றி விற்போர் வாங்குவோர் கையிற் கொடுத்தலாம். (சஉ)

வேறு.

காத்துல கனைத்து முய்யக் கண்ணருள் செய்யு நீதிப்
பார்த்திவன் கருமஞ் செய்வார் பற்றியங் கரத்தில் வாங்கச்
சாத்தவர் தம்மி லாங்கோர் சால்பினர் கயிறு மாறி
யீத்தனர் பந்தி யூடு சேர்த்தன ரிவுளி யெல்லாம்.

இ—ள்: உலகு அனைத்தும் உய்யக் காத்துக் கண் அருள் செய்யும் நீதிப் பார்த்திவன் கருமம் செய்வார் அம் காத்தில் பற்றி வாங்க - உலகங்களெல்லாம் உய்யும் வண்ணம் அவற்றைப் பாதுகாத்துக் கண்மருள் செய்யும் மனுநீதியையுடைய பாண்டியராசனது காரியதரிசிகள் அழகிய கையிற்பற்றி வாங்க, சாத்தவர் தம்மில் ஆங்கோர் சால்பினர் கயிறு மாறி

ஈத்தனர் - குதிரை ராவுத்தர்களுக்குள்ளே தகுதியையுடைய ஒருவர் கயிறு மாறிக் கொடுத்தனர், இவுளி எல்லாம் பந்தி ஊடு சேர்த்தனர் - அப்பொழுது குதிரைகளை யெல்லாம் அவர்கள் அரசனது பந்தியின்கட் கொடு சென்றுய்த்தனர் எ—று.

வாங்க ஈத்தனரென முடிக்க. ஈந்தனர் எனற்பாலது ஈத்தனர் என வலிக்கும்வழி வலித்தல். இது அறுசீரடியாசிரியவிருத்தம். (சரு)

திண்டிறல் கெழுவு நேமித் தென்றிசைக் கிறையுஞ் செய்ய
வண்டமிழ்க் கிறையுங் காண வந்திடு திசையி னேகிப்
பண்டைநற் படிவ மாகிப் பணிந்துவிண் ணவர்கள் சூழக்
கொண்டலைப் பொருவு கண்டர் குலவுதங் கோயில் புக்கார்.

இ—ள்: கொண்டலைப் பொருவு கண்டர் - முகிலை நிகர்க்குங் கரிய கண்டத்தையுடைய சோமசுந்தரக் கடவுளானவர், திண் திறல் கெழுவும் நேமித் தென் திசைக்கு இறையும் வண் செய்ய தமிழ்க்கு இறையும் காண வந்திடு திசையின் ஏகி - திண்ணிய வலிமை பொருந்திய ஆஞ்ஞா சக்கிரத்தையுடைய தென்றிசைக் கதிபனாகிய பாண்டியராசனும் வளவிய செந்தமிழ்க் கதிபராகிய திருவாதவூரடிகளுந் தரிசித்துநிற்பத் தாம் முன்னெழுந்தருளிவந்த பூருவதிக்கை நோக்கிப் போய், பண்டை நல் படிவம் ஆகி விண்ணவர் பணிந்து சூழக் குலவு தம் கோயில் புக்கார் - பழைய நல்ல திருமேனி கொண்டு தேவர்கள் வணங்கிச் சூழத் தமது விண்ணிழி விமானமாகிய கோயிலின்கட் சென்றருளினர் எ—று.

விண்ணவர்கள் ஏகி, ஆகி, பணிந்து, சூழ; கண்டர் ஏகி, ஆகி, புக்காரென முடிக்க. (சசு)

வாய்ந்தன பரிக ளும்மா லென்றெழில் வாத வூரின்
வேந்தரை மனையி லேக விடுத்துள மகிழ்ச்சி கூர்ந்து
சார்ந்தமெய்த் தகைமை யோருந் தானையுஞ் சூழ வேகி
யாய்ந்தநற் றமிழில் வல்ல வரசனுங் கோயில் புக்கான்.

இ—ள்: ஆய்ந்த நல் தமிழில் வல்ல அரசனும் - முத லிடை கடையென்னு முச்சங்கங்களா ளாராயப்பட்ட அந்நன்மையினையுடைய தமிழ்மொழியில் வல்ல பாண்டியராசனும், எழில் வாதவூரின் வேந்தரை உளமகிழ்ச்சி கூர்ந்து - அதன்பின்பு திருவாதவூரடிகளை மனமகிழ்ந்து பார்த்து, நும்மால் பரிகள் வாய்ந்தன என்று மனையின் ஏக விடுத்து - நும்மாலெமக்குக் குதிரைகள் இனிது வாய்த்தன வென்று பிரிய வசனங்களைக் கூறி அவரைத் தந்திருமாளிகையிற் செல்லும்படி அனுப்பி, சார்ந்த மெய்த்தகைமையோரும் தானையும் சூழ ஏகிக் கோயில் புக்கான் - தன்னைச் சார்ந்த உண்மைத் தன்மையுடைய பெரியோர்களுஞ் சேனையுஞ் சூழச் சென்று தன் மாளிகையிற் பிரவேசித்தான் எ—று.



வாய்த்தன எனற்பாலது வாய்ந்தன என மெலிக்கும்வழி மெலித்தல். உம்மை இறந்தது தழீஇயிற்று. மெய்த்தகைமையோர் புரோகிதர் முதலாயினோர். தமிழ் மொழியின தாராய்ச்சி நன்மையை, 'கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து, பண்ணுறத் தெரிந் தாய்ந்தவிப் பசுந் தமிழேனை, மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ, லெண்ணிடைப் படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ'' என்பதனானுமறிக. (சஎ)

அத்தின மகல மாலை யணைதலும் பரிக ளெல்லா
நித்தன தருளி னாலே நெடுங்குர னரிக ளாகி
மெய்த்தமிழ் மதுரை மூதூர் விழித்துயி லொழிந் திரங்கத்
தத்தமி லுடன்று கூடித் தனித்தனி களித்து நின்ற.

இ—ள்: அத்தினம் அகல மாலை அணைதலும் - அப்பகற்கால நீங்க இராக்காலம் வருதலும், பரிகள் எல்லாம் நித்தனது அருளினாலே நெடும் குரல் நரிகள் ஆகி - அக்குதிரைகளெல்லாம் அநாதிநித்தியராகிய சிவபெருமானுடைய திருவருளினாலே உச்சவிசையின னூளையிடுங் குறுநரிகளாகி, மெய்த்தமிழ் மதுரை மூதூர் விழித்துயில் ஒழிந்து இரங்க, மெய்ம்மையாகிய தமிழையுடைய பழைய மதுரைமாநகர வாசிகளெல்லாம் கண்முகிழ்த்து நித்திரை செய்தலை யொழிந் திரங்காநிற்க, தத்தமில் கூடி உடன்று தனித்தனி களித்து நின்று - தம்மிற்றாமே குழீஇப் பகைகொண்டு தனித்தனி செருக்குற்று நின்று எ—று.

குரலை நெடுங்குரலென விசேடித்தமையின் நரிக்குக் குறுமை வருவிக்கப் பட்டது. தமிழினது மெய்ம்மையை "தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்தது முதலை, யுண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக் கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித், தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்'' என்பதனானுமறிக. தினம்-பகல். மாலை-இரா. (சஅ)

வேறு.

நின்ற நின்ற நெடும்பரி யாளர்மேற்
சென்று வெம்பகை செய்து வெருட்டியே
துன்று கின்ற துரங்க மொருங்கொடு
கொன்று நின்றுயர் கூவிளிக் கொண்டவால்.

இ—ள்: நின்ற நின்ற நெடும் பரியாளர் மேல் சென்று வெம்பகை செய்து வெருட்டி - அந்நரிகளெல்லாம் ஆங்காங்கு நிற்கின்ற நெடிய குதிரைப் பந்திக் காவலாளர்மீ தெதிர்த்துச் சென்று வெவ்விய பகைவிளைத்து

அவரை யஞ்சுவித் தோட்டி, துன்றுகின்ற துரங்கம் ஒருங்கு கொன்று நின்று உயர் கூவிளிக் கொண்ட - நெருங்கிய பழைய குதிரைகளை யெல்லா மொருசேரக் கொன்று பின்பு கொல்லப்படுதற்குக் குதிரைக ளின்மையி னாலே வாளாநின்று பெருங் கூச்சலிட்டன எ—று.

அடுக்குப் பன்மைபற்றி வந்தது. ஒடு இசைநிறை. இது கலிவிருத்தம். ()

வரைசெய் கோபுர மாட நெருங்கிய
வரச வீதியு மாவண வீதியு
முரச வோசை முழக்கொழிந் தேமிகக்
குரைசெய் வாய்நரிக் கூக்குர லானதால்.

இ—ள்: வரை செய் கோபுரம் மாடம் நெருங்கிய அரச வீதியும் ஆவண வீதியும் - மலைபோலும் தோற்றப் பொலிவையுடைய கோபுரங் களும் மண்டபங்களுந் தம்முணெருங்கிய இராச வீதிகளினுங் கடைவீதி களினும், முரச ஓசை முழக்கு ஒழிந்து குரை செய் வாய் நரிக் கூக்குரல் ஏ மிக ஆனது - மும்முரசுகளின் பேரொலி அடங்கக் குரைக்கின்ற வாயை யுடைய நரிகளின் கூக்குரலே மிக்கது எ—று.

செய்யென்ப துவமவாசகம். ஓசை முழக்கென்பன தம்முட் சிறிது வேறுபாடுடைய ஒருபொருட் பன்மொழிகள். ஒழிய என்ப தொழிந்தெனத் திரிந்து நின்றது. மும்முரசு: கொடைமுரசு, வெற்றிமுரசு, மணமுரசு என் பன. ஓசையுமேனை முழக்குமெனப் பொருள்கோடலுமொன்று. (சஅ)

பாடி யாரணம் போற்ற மன்றிற்பயின்
றாடி யார்விளை யாட்டின் புதுமையா
லோடி யாரு மொளித்திட வென்றொரு
கோடி யானது கூவு நரிக்குழாம்.

இ—ள்: ஆரணம் பாடிப் போற்ற - வேதத்தின் ஞானகாண்டமாகிய உபநிஷத்துக்கள் தம் புகழைப் பாடிநின்று எட்டாமையினாலே துதிக்க, மன்றில் பயின்று ஆடியார் விளையாட்டின் புதுமையால் - வெள்ளியம்பலத் தின் கண்ணின்று இராசசேகர பாண்டியன் பொருட்டுத் திருவடி மாறி யாடியருளிய சோமசுந்தரக்கடவுளது திருவிளையாட்டின் விசேடத்தினாலே, கூவும் நரிக் குழாம் - ஊளையிடுகின்ற நரிக்கூட்டம், ஓடி யாரும் ஒளித் திட வென்று ஒரு கோடி ஆனது - ஓடி யெவரு மொளிக்கும்படி அவரை வென்று ஒரு கோடியாகப் பெருகிற்று எ—று.

புதுமையால் வென்று ஒரு கோடியானதென வுருபு முடிக்க. அல் லுழித் தாமெவர்க்கு மஞ்சி யோடி யொளிக்குங் குறுநரிகள் திருவிளையாட் டின் விசேடத்தான் ஈண்டுத் தமக்கெவரு மஞ்சி யோடி யொளிக்கும் வண் ணம் வெல்வனவாய் அபிவிருத்தியுமாயின வென்பது கருத்து. ஆரணம்- வேதத்தின் ஞானபாகை; எவருமென்றது அந்நகரவாசிக ளெவர்களையு மென்க. இனி ஒளித்திட என்று எனக் கண்ணழித்து, என்றென்பதை உண்ணவென்று உடுக்கவென்று வந்தான் என்புழிப் போலக் கொண்டு, ஓடி யெவரு மொளிக்குமாறு ஒரு கோடியாகப் பெருகிற்று எனக் கோடலு மாம். கோடி மிக்க பல்வற்றிற்கொன்று காட்டியவாறு. (சகூ)



துங்க மாறன் றொகுபடை வெங்கொலை
தங்கு மாயுதந் தாங்கி யெதிர்க்கவே
யெங்கு மான நரிகளெல் லாங்கொடுஞ்
சிங்க மாயமர் செய்யத் தொடங்குமால்.

இ—ள்: துங்க மாறன் தொகு படை வெம் கொலை தங்கும் ஆயுதம் தாங்கி எதிர்க்க - உத்துங்கம் பொருந்திய அரிமர்த்தன பாண்டியனது தொகுதியாகிய சேனைகள் வெவ்விய கொலைத் தொழில் குடிபுகும் பல வகைப் படைக்கலங்களைத் தாங்கி யெதிர்க்க, எங்கும் ஆன நரிகள் எல் லாம் கொடும் சிங்கம் ஆய் அமர் செய்யத் தொடங்கும் - அந்நகரெங்கும் பரந்த குறுநரிக ளெல்லாம் தனித்தனி கொடிய மிருகராசனாகிய சிங்கம் போன்று அச்சேனைகளோடு யுத்தஞ்செய்யத் தலைப்படும் எ—று.

ஆக்கம் உவமை குறித்து நின்றது. எங்குமான நரிக ளென்பதற்கு முன் வனமெங்குந் திரிந்த குறுநரிகள் என இழிபு தோன்றப் பொருள் கூறினும் பொருந்தும். உத்துங்கம் - உயர்ச்சி. (ருo)

நீடு வாடை யிடந்தொறு நின்றணி
கூடு வார்மிகக் கூவி வெருட்டுவா
ரோடு வாரொளித் தோடிப் புகுமிடந்
தேடு வாரெதிர் சென்றமர் செய்குவார்.

இ—ள்: கூடல் உளோர் எலாம் - நான்மாடக் கூடலாகிய மதுரை மாநகர வாசிக ளெல்லாம், நீடு வாடை இடம் தொறும் நின்று அணி கூடுவார் - நெடிய வீதிகடோறு நின்றுநின் றணியணியாகக் கூடுவாரும், மிகக் கூவி வெருட்டுவார் - அந்நரிகளினுந் தாமிகக் கூச்சலிட் டச்சுறுத்து அவற்றை யோட்டுவாரும், ஒளித்து ஓடுவார் - தாமவற்றிற்கஞ்சி யொளித் தோடுவாரும், ஓடிப் புகும் இடம் தேடுவார் - அங்ஙன மொளித்தோடிப் புகல் புகுமிடந் தேடுவாரும், எதிர் சென்று அமர் செய்குவார் - அவற்றிற் கெதிர் சென்று யுத்தஞ் செய்வாரும் எ—று.

எழுவாய் 'நற்றவச்செய னன்கிலதானதோ' என்னுஞ் பிற்செய்யுளினின் றும் வருவிக்கப்பட்டது. அணி - அணிவகுப்பு. வாடை - வீதி. (ருக)

எங்க ளாருயிர் காத்தரு ளின்றணி
திங்க ளாயெனத் தெய்வம் பராவுவா
ரங்க பாட மடைத்தரண் செய்குவார்
மங்கு லாடு மதிற்றலை யேறுவார்.

இ—ள்: அணி திங்களாய் - திருமுடியின்க ணணிந்த புனிற்றிளம் பிறையை யுடையவரே, இன்று எங்கள் ஆர் உயிர் காத்தருள் எனத் தெய்வம் பராவுவார் - இத்தினம் அடியேங்களது அரிய உயிரைப் பாது காத்தருளுமென்று தங்குலதெய்வமாகிய சோமசுந்தரக் கடவுளைப் பிரார்த்தித்து, அம் கபாடம் அடைத்து அரண் செய்குவார் - அழகிய கபாடபந்தனஞ் செய்து தம்மைக் காத்துக்கொள்வாரும், மங்குல் ஆடும் மதில் தலை ஏறுவார் - முகிலியங்கு மதிலுச்சியி லேறிக்கொள்வாரும் எ—று.

முன்னொருஞான்று தக்கனு விடருற்று வந்த சந்திரகலையைத் திருமுடியின்க ணணிந்து பாதுகாத்தமைபோல இத்தினம் நரிகளா விடருற்று வந்த அடியேங்களைத் தேவரீர் பாதுகாத் தருளுமெனப் பிரார்த்தித்தாரென்பார் "எங்களாருயிர் காத்தரு ளின்றணி திங்களா யெனத் தெய்வம் பராவுவார்" என்றார். கேட்க முத்திதருந் தலமாகிய திருவாலவாயிற் பிறக்கவும் வசிக்கவும் பெற்ற அத்துணை அரிய உயிரென்பது விளக்குதற்கு ஆருயிரென விசேடிக்கப்பட்டது. திருவாலவாய் கேட்க முத்திதருந் தலமென்பது. "அறந்தழையுந் திருவாலவாய் கேட்ட வுடன் போக மளிக்கு மீண்டு, பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கும்" என்பதனானு மறிக. கபாடம்-கதவு. உட்புகுந்தோரை இடருறாது காக்கும் வலியையுடைய கபாடமென்பார் அங்கபாட மென்றார். பராவுவா ரென்னும் முற்றை எச்சமாக்கி ஈண்டும் முற்செய்யுளினுந் தனித்தனி கூட்டுக. (ரு௨)

நற்றவச் செய னன்கில தானதோ
கொற்றவன் செய்ய கோல்கொடி தானதோ
விற்றிதன் பய னென்னென வின்னண
முற்றிரங் கினர் கூடலு ளோரெலாம்.

இ—ள்: நல் தவச் செயல் நன்கு இலது ஆனதோ - நல்ல தவத் தொழிலானது நந்தேயத்து மிகவு மில்லா தொழிந்ததோ, கொற்றவன் செய்ய கோல் கொடிது ஆனதோ - அல்லது வெற்றியையுடைய நம்மரசனது செங்கோல் கொடுங்கோ லாயிற்றோ, இற்றிதன் பயன் என் என இன்னணம் உற்று இரங்கினர் - பரி நரியாக உருத்திரிந்த இதனது தாற்பரிய மென்னையோவென்று வியாகுலமுற் றிரங்கினார்கள் எ—று.

இற்றிதென்ப தொருசொன் னீர்மைத்து. இன்னவண்ண மென்பது இன்னணமென மரீஇயிற்று. நன்கு - மிகுதி. மிகவு மின்மை - முழுவது மின்மை. (ருரு)



தூய வன்றுர கத்தொழி லாளர்கள்
கோயிலின் கடைக் கூக்குரல் செய்துபோய்
மாய வெம்பரி வந்தவெ லாநரி
யாய வென்றர சற்கெதிர் கூறினர்.

இ—ள்: தூய வன் துரகத் தொழில் ஆளர்கள் கோயிலின் கடைக் கூக்குரல் செய்து போய் - சுத்தமாகிய வலிய குதிரைகளைக் காக்குங் காவலாளர் அப்பொழுது இராசமாளிகையின் வாய்தலில் அரசனை விளித் தாரவாரஞ் செய்து போய், மாய வந்த வெம் பரி எலாம் நரி ஆய என்று அரசற்கு எதிர் கூறினர் - பகலில் இங்ஙனம் மாயமாக வந்த வெவ்விய குதிரைகளெல்லாம் இப்பொழுது நரிகளாயினவென்று அரசனுக் கெதிர் சென்று நின்று விண்ணப்பஞ் செய்தார் எ—று.

குதிரைக்குச் சுத்தம் அசுவலக்கண நூலில் விதிக்கப்பட்டன வுண்மையும் விலக்கப்பட்டன வின்மையுமாம். இதுபொழுது நரிகளானமையினுலே முன் மாயமாக வந்த குதிரைகளென்பது அறியப்படுமென்பார் மாயவெம்பரி வந்தவெலா மென்றார். (ருச)

மாக்க ளோசையும் வாம்பரி யோசையுங்
கூக்கு லாவு குறுநரி யோசையு
மீக்கொண் மாமுடி மீனவன் றன்செவித்
தீக்கொண் வேலைச் செருகிய தொத்தவே.

இ—ள்: மாக்கள் ஓசையும் - அந்நகரத்து மனிதர்களது ஆரவாரமும், வாம் பரி ஓசையும் - தாவுகின்ற குதிரைகளின் ஆரவாரமும், கூக்குலாவு குறு நரி ஓசையும் - ஊளையிடுகின்ற குறு நரிகளினது ஆரவாரமும், மீக்கொள் மாமுடி மீனவன் செவித் தீக் கொள் வேலைச் செருகியது ஒத்த - சிரசின் மீது கவிக்கின்ற பெரிய முடியை யுடைய பாண்டியனது செவித் துவாரங்களிலே அக்கினியிற் பழுக்கக் காய்ச்சிய வேலைச் செருகியது போல மிக வருத்தின எ—று.

கூக்குரல் குலாவுமெனற்பாலது கூக்குலாவெனக் கடைக் குறைந்து நின்றது. மீ ஆகுபெயர். மாக்களோசை யெனவே மேலைச் செய்யுளிற் கூறிய காவலாள ரோசையு மடங்கிற்று. ஈண்டு வாம்பரி யென்றது நரிகளாற் கடியுண்டு கொல்லப்படா தெஞ்சிநின்ற பழைய குதிரைகளை; முன்னர்த் துன்றுகின்ற துரங்க மொருங்கொடு கொன்றென்பது கமுகந்தோட்டமென்றாற் போல மிகுதிபற்றிக் கூறிய கூற்றாகலின் மாறுகொளக் கூறலன்றென்க. அவ்வோசைகண் மூன்றுஞ் செவி வாயிலாக உட்சென்று அரசனை மிகவும் வருத்தினவென்பார் மீனவன்றன் செவித் தீக்கொள்

வேலைச் செருகிய தொத்த என்றுவமை முகத்தான் விளக்கியொழிந்தார். மீக்கொண் மாமுடி என்பதற்கு இராசசின்ன மிருபத்தொன்றி னுள்ளும் மேற்பட்ட முடியெனினு மமையும். அவை மேலே காட்டப்பட்டன. குறுநரி சாதியடை. (ருரு)

இந்த வாறொலி கேட்டிரு கண்டழல்
சிந்த வாகஞ் சிறுவெயர்ப் பெய்திட
வந்த மாறன் வெகுட்சிகண் டண்ணலார்
வந்த மாய நரிப்படை மாற்றினார்.

இ—ள்: இந்த ஆறு ஒலி கேட்டு - இந்தப்பிரகாரம் அவ்வொலிகளைக் கேட்டு, இரு கண் தழல் சிந்த ஆகம் சிறு வெயர்ப்பு எய்திட அந்த மாறன் வெகுட்சி அண்ணலார் கண்டு - இரு கண்களும் அக்கினிப் பொறி சிதறச் சரீரம் குறுவெயர்வை கொள்ள அவ்வரிமர்த்தன பாண்டியன் பெருங் கோபமுறுதலைச் சோமசுந்தரக் கடவுள் திருக்கண் சாத்தி, மாயம் வந்த நரிப்படை மாற்றினார் - வனத்தினின்று மாயமாக வந்த நரிப்படைகளை மாற்றியருளினார் எ—று.

இந்தவாறென ஈண்டுச் சுட்டியது மேலைச் செய்யுளிற் பெறப்பட்ட செவித் தீக்கொள் வேலைச் செருகியதொப்ப வருத்தியவாற்றை யென்க. ஆகம் மார்பெனினு மமையும். இந்நரிகள் முன் குதிரையாய் வந்தமையின் அவற்றைப் படையென்றார். (ருசு)

பொன்கொ ணாடன் புனைந்த நலந்திகழ்
மின்கொ ளாரம் விளங்கிய மார்பினான்
றன்க ணாகி நடப்பவர் தண்டல்செய்
வன்க ணாளரை வம்மெனக் கூவினான்.

இ—ள்: பொன் கொள் நாடன் புனைந்த நலம் திகழ் மின் கொள் ஆரம் விளங்கிய மார்பினான் - சுவர்க்கலோகாதிபனாகிய இந்திரன் ஓர் வினையம்பற்றிக் கொடுவந்து தரித்த அழகு விளங்கும் ஒளி செறிந்த பதக்கம் அவ்வினையமற்றுப் பிரகாசியாநின்ற மார்பையுடைய பாண்டியனானவன், தன் கண் ஆகி நடப்பவர் தண்டல் செய் வன்கணாளரை வம்மெனக் கூவினான் - தனக்குத் தன் கண்போன் றின்றியமையா தொழுகுபவராகிய வன்கண்மையை யுடைய தண்டலாளரை ஈண்டு வம்மின்களென் றழைத்தான் எ—று.

வம்மினெனக் கூவினா னெனற்பாலது ஈண்டு முன்னிலைப் பன்மை விகுதி புணர்ந்து கெட்டு வம்மென நின்றது. "அது" செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற், செய்யென் கிளவி யாகிட னுடைத்தே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்து மொழிந்த பொருளோ டொன்ற வவ்



வயின் மொழியா ததனைய முட்டின்றிமுடித்த லென்னுந் தந்திர வுத்தியாற் கொள்க. நலம்-அழகு. வினையம்-உபாயம். அஃதாவது: முந்தொர்நாண் மூவிரு முகமுடை முதல்வன், வந்து தென்பாண்டி மதுரைமா நகர்வயின், உக்கிர பாண்டியனெனுந் திருநாமமெண், டிக்கினும் வானினுஞ் சிவண வீற் றிருந்துழிக், கோணிலை திரிதலிற் கொண்மூ நிலைதிரிந், தாண்டுபன் னிரண்டுகா றவனிதீந் தழலெழ, மாண்டகு சிறப்பின் மாமழை மறுத்தலும், புவியுறு முயிர்பசி பொறு துகொந்திறுவது, செவியுற யாதுநாஞ் செய்வதிங் கினியெனத், தத்தமிற் சாலவுந் தளர்வுறு நிலைமைகொண், முத்தமிழ்நாட்டு மூவேந்தருங் குழீஇ, யருந்தமிழ்க் கிலக்கண மமலனன் றருளப், பொருந்திய முனிவரன் பொன்னடி வணங்கி, மாமுகில் வறங்கூர் வண்ணமும் புகன் றிது, தீர்திறமெந்தை தெரித்தருள் செய்யென, மாகநாயகமொடு மகநாயகமு, மேகநாயகமுமிம் மேதினியரசர்க், கேகநாயகமு மிந்திரனுடைமையிற், போகநாயகனும் புரந்தரற்காணுமா, றேகநுங்கவலைவிட் டேகுமேகு வதுஞ், சோமவார விரதநீர் தொடங்குறிற், சோமசுந்தரன் றொல்போருளி, னருகுமென் றவ்விர தத்தையாகமநெறி, நோற்றிடுமாறு நுவன்றிடு குறுமுனி பாற்பெறுவிடைகொடு படருமுப்பதிகளு, முப்பெருஞ் சங்க வைப்பிடைக் குறுகி, யம்பலத் தமுதின் செம்பொனா ரடிதொழு, தவாவொடவ்விரதந் தவாதநுட்டித்தலும், விண்டலத்தும்பரவ் விரதநற்பலமாஞ், சண்டமாரு தந்தமைக் கொண்டுபுக்கெறிதலின், போகிமுன் போகிப் புகுமுன் புரந் தரன், றன்னரியணையிற் றாழ்வுறத் தவிசுமூன், றன்னவர்க்கிடுவித் தாங்கினி திருப்பவச், சேரனுஞ் சோழனுஞ் சென்றரிசுட்டிய, சீரியவாசனந் திகழ வீற்றிருந்துழி, யுக்கிர பாண்டிய னுவன்கீ ழிருப்பது, தக்கதன் றெனக் கெனத் தானவன் றவிசிடைப், புக்கவனொடுசமம் பொலியவீற் றிருந்தனன், கௌசிகனுங்கது கண்டுகட்பொறிதீச், சிதறமற்றிருவரைச் செவ்விதினோக் கிநீர், வந்ததென்வேண்டும் வரமென்வழங்குது, நொந்துளங் கவல்கிலீர் நுவலுமென் றுசவலு, முச்சுடர்க் குலத்து முதலிரு குலத்தரும், வச்சிரக் கரன்சொல் வாசகம் வினவி, யாறிரு வற்சரங் கோள்வழுக் குறுதலின், மாரி பொய்த்துலக மம்மருற்றயருங், காரியம் யாவதுங் கழறிதின்கண்ணருட், பேறலாதிலையிதெம் பெருமநம் வரவென, முடிவயின் மூன்றுகொண் முப்பது கோடி, வடிவமை சுரர்க்கொரு வாழ்வெனும் வலாரிகேட், டடைந்தவர்க் குதவலி னறம்பிறி திலாமை, சிறந்திடுதீசிபாற் றுன்முனந் தெளிதலி, னிங்கிவர்க்குதவ வினிதென மதித்துநம், மல்லனீர் மலைநாட் டெல்லைகுழகவயின், மாதமும்மாரி வழாதுவான் பிலிற்றுமென், றோதலுஞ்செலவுபெற் றொருவியவ்விருவரும், பூதலம் மழைவளந் தம்மொடும் புக்கனர். ஈதுநின் றிடவிருந் தவிசிருந் தவனுயிர், காதலேபொருளதாக் கடவுளர்க் கரசனு, மணிதரின்னெவரையு மாருயிர் கவருமோர், திணிதரும் மாரமே திண்ணி திற் கைக்கொளா, வந்துநம்முக்கிர வழுதிகந்தரமதிற், றந்துசன்மானியிற் றனவணிற்றலு, மீரமொன்றின்றியவ் விந்திரன்னணிதரு, மாரமோவெந்

தையை யடுவதாரறிகிலார், விண்டுநீள்சக்கரம் வீரமார்தாரகன், கண்டமே கொண்டவா கவிஞெடங்குற்றதாற், காரணம் மதுகொடெங் கடவுணீ ருலகிடை, யாரமேதாங்கு பாண்டியனெனலாயினு. னங்கவன் றன்வழித் தோன்றலா யமர்தவி, னிங்கிவன் னங்கவன் னியல்பு கோட்பட்டனன், வினையமிங்கிஃதெனு விடுகவிண்மீனள, வனையதொன்றுவதோ வறுமுகன்னுடலே. ()

வேறு.

நரியினிற் றொகுதி யெல்லா நற்பரித் திரள்க ளாக்குஞ்
சரிதியைக் கொணர்தி ரென்னத் தாடொழு தவர்க ளோடி
யிருபிறப் புடைய ராகி யினிப்பிறப் பில்லார் தம்மை
விரைவினிற் குறுகி நும்மை யழைத்தனன் வேந்த னென்றார்.

இ—ள்: நரியினில் தொகுதி எல்லாம் நல் பரித் திரள்கள் ஆக்கும் சரிதியைக் கொணர்திர் என்ன - அவ்வரசன் அத்தண்டலாளரை நோக்கி நரியினது கூட்டங்களை யெல்லாம் நல்ல குதிரைக் கூட்டங்களாகத் திரித்த படிற்றொழுக்கத்தை யுடைய நம் முதன்மந்திரியை ஈண்டழைத்துக் கொடு வருக வென்று பணிப்ப, அவர்கள் தாள் தொழுது ஓடி இரு பிறப்பு உடையர் ஆகி இனிப் பிறப்பு இல்லார் தம்மை விரைவினில் குறுகி - அவர்கள் அவ்வரசனது பாதங்களைவணங்கி விரைந்து சென்று, உபநயனத்துக்கு முன்னொருபிறப்பும் பின்னொரு பிறப்புமாகிய இரு பிறப்புடையராகி இனி ஒரு பிறப்புமில்லாத திருவாதவூரடிகளை விரவினடைந்து, வேந்தன் நும்மை அழைத்தனன் என்றார் - நம்மரசன் நும்மை அழைக்கின்றான் என்று விண்ணப்பஞ் செய்தனர் எ—று.

சரிதம் - ஒழுக்கம். ஈண்டுப் படிற்றொழுக்கின்மேற்றென்பது விளக்குதற்கு நரியினிற் றொகுதியெல்லாம் நற்பரித் திரள்க ளாக்குஞ் சரிதி என விசேடிக்கப்பட்டது. நரியினிற் றொகுதி என்புழி ஆறனுருபின் கிழமைப் பொருள் ஏழனுருபோடு தகுதிபற்றி வந்தது: உயிரி னுணர் வென்புழிப் போல. இது அறுசீரடியாசிரியவிருத்தம். (ருஅ)

சித்தருக் கன்பு பூண்ட சித்தரு முறுவல் செய்து
நித்திலத் தொளிபோன் மின்னு நீறெனுஞ் சாந்து பூசிப்
பத்தருக் கேவல் செய்வார் பதமலர் முடியிற் சூடி
முத்தமிழ்ப் பொருநை நாடன் முன்பு சென்றருகு நின்றார்.

இ—ள்: சித்தருக்கு அன்பு பூண்ட சித்தரும் முறுவல் செய்து - எல்லாம் வல்ல சித்தராகிய சோமசுந்தரக் கடவுண்மாட் டன்பு பொருந்துஞ் சித்தத்தையுடைய திருவாதவூரடிகளும் அதுகேட்டுத் திருப்புன்முறுவல்



செய்து, நித்திலத்து ஒளி போல் மின்னும் நீறு எனும் சாந்து பூசி - முத்தினது ஒளியைப் போல வெண்ணிறம் பிரகாசிக்கும் விபூதியாகிய அங்கராகத்தைப் பூசி, பத்தருக்கு ஏவல் செய்வார் பத மலர் முடியில் சூடி - தம் மெய்யன்பருக் கெளியராகி அவர் பணி செய்வாராகிய சோமசுந்தரக் கடவுளினுடைய பாததாமரைகளைச் சிரசில் வைத்து வணங்கி, முத்தமிழ் பொருநை நாடன் முன்பு சென்று அருகு நின்றார் - முத் தமிழ் வழங்கும் தாமிரபர்ணி நதி பிரவாகிக்கும் நாட்டையுடைய அரிமர்த்தன பாண்டியனுக் கெதிர்சென்று பக்கத் தொதுங்கி நின்றார் எ—று.

முத்தமிழ்நாடு பொருநைநாடெனத் தனித்தனி கூட்டுக. சித்தரென்பவற்றுட் பின்னையதற்குச் சேதனரெனப் பொருள்கொள்வாருமுளர். தம் பொருட்டு நரி பரியாக்கிய சிவபெருமானால் மீளப் பரி நரியாக்கப்படுமெனவும், அதுபற்றி அரசனுக்குத் தம்மாட்டு வெகுளி நிகழுமெனவும், அவ் வெகுளிபற்றித் தண்டத் தலைவரைத் தம்மாட் டனுப்புவனெனவும், அது பற்றித் தமக்கு வருவதோர் கேடின்றெனவும், வரினும் விரைந்தெதிர் நின் றவரே நீக்கியருளுவா ரெனவும் தாம் முன்றொடர்புபட உத்தேசித்திருந்த பிரகாரமே பின் நிகழ்கின்றனவெனத் திருவாதவூரடிகள் தம்முட் சிரித்து மகிழ்ந்தாரென்பார் சித்தருக் கன்புபூண்ட சித்தரு முறுவல் செய்தென்றும், கருநிற விபூதியுஞ் செந்நிற விபூதியும் புகைநிற விபூதியும் பொன்னிறவிபூதியுந் தரிக்கத் தகாவென விலக்கப்பட்டமையின், வெண்ணிற விபூதியொன்றே தரிக்கத் தகுமென்பதுபற்றி அதனை நித்திலத்தொளி போன் மின்னு நீறென விசேடித்தும், புறத்தே செல்வார் விபூதி தரித்தே செல்லவேண்டு மென்பது சமய சம்பிரதாயமாகலின் அங்ஙனமே செய்தாரென்பார் நீறுபூசியென்றும், அந்நீறே இவ்வடிகட்கு இராச சமுகஞ் செல்வோர் தரிக்கும் பரிமள திரவியமுமெனக் கொள்ளற் பாலதென்பார் அதனை நீறெனுஞ் சாந்தென உருவகித்தும், சிவபெருமான் தம் மெய்யன்பருக் கெளியராய் அவர்க்குத் தம்மை யின்றியமையாத ஏவல்கள் செய்தொழுகுபவ ராகலின் அவ்வாறே இனித் தமக் கரசனாற் றண்ட நிகழும்வழித் தமக் கெளியராய் வந்து தம்மைத் தவறாது பாதுகாப்பாரெனச் சிந்தித்து அவரை முன்னர் ஆலயத்து வணங்கிக்கொண்டே பின் அரசன் முன் சென்றாரென்பார் பத்தருக்கேவல் செய்வார் பதமலர் முடியிற் சூடி முத்தமிழ்ப் பொருநை நாடன் முன்புசென் றென்றும், அரசனுக்கெதிரே சபைக்கு மத்தியி னில்லாது சபைக்கேற்ப ஒருபக்கத்தொதுங்கி நின்றார் என்பார் முன்பு சென்றருகுநின்றா ரென்றுங் கூறினார். இனித் திருவாதவூரடிகள் சட்காலத்தும் அந்தரியாக பூசை செய்பவராகலின், அதுபற்றிப் பத்தருக் கேவல் செய்வார் பதமலர் முடியிற் சூடி என்றாரெனினுமமையும். அடிகள் என்றும் சட்கால பூசை செய்தமையை, "எழுதரு மறைக டேறா விறைவனை யெல்

விற் கங்குற், பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்தே, தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி, யழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம்" என வழிநூலாசிரியர் கூறியவாற் றானுமறிக. அங்கராகம் - பூசும் பரிமள திரவியம். (௫௯)

மூட்டெழு மழல்போன் மன்னன் முனிவுடை முகத்த னாகி
யீட்டுநம் பொருள்க ளெல்லா மிரப்பவர் தமக்கு நல்கி
நாட்டுள நரிக ளெல்லா நற்பரி யாக்கி நம்முன்
காட்டின ரிவர்செய் மாயங் கண்டிரோ வமைச்ச ரென்றான்.

இ—ள்: மன்னன் மூட்டு எழும் அழல் போல் முனிவு உடை முகத்தன் ஆகி - அப்பொழுது பாண்டியராசன் சுவாலித்தெழுகின்ற அக்கினி போலக் கோபம் பொருந்திய முகத்தையுடையவனாகி, ஈட்டு நம் பொருள்கள் எல்லாம் இரப்பவர் தமக்கு நல்கி - நாமும் நம் முன்னோரும் வருந்திச் சம்பாதித்த நந்திரவியங்களை யெல்லாம் நங் கருத்திற்கு மாறாகத் திருப்பெருந் துறையிலே யாசகர்க்குக் கொடுத்தொழித்து, நாட்டு உள நரிகள் எல்லாம் நல் பரி ஆக்கி நம் முன் காட்டினர் - இந் நாட்டின்கணுள்ள குறுநரிகளையெல்லாம் நல்ல குதிரைகளாக உருத்திரித்து நம்முன் கொடுவந்து இன்று பகற்பொழுது வஞ்சித்துக் காட்டினர், அமைச்சர் இவர்செய் மாயம் கண்டிரோ என்றான் - நம்மந்திரிகளே இவர் செய்த மாயவித்தையை நீங்கள் கண்டீர்களா என்று கடிந்து கூறினான் எ—று.

மூண்டெழு மழலெனற்பாலது மூட்டெழுமழலென வலிந்து நின்றது; மூட்டப்பட்டெழு மழல்போ லென்றுமாம். அமைச்சர் அண்மை விளி. அமைச்சிர் எனவும் பாடம். (௬௦)

தன்றொழில் வழுவி னோர்க டமக்குறு துயரஞ் செய்தல்
வன்றிற லரசர் நீதி யாயினு மறைவல் லாளர்
சென்றுயர் தவத்தி னிற்பார் தெரிவையர் விருத்தர் பால
ரென்றிவர்க் குறுகண் செய்வ தெம்மனோ ரியல்பன் றென்று.

இ—ள்: தன் தொழில் வழுவினோர்கள் தமக்கு - தமதுத்தியோக தருமத்தினின்றும் தவறிய அதிகாரிகட்கு, உறு துயரம் செய்தல் வன் திறல் அரசர் நீதி ஆயினும் - பெருந் தண்டஞ்செய்தல் மிக்க வலிமையை யுடைய அரசருக்கு நீதிநூற் றுணிபாயினும், மறை வல்லாளர் சென்று உயர் தவத்தில் நிற்பார் தெரிவையர் விருத்தர் பாலர் என்ற இவர்க்கு - வேதத்தில் வல்ல பிராமணரும் வனத்தின்கட் சென்று உயர்வாகிய தவவொழுக்கத்தினிற்கும் முனிவரும் பெண்களும் முதியவரும் சிறுவரும் என்று சொல்லப்படும் இவர்கட்கு, உறுகண் செய்வது எம்மனோர் இயல்பு அன்று



என்று - அப்பெருந் தண்டஞ் செய்வது நம்மனோர்க்குத் தகுதியன்றென்று அவ்வரசன் விதந்து கூறி எ—று.

தந்தொழில் எதுகை நோக்கித் தன்றொழிலெனப் பன்மை யொருமை மயக்கமாயிற்று. அது முன்னர் வழுவினோர்க டமக்கென்பதனானு மறிக. ஈண்டுத் தம்மென்ற தரசரை. நம்மனோர் இவர்கட்கு அதிக தண்டஞ்செய்யா ரெனவே அற்ப தண்டஞ் செய்வரென்பதூஉம் நாமும் அங்ஙனமே செய்வேம் என்பதூஉம் பெறப்பட்டன. இங்ஙனம் திருவாதவூரடிகளுக்கு அற்ப தண்டமே செய்யப்படுமாறு வருஞ் செய்யுளிற் காண்க. இவ்வாறு ஆற்றொழுக்காக ஆக்ஷேபத்திற் கிடனின்றிப் பொருள் கொள்ள வறியாதார் "மறைவல்லாளர் சென்றுயர் தவத்தி னிற்பார் தெரிவையர் விருத்தர் பால ரென்றிவர்க் குறுகண் செய்வ தெம்மனோ ரியல்பன்று" ஆயினும், "தன் றொழில் வழுவினோர்க டமக்குறு துயரஞ் செய்தல் வன்றிற லரசர் நீதி" எனக் கொண்டுகூட்டிப் பொருள்கொண்டு, இடர்ப்படுப. அங்ஙனங் கொள்ளின், அரசனுக்குத் தம்மவர் நீதியோடு தன்னீதி முரணுதலானும், வருஞ் செய்யுள் திருவாதவூரடிகளுக்கு அற்ப தண்டமே யல்லது அதிக தண்டம் விதியாமையானும் துயரமென்னாது உறுதுயரமென்றது நின்று வற்றுதலானும் பிறவாற்றானும் அது பொருளன் றென்க. அதிக தண்டம் விலங்கு பூட்டிச் சிறைசெய்தன் முதலியன. அற்ப தண்டம் உபாத்தியாயர்கள் மாணாக்கர்களுக்குச் செய்யுந் தண்டம்போல்வன. அதனை வருஞ் செய்யுளிற் காண்க. ஈண்டுக் கூறிய ஐவருள்ளும் திருவாதவூரடிகள் மறைவல்லாளராகலின், அவரை முன் வைத்தார் என்க. (௬௧)

தண்டல்செய் வன்க ணாளர் தங்களை நோக்கி நங்கண்
கண்டிட முன்னில் லாமற் கடிதினி லிவர்க்கொண் டேகி
மண்டழல் வெயிலி னூடு வளைப்பினி னிறுத்தி நம்பாற்
கொண்டுள தனங்க ளெல்லாங் குறைவற வாங்கு மென்றான்.

இ—ள்: தண்டல் செய் வன்கணாளர் தங்களை நோக்கி - வன்கண்மையை யுடைய தண்டத்தலைவர்களை அரசனோக்கி, நம் கண் கண்டிட முன் நில்லாமல் கடிதினில் இவர்க் கொண்டு ஏகி - நங்கண் காணுமாறு நம்முன் னில்லாமல் விரைவாக இவரை அப்பாற் கொடுசென்று, மண்டு அழல் வெயிலின் ஊடு வளைப்பினில் நிறுத்தி - சுவாலிக்கின்ற அக்கினிபோலும் வெய்யிலிலே கோட்டின்க ணிறுத்தி, நம்பால் கொண்டுள தனங்கள் எல்லாம் குறைவு அற வாங்கும் என்றான் - நம்மாட் டபகரித்த திரவியங்களையெல்லாம் முழுவதும் வாங்குங்களென் றாஞ்ஞாபித்தான் எ—று.

முன் இல்லாமலெனக் கண்ணழித்துரைப்பினு மமையும். கண் கண்டிட முன்னிற்கின் முன்னைப் பயிற்சிபற்றியும் வருணம்பற்றியும் கண்ணோடி

இடையே பரிகரித்தல்வேண்டும். வேண்டவே, திரவிய மொருங் கிழத்தல் பயனு மாகலின் நங்கண் கண்டிட முன்னில்லாமற் கடிதினி லிவர்க் கொண் டேகி என்று னெனக. (௯௨)

வன்றிற லேவ லாளர் மற்றவர் தமைக்கொண் டேகி
யொன்றிய வளைப்பி னூடு நிறுத்தலு முலகோர் போற்று
நன்றிகொள் வாத வூரர் நரியெலாம் பரிக ளாக்கித்
தென்றிசை நிருபற் கீந்த சித்தரை நினைந்து சொல்வார்.

இ—ள்: வன் திறல் ஏவலாளர் அவர்தமைக் கொண்டு ஏகி ஒன்றிய வளைப்பின் ஊடு நிறுத்தலும் - மிக்க வலியையுடைய ஏவலாளர்கள் அத்திருவாதவூரடிகளைக் கொடுசென்று இருதலையுந் தம்முளொன்றிய கோட்டினுண் ணிற்பச்செய்தலும், உலகோர் போற்றும் நன்றிகொள் வாதவூரர் - இந்நிலவுலகத்தவர் துதிக்கும் நன்மையையுடைய திருவாதவூரடிகள், நரி எலாம் பரிகள் ஆக்கித் தென் திசை நிருபற்கு ஈந்த சித்தரை நினைந்து சொல்வார் - வனத்தின்கணுள்ள நரிகளையெல்லாங் குதிரைகளாக்கித் தென்றிசைக் கரசனாகிய அரிமர்த்தனபாண்டியனுக்குக் கொடுத்த மாய வித்தையை யுடைய சோமசுந்தரக்கடவுளைத் தியானித்து இங்ஙனம் விண்ணப்பஞ் செய்வாராயினர் எ—று.

மற்று அசை. உலகோர் போற்று நன்றி சமயகுருத்துவம். அதுவனைச் சமயிகளாலுந் துதிக்கற்பாலதொன்றாகலின் உலகோரெனப் பொதுப் படக் கூறினர். (௯௩)

தொல்லையோ ரிருவர் தேடுஞ் சோதியே யாது செய்வேன்
றில்லையோர் பரவ நின்ற தெய்வமே யாது செய்வே
னில்லையோ கருணை நின்பா லின்றெனை யடிமை கொண்டா
யல்லையோ தமியே னின்ன லறிதியோ வறிந்தி லாயோ.

இ—ள்: தொல்லையோர் இருவர் தேடும் சோதியே யாது செய்வேன்- பிரம விஷ்ணுக்களாகிய பழையோ ரிருவராலுந் தேடி யறியப்படாத செஞ் சோதிவடிவை யுடையவரே தமியே னிதற்கு யாது செய்வேன், தில்லையோர் பரவ நின்ற தெய்வமே யாது செய்வேன் - தில்லைவா ழந்தணர் வழிபடச் சதாகாலமும் நிருத்த தரிசனங் கொடுத்துக் கனகசபையின்கணின் றருளுகின்ற சுவாமீ தமியே னிதற்கு யாது செய்வேன், கருணை இன்று நின் பால் இல்லையோ - தேவரீரோடு அபின்னமாகிய திருவருள் இன்று தேவரீர் மாட் டில்லா தொழிந்ததோ, எனை அடிமைக் கொண்டாய் அல்லையோ - அல்லது தமியேனை அடிமைக்கொண்டீ ரல்லீரோ, தமியேன் இன்னல் அறிதியோ அறிந்திலாயோ - சர்வஞ்ஞதையுடைய தேவரீர் தமியேனது இத் துன்பத்தை அறிந்தீரோ அல்லது அறியாதொழிந்தீரோ எ—று.



எத்துணைப் பெரியராயினும் அன்பரல்லாதார்க் கரியராய் மிகச் சேய்மைக்கண்ணும், அஃதுடையார் எவராயினும் அவர்க் கெளியராய் மிக அணிமைக்கண்ணும் நிற்பவர் என்பது போதரத் தொல்லையோ ரிருவர் தேடுஞ் சோதியே என முன் விளித்தவர் பின் றில்லையோர் பரவ நின்ற தெய்வமே என விளித்தாரெனக. தேடுமென்பது ஈண்டுக் குறிப்புமொழியாய்த் தேடி யறியப்படாமை யுணர்கின்றது. "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே, யுடம்போ டுயிரிடை நட்பு" என்புழி நட்பென்பதுபோல. இனித் தொல்லையோர் என்பதைத் தொல்லை ஓர் எனக் கண்ணழித்து முன்னொரு காலத்திலென் றுரைத்தலுமாம். இன்னும் ஓரிருவர் என்புழி ஓரென்பது இருவரென்பதன் பகுதியை விசேடித்து நின்றதென்றலு மொன்று. (௯௪)

பரித்திர ணரியே யான பான்மைகண் டடியேன் றன்னை
வருத்தின ரிதனை மாற்ற வல்லநீ வாரா யென்னிற்
றரித்தனை விடத்தை யென்னுந் தன்மையும் புரங்கண் முன்னு
ளெரித்தது மென்கொ லோவென் றிரங்கின ரெவர்க்குமிக்கார்.

இ—ள்: பரித் திரள் நரியே ஆன பான்மை கண்டு அடியேன் தன்னை வருத்தினர் - தேவரீர் கொடுவந்து நல்கிய குதிரைக்கூட்டங்கள் பின் நரிகளாய்ப் பிறிதுபட்டதன்மையைக்கண் டரசனை யுள்ளிட்டோர் தமியேனை வருத்துகின்றனர், இதனை நீக்க வல்ல நீ வாராய் என்னில் - இவ்வருத்தத்தை நீக்க வல்ல தேவரீர் எழுந்தருளி வந்து திருவருள்சுரவா தொழிதிராயின், விடத்தை முன்னாள் தரித்தனை என்னும் தன்மையும் புரங்கள் எரித்ததும் என்கொலோ என்று - ஆலகாலவிஷத்தைத் திருக்கண்டத்திலே முன் றரித்தருளினீரென்னும் விசேடமும் முப்புரதகனஞ் செய்ததும் அடியாரைப் பாதுகாக்கும்பொருட் டல்லது வேறெதன்பொருட்டோ வென்று விண்ணப்பஞ் செய்து, எவர்க்கும் மிக்கார் இரங்கினர் - நால்வகைப் பக்குவிக ளெவரினு மிக்க திருவாதவூரடிகள் புலம்பினர் எ—று.

ஏனைத் திருத்தொண்டர்கட்குப்போல வேறு வேறு பிரகாரமாக வன்றிக் கைலாசபதி நேரே ஆகமவிதிப்பிரகாரம் ஞானதேசிக வடிவங்கொண் டெழுந்தருளிவந்து ஞானோபதேசஞ் செய்யப்பெற்ற மகானாகலின் நால் வகைப் பக்குவிகளுக்குந் திருவாதவூரடிகள் சிறந்தவரென்பார் எவர்க்கு மிக்கா ரென்றார். நால்வகைப் பக்குவம் மேலே காட்டப்பட்டன. (௯௫)

நன்றிகொள் கடவுட் கங்கை நதியினை வைகை யூடு
சென்றெழில் வாத வூரர் பேரிடர் தீரென் றேவி
யன்றொரு மடந்தைக் காளா யடியவர்க் கெளியார் கொன்றை
துன்றிய முடியின் மேன்மண் சுமந்தது முரைத்தல் செய்வாம்.

இ—ள்: அடியவர்க்கு எளியார் - திருவாதவூரடிகளது பிரலாபசாரத்தைத் திருச்செவிசாத்தியருளிய அடியவர்க் கெளியவராகிய சோமசுந்தரக் கடவுளானவர், கடவுள் நன்றி கொள் கங்கை நதியினை வைகை ஊடு சென்று எழில் வாதவூரர் பேர் இடர் தீர் என்று ஏவி - தெய்வத்தன்மை பொருந்திய நன்மையினையுடைய கங்காநதியை வைகைநதியின்கட் சென்று திருவாதவூரடிகளது பெருந் துன்பத்தை நீக்கக்கடவையென்று முன்னர் அனுப்பிவிட்டு, அன்று ஒரு மடந்தைக்கு ஆளாய் கொன்றை துன்றிய முடியின் மேல் மண் சுமந்ததும் உரைத்தல் செய்வாம் - அத்தினத்து வந்தியென்னு மொரு பெண்ணுக்குக் கூலியாளாகிக் கொன்றைமாலை பொருந்திய திருமுடியின்மீது மண்சுமந்த சரித்திரத்தையும் யா மிங்ஙனங் கூறுவாம் எ—று.

கங்கைக்குத் தெய்வத்தன்மைபொருந்திய நன்மையாவது அது தன்கட் பதிந்த சிவசத்திவலத்தான் விதிப்படி தன்னிடத்து ஸ்நானஞ்செய்தவரது பாவத்தை விமோசனஞ்செய்து புண்ணியபுருஷராக்கி மறுமையிற் றேவகதியின்கட் செலுத்துதலும், வீடுபேறு பயத்தலுமாம். பேரிடர் அநுபவிப்பவரது மென்மைக்குப் பெரிதாயுள்ள இடர். நின்றுற் பெயர்க்கத்தகுமிடரென்றுமாம். இம்மண்சுமந்த திருவிளையாடல் மேற் பாயிரத்துக் கூறிய வழியினது ஒழிபாய், வந்தியின் பேற்றையு மினிது விளக்கி, நுதலிய பொருட் கின்றியமையாது நிற்றலின், இதுவும் இங்ஙனம் ஒருதலையாற் சொல்லற்பாலதாயிற்றெனத் தோற்றுவாய் செய்வார் அதுதோன்ற இறந்தது தழீஇய வெச்சவும்மைகொடுத்து மண்சுமந்தது முரைத்தல்செய்வாம் என்றார். இது புராணிகர் கூற்றென்க. (சுசு)

குதிரையிட்டசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உசக.

திருச்சிற்றம்பலம்.

---

௳

## மண்சுமந்த சருக்கம்.

தங்கிய வருளின் மிக்கார் தாம்படு மிடும்பை யுன்னி
யங்கண ரவன்பா லுற்ற வருந்துய ரகற்று கென்று
கங்கையை விடுப்ப வேகிக் கடும்பெருக் கெடுத்து வைகைப்
பொங்கலைப் புனலா யெங்கும் புரண்டது புணரி யேபோல்.

இ—ள்: அங்கணர் தங்கிய அருளின் மிக்கார் படும் இடும்பை உன்னி - அருட்கண்ணையுடைய சிவபெருமானவர் பொதுத் தருமங்களு ளொன்றாகப் பொருந்திய கிருபையினுன் மேம்பட்ட திருவாதவூரடிகள் அனுபவிக்குந் துன்பத்தைத் திருவுளத்தடைத்து, அவன்பால் உற்ற அரும் துயர் அகற்றுகென்று கங்கையை விடுப்ப - அத்திருவாதவூரனிடத்துப் பொருந்திய சகித்தற்கரிய பெருந்துன்பதை நீக்கக் கடவையென்று பணித்துக் கங்காநதியையனுப்ப, ஏகிக் கடும் பெருக்கெடுத்து வைகைப் பொங்கு அலைப் புனலாய் - அது சென்று மிகப் பெருக்கெடுத்துத் திரைமறிகின்ற நீரையுடைய வேகவதியாய், புணரிபோல் எங்கும் புரண்டது - (முன்னொருஞான்று வருணன் மதுரைமேல்விட்ட) கடலைப்போல எங்கும் புரட்டெடுத்தது எ - று.

தாமென்பது கட்டுரைச்சுவைக்கண் வந்தது. குச் சாரியை; தன்மையொருமை விகுதி யெனக் கொண்டு, நீக்குவேனெனப் பொருளுரைத்தலுமொன்று. மூடிவில் எவ்வாற்றானும் சமுத்திரமாகிய தங்கணாயகனிடத்துச் சென்று வைகும் ஏனை நதிகள்போலாகாது என்றும் நிலவலயத்து வைகுவதொன்றாகலின் வைகையெனப் பெயர்பெற்றதென்க; வேகத்தையுடையதாகலின் வைகையாயிற்றென்பாருமுளர். பொதுத் தருமங்கள் கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை நயவாமை, வரைவின் மகளிர் நயவாமை, கிருபை, வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தந்தை தாய் முதலிய பெரியோரை வழிபடுதன் முதலியன. (க)

சேர்ந்தவெண் முத்த மூரல் செய்துநீர்க் கலைமே லார்த்துக்
காந்தளஞ் செங்கை வீசிக் கனதனக் குரும்பை காட்டி
மாந்தளிர்ப் பதங்கண் மீது வருதிரை ஞெகிழ மார்ப்பப்
போந்துள கணிகை மாதர்ப் போன்றது வைகை யாறு.

இ—ள்: வைகை ஆறு - அவ்வேகவதிநதியானது, சேர்ந்த வெள் முத்த மூரல் செய்து - தன்கட்சேர்ந்த வெள்ளிய முத்துக்களாகிய பற்க

டோன்றச் சிரித்து, நீர்க்கலைமேல் ஆர்த்து - நீராகிய வஸ்திரத்தை மேலே கட்டி, காந்தள் அம் செங்கை வீசி - செங்காந்தண் மலராகிய அழகிய சிவந்த கைகளை வீசி, குரும்பைக் கன தனம் காட்டி - தெங்கின் குரும்பைகளாகிய கனத்த தனங்களை இடையிடையே காட்டி, மாந்தளிர்ப் பதங்கள் மீது வரு திரை ஞெகிழம் ஆர்ப்ப - மாந்தளிராகிய கால்களின் மீது ஒன்றன்பினொன்றாய் ஒழியாது வருந் திரைகளாகிய சிலம்புகள் சத்திக்க, போந்துள கணிகை மாதர்ப் போன்றது - ஒய்யாரமாக நடக்கும் பொது மகளிரை ஒத்தது எ - று.

வியாபகம் நீரும், வியாப்பியம் ஆறுமாகலின், நீர்க்கலைமே லார்த் தென்றார். மூரல் பல்லுக்கும் நகைக்கும் பொதுப் பெயராகலின் ஈண்டவ் விரு பொருளும் கொள்ளப்பட்டன. சேர்ந்த என்பதற்கு இரட்டுற மொழி தலென்பதனாலே தம்முளியைந்த எனவும் பொருள் கொண்டு பன்மே லேற்றுக. இது உருவகமடியாக வந்த உவமாலங்காரம். (௨)

திரைப்பெரு மருப்பி னாலே செழுங்கரை யிருபாற் குத்தி
மரத்திரண் முறித்துச் சாலி வயலெலா மழித்து வாயா
னுரைத்திரள் சிந்தி மீதே நுண்மணை லிறைத்து வண்டு
நிரைத்தலின் மதத்த வேழ நிகர்த்தது வைகை யாறு

இ—ள்: திரைப் பெரு மருப்பினாலே செழும் இரு பால் கரை குத்தி - திரையாகிய பெரிய கொம்புகளினாலே செழுமையாகிய இரு கரை களினுங் குத்தி, திரள் மரம் முறித்து - கூட்டமாகிய மரங்களை முறித்து, வயல் சாலி எலாம் அழித்து - வயலின்கணுள்ள நெற்களை யெல்லாம் அழித்து, வாயால் நுரைத் திரள் சிந்தி - வாயினாலே நுரைக் கூட்டங் களைச் சிதறி, மீதே நுண் மணல் இறைத்து - மேலே நுண்ணிய புழுதி யைத் தூற்றி, வண்டு நிரைத்தலின் - வண்டுகள் வரிசையாக மொய்க்க வருதலின், வைகை ஆறு மதத்த வேழம் நிகர்த்தது - வைகைநதி மத யானையை நிகர்த்தது எ - று.

ஆற்றின்மேற் செல்லுங்கால் வாய் கால்வாய்; வண்டு சுரும்பேயன்றி இரட்டுற மொழிதலாற் சங்குமாம். இதுவும் மேலை அலங்காரமென்க. (௩)

மைத்திகழ் குழலா ளந்த மலைமகள் முலையிற் றோய
வத்தனை வருத்து மேன்மை யநங்கவா யுதமென் றெண்ணி
யொத்தெழுந் தொளிருங் கன்ன லுயங்கு செங் கழுநீர் கஞ்சம்
புத்தவை யழிக்க வேண்டிப் புரண்டது பழன மெல்லாம்.

இ—ள்: மைத் திகழ் குழலாள் அந்த மலைமகள் முலையில் தோய அத்தனை வருத்தும் மேன்மை அநங்க ஆயுதம் என்று எண்ணி - கருமை



விளங்குங் கூந்தலையுடைய அப்பார்ப்பதியினது தனங்களிற் புணரும்படி பரம பிதாவாகிய சிவ்பெருமானை வருத்தும் அம்மகிமையை யுடைய மன்மதனது போர்க்கருவிகளென்று கருதி, ஒத்து எழுந்து ஒளிரும் கன்னல் உயங்கு செங்கழுநீர் கஞ்சம் புத்தவை அழிக்க வேண்டி - தம்முள் ஒன்றை யொன் றொத்து வளர்ந்தொளிருங் கரும்பு காமுகரை வருத்தும் அழகிய நீலோற் பலம் தாமரை மலர்களாகிய இப்புதியவற்றை அழிக்க விரும்பி, பழனம் எல்லாம் புரண்டது - வைகைநதி வயல்களினெல்லாம் புரட்டெடுத்தது எ - று.

சுட்டுப் பண்டறி சுட்டு. கழுநீர் காமுகருக்குச் சாக்காடென்னு மவத்தையைச் செய்தலின், உயங்கு செங்கழுநீரென்றார். உயக்கென்பது மெலிந்து நின்றது. மதன் பஞ்சபாணங்களுள் முதலிறுதிகளினுள்ள இரண்டையுமே யெடுத்துக் கூறினார் ஏனையவற்றையு மகப்படுத்துத் தழீஇக் கோடற்கென்க. பஞ்சபாணங்களை, "கினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ, வனைத்திட ருண்டாக்கு மசோகு - வனத்திலுள, முல்லை கிடை காட்டு மாதே முழுநீலங், கொல்லுமத னம்பின் குணம்" என்பதனா னறிக. பழனங்களிலுள்ளன அவை யிரண்டுமே யாகலின் அதுபற்றி அவ் விரண்டையுமே யீண்டெடுத்து விதந்தாரெனக் கோடலு மொன்று. இளங்கரும்பும் நாண்மலர்களு மல்லது முதுகரும்பும் பழம் பூக்களும் மதன் போற் கருவிகளாகாமையிற் புத்தவை என்றார். புய்த்தவை எனப் பாடங் கொள்வாரு முளர். புய்த்தல் - பறித்தல். புய்தலும் அழித்தலு ளடங்கு தலின், அது நின்றுவற்று மென்க. மலைமகளுங் கங்கையும் சிவபெருமா னுக்குத் தேவியர்களாதலானும், அவருண் மலைமகண்மீது வேட்கைமிகும் படி அச்சிவபெருமானை வருத்திய மன்மதனது போர்க்கருவிகளை அழித் தல் அக்கங்கைக்கு உவப்புடைய தொன்றாகலானும், கங்கைக்கும் வைகை நதிக்கும் ஈண்டு வேறுபாடின்மையானும், வைகைநதி அப்போர்க்கருவிகளை அழிக்க வேண்டிற்றென்க. புரட்டெடுத்தல் குதிகொண்டு பாய்தல். தன்னியல்பிற் பரந்த நீரை அவைகளை அழிக்க வேண்டிப் புரண்டதாகக் குறித்தலால் இது ஏதுத் தற்குறிப் பென்னும் அலங்காரமென்க. (௪)

வடம்படைத் துடைய பார வனமுலை முகத்து மாத
ரிடுந்துகில் கடுகி வீழ்வ தென்னநின் றழகு செய்து
தடம்படக் கிடந்த தெங்கின் றயங்குசெங் குரும்பை மீது
நெடும்புனற் றிரைபோய் மீள நிவந்தது வைகை யாறு.

இ—ள்: வடம் படைத் துடைய பார வன முலை முகத்து மாதர் இடும் துகில் கடுகி வீழ்வது என்ன - முத்துவடந் தங்கப்பெற்ற கனத்த சந்தனக் கோலமெழுதிய தமது முலைமுன்றில்களின்கண் மகளிரிடும் வஸ் திரங் கடுகி நழுவி விழுவதுபோல, தடம் படக் கிடந்த தெங்கின் தயங்கு

செம் குரும்பை மீது நெடும் புனல் திரை போய் மீள - தனது கரையிற் பொருந்த நிற்குந் தெங்குகளின் விளங்குகின்ற செவ்விய குரும்பைகளின் மீது நெடிய நீர்த்திரைகள் போய் மூடிக் கடுகி வழிய, வைகை ஆறு அழகு செய்து நிவந்து நின்றது - வைகைநதி அலங்காரஞ்செய் துயர்ந்து நின்றது எ-று.

விகுதி பிரித்துக் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. முத்து வடங்கடம் மழகினும் பேரழகு பெற இனிது தங்கப்பெறு முலையென்பார் வடம் படைத்துடைய முலையென்றும், வஸ்திரத்துண் மறையாது வெளியே தோன்றுந் தனங்கள்போலன்றி, அதனுண் மறைந்து ஒரோவழி வெளியே தோன்றுந் தனங்கள் அழகுசெய்தலின் இடுந் துகில் கடுகி வீழ்வ தென்ன வழகுசெய் தென்றுங் கூறினர். வைகைநதி தெங்கினளவுயர்ந்து நெடிது பாய்ந்ததென்பது கருத்து. (ரு)

மீதெழு பரிதி கையால் விடுங்கதிர் வெம்மை தீரப்
பூதல மடவாள் போர்க்கும் புதியவெண் டுகிலே போல
யாதலர் பழனஞ் சோலை யாதெனப் பரந்து கஞ்ச
மாதுறை மதுரை மூதூர் மதிற்புறஞ் சென்று சேர்ந்து.

இ—ள்: மீது எழு பரிதி கதிர்க் கையால் விடும் வெம்மை தீரப் பூதல மடவாள் போர்க்கும் புதிய வெண் துகிலே போல - மேலாக வெழுஞ் சூரியன் கிரணமாகிய கைகளால் வீசும் வெம்மை தன்மீது தாக்காது நீங்கப் பூமிதேவியாகிய பெண் போர்க்கும் வெண்மையாகிய புதியவஸ்திரத்தையே போல, அலர் பழனம் யாது சோலை யாது எனப் பரந்து - அகன்ற வயல் யாது சோலை யாது என்றங்குள்ளார் வினவித் தடுமாற அவைகளை மூடிப் பரந்து, கஞ்ச மாது உறை மதுரை மூது ஊர் சென்று மதிற் புறஞ்சேர்ந்து- செந்தாமரை யாசனியாகிய இலக்குமி வசிக்கும் மதுரையாகிய பழைய இராசதானியிற் சென்று மதிலின் பக்கத்தை யடைந்து எ—று.

போலப் பரந்தென முடிக்க. குளகம். (சு)

தாங்கிய துவச வாயிற் றடமதி லிடியத் தள்ளி
யாங்கெழின் மதுரை மூதூ ரழிப்பது போன்று செல்லப்
பாங்குள விடங்க ளெல்லாம் பரந்தது வைகை நன்னீ
ரீங்கினிச் செய்வ தென்னென் றியாவருங் கவற்சி கொண்டார்.

இ—ள்: துவசம் தாங்கிய வாயில் தட மதில் இடியத் தள்ளி ஆங்கு எழில் மதுரை மூதூர் அழிப்பது போன்று செல்ல - கொடிகளைத் தாங்கிய வாயிலையுடைய பெரிய மதி லிடியுமாறு அதனை மோதிச் சாய்த்து அப் பொழுதே அழகிய பழைய மதுரைமாநகரை நாசஞ்செய்வது போன்று



வைகைநதி குதிகொண்டு பெருக, பாங்கு உள இடங்கள் எல்லாம் வைகை நல் நீர் பரந்தது இனி ஈங்குச் செய்வது என் என்று யாவரும் கவற்சி கொண்டார் - நம் பக்கத்துள்ள இடங்களிலெல்லாம் வைகையினது நல்ல நீர் பரவிற்று நாமிதற்கினி ஈண்டுச் செயற்பால தெவ்வெயோவென்று மதுரை மாநகரவாசிகளெல்லாம் மனக்கவலை கொண்டார் எ—று

வைகைநதி சிவாஞ்ஞையினாலே திருவாதவூரடிகளது சிறைத் துன் பத்தை நீக்கி அரசன் முதலாயினோரை அச்சுறுத்தன் மாத்திரமல்லது அழிவு செய்ய வாராமையின் அழிப்பது போன்றென்றும், அதனது பிரவாகத் தைத் தடுத்தற்குத் தம்மாற் செயற்பாலதொன்று மின்மையின் ஈங்கினிச் செய்வதென்னென்றுங் கூறினர். (எ)

மைக்கடுங் களிற்றுத் தானை வழுதியுங் கடிது நண்ணித்
தொக்கபொன் மலரு முத்துந் துகின்மணிப் பணியு நல்கித்
தக்கவண் புவியு ளுள்ளோர் தமக்குயி ரென்னு மன்னே
மிக்கநின் கோப மாறல் வேண்டுமென் றிறைஞ்சி நின்றான்.

இ—ள்: மைக் கடும் களிற்றுத் தானை வழுதியும் கடிது நண்ணித் தொக்க நன் மலரும் முத்தும் துகில் மணிப்பணியும் நல்கி - அப்பொழுது கொடுமையாகிய கரிய யானைச் சேனையையுடைய பாண்டியராசனும் விரைவாகச் சென்று தொகுதியாகிய நல்ல மலர்களையும் முத்துக்களையும் வஸ்திரங்களையும் இரத்தினாபரணங்களையு மிட்டு, தக்க வண் புவியில் உள்ளோர் தமக்கு உயிர் என்னும் அன்னே மிக்க நின் கோபம் ஆறல் வேண்டும் என்று இறைஞ்சி நின்றான் - தகுதியாகிய வளவிய பாண்டிநாட்டு மக்களுடம்புகட் குயிரென்று சிறப்பித்துச் சொல்லப்படுந் தாயே மிகுதியாகிய நின் கோபந் தணிதல் வேண்டுமென்று பிரார்த்தித்து வணங்கி நின்றான் எ—று.

ஈண்டுப் புவியென்றது பாண்டிநாட்டை யென்பது விளக்குதற்குத் தக்கவண்புவி யென விசேடிக்கப்பட்டது. பாண்டி நாட்டினை, "வெள்ளாற்றின் றெற்கு விளங்குகன் னிக்குவடக், குள்ளார் பெருமலைக் கொண் கிழக்குத் - தள்ளாத, வாழ்ந்த கடல்கிழக் கைம்பத் தறுகாதம், பாண்டி நாட்டெல்லை யெனப் பார்" என்பதனானறிக. சிறப்புடைப் பொருளைத் தா னினிது கிளத்த லென்பதனாற் பாண்டிநாட் டுயர்திணைப் பொருள்கட் குயிரென்றொழியினும், ஏனை அஃறிணைப் பொருள்கட் குயிரென்பது உங் கொள்ளப்படுமென்க. நதியைப் பெண்பாற்படுத்துக் கூறுதல் வடமொழி வழக்கென்பது மேலுங் காட்டினாம். வழுதியுமென்னு மும்மை எச்சத்தோடு சிறப்புமாய் நின்றது. தானுள்ளதுணையுஞ் சலியாது வேண்டுவன கொடுத்துப் பாதுகாத்தலிற் பிறழாமையின் அன்னே யென்றா னென்க.

ஓர் கான் மறந்தும் அஞ்சா நெஞ்சனாகிய பாண்டியனும் அஞ்சிக் கடிது போந்தா னென்பது போதர, 'மைக்கடுங் களிற்றுத் தானை வழுதியுங் கடிது நண்ணி' என்றார். (௮)

கலைமதிக் குலத்து மன்னன் கன்னிநன் னாடன் கூறுந்
தலைமைமிக் குடைய சொல்லாற் றன்முனி வொழித லின்றி
மலையெனத் திரைகண் மேன்மேல் வருதல்கண் டிதுவென் னென்று
நிலையுறச் சிந்தை யுள்ளே நேடினா னேடிப் பின்னர்.

இ—ள்: கலை மதிக் குலத்து மன்னன் கூறும் தலைமை மிக்கு உடைய சொல்லால் - சோடச கலைகளையுடைய சந்திரகுலத் தரசனாகிய பாண்டியன் இங்ஙனம் இரந்து பிரார்த்தித்துக் கூறும் மிக்க தலைமைப்பாட்டையுடைய சொற்களினாற்றானும், தன் முனிவு ஒழிதல் இன்றி மலை எனத் திரைகள் மேல் மேல் வருதல் கண்டு - தன் கோபந் தணியாது மலைப் பிரமாணமாகத் திரைகள் மேலுமேலும் அடர்ந்து வருதலைக் கண்டு, நல் கன்னி நாடன் இது என் என்று சிந்தை உள் நிலை உற நேடினன் - நல்ல கன்னி நாட்டையுடைய அவ்வரசன் இது அடர்தற்குக் காரணமென்னையோ வென்று தன் மனத்தின்கட் பதிய நெடிது சிந்தித்து ஆராய்ந்தான், நேடிப் பின்னர் - அங்ஙனமாராய்ந்து அதன் பின்னர் எ—று.

கன்னிநாட னென்பதனைச் சுட்டின்பாற்படுத்தி இங்ஙனங் கொண்டு கூட்டாது நின்றாங்கு நிறுத்திப் பொருளுரைப்பினு மமையும். கன்னிநாடு கன்னியா லரசுசெய்யப்பட்ட நாடு. கன்னி தடாதகைப்பிராட்டி. அது "வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி, விரைசெய் தார்முடி வேய்ந்து தண் குடைமனு வேந்த, னுரைசெய் நூல்வழிக் கோல்செலக் கன்னியாம் பருவத், தரசு செய்தலாற் கன்னிநாடாயதந் நாடு" என்பதனானுமறிக. தலைமைமிக்குடையசொல் நதிக்கு முதன்மைமிக்குடைய சொல். அதனை முற்செய்யுளிற் காண்க. தன்னென்றது நதியை. (௯)

ஆதியாங் கடவு ளெந்தை யாலவா யமலன் மங்கை
பாதியான் சிறந்த பூசை பண்டையிற் குறைந்த துண்டோ
நீதியாந் தவத்தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்க மண்மேற்
றீதியாஞ் செய்த துண்டோ செப்புமி னமைச்ச ரென்றான்.

இ—ள்: ஆதி ஆம் கடவுள் - முதற்கடவுளும், எந்தை - எம்பரம பிதாவும், ஆலவாய் அமலன் - திருவாலவாயில் வீற்றிருக்கு மலவிகீனரும், மங்கை பாதியான் சிறந்த பூசை பண்டையில் குறைந்தது உண்டோ - அர்த்தநாரீசுவரருமாகிய சொக்கநாதசுவாமிக்குச் சைவாகம விதிப்படி செய்யும் நித்திய மகாபூசை முன்னிலைமையிற் சுருங்கியதுண்டோ, நீதி ஆம் தவத்



தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்க மண் மேல் தீது யாம் செய்தது உண்டோ - அல்லது நீதியாகிய தவத்தான் மேம்பட்ட பெரியோர்களது மனம் புழுங்க ஈண்டவர்க்கு நாங் கொடுமை செய்ததுண்டோ, அமைச்சர் செப்புமின் என்றான் - மந்திரிகளே இவ்விரண்டனுள் இதற்குச் காரணம் யாது சொல்லுங்களென்று அரசன் வினவினான் எ—று.

"முன்னவனார்கோயிற் பூசைகண் முட்டிடின், மன்னர்க்குத் தீங்குள" வாகலின், ஆலவா யமலன் பூசை பண்டையிற் குறைந்த துண்டோ எனவும், அடியார்க்குச் செய்ததீங்கு ஆண்டார்க்குச் செய்த தீங்கென்பது இடைக்காடர் சரித்திர முதலியவற்றான் விளங்குதலின், தவத்தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்கத் தீதியாஞ் செய்த துண்டோ எனவும் வினவவேண்டிற்றென்க. அமைச்சர் அண்மைவிளி. நீதி மெய்ம்மை; என்றது ஈண்டு மனத்தொடு பொருந்துதலை. 'மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்' என்பவாகலின், அரசன் மந்திரிகளை வினவினானென்க. இது ஒப்புமைக் கூட்டமென்னும் அலங்காரம். "கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத், தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்" என்பதோத்தாகலின். இதனை வடநூலார் துல்விய யோகிதாலங்கார மென்பர். விகீனர் - முழுதுமில்லாதவர், விடப்பட்டவர். (௧௦)

விளங்கிள மதிசேர் சென்னி வித்தகர் பத்த ரான
வளந்திகழ் வாத வூரர் வருந்திய வளைப்பி னீக்கி
யுளங்கொள மகிழ்ச்சி செய்யி னுறுபுன லூர்கொ ளாதென்
றளந்தறி வறிந்து கூறி யாங்கவர் தொழுது நின்றார்.

இ—ள்: விளங்கு இள மதி சேர் சென்னி வித்தகர் பத்தர் ஆன வளம் திகழ் வாதவூரர் வருந்திய வளைப்பின் நீக்கி - பிரகாசிக்கின்ற இளம் பிறை பொருந்திய திருமுடியையுடைய அகில சாதுரியராகிய சிவபெருமானுக்கு அன்பராயுள்ள அருட்செல்வம் விளங்குந் திருவாதவூரடிகளை அவர் துன்பமுறுங் கோட்டினின்று நீக்கி, உளம் கொள மகிழ்ச்சி செய்யின் உறு புனல் ஊர் கொளாது என்று - மனங்கொள்ளுமாறு அவரை மகிழ்விக்கின் மிக்க நீர் நம் மதுரையை அழியாதென்று, அளந்து அறிவு அறிந்து கூறி அமைச்சர் கை தொழுது நின்றார் - காரிய நிகழ்ச்சியாற் காரணத்தை உள்ளவாறு அளவைசெய்து உய்த்துணரு மறிவானறிந்து கூறி அம்மந்திரிகள் அஞ்சலிசெய்து நின்றனர் எ—று.

தக்ஷப்பிரசாபதியின் சாபம் சந்திரனை அணுகப்பெறாது அவனைக் காத்த சாதுரியந் தோன்ற 'விளங்கிள மதிசேர் சென்னி வித்தகர்' என்றார். (௧௧)

மன்னனு மவர்க டம்மேன் மகிழ்ந்தருட் பார்வை நல்கி
யென்னுள மதித்த வாறே யிங்கினி துரைத்தீ ரென்று
கொன்னுறு வளைப்பி னூடு நிற்குநற் குணத்தி னோரை
முன்னுற வழைத்து நட்பான் முகமலர்ந் திதுமொ ழிந்தான்.

இ—ள்: மன்னனும் மகிழ்ந்து அவர்கள் மேல் அருள் பார்வை நல்கி - பாண்டியராசனும் அது கேட்டு மனமகிழ்ந்து தம் மந்திரிகண்மீது கிருபா நோக்கஞ் செய்து, என் உளம் மதித்த ஆறே இங்கு இனிது உரைத்தீர் என்று - என் மனம் உத்தேசித்த பிரகாரமே நீங்களும் ஈண்டினிதாகக் கூறினீர்களென்று, கொன் உறு வளைப்பின் ஊடு நிற்கு நல் குணத்தினோரை முன் உற அழைத்து நட்பால் முக மலர்ந்து இது மொழிந்தான்- அச்சந் தருங் கோட்டின்கணிற்கும் குணக்குன்றாகிய திருவாதவூரடிகளைத் தன்முன் வருவித்துப் பழைய நட்புரிமைகளோடு முகமலர்ச்சி கொண்டு இதனைக் கூறினன் எ—று.

உண்மை யுணர்ந்த அப்பொழுதே நீசபக்கமாகிய நட்புரிமைகளாற் பெரிது நன்குமதித்து மகிழ்ந்து கூறினரென்பார் நட்பான் முகமலர்ந்திது மொழிந்தா னென்றார். (கஉ)

பாம்பணி செய்ய வேணிப் பரம்பர னடியார் கையி
லாம்பொரு ணமதே யானு லறம்பிறர்க் காவ துண்டோ
தேம்படு மலங்கன் மார்பிர் செயலிதற் குமது மேனி
சாம்பிய தவமே யான்செய் தண்டமே தகவி லாமை.

இ—ள்: பாம்பு அணி செய்ய வேணிப் பரம் பரன் அடியார் கையில் ஆம் பொருள் நமதே ஆனல் - பாம்பை யணிந்த சிவந்த சடையையுடைய சுத்த மாயாதீதராகிய சிவபெருமானது உத்தமோத்தம சற்பாத்திரமாகிய அடியார் கையிற் கொடுக்கப்பட்ட திரவியம் நம்முடையதேயானல், அறம் பிறர்க்கு ஆவது உண்டோ - அக்கொடையால் வருஞ் சிவபுண்ணியம் அப்பொருட் கந்நியராகிய பிறர்க்காகுமோ ஆகாது, தேம்படும் அலங்கல் மார்பிர் செயல் இதற்கு உமது மேனி அவமே சாம்பியது - வாசனைபொருந்திய தாமரைமலர் மாலையை யணிந்த மார்பையுடையவரே நீதியாகிய இச்சற்கருமத்தின்பொருட்டு உமது திருமேனி இதுகாறுங் கொன்னே வருந்திற்று, யான் செய் தண்டமே தகவு இலாமை - அங்ஙனம் வருந்தும்படி பொறியிலியாகிய யான் உமக்கிழைத்த இத்தண்டமே அநீதியுடையது எ—று.

நம்மென்றது சந்திரகுலத் தேனையரசரையுந் தன்னேடுளப்படுத்தி யாகலிற் பின்னர் யானென்பதனேடு பன்மை யொருமை மயக்கமாகாமை யறிக. ஓகாரம் எதிர்மறையாகலின், அவ்வறம் நமக்கேயாகுமென்பதாம். தண்டமே யென்னு மேகாரம் நுங்கொடை குற்றமுடைத்தன்று என் றண்டமே



குற்றமுடைத்தெனப் பிரித்தலிற் பிரிநிலை. தகவு - நீதி, தகவிலாமை - அநீதி. தகவிலாமை யுடையதைத் தகவிலாமை யென்றொழிந்தது உபசாரம். அவமே யென்னு மேகாரம் தேற்றம். சிவகாருண்ணியம் நிறைந்த உள்ளமுடைய நீர் எவ்வாற்றானுந் தண்டிக்கப்படும் பாலீ ரல்லீ ரென்பான் நெஞ்சின் றண்ணளி விசேடத்தை மாலைக் கேற்பதோர் விசேடத்தானேற்றித் தேம்படு மலங்கன் மார்பிரென விளித்தான் என்க. இதனை வீரக்கழல் என்பது போற் கொள்க. (கங)

உற்றவித் தகைமை முன்னே யுணருமிவ் வுணர்வி லாமை
குற்றமித் துணையு நம்மேற் கொண்டனங் குறைகொளாமன்
மற்றினிப் புகலு மாறென் வைகைநம் மூர்கொ ளாது
நற்றவத் தலைவர் நீரே யடைப்பியு மெனந வின்றான்.

இ—ள்: உற்ற இத்தகைமை முன்னே உணரும் இவ் உணர்வு இலாமை குற்றம் இத்துணையும் நம் மேல் கொண்டனம் - நிகழ்ந்த இக் குணகுணங்களை முன்னரே பகுத்தறியும் அறிவின்மை குற்றமே அது முழுவதையும் நம் மேலதாகவே கொண்டனம், குறை கொளாமல் மற்று இனிப் புகலும் ஆறு என் - நீர் மனக்குறை கொள்ளாதொழியும்படி நாம் இனி அகலப் பேசவேண்டியதென்னை, வைகை நம் ஊர் கொளாது நல் தவத் தலைவர் நீரே அடைப்பியும் என நவின்றான் - வைகை நதி நம் மதுரையை அழியாத பிரகாரம் நல்ல தவ முதல்வர் நீரே அதற்கு இனி அணை கட்டுவியுமென்று அரசன் கூறினன் எ—று.

ஈண்டு மாசன் நம்மேற் கொண்டன மெனத் தன்னைப் பன்மையாற் கூறியது தன் குழுவினரையு முள்ளிட்டென்க. இது புத்திபூர்வகமாகவன்றி அபுத்திபூர்வகமாக வந்த குற்றமென்பான் முன்னே யுணருமிவ் வுணர்விலாமை குற்றமென உணர்வின்மேல் வைத்துக் கூறினனென்க. உணர்விலாமைக் குற்ற மெனவும் பாடம். (கச)

அருட்பெரு வழுதி யிவ்வா றன்புரை பகர்ந்த போதுந்
தரிப்பரி தென்ன முன்னந் தழலென வெகுண்ட போதும்
விருப்பொடு வெறுப் பிலாத மெய்ம்மையார் தம்மை யாண்ட
திருப்பத நினைந்தார் வைகைச் செழும்புன லூர்கொ ளாமல்.

இ—ள்: அருள் பெரு வழுதி இவ் ஆறு அன்பு உரை பகர்ந்த போதும் - அருளையுடைய நெடுநிலவரசனாகிய பாண்டியன் இந்தப் பிரகாரந் தன்னன்பை வெளிப்படுத்துங் கலப்புரைகளைக் கூறிய தருணத்தும், தரிப்பு அரிது என்ன முன்னம் தழல் என வெகுண்டபோதும் - இது சகித்தற் கரிதரிதென்று கண்டோர் கூற முன்னரே அக்கினி போலக் கோபங் கொண்ட தருணத்தும், விருப்பு ஒடு வெறுப்பு இலாத மெய்ம்மையார்

வைகைச் செழும் புனல் ஊர் கொளாமல் தம்மை ஆண்ட திருப்பதம் நினைந்தார் - அவ்வரசன்மாட்டு முறையே விருப்பு வெறுப்புக்களில்லாத இருவினையொப்பும் மலபரிபாகமுமாகிய உண்மை நிலையை யடைந்த திருவாதவூரடிகள் வைகை நதியினது செழுமையாகிய நீர் அம் மதுரையைக் கவளீகரியா திருக்கும் பொருட்டுத் தம்மை அடிமைகொண்டருளிய திருவடிகளைத் தியானித்தார் எ—று.

நிரனிறை. ஒடு எண்ணொடு. சிவபுண்ணிய முதிர்ச்சியாற் சுக துக்கங்க டருதற்கேதுவாகிய கன்மமலம் ஒன்றற்கொன்றேறாது துலைபோலத் தம்மு ளொத்தல் இருவினையொப்பும், தன் சத்தி கெடுதற்குரிய காரணங்களோடு கூடிப் பதனழியும் பருவ முண்மையே மலபரிபாகமுமென்க. அது "நீடு மிருவினைக ணேராக நேரொத்தல், கூடு மிறை சத்தி கொளல்" என்றற் றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களா னறிக. (கரு)

சுந்தரப் பரிமேல் வந்த தோற்றமே மனத்தி னுன்னி
யந்தரத் திறைஞ்ச நன்னீ ரடங்கியுள் வாங்கிச் செல்ல
வெந்துயர்ப் பிறவி யான விடங்கிளர் வேலை நீந்தி
வந்தருட் கரையிற் சேர்வார் வைகையங் கரையிற் சென்றார்.

இ—ள்: பரிமேல் வந்த சுந்தரத் தோற்றமே மனத்தில் உன்னி அந்தரத்து இறைஞ்ச - மேற்கூறிய பிரகாரம் சோமசுந்தரக் கடவுள் பரிமேலழகரா யெழுந்தருளிவந்த திருவுருவத்தையே தியானித்து அவர் அந்தர்த்தானமாகிய ஆகாயத்தை நோக்கி மனத்தால் வணங்க, நல் நீர் அடங்கி உள் வாங்கிச் செல்ல - அப்பொழுது நல்ல வைகைநதிநீர் பிரவாகங் குறைந்துள்வாங்கி வடிந்தடங்க, பிறவி ஆன விடம் கிளர் வெந்துயர் வேலை நீந்தி வந்து அருள் கரையில் சேர்வார் - பிறவியாகிய நஞ்செழும் கொடிய துக்கசாகரத்தைத் திருவடிப் புணையா னீந்தி வந்து முத்திக்கரை சேர்பவராகிய திருவாதவூரடிகள், வைகை அம் கரையில் சென்றார் - அழகிய வைகைநதிக் கரையின்கட் சென்றார் எ—று.

நோக்கி யென்பது சொல்லெச்சம். இனி அந்தரத் திறைஞ்ச என்பதற்குத் தனியிடத்து வணங்க எனவும், இரகசியமாக வணங்க எனவும் பொருளுரைப்பினு மமையும். அருளா ஞயதை அருளென்றது உபசாரம். ஈற்றிற் றரிசித்த திருவுருவம் பரிமேல் வந்த திருவுருவமாதலின் அதுவே ஈண்டுத் தியான ஞாபகமாயிற்றென்க. (கசு)

முறைமுறை வணங்கி நின்ற வாரியர் முகத்தை நோக்கி
யறைதிரை நெடுநீர் வைகை யணைகடி தடைத்தல் வேண்டு
முறையுமிம் மாந்த ரெல்லா மொல்லையில் வம்மி னென்று
பறையறை வித்து நம்மூர்க் கிவ்வுரை பரப்பு மென்றார்.



இ—ள்: முறை முறை வணங்கி நின்ற ஆரியர் முகத்தை நோக்கி - திருவாதவூரடிகள் தம்மைப் பலமுறை வணங்கி யெழுந்து நிற்கின்ற காரியதரிசிகளது முகத்தைப் பார்த்து, அறை திரை நெடுநீர் வைகை அணை கடிது அடைத்தல் வேண்டும் - கரையோடு மோதுகின்ற திரைகள் மறியுமிக்க நீரையுடைய வைகை நதி அணையை அதிசீக்கிரத்திற் கட்டுதல் வேண்டும் ஆதலின், உறையும் இம்மாந்தர் எல்லாம் ஒல்லையில் வம்மின் என்று பறை அறைவித்து நம் ஊர்க்கு இவ்வுரை பரப்பும் என்றார் - ஈண்டு வசிக்கும் பிரசைக ளெல்லாம் அதன்பொருட்டு விரைவாக அந்நதிக் கரையிலே வருக வென்று பறை யறைவித்து நம் மதுரா புரிக்கு இவ்வார்த்தையைப் பிரசித்தி செய்யுங்களென்று பணித்தருளினார் எ—று.

அமைச்சரோ டொருபுடை யொப்ப அறிவுடைய ராகலிற் காரியதரிசிகளை ஆரியரென்றும், திருவாதவூரடிகளது அடிமைத்திறத்தை ஈண்டை நிகழ்ச்சிபற்றி ஒருவா றநுமித்தறிந்து பலமுறை வணங்கினரென்பார் முறை முறை வணங்கி என்றுங் கூறினார். ஒருவர்பின் னொருவராக வணங்கி யென்றுமாம். இனி ஆரியர் என்பதற்கு மிலேச்சர் எனப் பொருள் கோடலுமொன்று. அக்கருத்தை, "செங்கட் புன்மயிர்த் தோறிரை செம்முக, வெங்க ணேக்கிற் குப்பாய மிலேச்சனே" என்றற் றொடக்கத்துப் பண்டை இலக்கியங்களா னுய்த்துணர்க. (கஎ)

ஆரியர் கடிதி னோடி யகன்பறை யறைவித் தம்பொற்
றேரியல் வீதி தோறுஞ் சென்றுரை பரப்பு முன்னே
கூரிய கொட்டு மண்சேர் கூடையுங் கொண்டு வைகை
நீரியல் கரைமேல் வந்து நின்றனர் மதுரை யுள்ளார்.

இ—ள்: ஆரியர் கடிதின் ஓடி அம் பொன் தேர் இயல் வீதி தோறும் சென்று அகன் பறை அறைவித்து உரை பரப்பு முன்னே - காரியதரிசிகள் வல்விரைந்தோடி அழகிய பொற்பொடிசெறிந்த தேர் ஓடும் வீதிகடோறும் சென்று பெரிய பறையறைவித் திவ்வுரையைப் பிரசித்தி செய்யு முன்னரே, மதுரை உள்ளார் கூரிய கொட்டும் மண்சேர் கூடையும் கொண்டு வைகை நீர் இயல் கரைமேல்வந்து நின்றனர் - மதுரைமாநகர வாசிகளெல்லாம் வாய் கூரிய மண்டொடு கருவிகளையும் மண் சுமக்கும் கூடைகளையுங் கொண்டு வைகைநதியினது நீரையுடைய கரையின்கண் வந்து நின்றனர் எ—று.

பரப்பியபின் வந்து நின்றவரைப் பரப்புமுன் வந்து நின்றன ரென்றது விரைவுபற்றி வந்த காலவழுவமைதி. சேய்மைக்க ணிற்பார் செவிக்கும் விடயமாம் ஓசைதரும் பெரும்பறை என்பார் அகன்பறை என்றும், எல்லாரு மென்பார் மதுரையுள்ளா ரென்றுங் கூறினார். மண்டொடு கருவி மண்வெட்டி. கொட்டு கிராமியச்சொல். (கஅ)

நீறுகொண் டிலங்கு மேனி மறையவர் நியமஞ் செய்த
வீறுகொண் டிடங்க டோறு மாரியர் விரைவிற் சென்று
கூறுகொண் டெவர்க்கும் வேறு கோலறை யளந்து செங்கை
மாறுகொண் டுறுக்கி வைகை வன்கரை யடைக்க லுற்றார்.

இ—ள்: ஆரியர் நீறு கொண்டு இலங்கும் மேனி மறையவர் நியமம் செய்த வீறு கொண்டு இடங்கள் தோறும் விரைவில் சென்று - காரியதரிசிகள் விபூதியைத் தன்கட்கொண்டு விளங்குந் திருமேனியை யுடைய வேதபண்டிதராகிய திருவாதவூரடிகள் தமக்கு நியோகித்த அதிகாரத்தை மேற்கொண்டு நதிதீரங்கடோறும் விரைவாகச் சென்று, கோல் அறை அளந்து எவர்க்கும் வேறு கூறு கொண்டு - கோலான் வரையறுத் தளந் தனைவர்க்கும் தனித்தனி பகிர்ந்து கொடுத்து, செங்கை மாறுகொண்டு உறுக்கி வன் வைகைக்கரை அடைக்கலுற்றார் - சிவந்த கைகளிற் பிரம்பைக் கொண்டுறுக்கி வலிய வைகை நதிக்கரைக் கணைகட்டுவிப்பாராயினர் எ-று.

அடைப்பிக்கலுற்றாரென்னும் பிறவினை யிவ்விகுதி தொக்கு அடைக்கலுற்றாரெனத் தன்வினையாய் நின்றது. இனிக் கொண்டென்பதை மூன்றுவதன் சொல்லுருபெனக் கொண்டு நீற்றினால் விளங்குக் திருமேனியென்றலு மொன்று. (கசு)

கண்பெறு கழையின் முத்துங் கடகரி மருப்பின் முத்தும்
வெண்பணி லத்தின் முத்து மேதகு கரும்பின் முத்தும்
வண்புனற் றிரைகள் வீச வரையெனக் குவைகள் செய்து
பண்படப் பொருத்தி நீருட் பதித்துயர் வரம்பு செய்வார்.

இ—ள்: கண் பெறு கழையின் முத்தும் - கணுக்களை யுடைய மூங்கின் முத்துக்களையும், கடகரி மருப்பின் முத்தும் - மதத்தையுடைய யானைக் கோடுகளின் முத்துக்களையும், வெண் பணிலத்தின் முத்தும் - வெண்மையாகிய சங்கு முத்துக்களையும், மேதகு கரும்பின் முத்தும் - மாதுரியச் சுவையான் மேன்மை பொருந்திய கரும்பின் முத்துக்களையும், வண் புனல் திரைகள் வீச - அழகிய நீர்த்திரைகள் கொடுவந் தொதுக்க, வரை எனக் குவைகள் செய்து - அவற்றை மலைபோல வாரிக் குவித்து, பண் படப் பொருத்தி நீர் உள் பதித்து உயர் வரம்பு செய்வார் - தம்முளியைபு படப் பொருந்தி நீரின்கீழ்ப் படுத்து உயர்ந்த அணை கட்டுவாராயினர். எ—று.

அத்திபாரஞ் செய்கின்றுழி ரத்தினவியாசஞ் செய்தன் முறையாகலின் முத்தை நீருட் பதித்தென்றார். "பூழியர்கோன், றென்னாடு முத்துடைத்து" என்பவாகலின், அவ்வியைபு பற்றி இங்ஙனங் கூறினா ரென்றலு மொன்று. செல்வ வீறு தோன்றக் கூறினமையின், இது வீறுகோ



ளணியாம். இதனை வடநூலார் உதாத்தமென்பர்; "வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமு முயர்ச்சி புனைந்துரைப்ப துதாத்த மாகும்" என்பதனாறிக. முற்கவி கட்டுவிப்பார் செய்தியும், இது கட்டுவார் செய்தியும் கூறின. நீருட் பதித் துயர்வரம் பென்பதற்கு நீரை உள்ளே பதியச் செய்துயரும் வரம்பென்றலு மொன்று. (உ०)

பரித்திர ணிறுத்து மென்பார் பாம்புக ளுருட்டு மென்பார்
திரைப்புனன் மிகுத்த தென்பார் தேவர்கட் கபய மென்பார்
நிரைப்படு மகிலோ டார நெறிப்பட வொதுக்கி நீடு
வரைப்பிடைக் குவித்து நிற்பா ராயினர் மதுரை யுள்ளார்.

இ—ள்: மதுரை உள்ளார் - மதுரை மாநகர வாசிக ளெல்லாம், பரித்திரள் நிறுத்தும் என்பார் - குதிரைப்பாய்ச்சலாக மரங்களை நிறுத்துமென்பாரும், பாம்புகள் உருட்டும் என்பார் - நீர்த்திரை அணையைக் கரைக்காத பிரகாரம் வைக்கோற் பழுதைகளை உருட்டு மென்பாரும், திரைப் புனல் மிகுத்தது என்பார் - திரைகளையுடைய நீர் அதிகரித்த தென்பாரும், தேவர்கட்கு அபயம் என்பார் - நங் குல தெய்வங்கட்கு நாமடைக்கல மென்பாரும், நிரைப்படும் அகிலோடு ஆரம் நெறிப்பட ஒதுக்கி நீடுவரைப்பு இடைக் குவித்து நிற்பார் ஆயினர் - தொகுதியாகிய அகின் மரங்களோடு சந்தன மரங்கள் மேன் மேல் அள்ளுண் டொழுகிவர, அவற்றை ஒருசாரொதுக்கி நெடிய கரையின்கட் குவித்து நிற்பாருமாயினர். எ—று.

இவற்றையல்லது பிறிதொன்றை முயல்வாரில்லை யென்பது கருத்து. பரித்திரள் பாம்பென்பன ஆகுபெயர். அது நிறுத்தல், உருட்ட லென்னும் வினைவகை பற்றியு முய்த்துணர்க. பரித்திரளை இக்காலத்தார் கத்தரிக்கைக் காலென வழங்குப. பாம்பு ஆகு பெயராய் வைக்கோற் பழுதையாமாறு "பிறை யொழுக வொழுகு புனற் கங்கை யாற்றின் பேரணையிற் றொடுத்துவிட்ட பெரும் பாம்பென்னக், கறையொழுகு படவரவம் படரும் வேணிக் கண்ணுதலார் கமலையிற் பைங் கமலை போல்வீர்" என்பதனானுமறிக. மிகுந்தது மிகுத்தது என வலிந்து நின்றது. (உக)

ஏருடைப் புதுநீர் வைகை யிவ்வகை யடைக்கு மெல்லை
நீருடைப் பொலிந்த வேணி நின்மலற் கன்பு மிக்காள்
சீருடைத் தவத்தின் மிக்காள் செம்மனச் செல்வி யென்னும்
பேருடை நரைமூ தாட்டி பிட்டுவிற் றுணவு கொள்வாள்.

இ—ள்: ஏர் நீர் உடைப் புது வைகை இவ்வகை அடைக்கும் எல்லை - அழகிய நீரையுடைய புதுப் பிரவாகமாகிய வைகைநதிக் கிந்தப் பிரகாரம் அணை கட்டும்பொழுது, நீர் பொலிந்த வேணி உடை நின்மலற்கு அன்பு மிக்காள் - கங்காசலம் பொலிதற் கேதுவாகிய சடையையுடைய

மலரகிதராகிய சிவபெருமானிடத்துப் பேரன்புடையவள், சீருடைத் தவத்தின் மிக்காள் - புகழை யுடைய தவத்தான் மேம்பட்டவள், செம்மனச் செல்வி என்னும் பேர் உடை நரைமூதாட்டி - செம்மனச் செல்வி யென்னும் காரணப் பெயரை யுடைய மயிர் நரைத்த வயோதிகப் பெண்ணொருத்தி, பிட்டு விற்று உணவு கொள்வாள் - பிட்டு விற்றுச் சீவனஞ் செய்பவள் எ—று.

உடைய என்பது நான்கிடத்து மீறு குறைந்து நின்றது. ஆட்டி - பெண்; செம்மனச் செல்வி - சுத்தமாகிய மனச் செல்வத்தை யுடையவள்; மனச் செல்வம் பாவசிந்தை யின்மை, உள்ளது போது மென்னு மனவமைதி என்பன. இவட்கு வந்தி யென்றும் பெயர். அது "அள்விலாண்டு, மன்னிய நரைமூதாட்டி யொருத்தி பேர் வந்தி யென்பாள்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. (உ௨)

ஆங்கவட் களந்து நீக்குங் கோலறை யடைப்ப தின்றி
யோங்கலைப் புதுநீர் வைகை யுடைப்பெலா மடைக்கு மெல்லை
தீங்குள தறுக ணாளர் சென்றவட் குறுகண் செய்ய
வீங்கெனக் குறுதி யாவார் யாவரோ வென்றி ரங்கி.

இ—ள்: ஆங்கவட்கு அளந்து நீக்கும் கோல் அறை அடைப்பது இன்றி - அவ்வந்தி யென்னும் வயோதிகப் பெண்ணுக்குக் கோலாலளந்து வரையறுத்து விடப்பட்ட பங்கொன்று மாத்திரம் அடைக்கப்படுவதின்றி, ஓங்கு அலைப் புது நீர் வைகை உடைப்பு எலாம் அடைக்கும் எல்லை - உன்னதமாகிய திரைகளையுடைய புதிய நீர் பிரவாகிக்கும் வைகை நதியின் ஏனை யுடைகரைக ளெல்லாம் அடைக்கப்படும்பொழுது, தீங்கு உள தறுகணாளர் சென்று அவட்கு உறுகண் செய்ய - கொடுமையை யுடைய வன்கண்ணர்களாகிய காரியதரிசிகள் சென்று அவ்வம்மைக்குத் துன்பஞ் செய்ய, ஈங்கு எனக்கு உறுதி ஆவார் யாவரோ என்று இரங்கி - அவ்வம்மை இவ்வாபத்தின்கட் டமியேனுக்கு உறுதுணையாவார் யாவரோ வென்று சிந்தித்து மனமிரங்கி எ—று.

ஆங்கவன் ஒரு சொன்னீர்மைத்து. ஆங்கு வைகை நதிக்கரை என்றுமாம். அறை வரையறுக்கப்பட்டது. உடைப்பெலா மடைக்கு மெல்லை என்புழிச் செயப்படுபொருள் செய்ததுபோலக் கூறப்பட்டது. (உ௩)

பிட்டினைக் கூலி கொண்டு பெருங்கரை யடைப்பாரின்றி
நெட்டிலைச் சூல மேந்து நின்மலன் கோயி லெய்தி
மட்டறத் தளர்ந்த கொங்கை மார்பினிற் கண்ணீர் வார
வெட்டுருத் திரண்ட பாத மிறைஞ்சிநின் றிதனைக் கூறும்.



இ—ள்: பிட்டினைக் கூலி கொண்டு பெருங்கரை அடைப்பார் இன்றி - சிற்றுணவாகிய பிட்டினையே கூலியாக ஏற்றுக்கொண்டு பெரிய வைகை நதிக் கரைக்கு அணை கட்டும் கூலியாள் ஒருவரும் இல்லாமையான், நெட்டு இலைச் சூலம் ஏந்தும் நின்மலன் கோயில் எய்தி - அவ்வந்தி ஐமை வடிவாகிய நெடிய சூலவேலைத் தாங்கும் நிருமலராகிய சோமசுந்தரக் கடவுள் வீற்றிருக்கும் விண்ணிழி விமானமென்னும் கோயிலை அடைந்து, மட்டு அறத் தளர்ந்த கொங்கை மார்பினில் கண் நீர் வார - அளவிறப்பச் சாய்ந்த தனங்களையுடைய தன் மார்பிலே கண்ணீர் ஒழுக, எட்டுருத் திரண்ட பாதம் இறைஞ்சி நின்று இதனைக் கூறும் - அஷ்ட மூர்த்தந் திரண்ட அக் கடவுளுடைய திருவடிகளைத் தரிசித்து வணங்கி யெழுந்து நின்று இதனை விண்ணப்பஞ் செய்வாளாயினள் எ—று.

கூலி முற்கூலி; பிற்கூலியாயின் அதனை விற்றுக் கொடுத்தல் கூடுமாகவினென்க. மட்டறத் தளர்தல் சாயுமளவெல்லாஞ் சாய்தல். மட்டு- அளவு. அட்டமூர்த்தமாவன: "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன், புலனுய மைந்தனோ டெண் வகையாய்ப் புணர்ந்து நின்றான்" என்னுந் திருவாக்கானு மறிக. உயிர் - வாயு. மைந்தன் - ஆன்மா. இனி, மட்டறத் தளர்ந்த கொங்கை என்பதனை, "கைபரந்து வண்டிசைக்குங் கூந்தல்" என்புழிப் போல வெகுபத வெகுவிரீகி என்றலுமொன்று. வெகுவிரீகி அன்மொழி. (உ௪)

வேறு.

நெட்டரவக் கச்சுடையாய் நீலநிறத் திருமாதின்
வட்டமுலைத் தழும்புபட வந்தணையுந் திருமார்பா
கட்டியசெஞ் சடையாயுன் கண்ணருள்கொண் டெப்பொழுதும்
பிட்டினைவிற் றுண்பேற்கும் பேரிடும்பை யுளதாமோ.

இ—ள்: நெட்டு அரவக் கச்சு உடையாய் - நெடிய சர்ப்பக்கச்சை யுடையவரே, நீல நிறத் திருமாது இன் வட்ட முலைத் தழும்பு பட வந்து அணையும் திருமார்பா - பசிய திருமேனியையுடைய காமாக்ஷியம்மை இனிமையாகிய பர அபர ஞானமாகும் வட்ட வடிவையுடைய ஸ்தனங்களினாலே தழும்புண்டாக வந்தணையுக் திருமார்பையுடையவரே, கட்டிய செம் சடையாய் - மகுட ரீதியாகக் கட்டப்பட்ட சிவந்த சடையை யுடையவரே, நின் கண் அருள் கொண்டு எப்பொழுதும் பிட்டினை விற்று உண்பேற்கும் - தேவரீரது கிருபாநோக்கத்தைக் கொண்டு அன்றன்று பிட்டினை விற்று ஊதியங் கொண்டு சீவிக்குந் தரித்திரசிரோமணியாகிய தமியேனுக்கும், பேர் இடும்பை உளது ஆமோ - அரசனாற் பெருந் துன்பம் சம்பவிக்குமோ எ-று.

மிக்க வறுமையால் உலகத்தோடு தொடர்பில்லாத தமியேனுக்கு அவ் வுலகை யோம்பும் அரசனால் இடும்பை யுறுதற்கு யாது மியை பில்லை யென் பது கருத்து. சிற்றின்ப நுகர்ச்சிக் கேதுவாகிய மகளிர் முலைபோ லன்றிப் பேரின்ப நுகர்ச்சிக் கேதுவாகிய பர அபர ஞானங்களே ஈண்டு முலையாக உருவகிக்கப்படுமென்பார் அவ்விசேடந் தோன்ற முலையென வாளா கூறாது இன்முலை என விதந்து கூறினர். பரஞானம் அநுபவஞானம். அபர ஞானம் சாத்திரஞானம். இன்முலை, வட்டமுலை எனக் கூட்டுக. இரீதி- ஒழுங்கு. உம்மை இழிவு சிறப்பு. இது கொச்சகக் கலிப்பா. (உ௫)

யாருடனு னினிப்புகல்வே னென்னுடையாய் வைகையினன்
னீருடையா தடைக்கும்வகை நீசிறிதின் றருளாயேற்
சீருடையா யுனக்கடிமை செய்யுமவர்க் கெளியையெனும்
பேருடையா யெனப்பலரும் பேசுமொழி பழுதாமே.

இ—ள்: என் உடையாய் நான் இனி யாருடன் புகல்வேன் - என்னை அடிமையாக வுடையவரே தேவரீரோ டல்லது தமியேன் வேறு இனி ஆரோடு முறையிடுவேன், வைகையின் நல் நீர் உடையாது அடைக்கும் வகை நீ சிறிது இன்று அருளாயேல் - வைகை நதியின் நல்லநீர் உடையாது அடைக்கப்படும் வண்ணந் தேவரீர் சிறிதிப்பொழுது அடியேற் கநுக்கிரகஞ் செய்யா தொழிவீராயின், சீருடையாய் - சுத்தசாட்குண்ணியமாகிய சிறப் பியல்பை யுடையவரே, உனக்கு அடிமை செய்யும் அவர்க்கு எளியை எனும் பேர் உடையாய் எனப் பலரும் பேசும் மொழி பழுது ஆமே - தேவ ரீருக்கு ஆட்செய்யுந் திருத்தொண்டர்களுக் கெல்லாம் தேவரீர் எளிவந்து அருள்செய்வீரென்னும் புகழுடையீ ரென்று நம்மவர் பலரும் பேசு முலோக வதந்தி இன்று என்னளவிற் பிழைபட்டுவிடுமன்றோ எ—று.

நீ சிறிதின் றருளாயேல் யாருட னுனினிப் புகல்வே னென மேலே கூட்டி முடிக்க. சுத்தசாட்குண்ணியம் மேலே விளக்கப்பட்டன. உலோக வதந்தி உலகப் பேச்சென்பது மேலுமுரைத்தாம். இனிப் பேருடையா யென்பதற்குத் தாற்பரியம்பற்றித் தீனாநுகரென்னும் பேருடையீர் என் றும், அடிமை செய்யும் அவர்க்கெளியீரென்னும் பெருமை உடையீ ரென் றும் உரைப்பினுமமையும். யாவர் யாரெனக் கெட்டது. இது விதியின்றி வரும் புணர்ச்சியில் விகாரக்கேடென்க. (உ௬)

தாயுமிலை தந்தையிலை தமருமிலை தமியேனைப்
பேயினுட னின்றுலும் பிரித்தறிய வொண்ணாது
தீயதெ னிலம்பாடென் சிந்தையில்வெந் துயர்தீர
நீயருளா தொழியினுயிர் நீப்பேன்மற் றென்செய்கேன்.



இ—ள்: தாயும் இலை தந்தை இலை தமரும் இலை - எனக்கு மாதாவு மில்லை பிதாவுமில்லை ஞாதிகளுமில்லை, தமியேனைப் பேயினுடன் நின்று லும் பிரித்து அறிய ஒண்ணாது - இவ்வாறு தனித்தவளாகிய யான் பேயோ டொருங்கு நிற்பினும் பேய் இது, வந்தி இவள் என்று என்னை வேற்றுமை தெரித்துணர ஒருவர்க்குங் கூடாது, எனது இலம்பாடு தீயது-என் வறுமை இங்ஙனம் மிகக்கொடியது, என் சிந்தையில் வெம் துயர் தீர நீ அருளாது ஒழியின் உயிர் நீப்பேன் - இவ்வியல்புடைய நிராதார சகிதையாகிய என் மிக்க மனத்துயர் என்னை விட்டகலக் கருணாநிதியாகிய தேவரீர் சிறிதநுக் கிரகஞ் செய்யாதொழியிற் பிராணத்தியாகஞ் செய்வேன், மற்று என் செய்கேன் - அஃதொழிந்து வேறு யாது செய்வேன் எ—று.

இல்லை என்பது மூவிடத்தும் இடைக் குறைந்து நின்றது. நீ என்ப தற்குக் கருணாநிதியாகிய நீ என்பது இசையெச்சத்தான் வருவிக்கப்பட் டது; "அந்தாமரை யன்னமே நின்னை யானகன் றாற்றுவனோ" என்புழி நின் என்பது போல. தாயின்றியுந் தந்தையின்றியுந் தமரின்றியுந் தான் றனித்தமையிற் பேயினுட னின்றுலும் பிரித்தறிய வொண்ணுமற் றன்னை நிராதாரஞ் செய்தது தன் வறுமையே யென்பாள் தீயதெ னிலம்பாடு என்றாள். இலம்பாடு - வறுமை. ஒருவற்குத் தாயின்மை முதலியன நிராதார நிமித்தமாமென்பதை, "தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோஞ், சேயோடு தான்பெற்ற செல்வம் போம்—ஆயவாழ், வுற்றரு டன்போ முடற்பிறப்பாற் றோள்வலி போம், பொற்றாலியோ டெவையும் போம்" என்பதனானறிக. பேய் நிராதார நீர்மையதாகலிற் பேயினுட னின்றுலும் பிரித்தறிய வொண்ணாதென்றா ளென்க. (உ௭)

வேறு.

இன்றெனக் குறுதி யாகி யானிடும் பிட்டு வாங்கி
வன்றிறற் கூலி யாளாய் வன்கரை யடைப்பா ரில்லை
யுன்றனக் கபயம் யானென் றுரைப்பவ டன்மே லன்பு
சென்றவட் காளா மாறு துணிந்தனர் தேவ தேவர்.

இ—ள்: இன்று எனக்கு உறுதி ஆகி யான் இடும் பிட்டு வாங்கி - இத்தினமெனக் குறு துணையாகி யான் கொடுக்கும் பிட்டினையே கூலியாகப் பெற்று, வன் திறல் கூலி யாளாய் வன் கரை அடைப்பார் இல்லை - மிக்க வலியையுடைய கூலியாளாகிப் பெரிய அணை கட்டுவார் ஒருவருமில்லை ஆகலான், யான் உன்றனக்கு அபயம் என்று உரைப்பவள் மேல் அன்பு சென்று - தமியேன் இனித் தேவரீருக் கடைக்கலமென்று பிரார்த்திக்கும் வந்தியினிடத்துத் திருவருண் மிக்குச் சேறலான், தேவதேவர் அவட்கு ஆளாமாறு துணிந்தனர் - மகாதேவராகிய சோமசுந்தரக் கடவுள் அவ் வந் திக்குத் தாங் கூலியாளாம்படி திருவுளங் கொண்டருளினர் எ—று.

சேறலான் என்பது சென்றெனத் திரிந்து நின்றது. வன்கரை போனை. பிட்டினையே கூலி கொள்ளப்பெறுதலும் அதன்பொருட் டுற்று நின்று வன்கரை யடைத்தற் காவாவை இவ்வொரு தினத்துட் பெறுதலும் நின்றிருவருளா னல்லது என்செயலால் ஒன்றுமின்றெனப் பிரார்த்தித்தா ளென்பார் உன்றனக் கபயம் யானென்றும், எத்துணையுமரிய தாம் எத் துணையு மெளிய இதனை விடாது செய்யத் திடசித்தங் கொண்டருளினு ரென்பார் அவட்காளாமாறு துணிந்தனர் தேவதேவரென்றுங் கூறினார். இது அறுசீரடி யாசிரியவிருத்தம். (உ௮)

ஆடையுந் துணிந்த சீரை யாகியே கூலி யாளாய்க்
கூடையுந் தலைமேற் கொண்டு கொட்டுடைத் தோள ராகிப்
பீடைகொண் டயர்வாள் காணப் பெரும்பசி யுடையார் போல
வேடைகொண் டொல்லை வந்தார் வேண்டிய வடிவங் கொள்வார்.

இ—ள்: வேண்டிய வடிவம் கொள்வார் - ஆங்காங்குத் தமக்கு வேண்டிய திருவுருவங் கொண்டருளுஞ் சிவபெருமானுனவர், கூலி ஆளாய் - ஈண்டுக் கூலிக்காரராகி, ஆடையுந் துணிந்த சீரை ஆகி - வஸ் திரமுங் கந்தை வஸ்திரமாகப் பெற்று, கூடையுந் தலை மேல் கொண்டு- மண்சுமக்குங் கூடையையுஞ் சிரமேற்கொண்டு, கொட்டு உடை தோளர் ஆகி - மண்வெட்டி தங்குந் தோளையுடையவராகி, பெரும் பசி உடையார் போல வேடை கொண்டு - மிக்க பசியுடையார் போல உணவின் மேல் வேணவாக்கொண்டு, பீடை கொண்டு அயர்வாள் காண ஒல்லை வந்தார் - மேற் கூறிய பிரகாரந் துன்பங் கொண் டயரும் வந்தி காண விரைவாக வீதியின்கண் வந்தருளினுர் எ—று.

துணிதல் - கிழிதல். ஆடையுந் துணிந்த சீரையாகி எனச் சினைவினை முதன்மே லேறிற்று. அது வேற்றுமைச் சினையாயினும் ஒற்றுமைச் சினை போல உடற்கின்றியமையாமையின். இஃதுணராதார் வினைத் தன்வினை வினையெச்சங்களோடு மாறுபடப் பிறவினை வினையெச்சமாக ஆக்கி எனத் திரித்துரைப்பர். பெரும்பசி யுடையார்போல வேடைகொண்டென்பதற்கு மிக்க பசியுடையவரைப் போல உதராக்கினி வெம்மைகொண் டென்றும், மிக்க பசியுடையவரைப் போலச் சோர்வுகொண் டென்றும் பொருள் கூறி னும் பொருந்தும். பசுக்கட்குரிய பாதந்திரம் சிற்றுணர்வு சிறுசெயல்கள் விருப்பு வெறுப்புக்களாகிய உபாதிகளொன்று மின்றி, ஆணவ நீங்கிய அறி வையுந் தொழிலையுங் கொண்டு நிற்றலிற் றமக் காங்காங்கு வேண்டப்படுந் திருமேனி கோடற்கோ ரிழுக்கின் றென்பார் வேண்டிய வடிவங் கொள்வா ரென்றார். அது "குறித்ததொன் றுருகமாட்டாக் குறைவில ஞதலானு, நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும், வெறுப்பொடு விருப்புத் தன்பான் மேவுத லிலாமையானு, நிறுத்திடு நினைந்த மேனி நின் மல னருளி னாலே" என்பதனானு மறிக. தலைமேல் கொண் டென்புழி ளகார வியல்பு மண் புகுந்தும் விண்பறந்து மென்புழிப் போல ஏழாம் வேற் றுமையில் எதிர்மறுத்து வந்தமை புறநடையாற் கொள்க. (உ௯)



வந்தெனை யேவல் கொள்வா ருளர்கொலோ மற்றிங் கென்று
புந்தியின் மகிழ்ந்து கோயில் வாயிலிற் புகன்ற போதி
லந்தநன் மொழியைக் கேளா வன்னைதன் னயர்ச்சி கூருஞ்
சிந்தனை யொழிந்து கூலி யாளரைச் சென்று சேர்ந்தாள்.

இ—ள்: வந்து எனைப் புந்தியின் மகிழ்ந்து ஏவல் கொள்வார் இங்கு உளர் கொலோ என்று கோயில் வாயிலின் புகன்ற போதில் - கூலியாளர் அங்ஙனம் வந்து என்னை மனமகிழ்ந்து வேலைகொள்வா ரிங்குளரோவென்று கோயில் வாய்தலினின்று விளித்த தருணத்து, அன்னை அந்த நல் மொழியைக் கேளா அயர்ச்சி கூரும் தன் சிந்தனை ஒழிந்து - அவ்வம்மை தன் செவிக்கினிய அவ்வசனத்தைக் கேட்டு மயக்க மிகும் பல தலையாய வெண் ணங்களை யெல்லாம் விட்டு, கூலி யாளரைச் சென்று சேர்ந்தாள் - அக் கூலியாளரை விரைந்து சென்று சமீபித்தனள் எ—று.

மனமுவந் தின்முகங் காட்டி யேவல் கொள்வார்க் கல்லது வெறுத்து வெகுளிமுகங் காட்டி யேவல்கொள்வார்க்குத் தாமுடம்படாமை விளக்கு தற்குப் புந்தியின் மகிழ்ந்தென விசேடித்தார். வந்தி மனமுவந் தின்முகங் காட்டி யேவல்கொள்ளுமாறும், காரியதரிசிகள் வெறுத்து வெகுளி முகங் காட்டி யேவல்கொள்ளாமையும் முன்னர் விளக்குப. (௩௦)

புடையின்மே லுலகோ ரின்றிப் புனைந்துள புலித்தோ லாடை
யுடையின்மே லசைக்குங் கச்சா யோங்குநச் சுரக மின்றிச்
சடையின்மேன் மதிய மின்றித் தாங்கிய மழுமா னின்றி
விடையின்மே லின்றி நின்ற வெளியனை வெளியிற் கண்டாள்.

இ—ள்: புடையின் மேல் உலகோர் இன்றி - இரு மருங்கினும் முறை யே நின்று சேவிக்கு மேலுலக வாசிகளாகிய அரிபிரமேந்திராதி தேவர்கள் என்னும் பரிசனங்க ளின்றியும், புனைந்துள புலித்தோல் ஆடை உடை யின் மேல் அசைக்கும் நச்சு உரகமாய் ஓங்கு கச்சு இன்றி - திருவரையிலே புனையப் பெற்ற புலித்தோலாகிய வஸ்திர வுடையின் மீதே இறுகப் பிணிக்கு நஞ்சையுடைய பாம்பாய் விளங்கும் உதர பந்தனமின்றியும், சடை யின்மேல் மதியம் இன்றி - திருச்சடையின்மீதே பாலசந்திரனுகிய தலைக் கோலமின்றியும், தாங்கிய மழு மான் இன்றி - திருக்கரங்களிலே தாங்கி யருளிய மழுவும் மானுமாகிய படைக்கலமும் புற்கல வாத்தியமுமின்றி யும், விடையின் மேல் இன்றி நின்ற வெளியனை - அறக் கடவுளாகிய இடபவாகனத்தின் மேல் இவர்த லின்றியும் வறிதே நிற்கின்ற சிதாகாச

வடிவையுடைய சிவபெருமானாகிய கூலியாளரை, வெளியில் கண்டாள் - வந்தி வாய்தலின் வெளியே நிற்பக் கண்டாள் எ—று.

புடையிலின்றியென முடிக்க. ஆடை யுடை என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தோலாடை யுடை என்பது பன்மொழித் தொடர். கச்சு மதியமு மாகிய ஆதேயங்களோடு முறையே புலித்தோலாடையுஞ் சடையுமாகிய ஆதாரங்களை உடம்பொடு புணர்த்துக் கூறினார். அவற்றினது அபாவமும் ஈண்டுக் கொள்ளப்படுதற்கென்க. புற்கல வாத்தியம் உயிர்ப்பொருள் வாத்தியம். அது "மற்றதன் பின்றை யெந்தை மான் பிணை யதனை நோக்கித், தெற்றென விளித்து நந்தஞ் செவியினுக் கணித் தாய் மேவி, நிற்றலுங் கூவு கென்றே நீடருள் செய்து வாமப், பொற்றடங் கையிற் பற்றிப் பொருக்கென வேந்தி நின்றான்" என்பதனானு முய்த்துணர்க. நின்ற எளியனை யெனக் கண்ணழித்து ஈண்டைக் கேற்ப அடியவர்க் கெளியவரை யென் றுரைத்தலு மொன்று. (௫௧)

மைந்தநீ யெனக்கிங் காளாய் வருகென முன்னர்க் கூலி
தந்தியேல் வருவ னென்று சாற்றலு நுகர விப்போ
திந்தவா ரமுதம் போலு மினியபிட் டளிப்பே னல்லா
லந்திவா யிதனை விற்றே யளிப்பனின் கூலி யென்றாள்.

இ—ள்: மைந்த நீ எனக்கு இங்கு ஆளாய் வருகென - மகனே நீ யெனக் கிப்பொழுது கூலியாளாய் வரக்கடவை யென்று வந்தி கேட்ப, முன்னர்க் கூலி தந்தியேல் வருவன் என்று சாற்றலும் - அதற்கு அவர் முற் கூலி தருவாயாயின் வருவேனென்று கூறுதலும், நுகர ஆர் அமுதம் போலும் இனிய இந்தப் பிட்டு அளிப்பேன் - அதற்கு அவ்வம்மை நீ உண்ணும் பொருட்டு அரிய அமிர்தம் போலும் இனிய பிட்டை யுனக்கு முற்கூலி யாகத் தருவேன், அல்லால் இதனை விற்று அந்திவாய் நின் கூலி அளிப்பன் என்றாள் - அது நினக்குக் கருத்தன்றாயின் இப்பிட்டை விற்று அஸ்தமயன காலத்தில் நின் கூலியைக் கைப்பொருளாகத் தருவேனென்று கூறினாள் எ—று.

வருக வென்னும் வியங்கோளீறு குறைந்து நின்றது; வியம் - ஏவல். அது 'வியவனே யேவுவான்பேர்' என்பதனானு மறிக. அல்லால் என்பது வினையெச்சக்குறிப்பு. சாற்றலுமென்ப தும்மீற்றுவினையெச்சம்; வாய்பாடின்மையிற் புதியன புகுதலாற் கொள்க. அது என்றானென்னும் பிறவினை முதல்வினை கொண்டது. பிட்டை யுபகாரமாகத் தந்து பின்னர் அந்தியிற் கூலியுந் தருவே னென்றுமாம். அந்தி சாயரக்ஷை. அந்திவா வெனவும் பாடம். (௫௨)



இரும்பசி யுடையே னன்னே யினியபிட் டளிப்பை யாகிற்
குரம்புகொண் டடைப்பன் யானே கோலறை முழுது மென்னக்
கரும்புறத் துகின்மே லிட்ட பிட்டினைக் கரத்தா லள்ளி
விரும்பியிங் கிதனைக் கொள்வா யென்றனள் விருப்ப மிக்காள்.

இ—ள்: அன்னே இரும் பசி உடையேன் இனிய பிட்டு அளிப்பை ஆகில் - தாயே நான் இதுபொழுது பெரும்பசி யுடையேன் ஆகலின் இனிய பிட்டினைத் தருவாயானல் அதனையுண்டு பசி தீர்ந்து, கோல் அறை முழுதும் யானே குரம்புகொண்டு அடைப்பன் என்ன - கோலால் வரையறுக்கப்பட்ட நின் பாக முழுவதையும் யானே வரம்புயர்த்துக் கட்டுவேன் என்று கூற, விருப்ப மிக்காள் விரும்பி - ஆதரவுமிக்க வந்தி கேட்டு முன்னையினும் மிக விரும்பி, கரும் புறத் துகில் மேல் இட்ட பிட்டினைக் கரத்தால் அள்ளி இங்கு இதனைக் கொள்வாய் என்றனள் - கறுத்த புறத்தை யுடைய வஸ்திரத்தை மேலே இட்டு மூடிய பிட்டைக் கைகளா லள்ளி மகனே நீ இதனை வாங்கிக்கொள் ளென்று கூறினள் எ—று.

இறக்கிக் கொட்டியவுடன் மூடுகின்றுழிப் பிட்டி னுவிபட்டுக் கறுத்த வஸ்திர மென்பார் கரும்புறத் துகில் என்றார். வஸ்திரத்தை மேலே இட்டு மறைத்தல் ஈன சாதியாருஞ் சமயத்தாருங் காணாமைப் பொருட்டும் ஈ முதலியன அதன்மேல் வீழாமைப் பொருட்டு மென்க. (௫௩)

கூற்றடுங் கமல பாதர் குறுந்துணிக் கரிய சீரை
யேற்றிடும் பிட்டு வாங்கி யின்புற வமுது செய்து
மாற்றரும் பசியை யன்னே மாற்றினை யினிப்போய் வைகை
யாற்றினின் கூற்றி லுண்டா மருங்கரை யடைப்ப னென்றார்.

இ—ள்: கூற்று அடும் கமல பாதர் - யமனைக் கொன்றருளுந் திருவடித் தாமரையினையுடைய சிவபெருமானாகிய கூலியாளர், குறும் கரிய துணிச் சீரை ஏற்று - குறுத்த கரிய கந்தை வஸ்திரத்தை விரித்தேந்தி, இடும் பிட்டு வாங்கி இன்பு உற அமுது செய்து - வந்தி இடும் பிட்டை வாங்கி இன்பமிகத் திருவமுது செய்தருளி, மாற்று அரும் பசியை அன்னே மாற்றினை - தன்னை யுடையாரது மான முதலிய பத்தையு மொருசேர மாற்றுகின்ற பொறுத்தற்கரிய பசியைத் தாயே நீ மாற்றினாய், இனி வைகை ஆற்றிற் போய் நின் கூற்றில் உண்டாம் அரும் கரை அடைப்பன் என்றார் - இனி நான் வைகை நதிக்கரையிற் சென்று நின் பங்குக்குளதாகிய பெரிய அணையைக் கட்டுவேன் என்று கூறியருளினார் எ—று.

உமையம்மை வருடப் பொறு து சிவக்கும் மென்மையதாயினும் யமனை யுதைத்துக் கோறற்கேற்ற வன்மையதென்பார் கூற்றடுங் கமலபாதர் என்

ரூர். தன்னை யுடையாரது மானமுதலிய பத்தையும் பசி தப்பாது மாற்று மென்பது, "மானங் குலங் கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவ முயர்ச்சி தாளாண்மை—தேனின், கசிவந்த சொல்லியர் மேற் காமுறுதல் பத்தும் பசிவந்திடப் பறந்து போம்" என்பதனானு மறிக. நீக்குதற்கரிய பசியென்றுமாம். அது "பசித்துண்டு பின்னும் பசிப்பானை" என்பதனானு மறிக. பசியை யின்னே மாற்றினை எனவும் பாடம். (௫௪)

நன்றுநன் றின்னு மன்னே நயந்துபிட் டளித்தல் வேண்டு
மென்றுதந் துணிந்த சீரை யேற்றது நிறைய வாங்கித்
தின்றுநின் றலைநீர் வைகைச் செழுங்கரை யதனிற் சென்று
குன்றெனுந் தவத்தா யுன்றன் கோலறை காட்டு கென்றார்.

இ—ள்: அன்னே பிட்டு நன்று நன்று நயந்து இன்னும் அளித்தல் வேண்டும் என்று தம் துணிந்த சீரை ஏற்று அது நிறைய வாங்கி-தாயே இப்பிட்டு மிகவு நன்று ஆகலின் என்மேல் விருப்பங்கொண் டின்னுந் தரல்வேண்டுமென்று தமது கந்தைவஸ்திரத்தை விரித்தேந்தி அது நிறைய வாங்கி, தின்று நின்று அலை நீர் வைகைச் செழும் கரை அதனில் சென்று-அதனைத் தின்றுநின்று அலைமறிகின்ற நீரையுடைய வைகைநதியின தழகிய கரையின்கட் போய், குன்று எனும் தவத்தாய் உன்றன் கோலறை காட்டு கென்றார்-மலையென்று சொல்லத்தகுந் தவத்தையுடைய தாயே இனி உன்பங்கைக் காட்டுக என்று கூறியருளினார். எ-று.

அடுக்கிரண்டனுண் முன்னையது மிகுதியினும், பின்னையது ஒரு தொழில் பலகானிகழ்தற்கண்ணும் வந்தன. வியங்கோளீறு தொக்கது. சலியாமையும் பெருமையும்பற்றித் தவம் குன்றாக உருவகஞ்செய்யப் பட்டது. கோலறை கோலால் வரையறுக்கப்பட்டது. தன், குச் சாரியை. (௫௫)

மெய்த்தவம் புரிவார் தம்மின் விழுப்பமிக் குடைய வன்னை
யித்தடங் கரையை வல்லே யெம்பிநீ யடைப்பா யென்னப்
பைத்தவெம் பகுவாய் நாகம் பனிமதிப் பாதிகொன்றைக்
கொத்துடன் முடிக்க வல்லார் கோலறை யடைக்க லுற்றார்.

இ—ள்: மெய்த் தவம் புரிவார் தம்மின் விழுப்பம் மிக்குடைய அன்னை-மெய்ம்மையாகிய தவத்தைச் செய்பவர்களுள் மிகவும் மகிமையையுடைய நம்மாதாவாகிய வந்தியானவள், இத் தடம் கரையை வல்லே எம்பி நீ அடைப்பாய் என்ன-இவ்விசாலமாகிய கரையினை விரைவாக என்றம்பி நீ யடைப்பாயாகவென்று கூற, பைத்த வெம் பகுவாய் நாகம் பனி மதிப் பாதி கொன்றைக் கொத்து உடன் முடிக்க வல்லார்-படத்தையும் நஞ்சுகக்குங் கொடிய பகுவாயையுமுடைய பாம்பையும் குளிர்ச்சி பொருந்திய பாலசந்திரனையும் பகைதீர்த்துக் கொன்றைப்பூங்கொத்தோ டொருதன்மையவாகச் சூட்டவல்ல சிவபெருமானாகிய கூலியாளர், கோலறை அடைக்கல் உற்றார்-அவ்வம்மையின் பங்கை அடைத்தல் செய்வாராயினர் எ-று.



பைத்த நாகம் பகுவாய் நாகம் எனத் தனித்தனி முடிக்க. பகுவாய்-பேழ்வாய். பாம்பினது தோற்றக்கொடுமையும் விழுங்கியுமிழும் வாயினது வெம்மையும், மதியினது தண்மையும் அதனது தோற்றத் தெளிமையும் விளக்குமுகத்தால் அவையிரண்டிற்குந் தம்முள் வேறுபாடுண்மை சாதித்தற்குப் பைத்த வெம்பகுவாய் நாகம் பனிமதிப்பாதி என விசேடித்தார். பாதி-பங்கு; ஈண்டொருகலையென்றதாம். ஏனைத் தவந் தானம் கன்ம யோக முதலிய பசுபுண்ணியங்கள் பயக்குஞ் சுவர்க்கபோகப் பயன் அநுபவிக்கப்பட்டு விரைவிற் றொலைந்தவழி அவ்வான்மா மீண்டும் பிறப்பிறப்புக்களிற் பட்டு முன்போலத் துயருறுதல் தப்பாமையின் அவற்றைப் பொய்த்தவமென்பார், எவ்வாற்றானும் ஞானம் வாயிலாகப் பரமுத்தியைப் பயந்தேவிடுஞ் சரியை கிரியை யோகங்களாகிய சிவபுண்ணியங்களை ஈண்டு மெய்த்தவம் என்றும், அரிபிரமேந்திராதி தேவருங் கனவிலுங் காண்டற்கரிய முழுமுதலாகிய சிவபெருமான் கூலியாளராகி வந்து தன் பிட்டை அமுதுசெயப் பெறுதலின் மேற், கரையடைக்கவும் பெறுதலின் இவ்வம்மை அவரினும் மற்றெவரினும் மிக மகிமையுடையளாதன்மேல், அக்கடவுட்குப் பிட்டமுதருத்தித் தாயாகி நிற்றலின், அக்கடவுளை வழிபடு நமக்கும் அரும் பெருந் தாயேயாமென்பார் தவம்புரிவார் தம்மின் விழுப்பமிக்குடைய வன்னை யென்றுங் கூறினார். (௫௬)

பேர்ப்பர்மண் கூடை பெய்வர் பிறைமுடி மேற்சும் மாடு
சேர்ப்பர்பின் சுமந்து சென்றச் செய்கரை சிந்தி மீள்வர்
வேர்ப்பர்மெய் யிளைப்பார் போல மென்றுபிட் டிரத நாவிற்
பார்ப்பரவ் வன்னை தன்மேற் பரிந்தருட் பார்வை செய்வார்.

இ—ள்: மண் பேர்ப்பர்-மண்ணை வெட்டுவர், கூடை பெய்வர்-அதனைக் கூடையின்கணிடுவர், பிறை முடி மேல் சும்மாடு சேர்ப்பர்-பிறையையுடைய திருமுடியின்மேற் சுமையடை கோலி வைப்பர், பின் சுமந்து சென்று அச் செய் கரை சிந்தி மீள்வர்-பின்னர் அதனைச் சுமந்து சென்று கட்டப்படும் அவ்வுடைகரையிற் கொட்டித் திரும்புவர், மெய் இளைப்பார்போல வேர்ப்பர்-அவ்விடாமுயற்சியினாற் சரீரம் வருந்தி இளைப்பார் போலக் குறுவெயர்வை கொள்வர், பிட்டு மென்று இரதம் நாவிற் பார்ப்பர்-அவ்விளைப்பு நீங்கும் வண்ணங் கந்தையிலுள்ள பிட்டை அள்ளி வாயிலிட்டு மென்று தின்று அதன் சுவையை நாவினா லுணர்வர், அ அன்னை மேல் பரிந்து அருள் பார்வை செய்வார்-அப் பிட்டமுதைத்

தமக்குக் கொடுத்த அவ்வம்மை மீது முன்னையினு மிக அன்புகூர்ந்து கிருபாநோக்கஞ் செய்வார் எ—று.

செய்கரை சிந்தி என்புழி இயல்பு வேற்றுமைப் புறனடையாற் கொள்க. பின் என்பதனைப் பேர்ப்பர் மண் என்னு முதற்றொடரொழிந்த வினை யைந்தொடரோடுங் கூட்டிப் பொருள் கொள்க. அம்முதற்றொடர் முதலிய வெழுதொடரும் ஒன்றன்பி னொன்று காரணகாரிய முறையாகத் தொடர்ந்து நிற்றலின் இது காரண காரியத் தொடர்பு நவிற்சியென்னு மலங்காரமென்க. (கூஎ)

பிட்டுநன் றென்று கூறிப் பிறைமுடி யசைப்பார் வேட
னிட்டமென் றசையிற் சால வீசனுக் காமி தென்பார்
கொட்டுடன் கவிழ்த்த கூடை கொண்டுநின் றாடல் செய்வார்
வெட்டிமண் குவிப்பா ரோடி விரைந்தடிப் பாய்ந்து மீள்வார்.

இ—ள்: பிட்டு நன்று என்று கூறிப் பிறை முடி அசைப்பார் - இப் பிட்டு வரவர மிக நன்றாகவிருக்கின்றதென்று சற்காரங் கூறிப் பிறையை யுடைய சிரசை மகிழ்ச்சியினால் அசைப்பர், வேடன் இட்ட மென் தசையின் ஈசனுக்கு இது சால ஆம் என்பார் - கண்ணப்ப நாயனாராகிய வேடுவர் திருக்காளத்தி யீசருக்குப் படைத்த மென் றசை யமுதினும் இஃது இம்மதுரைச் சோமசுந்தரக் கடவுளுக்குப் பூரண பிரீதியாகு மென்பர், கொட்டு உடன் கவிழ்த்த கூடை கொண்டு நின்று ஆடல் செய்வார் - தோளின்கணிட்ட மண்வெட்டு கருவியுடன் சிரசிற் கவிழ்த்த கூடையையுங் கொண்டு நின்று ஆநந்தக்கூத்தாடுவர், மண் வெட்டிக் குவிப்பார் - மண்ணை வெட்டிக் குவித்து, ஓடி விரைந்து அடிப் பாய்ந்து மீள்வார் - அடியளந் தெல்லை குறித்துவிட்டுப் பின்னுக்கோடிச் சென்று மீள முன்னுக்கு விரைந்தோடி வந்து அம் மணற்குன்றைக் கடந்து அவ்வெல்லைக் கப்பாற் குதித்துத் திரும்புவர் எ—று.

கண்ணப்பநாயனார் பக்குவம் பரீக்ஷித்துப் படைத்த தசையமு தென்பார் மென்றசையென முடித்தார். கண்ணப்பநாயனாரது பத்திவிசேடத்தை, "கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபி, னென்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி" என்பதனானு முணர்க. பிறைமுடி இயற்கையடை. (கூஅ)

பரிவுடை மனத்தி னாளும் பரமர்தஞ் செய்தி கண்டு
கரையினை யடைத்தல் வேண்டு மென்றுதன் கருமங் கூறாள்
உரனுடை வழுதி தூதர் காண்பரே லுறுகண் செய்வார்
இருவினை யுடையேன் மற்றிங் கென்செய்வே னென நினைந்தாள்.



இ—ள்: பரிவு உடை மனத்தினாளும் பரமர் தம் செய்தி கண்டு - சீவகாருண்ணியம் பொருந்திய மனத்தையுடைய வந்தியுஞ் சோமசுந்தரக் கடவுளினது திருவிளையாடலைக் கண்டு, கரையினை அடைத்தல் வேண்டும் என்று தன் கருமம் கூறாள் - அணைகட்டுதல் செய்யவேண்டு மென்று தன் காரியத்தைக் குறித்து ஒன்றும் பேசாதவளாய், உரன் உடை வழுதி தூதர் காண்பரேல் உறுகண் செய்வார் - வலியையுடைய பாண்டியனது தூதுவர் காண்பாராயின் எமக்குத் துன்பஞ் செய்வார், இருவினை உடையேன் மற்றிங்கு என் செய்வேன் என நினைந்தாள் - இருவினையையுடைய பாவியாகிய தமியேன் இதற்கு யாது செய்வேன் என்று பலவற்றையும் எண்ணினாள் எ—று.

இங்ஙனந் தானொன்று கருதத் தன் வினைவயத்தான் அதற்கு மாறாகப் பிறிதொன்று சம்பவித்தமையின், இருவினை யுள்ள துணையும் அவ்வினை வயத்தானல்லது தன்வயத்தா னொன்று நிகழாதென இன்னோரன்ன பலவற்றையும் நினைத்தா ளென்பார் மற்றிங் கென்செய்வே னென நினைந்தா ளென்றார். ஈண்டுக் கூலியாள் கிடைத்தல் நல்வினை வயத்தானும், அவன் உற்று நின்று வேலை செய்யாமை தீவினை வயத்தானும் நிகழ்ந்தன என்பது வந்தியின் கருத்தென்க. (கூகூ)

மற்றவ ணிலைமை வெள்ளி மன்றுணின் றாடு கின்ற
கொற்றவ ரறிந்து பின்னுங் கூடைமண் கரைமேற் கொட்டி
யுற்றவிக் கரையை யன்னே யொல்லையி லடைப்ப னின்னே
சற்றிதற் கிரங்கா தேகுன் றகவுடை மனையி லென்றார்.

இ—ள்: அவள் நிலைமை வெள்ளி மன்றுள் நின்று ஆடுகின்ற கொற்றவர் அறிந்து - அவ்வந்தியினது அந்நிலைமையை வெள்ளியம்பலத்தின்கணின்று திருநடனஞ் செய்தருளும் பசுபதியாகிய சோமசுந்தரக்கடவுளொன்னுங் கூலியாளர் திருவுளத்தடைத்து, பின்னும் கூடை மண் கரை மேல் கொட்டி - பின்னரும் ஒரு கூடை மண்ணைக் கரையிலே கொட்டிவிட்டு, உற்ற இக்கரையை அன்னே யான் ஒல்லையில் அடைப்பன் - உனக்காக விடப்பட்ட இக்கரையைத் தாயே நான் விரைவாக அடைப்பேன், நீ சற்று இதற்கு இரங்காது உன் தகவு உடை மனையில் இன்னே ஏகு என்றார் - நீ சிறிது மிதன்பொருட்டு மனமிரங்காது உன் தகுதியுடைய வீட்டிற்கு இப்பொழுதே செல்வாயென்று கூறியருளினார் எ—று.

அந்தரியாமியாய் எவற்றையு முன்னணின் றுணர்பவராகலின் மற்றவ ணிலைமை வெள்ளி மன்று ணின்றாடுகின்ற கொற்றவ ரறிந்தென்றும், சிவபிரான் முன்னர்ப் பிட்டமு தருந்தப்பெற்ற திருமனை யாகலிற் றகவுடை மனையென்றுங் கூறினார். இனி வந்தி வறியளாகலின், தகவுடைமனை

என்புழி, உடை மனை என்பதனை வினைத்தொகையாகக் கொண்டு தக வற்றமனை யென்றது மொன்று. "சங்கு தரு நீணிதியஞ் சாலவுடை நாய் கன்" என்புழி உடைநாய்கன் என்பது வினைத்தொகை என்றார் நச்சி னார்க்கினியாரு மென்க. (௪௦)

நீறணி புனித மேனி நின்மலன் விடுப்ப வேகித்
தோறிரை முகத்தி னுடன் றொன்மனை புகுது மெல்லைக்
கூறருந் தவத்தின் மிக்காள் கோலறை யடைப்ப வஞ்சி
மாறிடு திரைக்கை தன்னாற் றொழுதனள் வைகை மங்கை.

இ—ள்: நீறு அணி புனித மேனி நின்மலன் விடுப்ப - விபூதியை யணிந்த நிஷ்களங்கமாகிய திருமேனியையுடைய சோமசுந்தரக் கடவுள் அனுப்ப, தோல் திரை முகத்தினள் ஏகித் தன் தொல் மனை புகுதும் எல்லை - தோல் திரைந்த முகத்தையுடைய வந்தி சென்று தன் பழைய வீட் டிற் புகும்பொழுது, கூறு அரும் தவத்தின் மிக்காள் கோல்அறை அடைப்ப- விதந்து கூறுதற்கரிய தவத்தான் மேம்பட்ட வந்தியினது பாகமாகிய செய் கரையைச் சிவபெருமான் அடைக்கும்பொழுது, வைகை மங்கை மாறிடு திரைக் கை ஆல் தொழுதனள் - வைகைநதியாகிய பெண் வேகந்தணிகின்ற திரைகளாகிய கைகளினாலே சுவாமியை அஞ்சலி செய்தனள் எ—று.

சத்திகாரியமாகிய திருமேனியாகலிற் புனிதமேனியென்றும், முன் நன் னீரடங்கி யுள்வாங்கிச்செல்ல என்றாராகலின், அதற்கேற்ப ஈண்டு மாறிடு திரைக்கை என்றுங் கூறினார்; ஒன்றன்பின்னொன்றாக மாறிவீசுந் திரையென்று மாம். நீறிடுபுனிதமேனி எனவும், கூறிடு தவமெனவும் பாடம். (௪௧)

சிறந்தமண் கூடை வேணித் திருமுடிக் கொட்டை யாக
நிறந்திகழ் கொன்றை நீழ னிறைமண லணைய தாக
வுறுந்தொழின் முயற்சி யாலே யுயங்கிமெய் யிளைத்தார் போல
மறைந்துல கெங்கு மான வள்ளலார் பள்ளி கொண்டார்.

இ—ள்: மண் கூடை வேணித் திருமுடிச் சிறந்த கொட்டை ஆக - மண் சுமக்குங் கூடை சடையை யுடைய திருமுடிக் கழகிய தலையணையாக வும், நிறம் திகழ் கொன்றை நீழல் நிறை மணல் அணை ஆக - பொன் னிறம் விளங்கும் பூவையுடைய கொன்றைமர நீழலிலே நிறைந்த மணல் சயனமாக வும், உறும் தொழில் முயற்சியால் உயங்கி மெய் இளைத்தார் போல - மிகுந் தொழின் முயற்சியாலே அறவருந்திச் சரீரமிளைத்தார் போன்று, உலகு எங்கும் மறைந்து ஆன வள்ளலார் பள்ளிகொண்டார் - உலகெங்கும் விற கிற் றீயைப் போல வியாபித்து மறைந்து நிற்கும் வள்ளலாகிய சோமசுந் தரக் கடவுள் பள்ளிகொண்டருளினார் எ—று.



நீழலிலே பள்ளிகொண்டாரென முடிக்க; நீழல் என்பதை நிறை என்னும் வினைத்தொகையோடு முடிப்ப தாசிரியர் கருத்தாயின் நிறந்திகழ் கொன்றையின் கீழ் நிறை மணலெனத் தம்முடிபினிது விளங்கக் கூறுவர். அங்ஙனங் கூறாது கொன்றை நீழலெனக் கூறுதலின் அவர்க்கது கருத்தன் றென்க. மண் கூடையைத் தந்திருப்பள்ளியறைச் சித்திரப்பூம்பட்டாடைத் தலைக்கொட்டைபோலக் கொண்டருளினமை தோன்றச் சிறந்த கொட்டை யாக என்றும், மணலினையை, அதன்மீது உதிர்ந்து கிடக்கும் பூவான் மலரணை யென்று குறிப்பித்தற்கு நிறந்திகழ் கொன்றை என்றும், உல கெங்கு மறைந்து நிற்பினும் தம் மெய்யன்பர்க்கெளிவந்து வெளிநின்று, அவர் வேண்டிய வேண்டியாங்கீயுங் கொடைமடந்தோன்ற மறைந்து உலகெங்குமான வள்ளலென்றுங் கூறினார். (௪௨)

ஆங்கவர் துயிலு மெல்லை யருட்பெரு வாழ்வின் மிக்கார்
ஓங்கிய கருமஞ் செய்வா ராகியொண் பிரம்பு தாங்கிப்
பாங்குநின் றவரை நாடிப் பகிர்ந்தகோ லறையிலுள்ள
தீங்குநன் குணர்வீ ரென்னச் சென்றகன் கரையிற் சேர்ந்தார்.

இ—ள்: ஆங்கு அவர் துயிலும் எல்லை - அங்ஙனமவர் ஆனந்த நித் திரை செய்தருளுஞ் சமயத்து, அருள் பெரு வாழ்வின் மிக்கார் - திருவரு ளானாய பேரானந்தப் பெருவாழ்வின் மிகமகிழ்பவராகிய திருவாதவூரடிகள், ஓங்கிய கருமம் செய்வார் ஆகி ஒண் பிரம்பு தாங்கிப் பாங்கு நின்றவரை நாடி - உயர்வாகிய இராசகாரியங்களைத் தங்கீழ்நின்று நடத்துபவராகிக் கையில் அழகிய பிரம்பைக்கொண்டு பக்கத்தே நிற்குங் காரியதரிசிகளைப் பார்த்து, பகிர்ந்த கோலறையில் உள்ள நன்கு தீங்கு உணர்வீர் என்ன - அவ ரவர்க்கு வகுத்துக் கொடுக்கப்பட்ட உடை கரைப் பாகங்களினுள்ள குண குணங்களைப் பார்த்தறிமினென்று பணிக்க, சென்று அகன் கரையில் சேர்ந் தார் - அவர் சென்று விசாலமாகிய அச்செய்கரையை யடைந்தார் எ—று.

நன்குற வடைத்தல் செய்தா ரியாவரு மென நயந்து
சங்கர னடைக்கு நீடு தடங்கரை யவர்க ளெய்தி
யெங்கணு முயர்ந்து தாழ்ந்த திவ்விடம் யார்க்கு நேர்ந்த
பங்கிது மொழிமி னென்ன நின்றவ ரிவை பகர்ந்தார்.

இ—ள்: அவர்கள் யாவரும் நன்கு உற அடைத்தல் செய்தார் என நயந்து - அக்காரியதரிசிகள் பங்காளரனைவரும் உடைகரையைச் செவ்வி தாகக் கட்டினார்களென்று மனமகிழ்ந்து, சங்கரன் அடைக்கும் நீடு தடம் கரை எய்தி - சுந்தரேசராகிய கூலியாளர் நின்றடைக்கு நெடிய விசால மாகிய கரையை யடைந்து, எங்கணும் உயர்ந்து இவ்விடம் தாழ்ந்தது- இவ்வணை மற்றெவ்விடங்களுமுயர்ந்து இவ்விடம் மாத்திரந் தாழ்ந்திருக்கின்

றது, இது யார்க்கு நேர்ந்த பங்கு மொழிமின் என்ன - இஃது யார்க்கு வகுத்துவிடப்பட்ட பங்கு சொல்லுங்களென்று வினவ, நின்றவர் இவை பகர்ந்தார் - அங்கே நிற்கின்றவர்கள் இவைகளைக் கூறினார்கள் எ—று. (௬௪)

பெருவள நீடு கூடற் பிட்டுவிற் றுணவு கொள்வாள்
ஒருமுது மடந்தைக் காளா யொருவன்வந் திங்ஙனெய்தி
யிருநில மகழ்ந்து கூடை யுட்சொரிந் திரங்கி நிற்பன்
சிரமிசை யெடுப்பன் மீள்வன் சிந்துவ னகுதல் செய்வான்.

இ-ள்: பெருவளம் நீடு கூடல் பிட்டு விற்று உணவு கொள்வாள் ஒரு முது மடந்தைக்கு ஆளாய் ஒருவன் வந்து இங்ஙன் எய்தி - பெருஞ் செல்வம் அபிவிருத்தியடையும் இம் மதுரைமாநகரத்திலே பிட்டு விற்று உண்பவளாகிய வந்தியென்னும் ஒரு வயோதிகப் பெண்ணுக்குக் கூலியாளாய் ஒரு காளை வந்திவ்விடத்தை யடைந்து, இரு நிலம் அகழ்ந்து கூடையுள் சொரிந்து இரங்கி நிற்பன் - பெருமை பொருந்திய மண்ணை வெட்டிக் கூடையின்கணிட்டு இதனைத் தனித்தெடுப்ப தெங்ஙனமென்று மனமிரங்கிச் சிறிது வாளாநிற்பன், சிரமிசை எடுத்து மீள்வன் - பின்பு தலைமீ தெடுத்து வைத்து மண் கொட்டப்படு மிடத்திற்கு எதிர்ப்பக்கஞ் செல்வான், சிந்துவன் - அப்பக்கத்து அணை காணப்படாமையினால் இஃது மிகு பாரமாயிருக்கின்றதென்று அம்மண்ணைச் சிதறுவான், நகுதல் செய்வான் - இஃதென்னை திசை மயக்கமாயிற்றென்று சிரிப்பான் எ—று.

ஈண்டு நிலத்திற்குப் பெருமை தன்னை யகழ்வாரையுந் தாளுதாரமாய் நின்று தாங்கும் பொறுமை. சிரமிசை யெடுத்துச் செல்வ னென்னாது மீள்வன் என்றமையா னெதிர்ப்பக்கஞ் செல்வா னென்பது பெற்றாம். ஈண்டுச் சிந்துதல் அணையின்க ணன்றி வேற்றிடத்துச் சிதறுதலென்பது வருஞ் செய்யுளில் ஓர் கூடை மண்ணை நீடுதிண் கரையிலேறச் சொரிகுவ னென்பதனானு மறிக. நனம் என்பது கடைக்குறைந்து நின்றது. (௬௫)

பாடுவ னாடல் செய்வன் பையவோர் கூடை மண்ணை
நீடுதிண் கரையி லேறச் சொரிகுவ னெடிது நிற்ப
னோடுவ னோடி மீள்வ னொருகைமண் கரையி லேறப்
போடுவன் போக வென்னில் வருவன்வா வென்னிற் போவன்.

இ—ள்: பாடுவன் ஆடல் செய்வன் - பொழுது போக்குதற் பொருட்டுக் கொன்னே நின்று பாடுவான் கூத்தாடுவான், பைய ஓர் கூடை மண்ணை நீடு திண் கரையில் ஏறச் சொரிகுவன் - பின்பு மெல்ல நடந்து ஒரு கூடை மண்ணை நெடிய திண்ணிய கரையில்விழக் கொட்டுவான், நெடிது நிற்பன் - அதனான் மிக மெலிந்தவன் போன்று நெடுநேரம் அசையாது நிற்பான், ஓடுவன் ஓடி மீள்வன் - பின்னர் விரைந்தோடுவான் ஓடிக் கடிது திரும்புவான், ஒரு கை மண் கரையில் ஏறப் போடுவன் - ஒரு கைப்பிடி மண்ணை மறித்துங் கரையில் விழப் போடுவான், போக என்னில் வருவன் - நீ போவென்றால் வருவான், வா என்னில் போவன் - நீ வாவென்றாற் போவான் எ—று.

ஏற என்பதற்கு உயர எனப் பொருள் கூறினும் பொருந்தும். இயல்புக்கு விரோதமானவன் என்பது கருத்து. (௬௬)



பிட்டினை நுகர்வ னையா பெரிதுநன் றென்று கையைக்
கொட்டுவன் செய்கை காணி லரசிளங் குமர னொப்பான்
நெட்டலர்க் கொன்றை நீழ னெடுந்துயில் கொள்கின் றானங்
கட்டுரை சிறிதுங் கேளா னவன்றனைக் காண்மி னென்றார்.

இ—ள்: பிட்டினை நுகர்வன் - பின்னர் வந்தியாகிய எசமாட்டி கொடுத்த பிட்டை யள்ளி உண்பான், ஐயா பெரிதும் நன்று என்று கையைக் கொட்டுவன் - ஐயா! இப்பிட்டு மிகவும் நன்றென்று கூறிக் கையோடு கையைக் கொட்டுவான், செய்கை காணில் அரசு இளம் குமரன் ஒப்பான் - அவனது இன்னோரன்ன செல்வச் செயல்களை நாம் உற்று நோக்குமிடத்து அரசிளங் குமரனையே யொக்கின்றான், நெட்டு அலர்க் கொன்றை நீழல் நெடும் துயில் கொள்கின்றான் - அவன் நெடிய பூங்கொத்துக்களையுடைய கொன்றைமர நீழலிலே நெடுநேரம் நித்திரை செய்கின்றான், நம் கட்டுரை சிறிதும் கேளான் - கூலியாளாகிய உனக்கு இவை நன்மையல்லவென்று நாங் கூறும் உறுதிமொழிகளுளொன்றையும் ஒரு சிறிதும் பொருட்படுத்துகின்றிலன், அவனைக் காண்மின் என்றார் - அவனை இதோ பாருங்களென்று சுட்டிக் காட்டிக் கூறினார் எ—று.

ஆர்ய என்னும் வடமொழி தமிழில் ஐயாவென்றாயிற்று. மாலை போலத் தொடர்ந்து பூத்தலின் நெட்டலர் என்றார். (௬௭)

என்றலு மவனை யிங்கே கொணர்மினென் றவரு ணின்ற
வன்றிற லொருவன் கூற வாரியன் வல்லை யோடிச்
சென்றலு ஞான யோகச் செழுந்துயி லொழிந்து மூன்று
துன்றிய புரங்கள் செற்றார் துண்ணென விழித்தெ ழுந்தார்.

இ—ள்: என்றலும் - என்றிவ்வாறு அவர்கள் கூறுதலும், அவருள் நின்ற வன் திறல் ஒருவன் அவனை இங்கே கொணர்மின் என்று கூற - அக் காரியதரிசிகளுள் நிற்கின்ற மிக்க வலிமையுடைய ஒரு அதிகாரி அக்கூலியாளனை இங்கே எம்முன் கொடுவருக வென்று பணிக்க, ஆரியன் வல்லை ஓடிச் சென்றலும் - அதுகேட்ட காரியதரிசிகளுளொருவன் விரைந்தோடிச் சென்று சமீபித்தலும், மூன்று துன்றிய புரங்கள் செற்றார் ஞான யோ

கச்செழும் துயில் ஒழிந்து துண்ணென விழித்து எழுந்தார் - சிவபெருமானாகிய கூலியாளர் ஞானயோகமாகிய ஆனந்த நித்திரை செய்தலை நீங்கித் திடுக்கெனக் கண்களை விழித்தெழுந்தார் எ—று.

என்றலும் சென்றலு மென்பன உம்மீற்று வினையெச்சங்கள். மூன்று தூன்றிய புரம் மூன்றென்னு மெண்பொருந்திய புரம். தம தெசமாட்டியாகிய வந்திக்கு முற்கூலி வாங்கிய தம்மாற் செய்யப்படவேண்டும் கடன்மையாகிய கூலிவேலை முடிவதன் முன் இடையே நித்திரை வந்து தம்மைக் கெடுத்ததென்றும், அதன்பொருட்டு இனிக் காரியதரிசிகளாலே தமக்கு என்ன தண்டஞ் சம்பவிக்குமோவென்றும் அஞ்சியெழுபவர்போலக் காட்டியெழுந்தா ரென்பார் துண்ணென விழித்தெழுந்தா ரென்றார். (௪௮)

விழித்தலுங் கடிது சென்ற வாரியன் வெருவ நோக்கி
மொழிக்கனல் சிந்தி யந்த முன்னவன் றன்னை யெய்த
வழைத்தலும் வருதல் செய்யா தஞ்சிநின் றிரங்கல் கண்டு
பழித்தவர் செங்கை பற்றி யீர்த்தனன் பரிவி லாதான்.

இ—ள்: விழித்தலும் - மேற்கூறிய பிரகாரம் அவர் நித்திரைவிட்டெழுதலும், கடிது சென்ற ஆரியன் வெருவ நோக்கி - விரைந்து சென்ற அக்காரியதரிசி அவர் அஞ்சும்படி வெருண்டு பார்த்து, மொழிக்கனல் சிந்தி - கொடுஞ்சொற்களாகிய அக்கினியைச் சிதறி, அந்த முன்னவன் றன்னை எய்த அழைத்தலும் - அவ்வதிகாரியிடத்து வரும்படி அழைத்தலும், வருதல் செய்யாது அஞ்சி நின்று இரங்கல் கண்டு - அவரங்ஙனம் வாராது பயந்து நின்றழுதலைக் கண்டு, பரிவு இலாதான் பழித்து அவர் செம் கை பற்றி ஈர்த்தனன் - சீவகாருண்ணிய மில்லாத அக்காரியதரிசி இவ்வளவுதானு நின் குறும்பென்று இழிமொழிகளால் வைது அவருடைய சிவந்த கையைப்பிடித் திழுத்தான் எ—று.

அவரஞ்சும்படி வெருண்டு வெருட்டி நோக்கினனென்பார் வெருவ நோக்கி என்றும், அக்கினிபோல வருத்தவல்ல கொடுஞ் சொற்களை மிகவும் பேசினனென்பார் மொழிக்கனல் சிந்தியென்றுங் கூறினர். அக்காரியதரிசிகள் பலருள் விசேடித்த ஒருவனே கூலியாளரைத் தன்முன் கொடுவருகவென்று மற்றொரு காரியதரிசிக்கு முன் பணித்தானாகலின் அவனை அந்த முன்னவனென்றார். இது ரௌத்திரமும், அச்சமுங் கலந்துவந்த உபயரசாலங்காரமென்க. (௪௯)

ஆங்கவன் கடிதிற் றள்ளி யண்ணலை யெண்ணி லாத
தீங்கினன் முன்னர்க் கொண்டு சேறலும் வெகுட்சி யெய்திப்
பாங்குநின் றவரு ணின்ற பாவியைப் பாவி நோக்கி
யீங்குவெங் குருதி சோர வடித்திடிங் கிவனை யென்றான்.



இ—ள்: ஆங்கவன் அண்ணலை எண் இலாத தீங்கினன் முன்னர்க் கடிது தள்ளிக்கொண்டு சேறலும் - அக்காரியதரிசி கூலியாளாக எழுந்தருளிவந்த சோமசுந்தரக்கடவுளை முடிவற்ற தீமையையுடைய அவ்வதிகாரிக்கு முன் விரைவாகப் பிடர்பிடித் துந்திக்கொடு செல்லுதலும், பாவி வெகுட்சி எய்தி - பாவியாகிய அவ்வதிகாரி கண்டு கோபங்கொண்டு, பாங்கு நின்றவருள் நின்ற பாவியை நோக்கி - தன் பக்கத்து நிற்பவர்களுள் ஒரு பெரும் பாவியைப் பார்த்து, ஈங்கு வெம் குருதி சோர இங்கு இவனை அடித்திடு என்றான் - இங்கே கொடிய இரத்தமொழுகும்படி நீ இவனுக்குத் தப்பாது அடி யென்றான் எ—று.

அபுத்திபூர்வமாக நிகழினும், அடிக்கும்படி ஏவினோனும் ஏவப்பட்டோனுமாகிய இருவரும் பெரும்பாவிகளே யென்பார் எண்ணிலாத தீங்கினனென்றும் பாவியைப் பாவிநோக்கி யென்றும் உடம்பில் நன்கழுந்தும்படி விசைத்தடியென் றேவினா னென்பார் வெங்குருதிசோர வடித்திடிங் கிவனை யென்றுங் கூறினர். (௫௰)

கடுத்தசொல் வன்க ணாளன் கதத்துடன் மாறு கையி
லெடுத்தனன் முனிவர் விண்ணோ ரெடுத்தனர் தொழுது செங்கை
யடித்தன னடித்த போதி லன்புடை யரிவை பாகங்
கொடுத்திலர் துணுக்க மெய்த மறைந்தனர் குறைவி லாதார்.

இ—ள்: கடுத்த சொல் வன்கணாளன் கதத்துடன் மாறு கையில் எடுத்தனன் - கடுஞ்சொல்லைப் பேசும் அத்தறுகண்ணன் அடிக்கும்படி கோபத்துடன் கையிற் பிரம்பை எடுத்தான், முனிவர் விண்ணோர் செம் கை எடுத்துத் தொழுதனர் - அத்துராகிருதத்தைக் கண்ட இருடிகளுந் தேவர்களும் தமது சிவந்த கைகளையுயர்த்திக் கூப்பிச் சிரசில் வைத்துக் கும்பிட்டனர், அடித்தனன் - அப்பொழுது அத்துரான்மா கிஞ்சித்தும் கிருத கிருத்திய பரியாலோசனை யில்லாதவனாய் அடித்தான், அடித்தபோதில் - அவ்வா றவனடித்த தருணத்தில், குறைவு இலாதார் அன்பு உடை அரிவை பாகம் கொடுத்திலர் - அதனாற் றமக்கொரு குறைவுமில்லாத சிவபெருமானானவர் தம்மாட்டபரிமித அன்பையுடைய சத்தி பாகமாகிய வாமபாகத்தை அவ்வடி படும்படி கொடுத்தா ரல்லர், துணுக்கம் எய்த மறைந்தனர் - அங்கு உள்ளவரெல்லாந் திடுக்கிட அந்தர்த்தானமாயினர் எ—று.

அரிவை பாகங் கொடுத்திலரெனவே தங்கூறாகிய வலப்பாகங் கொடுத்தாரென்பது அருத்தாபத்தியாற் பெற்றாம். தம்மைச் சரணடைந்தோர்க்குக் களைகணாய் நின்று அவரைக் குறிக்கொண்டு காத்தலே தமக்குக் கடப்பாடென்பதனைப் பிறரறிந் தீடேறுமாறு அன்புடை யரிவை பாகங் கொடுத்தில ரென்க. குறைவிலாதா ரென்பதற்கு எங்கும் நிறைந்தவரெனப் பொருள்

உரைப்பினு மமையும். துராகிருதம் - துர்ச்செய்கை. கிஞ்சித்து - அற்பம். கிருத கிருத்திய பரியாலோசனை - செய்தொழிலின் பயனது ஆராய்ச்சி. அரசனடித்ததை ஆரியனடித்ததென்றார் சார்புநூலிலக்கணம் பாதுகாத்தற்கென்க. (௬௧)

வேறு.

தார்மேனின் றிலங்குபுய வழுதி மேலுந்
தன்மனைமங் கையர்மேலு மமைச்சர் மேலு
மார்மேலுஞ் சென்றுபொருஞ் சேனை மேலு
மயன்மேலு மான்மேலு மறவோர் மேலுந்
தேர்மேல்வெம் பகன்மேலு மதியின் மேலுஞ்
சிறந்துளவிந் திரன்மேலுந் தேவர் மேலும்
பார்மேலுங் கடன்மேலு மரங்கள் மேலும்
பட்டதரன் மெய்யிலடி பட்ட போதே.

இ—ள்: அரன் மெய்யில் அடிபட்ட போது - சங்காரகருத்தாவாகிய சிவபெருமானது திருமேனியில் அடிபட்ட தருணத்து, அவ்வடி,— தார் மேல் நின்று இலங்கு புய வழுதி மேலும் - மாலையானது மேனின்று விளங்குதற்குக் காரணமாகிய புயங்களையுடைய பாண்டியராசன் மீதும், தன் மனை மங்கையர் மேலும் - அவ்வரசனது இவ்வாழ்க்கைத் தருமபத்தினிகண்மீதும், அமைச்சர் மேலும் - அவனது மந்திரிகண்மீதும், ஆர் மேலும் சென்று பொருஞ் சேனை மேலும் - எத்துணை வலிமையுடைய பகைவர் மாட்டு மஞ்சாது சென்று யுத்தஞ்செய்யு மவனுடைய சேனைகளின் மீதும், அயன் மேலும் - பிரமாவின் மீதும், மால் மேலும் - விஷ்ணுவின்மீதும், அறவோர் மேலும் - சனகர் முதலிய துறவிகண்மீதும், தேர் மேல் வெம் பகல் மேலும் - ஒருருளையினை யுடைய தேரின்க ணிவர்ந்து செல்லும் உஷ்ணத்தையுடைய சூரியன் மீதும், மதியின் மேலும் - சந்திரன்மீதும், சிறந்துள இந்திரன் மேலும் - முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் நாயகமாகிய சிறப்பையுடைய இந்திரன் மீதும், தேவர் மேலும் - ஒழிந்த அத்தேவர்கண்மீதும், பார் மேலும் - பூமியின் மீதும், கடல் மேலும் - சமுத்திரத்தின் மீதும், மரங்கள் மேலும் பட்டது - மரங்களின் மீதும் ஒருங்கே பட்டது எ—று.

மாலை வேப்பமாலை. மகா சங்கார கருத்தாவே உலகத்துக்கு முதற்கடவுளென்ப துண்மைநூற் றுணிபாகலானும், இக்கடவுளின் மீது பட்ட அடி அவ்வுலகெங்கும் படுதலானும், இவரே அம்மகாசங்கார கருத்தாவாகிய முதற்கடவுளென்பார் அது குறிப்பாற்றோன்ற அரன் என்றார். சிவபெருமான் விச்சுவரூபியாகலின் அவர் மீது பட்ட அடி உலகெங்கும் பட்டதென்பது கருத்து. முன் ஓர் ஞான்று அருச்சுனனுக்கு அருள் புரிவான்



கிராத வுருக்கொடு சென்று விநோதார்த்தமாக அவனுடன் சமர் விளைத்த வழி அவ்வருச்சுனன் வெகுண்டு தன் கைக்கொண்ட வில்லாற் சிவபிரானது அருமைத் திருமேனியிற் புடைத்தலும் இங்ஙனமே உலகின்கணுள்ள ஆன்மாக்க ளனைத்தினும், அவ்வடிபட் டுறைத்ததென்பது "விண்ணிலுறை வானவரில் யாரடிபடாதவர் விரிஞ்சனரியே முதலினோர், மண்ணிலுறை மானவரில் யாரடி படாதவர் மனுக்கள் முதலோர்களதலக், கண்ணிலுறை நாகர்களில் யாரடி படாதவர்கள் கட்செவி மகீபன் முதலோர், எண்ணில் பல யோனியிலும் யாவடி படாதன விருந்துழி யிருந்துழியரோ" "வேதமடியுண்டன விரிந்தபல வாகம விதங்களடி யுண்டனவொரைம், பூதமடி யுண்டன விநாழிகை முதற்புகல்செய் பொழுதொடு சலிப்பில் பொருளின், பேதமடியுண்டன பிறப்பிலி யிறப்பிலி பிறங்க லரசன்றன்மகளார், நாதனம லன்சமர வேடவடி வங்கொடு நரன்கை யடியுண்ட பொழுதே" எனவரும் வில்லிபுத்தூரார் வாக்குக்களானுமறிக. இது எண்சீரடி யாசிரிய விருத்தம். (௬௨)

தந்தமுரு வொழிந்துபிறி துருவ மாகிச்
சதுர்முகனுஞ் சங்காழி தரித்த மாலு
மந்தமுத றெரிவரிதாய் வெளியே நின்ற
வண்ணலார் வடிவிலடி பட்ட போதி
லெந்தவுல கங்களினு மிருந்து ளோர்க
ளெம்முடலி லடியுறைத்த தென்று கூற
முந்தியெழும் பன்மொழிக ளுகாந்த வெல்லை
மோகரிக்கு மெழுகடலின் முழக்கம் போன்ற.

இ—ள்: சதுர்முகனும் சங்கு ஆழி தரித்த மாலும் தம் தம் உரு ஒழிந்து பிறிது உருவம் ஆகி - நான்கு முகங்களை யுடைய பிரமாவுஞ் சங்கு சக்கரங்களைத் தாங்கும் விஷ்ணுவுந் தத்தம் நிசரூபங்களை விட்டு முறையே அன்னமும் பன்றியுமாகிய வேற்றுருக்கொண்டு தேடி, அந்தம் முதல் அறிவு அரிது ஆய் வெளியே நின்ற அண்ணலார் வடிவில் அடி பட்டபோது - முடிவு முதலு மறிதற்கரிதாகி மறைந்து நிற்பினும் தம் மெய்யடியார்க்கிங்ஙனம் வெளிப்பட்டு நின்றருளு மெப்பொருட்கு மிறைவராகிய சோமசுந்தரக் கடவுளினது திருமேனியில் அவ்வடிபட்ட தருணத்து, எந்த உலகங்களிலும் இருந்துளோர்கள் எம் உடலில் அடி உறைத்தது என்று கூற முந்தி எழும் பல் மொழிகள் - எல்லா வுலகங்களினும் வசிப்பவர்களும் எங்கள் சரீரத்தில் அடிபட்டதென்று தனித்தனி ஒருங்கு கூறுதலான் முற்பட்டெழும் பலதிறச் சொற்களி னொலிகள், யுக அந்த எல்லை மோகரிக்கும் எழு கடலின் முழக்கம் போன்ற - உகமுடிவின்கட் கொந்தளிக்குஞ் சத்த சமுத்திரங்களின் பேரொலி போன்றன எ—று.

பிறிது தனித்தனி சென்றியையும். அரிது பண்புப்பெயர்; "உரை செயற்கரிதுமாகி யெளிதுமா யொழுகி நின்றான்" என்புழிப்போல. பிரம விஷ்ணுக்கள் வருந்தித் தேடிய வழியும் அடிமுடி அறியப்படாது மறைந்து நிற்பினும் தம் மெய்யடியவர்க்குத் தாமே வந்து வெளிப்பட்டு நிற்பதன் மேலும் அவர்பொருட் டடிபட் டெளிவந்தவரென்பார் தந்தமுருவொழிந்து பிறிதுருவுமாகிச் சதுர்முகனுஞ் சங்காழி தரித்தமாலு, மந்தமுத றெரிவரிதாய் வெளியே நின்ற வண்ணலார் என்றார். சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. விஷ்ணு பிரமாக்கள் அடிமுடி தேடி அறியாவண்ண நீண்ட திருவுருவினிலே அவரே முதற்கடவுளாமாற்றைச் சாதிப்பதொன்றென்பது "ஆதியரியயற் கறியவொண்ணு, மேவுரு நிலையு மோரார்" என்பது முதலிய திருவாக்குக்களா னினிது விளங்குதலின், அப்பெற்றியையுடைய முதற்கடவுண் மீது பட்டமையின், அவ்வடி உலகெங்கும் பட்டதென்பது கருத்து. எதுகை நோக்கி அந்தம் முன் பிரயோகிக்கப்பட்டது. சதுர்முகனும் மாலுமென்பவற் றும்மை எண்ணொடு சிறப்புமாய் நின்றன. (௫௩)

மாயையெனுங் கரும்பெரிய புனன்மேன் மொக்குள்
வண்ணமெனு மெண்ணிலா வண்டத்துள்ளு
மேயவகை யெண்பத்து நான்கு நூறு
யிரமான பலயோனி யெவற்றி னுள்ளு
மாயவுயிர்க் குயிராகி நிற்குந் தன்மை
யவனிதலத் தஞ்ஞான ரறிந்து பாதச்
சேயமலர் வழுத்துதற்கோ கூலியாளாய்ச்
சென்றுமுடி மண்சுமந்தார் தில்லைநாதர்.

இ—ள்: மாயை எனும் கரும் பெரிய புனல் மேல் மொக்குள் வண்ணம் எனும் எண் இலா அண்டத்து உள்ளும் ஏய - மாயையென்று சொல்லப்படுங் கருமையாகிய பெரிய கடலிலே தோன்றும் குமிழிகள் போலும் அளவற்ற அண்டங்க டோறுமுள்ள, பல எண்பத்து நான்கு நூறுயிர யோனி வகை ஆன எவற்றின் உள்ளும் ஆய உயிர்க்கு உயிர் ஆகி நிற்குந் தன்மை - மிகுதியாகிய எண்பத்து நான்கு நூறுயிர யோனிபேதத்தையுடைய ஆன்ம வர்க்கங்கட்கெல்லாம் பரமான்மாவாகி உண்ணின்றியக்குந் தமது சூக்குமத்தன்மையை, அவனி தலத்து அஞ்ஞானர் அறிந்து பாதச் சேய மலர் வழுத்துதற்கோ - இந்நிலவுலகத்துள்ள அஞ்ஞானிகளும் பிரத்தியக்ஷமாக அறிந்து தமது சிவந்த திருவடித் தாமரைகளை வணங்கித் துதித்துக் கடைத்தேறும் பொருட்டேயோ, தில்லை நாதர் கூலியாளாய்ச் சென்று முடி மண் சுமந்தார் - சிதம்பர சபாநாயகர் வந்திக்குக் கூலியாளாகிச் சென்று தம் திருமுடியில் மண்சுமந்தருளினர் எ—று,



அஞ்ஞானருமென்னு மிழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. புனல் ஆகுபெயர். வழுத்துதற்கோ வென்னு மோகாரஞ் சிறப்பின்கண் வந்தது; "சிலமோ வுலகம் போலத் தெரிப்பரிது" என்புழிப் போல. அவனிதலத் தஞ்ஞானிகளும் அகிலகாரணர் சிவபெருமானே என்பதறிந்து கோடற்கு இதுபோலும் பிரத்தியக்ஷப்பிரமாணம் பிறிதொன்றில்லை என்பது கருத்து. அது "ஏகநாயக னெவ்வுயிர்களுந் தானே யென்பது மன்பினுக் கெளிய, ஞகிய திறனுங் காட்டுவா னடிபட்டு" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. ஈண்டஞ்ஞானிக ளென்றது சிவபெருமானே உலகிற்கு முதற்கடவுளென்னு முண்மையை யறியாத பொய்ச்சமயிகளனைவரையுமென்க. இது கவிகூற்று. (௫௪)

வேறு.

மையணையுந் திருமிடற்றார் மெய்யிலடி வாதவூ
ரையருடம் பினுங்கடிது படுதலுமே யயர்வெய்தி
யுய்யவெனை யாட்கொள்வா னுவந்தொருவர்க் களாகி
மெய்யரெழுந் தருளினரோ வென்றென்று மிகநொந்து.

இ—று: மை அணையும் திரு மிடற்றார் மெய்யில் அடி வாதவூரையர் உடம்பினும் கடிது படுதலும் அயர்வு எய்தி - நஞ்சக் கறை பொருந்திய திருக்கண்டத்தையுடைய சிவபெருமானது திருமேனியின்கட்பட்ட அவ்வடி திருவாதவூரடிகளுடைய திருமேனியிலும் அப்பொழுதே படுதலும் அவர் அறிவழிந்து பின்னர்த் தேறி, மெய்யர் உய்ய எனை ஆட்கொள்வான் உவந்து ஒருவர்க்கு ஆள் ஆகி எழுந்தருளினரோ என்று என்று மிக நொந்து - மெய்ப்பொருளாகிய நஞ்சிவபெருமான் தமியேனுய்யும்பொருட்டு என்னை ஆட்கொண்டருளும்படி நாயேனை யுவந்து தாமொருவர்க்குக் கூலியாளாகி ஈண்டெழுந் தருளினாராக வேண்டுமென்றென்று சிந்தித்து மனம் மிகவுமிரங்கி எ—று.

திருவாதவூரடிகளுக்கு அடிப்பா டொருவருமின்றித் தம்மீ தடிபட்டமையானும், சிவஞான முடைமையானும், தம்பொருட் டரசனுக்குக் குதிரை கொடுத்தன் முதலிய முன்னை நிகழ்ச்சிகளானும், இதுவும் அவரது திருவிளையாட்டென்பது தெற்றென விளங்கிற்றென்க. ஒருவர்க்குக் கூலியாளாயவழி யல்லது அவர் அடிபடுதற்கு ஏதுவின்மையின் ஒருவர்க் காளாகி மெய்ய ரெழுந்தருளினரோ என்றார். ஓகாரம் கழிவிரக்கப்பொருட்கண் வந்தது. இது நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா. (௫௫)

தம்பெருமை யறியாத தம்மிறைவர் தமக்கிரங்கிக்
கம்பிதமுங் கண்ணீரும் வரக்கவற்சி யுறும்போதில்
வெம்பிறவி தொலைத்தார்முன் னரியர்கள் விரைந்தோடி
யும்பர்பிரான் திருவிளையாட் டெல்லாமங் குரைத்தார்கள்.

இ—ள்: தம் பெருமை அறியாத தம் இறைவர் தமக்கு இரங்கி - திருவாதவூரடிகளானவர் தம் பெருமையைத் தாம் அறியாத தங் கடவுளாகிய சிவபெருமான் பொருட்டு மனமிரங்கி, கம்பிதமும் கண்ணீரும் வரக் கவற்சி உறும் போதில் - அச்சத்தாற் சரீர நடுக்கமும் அன்பாற் கண்ணீருமுண்டாக மனம் கவலைமிகுஞ் சமையத்தில், ஆரியர்கள் வெம் பிறவி தொலைத்தார் முன் விரைந்து ஓடி - காரியதரிசிகள் கொடிய பிறவியை நீக்குந் திருவாதவூரடிகளுக்கு முன் விரைந்தோடிச் சென்று, உம்பர் பிரான் திருவிளையாட்டு எல்லாம் அங்கு உரைத்தார்கள் - தேவநாயகராகிய சிவபெருமானுடைய திருவிளையாடல்களை யெல்லாம் அங்கே ஒன்றொழியாது விண்ணப்பஞ் செய்தார்கள் எ—று.

விளையாட்டெல்லா மென்றது கூலியாளாதல் எழுவாய் அடியுண்டமை இறுவாயாயுள்ள எல்லாவற்றையுமென்க. தம்பெருமை சுட்டறிவா னறியப் படுதலும் தாம் சுட்டறிவுடையராதலும் தமக் கிலக்கணமாகவுடைய பசுக்களைப்போலன்றித் தம்பெருமை சுட்டறிவா னறியப்படாமையும் தாம் சுட்டறிவுடைய ரல்லராதலும் தமக்கிலக்கணமாகவுடைய பதியாகலின், அவரைத் தம் பெருமை யறியாத தம்மிறைவ ரென்றார். இக்கருத்தை, "பேதைமை யொருகுண மவர்கட் பேசுதல்" என்றற் றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களானு முய்த்துணர்க. "தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ" "முழுதுந், தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை" என்பனவு மிக்கருத்தே பற்றி வந்தன. இனி உலகத்துப் பெருஞ் செல்வனொருவனை அவன் தன் செல்வத்தைத் தானும் அறியான் என உபசாரம்பற்றிக் கூறுதல் போலப் பெருந் தலைமையையுடைய கடவுளை அவர் தந் தலைமையைத் தாமு மறியாரென உபசாரம் பற்றிக் கூறியதாகக் கோடல் இத்துணைச் சிறப்பின்றென்க. இன்னும் சிவாகமங்கள் விதந்து கூறும் பாசிவனது பெருந் தலைமையைப் புராணங்கள் விதந்து கூறும் கைலாசபதியாகிய ஸ்ரீகண்டருத்திரர் இன்னமும் முழுது மறிய மாட்டாரென் றுரைத்தலு மொன்று. தம்மிறைவ ரென்றார் திருவருளை முன்னிட்டு நில்லாத எம்போலு மன்பிலிகளது அந்நியமுடைமை போதருதற்கென்க. (௫௬)

வேட்டுருகும் பெருங்காதல் வித்தகரித் தன்மையெலாங்
கேட்டுமனந் தளர்ந்துமிகக் கிளர்ந்துவிழிப் புனல்பெருக
வாட்டிகழுஞ் சடையண்ணன் மண்சுமந்த விடங்கொடுபோய்க்
காட்டுமென மொழிந்தவரோ டவ்விடநேர் கடிதெய்தி.

இ—ள்: வேட்டு உருகும் பெரும் காதல் வித்தகர் இத் தன்மை எலாம் கேட்டு - தரிசிக்க விரும்பி மனம் நெக்குநெக்குருகும் பேராசையையுடைய சாதுரியராகிய திருவாதவூரடிகள் இச்சம்பவங்களை யெல்லாங்



கேட்டு, மனம் மிகத் தளர்ந்து விழிப் புனல் கிளர்ந்து பெருக - மன மிக மெலிந்து கண்ணீர் ததும்பிப் பெருக, வாள் திகழும் சடை அண்ணல் மண் சுமந்த இடம் கொடுபோய்க் காட்டும் என மொழிந்து - செவ்வொளி விளங்குஞ் சடையை யுடைய சொக்கநாதசுவாமி தமதருமைத் திருமுடியில் வைத்து மண் சுமந்தருளிய பெரும் பேற்றையுடைய ஸ்தானத்தை என்னைக் கொடு சென்று நீவிர் காட்டுங்க ளென்று, அவரோடு அவ்விடம் நேர் கடிது எய்தி - அக்காரியதரிசிகளோடு அவ்விடத்து நேர் வழியால் அதி சீக்கிரத்திற் சென்று எ—று.

இனி, வான் என்பதனை ஆகுபெயராகக்கொண்டு இளம்பிறை விளங்குஞ் சடையெனினு மமையும். மனம் மிகத் தளர்தற்கும் கண்ணீர் மிகப் பெருகற்கும் காரணம் முன்னர்க் கூறுப. (௫௭)

அழுங்கியரும் பெருநரகி லடியேனும் வீழாம
லெழுந்தருளும் பெரியோனே யெங்கணுளா யென்றென்று
தொழுங்கரமுங் கண்ணீருந் துளங்கியமெய்ப் புளகமுமாய்
விழுந்துபுரண் டிவ்வாறு புலம்பினர்மெய் யன்பாளர்.

இ—ள்: மெய் அன்பு ஆளர் - மெய்யன்பை யாளுந் திருவாதவூரடிகள், அடியேனும் அரும் பெரு நரகில் அழுந்தி வீழாமல் எழுந்தருளும் பெரியோனே - நாயினுங் கடையேனாகிய தமியேனும் ஏறுதற்கரிய பெரிய நிரயமாகிய படுகுழியின்கண் வீழ்ந்து வருந்தி அமிழ்ந்தாவண்ணம் முன்னர்க் குருமூர்த்தங்கொண் டெழுந்தருளி வந்த பெருந் தகைமையையுடைய சுவாமீ, எங்கண் உளாய் என்றென்று - இப்பொழுது தமியேனுக் கெவ்விடத் தொளித்தருளினீரென்று பன்னிப் பன்னி, தொழும் காமும் கண் நீரும் துளங்கிய மெய்ப் புளகமும் ஆய் - கும்பிடுங் கைகளும் மார்பில் வண்டலாடுங் கண்ணீரும் நடுங்குகின்ற சரீரத்தில் அரும்பிய புளகமுமாகி, விழுந்து புரண்டு இவ்வாறு புலம்பினர் - அந்தத் திவ்வியஸ்தானத்தில் வீழ்ந்து தமது திருமேனியில் அப்புழுதி திவளும்படி பலதரம் புரண்டு கீழ்க்கூறும் இந்தப்பிரகாரம் வியாகுலங்கொண்டு புலம்புவாராயினர் எ—று.

அடியேனு மென்னு மும்மை இழிவுசிறப்பின்கண் வந்தது. (௫௮)

நீறுபடும் பொன்மேனி நின்மலனே நெடுங்கங்கை
யாறுபடுஞ் சடைமுடியா யடியவர்கட் கெளியானே
மாறுபடும் புரமெரித்தாய் மாறுபடும் போதுடலிற்
கூறுபடுஞ் சிவஞானக் கொம்பினுளங் குழையாதோ.

இ—ள்: நீறுபடும் பொன் மேனி நின்மலனே - விபூதி தரிக்கப்படும் பொன்போலுந் திருமேனியையுடைய மலரகிதரே, நெடும் கங்கை ஆறு படும் சடை முடியாய் - நெடிய கங்காநதி பிரவாகிக்குஞ் சடாமுடியை

யுடையவரே, அடியவர்கட்கு எளியானே - அடியவர்கட் கெளியவரே, மாறு படும் புரம் எரித்தாய் - வேத நடையோடு மாறுபட்ட திரிபுரங்களை எரித்தவரே, உடலில் மாறு படும் போது - தேவரீருடைய திருமேனி யிற் பிரம்படி படும்போது, (உடலில்) கூறுபடும் சிவஞானக் கொம்பின் உளம் குழையாதோ - அத்திருமேனியின்கட் கூறுபட்ட சிவஞானக்கொம் பாகிய உமையம்மையினது திருவுளம் வருந்திற்றில்லையோ எ—று.

வருந்துமே என்பதாம். மாறு ஆகுபெயர். உடலிற் கூறுபடுதல் - வாமபாகமாயிருத்தல். (௫௯)

கொங்கையான் மணிமார்பிற் குறியிடுமவ் வீறுடைய
மங்கையாள் பெருமானை மண்சுமக்க மதித்தாளோ
கங்கையா ளலைக்கரத்தாற் கரைத்திலளோ புள்ளுருவாம்
பங்கையா சனனறியாப் பணிமுடியென் றறியாளோ.

இ—ள்: கொங்கையால் மணி மார்பில் குறி இடும் அவ் வீறு உடைய மங்கையாள் பெருமானை - தந் தனங்களான் மாணிக்கமணி போலுந் திரு மார்பிலே தழும்பு படுத்திய அவ்வெற்றிப்பாட்டை யுடைய காமாக்ஷி யம் மைக்குப் பிராணநாயகராகிய சிவபெருமானை, கங்கையாள் மண் சுமக்க மதித்தாளோ - கங்கையாகிய மாற்றாண் மண் சுமப்பிக்கும்படி கருதினளோ, அலைக் கரத்தால் கரைத்திலளோ - அக்கங்கை தான் வைகு மம்முடி மண் ணைத் திரையாகிய கைகளாற் பின்பு கரைத் தழித்தா ளில்லையோ, புள் உருவாம் பங்கையாசனன் அறியாப் பணி முடி என்று அறியாளோ - அன் னப்புள் வடிவாகிய பிரமாவும் அறிந்து கோடற்கரிய அதி விசேடத்தை யுடைய திருமுடியென்று அவள் அறியாளோ எ—று.

அரசனெடுத்த வாலயமென்புழிப் போல மண் சுமப்பிக்க எனற்பாலது ணண்டுப் பிறவினைவிகுதி தொக்கு மண்சுமக்க வென்றாயிற்று. பங்கையாச னன் என்புழி, அகரம் நின்றுழி ஐகார மொத்து வந்தது போலி. உமை கங்கை என்னுமிருவருஞ் சிவபெருமானுக்கு மனைவியரென்பது நூல்வழக் காதலானும், அவ்விருவருள் உமையம்மை தந் தனங்களான் ஞெமுங்கத் தழுவி வசீகரிப்ப அவர் திருமேனி குழைந்து வசீகரிக்கப்பட்டமையானும், அதுபற்றி அப்பெருமானை அவ்வம்மைக் கதிப்பிரிய நாயகரெனக் கோட லமைவுடைத்தென்பது பெறப்படுதலின், அக்கடவுளைக் கொங்கையான் மணிமார்பிற் குறியிடுமவ் வீறுடைய மங்கையாள் பெருமானென்றும், அச் செற்றம்பற்றி மாற்றாளாகிய கங்கை அவ்வுமாபதியைப் பணிகொள்ளும் பொருட்டிங்ஙனம் எண்ணிச் செய்தாளென்பார் பெருமானைக் கங்கையாள் மண்சுமக்க மதித்தாளோ என்றும், கற்புடைமகளிர் நாயகரோ டினும் அது மிகுதனியாதன்முன் இணங்கி இரங்குவ ரென்பது பொருணூற் றுணிபாகலின் அதுபற்றி அம்மண்சுமையை அக்கங்கை பின் கரைத் தழித் தலும் அமைவுடைத் தென்பார் கங்கையா ளலைக்கரத்தாற் கரைத்திலளோ



வென்றும், அங்ஙன மிரங்காதொழியினும் அம்முடி விசேடம்பற்றி அது செய்தல் வேண்டு மென்பார் புள்ளுருவாம் பங்கையாசன னறியாப் பணி முடியென் றறியாளோ வென்றுங் கூறினர். பணிமுடி என்பதற்குத் தாருகாவனத்து இருடிகளது அபிசார ஓமாக்கினியிற் றோன்றிய பாம்பு களையுடைய முடியெனினு மமையும்.

இதற்கின்னுமோருரை:— கொங்கையால் மணி மார்பில் குறியிடும் அவ் வீறு உடைய மங்கையாள் - தந் தனங்களான் மாணிக்க மணிபோலும் திருமார்பிலே தழும்புபடுத்திய அவ்வபின்னையாகிய உமையம்மையானவர், பெருமானை மண் சுமக்க மதித்தாளோ - தம் பிராணநாயகரைக் கொண்டு மண் சுமப்பிக்கத் திருவுளமிசைந்தனரோ, கங்கையாள் அலைக் கரத்தால் கரைத்திலளோ - மற்றைக் கங்கையாகிய அதிப்பிரியை திரையாகிய கை களால் அம்மண்ணைக் கரைத்தழித்தா ளில்லையோ, புள் உருவாம் பங் கையாசனன் அறியாப் பணி முடி என்று அறியாளோ - அம்முடி அன்னப் புள் வடிவாகிய பிரமாவும் அறிந்து கோடற்கரிய அதிவிசேடத்தையுடைய திருமுடியென்று அவள் அறியாளோ என்க.

அறிந்தாற் கரைத்தழியாதொழியா ளென்பது கருத்து. சத்தியை யின்றிச் சத்திமான் ஒன்றுஞ் செய்யலாகாமையின், இதுவும் அச்சத்திக்கு உடம்பாடுபோலு மென்பார் மங்கையாள் பெருமானை மண் சுமக்க மதித் தாளோ என்றும், உடம்பாடின்றேல் அபின்னையாதலும் மண் சுமக்க விடாமைக்கோ ரேதுவென்பார் அபின்னையாதற்குத் தவஞ்செய்த காமாக்ஷி யம்மையின தியல்பை ஈண்டு விதந்தெடுத்துக் கொங்கையான் மணிமார்பிற் குறியிடு மவ் வீறுடைய மங்கையா ளென்றுங் கூறினர். வீறு - அன்பின் வீறு. சத்திமானுக்குச் சத்தி இன்றியமையாமையை, "அருளது சத்தி யாகு மரன்றனக் கருளையின்றித் தெருள்சிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை" என்னுந் திருவாக்கானுமறிக. (௬௦)

பிரமனுடன் றிருமாலும் பிறப்பகலப் பல்காலும்
பரிவினுடன் தருமலரோ பத்தரிடும் பச்சிலையோ
புரிதருசெஞ் சடையோநற் புதுமதியோ வாயிரவாய்
வரியரவின் பலபடமோ மண்சுமக்குஞ் சும்மாடு.

இ—ள்: மண் சுமக்கும் சும்மாடு - தேவரீர் மண்சுமந்தருளிய சுமை யடையானது, பிரமனுடன் திருமாலும் பிறப்பு அகலப் பலகாலும் பரிவு உடன் தரு மலரோ - பிரம விஷ்ணுக்களாகிய இருவருந் தம் பிறவியறும் படி பலமுறையு மன்போடு சாத்திய பூக்களோ, பத்தர் இடும் பச்சிலை யோ - அல்லது அன்பர்கள் அருச்சித்த பச்சிலைகளோ, புரிதரு செம் சடையோ - அல்லது முறுக்கைத்தருஞ் சிவந்த சடையோ, நல் புது மதி யோ - அல்லது நல்ல ஒரு கலையாகிய புதிய சந்திரனோ, வரி அரவின் ஆயிர வாய்ப் பல படமோ - அல்லது ரேகையையுடைய சர்ப்பத்தினது ஆயிரம் வாய்களையுடைய பல படங்களோ எ—று.

இவற்றுள் இன்னதென்றும், அல்லது இவையனைத்துமென்றும், அல்லது இவையல பிறவென்றும், அல்லது ஒன்றுமின்றென்றும் துணிதல் கூடாதென்பது கருத்து. ஓகாரங்கள் வினாப்பொருட்கண் வந்தன. (௬௧)

கலையறியும் புகழ்வைகைக் கரைதிருவம் பலமாக
வலையெறியும் புனலோசை யந்தரதுந் துமியாகத்
தலைவனடங் கண்டார்க ளரவமெனுந் தவமுனியுங்
கொலைதவிரும் புலியென்னுங் குலமுனியு மானாரோ.

இ—ள்: கலை அறியும் புகழ் வைகைக் கரை திரு அம்பலம் ஆக - நூல்களானறிந்து பேசப்படும் புகழையுடைய வைகை நதிக்கரை அழகிய வெள்ளியம்பலமாக, அலை எறியும் புனல் ஓசை அந்தர துந்துமி ஆக - திரை மறிகின்ற நீரினதொலி தேவதுந்துமிகளாக, தலைவன் நடம் கண்டார்கள் - பசுபதியாகிய சோமசுந்தரக்கடவுளினுடைய மண்சுமக்கும் திருவிளையாட்டாகிய திருநடனத்தை நேரே தரிசித்த வினைக் கூலியாளர்களுங் காரியதரிசிகளும் பிறருமெல்லாம், அரவம் எனும் தவமுனியும் கொலை தவிரும் புலி என்னும் குலமுனியும் ஆனாரோ - பதஞ்சலி யென்னுந் தவத்தையுடைய முனிவரும், ஒருயிரையுங் கொலைசெய்யாத வியாக்கிரபாதரென்னும் உயர்ந்த முனிவருமாயினார்களோ எ—று.

கலை நூல், மதுரையின்கணிருந்த முச்சங்கப் புலவர்களும் தாமியற்றிய நூல்களான் விதந்து பேசப்பட்ட புகழையுடைய வைகை என்பார் கலையறியும் புகழ் வைகை என்றார். இனிக் கலையறியும் புகழ் வைகை என்பதற்குத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய "வாழ்க வந்தணர் வானவ ரானினம்" என்னுந் திருப்பாசுரத்தின் மகிமையை யறிந்த புகழையுடைய வைகைநதி யென் றுரைப்பாருமுளர். ஈண்டுக் கலையறியும் புகழ் வைகைக்கரை திருவம்பலமாக என்றது கவிகூற்றன்றித் திருவாதவூரடிகள் கூற்றாகலானும், திருவாதவூரடிகள் அரிமர்த்தனபாண்டியன் காலத்தினும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கூன்பாண்டியன் காலத்தினும் இருந்தவர்களென்பதும் அரிமர்த்தன பாண்டியனுக்குக் கூன்பாண்டியன் வழித்தோன்றலென்பதும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் திருநாவுக்கரசுநாயனாரும் ஒருகாலத்துள்ளவர்களென்பதும் புராணநூற் றுணிபாகலானும், திருவாதவூரடிகள் பொருட்டு நிகழ்ந்த நரி பரியாக்கிய திருவிளையாடலையும் மண்சுமந்த திருவிளையாடலையும் முறையே திருநாவுக்கரசுநாயனார் "நரியைக் குதிரை செய்வானும் நரகரைத் தேவு செய்வானும்" எனவும், "அணியார் வைகைத் திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்" எனவும் வரும் தந் தேவாரத் திருப்பதிகங்களில் நன்கெடுத் தருளிச் செய்தமையின், மாணிக்கவாசகசுவாமிகள் முன்னும் திருஞானசம்பந்தசுவாமிகள் பின்னும் உள்ளவர்களென்பது தெற்றென விளங்குதலானும், ஆலாசிய மான்மியமாகிய முதனூலும், திருவிளையாடற் புராணமாகிய வழிநூலும்



அங்ஙனமே கூறுதலானும் அது பொருந்தாதென்க. கண்டார்கள் வினையாலணையும் பெயர். கொலை தவிரும் புலியென்றது கொலைபுரியுஞ் சுபாபமுடைய வனத்தின்கட் புலியை நீக்கி வியாக்கிரபாத முனிவரை யுணர்த்தலாற் குறிப்பு மொழியாய்ப் பிறிதி னியைபு நீக்கிய விசேடணத்தின்பாற்படுமென்க. சோமசுந்தரபாண்டியர் தடாதகைப்பிராட்டியாரைத் திருமணஞ் செய்தருளிய பின்னர் விவாக போசனநிமித்தம் வருவிக்கப்பட்ட தேவர் முனிவர்களுட் பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாதமுனிவரும் அடியேமிருவரும் விராட்புருடனுக்கு இருதயஸ்தானமாகிய சிதம்பரத்துள்ள பொன்னம்பலத்திலே தேவரீர் செய்தருளும் திருநடனத்தைத் தரிசித்தல்லது ஒன்றையு முட்கொள்ளாத நியமமுடையேமென்று விண்ணப்பஞ் செய்தவழிச் சிவபெருமான் அந்நடனத்தைத் துவாதசாந்த ஸ்தலமாகிய இம்மதுரையிலுள்ள வெள்ளியம்பலத்திலே செய்வேம் தரிசியுங்களென்று திருவாய்மலர்ந்து நடித்தருள, அம்முனிவரிருவரும் நேரே தரிசிக்கப் பெற்றார்களாகலின், தலைவனடங் கண்டார்க ளரவமெனுந் தவமுனியுங், கொலை தவிரும் புலியென்னுங் குலமுனியு மானாரோ என்றுங் கூறினார். அது "பன்னகேசனு மடுபுலிப் பாதனும் பணிய, மின்னு வார்சடை மன்னவன் வெள்ளிமன் றுடல், சொன்ன வாறிது" என்பதனானுமறிக. (௬௨)

மீனேறுங் கொடித்தென்னன் விழிக்கேற விரைதுரகந்
தானேறு வதுகண்டு தருங்கலைபொற் செண்டேறத்
தேனேறு மலர்க்கொன்றைத் திருமுடிமேன் மண்ணேற
யானேறுஞ் சிவபதமு மெனக்கேற வின்னாது.

இ—ள்: மீன் ஏறும் கொடித் தென்னன் விழிக்கு ஏற - மீனை எழுதும் கொடியையுடைய பாண்டியராசனது கண்களுக்குப் புலப்பட, விரை துரகம் தான் ஏறுவது கண்டு தரும் கலை பொன் செண்டு ஏற - விரைந்து நடக்குமியல்பையுடைய குதிரையின் மீது தாமிவருதலைக் கண்டு அவ்வரசன் பரிசாகக் கொடுக்கும் பீதாம்பரம் அழகிய சவுக்கின் மீது தங்குதலானும், தேன் ஏறு கொன்றைமலர்த் திருமுடிமேல் மண் ஏற - தேன் பொருந்திய கொன்றைப் பூமாலையைத் தரித்த திருமுடியின் மீதே மண்சுமை யேறுதலானும், யான் ஏறும் சிவ பதமும் எனக்கு ஏற இன்னாது - யான் எய்தக் கடவதாகிய இனிய சிவபதப்பேறும் இனி எனக்கின்னாமையையுடையதாயிற்று.

மீன் தானாகவே கொடியைச் சார்ந்து மேன்மை பெறுமாறு விரும்பி ஏறியதென அக்கொடியுடையோனை இறப்ப உயர்த்துவார் மீனேறுங் கொடித் தென்னனென்றார். செண்டேற, மண்ணேற என்புழி ஏறலான் என்பன ஏற எனத் திரிந்து நின்றன. தருங்கலைபொற் செண்டேறலும் பெருங்கொடும்பாவமென்பது 'அழுக்காடை யண்டர்தொழும் பெருமானுக்களித்தேனென் பிழைசெய்தேன்' என அரசன் முன்னர்க் கூறுமாற்றானறிக. இன்னாமை - இனிமையின்மை; எனவே, துன்பந் தருமென்பதா

யிற்று. ஆக்கம் வருவித் துரைக்கப்பட்டது. எஃபொருட் டிங்ஙனங் குரு மூர்த்தியைக்கொண்டு தம்பெருமைக்குத் தகாதன செய்வித் தெய்துஞ் சிவ பதப்பேறு, எனக்கு இறப்பத் துன்பமே மற்றில்லை என்பது கருத்து. (சுரு)

பொன்னுலகத் துள்ளோரும் புரந்தரனுந் திருமாலு
மன்னுமறைக் குரியோனும் வழியடிமைத் தொழில்செய்ய
வன்னதனக் காளாகி யணிவைகை யடைத்தடியு
டென்னையருட் பணிகொள்ள விசைந்தனையோ விறையோனே.

இ—ள்: பொன் உலகத்து உள்ளோரும் - சுவர்க்கலோகவாசிகளாகிய தேவர்களும், புரந்தரனும் திருமாலும் மன்னும் மறைக்கு உரியோனும் வழி அடிமைத் தொழில் செய்ய - இந்திரனும் விஷ்ணுவும் நிலைபெறும் வேதங் கட்குரிய பிரமாவுந் தேவரீருக்கு வழித்தொண்டு செய்யாநிற்பவும், இறையோனே அன்னை தனக்கு ஆள் ஆகி அணி வைகை அடைத்து அடி உண்டு என்னை அருள் பணி கொள்ள இசைந்தனையோ - சுவாமீ! ஈண்டுத் தேவரீர் மாதாவாகிய வந்திக்குக் கூலியாளாகி அழகிய வைகைநதிக் கரையை மண் சுமந்தடைத்துப் பிரம்படி யுண்டு நாயினுங் கடையேனாகிய தமியேனை யும் திருவுளத்து முகிழ்த்த பெருங்கருணைத் திறத்தினாலே புத்தடிமை கொண்டருளத் திருவுளம் பொருந்தினீரோ எ—று.

வைகை ஆகுபெயர். எத்துணையும் பெரிய தேவரீர் எத்துணையுஞ் சிறிய தமியேனைத் தொண்டுகொண்டருளும்பொருட்டு எளிவந்த பெருங் கருணைத்திறம் இருந்தபடி என்னை என்பதாம். (சுச)

கட்டுமரைத் துணிச்சீரைக் கச்சையுமத் திருத்தோளிற்
கொட்டுமுடித் தலைமீது கவிழ்த்ததொரு கூடையுமாய்ப்
பிட்டிடுநற் றவமுடையாள் பின்புவருந் திருக்கோல
மிட்டமுறத் தொழும்படிநான் கண்டிலனே யிறையோனே.

இ—ள்: அரைக் கட்டும் துணிச் சீரைக் கச்சையும் - திருவரையிற் கட்டிய கந்தையாகிய வஸ்திரக் கச்சையும், அத் திருத்தோளில் கொட்டும்- அந்த அழகிய திருப்புயத்தின்கட் கொண்ட மண்வெட்டியும், முடித்தலை மீது கவிழ்த்தது ஒரு கூடையும் ஆய் - சடையே முடியாகக் கட்டிய சிர சின்மீது கவிழ்க்கப்பட்டதொரு கூடையுமாகி, பிட்டு இடு நல் தவம் உடை யாள் பின்பு வரும் திருக்கோலம் - பிட்டமுது படைத்த நல்ல தவத்தை யுடைய வந்தியாகிய எசமாட்டியின் பின் வந்தருளிய கூலித் திருக்கோலத் தை, இட்டம் உறத் தொழும்படி இறையோனே நான் கண்டிலனே - என திச்சைப்படி யெல்லாம் தரிசித்து வணங்குதற்குச் சுவாமீ தமியேன் அத் தருணத்துத் தேவரீரைத் தரிசிக்கப் பெற்றேனில்லையே எ—று.

கச்சை - கொடுக்கு. கண்ட, பிறர்சொல்லக் கேட்ட கோலத்தைத் தாங் காணாமைக்குத் தம்மை நொந்து கூறுகின்றாராகலின் இட்டமுறத் தொழும்



படி நான் கண்டிலனே யிறையோனே என்றார். தமியேன் காணப்பெறிற் கண்ணுற்ற பிறரைப்போலத் தொழாதுவிடமாட்டேனென்பது கருத்து. ()

தாரூருஞ் சடைமுடியாய் தவம்பெரிது முயன்றவர்க
ணீரூரும் புகழ்வைகை நெடுங்கரைமே னின்றாரோ
சீரூருங் கனகமுடித் தென்னவனே மதுரையெனும்
பேரூரி லிருப்பவரோ பிட்டமுதிட் டருள்வாளோ.

இ—ள்: தார் ஊரும் சடை முடியாய் - கொன்றைமாலை பெயருஞ் சடாமுடியை யுடையவரே, தவம் பெரிதும் முயன்றவர்கள் - தேவரீர் மண் சுமத்தலாகிய திருவிளையாட்டைச் செய்தருளுதற்குக் காரணமாகிய சிவ புண்ணியங்களைப் பூர்வசன்மங்களிலே மிகவுஞ் செய்தவர்கள், நீர் ஊரும் புகழ் வைகை நெடுங் கரைமேல் நின்றாரோ - நீர் பிரவாகிக்கும் புகழை யுடைய இவ்வைகை நதியினது நெடிய கரையின்கண் எய்தி நின்றவர் களோ, சீர் ஊரும் கனகமுடித் தென்னவனே - அழகொழுகும் பொன் முடியையுடைய பாண்டியராசனே, மதுரை எனும் பேர் ஊரில் இருப்ப வரோ - மதுரை யென்னும் பெயரையுடைய இவ்விராசதானியின்கணுள்ள வர்களோ, பிட்டு அமுது இட்டருள்வாளோ - தேவரீருக்குப் பிட்டமுதிட் டருளிய அவ்வம்மையோ பணித்தருளுக எ—று.

தற்புகழ்ச்சியின் பாற்பட்டுக் குற்றமாய் முடியுமாகலின், தம்மை யொழித்து ஏனையோர்மேல்வைத்து வினாவினாரென்க. இனையரென்று குறித்த லருமையின் யாவருமே யென்பது குறிப்பெச்சம். இனையரென் றறியின் அவர்க்கடிமைசெய்வே னென்பது குறிப்பெச்சமென்றலுமொன்று. (சுசு)

பொன்மௌலித் தலைமீது புண்ணியர்மண் சுமந்தேறுங்
கொன்மலியுங் கோலமறையுங் குளிர்வைகைப் பேராறுங்
கன்மமெனும் பகைநீங்கக் கண்ணுதல்வெம் பரியேறுந்
தென்மதுரை மூதூரு மல்லவோ சிவலோகம்.

இ—ள்: புண்ணியர் பொன் மௌலித் தலைமீது மண் சுமந்து ஏறும் கொன் மலியும் கோலமறையும் - அறவியல்பினராகிய சோமசுந்தரக் கடவுள் பொன்போலுஞ் சடாமுடியையுடைய திருமுடியின் மீது மண்சுமந் தேறி யருளப்பெறும் பெருமை மிகுந்த வந்தியினது இப்பங்கு நிலமும், குளிர் வைகைப் பேர் ஆறும் - குளிர்ச்சிபொருந்திய வேகவதியென்னும் பெயரை யுடைய இந்நதியும், கண்ணுதல் கன்மம் எனும் பகை நீங்க வெம்பரி ஏறும் தென்மதுரை மூது ஊரும் அல்லவோ சிவலோகம் - அக்கடவுளானவர் தரி சித்த தம் மெய்யன்பரைக் கன்மமுதலிய மும்மலங்களும் விட்டு நீங்கும்படி வெவ்விய குதிரையின்மீ திவர்ந்தருளப்பெறுந் தெற்கின்கணுள்ள மதுரை யாகிய பழைய இந்நகரமுமன்றோ சிவலோகமாவது எ—று.

சிவபெருமான் திருமுடிமீது மண்சுமந்து இடப்பெற்ற பெருமை மிக்க கோலறை என்பார் கொன்மலியுங் கோலறை என்றார். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனுற் கன்ம முதலிய மூன்று மெனப் பொருளுரைக்கப்பட்டது. சிவலோகத்திற் போல இம்மூவிடங் களினும் சிவபெருமான் உருவத் திருமேனிகொண்டு நேரே வெளிவந்து நின்றனுக்கிரகித்தமையின், இவை அச்சிவலோகமாக உருவகிக்கப்படுதற் கிழுக்கென்னை என்பதாம். இக்கருத்து "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" என்னுந் திருவாக்கானு முணர்க. புண்ணியர் என்றார் நஞ்சுண்டும், திரிபுரமெரித்தும், நமனை யுதைத்தும் பல் லுயிர்களைக் காத்த பரமதயாளு என்பது போதருதற்கென்க. (௪௭)

இன்னவகை யன்புடையா ரிரங்கினரா யிடைவைகைத்
துன்னுதிரைப் பேராறுந் தொலையவடிந் ததுபின்னர்த்
தென்னவனுஞ் சிவன்செயலா மெனத்தெளிந்து வாதவூர்
மன்னவர்தம் பால்வந்து வணங்கியிது கூறுவான்.

இ—ள்: இன்னவகை அன்பு உடையார் இரங்கினர் - இந்தப்பிரகாரம் சிவபத்திமானாகிய திருவாதவூரடிகள் இரங்காநின்றனர், ஆயிடை துன்னு திரைப் பேர் வைகை ஆறும் தொலைய வடிந்தது - அப்பொழுது நெருங் கிய அலைகளையுடைய பெரிய வைகை நதியும் முழுதும் நீர்வடிந்தது, பின் னர்த் தென்னவனும் சிவன் செயலாம் எனத் தெளிந்து - அதன்பின்னர்ப் பாண்டிய ராசனும் இவை சோமசுந்தரக் கடவுளினுடைய திருவிளை யாடலேயாமென்று நிச்சயித்தறிந்து, வாதவூர் மன்னவர் தம்பால் எய்தி வணங்கி இது கூறுவான் - அத்திருவாதவூரடிகளை அடைந்து தான் அர சனும் அவர் அமைச்சருமென்னும் அபிமான பரித்தியாகனய் அவ்வடி களை வணங்கி இதனை விண்ணப்பஞ் செய்வானாயினன் எ—று.

பேராறுந் தொலைய வடிந்ததென இடத்து நிகழ் பொருளின் றொழில் இடத்தின்மே லேற்றிக் கூறப்பட்டது. இவை யென்றது தான் முன் அமைச்சரது செயலென் றெண்ணி யிருந்த தன் திரவியாபகார முதலிய வற்றை. தொலைய வடிந்தது என்பதற்கு மதுரையினுள்ளாரது இடர் கெட வடிந்ததெனினு மமையும். (௪௮)

அந்தரர்தம் பதியினிழிந் தருள்புனைமாத் தியர்குலத்தில்
வந்தருளித் தமியேற்கு மந்திரியாய் மகிழ்வெய்தி
யெந்தைவயப் பரியேறல் காட்டியெனக் கொழியாத
பந்தமறத் திருவுள்ளம் பற்றினைநற் றவத்தோனே.

இ—ள்: நல் தவத்தோனே - நல்ல தவத்தை யுடையவரே, அந்தரர் தம் பதியின் வந்து - சிதாகாசரூபராகிய சிவபெருமானது முக்கியஸ்தான மாகிய கைலாசகிரியினின்றும் வந்து, அருள் புனை மாத்தியர் குலத்தில்



இழிந்தருளி - அருளையுடைய ஆமாத்தியரது குடியின்கண்ணே திருவவ தாரஞ் செய்தருளி, தமியேற்கு மந்திரியாய் மகிழ்வு எய்தி - தமியே னுக்குச் சிரேட்ட மந்திரியாகி மகிழ்ச்சியைத் தந்து, எந்தை வயப் பரி ஏறல் காட்டி - எம் பரமபிதாவாகிய சோமசுந்தரக் கடவுள் சின்மயமாகிய இடபத்தினன்றி வேதமாகிய குதிரையின்மீ திவர்ந்தருளுதலைத் தரி சிப்பித்து, (இவ்வாறெல்லாம்), எனக்கு ஒழியாத பந்தம் அறத் திரு வுள்ளம் பற்றினை - தமியேனுக்கு இதுகாறுமறாத பாசக்கட்டறும்படி தேவ ரீர் திருவுளம் பற்றியருளினீர் எ—று.

தம்மென்பது ஈண்டு ஆறுவதனுரிமைப்பொருளுணர நின்றது. எய்து வித்தெனற்பாலது விவ்விகுதிதொக்கு எய்தி என்றாயிற்று. எந்தை மகிழ் வெய்தி வயப்பரி யேறல் காட்டியெனக் கொண்டுகூட்டுவாரு முளர். அது தனக்கவர்செய்த நன்றியை விளக்காமையின் நின்றுவற்றுமென்க. எய்திக் காட்டி யெனத் தன்வினையாக்கியவழியும் பொருட்சிறப்பின்மை தெளிக. திருக்கைலாசகிரியிலே ஸ்ரீகண்டபரமசிவனை அங்குள்ள தீவிரதர பக்குவிக ளாகிய ஆயிரஞ் சிவகணநாதர்கள் ஒரு நாள் வணங்கிச் "சுவாமீ, சைவாகமங் களின் உண்மைப்பொருளை அவைகளை ஆக்கியோராகிய தேவரீர் அடியேங் கட்கு உபதேசித்தருளவேண்டு"மென்று குறையிரந்து பிரார்த்திக்க, அக்கட வுள் திருவுளமிரங்கி அவர்களை நோக்கி அன்பர்களே, நீங்கள் பாண்டிநாட்டி லுள்ள திருவுத்தரகோசமங்கை யென்னும் நமது திவ்விய க்ஷேத்திரத்திலே போய் நமக்குத் தொண்டுசெய்துகொண்டிருங்கள்; நாம் அங்கே வந்து உங்களுக்குச் சைவாகமோபதேசம் செய்வேமென்று திருவாய்மலர்ந்தருளி னர். கணநாதர்கள் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு திருவுத்தர கோசமங்கையை அடைந்து சிலகாலஞ் சிவாலயத்திலே திருத்தொண்டு செய்துகொண்டிருப்பக் கைலாசபதி அவர்களது திருத்தொண்டின் மன வுறுதியைக் கண்டு, பிராமண வடிவங்கொண்டு அங்கே எழுந்தருளினர். அப்பொழுது கணநாதர்கள் வணங்கச் சிவபெருமான் அவர்களை ஓரிடத் திருத்தித் தாமும் வீற்றிருந்து ஆகமங்களின் உண்மைப்பொருளை உபதே சிக்கத் தொடங்கினர். அப்பொழுது சுவர்க்க லோகாதிபதியாகிய இந்தி ரன் அநேக ஆடம்பரங்களுடன் ஆகாயமார்க்கமாகப் பவனிவர, அவ்வாயி வருள் ஒருவர் அதனைக் கண்டு மகிழ்ந்து உடனே அப்பவனியை மறந்தார். அதனைச் சிவபெருமான் திருவுளத்தடைத்து, அக்கணநாதரை நோக்கி "நாம் ஆகம உண்மையை உபதேசிக்கத் தொடங்கும்போது நீ பிறிதோர் விஷயத் தில் மனஞ் செலுத்தினையாகலின், இப்பூமியிற் பிறந்து இந்திரசம்பத்தை யனுபவித்துப் பின்பு நம்மை யடையக் கடவை" யென்று ஆஞ்ஞாபித்தருளி னர். கணநாதர் அதுகேட்டுச் சரீரம் நடுநடுங்கி இதற்கினி யாதுசெய்வே னென்று மிக வருந்திப் பிரலாபித்து வணங்கச் சிவபெருமான் அக் கண நாதரை நோக்கி "நீ சிறிதும் அஞ்சற்க; நாம் அப்பொழுது வந்து தடுத்துத் திருவடி தீக்ஷைசெய்து பாச க்ஷபம்பண்ணி உனக்கு முத்திதந்தருளுவோ"

மென்று திருவாய்மலர்ந்தருளினர். உடனே அவர் சிவபெருமானிடத்து அநுமதி பெற்றுக்கொண்டு திருவாதவூரை யடைந்து, அக்காலத்தில் எங்கும் பரந்திருந்த புத்தசமய கண்டனமும் சைவசமய ஸ்தாபனமும் செயவல்ல ஓர் சற்புத்திரரைச் சிவானுக்கிரகத்தினலே பெறக் கருதி அங்கே சிவாலயத்தில் விரதம்பூண்டு நெடுங்காலம் நியமமாகச் சுவாமியை வழிபட்டு வரும் ஆமாத்தியகுல திலகராகிய சம்புபாதாசிரியர் என்னுந் திருநாமத்தையுடைய பிராமணோத்தமருக்கு, அவரது நற்குண நற்செய்கைகளையுடைய இல்வாழ்க்கைத் துணைவியாகிய சிவஞானவதி யென்னும் திருநாமத்தையுடைய பதிவிரதாசிரோமணியினது திருவயிற்றினின்றும் திருவவதாரஞ் செய்தாராகலின், "அந்தரர்தம் பதியினிழிந் தருள்புனை மாத்தியர் குலத்தில் வந்தருளி" என்றார். முன், வரமுடன்புவியிற்றோன்று மறையவர்க் கிறைவர் என்றதும் இக்கருத்தேபற்றி வந்தது. இச்சம்பந்தம்பற்றியே திருக்கைலாசபதி ஞானதேசிகத் திருமேனிகொண்டு திருவாதவூரடிகளுக்குத் தீக்ஷிக்கும் பொருட்டுத் திருப்பெருந்துறைக் கெழுந்தருளியபொழுது இக்கணநாதர் ஆயிரவருள் இவரொருவரை ஒழிந்த ஏனைக்கணநாதர்களாகிய தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பதின்மர்களோடு எழுந்தருளியதூஉமென்க. (௬௯)

கருமாளத் திருமேனி காட்டினனென் றுணராமற்
றிருமாலும் பரவரியான் றேவருடன் பரியேறு
மருமாயச் சூழலினு லழுக்காடை யண்டர்தொழும்
பெருமானுக் களித்தேனென் பிழைசெய்தேன் பெரியோனே.

இ—ள்: திருமாலும் பரவு அரியான் தேவர் உடன் பரி எறும் அருமாயச் சூழலினல் - விஷ்ணுவாலும் இத்தன்மையரென்றறிந்து துதித்தற்கரிய சிவபெருமான் தேவர்களோடு குதிரையின்மீதிவர்ந்தருளிவந்த அறிதற்கரிய மாயாசூழ்ச்சியினுன் மயங்கி, கருமாளத் திருமேனி காட்டினான் என்று உணராமல் - தமியேனது பிறவியறும்படி உருவத்திருமேனிகொண்டு தம்மைத் தரிசிப்பித்தருளினரென்று அறிந்துகொள்ள மாட்டாமை மேலும், அண்டர் தொழும் பெருமானுக்கு அழுக்கு ஆடை அளித்தேன் - தேவர்களுந் தொழும் பெருந்தகைமையினையுடைய அக்கடவுட்கு அழுக்கு வஸ்திரமொன்றைப் பரிசு கொடுத்தேன், பெரியோனே என் பிழை செய்தேன் - எம்பெருமானே எத்துணைப் பெருங் குற்றத்தைச் செய்தேன் எ—று.

பரவென்னும் முதனிலைத்தொழிற்பெயர் எச்சப்பொருடந்து நின்றது. வருஞ்செய்யுளிற் செப்பென்பதுமது. முன்னையதினும் பின்னையது உய்தியில் குற்றமென்பது கருத்து. வருஞ் செய்யுட்கு மீதொக்கும். எட்டவுஞ் சுட்டவும் படாத பெருமையையுடைய இறைவர் சந்நிதியிற் பொன்னுடையும் அழுக்காடை யென்னுந் தரத்ததாதலி லிங்ஙனம் கூறினன். திருமாலுங் காண்பரியான் எனவும் பாடாந்தரம். (௭௦)



அப்பணிசெஞ் சடையானை யரும்பரிமே லாளாக்கு
மெய்ப்பொருளென் றுணராமல் வெய்யவினைப் பொருள்வேண்டிச்
செப்பருமித் தறுகண்மை செய்வித்தேன் சிறுமையுளேன்
எப்பிழையும் பொறுத்தருளா யானரகிற் புகுதாமல்.

இ—ள்: அப்பு அணி செம் சடையானை அரும் பரிமேல் ஆள் ஆக்கும் மெய்ப்பொருள் என்று உணராமல் - கங்காசலத்தைத் தரித்த சிவந்த சடையையுடைய சிவபெருமானை அரிய குதிரையின்மேல் மனித வடிவாக வரச்செய்யும் மெய்ப்பொருள் தேவரென்ப துணரமாட்டாமை மேலும், வெய்ய வினைப் பொருள் வேண்டி - கொடிய பொய்ப்பொருளையே விரும்பி, சிறுமை உளேன் செப்பு அரும் இத் தறுகண்மை செய்வித்தேன் - சிறுமையையுடைய பாவியேன் வாயாற் சொல்லுதற்கரிய இக் கொடுந் தண்டங்களைச் செய்வித்தேன், யான் நரகில் புகுதாமல் எப்பிழையும் பொறுத்தருளாய் - (அபுத்திபூர்வமாகச் செய்தமையின்) யான் நிரயத்திற்கட் பிரவேசியாதொழியும் பொருட்டிந்த எவ்வகைக்குற்றங்களையுந் தேவரீர் பொறுத்தருளுவீர்.

தறுகண்மை ஆகுபெயர். மெய்ப்பொருள் - மெய்யை உபதேசிக்கும் பொருள். வினைப்பொருள் - வினையையீட்டுதற்குக் காரணமாகிய பொருள்; என்றது குதிரை கொள்ளும் பொருட்டுக் கொடுத்த திரவியத்தை; ஒருவனுழை வருங்காற் றீவினையோடு கூடிவரும் பொருளென்றலு மொன்று. வேதமாகிய குதிரை யென்பது விளக்குதற்கு அருங் குதிரை யென்றும், சிவனடியார்க்குச் செய்த தீங்கு தப்பாது நிரயத் துன்பத்து ளுறுத்து மென்பதுண்மைநூற் றுணிபாகலின் யானரகிற் புகுதாம லெப்பிழையும் பொறுத்தருளாய் என்றுங் கூறினன். சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே என்பது கருத்து. (௭௧)

தூநாக மணிந்தபிரான் றுங்கமிகும் பரியேறிப்
பூநாறுஞ் சடைமேன்மண் சுமந்தபுகழ் போதாதோ
யானாளு நின்பணியே செய்தொழுக விவ்வுலகந்
தானாள வேண்டுமினி யென்றிரந்தான் றமிழ்மாறன்.

இ—ள்: தூ நாகம் அணிந்த பிரான் துங்க மிகும் பரி ஏறி - சுத்தமாகிய பாம்பை யணிந்த சிவபிரான் உத்துங்க மிகுங் குதிரையின்மீதிவர்ந்தருளி வரப்பெற்றதன்மேலும், பூ நாறும் சடைமேல் மண்சுமந்த புகழ் போதாதோ - கொன்றைப்பூ மணங் கமழுஞ் சடாமுடியின்மேன் மண் சுமந்தருளிய கீர்த்தி ஒன்றும் எனக்குப் போதாதோ, யான் நாளும் நின் பணியே செய்து ஒழுக - தமியேன் நாடோறும் தேவரீரது பணிகளையே செய்துகொண்டு திரிய, இனி இவ்வுலகம் ஆள வேண்டும் என்று தமிழ் மாறன் இரந்தான் - இனி இவ்வுலகத்தைத் தேவரீரே அரசாளுதல் வேண்டுமென்று தமிழை யுடைய அரிமர்த்தன பாண்டியராசன் குறையிரந்து விண்ணப்பஞ் செய்தான் எ—று.

தங்கமிகும் பரி என்பதற்கு மேல் அரும்பரி யென்புழி உரைத்தாங் குரைக்க. சிவபெருமானுக்குக் குண்டலிசத்தியே நாகமாக உருவகிக்கப் படுதலின் தூநாகமென்றும், பரியேறுதலும் மண்சுமத்தலுமாகிய புகழ்க் காரணமிரண்டனுள் முன்னையதினும் பின்னையதே சிறந்ததாகலின் சடைமேன் மண்சுமந்த புகழ் போதாதோ என்றும், தேவரீர் செய்த நன்றிக்கு எதிர் நன்றியாக ஒருசிறிதேனு மெதிரூன்ற வல்லது இஃதொன்றல்லது பிறிதொன்றில்லை யென்பான் யானுனு நின்பணியே செய்தொழுக விவ் வுலகந் தானுள வேண்டுமினி யென்றிரந்தான் என்றுங் கூறினுர். (எஉ)

வேறு.

வன்றிறன் மன்ன னிவ்வா றிரத்தலும் வாதவூரர்
தென்றிசை புரக்கு நீதித் தென்னவன் றன்னை நோக்கிப்
பின்றிகழ் சடையான் மன்னும் பெருந்துறை நகரி லேக
வின்றெனை விடுப்ப தேமற் றிவ்வுல களிப்ப தென்றூர்.

இ - ள்: வன் திறல் மன்னன் இவ்வாறு இரத்தலும் - மிக்க வலிமையை யுடைய பாண்டியராசன் இவ்வாறு குறையிரந்து கூறுதலும், வாதவூரர் தென் திசை புரக்கும் நீதித் தென்னவன் தன்னை நோக்கி - திருவாதவூரடிகள் தென்றிசையைக் காக்கும் நீதியையுடைய பாண்டிய ராசனது முகத்தைப் பார்த்து, பின் திகழ் சடையான் மன்னும் பெருந்துறை நகரில் ஏக - பின்றூங்கி விளங்காநிற்குஞ் சடையையுடைய கைலாசபதி வீற்றிருக்கப்பெறுந் திருப்பெருந்துறையாகிய ஸ்தலத்திற் செல்லுமாறு, இன்று எனை விடுப்பதே மற்று இவ்வுலகு அளிப்பது என்றூர் - இத்தினம் இவ்வுத்தியோகத்தினின்று நெகிழ்த்து என திச்சைப்படி என்னைச் செல்ல விடுத்தலே இவ்வுலகைத் தருதலாமென்று கூறினுர் எ—று.

மற்று வினைமாற்று. பின்றிகழ் சடை பின்னுதல் விளங்குஞ் சடையென்றுமாம். இப்பொருட்குப் பின் முதனிலைத் தொழிற்பெயர். தென்றிசை புரக்குந் தென்னவன் என்பது "கருங்கண்ணன்" என்பது போல நின்றது. தொழிலுருவகம். இது அறுசீரடி யாசிரிய விருத்தம். (எங)

தென்புலத் தலைவன் றானுஞ் சிந்தையி னெந்து முன்னோ
னன்பருக் கரசர் வாழ்வி லாசையிங் குளதோ வென்று
மென்பதத் திறைஞ்சி யையா வேண்டிய செய்க வென்று
தன்புகழ்க் கூடன் மூதூர் புகுந்தனன் றானை சூழ.

இ—ள்: தென்புலத் தலைவன் தானும் - தென்றிசைக் கரசனாகிய பாண்டியனும் அதிகேட்டு, முன்னோன் அன்பருக்கு இங்கு அரசர் வாழ்வில் ஆசை உளதோ என்று சிந்தையில் நொந்து - சிவபத்தருக்கு இம்மைக்கண்ணதாகிய அரசர் வாழ்க்கையில் இன்பம் சனிக்குமோ வென்று மன நொந்து, மென் பதத்து இறைஞ்சி ஐயா வேண்டிய செய்க என்று - மெல்லிய திருவடிக்கீழ் வணங்கிச் சுவாமீ! திருவுளப்பிரகாரம் செய்தருளுக என்று விண்ணப்பஞ்செய்து விடை பெற்றுக்கொண்டு, தானை சூழத் தன் புகழ்க் கூடல் மூதூர் புகுந்தனன் - சேனைகள் சூழத் தனது புகழையுடைய நான்மாடக் கூடலாகிய பழைய இராசதானியுட் பிரவேசித்தான் எ—று.

உடன் சென்று வழிவிடுதலும் பிறவும் சுருங்கிய நூலாகலின் விரிக்கப் பட்டில. தன்கருத்த நுகூலமாகாமையிற் சிந்தை நொந்தானென்க. (எச)



சற்றவத் தொழில்செய் யாத தானைமன் போன பின்னர்
அற்றவர்க் கற்ற சோதி யருட்பெரு வாழ்வு வேண்டிக்
கொற்றவர்க் குற்ற கோலங் குறையென நீத்து மேலாம்
நற்றவக் கோலங் கொண்டார் நம்பனுக் கன்பு மிக்கார்.

இ—ள்: சற்று அவத் தொழில் செய்யாத தானை மன் போன பின்னர் - ஒருகான் மறந்துங் கேடுபயக்கு முயற்சிகளிற் சிறிதும் பயிறல் செய்யாத சேனைகளையுடைய பாண்டியராசன் தன்னகருட் சென்றபின்னர், நம்பனுக்கு அன்பு மிக்கார் - அதிபராமர்த்தராகிய சிவபெருமானிடத்துச் சிரத்தையுடைய திருவாதவூரடிகள், அற்றவர்க்கு அற்ற சோதி அருள் பெரு வாழ்வு வேண்டி - இருவகைப்பற்று மற்றவர்க்கு இரண்டற்ற சுயஞ்சோதியாகிய சிவபெருமானது திருவருளினுலே பேரின்பவாழ்வைப்பெறவிரும்பி, கொற்றவர்க்கு உற்ற கோலம் குறை என நீத்து - அரசர்கட்குரிய அமைச்சு வேடம் குற்றமுடையதென்றதனை ஒழித்து, மேலாம் நல் தவக்கோலம் கொண்டார் - உயர்வாகிய நல்ல தவவேடத்தை மேற்கொண்டருளினுர் எ—று.

குறையுடையதனைக் குறையென்றெழிந்த துபசாரம். இரண்டறுதல் கண்ணொளியும் ஞாயிற்றினொளியும் போலச் சிவமு மான்மாவும் சுத்தாத்துவிதமாயியைதல். இருவகைப்பற்று - அகங்கார மமகாரங்கள். நம்பன் பழையோனென்றுமாம். அவத்தொழில் செய்யாமையாவது அழியுநர் புறக்கொடை யயில்வேலோச்சாமை முதலியன. (எரு)

அத்தனை யால வாயி லண்ணலை யிறைஞ்சி யந்த
மைத்தவழ் சோலை நீடு மதுரையம் பதியை நீங்கி
வித்தகர் தம்மை யாண்ட மேனிகண் டிறைஞ்ச வேண்டும்
பித்தினர் கடிது சென்றூர் பெருந்துறை பொருந்த வெண்ணி.

இ—ள்: அத்தனை ஆலவாயில் அண்ணலை இறைஞ்சி - திருவாதவூரடிகள் உயிர்கட்குப் பரமபிதாவும் திருவாலவாயின்கண் வீற்றிருக்கும் சகல லோக நியந்தாவுமாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்து வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு, மைத் தவழ் சோலை நீடு அந்த மதுரையம் பதியை நீங்கி - முகில்கடவழுஞ் சோலைகளுயர்ந்த அம்மதுரையாகிய இராச

தானியை விட்டு நீங்கி, வித்தகர் தம்மை ஆண்ட மேனி கண்டு இறைஞ்ச வேண்டும் பித்தினர் - சர்வ சாதுரியராகிய கைலாசபதி மார்ச்சார சம்பந்தமாக வந்து தம்மை ஆட்கொண்டருளிய ஞானதேசிகத் திருமேனியைத் தரிசித்து வணங்கவேண்டுமென்னும் பிராந்தியை யுடையவராய், பெருந்துறை பொருந்த எண்ணிக் கடிது சென்றார் - திருப்பெருந்துறையை அடையும்படி கருதி வல்விரைந்து சென்றனர் எ—று.

வித்தகரென்றது வாதவூரடிகளை என்பாருமுளர். அது மேனியென்பதனோடியையாமையை அவர் நோக்கிற்றிலர். இங்ஙனம் மயங்குவார் மயங்காமைப் பொருட்டன்றே வருஞ் செய்யுளின் ஆசிரியர் மிடை கெட வைத்த பாதவித்தகரென அநுவதித்ததூஉமென்க. நியந்தா - நடத்துபவன்.

மிடைகெட வைத்த பாத வித்தக ரூரை நோக்கி
நடையிடு மெல்லை தன்னி னன்மன விரைவுங் காற்றுந்
தடைபடு கன்றை நாடுங் கபிலையுந் ததும்பி நின்று
மடையினை யுடைக்கு நீரு மாயினர் வாத வூரர்.

இ—ள்: வாதவூரர் மிடைகெட வைத்த பாதவித்தகர் ஊரை நோக்கி நடை இடும் எல்லை தன்னில் - திருவாதவூரடிகள் தமது முத்தி வறுமை கெடத் திருவடிதீக்ஷை செய்தருளிய பரமாசாரியர் வீற்றிருக்குந் திருப்பெருந்துறையை நோக்கி நடக்கும்பொழுது, நல் மன விரைவும் காற்றும் தடைபடு கன்றை நாடும் கபிலையுந் ததும்பி நின்று மடையினை உடைக்கும் நீரும் ஆயினர் - நல்ல மனோவேகமும் வாயுவேகமும் பிறரா னெடிது தடையுண்டு காணுதநின்ற தன் புனிற்றிளங்கன்றைப் பின்னர் நிற்புழி யறிந்து நாடி யோடிச் செல்லுந் தலையீற்றப் பசுவினது வேகமும் நிறைந்துநின்று பின் அணையை யுடைத்தோடும் நீர்வேகமும்போலாயினார் எ—று.

விரைவை ஏனையவற்றோடுங் கூட்டுக. மிடை - வறுமை. அஃது இக்காலத்து முடையென மரீஇயிற்று. முத்திவறுமை - முத்தியைப் பெறாமையாகிய வறுமை. மனோவேகமும் காற்றும் அதிவேக செலவிற்கும், நாடுங் கபிலை கதியோடு பிரிவாற்றாமை அன்பு மிகுதிகட்கும், மடையினை யுடைக்கு நீர் கதியொடு மீளாமைக்கும் உவமையாய் வந்தன. (எஎ)

கண்ணுழை யாத கானும் பதிகளுங் கடிது நீங்கி
யெண்ணறு முனிவர் மேவு மெழிற்பெருந் துறையி லெய்திப்
புண்ணிய வினத்தர் சூழ முன்புபோ லிருந்த போதில்
விண்ணவ ரதிபன் பொற்றாள் வீழ்ந்திது தாழ்ந்து சொல்வார்.

இ—ள்: கண் நுழையாத கானும் பதிகளும் கடிது நீங்கி எண் அறு முனிவர் மேவும் எழில் பெருந்துறையில் எய்தி - திருவாதவூரடிகள் கண்ணினது பார்வையும் நுழைதற்கரிய செறிவு பொருந்திய காடுகளையும் ஊர்களையும் அதி சீக்கிரத்திற் கடந்துபோய் அநேக இருடிகள் வசிக்கும் அழகிய திருப்பெருந்துறையையடைந்து, விண்ணவர் அதிபன் புண்ணிய இனத்தர் சூழ முன்புபோல் இருந்த போதில் பொன் தாள் வீழ்ந்து தாழ்ந்து இது சொல்வார் - தேவநாயகராகிய சிவபெருமான் அப்புண்ணிய புருஷர்களாகிய தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரென்னும் குழுவினர் பக்கத்தே சூழ்ந்து சேவிப்ப முன்னரேபோலச் சபாநாயகமாக மத்தியில் வீற்றிருந்தருளுஞ்சமயத்து அவரது பொன்போலுந் திருவடிகளிலே சிரசுதோயும்படி சந்நிதியிலே வீழ்ந்து வணங்கி இங்ஙனம் விண்ணப்பஞ் செய்வாராயினர்.

கண் ஆகுபெயர். சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. எய்தி வீழ்ந்து தாழ்ந்து இது சொல்வாரென முடிக்க. (எஅ)

தீண்டுதற் கரிய மார்பிற் சேயிழை தனத்தி னாலு
மீண்டொரு மாற்றி னாலு மெய்திய தழும்ப போற்றி
வேண்டிய வடிவ மாகி வெம்பரி மேல்கொண் டெம்மை
யாண்டருள் செய்ய வந்த வண்ணலே போற்றி போற்றி.

இ—ள்: தீண்டுதற்கு அரிய மார்பில் சேயிழை தனத்தினாலும் ஈண்டு ஒரு மாற்றினாலும் எய்திய தழும்ப போற்றி - முன்னொரு ஞான்று சத்தபுரிகளுள் ஒன்றாகிய காஞ்சீபுரத்தின் கண்ணே அகிலலோக ஜனனியாகிய காமாக்ஷியம்மை விசேடசுருதியாகிய ஆகமவிதிப்படி பரமாணுப் பிரமாணமேனும் வழுவாது சிவபூசை செய்து வருகின்றுழி ஒருநாள் நித்த முத்த சுத்த சித்தாகிய ஏகாம்பரநாதசுவாமி அச்சிவபூசாபத்திமையி னுறுதியை உலகினர்பொருட்டுப் பரீக்ஷித்து அநுக்கிரகஞ்செய்யுமாறு கம்பாநதியிலே சர்வ தீர்த்தங்களையும் வருவிக்க, அது ஆகாயத்தையளாவிப் பிரவாகித்து வருதலும் இஃதிச்சிவபூசைக்கிடையூறாய் வருகின்றதென்றஞ்சி அவ்வம்மை சிவலிங்கப்பெருமானை நெருங்கத் தழுவிக்கொள்ளுதலால் மற்றொருவராலுமொருகாற் றீண்டுதற்குமரிய திருமார்பிலே செவ்விய இழையினையுடைய அவ்வம்மையினது இரு தனங்களினாலும் இம் மதுராபுரியின்கண் ஒரு பிரம்பினாலும் முதுகிற் பொருந்திய தழும்பையுடைய தேவரீர் தமியேனைப் பாதுகாத்தருளுக, வேண்டிய வடிவம் ஆகி வெம்பரி மேல் கொண்டு எம்மை ஆண்டு அருள் செய்ய வந்த அண்ணலே போற்றி போற்றி - ஆங்காங்கு வேண்டிய வேண்டிய வடிவங் கொள்ளுதலை மேற்கொண்டு ராவுத்தராகி வெவ்விய குதிரையின்மே லிவர்ந்து அடியேங்களை ஆட்கொண்டனுக்கிரகஞ் செய்யும்பொருட்டு எழுந்தருளிவந்த எப்பொருட்கு மிறைவரே தமியேனைப் பாதுகாத்தருளுக, பாதுகாத்தருளுக எ—று.

போற்றிய என்னும் வியங்கோள் ஈறு குறைந்து போற்றி என நின்றது. அது "வாழிய வென்னும் சேயென் கிளவி, யிறுதி யகரங் கெடுதலு முரித்தே" என்னு முயிர்மயங்கியற் சூத்திரத்து மொழிந்த பொரு

ளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்த லென்பதனுற் கொள்க. எம்மென்றது அரசனையுமுளப்படுத்தி. அது "வென்றி மன்னவன் பிறப்பறக்கவும் வார்சழல் வீக்கி" என வழிநூலாசிரியர் கூறிய வாற்ருனுமறிக. சத்திகாரியமாகிய திருமார்பென்பார் தீண்டுதற்கரிய மார்பென்றும், காஞ்சீபுரம், அருட்சத்தியாகிய காமாக்ஷியம்மையினது பரஅபர ஞானமாகிய இருதனங்களின் முயக்கத்தாற் சிவபெருமான் றழும்பெய்துதற்குத் தான் இடமாகப் பெற்றுக்கொண்டமையினும், ஒருவனது வெறும் பிரம்படி மாத்திரையிற் சிவபெருமான் றழும்பெய்துதற்குத் தான் இடமாகப் பெற்றுக்கொண்டமை மதுரைக்கு விசேடமுடைத்தென்பார் மாற்றினுலென் றமையாது ஈண்டொரு மாற்றினு லென்றும் கூறினர். தம் பொருட்டு வைகை நதியடைத்தற்கு வந்துபட்ட அடித்தழும்பாதலினும் உடனிகழ்ந்தமையானும், அவ்வபராதந் தம்மாற் சகிக்க லாற்ருது எய்திய தழும்பபோற்றியென்று இப்புதியதழும்பே எடுத்துக்கொண்ட விஷயமாயினும், இது பேசுதற்கண் தழும்புவர்க்க வொப்புமை பற்றிப் பழைய தழும்பும் நினைக்கப்படுமாதலின் தழும்புஒன் றன்று இரண்டே யென்பார், தனத்தினு லெய்திய தழும்ப வென்றுங் கூறினர். முன்வடுவும் பின்வடுவும் உள்ளவரென நிந்தாஸ்துதி கூறியதென்றலுமொன்று; வைகைநதி யடைத்தது வந்தி பொருட்டாயிருக்கத் திருவாதபுரேசர் பொருட்டென்றதென்னையெனின்? நதி அடைக்கப்படுதலாகிய காரியநிகழுமாறு பெருகுதலாகிய காரணம் அவ்வடிகள்பொருட்டு நிகழ்ந்தமையினென்க. (எகூ)

அண்டருக் கரியாய் போற்றி யடியவர்க் கெளியாய் போற்றி
வண்டமிழ்ப் பாண்டி நாடு வாழமண் சுமந்தாய் போற்றி
கண்டனக் கினிய மேனி காட்டியென் சென்னி மீது
மூண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி போற்றி.

இ—ள்: அண்டருக்கு அரியாய் போற்றி - தேவர்களுக்கரியவரே பாதுகாத்தருளுக, அடியவர்க்கு எளியாய் போற்றி - அடியவர்கட்கு எளியவரே பாதுகாத்தருளுக, வண்தமிழ்ப் பாண்டிநாடு வாழ மண் சுமந்தாய் போற்றி - செந்தமிழையுடைய பாண்டிநாடு வாழும்படி திருமுடி மேன் மண்சுமந்தருளினவரே பாதுகாத்தருளுக, என் கண் தனக்கு இனிய மேனி காட்டிச் சென்னி மீது முண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி போற்றி - என் கண்களுக்கு இனிய ஞானதேசிகத் திருமேனியைத் தரிசிப்பித்து என் புன்றலைமீது செந்தாமரை மலர்போலும் உபய திருவடிகளைச் சூட்டியருளிய அநாதிமலமுத்தரே தேவரீர் அடியேனைப் பாதுகாத்தருளுக, பாதுகாத்தருளுக எ—று.

எழுவகைத் தோற்றத்துட் சிறந்த தேவர்கட்காயினும் அடிமையில்வழி அவர்கட்கு எளிவந்து அனுக்கிரகஞ் செய்யாதவ ரென்பார் அண்டருக்கரியாய் போற்றி என்றும், அத்தேவரிற்ருழ்ந்த மக்கட்கேனும் அடிமையுள்வழி



எளிவந் தனுக்கிரகஞ் செய்வாரென்பார் அடியவர்க்கெளியாய் போற்றி என்றும், வேதசிரசுகளாகிய உபநிஷத்துக்களும் அறிந்து கோடற்கரிய அருமைத் திருமுடிமேன் மண்சுமந்தருளிய பெரும் பேற்றைப் பெற்றுள்ளது பாண்டிநாடொன்றுமே யாகலின், அந்நாட்டின்கணுள்ளவரே பதிப்பொருணிச்சயம் பூண்டு நிரதிசய வின்பவாழ் வடைதற்குரியவ ராவரென்பார் வண்டமிழ்ப் பாண்டிநாடு வாழ மண் சுமந்தாய் போற்றி என்றும், திருமேனியழகான் முன்வசீகரித்துப் பின்னர்த் திருவடிதீக்ஷைசெய் தாட்கொண்டருளினவ ரென்பார் கண்டனக்கினிய மேனி காட்டியென் சென்னிமீது முண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி என்றுங் கூறினர். திருமேனியழகான் முன் வசீகரித்தா ரென்பது "முத்தாவுன்றன் முகவொளி நோக்கி முறுவன் னகைகாண, வத்தா சால வாசைப்பட்டேன் கண்டா யம்மானே" என்பதனுனு மறிக. (அ௦)

போற்றியென் றின்ன வாறு புகன்றவர் முடிமேற் செங்கை
யேற்றியங் கினிய கூறி யெழுகென வெழுந்த பின்னர்
நீற்றையும் புனைந்து ஞான நிறைபருட் பார்வை நல்கி
வீற்றிருந் தன்பர் கூட்டம் விளங்கினர் களங்க மில்லார்.

இ—ள்: போற்றி என்று இன்னவாறு புகன்றவர் முடிமேல் செம் கை ஏற்றி - அடிமையைத் தேவரீர் பாதுகாத்தருளுக வென்று இந்தப் பிரகாரம் ஸ்தோத்திரஞ் செய்த திருவாதபுரேசராகிய சீடரது சிரசின்மீதே ஞானுசாரியர் தம தருமைத் திருக்கரத்தை வைத்து அஸ்தமத்தக சம்யோகமாகிய பரிசதீக்ஷையுஞ் செய்தருளி, நீற்றையும் புனைந்து ஞான நிறை அருள் பார்வை நல்கி - தமது அருமைத் திருக்கரத்தினுலே விபூதியையும் தரித்து ஞானத்தை முறுகுவிக்கும் பூரணகிருபாநோக்கமுஞ் செய்து, அங்கு இனிய கூறி எழுகென எழுந்த பின்னர் - அங்கே சற்கார வசனங்களைத் திருவாய்மலர்ந்து அன்பனே நீ எழுந்திரு என்று அருளிச்செய்ய எழுந்த பின்பு, களங்கமில்லார் - நிர்த்தோஷராகிய திருவாதவூரடிகள், அன்பர் கூட்டம் வீற்றிருந்து விளங்கினர் - தொளாயிரத்துத் தொண்ணூற்ருென்பதின்ம ரென்னும் தொகையினை யுடைய திருத்தொண்டர் கூட்டத்தினிதிருந்து துலங்கினுர் எ—று.

சிவஹஸ்தமத்தக சம்யோகமாகிய பரிசதீக்ஷையாவது பரிசனவேதியினுலே தாமிராதி லோகங்கள் களிம்பு நீங்கிப் பொன்னுதல் போல ஆசாரியர் தமது கையைச் சிவன் கையாகப் பாவித்து அங்ஙனமே அருச்சனை செய்து அதனைச் சீடனுடைய சிரசில் வைத்துப் பாசத்திரயத்தை நீக்கி அவனைச் சிவனுக்குதலாம். இவ்வாற்ருனே பரமாசாரியர் சைவாகமங்கள் விதந்து கூறும் எழுவகைத் தீக்ஷைகளும் திருவாதவூரடிகளாகிய தமது சீடருக்குச் செய்தருளியவா றய்த்துணர்ந்து கொள்க. எழுவகைத் தீக்ஷைகளை, "நயனத்தருள் பரிசவாசகமானதமு மலகில் சாத்திர மியோக மௌனத்

திராதி" என்பதனுனறிக. ஒரு தீக்கையை இருகாற் செய்தல் சிடாது பக்குவ முதிர்ச்சி பற்றி வந்த ஆதரவாலென்க. அன்பர்கூட்டத் தொருவராய் விளங்குதற்குக் களங்க மில்லாரென்று தகுதி கூறியவாறு; களங்கமில்லார் பாசபந்த வலியாகிய தோஷ நழுவுஞ் சுத்தராகிய திருவாதபுரேசர். சிவபெருமான் அடியார்க்கெளிவந்து மண்சுமத்தல் பிரம்படிபடன் முதலியன செய்தருளினமை அவ்வடிக டிருவுள்ளத்துக்குப் பாங்கன் றென்பார் களங்கமில்லார் என்றார் எனக் கோடலு மொன்று. களங்கமில்லா ரென்றது பரமாசாரியரையே யென்றுரைப்பாரு முளராலோவெனின், வீற்றிருந் தெனவே முன்னர் நின்றாரென்று கொள்ளப்படும். அங்ஙனம் பரமாசாரியர் நின்றனரென யாண்டுங் கூறப்படாமையானும், முன் இருத்தலையே பின்னுங் கூறுதல் புனருத்தமாதலானும், வீழ்ந்து வணங்கிய திருவாதவூரடிகள் எழுகென எழுந்த பின்னர் யாது செய்தனரென்ப தொருதலையாகக் கூறவேண்டுதலானும் அது போலியுரையென்க. திருவாதவூரடிகளுக்குப் பரமாசாரியர் செய்த தீக்கை சிவதருமிணி தீக்கை யென்பது சிவாகமம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. (அக)

அந்தமு முதலு மில்லா ரடியவர் தம்மை நாடி
வந்துள கரும மெல்லா முடித்தன மகிழ்ச்சி கூர
நந்திகழ் வடிவங் காண வேண்டிநற் கயிலை யுள்ளார்
சிந்தனை செய்தார் வல்லே யாண்டுநாஞ் சேறல் வேண்டும்.

இ—ள்: முதலும் அந்தமும் இல்லார் அடியவர் தம்மை நாடி - ஆதிமத்தியாந்த ரகிதராகிய பரமாசாரியர் அதன்பின்பு தம்மடியார்களை நோக்கி, வந்துள கருமம் எல்லாம் முடித்தனம் - நாமுத்தேசித்துவந்த தீக்ஷாகருமங்களை யெல்லாம் இனிது முடித்துக்கொண்டேம், நல் கயிலை உள்ளார் நம் திகழ் வடிவம் காண வேண்டிச் சிந்தனை செய்தார் - நல்ல கைலாசகிரியில் வசிக்கும் நம்மன்பர்களெல்லாம் நமது விளங்காநின்ற உருவத்திருமேனியை நேரே தரிசிக்க விரும்பி நம்மை அன்போடு தியானிக்கின்றார்கள் ஆகலின், மகிழ்ச்சிகூர நாம் ஆண்டு வல்லே சேறல்வேண்டும்-அவர்கட்குமகிழ்ச்சி மிக நாமினி அவ்விடத்துத் தவறாது விரைந்து செல்லுதல் வேண்டும் எ-று.

வேண்டுமென்பது தேற்றப்பொரு டருவதோர் தொழிற்பெயராகலிற் றவறாது என உரையில் விசேடிக்கப்பட்டது. கருமமெல்லாமென்பதற்குக் குதிரை யிடுதன் மண்சுமத்தன் முதலிய கருமங்களென்பாரு முளர்; முடித்தன மென்பதற்கு விசேஷணமாக்கினும் அமையும். (அஉ)

வாழ்ந்திரு மின்பின் யாமு மேகுவ மென்ன வந்து
சூழ்ந்தரு ளுருவா மன்பர் தோத்திரம் பலவுஞ் செய்து
தாழ்ந்தெதி ரிறைஞ்சி யையா தரிப்பரி தென்று மண்மேல்
வீழ்ந்தயர்ந் தழுதா ரெம்மை விடுதியோ வென்று நொந்தார்.



இ—ள்: இன்பின் வாழ்ந்து இரும் யாமும் ஏகுவம் என்ன - நீங்கள் இன்பத்தோ டிங்ஙனம் வாழ்ந்திருங்கள் நாமும் கைலாச கிரிக்குச் செல்வேமென்று பரமாசாரியர் திருவாய்மலர்ந்தருள, அருள் உருவாம் அன்பர் எதிர் வந்து தாழ்ந்து இறைஞ்சி சூழ்ந்து தோத்திரம் பலவும் செய்து - அன்புருவாகிய திருத்தொண்டர்கள் அதுகேட்டுச் சந்நிதியில் வந்து வீழ்ந்து வணங்கி வலம்வந்து பல தோத்திரங்களையுஞ் சொல்லித் துதித்து, ஐயா தரிப்பு அரிது என்று மண்மேல் வீழ்ந்து அயர்ந்து அழுதார் - சுவாமீ! அடியேங்கள் தேவரீரது பிரிவைச் சகித்தீண்டிருப்பதரிதென்று விண்ணப்பஞ் செய்து மறித்தும் பூமியில் வீழ்ந்தழுது அறிவழிந்தார், எம்மை விடுதியோ என்று நொந்தார் - மீள அறிவு வந்தழித் தேவரீர் அடியேங்களைக் கைவிடுகின்றீரோ வென்று வருந்தினர் எ—று.

அயர்ந்தழுதாரென்பதனை அழுதயர்ந்தார் என விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க. அருள் அன்பாமாறு மேலுங் காட்டப்பட்டது. ()

பரிந்தழு மடியார் தம்மேற் பரமனு மன்பு கூர்ந்து
வருந்துவ தொழிமி னிந்த மணமலி குருந்த நீழற்
பொருந்திய தெய்வ பீடம் பொலிவொடு குயிற்றி மீதே
திருந்திய மறையுந் தேடு நம்பத மாகச் செய்து.

இ—ள்: பரிந்து அழும் அடியார் தம்மேல் பரமனும் அன்பு கூர்ந்து- இவ்வாறு மனம் வருந்தி மேலுமேலும் அழுந் தம்மடியார் மீதே பரமாசாரியரும் முன்னையினு மிக அன்புகூர்ந்து, வருந்துவது ஒழிமின் - நீவிர் வருந்துதலை இனி ஒழியுங்கள், மணமலி இந்தக் குருந்த நீழல் தெய்வம் பொருந்திய பீடம் பொலிவு ஒடு குயிற்றி - மணமிகுந்த இந்தக் குருந்தமர நீழலிலே தெய்வத்தன்மை பொருந்திய பீடிகை யொன்றை அழகோடு செய்து, மீதே திருந்திய மறையும் தேடும் நம் பதம் ஆகச் செய்து - அப்பீடிகையின் மீதே திருத்தமாகிய வேதங்களும் இன்னுந் தேடும் நம்முடைய பாதங்களை நிருமித்து எ—று.

ஆக்கம் பிறிதொன்றாற் செய்வதுணர நின்றது. உபநிஷத்துக்களுந் தேடு நம்பதமென்பார் திருந்தியமறையுந் தேடு நம்பதமென்றார். (அச)

தாங்கரு மரந்தை நீங்கி யாமெனுந் தன்மை கண்டு
நீங்கரு மன்பி னாலே நித்தலு நயந்தி றைஞ்சி
யீங்கருண் மனத்த ரெல்லா மமர்ந்திரு மொருநா ளிந்தத்
தீங்ககல் பொய்கை யூடு செழுந்தழல் வந்து தோன்றும்.

இ—ள்: தாங்கு அரும் அரந்தை நீங்கி - சகித்தற்கரிய இத்துன்பத்தினின்று நீங்கி, யாம் எனும் தன்மை கண்டு - அவற்றை நாமே யென்னும் பாவனைபண்ணி, நீங்கு அரும் அன்பினாலே நித்தலும் நயந்து இறைஞ்சி - நீங்குதற்கரிய அன்பினாலே நாடோறும் விரும்பி வணங்கி, அருள் மனத்தர்

எல்லாம் ஈங்கு இனிது இரும் - நம்மாட்டன்புபொருந்திய மனத்தையுடைய நீவிரெல்லாம் இங்கே இனிதிருங்கள், தீங்கு அகல் பொய்கை ஊடு ஒருநாள் செழுந்தழல் வந்து தோன்றும் - தீங்கற்ற இப் பொய்கையின்கண்ணே ஒரு தினம் செம்மையாகிய அக்கினி வந்து தோன்றும் எ — று.

தீங்ககல் பொய்கைக்கு ஞானக்கினி தீர்த்தமெனவும் திருத்தமாம் பொய்கை எனவும் பெயர். இவற்றைட் பின்னையதைத் திருவாசகத்துள் விதந்தெடுத்தோதிய வாற்றானுமறிக. பூதாக்கினியோ டிதனிடை வேற்றுமை தோன்றச் செழுந்தழலென்றார். (௮௫)

எழுந்தழல் விளைந்த போதில் யாவருந் தடத்தி னூடு
விழுந்துபின் னெய்தி நம்பால் விடுகனுங் கவற்சி யென்று
தொழுந்தவ மியற்றுந் தொண்டர் சூழ்ந்துபின் செல்ல மெல்லச்
செழுந்திருக் கயிலை நாடிச் சென்றனர் தில்லை நாதர்.

இ—ள்: தடத்தின் ஊடு எழும் தழல் விளைந்த போதில் யாவரும் விழுந்து - அப்பொய்கையின்கண்ணே தோன்றும் அக்கினி சுவாலிக்கும் சமயத்தில் நீவிரெல்லாம் அதன்கண் வீழ்ந்து, நம்பால் எய்தி - நம்மை யடைந்து, பின் நும் கவற்சி விடுக என்று - அதன்பின் நம் பிரிவானாய நுந் துன்பத்தை முழுவதும் விடக்கடவீர்களென்று திருவாய்மலர்ந்து, தொழும் தவம் இயற்றும் தொண்டர் சூழ்ந்து பின் செல்ல-எவருந் தொழத் தகுந் தவத்தை இயற்றுந் தொண்டர்கள் ஒருங்கு திரண்டு தம் பின்னாக வர, தில்லை நாதர் செழும் திருக்கயிலை நாடி மெல்லச் சென்றனர் - சபாநாயகர் செழுமையாகிய திருக்கைலாசகிரியை நோக்கி மெல்லச் சென்றருளினார்.

என்று நாடிச் சென்றனர் என முடிக்க. அத்திருத்தொண்டருக்குப் புலப்படுமாறு சென்றருளினா ரென்பார் மெல்லச் சென்றன ரென்றார். ()

நீங்கரு மன்ப ரெல்லா நில்லுமி னென்று கூற
வாங்கவ ரிறைஞ்சி யெந்நா ளையநிற் காண்ப தென்று
தாங்கரு மயக்க மெய்தித் தாயகன் மகவு போலப்
பூங்கழல் வணங்கி நின்றார் போயினர் மாயை வல்லார்.

இ—ள்: நீங்கு அரும் அன்பர் எல்லாம் நில்லுமின் என்று கூற - பிரிதற்கரிய நம்மன்பர்களெவரும் இனி நில்லுங்களென்று சிவபெருமான் பணித்தருள, ஆங்கவர் இறைஞ்சி ஐய நின் காண்பது எந்நாள் என்று - அத்திருத்தொண்டர்கள் வணங்கிச் சுவாமீ அடியேங்கள் தேவரீரை இனிக் காணப் பெறுவது எந்நாளென்று பிரலாபித்து, தாய் அகல் மகவுபோலத் தாங்கு அரும் மயக்கம் எய்தி - தாயைநீங்கும் குழந்தைகளைப்போலச் சகித்தற்கரிய மயக்கமடைந்து, பூங்கழல் வணங்கி நின்றார் - அழகிய திருவடிகளை வணங்கி அவரது பணிமறுக்க அஞ்சி நின்றனர், மாயைவல்லார் போயினர் - அப்பொழுது மாயங்களில் வல்ல சிவபெருமான் சென்றருளினார் எ—று.



திருவாதவூரடிகளை யொழித் தொழிந்த திருத்தொண்டர்களுக்கெல்லாம் மறைந்து சென்றருளினாரென்பார் மாயைவல்லார் போயினர் என்றார். ஈண்டு மாயமென்றது ஓர் குழுவினுள் ஒருவருக்குமாத்திரம் புலப்பட்டு ஏனையோருக்குப் புலப்படாது மறைதலையென்க. (௮௭)

இங்கிவர் நின்ற பின்னு மின்னருள் வாத வூரர்
தங்கிளை வாழ வந்த தலைவர்பின் சென்ற போதிற்
பொங்கிள முலையாள் பாகர் புரிந்திவர் வரவு காணா
வங்கொரு கொன்றை நீழ லிருந்தன ரரந்தை நீக்க.

இ—ள்: இங்கு இவர் நின்ற பின்னும் - இங்கே இவ்வடியார்கள் செல்லாது நின்றபின்னரும், இன் அருள் வாதவூரர் தம் கிளை வாழ வந்த தலைவர் பின் சென்றபோதில் - இனிய திருவருளையுடைய திருவாதவூரடிகளானவர் தமது சுற்றம் வாழும்படி குருமூர்த்தங்கொண் டெழுந்தருளிவந்த சிவபெருமானுக்குப் பின்னாகச் செல்கின்றசமயத்தில், பொங்கு இள முலையாள் பாகர் புரிந்து இவர் வரவு காணா - பொலிவுபொருந்திய இளைய தனங்களையுடைய உமையம்மையினது வலப்பாகராகிய சிவபெருமான் திருப்பி இவரது வரவைக் கண்டு, அரந்தை நீக்க அங்கு ஒரு கொன்றை நீழல் இருந்தனர் - இவரது துன்பத்தை நீக்கும்பொருட்டு அங்கே ஓர் கொன்றைமர நிழலிலே வீற்றிருந்தருளினார் எ — று.

ஓர் சிவஞானியின் சுற்றம் இருபத்தொரு தலைமுறைகாறும் பேரின்ப வாழ்வடையுமென்னும் நூற்றுணிபுபற்றித் திருவாதவூரடிகளைச் சிவஞானியாக்கியருளிய சிவபெருமானை வாதவூரர் தங்கிளை வாழவந்த தலைவர் என்றார். அது "மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை, யாழாமே யருளரசே போற்றி" என்னுந் திருவாக்கானு மறிக. இனி வாதவூராராகிய தலைவரெனக் கோடலு மொன்று. நித்திய கன்னிகையாதலின் என்றுஞ் சாயாத தனங்களென்பது விளக்குவார் பொங்கிளமுலை என விசேடித்தார். (௮௮)

தன்புடைக் கவடு கொண்டோர் தடங்கிரி நிரந்த மாலை
பொன்படைத் தனைய கொன்றை பொலிவுற விருந்த போதின்
மென்பதத் திறைஞ்சிக் கண்ணீர் விழவிழத் தொழுது நிற்கு
மன்பரைப் பரிவா லைய ரருகுவைத் தருளிச் செய்வார்.

இ—ள்: ஓர் தடம் கிரி தன்புடைக் கவடு கொண்டு - ஓர் பெரிய மலையானது தன் பக்கத்தே பெருங் கொம்பர்களைக்கொண்டு, நிரந்த பொன் மாலை படைத்து அனைய கொன்றை பொலிவு உற இருந்தபோதில் - அக்கொம்பர்களிலே நிறைவுபொருந்தப் பொன்னரிமாலைகள் தாங்கப்பெற்று நின்றாற்போன்ற அக்கொன்றைமரமானது பொலிவுமிகப் பரமாசாரியர் அதன் நிழலிலே வீற்றிருக்குஞ்சமயத்தில், மெல் பதத்து இறைஞ்சிக் கண் நீர் விழ விழத் தொழுது நிற்கும் அன்பரை - மென்மையாகிய திருவடிகளிலே சிரசு தோயும்படி சந்நிதியில் வீழ்ந்து வணங்கி யெழுந்து கண்ணீ

ரானது தைலதாரைபோல இடையறு தொழுக அஞ்சலிசெய்துகொண்டு நிற்கும் மெய்யன்பராகிய திருவாதவூரடிகளை, பரிவால் ஐயர் அருகு வைத்து அருளிச்செய்வார் - அவரது அன்பு காரணமாசப் பரமாசாரியர் தம் பக்கத் திருத்தி வைத்துக்கொண் டிங்ஙனந் திருவாய்மலர்ந்தருளுவாராயினர் எ-று.

படைத்தது எனற்பாலது படைத்து என விகாரமாயிற்று. இல்பொருளுவமை. அடுக்குப் பன்மைபற்றி வந்தது. (௮௯)

அவ்விய மில்லார் தங்கட் கருடர முன்னு மன்னுந்
திவ்விய தலமா மிந்தச் சிறந்துள குருந்த நீழ
லெவ்வுல கெங்கு முள்ளே மாயினு மிங்கு ளோர்கள்
வெவ்வினை யகற்றி யாள வேண்டியீண் டுறைவோ மென்றும்.

இ—ள்: எவ் உலகு எங்கும் உள்ளேம் ஆயினும் - நாம் சர்வலோகங்களின் அகத்தும் புறத்தும் பாலின்க ணெய்போல வியாபித்திருப்பினும், இங்கு உளோர்கள் வெவ்வினை அகற்றி ஆளவேண்டி - இத்திருப்பெருந்துறையின்க ணுள்ளவர்களது கொடிய இருவினைகளையு நீக்கி அவர்களை ஆட்கொள்ளும்படி கருதி, அவ்வியம் இல்லார் கட்கு அருள் தர முன் நாம் மன்னும் இந்தத் திவ்விய தலம் ஆம் சிறந்துள குருந்த நீழல் ஈண்டு என்றும் உறைவோம் - சித்தசுத்தியையுடைய நன்மக்கட் கநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு முதற்கண் நாம் கோயில்கொள்ளப்பெறும் இந்த க்ஷேத்திரத்தின்கணுள்ள இக்குருந்தமர நீழலாகிய இவ்விடத்துத் தயிரின்கணெய்போல எஞ்ஞான்றும் விசேட வியாபகமாக வசிப்பேம் எ—று.

தம் சாரியை. இந்தச் சிறந்துள குருந்த நீழல் திவ்விய தலமாமென முடிப்பாரு முளர். (௯௦)

பொங்கொளிச் சுழுனை யூடு புலம்பிசைக் குறியே யான
மங்கல சங்க மல்லால் வாய்ந்தபல் லியங்கள் யாவு
மிங்கெமக் காகா வோசை யடங்கிட மாத லாலு
நங்குலக் கவுரி காண நடநவி லுதலி னாலும்.

இ—ள்: ஓசை அடங்கு இடம் ஆதலாலும் - இஃது நாதலயஸ்தானமாதலினாலும், நம் குலக் கவுரி காண நட நவிலுதலினாலும் - நங்குலமகளாகிய பார்ப்பதி காண நாம் பஞ்சகிருத்தியகிருத்தஞ் செய்யுமிடமாதலினாலும், பொங்கு ஒளிச் சுழுனை ஊடு புலம்பு இசைக் குறியே ஆன மங்கல சங்கம் அல்லால் வாய்ந்த பல்லியங்கள் யாவும் இங்கு எமக்கு ஆகா - மேனோக்கிக் கிளராநிற்கு மொளியையுடைய சுழுமுனைநாடியிலே சத்திக்கும் சூக்குமநாதத்திற்குப் பிரதிநாதசின்னமாகிய மங்கலமுள்ள சங்க வாத்திய மொன்றல்லது செவிப்புலங்கட் கின்பஞ்செய்து மனத்தைப் புறத்தேயிழுக்கு மேனை வாத்திய வர்க்கங்களனைத்தும் இந்த ஸ்தலத்தின்கண்ணே நமக்காகாவாம்.



திருப்பெருந்துறை சோடசாந்தத் தலமும், துரியாதீதத்தலமும், ஞானகேத்திரமும், யோகவனமு மாகலின் இங்ஙனம் கூறப்பட்டதென்க. சுழுமுனையூடு புலம்பிசைகளை நிஷ்டாநுபூதிநூலிற் காண்க. உமையம்மை அக்கினிக்குச் சூடுபோலத் தமக்கபின்னமாகிய தந்திருவருளையாகலின், அவ்வம்மையை நங்குலக் கவுரி என்றார். நவிலல் - செய்தல். சுழுமுனை சுழுனை என மரீஇயிற்று. (௯௧)

ஒழுங்குட னின்ன வாறங் குணர்ந்துநற் குருந்த நீழற்
செழுந்தவக் குழுவி னீயு நங்கழல் சேவை செய்தே
யெழுங்கனன் மடுவிற் காணில் யாவரு மதனிற் சென்று
விழும்பொழு துடன்வீ ழாம லவ்வுழை விரைவி னீங்கி.

இ—ள்: ஒழுங்கு உடன் இன்னவாறு உணர்ந்து - கிரமமாக இத்தன்மைகளை நீ யறிந்து, இங்கு நல் குருந்த நீழல் செழும் தவக் குழுவில் நீயும் நம் கழல் சேவை செய்து - இங்கே நல்ல குருந்தமர நிழலிலே செழுமையாகிய தபோதனர்கூட்டத்தோடு நீயும் நம்முடைய பாதங்களை வழிபட்டுக் கொண்டிருந்து, மடுவில் எழும் கனல் காணின் யாவரும் அதனில் சென்று விழும் பொழுது உடன் வீழாமல் - நாம்மேற்கூறியபிரகாரம் பொய்கையின்கட் சுவாலிக்கும் அக்கினி நுங்கண்களுக்குப் புலப்பட்டுழி நம்மன்பர்களெல்லாம் அவ்வக்கினியிற் பிரவேசிக்கும்போது நீயு மவருட னதன்கட் பிரவேசியாமல், அவ் உழை விரைவின் நீங்கி - அவ்விடத்தை விரைவாக விட்டு நீங்கி எ—று. குளகம். (௯௨)

உத்தர கோச மங்கை யென்னுநம் மூரிற் சென்று
சித்தியங் கெவையு மெய்தித் தெய்விக லிங்க மேனி
வைத்தநம் பதிக டம்மி லிவையிவை வணங்கி லங்கே
யித்திகழ் வடிவே காண்டி காட்டுது மென வியம்பி.

இ— ள்: உத்தரகோசமங்கை என்னும் நம் ஊரில் சென்று அங்கு சித்தி எவையும் எய்தி - திருவுத்தரகோசமங்கையென்று தன் பெயர் கூறப்படும் நம்முடைய ஸ்தலத்திற் போய் அங்கே இட்டசித்திக ளெவைகளையும் பெற்று, தெய்விக லிங்க மேனி வைத்த நம் பதிகள் தம்மில் இவை இவை வணங்கில் - தெய்வத்தன்மை பொருந்திய நமது சகள நிஷ்கள வடிவாகிய மகாலிங்கப் பிரதிட்டை செயப்பெற்ற நம்முடைய ஸ்தலங்களுள் இன்ன இன்ன ஸ்தலங்களையடைந்து நீ நம்மைத் தரிசித்து வழிபடின், அங்கே திகழ் இவ்வடிவே காண்டி - அவ்வத் தலங்களினெல்லாம் விளங்காநின்ற இக் குருவடிவத்தையே நீ தரிசிப்பாய், காட்டுதும் - நாமுனக்குத் தரிசிப்பிப்பேம், என இயம்பி - என்று திருவாய்மலர்ந்தருளி எ—று.

திருவாதவூரடிகள் திருவுத்தரகோசமங்கையை விட்டு நீங்கி அப்பாற் சென்று தரிசித்து வணங்கும் ஸ்தலங்களை யெல்லாம் ஆசிரியர் பின் தனித்

தனி விதந்தோதுப வாகலின், அது பற்றிப் பின் உரைத்துமென்னு முத்தியான் அவற்றைப் பரமாசாரியர் கூற்றாகவே தாம் இவை யிவையென ஈண்டுத் தொகுத்துச் சுட்டி யொழிந்தா ரென்பது. எனவே, பரமாசாரியர் ஆண்டு விரித்துரைத்தாரென்பது போதருமென்க. (௬௩)

இந்நகர் வணங்கி நீங்கி யெழுங்கழுக் குன்ற மென்னு
மந்நெடும் பதியி றைஞ்சி யாண்டுநின் றீண்டுப் போந்து
பொன்னினம் பலத்தி லெய்திப் புத்தரை வாதில் வென்ற
பின்னரெம் பதமே யான பெரும்பதம் பெறுதி யென்றார்.

இ—ள்: இந்நகர் வணங்கி நீங்கி - நீ இந்த ஸ்தலங்களை யெல்லாந் தரிசித்து வணங்கி நீங்கி, எழும் கழுக்குன்றம் என்னும் அந் நெடும் பதி இறைஞ்சி - உயர்வாகிய திருக்கழுக்குன்றமென்னும் அந்தப் பழைய ஸ்தலத்தைத் தரிசித்து வணங்கி, ஆண்டு நின்று ஈண்டுப் போந்து - அவ்விடத்தினின்றுந் தெற்கு நோக்கி இங்கே மீண்டு வந்து, பொன்னின் அம்பலத்தில் எய்திப் புத்தரை வாதில் வென்ற பின்னர் - சிதம்பரத்திலே கனகசபையை யடைந்து புத்தர்களைத் தருக்கத்திற் செயித்த பின்னர், எம் பதமே ஆன பெரும்பதம் பெறுதி என்றார் - நம் பாத கலப்பாகிய சாயுச்சியத்தைப் பெறக்கடவை யென் றருளிச்செய்தார் எ—று.

பொன்னினம்பலம் என்புழி இன் சாரியை தவிர்வழி வந்தமையின் விரித்தல் விகாரம். வருஞ் செய்யுளினு மீதொக்கும். பெரும் பத மென விசேடித்தார் பதமுத்திகளி னீக்கிப் பரமுத்தியாகிய சாயுச்சியமென்பது விளக்குதற்கென்க. "இறுமாந் திருப்பன்கொலோ வீசன் பல்கணத் தெண்ணப்பட்டுச், சிறுமானேந்தி தன் சேவடிக் கீழ்ச் சென்றங், கிறுமாந் திருப்பன் கொலோ" என்னும் திருவாக்கானு முணர்க. (௬௪)

மன்னுமன் புடையார் தெய்வ வாசகம் புகலு மாறும்
பன்னகம் புனைவோன் மேவும் பதிபல வணங்கு மாறும்
பொன்னினம் பலத்தி லெய்திப் புத்தரை வென்று மன்றன்
றன்னருங் கமல பாதஞ் சார்தலும் பகர்த லுற்றாம்.

இ—ள்: மன்னும் அன்பு உடையார் தெய்வ வாசகம் புகலும் ஆறும் - நிலைபெற்ற அன்பையுடைய திருவாதவூரடிகள் தெய்வத்தன்மை பொருந்திய திருவாசகம் பாடியருளுந் திறத்தையும், பன்னகம் புனைவோன் மேவும் பதி பல வணங்கும் ஆறும் - சர்ப்பத்தை ஆபரணமாகத் தரித்த சிவபெருமானுடைய ஸ்தலங்கள் பலவற்றைத் தரிசித்து வணங்குந் திறத்தையும், பொன்னின் அம்பலத்தில் எய்திப் புத்தரை வென்று - சிதம்பரத்திலே கனகசபையை யடைந்து புத்தர்களைத் தருக்கத்திலே செயித்து, மன்றன் அரும் பாத கமலம் சார்தலும் பகர்தல் உற்றாம் - சபாநாயகரது அருமையாகிய திருவடித் தாமரைகளை யடையுந் திறத்தையும் யாம் கூறத் தொடங்கினோம் எ—று.



பதிகாணம்பற்றி நின்று செய்தமையிற் சிவவாக்கெனவே கொள்ளப்படுமென்பார் தெய்வ வாசகமெனவும், விஷ்ணுவுக்கும் அடைதற்கருமை நோக்கி அருங்கமலபாதமெனவும் கூறினார். இச்செய்யுளிடைப் பிறவரலாப் வந்த புராணிகர் கூற்றென்க. (௬௫)

மண்சுமந்த சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௬௪௪.

திருச்சிற்றம்பலம்.

———

உ

# திருவம்பலச் சருக்கம்.

வரந்தர விருந்தார் தம்மை வாதவூ ரிறைவர் போற்றிப்
பெருந்துறை நகரி லன்றிப் பிஞ்ஞகா புலியூர் மன்றிற்
பொருந்துவை முத்தி யென்று புகன்றதிங் கெவனோ வென்னத்
திருந்திய தவத்தாய் கேட்டி யென்றவர் செப்ப லுற்றார்.

இ—ள்: வரம் தர இருந்தார் தம்மை வாதவூர் இறைவர் போற்றி - அத்தருணத்துத் தமக்கு வரங்கொடுத் தருளும்பொருட்டு அங்ஙனம் வீற்றிருக்கும் பரமாசாரியரைத் திருவாதவூரடிகள் வணங்கித் துதித்து, பிஞ்ஞகா - தலைக்கோலத்தையுடைய சுவாமீ, பெருந்துறை நகரில் அன்றிப் புலியூர் மன்றில் முத்தி பொருந்துவை என்று இங்குப் புகன்றது எவனோ என்ன - திருப்பெருந்துறையாகிய இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தின்கணன்றிச் சிதம்பரத்துள்ள கனகசபையிலே நீ பரமுத்தி பெறுவையென்று தேவரீர் அடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளியதற்குக் காரணம் என்கொலோ வென்று அதிவிநயத்துடன் வினவ, திருந்திய தவத்தாய் கேட்டி என்று அவர் செப்பல் உற்றார் - திருத்தமாகிய தவத்தையுடைய நம் அன்பனே அதனைக் கேட்கக்கடவை யென்று பரமாசாரியர் இங்ஙனந் திருவாய்மலர்ந்தருளுவாராயினார் எ—று.

வரம் - விரும்பியது; வடமொழித் திரிபு. எனைத் திருத்தொண்டரினும் இது கேட்டற்குப் பூர்வ தவத்தாற் றிருந்தினை என்பார் திருந்திய தவத்தாய் கேட்டி என்றார். (௧)

இத்தலத் திடையே வீட டுத்துள விடத்தி லன்றி
வைத்துள விடத்தே யந்த வேட்டுவன் வடிவங் கொள்ளும்
வித்தக வனக்கிங் கன்பான் மெய்யுணர் வுரைத்தே மேன்மை
யொத்திடுஞ் சிவாநு பூதி முத்தியம் பலத்தி லுண்டாம்.

இ—ள்: இத்தலத்து இடையே கீடம் எடுத்துள இடத்தில் அன்றி- இந்தப் பூமியின்கண்ணே புழுவானது தானெடுக்கப்பட்ட இடத்திற்க ணன்றி, வைத்துள இடத்தே அந்த வேட்டுவன் வடிவங் கொள்ளும்- வைக்கப்பட்ட இடத்தின் கண்ணேயே எடுத்த அவ் வேட்டுவனது வடி வத்தை அடையும் அதுபோல, வித்தக - அநித்தியப் பொருளாகிய தனு கரண புவன போகமென்னும் பிரபஞ்சத்தானே நித்தியப்பொருளாகிய பர முத்தியைச் சாதித்துப் பெறும் சதுரப்பாட்டையுடைய நன்மாணுக்கனே, இங்கு அன்பால் மெய்யுணர்வு உனக்கு உரைத்தேம் - நீ யெமக்கு எதிர்ப் பட்ட இந்த ஸ்தலத்தின்கண்ணே நின் அன்பு காரணமாக நாம் உனக்கு மெய்ஞ்ஞானத்தை உபதேசித்தேம், மேன்மை ஒத்திடும் சிவாநுபூதி முத்தி அம்பலத்தில் உண்டாம் - மேன்மை பொருந்திய சிவாநுபூதியாகிய பர முத்தி சிதம்பரத்தின்கணுள்ள கனகசபையிலே உனக்கு உளதாம் எ—று.

வேட்டுவன் - பறந்து சஞ்சரிக்கு மோர் செந்துவின் பெயர். இதனை வேட்டைவாளி எனவும் வழங்குப. அநுபூதி - அநுபவம். ஈண்டு வேட்டு வனுக்குப் பரமாசாரியரும், கீடத்துக்குத் திருவாதவூரடிகளும், வேட்டுவ னெடுத்த இடத்துக்குத் திருப்பெருந்துறையும், வைத்த இடத்துக்கு அம் பலமுமாமென்க. "வேட்டுவனு மப்புழுப்போல் வேண்டுருவைத் தான் கொடுத்துக், கூட்டானே மண்போற் குளிர்ந்து" "மற்றோர் செந்து, பண்டைய வடிவந் தானே வேட்டுவ னுய்ப்பி றந்தும்" என்றார் பிறரும். இது வேற்றுப்பொருள்வைப்பென்னு மலங்காரம்; "முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப், பின்னொரு பொருளி னுலகறி பெற்றி, யேற்றி வைத்துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே" என்பதனுணறிக. (௨)

இடம்படு முடம்பின் மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
யுடன்கிள ரொளியே யாகி யொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடுமம் பலம தாகும்.

இ—ள்: இடம் படும் உடம்பின் மூலத்து எழுந்த நல் சுழுனை நாடி உடன் கிளர் ஒளியே ஆகி - இடவிதாகிய இச்சரீரத்தின்கண் மூலாதாரத்தி னின்று மெழுகின்ற நல்ல சுழுமுனைநாடியோடு ஒருங்கு எழாநின்ற தேசோ மயமாகியும், ஒளியில் அஞ்சு எழுத்தும் ஒன்றாய் - அவ்வொளியிலே ஸ்ரீ பஞ்சாக்ஷரமும் ஏகாக்ஷராகாரமாகியும், நெடும் குழல் ஓசை ஆகி - நெடிய நாததாரையி னியங்கு மொலியாகியும், நிலவும் அவ் ஓசை போய் அங்கு அடங்கிய இடமே - அதிசூக்குமமாய் விளங்கும் அவ்வோசை மேனோக்கிச் சென்று அங்ஙனம் லயிக்குந் தானமே, என்றும் ஆடும் அம்பலம் ஆகும் - நாம் அநவரததாண்டவஞ் செய்தருளுங் கனகசபை யாகும் எ—று.



மூலாதாரம் ஆறுதாரத்தொன்று. அது குதத்திற்கும் கோசத்திற் கும் மத்தி. அதற்கு வடிவு முக்கோணம். நிறம் மாணிக்கநிறம். அதி தெய்வம் கணபதி. சத்தி குண்டலி. அக்கரம் பிரணவம். அது நாலிதழ்க் கமலம் போல்வது. சுழுமுனை லலாடத்தானம். அதுவே புருவமத்தி. அதற்கு வடிவு வட்டம். நிறம் படிகநிறம். அதிதெய்வம் சதாசிவம். சத்தி மனோன்மனி. அக்கரம் யகாரம். அது மூன்றிதழ்க் கமலம் போல்வது. அஞ் செழுத்து மொன்றாதல் மேற் காட்டப்பட்டது; "நகார மகார சிகார நடுவாய், வகார யகார வாசி யெனவே, நகார மகார மிரண்டு மறத்துச், சிகார முதல்வன் சிறந்து நின்றானே" என்பதனானு மறிக. ஓசைபோயங் கடங்கிய விடம் சுத்தமாயை. இதுவே இறைவனுக்குப் பரிக்கிரக சத்தி. பரிக்கிரகசத்தி - வேண்டியபோது கைக்கொள்ளுஞ் சத்தி. இந்த லலாட ஸ்தானமே பஞ்சகிருத்திய நடனத்திற் கிடமாகலின் ஓசைபோயங்கடங்கிய விடமே யென்று மாடுமம்பலமதாகு மென்றார். இன்னும் இது உரைக் கிர மத்தா னன்றி உபதேசக் கிரமத்தா னறியத்தகும் இரகசியப் பொருளாகலிற் குருமுகமாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்துகொள்க. முன்வரும் இன் னோரன்ன பிறவுமன்ன. (௫)

எண்டரும் பூத மைந்து மெய்திய நாடி மூன்று
மண்டல மூன்று மாகி மன்னிய புணர்ப்பி னாலே
பிண்டமு மண்ட மாகும் பிரமனோ டைவ ராகக்
கண்டவர் நின்ற வாறு மிரண்டினுங் காண லாமே.

இ—ள்: எண் தரும் பூதம் ஐந்தும் - எண்ணத்தகும் ஐம் பூதங் களும், எய்திய நாடி மூன்றும் - பொருந்திய இடை பிங்கலை சுழுமுனை யென்னும் நாடிகண் மூன்றும், மண்டலம் மூன்றும் ஆகி மன்னிய புணர்ப் பினாலே - சோமசூரியாக்கினிகளென்னும் மண்டலத் திரயங்களுமாகி ஈரிட மும் நிலைபெற்ற சம்பந்தத்தினாலே, பிண்டமும் அண்டம் ஆகும் - பிண்ட மும் அண்டமும் தம்முளொப்பனவாம், பிரமனோடு ஐவர் ஆகக் கண்டவர் நின்ற ஆறும் இரண்டினும் காணலாம் - பிரமா விஷ்ணு உருத்திரன் மகே சுரன் சதாசிவனெனப் பகுக்கப்பட்ட பஞ்ச கர்த்தாக்களும் நிற்கின்ற முறைமையும் இவ் விரண்டிடத்தினு மொப்பாகக் காணலாம் எ—று.

ஐம்பூதம் வெளிப்படை. நாடிகள் மூன்றனுள் இடை இடமூக்கிலும், பிங்கலை வலமூக்கிலும், சுழுமுனை மத்தியிலும் நிற்பன. மண்டல மூன்ற னுட் சந்திரமண்டலம் மூலாதாரந் தொடங்கி ஒவ்வோரக்கரத்தை முற் கொண்டு கிரமத்திபிற் கோடி சூரியப் பிரகாசமாய் விளங்கும். சூரியமண் டலம் இருதயகமலத்தில் அறுகோணமாய் எட்டிதழ்க் கமலம்போல விளங் கும். அக்கினி மண்டலம் பிருதிவியும் அப்புவுங் கூடின இடத்துச் சதுர மாயும் நடு முக்கோணமாயும் நாலிதழ்க் கமலம்போல விளங்கும். பிண்டம்

சரீரம். அண்டம் பிரமாண்டமாகிய உலகம். பிரமனுடைவராகக் கண்டவர் பிண்டத்தின்கணின்றவாறுவது சுவாதிட்டானத்திலே பிரமாவும், மணிபூரகத்திலே விஷ்ணுவும், அநாகதத்திலே உருத்திரனும், விசுத்தியிலே மகேசுரனும், ஆஞ்ஞையிலே சதாசிவனுமாக நிற்றலாம். சுவாதிட்டானம் கோசத்திற்கும் நாபிக்கும் மத்தி. மணிபூரகம் நாபிக்கமலம். அநாகதம் இருதயகமலம். விசுத்தி கண்டஸ்தானம். ஆஞ்ஞை லலாடஸ்தானம். இது பிண்ட தரிசனம். இனி அண்டத்தின்கண்ணே திருவாரூர் மூலாதாரஸ்தலமும், திருவானைக்கா சுவாதிட்டான ஸ்தலமும், திருவண்ணாமலை மணிபூரகஸ்தலமும், சிதம்பரம் அநாகதஸ்தலமும், திருக்காளத்தி விசுத்தி ஸ்தலமும், காசி ஆஞ்ஞைத்தலமுமாம். இது தூலசமஷ்டி யபிமானமென்க. பிண்டத்தின்கண் மூலாதாரமும் பிறவுமுண்மைபோலப் பிரமாண்டத்தின்கண் மூலாதாரமும் பிறவு முண்மைதெரித்துக் காட்டியவாறு. (ச)

ஆதலா லிந்த வண்டத் தறிவரும் பொருளா யென்றுந்
தீதிலா மூல நாடிற் றிகழ்சிவ லிங்க மேனி
மீதிலா மந்த நாத வெளியின்மே லொளிமன் றங்குக்
காதலான் மடவாள் காணக் கருத்துற நிருத்தஞ் செய்வேம்.

இ—ள்: ஆதலால் - இங்ஙனமாகலான், இந்த அண்டத்து - இப்பிரமாண்டத்தின்கண்ணே, என்றும் அறிவு அரும் பொருள் ஆய்த் தீது இலா மூலம் நாடில் - எஞ்ஞான்றும் எளிதினறிந்து கோடற்கரிய பொருளாய்த் தீதற்ற மூலத்தை ஆராயுமிடத்து, திகழ் சிவலிங்க மேனி - அது பிரகாசியாநிற்குஞ் சிவலிங்க வடிவமேயாம். மீதில் ஆம் அந்த நாதவெளியின் மேல் ஒளி மன்று - மேலாகவுள்ள அந்தப் பரநாத வெளியிற் சுத்தமாயாமயமாகிய கனகசபை விளங்குகின்றது, அங்குக் காதலான் மடவாள் காணக் கருத்து உற நிருத்தம் செய்வேம் - அச்சபையின் கண்ணே ஆன்மகோடிகளின் மீது முகிழ்த்த பெருங் கருணைத் திறத்தினாலே சிவகாமியம்மையார் தரிசிக்கப் பக்குவிகளது கருத்தின்கட் பதியுமாறு நாம் அநவரத திருநடனஞ் செய்தருளுவேம் எ—று.

ஈண்டுச் சிவலிங்கமேனி யென்றது நாதவிந்துக்களின் ஐக்கியத்தானமாகிய சாதாக்கியத்தை யென்க. சிவகாமி சிற்சத்தி. மூலம் மன்றெனவியைத்தலு மொன்று. (ரு)

அந்தநன் னடமே தென்னி னைந்தொழி னிகழ்த்த லாகும்
பந்தம தகற்று மிந்தப் படிவமு மதுவே யாகும்
வந்துல கத்தில் யாருங் காண்பரேல் வழுவா முத்தி
தந்தரு ளளிக்குந் தெய்வ தலமுமத் தலமே கண்டாய்.

இ—ள்: அந்த நல் நடம் ஏது என்னில் - அந்தத் திருநடனந்தான் யாதென்று நீ வினவின், ஐந்தொழில் நிகழ்த்தல் ஆகும் - சிருட்டி திதி



சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியமுஞ் செய்தலேயாம், பந்தம் அகற்றும் இந்தப் படிவமும் அதுவே ஆகும் - பக்குவான்மாக்களது பாசக்கட்டை யவிழ்க்கும் இக்குருவடிவமும் அந்நடன கர்த்திருத்துவ வடிவமேயாம், உலகத்தில் யாரும் வந்து காண்பரேல் வழுவா முத்தி தந்து அருள் அளிக்கும் தெய்வ தலமும் அத்தலமே கண்டாய் - இவ்வுலகின்கட் பக்குவிகள் யாவராயினும் வந்து தரிசிக்கிற் றவறுது முத்தியை அவர்கட் கீந்து திருவருள் சுரக்குந் தெய்வத்தன்மை பொருந்திய மகாக்ஷேத்திரமும் அந்தச் சிதம்பரமே யென்றறிவாயாக எ—று.

பஞ்சகிருத்தியங்களுட் சிருட்டி ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களை முதற்காரணத்தினின்றுந் தோற்றுவித்தலும், திதி தோற்றுவிக்கப்பட்ட தனு கரண புவன போகங்களை நிறுத்தலும், சங்காரம் தனு கரண புவனங்களை முதற்காரணத்தில் ஒடுக்குதலும், திரோபவம் ஆன்மாக்களை இருவினைப்பயன்களாகிய போக்கியப்பொருள்களில் அமிழ்த்துதலும், அநுக்கிரகம் ஆன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்கலுமென மேற்கூறியவைகளுமாம். முதற்காரணம் மாயை. பஞ்சகிருத்திய நிருத்த நிலையை, "தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்கார—மூற்றமா, யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி, நான்றமலர்ப் பதத்தே நாடு" என்பதனானுமறிக. வினை லௌகிக நடனம்போலன்றி வைதிக நடனமாகலின் நன்னடமென்றும், முன் நங்குலக் கூழரிகாண நடநவிலுதலினானும் என்றாராகலின் அதற்கேற்ப ஈண்டுப் பந்தமகற்று மிந்தப் படிவமு மதுவேயாகுமென்றும், தரிசிக்க முத்திதருந் தலமாகலின் வந்துலகத்தில் யாருங் காண்பரேல் வழுவாமுத்தி, தந்தருளளிக்குந் தெய்வதலமுமத் தலமே என்றுங் கூறினர். கர்த்திருத்துவம் செய்பவனது தன்மை. (௬)

தாவரும் பணில நேமி தரிப்பவர் பிரம ரென்போர்
யாவரும் புலிபாம் பென்னு மிருவரும் புரத்தி னுள்ளார்
மூவருந் தெய்வ மூவா யிரவரு முனிவர் தாமுந்
தேவருந் தொழுது போற்று மெல்லையத் தில்லை மூதூர்.

இ—ள்: தா அரும் பணிலம் நேமி தரிப்பவர் பிரமர் என்போர் யாவரும் - கற்பங்கடோறுமுள்ள கேடற்ற சங்குசக்கரங்களைத் தாங்கிய விஷ்ணு பிரமாக்களனைவரும், புலி பாம்பு என்னும் இருவரும் - வியாக்கிரபாதர் பதஞ்சலியென்னு முனிவரிருவரும், புரத்தில் உள்ளார் மூவரும் - தாரகாக்கன், கமலாக்கன், வித்தியுன்மாலி என்னும் திரிபுரத்தசுரர் மூவரும், தெய்வ மூவாயிரவரும் - தெய்வத்தன்மைபொருந்திய தில்லைவாழந்தணர் மூவாயிரவரும், முனிவர் தாமும் - நாற்பத்தெண்ணாயிர மிருடிகளும், தேவரும் தொழுது போற்றும் எல்லை - முப்பத்துமுக்கோடி தேவர்களும் தரிசித்து

வணங்கித் துதிக்கப்பெறும் மகா க்ஷேத்திரமாயுள்ளது, அத் தில்லை மூதூர் - அந்தப் பழைய தில்லைமாநகரம் எ — று.

இன்னுமெண்ணின்கணின்ற எச்சவும்மையானே உபமன்னியு இரணிய வன்மா முதலாயினோரையுந் தழீஇக்கொள்க; எல்லை-இடம். (எ)

மற்றிவை தெளிவா யென்று பணிந்தெதிர் வணங்கி நிற்பார்
நெற்றியி னீறு சாத்தி நிற்றியென் றகல நில்லார்
சற்றிடஞ் சென்றார் பின்னு மிங்கிவர் தன்மை கண்டு
கற்றையஞ் சடையார் நின்று கண்ணருள் செய்து போந்து.

இ—ள்: இவை தெளிவாய் என்று - இச்சிதம்பர மகான்மியங்களை நீ நிச்சயித் தறிந்துகொள்வாயாகவென்று போதித்து, எதிர் பணிந்து வணங்கி நிற்பார் நெற்றியில் நீறு சாத்தி நிற்றி என்று அகல - தமது சந்நிதியிலே வணங்கி யெழுந் தொல்கி நிற்குந் திருவாதவூரடிகளது நெற்றியில் விபூதி தரித்து நமது வாற்சல்லிய குழந்தாய் இனி கண்டு நில்லென்று பரமாசாரியர் அக்கொன்றைமர நீழலை விட்டு நீங்குதலும், பின்னும் நில்லார் சற்று இடம் சென்றார் - திருவாதவூரடிகள் பின்னரு மாண்டுப் பிரிந்து நிற்கமாட்டாதவராய்ச் சிறிது தூரம் பின்றொடர்ந்து சென்றனர், கற்றை அம் சடையார் இங்கிவர் தன்மை கண்டு நின்று கண் அருள் செய்து போந்து - அப்பொழுது தொகுதியாகிய சடையையுடைய சிவபெருமானனவர் இவரது தீவிரதா பக்குவத்தைக் கண்டு சிறிது தங்கிநின்று கிருபாநோக்கஞ் செய்து சென்று எ—று.

மற்று அசைநிலை. இங்கிவர் ஒரு சொன்னீர்மைத்து. ஆசாரியரோடு சம்பாஷிக்கும்போது சீடர் சரீரம் ஒல்கி நிற்கவேண்டுமென்பது "கை குவித்து மெய்வளைத்துக் கண்ணியருங் காரியமும், பையப் பகர்க பயந்து" என்பதனானு மறிக. (அ)

கண்ணெதிர் நடக்கு மாறு கண்டுளங் களித்து நிற்கும்
புண்ணியர் காண முன்னர் மறைந்தனர் புலியூ ரையர்
துண்ணென விரக்க மெய்தித் தொழுதுகை தலைமேற் கொண்டு
நண்ணரு மன்பர் கூட்ட நணுகினர் வாத வூரர்.

இ—ள்: புலியூரையர் - சபாநாயகரானவர், கண் எதிர் நடக்கும் ஆறு கண்டு உளம் களித்து நிற்கும் புண்ணியர் காண முன்னர் மறைந்தனர் - தாம் அவரது கண்ணுக்கெதிரே நடந்தருளுமாற்றைக் கண்டு களித்துப் பின்றொடர்தலை மறந்து நிற்கும் புண்ணியபுருஷராகிய திருவாதவூரடிகள் காண எதிரே அந்தர்த்தானமாயினர், வாதவூரர் துண்ணென இரக்கம் எய்திக் கைதலைமேல் கொண்டு தொழுது - அப்பொழுது திருவாதவூரடிகள் விரைவாக மனமிரங்கிக் கைகளைக் கூப்பிச் சிரசில் வைத்துக் கும்பிட்டு, நண் அரும்



அன்பர் கூட்டம் நணுகினர் - நம்போலும் அசத்தர்களால் நணுகுதற்கரிய சிவபத்தர்களது திருக்கூட்டத்தை யடைந்தருளினர் எ—று.

மறந்தென்பது களித்தென்பதுபற்றி வருவிக்கப்பட்டது. தம் பிரிவாற்றாது பின்றொடர்ந்து செல்லுந் தமது வாற்சல்லிய குழந்தையாகிய திருவாதவூரடிகள் காணநிருக்கத் தாமறைதல் தயாநிதியாகிய தமதிரக்கமுடைமைக்குச் சிறிதுந் தகாமையின், அவரே கண்டு களித்தயர்ந்து நிற்கும்வண்ணம் நடந்தருளினர் என்பார் அந்நடையை விதந்து கண்ணெதிர் நடக்குமாறென்றும், அவர் காணநிருக்கத் தாமறைதல் தம்மிரக்கமுடைமைக் கிழுக்காகலின் அது சாராமைப்பொருட்டு அவர்க்கவ்வயர்ச்சி நீங்கி நினைவுகூரு மவ்வெல்லைக்கண் முற்பிற்பாடற எதிரே மறைந்தருளின ரென்பார் புண்ணியர் காண முன்னர் மறைந்தனர் என்றும், அதன்பின் அவர் காட்சிக் ககப்படாமைபற்றிச் சிறிதிரங்கினும் ஆண்டை நிகழ்ச்சிகளான் மற்றெவரினுந் தம்மாட்டருளுடையரென்பது தெற்றென விளங்குதலின், அதுவே பற்றுக்கோடாக அவ்விடைகெடிது நின்று பெரிதும் வருந்தாது திருவரு டுணையாகச் சிவாஞ்ஞைப்படி திருத்தொண்டர் கூட்டத்தை விரைவி னடைந்தாரென்பார் துண்ணென விரக்கமெய்தித் தொழுது கை தலைமேற் கொண்டு நண்ணரு மன்பர்கூட்ட நணுகினர் என்றுங் கூறினர்.

அருந்தவ மகலா நெஞ்சத் தன்பருந் தாமு மந்தத்
திருந்திய குருந்தின் கீழோர் தெய்வபீ டிகையுஞ் செய்து
வரந்தரு செய்ய பாத மலர்வருத் திறைஞ்சி யாங்க
ணிருந்தன ரிருந்த நாளி லெய்திய தியம்ப லுற்றாம்.

இ—ள்: அருந் தவம் அகலா நெஞ்சத்து அன்பரும் தாமும் - அரிய தவவொழுக்கம் நீங்காத மனத்தையுடைய திருத்தொண்டர்களுந் தாமுமாக, திருந்திய அந்தக் குருந்தின்கீழ் ஓர் தெய்வ பீடிகையும் செய்து - மேலே விசேடசம்பவங்களெல்லாந் தன்மாட்டு நிகழப்பெறுதற்கேதுவாகிய பூர்விக தவத்தாற் றிருந்திய, அக்குருந்தமரத்தின்கீழே தெய்வத்தன்மைபொருந்திய ஒரு யோகபீடமுஞ் செய்து, வரம் தரு செய்ய பாத மலர் வருத்து இறைஞ்சி ஆங்கண் இருந்தனர் - அதன்மீதே தமக்கு வாத்தைத் தருஞ் செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை நிருமித் தருச்சனைசெய்து வணங்கிக்கொண் டவ்விடத்தி னிருந்தார்கள், இருந்த நாளில் எய்தியது இயம்பல் உற்றாம் - அவ்வாறிருக்குங் காலத்து நிகழ்ந்த சரித்திரத்தை யாம் கூறத் தொடங்கினம் எ—று.

தவம் ஆகுபெயர். பீடிகையுமென்னு மும்மை எதிரதுதழீஇயிற்று. வரந்தருசெய்யபாதமென்றது பரமாசாரியரது திருவடிகளை. (௧௦)

வெண்பிறை முடித்த வேணி விண்ணவ ரன்பி லாத
பண்பின ரெனினுந் தம்மைப் பாடினர்க் கிரங்கு வாரென்
றெண்பெறு நமச்சி வாய வாழ்கவென் றெடுத்து நாதன்
வண்பதம் புகழ்ந்து ஞான வாசகம் புகல லுற்றார்.

இ—ள்: (திருவாதவூரடிகளானவர்) வெண் பிறை முடித்த வேணி விண்ணவர் - வெண்மையாகிய பிறையைப் பிஞ்ஞகமாக முடித்த சடையையுடைய சிதாகாசரூபராகிய நமதிறைவர், அன்பு இலாத பண்பினர் எனினும் தம்மைப் பாடினர்க்கு இரங்குவார் என்று - தம்மிடத்தன்பற்ற அபக்குவர்களாயினும் தம்மைப் பாடித் துதிப்பவர்களுக்குத் திருவுளமிரங்கி யநுக்கிரகஞ் செய்தருளுவாரென்று கடைப்பிடித்து, எண்பெறு நமச்சிவாய வாழ்கவென் றெடுத்து - பெரியோர்களால் நன்குமதிக்கப்படுகின்ற "நமச்சிவாய வாஅழ்க" என்று தொடங்கி, நாதன் வண்பதம் புகழ்ந்து ஞான வாசகம் புகலல் உற்றார் - எப்பொருட்கு மிறைவராகிய சிவபெருமானது வண்மையையுடைய திருவடிகளைத் துதித்து ஞானபாதப்பொருளையுடைய சிவபுராணமாகிய திருவாசகத்தைப் பாடியருளுவாராயினர் எ—று.

விண்ணவர் என்னும் பலர்பால் செய்யுமென்னும் முற்றுக்கொள்ளாதாகலின் இரங்குமென்பது பாடமன்றென்க. உம்மை "மறப்பினு மோத்துக் கொளலாகும்" என்புழிப்போல எதிர்மறைக்கண் வந்தது. தம்மை வழிபட்டார்க்கு வேண்டிய வேண்டியாங்கீயும் பதமாகலின் வண்பதமென விசேடித்தார். (௧௧)

——

உ

சிவமயம்.

## சிவபுராணம்.

சிவனதநாதிமுறைமையான பழமை.

## (அஃதாவது சிவனது அருவநிலை கூறுதல்)

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

கலிவெண்பா.

"நமச்சிவாய வாஅழ்க நாதன் றாள்வாழ்க
விமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
* * * * * * * * * * * * * * * * * * * * * *
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து."

திருச்சிற்றம்பலம்.

——



சொற்பதங் கடந்து நின்ற சோதிவந் தருளை நல்கு
மற்புத மறியே னென்று மதிசயங் கண்டா மென்று
மெற்பொலி சடையாய் நெஞ்சங் குழைத்தனை யென்னை யென்றுஞ்
சிற்பரன் றனது பாதஞ் சென்னியின் மன்னு மென்றும்.

இ-ள்: சொல் பதம் கடந்து நின்ற சோதி வந்து அருளை நல்கும் அற்புதமறியேன் என்றும் - சொல்லும் பொருளுமாகிய இரு கூற்றுப் பிரபஞ்சங்கட்கும் அப்பாற்பட்டுச் சுத்தமாயாதீதமாய் நிற்கும் நின்மல வொளிவடிவாகிய சிவம் தானே வந்து திருவருள் சுரந்த "அற்புத மறியேனே" என்று அற்புதப்பத்தும், அதிசயங் கண்டாம் என்றும் - "தன்னடியாரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே" என்று அதிசயப்பத்தும், எல் பொலி சடையாய் நெஞ்சம் என்னைக் குழைத்தனை என்றும் - செவ்வொளியாற் பொலிகின்ற சடையை யுடையவரே மனம் "என்னைக் குழைத்தாயே" என்று குழைந்தபத்தும், சிற்பரன் தனது பாதம் சென்னியில் மன்னும் என்றும் - ஞானதீதராகிய சிவபெருமானுடைய "சேவடிக்கணஞ் சென்னி மன்னிச் சுடருமே" என்று சென்னிப் பத்தும் எ—று.

அற்புதப்பத்து முதலியவற்றைத் திருவாசகத்துட் காண்க; ஈண்டு விரிக்கின் மிகவும் பெருகுமாகலினமைக. (௧௨)

ஐயனே நின்னைக் காண வாசைப்பட் டேனு னென்று
முய்கிலேன் வாழே னென்று முனக்கடைக் கலமே யென்றுஞ்
செய்யுமா றறியே னந்தோ செத்திலே னென்றும் பொய்யர்
பொய்யனே நின்பொற் பாதம் புணருநா ளெந்நா ளென்றும்.

இ—ள்: ஐயனே நின்னைக் காண நான் ஆசைப்பட்டேன் என்றும் - சுவாமீ! தேவரீரைத் தரிசிக்க அடியேன் "ஆசைப்பட்டேன் கண்டா யம்மானே" என்று ஆசைப்பத்தும், உய்கிலேன் வாழேன் என்றும் - தமியேனுயிருய்யேனுய் "வாழ்கிலேன் கண்டாய் வருகவென் றருள்புரியாயே" என்று வாழாப்பத்தும், உனக்கு அடைக்கலமே என்றும் - "அடியேனுன்னடைக்கலமே" என்றிறுதிதோறுந் தந்த அடைக்கலப்பத்தும், செய்யும் ஆறு அறியேன் செத்திலேனந்தோ என்றும் - இங்ஙனஞ் செயற்பாலது இன்னதென்றறியாது மயங்குகின்றேன் 'செத்திலேனந்தோ" என்று செத்திலாப்பத்தும், பொய்யர் பொய்யனே நின் பொன் பாதம் புணரும் நாள் எந் நாள் என்றும் - நிரீச்சுரவாதிகட்கு நிரீச்சுராய் நிற்பவரே தேவரீரது பொன்போலுந் திருவடிகளை அடியேன் "புணர்ந்து" இருப்பதினியெந்நாளோ வென்று புணர்ச்சிப்பத்தும் எ—று.

ஈண்டுப் பொய்ச்சமயம் என்றது நிரீச்சுரவாதத்தோடு, ஏனை வைதிகப் புறச்சமயங்களை என்றனு மொன்று. (௧௩)

ஆதரித் தழைக்கி லிங்கே யதெந்துவென் றருளா யென்றும்
போதமிக் குடைய பாட லிவையிவை புகன்ற பின்னர்
மாதிரத் தெவரும் போற்ற வருந்திரு வார்த்தை யெண்ணந்
தீதறச் சிறந்த வெண்பாத் திகழேழு நான்கு மோதி.

இ—ள்: இங்கே ஆதரித் தழைக்கி லதெந்துவென் றருளாய் என்றும் போதம் மிக்கு உடைய பாடல் இவை இவை புகன்ற பின்னர் - இவ்விடத்து 'அடியே னாதரித்தழைத்தா லதெந்துவேயென் றருளாயே'' என்றருட்பத்து மாகிய ஞானபாதப்பொருளை மிகவுமுடைய அத்தியர்புத அதிமதுர சுத்தச் செந்தமிழ் வேதமாகிய இவ்விவற்றைப் பாடியருளிய பின்னர், மா திரத்து எவரும் போற்ற வரும் திருவார்த்தை - மிகத் திட்பத்துடன் அட்டதிக்கின் கணுள்ள எவருந் துதிக்கத்தகும் திருவார்த்தையும், எண்ணம் - எண்ணப் பதிகமும், தீது அறச் சிறந்த வெண்பா எழும் நான்கும் ஓதி - குற்றமறச் சிறந்த வெண்பாப் பதினொன்றுமாகிய திருவாசகங்களையும் பாடியருளி.

எழும் நான்கு மென்ப திடைச்சொற்றொடர். எழுநான் கென்பது இருபத்தெட்டெனப் பொருள்படுவதல்லது எழும் நான்குமெனப் பொருள் படாமையின், அது பாடமன்றென்க. திகழ்வெண்பா என வியையும். மாதிரம் இரட்டுறமொழிதல். எந்துவென்பது மலைநாட்டு வழக்கு; என்ன வென்னும் பொருட்டென்க. (கச)

இயல்புடன் மொழியும் பள்ளி யெழுச்சி யேசறவு நெஞ்சத்
தயர்வற வுரைக்கு மின்னே ரனைய பூங்கழல் களென்று
முயிருணி யெனுநற் செய்யுள் பிரார்த்தனை யோங்கு நீதி
வியனெடுங் கூடற் பாண்டி விருத்தமெய்த் தமிழுங் கூறி.

இ—ள்: இயல்பு உடன் மொழியும் பள்ளி எழுச்சி - விதிப்படி ஓதத் தகுந் திருப்பள்ளி யெழுச்சியும், ஏசறவு - திருவேசறவும், நெஞ்சத்து அயர்வு அற என்றும் உரைக்கும் மின்னேரனைய பூங்கழல்கள் - சிவபத்தர்க ளாயினோர் தம் மனத்தின்கணுள்ள பிறவித்துன்ப நீங்க எப்பொழுதும் பாரா யணஞ் செய்யத்தகும் ''மின்னேரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம்'' என்னுஞ் சொற்றொடரை முதலாகவுடைய ஆனந்தமாலையும், நல் செய்யுள் எனும் உயிருணி-நல்ல பத்தியரூபமாகிய உயிருண்ணிப்பத்தும், பிரார்த்தனை-பிரார்த்தனைப் பத்தும், ஓங்கு நீதி வியல் நெடும்கூடல் விருத் தம் பாண்டிமெய்த்தமிழும் கூறி-உயர்வாகியநீதியினாலே வியக்கற்பாலதாகிய நெடிய மதுரையைக் குறிக்கும் விருத்தமாகிய திருப்பாண்டிப் பதிகமுமென் னும் மெய்ப்பொருளையுடைய திராவிடவேதமாகிய திருவாசகங்களையுந் திருப்பெருந் துறையின்கண்ணே திருவாய்மலர்ந்தருளி எ—று.



இவற்றுள் எண்ணப் பதிகமும் ஆனந்தமாலையுந் தில்லையி லருளிச்செய் யப்பட்டனவென்பர் திருவாசகக் கருத்துரை யாசிரியரென்க. உயிருண்ணி என்பது பசுபோதத்தைச் சிவபோதம் விழுங்குவதென்னும் பொருட்டாக லின் அது விளக்குதற்கு நற்செய்புளென விசேடித்தார். பண்டாயநான்மறை என்னுந் திருவாசகம் ஈண்டு ஆசிரியரால் எடுத்துரைக்கப்பட்டிலது. (கரு)

வேறு.

மருவுந் தொண்ட ருடன்கூடி வைகிச் சிலநாட் செல்லமுதற்
பரமன் சொல்லும் படியேபின் பயிலும் பொய்கைத் தழல்கண்டு
கருதுந் திருவைஞ் செழுத்தோதிக் காணக் கிளருங் கனன்மீது
விரவும் பேரன் புடையார்க ளெல்லாஞ் சென்று வீழ்ந்தார்கள்.

இ—ள்: மருவும் தொண்டர் உடன் கூடி வைகிச் சிலநாள் செல்ல - மாணிக்கவாசகசுவாமிகள் அக்குருந்தின்கீழ் வசிக்கும் திருத்தொண்டர்க ளோடு கூடி வசிக்கப்பெற்றுச் சில தினஞ் செல்ல, முதல் பரமன் சொல் லும் படியே - முன்னரே பரமாசாரியர் அருளிச்செய்த பிரகாரமே, பின் பொய்கைப் பயிலும் தழல் கண்டு - பின்பு தடாகத்திற் றோன்றும் ஞானக் கினியைக் கண்டு, கருதும் திரு அஞ்செழுத்து ஓதி - உயிர்க்குறு துணையா கக் கருதப்படும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச்-செபித்துக்கொண்டு, காணக் கிளரும் கனல் மீதே - காணும்படி சுவாலிக்கும் அவ்வக்கினியிலே, விரவும் பேர் அன்பு உடையார்கள் எல்லாம் சென்று வீழ்ந்தார்கள் - அக்கடவுளிடத்துச் சென்றுகலக்கும் பேரன்பையுடைய திருத்தொண்டர்க ளெல்லாருஞ் சென்று குதித்தார்கள் எ—று.

இப்பொய்கையிலே மிகச் சுவாலிக்கும் அக்கினியின்மீது முன்னைச் சிவவாக்கை விசுவசித்து அதனால் ஒரு சிறிதுமச்சமின்றிச் சிவத் தியானத் தோடு எல்லாரும் போய் வீழ்ந்தார்க ளென்பார் முன்னம் பரமன் சொல்லும் படியே பின் பயிலும் பொய்கைத் தழல்கண்டு, கருதுந் திருவஞ் செழுத் தோதிக் காணக் கிளருங் கனன்மீது, விரவும் பேரன்புடையார்கள் எல்லாஞ் சென்று வீழ்ந்தார்கள் என்றார். இத்தீர்த்தம் அக்கினி தீர்த்தமெனவும், சத்தி தீர்த்தமெனவும் பெயர்பெறும். இது சிவாலயத்திற்குத் தென் மேற்கிலுள்ளது; சிவபெருமான் தமது நெற்றிக்கண் ணக்கினியினா லுண் டாக்கியது. இவ்வக்கினி சத்தபாதலங்களை ஊடுருவி நிற்கும். இன்னும் இந்த ஸ்தலத்திலே சிவதீர்த்தம் முதலிய எட்டுத் தீர்த்தங்களுள்ளன. இந் நவதீர்த்தங்களும் சிவ முதற் பிரமா ஈறாகிய நவந்தரு பேத மயமாமென்க. ஈண்டுச் சுவாலித்த அக்கினி ஞானாக்கினி என்பது பரவரு ஞான வனல் சேர்வித்து என முன் வருவதனானு மறிக. (கசா)

வீழ்ந்த போதிற் புலியூரர் விடைமே லேறிக் கவுரியுடன்
சூழ்ந்தங்கிமையோர்மலர்சிந்தித் தொழவிண்ணிடையேதோன்றுதலு
மாழ்ந்த தடத்துட் கனன்மூழ்கு மன்ப ரடங்கத் துயர் நீங்கி
வாழ்ந்து வணங்கிக் கணநாத வடிவாய்த் திருமுன் வந்தார்கள்.

இ—ள்: வீழ்ந்த போதில் - அக்கினிப் பிரவேசஞ் செய்த சமயத்தில், புலியூரர் கவுரி உடன் விடை மீது ஏறி - சபாநாயகர் சிவகாமியம்மையோடு இடபாரூடராகி, அங்கு இமையோர் சூழ்ந்து மலர் சிந்தித் தொழ - அங்கே முப்பத்து முக்கோடி தேவர்களும் தம்மைச் சூழ்ந்து புஷ்பாஞ்சலி செய்து வணங்க, விண்ணிடையே தோன்றுதலும் - ஆகாயத்திலே பிரசன்னமாதலும், ஆழ்ந்த தடத்துள் கனல் மூழ்கும் அன்பர் அடங்கத் துயர் நீங்கி வாழ்ந்து வணங்கி - ஆழமாகிய அத்தடாகத்து அக்கினியிற் பிரவேசித்த திருத்தொண்டர்களெல்லாம் பிரிவாற்றாமையான் வந்த துன்பத்தை விட்டு நீங்கிப் பேரின்ப வாழ்வை யடைந்து நமஸ்கரித்து, கணநாத வடிவாய்த் திருமுன் வந்தார்கள் - பழைய சிவகணநாதர்களாகிச் சந்நிதியிலே வந்து சேர்ந்தனர் எ—று. (கஎ)

துரியத் தலையிற் பயில்வாருந் தொழுதங் கெழுவார் முகநாடி
யொருசற் றகலா தமர்நீரிங் கொழியத் தனிநா மெய்தியதுங்
கரையிற் றிரைபோய் விழவீசுங் கழுநீர் வாசங் கமழ்வாவி
யெரியிற் புகுவீ ரென்றதுவும் யாதோ வெனினிங் கிதுவாகும்.

இ—ள்: துரியத் தலையில் பயில்வாரும் அங்குத் தொழுது எழுவார் தம்மை நோக்கி - நின்மல துரியமுடிவில் விளங்குஞ் சிவபெருமானும் அங்கே தம்மை வணங்கி யெழுகின்ற திருத்தொண்டர்களைப் பார்த்து, ஒரு சற்று அகலாது அமர் நீர் இங்கு ஒழியத் தனி நாம் எய்தியதும் - ஒரு சிறிதுமெம்மை விட்டகலாத நீரிங் ககன்றிருப்பத் தனித்து நாம் கைலாசத்திற்குச் சென்றமையும், கரையில் திரைபோய் விழ வீசுங் கழுநீர் வாசம் கமழ் வாவி எரியில் புகுவீர் என்றதுவும் - கரையின்கண்ணே திரை போய் விழும்படி வீசுகின்ற கழுநீரினது நறுமணங் கமழும் இத்தடாகத்திலே தோன்றும் அக்கினியிற் பிரவேசியுங்களென்று உமக்கு நாங் கூறியதும், யாதோ எனின் - யாது காரணம்பற்றியெனின், இங்கு இது ஆகும் - அது கீழ்க்கூறும் இதுவாகும் எ—று.

வீசும்வாவி கமழ்வாவியெனத் தனித்தனி சென்றியையும். இதுவாகும் என்பதை முன்வரும் விடைக ளிரண்டோடும் தனித்தனி கூட்டுக. துரியம் நான்காமவஸ்தை. அதன் முடிவெனவே ஐந்தாமவஸ்தையாகிய துரியாதீதமென்றதாயிற்று. துரியமாவது பிராணவாயுவும் புருடனுமாகிய இரண்டு கருவிகளுடன் ஆன்மா நாபித்தானத்து நிற்கும் அவசரம். இது



கீழாலவத்தைக் கிரமமென்க. இனி மேலாலவத்தைக் கிரமத்திலே நின்மல துரியமாவது ஆன்மா கேவலம் நீங்கித் திருவருளினாலே தன்னையும் அருளையுங் கண்டு அவ்வசத்ததாய் நிற்பதாம். நின்மல துரியாதீதமாவது ஆன்மா சிவத்தைத் தரிசித்துச் சிவானந்தத்து அழுந்தலாம். ஈண்டுத் துரியத்தலை என்றது இம்மேலாவத்தையில் நின்மல துரியாதீதத்தை யென்க. (கஅ)

வேறு.

உத்தம னென்னுந் திருவாத வூரனை மன்னும் புலியூரிற்
புத்தரை வெல்லும் படிநாமிப் புவிமிசை வைத்தோம் யாமேகிற்
சித்த மயர்ந்தே துயர்கூருஞ் செய்திய னாமென் பதுதேரா
வித்தல மீதே சின்னாளிங் கெம்முடன் வாரா திருமென்றேம்.

இ—ள்: உத்தமன் என்னும் திருவாதவூரனை மன்னும் புலியூரில் புத்தரை வெல்லும்படி நாம் இப் புவி மிசை வைத்தோம் - உத்தம புருஷனாகிய திருவாதவூரனை நிலைபெற்ற சிதம்பரத்தின்கண்ணே புத்தரை வாதில் வெல்லும்படி உம்முடன் வாராது தவிர்த்து நாம் இப் பூமியின்கண் இருத்தினேம், சித்தம் அயர்ந்து துயர் கூரும் செய்தியன் ஆம் என்பது தேரா - அங்ஙனம் யாமெல்லாம் பிரியின் அவன் மனநொந்து துன்பமிகுந் தன்மையை யுடையனாமென்னு முண்மையை யறிந்து, எம்முடன் வாராது, இத் தல மீதே சில் நாள் இங்கு இரும் என்றேம் - எம்முடன் கைலைக்கு வாராது அவனோடு இத் திருப்பெருந்துறையின்கண்ணே சில தினம் இங்கு இருங்களென்று நாம் உங்கட்கு முன் பணித்தேம் எ—று.

இச்செய்யுள் ஒருசற் றகலா தமர் நீரிங்கொழியத் தனிநா மெய்தியது யாதோ என்னும் முன் வினாவுக்கு விடைகூறியவாறென்க. (கக)

மலமகல் பவரும் புவிமீதே மானுட வடிவந் தனையெய்திச்
சிலபக லெனினும் பயில்காலைச் சேர்தரு மலவா தனையென்றே
பலமலர் கமழுந் தடமீதிற் பரவரு ஞான வனல்சேர்வித்
திலதென நீடுஞ் சடம்வேவித் திவ்வுட லீந்தோ மிந்நாளில்.

இ—ள்: மலம் அகல்பவரும் மானுட வடிவந்தனை எய்திச் சில பகல் எனினும் புவி மீது பயில் காலை - ஆணவம் மாயை காமிய மென்னு மும்மலங்களும் நீங்கப்பெற்ற சிவஞானிகளும் எடுத்த மனித சரீரத்தோடு சில தினமேனும் பூமியிற் சீவிக்கும்போது, மலவாதனை சேர்தரும் என்று - அம் மலவாசனை மீள வந்து தாக்குமென்று கருதி, பல மலர் கமழும் தட மீது பரவு அரு ஞான அனல் சேர்வித்து - பலவித மலர்கள் நறுமணங் கமழும் இத் தடாகத்திலே சொல்லுதற்கரிய ஞானாக்கினியை வருவித்து, நீடும் சடம் இலது என வேவித்து இந் நாளில் இவ் உடல் ஈந்தோம் -

மாயாகாரியமாகிய தூல சரீரத்தை இல்லை யென்னும்படி தகித்து இப்பொழுது இந்தத் திவ்விய சரீரத்தை உமக்குத் தந்தேம் எ—று.

வாதனை அனுபவத்தா லுண்டாகிப் பின் ஞாபகத்திற் கேதுவான வுணர்வு. இச் செய்யுள் வாவியெரியிற் புகுவீ ரென்றது யாதோ வென்னும் பின் வினவுக்கு விடைகூறியவாறென்க. (உ௦)

என்று விளம்பிக் கணநாத ரெங்கணு மல்கப் புலியூரின்
மன்று விளங்கப் பயில்வாரும் வானின் மறைந்தா ரவ்வெல்லைத்
துன்றிய ஞானச் சிவநாமச் சொற்றமிழ் வல்லார் வேறுகச்
சென்றொரு கொன்றைச் செழுநீழற் றிகழ விருந்தார் சிவயோகம்.

இ—ள்: என்று விளம்பிப் புலியூரின் மன்று விளங்கப் பயில்வாரும் கணநாதர் எங்கணும் மல்க வானின் மறைந்தார் - என்று இங்ஙனம் அருளிச்செய்து சிதம்பரத்திலே கனகசபையின்கண் வெளிப்படத் திருநடனஞ் செய்தருளுஞ் சபாநாயகரும் அக்கணநாதர்கள் எவ்விடத்தும் பரவி வர ஆகாயத்தின்கண் மறைந்தருளினர், அவ் வெல்லைத் துன்றிய ஞானச் சிவநாமச் சொற்றமிழ் வல்லார் வேறுகச் சென்று - அப்பொழுது பூரண ஞானத்தைத் தரும் சிவநாமங்களினாலே திருவாசகமாகிய தமிழ் வேதத்தைப் பாடியருள வல்லவராகிய திருவாதவூரடிகள் தனியே சென்று, ஒரு கொன்றைச் செழு நீழல் திகழச் சிவயோகம் இருந்தார் - ஒரு கொன்றை மரத்தினது செழுமையாகிய நிழலிலே விளக்கமுறச் சிவயோகஞ் செய்துகொண்டிருந்தார் எ—று. (உ௧)

அன்பரழற்கே புகுமாறு மையர் விடைக்கே வருமாறு
முன்பு தமக்கா முருவெய்து முன்னவ னற்று டொழுமாறும்
பொன்பொது விற்கே யன்பாளர் புகுவது மெல்லா மொருகாலத்
தின்புறுமெய்ப்போதகயோகத் தியல்பொடுகண்டா ரென்செய்தார்.

இ—ள்: அன்பாளர் - திருவாதவூரடிகள், அன்பர் அழற்கே புகும் ஆறும் - திருத்தொண்டர்கள் ஞானக்கினியிற் பிரவேசித்தமையும், ஐயர் விடைக்கே வரும் ஆறும் - அதுபொழுது சிவபெருமான் இடபாரூடரா யெழுந்தருளிக் காட்சி கொடுத்தமையும், முன்பு தமக்கு ஆம் உரு எய்தும் முன்னவன் நல் தாள் தொழும் ஆறும் - இனித் தம்மால் விரும்பப்படும் ஞானதேசிகத் திருமேனியை ஆங்காங்குக் கொள்ளும் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாகிய சிவபெருமானுடைய நல்ல திருவடிகளை ஸ்தலங்கடோறுஞ் சென்று தாம் தரிசித்து வணங்குந் தன்மையும், பொன் பொதுவிற்கே புகுவதும், கனகசபையிலே தாம் சபாநாயகரோடு அத்துவிதமா யிசைவதும், எல்லாம் - புத்தரை வாதில் வெல்லுதல் முதலியவுமாகிய இறந்தகால எதிர்கால வர்த்தமானங்களை



யெல்லாம், ஒருகாலத்து - நிகழ்காலமொன்றிலே, இன்பு உறு மெய்ப் போதக யோகத்து இயல்பு ஒடு கண்டார் - இன்ப மிகும் மெய்ஞ்ஞானத்தைத் தரும் சிவயோகப் பிரத்தியக்ஷத்தின்கண் உள்ளபடி கண்டறிந்தார், என் செய்தார் - அவர் பின் யாது செய்தாரெனின் எ—று.

உருபு மயக்கம். எனின் என்ப தெஞ்சிநின்றது. இனி முன்பு தமக்கா முருவெய்தி முன்னவ னற்றொழுமாறும் என்பது பாடமாயின் முன்னரே தமக்குரிய கணநாத வடிவத்தைப் பொருந்திச் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிய தன்மையுமெனக் கணநாதர் மேலேற்றிக் கூறுக. ஏனை இருகால வர்த்தமானங்களை யெல்லாம் நிகழ்கால மொன்றிலே சிவயோகத்தான் உள்ளபடி யறிந்த பெருந்தகைமையினர் பின் யாது செய்தாரோவெனக் கேட்போரது மனம் அக்கேள்விகட் பெரிது மவாவி முற்றுற்று நிற்குமாகலின் அது விளக்குதற்கு அச்சரித்திரத் தொடர் இடையீடு பட்டுச் சிதையாமல் இச்செய்யுளி னிறுதிக்கண் என் செய்தாரென வினவி, வருஞ் செய்யுள்களான் ஆசிரியர் விடைகூறுவா ராயினரென்க. திரிகால சம்பவங்களும் ஒருகாலத்து யோகப் பிரத்தியட்சத்தானுணரலாமென்பது 'பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்க ளெல்லா, மிருந்துணர்கின்றஞான மியோகநற் காண்டலாமே' என்பதனானறிக. (உஉ)

செங்கை குவித்தார் விழிநீரைச் சிந்தின ரெந்தாய் வந்தாய்பின்
னெங்க ணொளித்தா யெனமாலுற் றெய்தினர் பொய்கைக் கரைமீதே
கங்கை முடித்தார் விடையேறிக் கண்ணுற நண்ணுந் தலமோவென்
றங்க ணிலத்தே போய்விழ்வுற் றழுதழு தந்தோவென நைந்தார்.

இ—ள்: செங்கை குவித்தார் - சிவந்த கைகளைக் கூப்பிக் கும்பிட்டார், விழி நீரைச் சிந்தினர் - கண்ணீர் சொரிந்தார், எந்தாய் வந்தாய் பின் எங்கண் ஒளித்தாய் என மால் உற்றுப் பொய்கைக் கரை மீது எய்தினர் - எம் பரமபிதாவே ஈண்டு வந்தருளினீர் பின்ன ரெங்கே யொளித்தீ ரென்று மனமயங்கி அத் தடாகக் கரையை யடைந்தார், கங்கை முடித்தார் விடை ஏறிக் கண் உற நண்ணும் தலமோ என்று - கங்கையைத் தரித்த சிவபெருமான் இடபவாகனத்தின்மே லிவர்ந்து கண்களுக்குப் புலப்பட எழுந்தருளி வரப்பெறுந் தலமேயோ வென்று விதந்து, அங்கண் நிலத்தே போய் வீழ்வுற்று அழுது அழுது அந்தோ என நைந்தார் - அக் கீழ்நிலத்தின் கட் போய் விழுந்து தேம்பித் தேம்பி அழுதழுது அந்தோ அந்தோ வென்றிரங்கித் திருவாதவூரடிகள் வருந்தினர் எ—று.

கீழ்நிலம் சிவபெருமான் வெளிப்பட்ட ஆகாயத்துக்கு நேரேகீழுள்ளநிலம்.

வேறு.

அன்னை நிகர்ப்பீ ரென்னை யொழித்தே யன்பாளர்
பொன்னடி பெற்றே பொய்கை யழற்கே புகலாமோ
மின்னுரு வத்தீர் நும்மருள் கூடா வினையேனுக்
கின்ன லளித்தீ ரெங்ங னொளித்தீ ரெனநொந்தார்.

இ—ள்: அன்னை நிகர்ப்பீர் - எனக்கு என் மாதாவை ஒத்தவரே, அன்பாளர் என்னை ஒழித்துப் பொய்கை அழல் பெற்றுப் பொன் அடிக்கே புகல் ஆமோ - அன்பை யாளுந் திருத்தொண்டர்கள் தமியேனை இங்கே நீக்கிவிட்டுத் தடாகத்தக்கினியின் மூழ்கித் தேவரீருடைய பொன்போலுந் திருவடிகளை அடையலாமா, மின் உருவத்தீர் - மின்னலைப்போலச் செவ்வொளி விளங்குந் திருமேனியை யுடையவரே, நும் அருள் கூடா வினையேனுக்கு இன்னல் அளித்தீர் எங்ஙன் ஒளித்தீர் என நொந்தார் - தேவரீருடைய திருவருளோடு கூடவிடாது தடுத்த தீவினையையுடைய தமியேனுக்குத் துன்பத்தைத் தந்து நீரெங்கே மறைந்தருளினீரென்று திருவாதவூரடிகள் பிரலாபித்து வருந்தினர் எ—று.

இது கலித்துறை; காப்பியக் கலித்துறை எனவும் வழங்குப. (௨௪)

வேறு.

அந்நிலை தெளிந்து பொய்கை யகன்றுயர் குருந்த நீழற்
பன்னரு மறைகள் காணுப் பதமலர் பற்றி வீழ்ந்து
மன்னிய நிலத்தி னுள்ளார் வல்வினைப் பிறவிமாள
வின்னருட் சதக மெய்தா னரும்பியென் றெடுத்துச் சொன்னர்.

இ—ள்: அந்நிலை தெளிந்து பொய்கை அகன்று - திருவாதவூரடிகள் அத் துக்க நிலையினின்று மொருபிரகாரம் மனந் தெளிந்து எழுந்து அத் தடாகக் கரையை விட்டு நீங்கி, உயர் குருந்த நீழல் பன் அரும் மறைகள் காணுப் பதமலர் வீழ்ந்து பற்றி - உயர்வாகிய குருந்தமர நிழலிலே துதித்தற்கரிய வேதங்களும் முடிவு காண்டற்கரிய பாததாமரை மலர்களைக் கீழே வீழ்ந்து இறுகப் பற்றிக்கொண்டு, நிலத்திலுள்ளார் வல்வினை மன்னிய பிறவி மாள - இப்பூமியின்கணுள்ளாரது வலிய வினையால் வரும் நிலைபெற்ற பிறவிகெட் டொழிய, இன் அருள் சதகம் மெய்தானரும்பி என்று எடுத்துச் சொன்னர் - இனிய திருவருளை யுடைய திருச்சதகத்தை "மெய்தானரும்பி" என்று தொடங்கிப் பாடியருளினர் எ—று.

சதம் - நூறு. சதகம்-நூறு செய்யுட்களையுடைய பிரபந்தம். குருந்து ஆன்மநாயகரது திருவருண்மயமாகலின் உயர் குருந்தென்றும், பிரவா



கநாதியாய்த் தொடரும் வினையாகலின் வல்வினை என்றுங் கூறினர். இது அறுசீரடி யாசிரியவிருத்தம். (௨௫)

இத்திறங் கூறி யாங்கே புலம்பிநின் றிரங்கு மெல்லை
நித்தனன் றுரைத்த நீர்மை நெஞ்சினு னினைந்து பின்ன
ரத்தலத் திறைஞ்சி யெங்கோ னருட்பெரு விடைபெற் றேகி
யுத்தர கோச மங்கை யூர்தனி னொல்லை புக்கார்.

இ—ள்: இத்திறம் கூறி ஆங்கே புலம்பி நின்று இரங்கும் எல்லை - திருவாதவூரடிகள் இந்தப்பிரகாரம் பாடியருளி அங்ஙனம் புலம்பி நின்றிரங்குகின்றுழி, நித்தன் அன்று உரைத்த நீர்மை நெஞ்சினுள் நினைந்து - நித்தியராகிய சிவபெருமான் அன்றருளிச் செய்ததனைத் தம்மனத்தின்கண் நினைந்து, பின்னர் - அதன் பின்னர், அத்தலத்து இறைஞ்சி எம் கோன் அருள் பெரு விடை பெற்று ஏகி - அத்திருப்பெருந்துறையின்கண் வணங்கி நம் பசுபதியினது அருளையுடைய பிரியாவிடைபெற்று நடந்து, உத்தர கோசமங்கை ஊர்தனின் ஒல்லை புக்கார் - திருவுத்தரகோசமங்கை யென்னும் ஸ்தலத்திலே விரைவிற் சென்றூர் எ—று.

அன்று முன்னொரு நாள். அன்றுரைத்த நீர்மை உத்தரகோசமங்கை யென்னுநம்மூரிற்சென்று, சித்தியங்கெவையு மெய்தி என மேல் வந்தமை காண்க. (௨௬)

சடையவர் கோயி லெய்தித் தம்மைவந் தடிமை கொண்ட
வடிவது காணு ராகி மயங்கிவெய் துயிர்த்து வீழ்ந்து
விடுதிகொ லென்னை யென்று நீத்தல் விண்ணப்ப மென்னுந்
தொடை கெழு பாட லோதக் காட்டினர் தொல்லை மேனி.

இ—ள்: சடையவர் கோயில் எய்தித் தம்மை வந்தடிமைக் கொண்ட வடிவு காணர் ஆகி - திருவாதவூரடிகள் திருவுத்தரகோசமங்கையிலே சடையையுடைய சிவபெருமானது ஆலயத்தை யடைந்து மார்ச்சாரசம்பந்தமாகத் தம்மை வலியவந் தடிமைக்கொண்ட பரமாசாரிய வடிவத்தைத் தரிசிக்கப் பெருதவராகி, மயங்கி வெய்துயிர்த்து வீழ்ந்து - மயக்கமடைந்து நெட்டுயிர்த்துக் கீழே விழுந்து, என்னை விடுதிகொல் என்று நீத்தல் விண்ணப்பம் என்னும் தொடை கெழு பாடல் ஓத - இரண்டாமடிகடோறும் "என்னை விடுதி கண்டாய்" என்று நீத்தல்விண்ணப்ப மென்னுந் திருவாசகத்தைப் பாடித் துதிக்க, தொல்லை மேனி காட்டினர் - சிவபெருமான் பழைய தேசிகத் திருமேனியை அவருக்குத் தரிசிப்பித்தருளினர் எ-று.

தொடை செய்யுளுறுப் பெட்டினு ளொன்று. அது "தொடையே யடியிரண் டியையத் தோன்றும்" என்பதனுனறிக. (௨௭)

கன்னலை யமுதை யங்கே கண்டுகொண் டிறைஞ்சிச் சின்னா
ளங்ககரிருந்து தங்கோ னருண்மொழிப் படியே சென்று
தந்நிக ரில்லாத் தெய்வத் தலம்பல வணங்கி நீங்கிச்
சென்னிநன் னாட்டி லெய்தித் திருவிடை மருதூர் சேர்ந்தார்.

இ—ள்: கன்னலை அமுதை அங்கே கண்டு இறைஞ்சிக் கொண்டு சில் நாள் அங்ககர் இருந்து - திருவாதவூரடிகள் பரமாசாரியராகிய கரும்பை அமுதை அங்கே தரிசித்து வணங்கி வழிபட்டுக்கொண்டு அந்த ஸ்தலத்திலே சில தினமிருந்து, தம் கோன் அருள் மொழிப்படியே சென்று - அதன் பின்பு தம் மான்மநாயகராகிய சிவபெருமா னருளிச்செய்த திருவாக்கின் படியே அப்பாற் சென்று, தம் நிகர் இல்லாத் தெய்வத் தலம் பல வணங்கி நீங்கி - தமக்கொப்புயர்வில்லாத தெய்வத்தன்மை பொருந்திய ஸ்தலங்கள் பலவற்றையடைந்து தரிசித்து வணங்கி அவைகளையுங்கடந்து, நல் சென்னி நாட்டில் எய்தித் திரு விடைமருதூர் சேர்ந்தார் - நல்ல சோழநாட்டிற் போய்த் திருவிடைமருதூரென்னும் ஸ்தலத்தை அடைந்தார் எ—று.

அங்கப் பிரத்தியங்க சாங்கோபாங்கமாகிய அனைத்தும் அருண்மயமாகலின் முழுவது மினிதாங் கன்னல் என்றும், கழிபெருஞ் சுவையோடுறுதி பயத்தலின் அமுது என்றுங் கூறினர். அங்கம்: சிரசு, முகம், இருதயம்; (௫.) பிரத்தியங்கம்: வக்ஷஸ், கண்டம், தனம், தோள், நாபி, உதரம் குய்யம், நேத்திரம், நாசி, சுரோத்திரம், மஸ்தகம், பாதம், அங்குலி, ஊரு, முழந்தாள், கணைக்கால்; (௧௬.) சாங்கம்: திரிசூலம், பரசு, கட்கம், வச்சிரப், அபயம், நாகம், பாசம், அங்குசம், கண்டை, அக்கினி; (௧௦.) உபாங்கம்: வஸ்திரம், உபவீதம், மாலை, கந்தம், ஆபரணம், ஆசனம், ஆவரணம்; (௭.) சோழநாட்டை, "கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு, குடதிசைக்குக் கோட்டக் கரையாம்-வட திசையி, லேணாட்டுப்பெண்ணை யிருபத்து நாற்காதஞ், சோணாட்டுக் கெல்லையெனச் சொல்" என்பதனானுமறிக. (உஅ)

அப்பதி தொழுத பின்ன ரன்புட னாரூ ரெய்திச்
செப்பரு மலர்த்தாள் போற்றித் திகழ்திருப் புலம்ப லோதி
யெய்ப்பற விறைஞ்சி யண்ண லியம்பிய பதிக ளெல்லாந்
தப்பற வணங்கி நீங்கித் தடமதிற் புகலி சார்ந்தார்.

இ—ள்: அப்பதி தொழுத பின்னர் - திருவாதவூரடிகள் அந்த ஸ்தலத்தைத் தரிசித்து வணங்கிய பின்னர், அன்பு உடன் ஆரூர் எய்திச் செப்பு அரு மலர்த்தாள் போற்றித் திகழ் திருப்புலம்பல் ஓதி எய்ப்பு அற இறைஞ்சி - அன்போடு திருவாரூரை யடைந்து அங்கே வீற்றிருந்தருளுந் தியாகராச சுவாமியினது துதித்தற்கரிய பொற்றாமரை மலர் போலுந் திருவடிகளைத் தரிசித்து வணங்கித் துதித்து, "பூங்கமலத் தயனொடு மா லறியாத நெறி



யானே" என்னுஞ் சொற்றொடரை முதலாகவுடைய திருப்புலம்பலென்னுந் திருவாசகத்தைப் பாடியருளிச் சனன மரண இளைப்பு நீங்கும்வண்ண மறித்தும் வணங்கிச் சென்று, அண்ணல் இயம்பிய பதிகள் எல்லாம் தப்பு அற வணங்கி நீங்கி - முன் பரமாசாரியர் கூறியருளிய ஸ்தலங்களை யெல்லாந் தவறறத் தரிசித்து வணங்கி நீங்கி அப்பாற் சென்று, தட மதில் புகலி சார்ந்தார் - பெரிய மதில் சூழ்ந்த சீர்காழியை யடைந்தார் எ—று.

திகழ் திருப்புலம்பல் சிவானந்த முதிர்ச்சி விளங்காநின்ற திருப்புலம்பல். புகலி தேவர்களுக்குப் புகலிடமாயுள்ளது. (உகூ)

குன்றென வயங்கு கோயிற் கோபுர வாயி னீங்கிச்
சென்றுயர் கயிலையான செய்திகண் டிறைஞ்சு மெல்லை
மன்றிடை நடித்தபாத மலரடி பிடித்துக் கொண்டு
பின்றிகழ் சடையோன் முன்னர்ப் பிடித்தபத் தருளிச் செய்தார்.

இ—ள்: குன்று என வயங்கு கோயில் கோபுர வாயில் நீங்கிச் சென்று - திருவாதவூரடிகள் அங்கே மலையைப் போல விளங்காநிற்கும் சிவாலயத்தினது திருக்கோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்று உயர் கயிலை ஆன செய்தி கண்டு இறைஞ்சும் எல்லை - அஃதுயர்ச்சி பொருந்திய கைலாச கிரியாகிய பாவகம் பொருந்தக் கண்டு வீழ்ந்து வணங்குகின்றுழி, மன்று இடை நடித்த பாத மலர் அடி பிடித்துக் கொண்டு - கனக சபையிலே திருநடனஞ் செய்தருளுகின்ற செந்தாமரை மலர்போலுந் திருவடிகளை இறுகப் பற்றிக்கொண்டு, பின் திகழ் சடையோன் முன்னர்ப் பிடித்த பத்து அருளிச் செய்தார் - பின்றூங்கி விளங்கா நிற்குஞ் சடையை யுடைய தோணியப்பரது சந்நிதியிலே "உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த யோகமே" என்று தொடங்கி "உன்னைச் சிக்கெனப் பிடித்தே னெங்கெழுந் தருளுவ தினியே" என்றிறுதி தோறு முடித்துப் பிடித்தபத் தென்னும் திருவாசகத்தைப் பாடியருளினார் எ—று.

பின்றிகழ் சடை என்பதற்குப் பின்னுதல் விளங்குஞ் சடையென்றுரைப்பினு மமையும். (௩௦)

தொல்வினைப் பகைமை யுள்ளார் யாவருந் தொழுதா லிங்கு
வெல்வரப் பகையை யென்று விருப்புடன் சிலநாள் வைகி
மல்குமத் தலத்தை நீங்கி வல்கழுக் குன்றி லன்பாற்
செல்வதற் கிசைந்து தில்லைத் திசைகுறித் திறைஞ்சி யேகி.

இ—ள்: தொல் வினைப் பகைமை உள்ளார் யாவரும் இங்குத் தொழுதால் - அநாதியாக வரும் வினைப் பகையினை யுடையார் யாவரு மீண்டு வந்து சுவாமியைத் தரிசித்து வணங்கினால், அப்பகையை வெல்வர் என்று-

அப் பகைமையைத் தப்பாது வெல்வரென்று திருவாதவூரடிகள் சிந்தித்து, விருப்பு உடன் சில நாள் வைகி - விருப்பத்தோடு சில தினமங்கிருந்து, மல்கும் அத்தலத்தை நீங்கி அன்பால் வண் கழுக்குன்றில் செல்வதற்கு இசைந்து - திருவருள் சுரக்கும் அச் சீர்காழியை விட்டு நீங்கி அப்பாலுள்ள வளவிய திருக்கழுக்குன்றமென்னுஞ் சிவக்ஷேத்திரத்தில் அன்போடு செல்வதற் கபேக்ஷித்து, தில்லைத் திசை குறித்து இறைஞ்சி ஏகி - அதி சமீபத்திலுள்ள சிதம்பரத்தைத் திக்கு நோக்கி வணங்கிச் சென்று எ - று.

வேறு.

உத்தர நெடுந்திசையி லேகியொளி குன்று
முத்தநதி சூழுமுது குன்றினை வணங்கி
யத்தல மகன்றுய ரருட்டுறையி தென்றே
மெய்த்தவர்க ளெண்ணியுறை வெண்ணெயை யடைந்தார்.

இ—ள்: நெடும் உத்தர திசையில் ஏகி – திருவாதவூரடிகள் நெடிய உத்தர திக்கின்கட் சென்று, ஒளி குன்று முத்தநதி சூழும் முது குன்றினை வணங்கி - வெள்ளொளி மிக்க மணிமுத்தாநதி சூழ்ந்த திருமுதுகுன்றினைத் தரிசித்து வணங்கி, அத்தலம் அகன்று - அந்த ஸ்தலத்தை விட்டு நீங்கி, மெய்த்தவர்கள் இது உயர் அருட்டுறை என்று எண்ணி உறை வெண்ணெயை அடைந்தார் - சாமுசித்தராகிய மெய்கண்டதேவர் முதலிய மகான்கள் இது சிவபெருமானது திருவருட்டுறையென் றுட்கொண்டு வீற்றிருக்கப் பெற்ற திருவெண்ணெய்நல்லூரை அடைந்தருளினர் எ—று.

திருமுதுகுன்று - விருத்தாசலம். திருவருட்டுறை என்பது திருவெண்ணெய் நல்லூரிலுள்ள சிவாலயத்துக் கொருபெயர். இது கலிவிருத்தம். (௬௨)

அந்நகர் வணங்கியபி னன்புட னகன்றே
நன்னர்வழி சென்றுநடு நாடுமுயர் காடுங்
கொன்னிப மடங்கலுறை குன்றமு மிகந்தே
மன்னுமரு ணைபுரி மருங்கணைய வந்தார்.

இ—ள்: அன்பு உடன் அந்நகர் வணங்கிய பின் - திருவாதவூரடிகள் அன்போடு அத்திருவெண்ணெய்நல்லூரைத் தரிசித்து வணங்கியபின்னர், அகன்று நன்னர் வழி சென்று நடு நாடும் உயர் காடும் கொன் இபம் மடங்கல் உறை குன்றமும் இகந்து - அந்த ஸ்தலத்தை விட்டகன்று நல்ல நெறியின்கட் போம் நடு நாட்டையும் உயர்ந்த காட்டையும் அச்சத்தைத் தரும் யானைகளும் சிங்கங்களும் வசிக்கும் மலைகளையுங் கடந்து, மன்னும் அருணைபுரி மருங்கு அணைய வந்தார் - விராட்புருடனுக்கு மணிபூரகஸ்தானமாகப் பொருந்திய திருவண்ணாமலைக்கு அதிசமீபமாகச் சென்றருளினர் எ—று.

நடுநாடு சோழநாட்டுக்கும் தொண்டைநாட்டுக்கும் நடுவே யுள்ள நாடு.



மாடமொடு கோபுரமு மன்னுமணி முத்தஞ்
சூடுமதி லும்பெரிய தோரண முகப்பு
நீடுகமு காடவி நெருங்கியுள தண்கா
வூடுயர்தல் கண்டுவகை கொண்டுதொழு துய்ந்தார்.

இ—ள்: மன்னும் மணி முத்தம் சூடும் மாடம் ஒடு கோபுரமும் - அங்கே நிலைபெற்ற அழகிய முத்துமாலைகளைத் தம்மேற் கொண்ட மண்டபங்களுங் கோபுரங்களும், மதிலும் - மதில்களும், பெரிய தோரண முகப்பும் - மகாதோரணங்களையுடைய பெரிய உபரிகைகளு மாகிய இவைகளெல்லாம், நீடு கமுக அடவி நெருங்கி உள தண் கா ஊடு உயர்தல் கண்டு - நெடிய கமுகங்காடு தம்முணெருங்கிய குளிர்ந்த சோலையின் மத்தியிலே உயர்ந்து தோன்றுதலைக் கண்டு, உவகை கொண்டு தொழுது உய்ந்தார் - திருவாதவூரடிகள் மனமகிழ்ச்சிகொண்டு வணங்கிக் கும்பிட்டுய்ந்தார் எ-று.

ஒடு எண்ணொடு. முகப்புமுயர்தல் கண்டென முடிக்க. கழிகாமத்தராயினோர்க்குத் தம்மால் விரும்பப்பட்ட கன்னிகைக்குரிய அசேதனமாகிய புறப்பொருள்களும் அவளாகவே கண்டு நன்குமதிக்கப்படுமாறு போலச் சிவபத்திமானாகிய திருவாதவூரடிகளுக்குத் தம்மால் விரும்பப்பட்ட சிவபெருமானுக்குரிய அசேதனமாகிய புறப்பொருள்களென்னுந் திருமண்டபம் முதலியவெல்லாம் அவராகவே கண்டு வழிபடப்பெற்றன என்பார் கண்டுவகை கொண்டு தொழு துய்ந்தார் என்றார். இக் கருத்து "ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன்பில்லா ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன்பில்லார்" என்பதனானுமறிக. மணிமுத்தம் என்பதனை உம்மைத்தொகை என்றலுமொன்று. (௬௪)

அன்றிருவர் தேடவழ லானதொரு வெற்பாய்
நின்றவடி வோமன நிறைந்தபெரு வாழ்வோ
வென்றுமலை யண்ணலை யிறைஞ்சி யருள் கொண்டே
சென்றருணை யாகிய செழும்பதி புகுந்தார்.

இ—ள்: அன்று இருவர் தேட அழல் ஆனது ஒரு வெற்பு ஆய் நின்ற வடிவோ - அக்காலத்துப் பிரமவிஷ்ணுக்களாகிய இருவரும் முடியையும் அடியையுந் தேட அகப்படா தக்கினிப் பிழம்பாகியதொரு மலையாய் நின்ற வடிவமோ அன்று, மன நிறைந்த பெரு வாழ்வு என்று மலை அண்ணலை இறைஞ்சிச் சென்று - மனத்தின்கணிறைந்த பேரின்ப வாழ்வேயாமென்று திருவாதவூரடிகள் துதித்துப் பெருமையிற் சிறந்த திருவண்ணாமலையைத் தரிசித்து வணங்கிச் சென்று, செழுமை ஆகிய அருணைப்பதி புகுந்தார் - செழுமையாகிய திருவருணைமாநகரத்திற் பிரவேசித்தார். எ - று.

வெற்பாய்நின்ற வடிவு உண்மையானேக்குமிடத்து நிறைந்த பெரு வாழ்வென்பது கருத்து. ஓகாரமிரண்டனுண் முன்னைய தெதிர்மறையினும், பின்னைய தசை நிலையினும் வந்தன. வெற்பாய் நின்ற வடிவோ அன்றி மன நிறைந்த வாழ்வோ எனக் கோடலும் ஒன்று. (௬௫)

வே று.

சோலையு மதிலும் பல்பூந் தோரண மறுகுந் தெய்வ
சாலைகள் பலவு நீங்கிச் சந்நிதி மறுகிற் சென்று
மாலையும் பாம்புந் திங்கள் மத்தமு முடியில் வைத்தோ
னாலய மிறைஞ்சிக் கண்டார் தம்மையன் றாண்ட மேனி.

இ—ள்: சோலையும் மதிலும் பல் பூந் தோரண மறுகுந் தெய்வ சாலைகள் பலவும் நீங்கிச் சந்நிதி மறுகில் சென்று - திருவாதவூரடிகள் சோலைகளும் மதில்களும் அழகிய பல தோரணங்களையுடைய திருவீதிகளும் தேவாலயங்களுமாகிய இன்னோரன்ன பலவற்றையுங் கடந்துட்பிரகாரத்திற்போய், மாலையும் பாம்பும் திங்கள் மத்தமும் முடியில் வைத்தோன் ஆலயம் இறைஞ்சி - கொன்றை மாலையையும் சர்ப்பத்தையும் பிறையையும் பொன்னூமத்த மலரையுந் திருமுடியின்கணொருங்கு தரித்த அருணசலேசுவரரது ஆலயத்தைத் தரிசித்து வணங்கி, தம்மை அன்று ஆண்ட மேனி கண்டார் - தம்மை முன்னடிமைகொண்ட ஞானதேசிகத் திருமேனியைப் பின்பு தரிசிக்கப் பெற்றார். எ—று.

திங்களுமென உம்மை விரித்துரைக்க. ஆலயமென்னும் வடமொழி எதுகை நோக்கி ஆலையமென்றாயிற்று. இது அறுசீரடியாசிரியவிருத்தம். (௬௬)

மாலுடன் பிரமன் றேவர் வந்துனக் கடிமை யென்றென்
றோலிடும் பொழுதி லால முண்டிருள் கண்ட போற்றி
மேலிடும் பவநோய் தீர விண்ணவர் மண்ணோர் பச்சைப்
பாலுடன் கலந்துட் கொள்ளும் பனிமலை மருந்தே போற்றி.

இ—ள்: மால் உடன் பிரமன் தேவர் வந்து உனக்கு அடிமை என்று என்று ஓல் இடும் பொழுதில் - அரிபிரமேந்திராதி தேவர்கள் வந்து தேவரீருக்கு நாம் வழியடிமைகளாகலின் இவ்வாபத்துக் காலத்தின்கண் அடியேங் தேவரீருக்கு அடைக்கல மடைக்கலமென்று முறையிடுந் தருணத்து, ஆலம் உண்டு இருள் கண்ட போற்றி - அவர்பொருட் டிரங்கி ஆலகால விஷத்தையுண்டு கறுத்த திருக்கண்டத்தை யுடையவரே அடியேனைத் தேவரீர் பாதுகாக்க, விண்ணவர் மண்ணோர் மேலிடும் பவநோய் தீர - தேவர்களும் மனிதர்களும் தம்மை யடர்த்து மீதூரும் பவரோக நிவிர்த்தியைப் பெறும் பொருட்டு, பச்சைப் பால் உடன் கலந்து உட்கொள்ளும் பனி



மலை மருந்தே போற்றி - பசுமையாகிய திருமேனியையுடைய வாம பாகமாகிய உண்ணாமுலை யம்மையோடு சேரத் தியானிக்கப்படும் குளிர்ச்சி பொருந்திய இத் திருவண்ணாமலையிற் சாவாமருந்தாயுள்ளவரே அடியேனைத் தேவரீர் பாதுகாத்தருளுக எ—று.

அடுக்குப் பன்மைபற்றி வந்தது. ஓலம் ஓலெனக் கடைக் குறைந்து நின்றது. இனிச் சிவபெருமானை மருந்தென்ற உருவகத்திற் கேற்பச் பச்சைப் பாலுடன் கலந்துட்கொள்ளும் பனிமலை மருந்தென்பதற்குப் பச்சைப் பாலாகிய அநுபானத்தோடு கலந்து பருகப்படும் மலையின்கணுள்ள மருந்தெனவு முரைத்துக்கொள்க. பச்சைப்பால் காய்ச்சப்படாத பால் என்றும், பசிய நிறத்தையுடைய வாமபாகமாகிய அம்மை யென்றும் இருபொருட்கு மேற்பக் கொள்க. (௬௭)

நெடியவன் கேழ லாகி நீணில மகழ்ந்துங் காணு
வடிகளென் றலைமேல் வைத்த வருட்பெருங் கடலே போற்றி
படியிடம் புரக்கு முண்ணு முலையெனும் பச்சை மேனிக்
கொடியிடங் கொண்ட செம்பொற் குன்றமே போற்றி போற்றி.

இ—ள்: நெடியவன் கேழல் ஆகி நீள் நிலம் அகழ்ந்தும் காணு அடிகள் என் தலை மேல் வைத்த பெரும் அருள் கடலே போற்றி - நெடிய வடிவத்தையுடைய விஷ்ணு பன்றியாகி நீண்ட பூமியை அகழ்ந்தும் காணுதற்கரிய திருவடிகளை என் புன்றலை மீது வைத்துத் தீக்ஷித்தருளிய பெரிய கிருபாசமுத்திரமே தேவரீர் அடியேனைப் பாதுகாத்தருளுக, இடம் படி புரக்கும் உண்ணாமுலை எனும் பச்சை மேனிக் கொடி இடம் கொண்ட செம் பொன் குன்றமே போற்றி போற்றி- இடவிதாகிய பூமியை (த் தருமங்களை வளர்த்து)ப் பரிபாலனஞ் செய்யும் உண்ணாமுலையம்மையென்னும் பசிய திருமேனியை யுடைய கொடியை வாமபாகத்திற் கொண்ட மாற்றுயர்ந்த பொன் மலையா யுள்ளவரே தேவரீர் அடியேனைப் பாதுகாத்தருளுக பாதுகாத்தருளுக எ—று.

இனி உருவகஞ் செய்துகொண்டமைக் கேற்பக் கொடியிடம் கொண்ட செம் பொற் குன்றம் என்பதற்குக் கொடியானது தனக்கிடமாகக்கொண்ட செம்பொற் குன்றமெனவு முரைத்துக் கொள்க. (௬௮)

வென்றிடுங் கன்னி மேதிச் சென்னி விக்கிரமன் றன்னைக்
கொன்றதன் பாவந் தீரக் குறித்திட வருள்வாய் போற்றி
யன்றுவந் தென்னை யாளு மணியண்ணு மலையாய் போற்றி
யென்றுதம் பரிவா லேத்தி யிறைஞ்சியங் குறையு நாளில்.

இ—ள்: வென்றிடும் கன்னி - சயமகளாகிய துர்க்கை, மேதிச் சென்னி விக்கிரமன்றன்னைக் கொன்ற தன் பாவம் தீரக் குறித்து இட -

மகிடாசுரனைக் கொன்ற தன் கொலைப்பாவந் தவிரச் சங்கற்பித்து வழிபட, அருள்வாய் போற்றி - அத் துர்க்கைக்கு அநுக்கிரகஞ் செய்தவரே தேவரீர் அடியேனைப் பாதுகாத்தருளுக, அன்று வந்து என்னை ஆளும் அணி அண்ணாமலையாய் போற்றி என்று தம் பரிவால் இறைஞ்சி எத்தி - அன்று பரமாசாரியராகத் திருப்பெருந்துறையின்கண் எழுந்தருளி வந்து தமியேனை அடிமைக்கொண்டருளிய அழகிய அனலாசலநாதரே தேவரீர் அடியேனைப் பாதுகாத்தருளுக என்று திருவாதவூரடிகள் தம் மெய்யன்பினாலே வணங்கித் துதித்து, அங்கு உறையும் நாளில் - அங்கே வசிக்கும் காலத்தில் எ—று.

விக்கிரமன் - வீரன். இடுதல் ஈண்டு அருச்சித்தலின்மேற்று. அது "பத்தரிடும் பச்சிலையோ" வென மேற்கூறியவாற்றானுமறிக. [திருவண்ணாமலை தியானிக்கத் துதிக்க முத்திதருந் தலமாதலினால் இரு விருத்தங்களைத் திருவாதவூரடிகள் துதித்ததாக இயற்றியுள்ளார்; திருவண்ணாமலையை யிட்டுப் பாடும்போது இங்ஙனம் தோத்திரமாகப் பாடுதல் தொல்லாசிரியர் மரபென்க.] (௩௯)

மாதர்கொண் மாத ரெல்லா மார்கழித் திங்க டன்னி
லாதிரை முன்னீ ரைந்தே யாகிய தினங்க டம்மின்
மேதகு மனைக டோறு மழைத்திருள் விடிவ தான
போதிவர் தம்மிற் கூடிப் புனற்றட மாடல் செய்வார்.

இ—ள்: மாதர் கொள் மாதர் எல்லாம் மார்கழித் திங்கள் தன்னில் ஆதிரை முன் ஈரைந்து ஆகிய தினங்கள் தம்மில் - அழகையுடைய எழுவகைப் பருவ மகளிரும் மார்கழி மாசத்துத் திருவாதிரை நக்ஷத்திரத்துக்கு முற் பத்துத் தினங்களினெல்லாம், இருள் விடிவது ஆன போது மேதகு மனைகள் தோறும் அழைத்து இவர் தம்மில் கூடிப் புனல் தடம் ஆடல் செய்வார் - இருள் புலருகின்ற விடியற் காலத்திலே மேன்மை பொருந்திய வீடுகடோறும் போய் ஒருவரையொருவ ரழைத்துத் தம்முளொருங்கு கூடி நீரையுடைய தடாகத்திலே ஸ்நானஞ் செய்வார்கள் எ—று. (௪0)

அன்னவ ரியல்பு கண்டா ராங்கவர் புகன்ற தாக
மன்னிய திருவெம் பாவை வாசகம் பேசிப் பின்னர்க்
கன்னியர் பாடி யாடுங் கவின்கொளம் மனைகண் டன்னார்
பன்னிய பாடலாக வம்மனைப் பாடல் செய்தார்.

இ—ள்: அன்னவர் இயல்பு கண்டார் - அம்மகளிரது தன்மையைக் கண்ட திருவாதவூரடிகள், ஆங்கவர் புகன்றது ஆக மன்னிய திருவெம்பாவை வாசகம் பேசி - அவர் கூறிய கூற்றாக நிலைபெற்ற திருவெம்பாவையென்னுந் திருவாசகத்தை "ஆதியு மந்தமு மில்லா வரும் பெருஞ் சோதியை" என்றெடுத்துப் பாடி, பின்னர் - அதன் பின்னர், கன்னியர் பாடி ஆடும் கவின் கொள் அம்மனை கண்டு - மங்கைப் பருவத்து மகளிர் பாடி விளையாடுகின்ற அழகையுடைய அம்மானை விளையாட்டைக் கண்டு, அன்னார் பன்னிய பாடல் ஆக அம்மனைப் பாடல் செய்தார் - அம்மகளிர் கூறிய கூற்றாகத் திருவம்மானை யென்னுந் திருவாசகத்தை "செங்கணெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய, பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி" என்றெடுத்துப் பாடியருளினார் எ—று. (௪௧)



விரவுமன் புடையா ரந்த மேதகு தலத்தை நீங்கிப்
பரிவுடன் கச்சி யேகாம் பரந்தனிற் பரனை யேத்தித்
தெரிவருங் காமக் கோட்டி சிறடி வணங்கித் தேவர்
வரநினைந் திறைஞ்சுந் தெய்வ வண்கழுக் குன்றிற் சென்றார்.

இ—ள்: விரவும் அன்பு உடையார் மேதகு அந்தத் தலத்தை நீங்கி - பரமாசாரியர் மாட்டுச் சென்று கலக்கும் பேரன்பையுடைய திருவாதவூரடிகள் மாட்சிமை பொருந்திய அந்தத் திருவண்ணாமலை யென்னும் ஸ்தலத்தை விட்டு நீங்கிச்சென்று, கச்சி ஏகாம்பரந்தனில் பரனைப் பரிவு உடன் எத்தி - தொண்டை நாட்டிலே காஞ்சீபுரத்தை யடைந்து திருவேகம்ப மென்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாத சுவாமியை அன்போடு தரிசித்து வணங்கித் துதித்து, தெரிவு அரும் காமக்கோட்டி சிறு அடி வணங்கி - இத்தன்மையின வென் றியாவராலு மறிந்து கோடற்கரிய காமக்கோட்ட மென்னு மாலயத்தில் வீற்றிருக்கின்ற காமாக்ஷியம்மையினது சிறிய திருவடிகளைத் தரிசித்து வணங்கித் துதித்து, தேவர் வரம் நினைந்து இறைஞ்சும் தெய்வ வண்கழுக்குன்றில் சென்றார் - அதன்பின்பு அரிபிரமேந்திராதி தேவர்களெல்லாம் வரத்தைப் பெறும் பொருட்டு எண்ணித் தம் பதங்களினின்றும் வந்தருச்சித்து வணங்கப்பெறும் தெய்வத் தன்மையையுடைய வளவிய திருக்கழுக்குன்றத்திற் சென்றருளினார் எ—று.

தேவர்களும் இவ்வுலகின்கண் வந்திறைஞ்சுதலை, "வானிடத் தவருமண்மேல் வந்தரன்றனை யர்ச்சிப்பர்" என்னுந் திருவாக்கானு மறிக. தொண்டைநாட்டை, "மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்கா, மாற்கு முவரி யணிகிழக்கா—மாற்றரிய, தெற்குப் பினாகி திகழிரு பதின்காத, நற்றொண்டை நாடெனவே நாடு" என்பதனானுமறிக. பினாகி - பெண்ணைநதி.

கோட்டிதழ் கமழுங் கொன்றைச் சென்னியன் குலவு மன்பர்
சூட்டிய மலர்த்தாள் போற்றித் துணைவநின் செய்ய மேனி
காட்டினை கலங்கா வண்ண மிக்கழுக் குன்றி லென்று
பாட்டினைப் பொழிந்து சின்னாட் பயின்றுபின் பணிந்து போந்தார்.

இ—ள்: கோட்டு இதழ் கமழும் கொன்றைச் சென்னியன் குலவும் அன்பர் - கொம்பர்களிலே இதழ்கள் நறுமணங் கமழும் கொன்றை மாலி கையைத் தரித்த திருமுடியையுடைய சிவபெருமானுக்கு மெய்யன்பராகிய திருவாதவூரடிகள், சூட்டிய மலர்த்தாள் போற்றி - முன்னரே தஞ் சிரசிற் சூட்டியருளிய செந்தாமரை மலர்போலுந் திருவடிகளைத் தரிசித்து வணங் கித் துதித்து, துணைவ - உயிர்த் துணைவரே, இக் கழுக்குன்றில் கலங்கா வண்ணம் நின் செய்ய மேனி காட்டினை என்று பாட்டினைப் பொழிந்து- இத் திருக்கழுக்குன்றத்திலே தமியேன் மனங்கலங்காத பிரகாரம் சிவந்த பரமாசாரியத் திருமேனியை நன்கு தரிசிப்பித்தருளினீரென்று, "பிணக் கிலாத பெருந்துறைப் பெருமானுன் னுமங்கள் பேசுவார்" என்று தொடங்கி "வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்று இறுதிகடோறும் முடித்துத் திருக்கழுக்குன்றப்பதிகம் என்னுந் திருவாசகமாகிய மழையை வருஷித்து, சில நாள் பயின்று - சில தினம் அங்கே வசித்து, பின் பணிந்து போந் தார் - அதன் பின்பு சுவாமியை வணங்கி அனுமதி பெற்றுத் தெற்கு நோக்கித் திரும்பிச் சென்றருளினர் எ—று. (ச௩)

அத்தல முதலா நாப்ப ணடைந்துள தலமுங் கானு
மைத்தடங் கிரியுங் காவும் வாவியு நதியு நீங்கிப்
பைத்தவெம் பாம்பொ டாடி நரியெலாம் பரிக ளாக்குஞ்
சித்தர்தென் றில்லை மூன்று காவத மென்னச் சென்றார்.

இ—ள்: அத்தலம் முதலா நாப்பண் அடைந்துள தலமும் கானும் மைத்தடம் கிரியும் காவும் வாவியும் நதியும் நீங்கி - திருவாதவூரடிகள் அந்த ஸ்தலம் முதலாக மத்தியில் எதிர்ப்படுகின்ற ஸ்தலங்களையும் காடு களையும் கரிய விசாலமாகிய மலைகளையும் சோலைகளையும் தடாகங்களையும் நதிகளையுங் கடந்து, பைத்த வெம் பாம்பு ஒடு ஆடி - படத்தையுடைய வெவ்விய சர்ப்பாபரணத்தோடு நடிப்பவரும், நரி எலாம் பரிகள் ஆக் கும் சித்தர் தென் தில்லை மூன்று காவதம் என்னச் சென்றார் - குறுநரி களை யெல்லாம் உத்தம லக்கணங்களையுடைய குதிரைகளாக உருத்திரித்த சித்து வித்தையை யுடையவருமாகிய சபாநாயகரது தெற்கின்கணுள்ள தில்லைமாநகரம் இனி மூக் காவத தூரத்தினதென்று கண்டோர் தம்முட் கூறச் சமீபமாகச் சென்றருளினர் எ—று.

ஆகவென்பது ஆவெனக் கடைக் குறைந்து நின்றது. ஆடி-பெயர். (சச)

வேறு.

தூமூரன் மடப்பாவையர் தோளாசையி லாளா
மாமூகரு மிட்டுண்டுயிர் வாழாதவர் தாமுந்



தீமூள்கர வரன்மேலருள் செய்யாதவர் பலரும்
போமூர்வழி போகாதவர் புலியூர்வழி போனார்.

இ—ள்: தூமூரல் மடப் பாவையர் தோள் ஆசையில் ஆள் ஆம் மா மூகரும் - சுத்தமாகிய முறுவலையுடைய இளமை பொருந்திய மகளிரது தோள்களைத் தழுவு மாதரவொன்றானே அம்மகளிருக்குத் தாஞ் சதாகாலமு மாட்படுகின்ற முழுமூடரும், இட்டு உண்டு உயிர் வாழாதவர் தாமும் - பிற ருக்குக் கொடுத்துத் தாமு முண் டுயிர்வாழாத லோபிகளும், தீ மூள் கர அரன் மேல் அருள் செய்யாதவர் பலரும் போம் ஊர் வழி போகாதவர் - அக்கினி சுவாலிக்குங் கையையுடைய சிவபெருமான்மாட்டு அன்பு செய்யாத பொறியிலிகளுமாகிய பாவிகள் மறுமைக்கட் செல்லு நிரய நெறிக்கட் செல் லாத திருவாதவூரடிகள், புலியூர் வழி போனார் - வியாக்கிர புரமாகிய சிதம்பரத்துக்குச் செல்லும் அந் நெறிக்கட் சென்றருளினர் எ—று.

மூரலென்பது பல்லுக்கும் நகைக்கும் பொதுப் பெயராகலிற், சுத்த மென்னு முரைக்கு முறையே பரிசுத்தமும் வெண்மையுமெனப் பொருள் கொள்க. புணர்ச்சிக் காலத்து மகளிரது றுப்புக்கள் சுத்த முடையன வென் பது இன்பநூற் றுணிபாகலின், அதுபற்றித் தூமூரலென விசேடித்தார்; இனி நகைக் கியையப் பொருள்கொள்ளுங்கால் தூ என்பதற்குப் பற்றுக் கோடெனப் பொருள் கோடலுமொன்று; ஆசைக்குப் பற்றுக்கோடாகிய நகை யென்க. இதனானே பாவையர் மூகரைத் தமக்காளாக்குதற்குக் கருவி கூறியதூஉமாயிற்று. இது கலிவிருத்தம். (ச௫)

செல்லுஞ்சுர மிருபாலொளி திகழ்கொன்றைகண் மலரா
வெல்லொன்றிய விமையோருல கெனநின்றன வெங்கும்
புல்லுஞ்சிவ நாமத்தமிழ் போல்வண்டிசை பாடச்
சொல்லும்பொருள் வல்லார்தம கைபோன்றன தோன்றி.

இ—ள்: செல்லும் சுரம் இரு பால் ஒளி திகழ் கொன்றைகள் மலரா எல் ஒன்றிய இமையோர் உலகு என எங்கும் நின்றன - இங்ஙனந் திரு வாதவூரடிகள் செல்லும் வழியி னிருமருங்கினும் செவ்வொளி விளங்கா நின்ற பொற்கொன்றைகண் மலருதலினால் அவ்வனம் பொற் பிரகாசத்தை யுடைய தேவருலகென்று சொல்லும்படி அவைகளெங்கும் பரந்து நின்றன, சிவ நாமம் புல்லுந் தமிழ் போல் வண்டு இசை பாட - சிவ நாமத்தோடு பொருந்துந் தமிழ்வேதமாகிய திருவாசகத்தைப் போல இனிதாக வண்டு கள் கீதம் பாட, தோன்றி பொருள் சொல்லும் வல்லார் தம கை போன் றன - செங்காந்தண் மலர்கள் அவ்விசைப் பாட்டிற்குப் பொருள் சொல்லுஞ் சாதுரியத்தையுடைய நாடகமகளிரது அபிநயங்காட்டுங் கைகளையொத்தன.

பொருள் சொல்லும் கை என முடிக்க; நாடகமகளிர் வாயாற் பாடு மிசைப் பாட்டிற்கு அவர் அபிநயக் கைகளே பொருள் கூறுமென்பது நாடக நூல்வழக்கென்க. அது "வாயுரை செய் சொற்பொருண் மலர்க்கரமுரைப்ப, மீயுயர் விசும்பினெழு மென்புனொலி யெல்லாம், பாயொளிய பஞ்சுறு பதத்துற மிதித்துப், பேயொடு நடித்த விறை பித்துற நடித்தாள்" என்னும் பிரபுலிங்கலீலை மாயை பூசனைசெய்கதிச் செய்யுளானுமறிக. இஃது அந் நாடக மகளிர்க் கல்லது ஏனையர்க்கு வாராமையின் அவரை வல்லா ரென்றார். அவ்வனம் பொன்னுலகையும், அவ்வண்டுக ளிசை அப் பொன்னுலகத்துமரிய திருவாசகத்தையும், அவ்வனத்தசைகின்ற செங்காந்தண் மலர்கள் அப் பொன்னுலகத்து நாடக மகளிர்து அபிநயக் கைகளையும் ஒத்தன என்பது கருத்து. பெருந்தகைமையை யுடைய இவ்வடிகளது வரவின் பொருட்டு அவ்வனம் அலங்கரிக்கப்பட்டுப் பாடியாடப் பெற்றிருந்தாற் போன்றதென்பது தாற்பரியமென்க. இனிச் சொல்லும் பொருள் வல்லார் தம் கை போன்றன என்பதற்குப் பொருள் சொல்லுங்கால் வித்துவான்களது கைகளை ஒத்தன எனப் பொருள் கூறுவாருமுளர். அவர் பொருள் சொல்லுங்காற் கைகாட்டுதல் கூத்தாட்டு நீர்மைத்தாய்க் குற்றமாவதல்லது குணமாகாமையின் அது போலியுரையென் றொழிக. (௬௬)

தெள்ளுஞ்சிவ ஞானஞ்சிறி தில்லார்தவ வேடங்
கொள்ளுஞ்செய லெனவொண்மலர் குலவுங்கவி ரெல்லாம்
பள்ளம்படர் புனல்போற்புலன் வழியேபயில் சிறியோ
ருள்ளந்தமை யொக்குந்திகழ் மைக்கொண்டொளிர் காயா.

இ—ள்: தெள்ளும் சிவஞானம் சிறிது இல்லார் தவவேடம் கொள்ளும் செயல் என - தெளிவைத் தருஞ் சிவஞானஞ் சிறிது மில்லாத கபடிகள் தவவேடத்தை மேற்கொள்ளும் தன்மைபோல, கவிர் எல்லாம் ஒள் மலர் குலவும் - முருக்குக்களெல்லாம் வாசனையற்ற செவ்வொளி மிக்க மலர்களாற் சிறந்து விளங்கும், திகழ் மைக்கொண்டு ஒளிர் காயா - மிக விளங்காநின்ற கரு நிறத்தைக்கொண்டு பிரகாசிக்கும் காயாமலர்களானவை, பள்ளம் படர் புனல் போல் புலன் வழியே பயில் சிறியோர் உள்ளம் தமை ஒக்கும் - பள்ளத்தை நோக்கித் தானே செல்லும் நீரைப் போலச் சத்தாதி யைம்புலன் வழியே தடையற்றுச் செல்லும் கீழ்மக்களது கரிய மனங்களை நிகர்க்கும் எ—று.

சிறிதுமென்னு மிழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. மை யென்னும் விசேடணம் மலராகிய ஆகுபெயர்ப் பொருளை விசேடித்து நின்றது. பாவத்துக்கு நிறம் கருமையாகலின், அப்பாவத்தையுடைய கரிய மனங்கள் காயாமலர்களுக்கு உவமையாயினவென்க. (௬௭)



பாயுங்குல மந்தித்திரள் பயிலுந்தொறு மசையா
வீயின்குழு வெழுதேனி னிருல்சேர் மலர்நாக
மாயந்திகழ் தாராகண மகல்வான்மிளிர் மதிய
மேயும்படி கிளர்பொங்கரி னிடைநின்றன வெங்கும்.

இ—ள்: பாயும் குல மந்தித் திரள் பயிலும் தொறும் அசையா ஈயின் குழு எழு தேனின் இரூல் மலர் சேர் நாகம் - பாயுமியல்பை யுடைய மிருக சாதியாகிய குரங்குக் கூட்டங்கள் சஞ்சரிக்குந் தோறு மசைதலான் ஈயினது கூட்டங்கள் எழப்பெறுந் தேன்கூடும் மலர்களும் பொருந்தப்பெற்ற புன்னைமரங்கள், அகல் ஆயம் வான் திகழ் தாராகணம் மிளிர் மதியம் ஏயும்படி கிளர் பொங்கரின் இடை எங்கும் நின்றன - அகன்ற ஆகாயமும் அதன் கண் விளங்குகின்ற நட்சத்திர கூட்டமும் சோடச கலைகளோடு கூடி விளங்கும் பூரணசந்திரனு மொக்கு மென்று கவிஞர் கூறும்படி கிளரா நின்ற சோலைகளின் எவ்விடத்தும் நின்றன எ—று.

ஆகாயம் ஆயமென இடைக் குறைந்து நின்றது. நாக மரத்தின் இலைச் செறிவு ஆகாயத்திற் குவமை. மலர் விதந்து கூறப்பட்டமையின், இனம் பற்றி இலை விதப்புங் கொள்க. புன்னை மரங்கள் ஆகாயத்தையும், மலர்கள் நட்சத்திர கூட்டத்தையும், தேன்கூடு பூரணசந்திரனையு மொக்குமென்பது கருத்தாகலின் எதிர்நிரனிறை. ஆய மென்பதற்குப் பிறிதுரைப் பாருமுளர். (௬௮)

பக்கங்கிளர் கமுகின்றிரள் பலசாமரை வீசக்
கொக்கின்றளிர் கோதும்பல குயில்காகள மூதத்
தொக்கன்பொடு விண்ணதிபர் சொரியும்பல பொற்பூ
வொக்கும்படி மலர்சிந்தின வொண்சண்பக சோலை.

இ—ள்: பக்கம் கிளர் கமுகின் திரள் பல சாமரை வீச - திருவாதவூரடிகள் செல்லு நெறியின் இருபக்கங்களினுங் கிளராநிற்கும் கமுகுகளினது கூட்டங்கள் தம் பூம்பாளையாகிய பல சாமரங்களை அவ்வடிகட்கு இரட்டவும், கொக்கின் தளிர் கோதும் பல குயில்கள் காகளம் ஊத - மாவினது இளந் தளிர்களைக் குடையும் பல குயில்கள் தம் அலகுகளாகிய சிறுசின்னங்களை ஊதவும், பல விண் ஆதிபர் தொக்கு அன்பு ஒடு சொரியும் பொன்பூ ஒக்கும்படி - பல தேவத் தலைவர்கள் ஒருங்கு திரண்டு அன்போடும் உகந் தவ் வடிகண்மீது சொரியும் சுவர்ண புஷ்பாஞ்சலியை ஒக்குமென்று கூறும்படி, சண்பக சோலை ஒண் மலர் சிந்தின - சண்பகச்சோலைகள் பொன்னிறம் பொருந்திய மலர்களைச் சிதறின எ—று.

கொக்கு திசைச்சொல். திருவாதவூரடிகளது வழி வருத்தந் தீரும் பொருட்டுச் சாமரங்களை வீசியும், விநோதத்தின் பொருட்டு மங்கல வாத்

தியகோஷஞ் செய்தும், அவரது தெய்வத் தன்மையின் பொருட்டுச் சொர்ணபுஷ்பாஞ்சலி செய்தும் உபசரிப்பவரை ஒத்திருந்தன என்பது கருத்தென்க. (௪௯)

நீங்காவள மிவ்வாறுள நீள்சூத நரந்தந்
தேங்காரளி முரல்பாதிரி தெங்கின்றிரள் வகுளங்
கோங்காசினி கொந்தார்செழு மந்தார நெருங்கும்
பூங்காவை யகன்றூர்புலி யூர்நன்னகர் கண்டார்.

இ—ள்: நீள் சூதம் நரந்தம் தேம் கார் அளி முரல் பாதிரி தெங்கு வகுளம் கோங்கு ஆசினி கொந்து ஆர் செழும் மந்தாரம் நெருங்கும் - நெடிய மாவும் நாரத்தையும் மதுபானஞ் செய்யுங் கரிய வண்டுகள் சத்திக்கின்ற பாதிரியும் தெங்கும் மகிழும் கோங்கும் பலாவும் கொத்தார்ந்த செழிய மந்தாரமுமாகிய மரங்கள் நெருங்கப்பெறும், இவ்வாறு நீங்கா வளம் உள பூங்காவை அகன்றூர் நல் புலியூர் நகர் கண்டார் - மேலே கூறிய இந்தப் பிரகாரம் ஓர்காலும் நீங்காத வளங்களையுடைய பூஞ்சோலையைத் திருவாதவூரடிகள் நீங்கி நல்ல சிதம்பரமாகிய சிவக்ஷேத்திர தரிசனஞ் செய்தார் எ—று.

வளமிவ்வாறுள பூங்கா, நெருங்கும் பூங்கா வெனத் தனித்தனி கூட்டுக. திரளென்பதைச் சூத முதலியவற்றோடு தனித்தனி கூட்டிப் பன்மை செய்து கொள்க. ஆசினி பலாவினோர் விசேடம். (௫௦)

சேணொன்றிய மதிலும்பணி திகழ்கோபுர நிரையுஞ்
சோணந்தரு கும்பங்கிளர் துணைமாளிகை பலவுங்
காணுந்தொறு மெழில்செய்வது கண்டஞ்சலி கொண்டே
பூணுந்திரு வருளன்பர்பு கழ்ந்தாருள் மகிழ்ந்தார்.

இ—ள்: சேண் ஒன்றிய மதிலும் - மேற்றளம் ஆகாயத்தி லுயர்ந்த மதிலும், பணி திகழ் கோபுர நிரையும் - சிற்பத்தொழில் விளங்குந் திருக்கோபுர வரிசைகளும், சோணம் தரு கும்பம் கிளர் துணை மாளிகை பலவும் - பொற்கும்பங்கள் பிரகாசியாநின்ற இணைமாடங்கள் பலவும், காணும் தொறும் எழில் செய்வது கண்டு அஞ்சலி கொண்டு - பார்க்குந் தோறுங் கண்களுக் கழகு செய்வதைக் கண்டு அஞ்சலிசெய்து, திரு அருள் பூணும் அன்பர் புகழ்ந்தார் உள் மகிழ்ந்தார் - சபாநாயகரது திருவருளைப் பெறத் தகு மன்பையுடைய திருவாதவூரடிகள் அவற்றைத் தம் வாக்காற் புகழ்ந்து மனமகிழ்ச்சி யுடையராயினர் எ—று.

சோணம் - செந்நிறம்; ஆகுபெயர். துணைமாளிகை - அடுக்கு மாளிகையுமாம். (௫௧)



வேதந்தரு மொலியுந்தொழும் விண்ணோர்தம தொலியுங்
கீதந்தரு மொலியுங்கிளர் முழவங்களி னொலியும்
போதந்தரு சிவஞானிகள் புகலாகம வொலியு
மோதுந்தமி ழொலியுங்கட லொலிசெய்தன புலியூர்.

இ—ள்: புலியூர் - அந்தச் சிதம்பரத்திலே, வேதம் தரும் ஒலியும் - வேதாத்தியயனஞ் செய்யு மொலியும், தொழும் விண்ணோர் தமது ஒலியும் - வழிபடுந் தேவர்களது தோத்திரவொலியும், கீதம் தரும் ஒலியும் - சங்கீதங்களி னொலியும், கிளர் முழவங்களின் ஒலியும் - பெரிய மிருதங்கங்களி னொலியும், சிவஞானிகள் புகல் போதம் தரு ஆகம ஒலியும் - சிவஞானிகள் படனஞ் செய்கின்ற எம்போலிகட்கும் நல்லறிவுச் சுடர் கொளுத்துஞ் சைவாகமங்களின் ஒலியும், ஓதும் தமிழ் ஒலியும் கடல் ஒலி செய்தன - ஓதுகின்ற தமிழ்ப் பிரபந்தங்களின் ஒலியும் சமுத்திரம் போல வொலித்தன எ—று. (௫௨)

நிரையொன்றிய மணிமாளிகை நெடுவீதிக ளகலா
வரையொன்றிய வுயர்கோபுர மணிவாயில் புகுந்தே
யுரையொன்றிய சிவஞான முணர்த்துஞ்சிவ நன்னூற்
கரைகண்டவர் மணிமன்றெதிர் கண்டாரருள் கொண்டார்.

இ—ள்: உரை ஒன்றிய சிவஞானம் உணர்த்தும் நல் சிவநூல் கரை கண்டவர் - உயர்ச்சி பொருந்திய சிவஞானத்தை விளக்கும் நல்ல சைவாகம சமுத்திரத்தைக் கரைகண்ட திருவாதவூரடிகள், நிரை ஒன்றிய மணி மாளிகை நெடுவீதிகள் அகலா - வரிசையாகப் பொருந்திய திருமாளிகைகளையுடைய நெடிய திருவீதிகளைக் கடந்து, வரை ஒன்றிய உயர் மணி கோபுர வாயில் புகுந்து - மலைபோல வுயர்ந்த அழகிய திருக்கோபுர வாய்தலின் வழியாக ஆலயத்தினுட் பிரவேசித்து, மணி மன்று எதிர் கண்டார் அருள் கொண்டார் - அழகிய கனகசபையை நேரே தரிசித்து முன்னையினும் பத்தி மிக்குடையராயினர் எ—று.

கண்டா ரென்ப தெச்சமுற்று. அருள் - அன்பு. அது "தீ மூள் கரவான் மேலருள் செய்யாதவர் பலரும், போமூர் வழி போகாதவர்" என ஆசிரியர் மேற் கூறியவாற்றானு மறிக; காரண காரிய வுபசார மென்றலுமொன்று. இருபத்தெட்டு ஆகமங்களும் அத்துணைக் கோடி கிரந்தங்களுடையன வாகலின் அவ்விரிவுடைமை தோன்றச் சிவநன்னூற்கரை என்றும், இடையறாது தானே முறுகி வளரும் பத்திமை யுடையார்க்குஞ் சந்நிதி காட்சிப்பட்டுழி இத்துணைத்தென்று கூறுதலாற்றாத அதி விசேட பத்தி சனிக்குமாகலின், மணிமன் றெதிர்கண்டா ரருள் கொண்டார் என்றுங் கூறினர். (௫௩)

பொன்னார்பொது நின்றாடிய புனிதன்றனை முடிமே
லந்நாளடி வைக்கும்பர னாகும்படி கண்டார்
மன்னாவுயி ரன்னாய்மணி மன்றாசர ணென்றே
சொன்னார்பல காலன்பொடு தொழுதார்மிக வழுதார்.

இ—ள்: பொன் ஆர் பொது நின்று ஆடிய புனிதன்றனை முடி மேல் அந்நாள் அடி வைக்கும் பரன் ஆகும்படி கண்டார் - திருவாதவூரடிகள் கனகசபையின்கணின்று திருநடனஞ் செய்தருளுகின்ற நிருமலராகிய சபாநாயகரை முன்னரே தஞ் சிரசின்மீது திருவடிதீக்ஷை செய்தருளிய பரமாசாரிய சுவாமிகளாகத் தரிசிக்கப் பெற்றார், பலகால் அன்பு ஒடு தொழுதார் - பலதரம் அன்போடு வணங்கினார், மிக அழுதார் - பின் மிகவும் பிரலாபித்தார், மன்னா - முழுமுதலே, உயிர் அன்னாய் - எனக்கு என்னையொப்பவரே, மணி மன்றா சரண் என்று பலகால் சொன்னார் - அழகிய சபாநாயகரே அடியேன் தேவரீருக் கடைக்கலமடைக்கல மென்று பலமுறை தோத்திரஞ் செய்தார் எ—று.

தம்மினும் மிகத் தமக்கினிய சபாநாயகரைத் திருவாவூரடிகள் தமக்குத் தம்மையொப்பவரென்றது, ஒருவர்க்குத் தம்முயிரினுஞ் சிறந்த பிறிதொருபொருளில்லையென்னு முலகவழக்கின் வைத் தவாது அருமை எளிதில் விளக்குதற்பொருட்டென்க. "என்னில் யாரு மெனக்கினியாரில்லை, யென்னிலுமினியா னொருவனுளன்" என்பதனானுமறிக. (௫௪)

விண்டேயிரு கண்ணீர்விழ வீழ்ந்தின்னடி முடிமேற்
கொண்டேயெ னெழுந்தன்பொடு குறைபாவரு ணிறைபா
வண்டேர்குழ லுமைபங்கனை வண்டில்லையு ளின்னே
கண்டேனென நற்பாடல் கருத்தார வுரைத்தார்.

இ—ள்: இரு கண் விண்டு நீர் வீழப் பின் வீழ்ந்து இன் அடி முடிமேல் கொண்டு எழுந்து - திருவாதவூரடிகள் இரு கண்களு மிமையாது ஆனந்த பாஷ்பம் பொழியப் பின்னருஞ் சந்நிதியில் வீழ்ந்து தமக்குத் தம்மினுமினிய திருவடிகளைச் சிரசில் வகித்துக்கொண்டு வணங்கி யெழுந்து நின்று, குறையா அன்பு ஒடு அருள் நிறையா - தம் பேரன்பினாலே திருவருள் நிறையப்பெற்று, வண்டு ஏர் குழல் உமை பங்கனை - வண்டுகள் மொய்க்கப்பெறும் அழகிய கூந்தலையுடைய சிவகாமியம்மை சமேதராகிய சபாநாயகரை, வண் தில்லை உள் இன்னே கண்டேன் என நல்பாடல் கருத்து ஆர உரைத்தார் - "இந்திரியவயமயங்கி" என்றெடுத்து வளவிய தில்லைமாநகரத் திதுபொழுது "கண்டேனே" என்றிறுதிதோறும் பெய்து நல்ல பாடலாகிய கண்டபத்தென்னுந் திருவாசகத்தை மனங்கொளப் பாடியருளினார் எ - று.



சபாநாயகரது திருவருளைப் பெறுதற்குத் திருவாதவூரடிகளதன்பு கருவியாகலின், ஒடுவுருபு கருவிப்பொருட்கண் வந்ததென்க. தேவமகளிர் கூந்தலிலேயே வண்டு வீழ்தலின்றாகவும், அகில தேவநாயகியாகிய சிவகாமியம்மையினது கூந்தலில் வண்டு வீழ்வதாக ஈண்டாசிரியர் கூறியது கூந்தற் பொதுமைபற்றி என்க. தேவமகளிர் கூந்தலில் வண்டு வீழாமையை, "வண்டே யிழையே வல்லி பூவே, கண்ணே யலமர லிமைப்பே யச்சமென், றன்னவை பிறவு மாங்க ணிகழா, நின்றவைகளையுங் கருவியாகும்" என்பதனானறிக. (௫௫)

குன்றாவருண் மூலந்திகழ் குறியாகிய சுடரு
மன்றாகிய வெளியூடு மகிழ்ந்தாடிய வொளியு
மொன்றாகிய வநுபூதியி லுற்றார்செய லற்றார்
நின்றாரசை வில்லாவொரு நிலையோவிய மானார்.

இ—ள்: குன்றா அருள் மூலம் திகழ் குறி ஆகிய சுடரும் மன்று ஆகிய வெளி ஊடு மகிழ்ந்து ஆடிய ஒளியும் ஒன்று ஆகிய அநுபூதியில் உற்றார் - திருவாதவூரடிகள் குறைவற்ற கிருபையையுடைய திருமூலஸ்தானத்தில் விளங்குஞ் சிவலிங்கப் பெருமானாகிய சோதியும், கனகசபையாகிய சிதாகாசத்திலே மகிழ்ந்து திருநிருத்தஞ் செய்தருளுஞ் சபாநாயகராகிய சோதியுந் தம்முளிரண்டற்ற சிவாநுபூதியையடைந்து, செயல் அற்றார் - ஆன்மசேட்டைகளற்று, அசைவு இல்லா ஒருநிலை ஓவியம் ஆனார் நின்றார் - புருஷாகாரமாக எழுதிய ஒரு சித்திரம் போன்றவராய் அசைவற நின்றார் எ-று.

அணுபக்ஷத்து நவந்தரு பேதங்களை அதிட்டித்து நின்று பிரேரித்தன் மாத்திரைக்கே சம்புபக்ஷத்தும் நவந்தரு பேதம் கொள்ளப்பட்டன வன்றிச் சிவஞானிகள் சம்புபக்ஷத்தில் மெய்யுணர்வால் நோக்குமிடத்து எல்லா மொன்றேயாகலிற் குன்றாவருண் மூலந்திகழ் குறியாகிய சுடரு, மன்றாகிய வெளியூடு மகிழ்ந்தாடிய வொளியு மொன்று என்றார். அது "சயம்புமாலரனே யீசன் சதாசிவன் விந்து நாதம், பயந்தருசத்திமேலாம் பரசிவ னொடுங்குந் தானம், வியந்திடு நிருத்தானந்த மெய்ம்மைகொள் குருவுருப, முயர்ந்திடு வானிற்சாப முருகுநெய்க் கணமும் போலும்" என்பதனானும், "நவந்தரு பேதமேக நாதனே நடிப்பன் கண்டாய்" என்பதனானும், பிறவாற்றானு முய்த்துணர்க. (௫௬)

மைகால்குழ லுமைபங்கினன் வழிபாடு மறந்தே
கைகாலசை விலவாயின கண்ணுஞ்சிறி திமையா
செய்காரிய மென்னேவிது தெருளாமரு ளென்னா
மெய்காவலர் மணிமன்றை விடப்போமினி யென்றார்.

இ—ள்: மை கால் குழல் உமை பங்கினன் வழிபாடும் மறந்து - அத்தருணத்துக் கருமைவிளங்கும் கூந்தலையுடைய சிவகாமிசமேதராகிய சபாநாயகருக்கு மனவாக்குக் காயங்களினாற் செய்யும் வழிபாட்டையு மறத்தலினாலே, கை கால் அசைவு இல ஆயின - கரசரணாதி அவயவங்களும் நிஷ்கம்பமாயின, கண்ணுஞ் சிறிது இமையா - கண்களுஞ் சிறிது மிமைக்கின்றில, செய் காரியம் என்னோ - இதற்கு நாம் செய்யுங்காரியம் யாதோ, இது தெருளா மருள் என்ன - இது மணிமந்திர ஔஷதங்களாலே தீராததொரு மயக்கமாமென்று கவலைகூர்ந்து, மெய்காவலர் மணி மன்றைவிடப் போம் இனி என்றார் - மெய்காப்பாளர் அழகிய கனகசபையைவிட் டினி யகலப்போமென்று கடிந்து கூறினார் எ - று.

செய்காரிய மென்னோ என்பதைத் திருவாதவூரடிகண் மீதேற்றி இவர் செய்யுங் காரியம் யாதோ என்றலு மொன்று. (௫எ)

வேறு.

பூண்டருள் கொண்ட காவல் புரிபவ ருரைத்தல் கேளார்
தாண்டவ நிகழு ஞானத் தன்மையின் றொன்மை நாடிக்
காண்டகு துரியா தீதக் கழிபரத் தொளியின் மூழ்கி
நீண்டதோர் தம்ப மாகி நின்றனர் நெடிது போது.

இ—ள்: பூண்டு கொண்ட அருள் காவல் புரிபவர் உரைத்தல் கேளார்- தம்மதிகாரிகண் மாட்டுத் தாம் பெற்றுக்கொண்ட ஏவலையுடைய மெய்காப்பாளர் கூறிய வார்த்தையைத் திருவாதவூரடிகள் கேட்கப்பெறாதவராகி, நிகழும் தாண்டவம் தொன்மைத் தன்மை ஞானத்தின் நாடி - அண்டத்தே சுத்த மாயாமயமாகிய கனகசபையினும் பிண்டத்தே தமது லலாடத் தானமாகிய புருவமத்தியினும் முறையே தூல சூக்குமமாக நிகழும் அநவரத தாண்டவத்தைப் பழைய திவ்விய ஞானத்தாலே தம்மு ளொப்பத் தரிசித்து, காண் தகு துரியாதீதக் கழி பரத்து ஒளியில் மூழ்கி - அவ்வழிக் காணத்தக்க துரியாதீதமாகிய சுத்த சிவ நின்மலவொளியின்கட் புக்கழுந்தி, நெடிது போது நீண்டது ஓர் தம்பம் ஆகி நின்றனர் - நெடுநேரம் நீண்டதொரு ஸ்தம்பம் போல அசைவற நின்றார் எ—று.

சிவமூர்த்தி பேதங்களைக் கடந்த சிவமென்பார் கழிபரமென்றார். கழிபரம் வினைத்தொகை; கரைகழிபந்தம் என்புழிப்போல. மேல் அசைவில்லா வொருநிலை யோவியமாய் நின்ற ஆரம்பநிலையோ டிதனிடை வேற்றுமை தெரித்துக் காட்டுவார் "நீண்டதோர் தம்பமாகி நின்றனர் நெடிது போது" என்று கூறினார். "தாண்டவ நிகழுஞானத் தன்மையின் றொன்மை நாடி" என்பதற்கு நிருத்த காரியத் திருவுளக் குறிப்பின் மூலத்தை ஆராய்ந்தென்றுமாம். துரியாதீதக் கழிபரத் தொளியின் மூழ்குதலை, "தத்துவம் போய்க்



கேவலம் போய்த் தான்போயருள்கழன்று, சுத்தபரையாய்த் தன் சுதந்தரம் போய்ச்—சத்தி, யொழிவிலேபோதம்போ யொன்றாகாவொன்றி, னழிவிலே யின்பவதீதம்" என்பதனானுமறிக. இது அறுசீரடியாசிரியவிருத்தம். (௫அ)

போமெனப் போகா ரொன்றும் புகல்கிலர் பித்தங் கொண்டா
ராமெனக் காவ லாள ரஞ்சிநின் றழுங்கு மெல்லைச்
சாமுடற் குயிர்வந் தெய்துந் தன்மைபோற் குவிந்த கஞ்சத்
தேமலர்க் கரமேல் கொண்டு சிவசிவ போற்றி யென்றார்.

இ—ள்: போம் எனப் போகார் ஒன்றும் புகல்கிலர் - நாம் போமென்று சொல்லவும் போகின்றிலர்; அதன்மேல் ஒன்று பேசுவதுஞ் செய்கின்றிலர், பித்தம் கொண்டார் ஆம் எனக் காவலாளர் அஞ்சி நின்று அழுங்கும் எல்லை - இவர் பித்தாதிக்க ரோகங் கொண்டார் போலுமென்று மெய்காப்பாளர் அச்சமுற்று நின்று வருந்துகின்றுழி, சாம் உடற்கு உயிர்வந்து எய்தும் தன்மைபோல் குவிந்த தேம் கஞ்ச மலர் கரம் மேல் கொண்டு சிவசிவ போற்றி என்றார் - இறந்தவுடம்பினுண் மீள அவ்வுயிர்வந் தெய்துமாறு போலத் தாமே அஞ்சலியாகக் குவிந்த தேனையுடைய செந்தாமரை மலர்போலுந் திருக்கரங்களைச் சிரசின்மேல் வைத்து 'சிவசிவபோற்றி' என்றார் எ-று.

பித்தாதிக்கரோகம் - பைத்தியம். தெளிந்தாரென்பதாம். (௫௯)

முன்னவன் செம்பொன் மன்றை மும்முறை வலங்கொண் டங்குத்
தன்னிக ரில்லா மூலத் தலைவனை வணங்கிப் பின்னர்
அன்னையம் பிகைதன் பாத மன்புட னிறைஞ்சி யந்தப்
பொன்னவிர் கோயின் மேல்பாற் புலீச்சரஞ் சென்று சேர்ந்து.

இ—ள்: முன்னவன் செம்பொன் மன்றை மும்முறை வலம் கொண்டு- முழுமுதலாகிய சபாநாயகரது மாற்றுயர்ந்த கனகசபையை மூன்று தரம் பிரதக்ஷிணம்செய்து அதன்பின்பு, அங்குத் தன் நிகர் இல்லா மூலத் தலைவனை வணங்கி - அங்கே தமக்கு நிகரில்லாத சிவலிங்கப் பெருமானாகிய திருமூலட்டானேசுரரைத் தரிசித்து வணங்கி, அன்னை அம்பிகைதன் பாதம் அன்புஉடன் இறைஞ்சி - அகில லோக சனனியாகிய உமையம்மையினது திருவடிகளை அன்போடு தரிசித்து வணங்கி, பின்னர்ப் பொன் அவிர் அந்தக் கோவில் மேல் பால் புலீச்சரம் சென்று சேர்ந்து - அதன்பின்னர்ப் பொன் மயமாய் விளங்குகின்ற அவ்வாலயத்தின் மேலைத் திக்கிலுள்ள திருப்புலீச்சரத்திற் போய்ச் சேர்ந்து எ—று. (௬௦)

வரந்தர விருந்த நாதன் மலரடி வணங்கி நாகேச்
சரந்தனி லிருந்த வண்ண றன்பத மிறைஞ்சி நீங்கித்
திருந்திய மறையோர் வாழுந் தில்லையம் பலஞ்சூழ் வீதி
பொருந்துழி யமர்த மான வாசகம் புகல லுற்றார்.

இ—ள்: வரம் தா இருந்த நாதன் மலர் அடி வணங்கி - அத் திருப்புலீச்சரத்திலே தம் மெய்யன்பர்களுக்கு வேண்டிய வரங்களைப் பிரசாதித்தருளும் பொருட்டுச் சிவலிங்கத் திருமேனிகொண்டு வெளிப்பட எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது செந்தாமரை மலர்போலுந் திருவடிகளைத் தரிசித்து வணங்கி, நாகேச்சரந்தனில் இருந்த அண்ணறன் பதம் இறைஞ்சி நீங்கி - திருநாகேச்சரத்தி லெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்து வணங்கி அவ்விடத்தினின்று நீங்கி, திருந்திய மறையோர் வாழும் தில்லையம்பலம் சூழ் வீதி பொருந்துழி - திருத்தமாகிய தில்லைவாழந்தணர் வசிக்கின்ற கனகசபையைச் சூழ்ந்த திருவீதியிலே தாம் செல்கின்றுழி, அமிர்தம் ஆன வாசகம் புகலல் உற்றூர்- கேட்போரது செவிப்புலங்கட் கமிர்தமயமாகிய திருவாசகங்களைப் பாடியருளுவாராயினூர் எ—று.

திருப்புலீச்சரம் வியாக்கிரபாத முனிவர் ஆன்மார்த்த லிங்க பூசை செய்த தானம். திருநாகேச்சரம் சேஷனது அவதாரமாகிய பதஞ்சலிமுனிவர் ஆன்மார்த்த லிங்க பூசை செய்த தானம். (௬௧)

ஆடுமிக் குலாநற் றில்லை யாண்டவன் றனைக்கொண் டென்னும்
பாடலைப் புகன்று கோயி லிருவகைப் பதிகங் கூறி
நாடுமச் சிவ புராண மொழிந்தநல் லகவன் மூன்று
நீடுமெய்த் தமிழு மன்பா லோதினர் நீதி மிக்கார்.

இ—ள்: நீதி மிக்கார் - ஒழுக்கத்தின் மிக்க திருவாதவூரடிகள், ஆடும் குலாத் தில்லை ஆண்டவன் தனைக் கொண்டு என்னும் இந் நல் பாடலைப் புகன்று - "ஆடுங் குலாத் தில்லை ஆண்டானைக் கொண்டன்றே" என்னும் இந் நல்ல சொற்றொடரை ஈற்றடியாகவுடைய குலாப்பத்தென்னுந் திருவாசகத்தைப் பாடியருளி, கோயில் இருவகைப் பதிகம் கூறி - கோயின்மூத்த திருப்பதிகம் கோயிற்றிருப்பதிக மென்னும் இவ் விருவகைத் திருவாசகங்களையும் பாடியருளி, நாடும் அச் சிவபுராணம் ஒழிந்த நல் மூன்று அகவல் மெய் நீடு தமிழும் அன்பு ஆல் ஓதினர் - ஆராயத்தகும் அச்சிவபுராணமாகிய கலிவெண்பாவை யொழித்தொழிந்த நல்ல கீர்த்தித்திருவகவல் திருவண்டப்பகுதி போற்றித்திருவகவலென்னும் ஆசிரியப்பா மூன்றுமாகிய உண்மை மிக்க தமிழ் வேதங்களையும் சிரத்தையோடு பாடியருளினூர் எ—று.

கோயில் - சிதம்பரம். மூத்தல்-உயர்தல். அது "பேறிழவின்பமோடு பிணிமூப்புச் சாக்கா டென்னு, மாறுமுன்கருவுட்பட்டது" என்பதனூனும், "விண்ணோர்க் கெல்லா மூப்பாய்" என்பதனூனுமறிக. (௬௨)

கைவளை சிலம்பச் செம்பொற் கிண்கிணி கறங்கச் சூழ்ந்து
மைவளர் குழன்மேல் வண்டு மருண்டிசை திரண்டு பாட



மெய்வியர் வரும்ப வெம்போர் விழிக்கயல் புரட்டி ஞாங்க
ரிவ்வகை நின்று சுண்ண மிடித்தனர் மடந்தை நல்லார்.

இ—ள்: மடந்தை நல்லார் - மடந்தைப் பருவத்தையுடைய மகளிர்கள், கைவளை சிலம்ப - கைகளிற் றரித்த வளையல்க ளொன்றோடொன்றுராய்ந்து சத்திக்கவும், செம் பொன் கிண்கிணி கறங்க - மாற்றுயர்ந்த பொன்னூலாகிய சதங்கைக ளொலிக்கவும், மை வளர் குழன் மேல் வண்டு மருண்டு திரண்டு சூழ்ந்து இசை பாட - கருமை வளராநின்ற கூந்தலின் மீது வண்டுகள் மயங்கி ஒருங்கு திரண்டு சூழ்ந்து கீதம் பாடவும், மெய் வியர்வு அரும்ப - சரீரத்திலே வெயர்வை பொடிக்கவும், வெம் போர் விழிக் கயல் புரட்டி - குழையோடு பொரும் வெவ்விய கண்களாகிய கயல்களைப் பிறழச் செய்து, ஞாங்கர் இவ்வகை நின்று சுண்ணம் இடித்தனர்- அத் திருவீதியின் பக்கத்தே இந்தப் பிரகாரம் நின்று திருப்பொற் சுண்ணமிடித்தார்கள் எ—று.

விழிக்கயல் புரட்டி என்பதற்கு உலக்கை செல்லுமிடமெல்லாம் கட்பார்வையைச் செலுத்தி யென் றுரைத்தலுமொன்று. மடந்தைப் பருவம் மகளிரெழுவகைப் பருவத்து ளொன்று. அஃது பத்தொன்பதியாண்டளவான பருவம். சுண்டுச் சுண்ண மென்றது சுவாமிக்குச் சாத்தும் பரிமளப் பொடியை. மடந்தை பருவங் குறியாது நிற்றலு மொன்று. (௬௩)

அத்திரு வனையார் பாடல் கேட்டவ ரிசைத்த தாக
மெய்த்தமி ழதனு னன்கு மிகுதிருச் சுண்ண மோதி
மைத்திகழ் காவி னூடு வருதலு மாங்கே பொய்த
றத்தமின் முயலுங் காதற் சிறுமியர் தம்மைக் கண்டார்.

இ—ள்: அத் திரு அனையார் பாடல் கேட்டு - திருவாதவூரடிகள் இலக்குமிபோலும் அம்மகளிர் பாடுகின்ற வள்ளைப் பாட்டைக் கேட்டு, அவர் இசைத்தது ஆக - அம்மகளிர் கூறிய கூற்றாக, மெய்த் தமிழ் அதனுல் நன்கு மிகு திருச் சுண்ணம் ஓதி - மெய்ம்மையாகிய தமிழ் மொழியினூலே "முத்துநற்றாமம் பூமாலை தூக்கி" என்றெடுத்துப் "பொற் சுண்ணமிடித்துநாமே" என்றிறுதிதோறுமுடித்து நன்மைமிக்க திருப்பொற்சுண்ணமென்னுந் திருவாசகத்தைப் பாடியருளி, மைத் திகழ் காவின் ஊடு வருதலும் - கருநிறம் விளங்காநிற்கும் சோலையின்கட் செல்கின்றுழி, மருங்கே பொய்தல் தத்தமில் முயலும் காதல் சிறுமியர் தம்மைக் கண்டார் - தம் பக்கத்தே பொய்தல் விளையாட்டைத் தம்முட் கூடித் தனித்தனி முயலும் விருப்பத்தை யுடைய சிறு பெண்களைக் கண்டார் எ—று.

பொய்தல் மகளிர் விளையாட்டு. தந்தமின் எனற்பாலது தத்தமினென வலிந்து நின்றது. வள்ளை மகளிர் பரிமளப்பொடி இடிக்கும்போது

பாடும் உலக்கைப் பாட்டு". "கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து, பண்ணுறத் தெரிந் தாய்ந்த விப் பசுந்தமிழ்" ஆகலின் மெய்த் தமிழென விசேடிக்கப்பட்டது. (௬௪)

கண்டபின் வறிது கூறுங் கசட்டுரை சிறிது மற்றெ
மண்டனை யுரைமி னீரென் றவரவ ருரைத்த தாக
வெண்டரு திருத்தெள் ளேணந் திருவுந்தி யெழிற்றோ ணோக்கம்
பண்டிகழ் திருப்பூ வல்லிப் பாடல்பொன் னூசல் சொன்னார்.

இ—ள்: கண்ட பின் - திருவாதவூரடிகள் அச்சிறுமியர்களைக் கண்டருளிய பின்னர், நீர் வறிது கூறும் கசட்டு உரை சிறிதும் அற்று எம் அண்டனை உரைமின் என்று ஆங்கு அவர் உரைத்தது ஆக - நீவிர் கொன்னே பாடும் நரஸ்துதியாகிய குற்றமுடைய இப்பாடல்களை முழுவதுங் கைவிட்டு அண்ட வடிவினராகிய நஞ் சிவபெருமானையே பாடுங்களென்று அம்மகளிர் ஒருவர்க்கொருவர் கூறிய கூற்றாக, எண் தரு திருத்தெள்ளேணம் - "திருமாலும் பன்றியாய்ச் சென்று" என்றெடுத்து "நாந் தெள்ளேணங் கொட்டாமோ" என்றிறுதிதோறுந் தந்து நன்குமதிப்பைத் தருந் திருத்தெள்ளேணமும், திருவுந்தி - "வளைந்தது வில்லு" என்னுஞ் சொற்றொடரை முதலாகவுடைய திருவுந்தியாரும், எழில் தோணோக்கம் - "பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதி" என்று தொடங்கித் திருத்தோணோக்கமும், பண் திகழ் திருப்பூவல்லி - "இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே" என்று தொடங்கி "பூவல்லி கொய்யாமோ" என்றிறுதி தோறும் பிரயோகித்துப் பண் விளங்காநிற்கும் திருப்பூவல்லியும், பொன்னூசல் பாடல் சொன்னார் - "சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக" என்று தொடங்கிப் "பொன்னூசலாடாமோ" என்றிறுதிதோறும் அந்தித்துத் திருப்பொன்னூசலுமாகிய திருவாசகங்களைப் பாடியருளினார் எ-று.

கசடு - குற்றம். கட்டுரை உறுதிமொழியாகலின் ஈண்டது பாடமன்றென்க. கட்டுரை கற்பனைகதை என்பாருமுளர். மகா யுத்தத்தை வென்ற சுத்த வீரனொருவன் தன்றோள்களையும் மார்பையும் நோக்கிநோக்கிக் களித்தலியல்பு. அதுபோல ஈண்டுப் பிரபஞ்சப் போரை வென்ற களிப்பினாலே தோள்களை நோக்குதல் தோணோக்கமென்க. அது "ஏந்தெழிலாகத் தெம்முனிறந்தன னென்றுநீநின், சாந்தகன்மார்பந்திண்டோட்டலங்களு நோக்கி நோக்கிப், போந்தகைக் குரியாயல்லை போகலை போகலென்னா, நாந்தக மின்னுவீசி நராந்தகனவின்றுவந்தான்" என்பதனானு மறிக. (௬௫)

ஆங்கொரு சிறுமி தன்சீ ரன்னையை நோக்கிக் கூறுந்
தாங்கிசை மொழியே யாகத் தருமவை யீரைந் தோதி
ஞாங்கரின் முரலுந் தும்பி தன்னையு நயந்து நாதன்
பூங்கழல் வழுத்து கென்று புனிதர்கோத் தும்பி சொன்னார்.



இ—ள்: புனிதர் - அதிசுத்தராகிய திருவாதவூரடிகள், ஆங்கு ஒரு சிறுமி தன்சீர் அன்னையை நோக்கிக் கூறும் மொழியே ஆக - அங்ஙனமொரு சிறு பெண் தன்னற்றாயை நோக்கிக் கூறுங் கூற்றாக, தருமவை ஈரைந்து ஓதி - "வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்" என்றெடுத்துத் தகுதியையுடைய அன்னைப்பத்தைப் பாடியருளி, ஞாங்கரில் முரலும் தும்பி தன்னையும் (நோக்கி) - தம்பக்கத்தே மலர்மீதூதிப் பாடுகின்ற தும்பியையும் விளித்து, நாதன் பூம் கழல் நயந்து வழுத்துக என்று - சிவபெருமானது பொலிவாகிய திருவடிகளை விரும்பிப் பாடக்கடவையென்று, கோத் தும்பி சொன்னார் - "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த, நாவேறு செல்வியு நாரணனு நான்மறையு, மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச், சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என்றெடுத்துத் திருக்கோத்தும்பி என்னுந் திருவாசகத்தைப் பாடியருளினார் எ—று.

தாங்கிசை ஏந்திசை. தருமவை வைவிகுதிபெற்ற அஃறிணைப் பன்மைப் பெயர்: தருமவைகளாகிய ஈரைந்தென விரிக்க. நோக்கி என்பது பின்னுங் கூட்டப்பட்டது. தன்னையு மென்னுமும்மை சிறப்பும்மை; எச்சமுமாம்; பத்துச் செய்யுளுடைமையிற் பத்தென எண்ணுருபெயராயிற்றென்க. (௬௬)

பொங்கரி னிடையே வாழும் பொற்பிளங் குயிலே கூவி
யிங்கழை யெம்பி ரானை யென்பதுங் கிளியை நோக்கித்
திங்களஞ் சடையான் பாதஞ் செப்பெனத் தசாங்க மென்னுந்
தங்கிசைத் தமிழுஞ் சொன்னார் தந்நிக ரொருவ ரில்லார்.

இ—ள்: தம் நிகர் ஒருவர் இல்லார் - தமக்குநிக ரொருவருமில்லாத திருவாதவூரடிகள், பொங்கரின் இடையே வாழும் பொற்பு இளம் குயிலே - சோலையின் மத்தியில் வாழும் அழகையுடைய இளமையாகிய "கீதமினிய குயிலே", கூவி எம் பிரானை இங்கு அழை என்பதும் - நீ கூவி எம்முடைய சிவபெருமானை இங்கே அழையென்பதாகிய குயிற்பத்தும், கிளியை நோக்கித் திங்கள் அம் சடையான் பாதம் செப்பு என - அவ்வியல்பிற்றாகிய கிளியை, "ஏராரிளங்கிளியே" எனவிளித்து நீ பிறை தவழும் அழகிய சடையையுடைய சிவபெருமானது திருவடிகளைத் துதி யென்று, தசாங்கம் என்னும் தமிழும் சொன்னார் - திருத்தசாங்கமென்னும் திருவாசகமும் பாடியருளினார் எ—று.

பொங்கரினிடையே வாழும் பொற்பிளமையாகிய குயிலடை கிளிக்குங் கூட்டப்பட்டது. அவ்விருவகைப் புடைகளின் றன்மை விளக்குதற்குப் பொங்கரின் வாழுமென்னாது பொங்கரினிடையே வாழுமென்றார்.

இடை என்பதனை எழனுருபென்றலுமொன்று. தங்கிசைத் தமிழ் எந்திசைச் செப்பலோசையுடைய தமிழ்வெண்பா. தசாங்கம் - பத்தங்கம், அவை பெயர், நாடு, ஊர், ஆறு, மலை, வாகனம், படை, வாத்தியம், மாலை, கொடி என்பன. அது "புல்லு மலையாறு நாடூர் புனைதார்மா, கொல்லுங் களிறு கொடி, முரசு — வல்லகோ, லென்றிவை நஞ்செழுத்தோ டேலா வகை யுரைப்ப, நின்ற தசாங்கமென நேர்" "நேருந் தசாங்கத்தை நேரிசை வெண்பாவா, லீரைம்பது தொண்ணூ றீண்டெழுபா - னோரைம்பான், றேர்ந்துரைக்கிற் சின்னப்பூ வீரைந்தாற் செப்பினு, னோர்ந்த தசாங்க நிலை" என்பவற்றானறிக. (௬௭)

மண்ணிடத் தெம்மை யாண்ட வாழ்வினை யன்றி மற்றோ
ரண்ணலைக் கடவு ளென்பார்க் கஞ்சுதும் வினையே மென்றும்
பண்ணுறச் சிறந்த பாடல் பகர்ந்துநற் பன்ன சாலை
யொண்ணகர்ப் புறம்பு செய்தாங் கிருந்தன ருண்மை மிக்கார்.

இ—ள்: உண்மை மிக்கார் - மெய்யுணர்வின்மிக்க திருவாதவூரடிகள், மண்ணிடத்து எம்மை ஆண்ட வாழ்வினை அன்றி - இம்மண்ணுலகின்கண் வந்தெமை யடிமைக்கொண்ட பேரானந்தப் பெருவாழ்வாகிய சிவபெருமானை யல்லது, மற்று ஓர் அண்ணலைக் கடவுள் என்பார்க்கு வினையேம் அஞ்சுதும் என்று - மற்றொரு விசேட புருடனைப் பதியென்னும் பாவிகட்கே தீவினையையுடைய தமியேம் அஞ்சுதல் செய்வேமென்று, பண் உறச்சிறந்த பாடல் பகர்ந்து - "புற்றில்வாழரவுமஞ்சேன்" என்று தொடங்கி இறுதிதோறும் " அஞ்சுமாறே " என்று முடித்துப் பண்பொருந்தச் சிறந்த அச்சப்பத்தாகிய திருவாசகமும் பாடியருளி, நல் பன்னசாலை ஒள் நகர்ப் புறம்பு செய்து ஆங்கு இருந்தனர் - நல்ல பன்னசாலையை அழகிய அந்நகரின்புறத்தே அமைத்து அதன்கண் வீற்றிருந்தருளினார் எ—று.

ஈண்டும் எம்மையெனப் பன்மையாற் கூறியது பாண்டியனையு முளப்படுத்தற்கென்க. எச்சவும்மை பிரித்துக் கூட்டப்பட்டது. பன்னசாலை என்புழிப் பன்னம்-இலை. ஈண்டுண்மைமிகுதியென்றது ஞானபூசை செய்யும் விசேடவுணர்வை; ஞானபூசையாவது பிருதுவி முதலிய தத்துவங்களையெல்லாம் சடமெனக் காணும் பூதசுத்தியும், அவ்வாறுகாணுதல் திருவருளாலெனக் கருதும் ஆன்மசுத்தியும், அக்கருத்தானே கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுநிலை அத்திருவருளென நிற்குந் திரவிய சுத்தியும், ஸ்ரீபஞ்சாக்கரங்களை ஐந்துமுதலாகக் கருதும் மந்திரசுத்தியும், சிவபெருமான் யாண்டும் நிறைந்திருக்கிறானென வுணரும் இலிங்கசுத்தியுமாகிய இவ்வைந்தானும் கடவுளை வழிபட்டுத் துதிப்பதாம். அது "மண்முதல் கரணமெல்லா மறுவசத் தாக்கிஞானக் கண்ணினிலூன்றி யந்தக் கருத்தினா லெவையுநோக்கி, யெண்ணியஞ் செழுத்துமாறி யிறைநிறை வுணர்ந்து போற்றல், புண்ணியன்



றனக்கு ஞான பூசையாம் புகலுமன்றோ" என்பதனானு மறிக. திருவாதவூரடிகள் சிதம்பரத்தில் இங்ஙனம் பூசை செய்துகொண்டிருந்தாரென்பதை, "மாசறுமணிபோற் பன்னாள் வாசக மாலைசாத்திப், பூசனை செய்துபின்னர்ப் புண்ணிய மன்றுளாடு, மீசனதடிக்கீழெய்தி யீறிலா வறிவானந்த, தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்கவந்தார்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானறிக. சிதம்பரத்தினது திருவெல்லைக்குள் வசித்தல் ஆன்றோராசாரமன்றென்பதைத் திருத்தொண்டர் பெரியபுராணமுதலிய உண்மை நூல்களுட் காண்க. (௬௮)

பரம்பரப் பொருளா மிந்தப் பைந்தமி ழோதி வையம்
பெரும்பிறப் பகல வந்து பிறந்தவர் செய்தி யெல்லா
மிருந்தநற் றொகுதி தோறு மியம்பிநன் மகிழ்ச்சி யெய்தி
யருப்புகழ்த் தில்லை யுள்ளா ரியாவரு மதிச யித்தார்.

இ—ள்: வையம் பரம்பரப் பொருள் ஆம் இந்தப் பைந்தமிழ் ஓதிப் பெரும் பிறப்பு அகல வந்து பிறந்தவர் செய்தி எல்லாம் - உலகமானது முதனூல்களாகிய வேதசிவாகமங்களின் பாரம்பரியப் பொருளையுடைய இத்திருவாசகத்தைப் பாராயணஞ் செய்து அநாதியாயுள்ள பிறவிநீங்க வந்து திருவவதாரஞ் செய்த சென்மசாபல்லியராகிய திருவாதவூரடிகளது இவ்வத்தியற்புத சமாசாரங்களை யெல்லாம், அரும்புகழ்த் தில்லை உள்ளார் யாவரும் இருந்தநற் றொகுதி தோறும் இயம்பி நல் மகிழ்ச்சி எய்தி அதிசயித்தார் - அரிய புகழையுடைய தில்லைமாநகர வாசிகளெல்லாம் தாமொருங்கு குழீஇ யிருக்குஞ் சபைகடோறு மெடுத்தினிது பாராட்டி நல்ல மனமகிழ்ச்சியோ டதிசயமடைந்தார்கள் எ—று.

பரம்பரன் கடவுளாகலிற் கடவுளையே பொருளாகவுடைய பைந்தமிழென்றுமாம்; பைந்தமிழ் - செந்தமிழ். (௬௯)

தத்துவ முடிவி லாடுந் தாண்டவந் தம்முட் கண்டு
நித்தலுஞ் சென்று மன்றி னிமலனை யிறைஞ்சி யன்பா
லித்திற மையர் தில்லை யெல்லையி லிருந்தா ரிப்பாற்
புத்தரை வாதில் வென்ற புகழினை யுரைத்தல் செய்வாம்.

இ—ள்: தத்துவ முடிவில் ஆடும் தாண்டவம் தம் உள் கண்டு - முப்பத்தாறு தத்துவங்களின் முடிவில் நிகழும் சூக்கும நடனத்தைத் தம்முளே தரிசித்தும், நித்தலும் சென்று மன்றில் நிமலனை அன்பு ஆல் இறைஞ்சி - நாடோறுஞ் சென்று புறத்தே கனகசபையின்கணிகழும் நிருமலராகிய சபாநாயகரது தூல நடனத்தையுந் தரிசித்து அன்பினாலே வணங்கித் துதித்தும், இத்திறம் ஐயர் தில்லை எல்லையில் இருந்தார் - இந்தப்பிரகாரம் திருவாத

ஊரடிகள் சிதம்பரத்தினது திருவெல்லையின் மருங்கே வில்வாரணியத்து வீற்றிருந்தருளினர். அதுநிற்க, இப்பால் புத்தரை வாதில் வென்ற புகழினை உரைத்தல் செய்வாம் - இனி இவ்வடிகள் புத்தரை வாதில்வென்ற புகழையுடைய சரித்திரத்தை யாங் கூறுவாம் எ—று.

கண்டு, இறைஞ்சி என்னும் செய்தென்வாய்பாட்டு வினையெச்சங்களிரண்டும் எண்ணுப்பொருட்கண் வந்தன; "வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன" என்பதோத்தாகலின். தில்லை யெல்லையி லிருந்தாரென்றது விட்டலக்கணை; கங்கைக்கணிடைச்சேரி என்புழிபோல. அது, ஒன்றிடையிட்ட மேலைச் செய்யுளில் "நற் பன்னசாலை யொண்ணகர்ப்புறம்பு செய் தாங்கிருந்தனர்" என்றதனானு முணர்க. வில்வாரணியம் சிதம்பரத்துக்குக் கிழக்கே நான்கு மைல் தூரத்திலுள்ளது; இது பிற்காலத்திற் பித்தர்புரம் என வழங்கப்பட்டு இக்காலத்திற் பிச்சபுரம் என மருவி வழங்கப்படுகின்றது. பித்தர் மாணிக்கவாசகசுவாமிகள்; அது "பித்தன் வருமாலென்றிங் கெனைக் கண்டா, ரோடாவண்ணம் மெய்யன்பையுடையாய் நல்க வேண்டுமே" என்றற் றொடக்கத்தவ்வடிகடிருவாக்குக்களானு மறிக. தத்துவாதீதமாயுள்ளது பராசத்தியும் பராசத்தியின் மத்தியில் விளங்குவது பரானந்தமும், பரானந்த மத்தியில் விளங்குவது சிவானந்தமும், சிவானந்தத்தை விளைவிப்பது ஆனந்த தாண்டவமும், ஆனந்த தாண்டவஞ் செய்பவர் ஹரப்பிரபுவுமேயாகலின் தத்துவ முடிவிலாடுந் தாண்டவம் என்றார். அது "தத்துவாதீதே பராசத்தி" என்னும் சிவாகம வசனத்தானும், தத்துவமாடச் சதாசிவந் தானாடச், சித்தமுமாடச் சிவசத்திதானாட, வைத்தசராசரமாட மறையாட, வத்தனுமாடின னானந்தக் கூத்தே" என்பதனானு மறிக. பிண்டத்தினிகழும் சூக்கும நடன மாகலின் தரிசித்து வணங்கித் துதித்தென்னது வாளா கண்டென்றும், ஏனையது அண்டத்தின்கணிகழும் தூல நடனமாகலின் தரிசித்து வணங்கித் துதித்தென்பதுபட இறைஞ்சி என்றுங் கூறினர். (௭௦)

திருவம்பலச் சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௪௪௧.

---

உ

## புத்தரை வாதில்வென்ற சருக்கம்.

தாழுநீடு வேணியண்ண ருள்விடாவொர் மாதவ
னாழிஞால வண்மையுண்மை யாயுநேய நெஞ்சினன்
சோழநாடு கண்டுதில்லை தொழுதபின்பு பழுதிலா
வீழநாடு தன்னைநாட வெண்ணியங்கு நண்ணினன்.

இ—ள்: தாழு நீடு வேணி அண்ணல் தாள் விடா ஓர் மாதவன் - தாழ்ந்த நெடிய சடையையுடைய முழுமுதலாகிய சிவபெருமானது திருவடிகளை ஒருபோதும் மறவாத பெருமைபொருந்திய ஒரு தபோதனர், ஆழி ஞால வண்மை உண்மை ஆயும் நேய நெஞ்சினன் - சமுத்திரஞ் சூழ்ந்த பூமியின்கண் நானாதேசவளவிகற்பங்களை ஆராய்ந்தறியும் விருப்பம் பொருந்திய மனத்தையுடையவர், சோழ நாடு கண்டு தில்லை தொழுத பின்பு - அவர், சோழநாட்டு வளங்களைக் கண்டறிந்து தில்லைமாநகரைத் தரிசித்து வணங்கிய பின்னர், பழுது இலா ஈழ நாடு தன்னை நாட எண்ணி அங்கு நண்ணினன் - குற்றமற்ற ஈழநாட்டுவளங்களைக் கண்டறியும்படி கருதி அந்நாட்டையடைந்தார் எ-று.

தாழுநீடென்னும் காலங்கரந்த பெயரெச்சங்களடுக்கி வேணியென்னும் பெயர்கொண்டன. வண்மையுண்மை — வளமுடைமை. தேவாரம் பெற்ற திருக்கேதீச்சரம் திரிகோணசலம் என்னும் சிவஸ்தலங்களிரண்டும், திருப்புகழ்பெற்ற கதிர்காமமென்னும் சுப்பிரமணிய ஸ்தலமொன்றுமுடைமையின் ஈழநாட்டைப் பழுதிலா ஈழநாடென விசேடித்தார். அக்கருத்து, "திருக்கோவிலில்லாத திருவிலூருந் திருவெண்ணீறணியாத திருவிலூரும், பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும் பாங்கினொடு பலதளிகளில்லாவூரும், விருப்போடு வெண்சங்க மூதாவூரும் விதானமும் வெண்கொடியுமில்லாவூரு, மருப்போடு மலர்பறித்திட்டுண்ணாவூரு மவையெல்லா மூரல்ல வடவிகாடே" என்பதனானுமறிக. ஈழ நாட்டை, "நாற்றிசையுமாழ்கடலா நற்செந்தமிழ்வடக்காங், தேற்றமிகு சிங்களந் தென்கிழக்கா— நீற்றழகர், வாழுந்தளியிரண்டா மற்றெண்பதின்காத, மீழநாட்டெல்லையிதென்றெண்" என்பதனானுமறிக. இது கலிவிருத்தம். (௧)

நண்ணுமாதி மாதவ னலங்கொளீழ நாடனு
மன்னரு னிருந்தவூ ரடைந்துசே ரிடந்தொறு
மெண்ணிலாத காலம்வாழி தில்லைமன்றமென்றுகூ
ருண்ணிலாவு மன்பினு லுரைக்குமா தொடங்கினன்.

இ—ள்: நண்ணும் ஆதி மாதவன் - அங்ஙனம் வந்தடைந்த அத் தபோதனர், நலம் கொள் ஈழ நாடன் ஆம் அண்ணல் இருந்த ஊர் அடைந்து-பலதிற நன்மைகள் பொருந்திய ஈழநாட்டையுடைய அரசனிருக்கும் இராசதானியையடைந்து, சேர் இடந்தொறும் தில்லை மன்றம் எண் இலாத காலம் வாழி என்று கூர் உள் நிலாவும் அன்பினாலுரைக்குமா தொடங்கினன் - தாம் போயிருக்கு மிடங்கடோறும் சிதம்பரத்துள்ள பொன்னம்பலம் நீடூழிவாழுக என்று மிகத் தம்மனத்தின்கணிகழும் பேரன்பினாலே சொல்லும்படி தொடங்கினார் எ—று.

உரைக்கு மாறென்பது உரைக்குமா எனச் செய்யுண் முடிபெய்தி நின்றது. திரிலோகராச பூசிதனாகிய இந்திரனுக்காக விசுவகர்மா என்னும் தேவதபதியினா லுண்டாக்கப்பட்டமையும், இருநிதிக் கிழவனாகிய குபேரனுக்கு நெடுங்கால மிராசதானியாயிருந்தமையும், குற்றமற்ற மாணிக்கம் உயர்வாகிய முத்து முதலிய ரத்தினங்களுடைமையும், தன்மாட்டுள்ள பதார்த்தங்களின் சுவை மிகுதியும், தன்கண் வாழ்வார்க்கு மிகவும் சரீராரோக்கியங் கொடுத்தலும், இன்னோரன்ன பிறவும்பற்றி நலங்கொளீழ நாடு என விசேடித்தார். முன் எனப் பொருள்படும் ஆதி என்பது தாற்பரியத்தாற் சுட்டுப்பொருண்மேலதாயிற்று; முதன்மை என்றுமாம். (உ)

சென்றுசேரி டந்தொறுஞ் சிறந்தசெம்பொ னம்பல
மென்றுகூறி வைகுநாளி லீழநாடன் முன்புபோய்
நன்றிலாத மூகர்தா நயந்திறைஞ்சி மன்னகே
ளொன்றியா முரைத்துமென் றுவந்திவ்வாறு கூறினார்.

இ—ள்: சென்று சேர் இடம் தொறும் சிறந்த செம் பொன்னம்பலம் என்று கூறி வைகு நாளில் - அத் தபோதனர் தாம் போயிருக்கு மிடங்கடோறும் அழகிய மாற்றுயர்ந்த "பொன்னம்பலம் நீடூழி வாழுக" வென்றிங்ஙனம் உச்சரித்துக்கொண் டிருக்கப்பெறு மிந்நாட்களில் ஒரு நாள். நன்று இலாத மூகர் ஈழ நாடன் முன்பு போய் நயந்து இறைஞ்சி - நல் வாக்குக்கு ஊமர்களாகிய புத்தர்கள் சிலர் அவ்வீழதேயத் தரசன் முன்னரே போய் அவனை விரும்பி வணங்கி, மன்ன யாம் ஒன்று உரைத்தும் உவந்து கேள் என்று இவ்வாறு கூறினார் - நம்மரசனே யாமொன்று கூறுதும் அதனை நீ மனமகிழ்ந்து கேட்பாயாகவென்று இவ்வாறு கூறுவாராயினார் எ—று.

நன்று ஒன்று என்பன ஆகுபெயர். நன்றிலாத மூகர் என்பதற்கு நல்வாக்குக்கு ஊமர்கள் என்றது தாற்பரியப் பொருள் என்க. ஊமர் - ஊமைகள். (௩)

ஒற்கமில்க ருத்தனா மொருத்தனிந் நகர்க்குளா
னற்கலன்க ளக்குமாலை நாளுமுண்ப தையமே



நிற்கினும்மி ருக்கினுந் நிலாவுசெம்பொன் மன்றெனுஞ்
சொற்கிளந்து ரைக்குமென்று சொல்லிமுன் வணங்கினார்.

இ—ள்: ஒற்கம் இல் கருத்தனும் ஒருத்தன் இந் நகர்க்கு உளான் - மிக்க வொழுக்கத்தையுடைய ஒரு சைவன் இந்நகரத்தின்கண் வந்திருக்கின்றான், நல் கலன்கள் அக்குமாலை - அவனுக்கு நல்ல ஆபரணங்கள் உருத்திராக்ஷ மாலிகைகள், நாளும் உண்பது ஐயமே - அவன் நாடோறும் உண்பது பிக்ஷையே, நிற்கினும் இருக்கினும் நிலாவு செம் பொன் மன்று எனும் சொல் கிளந்து உரைக்குமென்று முன் சொல்லி வணங்கினார் - அவன் நிற்கும்போது மிருக்கும்போதும் விளங்காநின்ற "பொன்னம்பலம் நீடூழி வாழுக" என்னுஞ் சொல்லை விதந்துரைக்கும் என்றெதிரே கூறி மறித்தும் வணங்கினார் எ—று.

ஒற்கம் ஈண்டொடுக்கம். கருத்தன் - செய்பவன். தலைமை பற்றிய வழக்கான், அது நல்லொழுக்கத்தின் மேலதாயிற்று. (௪)

வேறு.

இன்றிங் கவனைக் கொணர்வீரென் றிசைத்தா னிருப னாங்கவருஞ், சென்றன் புடையாய் வருகவுனை யழைத்தான் றிறன்மன்னவனென்ன, நன்றென் பதுவுந் தீதுமின்றி நாளும் பலியேற்றுண்பதொழிந், தொன்றுங் கருதா ரொடுங்கரும முளதோ வேந்தற் கெனவுரைத்தான்.

இ—ள்: நிருபன் இன்று அவனை இங்குக் கொணர்வீர் என்று இசைத்தான் - அரசன் அதுகேட்டு இத்தினம் அவனை இங்கே அழைத்துக்கொடு வருக வென்று பணித்தான்; ஆங்கு அவரும் சென்று அன்பு உடையாய் திறன் மன்னவன் உனை அழைத்தான் வருக என்ன - அவ்விடத்தவர்களுஞ் சென்று அன்பை யுடையவரே வலியையுடைய நம்மரசன் உம்மை அழைக்கின்றான் வருக என்று கூற, நன்று என்பதுவும் தீதும் இன்றி நாளும் பலி எற்று உண்பது ஒழிந்து ஒன்றும் கருதார் ஒடும் வேந்தற்குக் கருமம் உளதோ என உரைத்தான் - அதற்கவர் இது நல்லது இது தீயது என விஷயங்களில் வரும் விருப்பு வெறுப்புக்கள் சிறிதுமின்றி நாடோறும் பிச்சை யேற்றுண்ணும் இஃதொன்றல்லது பிறிதொன்றுஞ் சிந்தியாத சர்வசங்க பரித்தியாகிகண் மாட்டும் நம் மரசனுக்கு லௌகீக சம்பவ முண்டோ என்று கூறினார் எ—று.

பிறர் கடத்தற்கரிய ஆணையையுடைய அரசனென்பார் திறன் மன்னவனென்றார். அரசன் பரசமயி யாகலின், அவனுழைச் சென்று காணும் விருப்பமற்ற தபோதனர் தம்மைச் சர்வசங்க பரித்தியாக நிலையில் வைத்தோதி மறுத்தாரென்பது கருத்தென்க. "துறவிக்கு வேந்தன் றுரும்பு"

ஆகவின் அதுபற்றி இங்ஙனம் கூறினரென்பது கருத்தென்றலு மொன்று. இது மூன்றுஞ்சீரும் ஆறுஞ்சீரும் காய்ச்சீரும் ஏனை நான்கும் மாச்சீருமாய் வந்த அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தமென்க. (௫)

ஊரிற் பலிகொண் டுண்கினுமற் றொன்றுங் கரும மில்லெனினும்
பாரிற் பயில்வா ருயிர்புரத்தல் பரமா நிருபர்க் காதலினல்
வேரிற் கமழ்தா ரெம்மரசன் றன்பால் வருதல் வேண்டுமெனச்
சீரிற் றிகழ்வேற் றூதருடன் சென்றா னொன்றுந் தீமையிலான்.

இ—ள்: ஊரில் பலி கொண்டு உண்கினும் - ஊரிலே பிக்ஷையேற்றுண்கினும், மற்று ஒன்றும் கருமம் இல் எனினும் - உலகத்துப் பிறிதோர் காரியமுமில்லையெனினும், பாரில் பயில்வார் உயிர் புரத்தல் நிருபர்க்குப் பரம் ஆம் ஆதலினல் - தமது நாட்டின்கண் சஞ்சரிக்கும் பிரசைகளது உயிரைப் பாதுகாத்தல் அதனையாளும் அரசருக்கு முக்கிய கடன்மையா மாதலினலே, வேரில் கமழ் தார் எம் அரசன் தன் பால் வருதல் வேண்டும் என - வெட்டிவேரினற் கட்டப்பட்டு நறுமணங் கமழு மாலையையுடைய நம்மரசன்மாட்டு நீர் தப்பாது வருதல் வேண்டுமென்று தூதுவர் கடிந்து கூற, ஒன்றும் தீமை இலான் சீரில் திகழ் வேல் தூதர் உடன் சென்றான் - ஒரு தீமையுமில்லாத அத் தபோதனர் அழகுடன் விளங்கும் வேலையுடைய அத் தூதுவரோடு சென்றார் எ—று. (௬)

முந்தும் பிடக மூன்றுணர்ந்து செயிர்நான் கொழிந்து முதுசீல
மைந்தும் புனைந்து பாரமிதை யாறைந் தடக்கு மியல்புடையோன்
கந்தங் கெடுதன் முத்தியெனக் காட்டுங் குரவ னுடனிருப்பச்
சந்தஞ் சிறந்த புயனிருப னிருந்தான் றானை புடைசூழ.

இ—ள்: முந்தும் பிடகம் மூன்று உணர்ந்து - ஆதியான பிடக நூன் மூன்றையுஞ் சந்தேக விபரீதமறக் கற்றுத் தெளிந்து, செயிர் நான்கு ஒழிந்து - குற்றங்க ணான்கையுந் தவிர்ந்து, முது சீலம் ஐந்தும் புனைந்து- பழைய சீலங்களைந்தையும் மேற்கொண்டு, பாரமிதை ஆறைந்து அடக்கும் இயல்பு உடையோன் - பாரமிதை முப்பதையு மடக்கும் இயல்புடையனகிய, கந்தம் கெடுதல் முத்தி எனக் காட்டும் குரவன் உடன் இருப்ப - பஞ்ச கந்தமும் தீரக் கெடுவதே முத்தியெனச் சாதிக்கும் பௌத்தாசாரியன் ஒருங்கு இருப்பவும், தானை புடைசூழ - சேனைகள் பக்கத்தே சூழவும், சந்தம் சிறந்த புய நிருபன் இருந்தான் - உத்தமலக்கணஞ் சிறந்த புயங்களையுடைய புத்தராசா வீற்றிருந்தான் எ—று.

இயல்புடையோனகிய குரவன், காட்டுங் குரவன் எனத் தனித்தனி முடிக்க. பிடகநூன் மூன்றாவன: விம்மாயபிடகம், அபிதன்மபிடகம், சூத்திர பிடகமென்பன. இவற்றுள் விம்மாய பிடகத்தை நீக்கி அபிநயபிடகமென்பதொன்று சேர்த்து மூன்றென்பாரும், அதனையு நீக்கி விநயபிடகமென்பதொன்று சேர்த்து மூன்றென்பாருமுளர். செயிர் நான்காவன: ஜாத்மவாதம், கர்த்திருத்துவபாவவாதம், ஆகாசகாலதிக்கான்ம அரூபத்திரவிய பாவவாதம், அவயவகுணபதார்த்தபாவவாத மென்பன. இவற்றுள் ஜாத்மவாதமாவது கொலையையுடன்படல். கர்த்திருத்துவபாவ வாதமாவது கர்த்தாவையுடன்படல். ஆகாசகாலதிக்கான்ம அரூபத்திரவியபாவவாதமாவது ஆகாசமுதலிய அரூபத்திரவியங்களை உடன்படல். அவயவகுண பதார்த்த பாவவாதமாவது அவயவம் குணம் என்னும் பதார்த்தங்களைத் திரவியங்களுக்கு வேறென உடன்படல். இந்நான்கும் அவர்மதத்துக்குக் குற்றங்களாகலின் செயிர் எனப்பட்டன. சீலமைந்தாவன அகிம்சை, பிரமசரியம், அஸ்தேயம், சங்கிரகம், சத்தியம், என்பன. சீலமைந்தின்னுமொருபிரகாரம் வருமாறு:—கொல்லாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை. கள்ளாமை, காமமின்மை என்பன. இவற்றோடு தரையிற்றுயிலாமை, சுகந்த வர்க்கந் தரியாமை, இரவிலுண்ணாமை என்னும் மூன்றையும் சேர்த்துச் சீலம் எட்டென்றலும் அவர் மதசித்தாந்தமென்க. பாரமிதையாறைந்தாவன:—தானம், சீலம், பொறை, நிஷ்கர்மம், பிரக்ஞை, வீரியம், சத்தியம், துணிவு, மயித்திரி, ஆசையறுதி என்னும் தசபாரமிதைகளும் உயிருறுப்புப் பொருணோர்ச்சியான் வரும் முப்பதுமாம். அது "அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப், பொருண்முழுதும் போதிநிழனன்குணர்ந்த முனிவரன்ற, னருண்மொழியா னல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெறியாம் பிறநூலு மயக்கறுக்குமாறுளதோ" என்னும் அம்மத சித்தாந்தத் தொகையானுமறிக. பாரம் - கரை. இதை—அடைந்து. இனிப் பார்மீதே யாறைந்தடக்கு மியல்புடையோன் எனப் பாடமோதி, இந்நிலவுலகின் கண்ணே உட்பகைகளாறனையம் பொறிகளைந்தையும் சேர அடக்கு மியல்புடையவன் எனப்பொருளுரைத்தலு மொன்று. உட்பகை ஆறாவன: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. பொறிகளைந்தாவன: சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்பன. இனி ஐந்தென்பதற்குச் சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களாகிய அவற்றின் புலனெனக் கொள்ளினு மமையும். பஞ்சகந்தங்களாவன: உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமென்பன. இவற்றுள் உருவகந்தமாவது, பூதவுரு நான்கு உபாதாயவுரு நான்கென்னு மெட்டின் கூட்டமாம். பூதவுரு நான்காவன பிருதுவி, அப்பு, தேயு, வாயு என்பன. உபாதாயவுரு நான்காவன: கடினம், ரசம், உருவம், கந்தம் என்பன. வேதனை கந்தம்: குசலவேதனை, அகுசலவேதனை குசலாகுசல வேதனை என மூன்றாம். இவை முறையே சுகவறிவு, துக்கவறிவு, சுகதுக்கவறிவு என்னும் பொருளன. குறிப்புக்கந்தமாவது பொறி ஐந்தும் சித்தம் ஒன்றுமாகிய ஆறுமாம். பாவனகந்தமாவது புண்ணியம் பத்தும் பாவம் பத்துமாகிய இருபதுமாம். இவற்றுட் புண்ணியம் பத்தாவன: அருள், அவாவின்மை, தவவிச்சை, இனியவை கூறல், உண்மை கூறல், பயனுள கூறல், அறங் கூறல்,

வணக்கம், ஈகை, தவஞ்செயல் என்பன. இவற்றுண் முதன் மூன்றும் மனத்தானும், இடைநான்கும் வாக்கானும், கடைமூன்றும் காயத்தானும் நிகழ்வன. பாவம் பத்தாவன: தீச்சிந்தை, ஆசை, கோபம், கடுஞ்சொல், பொய்யுரை, பயனில கூறல், குறளை கூறல், களவு, கொலை, பயனில செயல் என்பன. இவற்றுள்ளும் முதன் மூன்றும் மனத்தானும் இடைநான்கும் வாக்கானும், கடை மூன்றும் காயத்தானும் நிகழ்வன. விஞ்ஞான கந்தமாவது புலனைந்தும் சிந்தனையொன்றுமாகிய முன்னைய ஆறுனுமறியு மாறறிவுமாம். உருவகந்தமெட்டு, வேதனகந்தம் மூன்று, குறிப்புக்கந்தம் ஆறு, பாவனகந்தம் இருபது, விஞ்ஞானகந்தம் ஆறு. ஆகப் பஞ்ச கந்த விரி இந்நாற்பத்துமூன்றுமென்க. அது "எட்டவை யுருவமூன்று வேதனை யாறுஞான, மொட்டிய குறிப்போராறு செய்கையுமிருபதாகக் கட்டியபஞ்ச கந்தங் கணத்தினிற் பங்கமாகித், தொட்ட நாற்பத்துமூன்றுஞ் சுத்த நூற்றுணிவதாமே" என்பதனானுமறிக. கந்தம் சமூகம் என்னும் பொருட்டு. கந்தங்கெடுதல் முத்தியெனக் காட்டுங் குரவ னென்றார்; இப் பஞ்ச கந்தமுங் கெடக் கூடும் முத்தி கந்தவீடென்பதும், இவை கெடாதுகூடும் முத்தி குற்றவீடென்பதும் அம்மத சித்தாந்தமாகலினென்க. இனிப் பௌத்தமத உற்பத்தி எங்ஙனமெனின், முன்னோர் காலத்துத் திரிபுரத் தசுரர் செய்யும் கொடுமைக்காற்றாது இந்திரன் முதலிய தேவர்கள் விஷ்ணுவைச் சரண் அடைந்து விண்ணப்பஞ் செய்ய, அவர் மேருவின் வடபாற் சென்று ஓர் யாகஞ்செய்து, அவ்வியாகத்தினின்றும் பல பூதகணங்களை எழுப்பி, அவர்களோடு யுத்தஞ்செய்யும்படி அனுப்பினார். அப்பூதகணங்கள் சென்று யுத்தஞ் செய்து சிவபத்தியிற் சிறந்த அவ்வசுரர்க் காற்றாது உடைந்து மீண்டன. அதனை அறிந்த விஷ்ணு இனி உபாயத்தால் இவரை வெல்ல வேண்டும் என்று கருதிப் புத்த சமயம் எனப் பெயரிய ஓர் சமயத்தை உண்டாக்கித் தாமும் புத்தகுரு வுருக்கொடு சென்று அதனைப் போதித்துப் பரப்பிச் சைவ மதக் கொள்கையை நீக்கினார். இதனானே திருமால் உபவவதாரம் பதினைந்தனுட் பௌத்தாவதாரமு மொன்றாயிற்று. இதுவே அதனதுற்பத்தியென்க. அது "மாயனிடம் புத்தவிரு ளடைந்தோட வந்தொருவர், சேயவிளம் பரிதியெனச் சிவனருளா லவதரித்தார்" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானும், "சாக்கிய குருவின் மாய னங்கவர் புரத்திற் சார்ந்து, கோக்களிற் றரிவை போர்த்த கொன்றைவே ணியன்மே லன்பு, நீக்கி யவ் வசுரர் தம்மை நிகழ்த்துபுன் சமயந் தன்னி, லாக்கிநல் லிலிங்க பூசை யறிவொடு மகற்றி னனே" என்னுங் கூர்மபுராணச் செய்யுளானும், விஷ்ணுபுராணத்தானுமறிக. இனிப் பௌத்தமதக் கொள்கையைச் சங்கிரகமாக ஒருவாறு விளக்குதும்: பௌத்தர் தண்ணங்காரன், மகாவீரன் என்றிவர் முதலாக இருபதிற்றொருவர். இவர் யோனிவாய்ப்பட்டுப் பிறத்தல் குற்றமென்று தாயாரது வயிற்றின் விலாப்புற இடைபிளக்கப் பிறந்தனர். பௌத்தர்க்குப் பிரமாணம்: பிரத்தியக்ஷம், அனுமானம் என்னுமிரண்டுமே. ஆகமப்பிரமாணம் அவர்களுக்கின்று. இவ் விரு பிரமாணமுங் கொண்டு



அறியப்படும் பொருள் ஞானமும் ஞேயமுமென இருவகைப்படும். இவை இரண்டுங் கணந்தோறும் சந்தானத்தே பங்கப்படுதலாகிய கணபங்கமுறும். சந்தானம் - தொடர்ச்சி. கணமாவது எட்டுத் தாமரையிதழை ஊசி ஊடறுக்குங் காலம். பங்கம் - சிதைவு. இக்கணபங்கம் வாயுசந்தானம், தீப சந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என நான்கு வகைப்படும். இவற்றுள் வாயுசந்தானம் வாயுவினொழுக்கம்; தீப சந்தானம் தீபத்தின் சுடரழிவு. தாராசந்தானம் நீரொழுக்கம். பிபீலிகாசந்தானம் எறும்பினொழுக்கம்; இவற்றைக் கெட்டுக் கெட்டே போதல், கெட்டுக்ஷயித்தல், கெட்டுவர்த்தித்தல், கெட்டொத்து நிற்றல் எனவும் வழங்கும். இவற்றாற் போந்த பொருள் உலகம் கணந்தோறும் வேறுபாடுற்றுக்கொண்டேயிருக்குமென்பதாம். இனி மேற்சுட்டிய ஞானமாவது அவ்விரு பிரமாணமுமாம். ஞேயமாவது அவ்விரு பிரமாணங்கொண்டறியப்படும் பதார்த்தமாம். அவை உருவம், அருவம், வீடு, வழக்கு என நான்குவகைப்படும். அவற்றுள் உருவம் மேலேகாட்டிய பூதவுரு, உபாதாயவுரு என்னும் இருதிறத்தனவுமாம். அருவம் சித்தருவம், கணவருவமென இருவகைப்படும்; சித்தருவமாவது மேலேகாட்டிய குறிப்புக்கந்தமாம். கணவருவமாவது மேலே காட்டிய விஞ்ஞானகந்தமாம். வீடு குற்றவீடு, கந்தவீடு என இருவகைப்படும். குற்றவீடாவது பஞ்சகந்தமுங்கெடாது கூடும் முத்தியாம். கந்தவீடாவது அவை கெடக்கூடும் முத்தியாம். அது "வீட்டின் மருவியல் குற்றங் கந்தமென வழங்கப்படும்" என்னும் பாபக்கச் செய்யுளானுமறிக. வழக்கு உள்வழக்கு, இல்வழக்கு என இரு திறப்படும். இவற்றுள் உள்வழக்கானது தொகையுண்மை வழக்கு, மிகுத்துரையுண்மைவழக்கு, தொடர்ச்சியுண்மை வழக்கு, உள்ளது சார்ந்தவுள்வழக்கு, இல்லது சார்ந்த உள்வழக்கென ஐந்துபிரகாரமும்; இல்வழக்கானது தொகையின்மை வழக்கு, மிகுத்துரையின்மைவழக்கு, தொடர்ச்சியின்மைவழக்கு, உள்ளது சார்ந்த இல்வழக்கு இல்லது சார்ந்த இல்வழக்கு என ஐந்துபிரகாரமுமாம், உள்ளதை உண்டென்றல் உள்வழக்கு. உள்ளதை இன்றென்றல் இல்வழக்கு. இவ்விரண்டனுள் இல்வழக்கு முன்னர் வாதத்துட் போதருமென்க. (எ)

உடுக்குந் தனிவெண் கோவணமு மொளிர்பொக் கணமு மாத்திரையு
மெடுக்குஞ் சதங்கை நெடும்பிரம்பு மிலகுந் திலதத் திருமுகமு
மடுக்குஞ் சிறுபுன் முறுவலுநின் றசையுஞ் சடையுங்கண் டரசன்
றிடுக்கங் கொளவந் தருகா விருந்தான் றிருவம் பலமென்று.

இ—ள்: உடுக்கும் தனிவெண் கோவணமும் - அப்பொழுது அத்தபோதனர் அரையிற் கட்டிய சுத்த வெண்மையாகிய ஒரு கௌபீனமும், ஒளிர் பொக்கணமும் - தோண்மேல் விளங்காநின்ற பிக்ஷைப்பையும், மாத்திரையும் - காதுகளிலே தூங்கும் ஆறுகட்டி சுந்தரவேடமும்,

எடுக்கும் சதங்கை நெடும்பிரம்பும் - கையிலே தாங்கும் சதங்கை ஒலிக்கும் நெடிய பிரம்பும், இலகுந் திலதத் திருமுகமும் - நெற்றியிலே பிரகாசிக்குந் திலதப்பொட்டையுடைய திருமுகமும், அடுக்கும் சிறு புன்முறுவலும் - பதிப்பொருட் டியான சுகத்தால் இடையிடையே வாயின்கணரும்புங் குறுமுறுவலும், நின்று அசையுஞ் சடையும் கண்டு அரசன் திடுக்கம்கொள வந்து - பின்றாழ்ந்து நின்றசையுஞ் சடையுமாகிய இவைகளைப் புத்தராசன் கண்டு மனமுஞ் சரீரமு மொருங்கே அஞ்சிக் கம்பிக்கும்படி வந்து, திருவம்பலம் என்று அருகா இருந்தான் - "பொன்னம்பலம் நீடூழி வாழுக" என்று உச்சரித்துக்கொண்டு சமீபமாக இருந்தார் எ—று.

சிறுபுன்முறுவல் நாகிளங்கமுகென்புழிப்போல ஒருபொருட் பன்மொழி. ஆறுகட்டி சுந்தரவேடம் துறவிகளது காதணி விசேடம். அது "வேடங் காதணிகுழையின்சீரும்" என்பதனுனுமறிக. ஈண்டச்சமென்றது அருளச்சத்தை. (அ)

இருக்குந் தலைவன் றனைநோக்கி யிப்போ தேயம் பலமென்றிங்
குரைக்குந் தன்மையெவன்கொலெனவுலகாள்பவனுக்கவனுரைப்பான்
பெருக்கும் புகழாற் றிகழ்வளவன் பிரியா விருகட் பேரருளாற்
புரக்குந் திருநாட் டறந்தழைக்கும் புலியூ ரென்பதொன் றுளதால்.

இ—ள்: இருக்கும் தலைவன் தனை நோக்கி - இங்ஙனம் வந்திருக்குஞ் சைவ தபோதனரை அரசன் நேர்நோக்கி, இப்போது அம்பலம் என்று இங்கு உரைக்கும் தகைமை எவன் கொல் என - இத்தருணத்து நீர் "பொன்னம்பலம்" என்றிங்குச்சரித்தமை என்கொலோவென்று வினவ, உலகாள்பவனுக்கு அவன் உரைப்பான் - அவ்வரசனுக் கவர் விடை கூறுவாராயினர், பெருக்கும் புகழால் திகழ் வளவன் பிரியா இரு கண் பேர் அருளால் புரக்கும் திரு நாட்டு அறம் தழைக்கும் புலியூர் என்பது ஒன்று உளது - தன்குலத்தோர் பெருகச் செய்த புகழான் விளங்குஞ் சோழராசா தம்மினின்று மெஞ்ஞான்றும் பிரிதலில்லாத இரு கண்களின் பூரண கிருபாநோக்கத்தாற் பாதுகாக்கின்ற காவிரி நாட்டின்கண்ணே தன்கண் வாழ்வார் செய்யுந் தருமம் ஒன்று பலவாக விருத்தியெய்தப்பெறும் சிதம்பரம் என்றொரு சிவஸ்தலம் இருக்கின்றது எ—று.

குலத்தோர் பெருக்கிய புகழென்றது புக்கடைந்த புறவின் பொருட்டுத் துலைபுகன் முதலாயினவற்றை. "குழுவின் வந்த குறுநிலவழக்குச் சான்றோர் செய்யுட்கண்ணும் வழக்கின்கண்ணும் வாராது" என ஆசிரியர் சேனாவரையர் விலக்குதலின், இப்போ என்பது சான்றோர் செய்யுட் சொல்லும் வழக்குச் சொல்லும் ஆகாமையின், இப்போ திருவம்பலம் என்பது பாடமன்றென மறுக்க. (௯)



அந்தப்பதிமுன் றில்லைவன மஃதே புவன மனைத்தினுக்கு
முந்தக் கிளருந் தெய்வதல மதனான் மூலத் தானமதா
மிந்தப் புவிக்கு நாப்பணென விலங்கும் பொதுவா மிடமதனிற்
சந்தத் தனத்தா ளுமைகாணத் தலைவன் றிருத்தாண் டவம்புரியும்.

இ—ள்: அந்தப்பதி முன் தில்லை வனம் - அந்த ஸ்தலம் முன்னரே தில்லைவனம், அதுவே புவனம் அனைத்தினுக்கும் முந்தக் கிளரும் தெய்வ தலம் - அதுவே சகல புவனங்களுக்கும் முதற்கணுண்டாகிய சிவஸ்தலம், அதனால் அது மூலத்தானம் ஆம் - அந்தக் காரணத்தால் அது மூலஸ்தானமென்று சொல்லப்படும், இந்தப் புவிக்கு நாப்பண் எனப் பொது இலங்கும் - இப் பூமிக்கு நடுவாகக் கனகசபை அங்கே விளங்குகின்றது, அதனில் சந்தத் தனத்தாள் உமை இடம் காணத் தலைவன் திருத்தாண்டவம் புரியும் - அந்தக் கனகசபையிலே சந்தனக் குழம்பு திமிர்ந்த ஸ்தனங்களையுடைய சிவகாமியம்மை வாமபாகத்தினின்று தரிசிக்கச் சபாநாயகர் பஞ்சகிருத்தியத்துக்குக் காரணமாகிய அநவரததாண்டவஞ் செய்தருளுவர் எ-று.

திருமூலஸ்தானம் திருமூலட்டானமென இக்காலத்து மரீஇயிற்று; தானம் - நிலையானது எனினுமாம். பொன்னம்பலம் கனகசபை என்பன ஒரு பொருட் சொற்கள். பொதுவா மிடமதனில் என்றிருந்தவாறு வைத்துப் பொருள்கொள்ளினு மமையும். (௧௦)

மன்னுந் திறலான் மனுமைந்தன் வடிவிற் றொழுநோய்
மாற்றிநெடும், பொன்னங் கிரிபோ லுருநல்கும் புனிதத் தட
முண் டதின்மூழ்கி, முன்னம் புவியிற் றவமொன்று முயலாதவரு
மைந்துதொழி, லென்னுந் திருத்தாண் டவம்புரிதல் கண்டா
லுலகி னிப்பிறவார்.

இ—ள்: மன்னும் திறலான் மனு மைந்தன் வடிவில் தொழுநோய் மாற்றி நெடும் பொன்னம் கிரிபோல் உரு நல்கும் புனிதத் தடம் உண்டு - நிலைபெற்ற வலியையுடைய சிங்கவன்மனென்னு மனுகுமாரனது சரீரத்தின்கணுள்ள குட்டநோயை நீக்கி நெடிய மேருவைப்போலும் பொன்மயமாகிய திருமேனியைக் கொடுத்து அவனை இரணியவன்மன் ஆக்கிய பரிசுத்தம் பொருந்திய சிவகங்கை யென்னும் ஒரு தீர்த்தம் அங்கே இருக்கின்றது, முன்னம் புவியில் தவம் ஒன்றும் முயலாதவரும் அதில் மூழ்கி ஐந்து தொழில் என்னுந் திருத்தாண்டவம் புரிதல் கண்டால் - பூர்வ சன்மங்களிலே இப் புண்ணிய பூமியில் ஒரு சிறிதுந் தவஞ்செய்யாத பாவிகளும் அத் தீர்த்தத்திலே விதிப்படி ஸ்நானஞ்செய்து பஞ்சகிருத்தியத்துக்கு நிமித்தமாகிய திருநிருத்தத்தை அங்கே தரிசிக்கப்பெற்றால், உலகில் இனிப் பிறவார் - அவர்கள் இவ்வுலகின்கண் வந்து இனி ஒருபோதும் பிறவார்கள் எ—று.

பரமுத்தி யடைவரென்பதாம். ஐந்து தொழிலென்னும் திருத்தாண்டவம் என்றது காரண காரிய வுபசாரம். (௧௧)

நண்ணும் பிறவி யொழித்துயிர்க்கு நலஞ்சேர் முத்தி கொடுப்
பதற்கிங், கெண்ணுஞ் சமயக் கடவுளரில் யானேவல்ல னெனப்
பதமேல், வண்ணந் திகழ்பொற் கழலணிந்து மதுகைக் கொடியுங்
கட்டியருட், பெண்ணம் பிகைகண் காணநடஞ் செய்வானந்தப்
பெருந்தருக்கால்.

இ—ள்: நண்ணும் பிறவி ஒழித்து உயிர்க்கு நலம் சேர் முத்தி கொடுப்பதற்கு இங்கு எண்ணும் சமயக் கடவுளரில் யானே வல்லன் என - அநாதியாக வரும் பிறவியை நீக்கி ஆன்மாக்கட்குப் பரமுத்தியைக் கொடுத்தற்கு ஈண்டு நன்குமதிக்கப்படும் பலசமய கருத்தாக்களுள் நாமே வல்லே மென்பதற் கறிகுறியாக, பதமேல் வண்ணம் திகழ் பொன் கழல் அணிந்து மதுகைக் கொடியும் கட்டி - தந்திருவடியின்மீது அழகுவிளங்காநின்ற பொன்னாலாகிய வீரக்கழலைத் தரித்து விருதுக்கொடியையுங் கட்டி, அந்தப் பெரும் தருக்கால் - அவ் வதுல சாமர்த்தியத்தினால், அருள் பெண் அம்பிகை கண் காண நடம் செய்வான் - அருட்சத்தியாகிய சிவகாமியம்மை தரிசிக்க அங்ஙனஞ் சபாநாயகர் பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்தருளுவார் எ—று.

பொற்கழல் - இனவடை. சுட்டு முதன் மூன்றடிப் பொருளையும் சுட்டிற்று. ஈண்டு முத்தியென்றது பரமுத்தியென்பார் நலஞ்சேர் முத்தியென்றும், சமயக் கடவுளரென்றது புறப்புறச் சமயமும் புறச்சமயமும் முதலியவற்றாற் பிரதிபாதிக்கப்படுங் கடவுளரை என்பார் இங்கெண்ணுஞ் சமயக் கடவுளரென்றும், அக்கடவுளரும் சனன மரண துக்கத்துட்படுதலின் அஃதற்ற தாமே சுத்தசாட்குண்ணியங்களையுடைய பரமபதியென்பதும், பரமுத்தியைக் கொடுக்க வல்லவரென்பதும் ஆகமப்பிரமாணத்தா னுய்த்துணரும் நன்மக்கட்கன்றி ஏனை மந்தமதிகட்குங் காட்சிப்பிரமாணத்தா னினிது விளங்குதற் பொருட்டென்பார் யானே வல்லனெனப் பதமேல் வண்ணந் திகழ் பொற்கழ லணிந்து மதுகைக் கொடியுங் கட்டி என்றும், அந்நடனத்தை என்றும் உள்ளபடி தரிசித்தற்குரியவர் அவ்வம்மையேயென்பார் அருட் பெண்ணம்பிகை கண்காண என்றும், இன்னோரன்னவை ஏனைச் சமயக் கடவுளர்க்கின்றென்பார் அந்தப் பெருந்தருக்கா லென்றுங் கூறினார். மதுகை - வலி. கண்காண என வேண்டா கூறினார். அவ்வம்மையது காட்சியே தஞ் சிறுவர்களாகிய பக்குவான்மாக்களது நடனகாட்சிக்கும் நிமித்தமாய், இன்றியமையாப் பெருஞ்சிறப்பினதென்னுந் தந்துணிவு முடித்தற்கென்க. (௧௨)

தேங்குஞ் சடில முடிக்கடவு ளிருதாள் கருதாத் தீமனமும்
வாக்குஞ் செயலுங் கொடியோரு மொருகாற்பொன்னம்பலமென்னி



லாக்கந் தருமஞ் செழுத்திருபத் தோரா யிரத்தோ டறுநூறு
நாக்கொண் டுரைக்கு மதற்குநிக ரென்றான் குன்று நற்புகழான்.

இ—ள்: தேக்கும் சடில முடிக் கடவுள் இருதாள் கருதாத் தீமனமும் வாக்கும் செயலும் கொடியோரும் ஒருகால் பொன்னம்பலம் என்னில் - கங்காசலம் நிறையப்பெற்ற சடாமுடியையுடைய சிவபெருமானது உபய திருவடிகளைத் தியானியாத நன்மையற்ற மனமும் வாக்குஞ் செய்கையும் கொடிய பாவிகளும் ஒரு தரம் "பொன்னம்பலம்" என்று உச்சரிக்கப்பெறின், நாக்கொண்டு ஆக்கம் தரும் அஞ்செழுத்து இருபத்தோராயிரத்தோடு அறநூறு உரைக்கும் அதற்கு நிகர் என்றான் - நாக்கினாலே மோக்ஷ சாம்பிராச்சியத்தைத் தரும் சிவமூல மந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத்தறுநூறு தரம் செபிப்பதற்கு நிகராகுமென்றார், குன்று நல்புகழான் - இன்றுங் குறையாத நல்ல கீர்த்தியையுடைய அத்தபோதனர் எ—று.

தேங்குமென்பது வலிந்துநின்றது. மனம் வாக்குச் செயல் கொடியாரென்புழி உயர்திணை தொடர்ந்தசினை அதனொடு சார்த்தப்பட்டு அம்முடி பேற்று நின்றது. தரமென்ப தவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஒருநாண் முழுதும் செபிக்கும் பலத்திற்கு ஒருகாற் "பொன்னம்பலம்" என் றுச்சரிக்கும் பலம் ஒக்குமென்பார், "ஒருகாற் பொன்னம்பலமென்னி, லாக்கந்தரு மஞ்செழுத் திருபத் தோராயிரத்தோ டறுநூறு, நாக்கொண்டுரைக்கு மதற்கு நிகரென்றான்" என்றார்; ஒருநாண் முழுவதுஞ் சுவாசிக்கும் சுவாசம் இருபத்தோராயிரத்தறுநூறேயாகலின், அத்தொகையால் அந்நாண் முழுவதையுங் குறிப்பித்தது தொகைக் குறிப்பின் பாற்படுமென்க. இந்தச் சுவாசம் இருபத்தோராயிரத் தறுநூற்றுள் மூன்றிலிரு கூறாகிய பதினாலாயிரத்து நானூறு சுவாசம் மீளவும் அகத்தே சென் றடங்க மூன்றிலொரு கூறாகிய எழாயிரத்திருநூறு சுவாசம் நாடோறும் புறத்தே கழியுமென்க. இங்ஙனம் நாடோறும் எழாயிரத்திருநூறு சுவாசம் புறத்துக் கழிதலினாலேயே நமக்கு மரணஞ் சம்பவிப்பதூஉம், அங்ஙனங் கழியவிடாது தடுத்து யோகநெறியாற் பிராணாயாமஞ் செய்தலினாலேயே நரைதிரை மூப்பின்றி நெடிதுகாலம் சீவிப்பதூஉமென்க. (௧௩)

நீறுந் திருவஞ் செழுத்துமிலா நிருபா திருவம் பலமென்று
கூறும்பொருளிங் கிதுவாகு மென்றான் குன்று மெனுங் குணத்தான்
றேறும் பிடக மூன்றுமுறை செய்யுந் தலைவ னல்லாது
வேறுங்கடவுளொன் றுளதோவென் றேபுத்தன் வெகுண்டுரைப்பான்.

இ—ள்: குன்று ஆம் எனும் குணத்தான் - மலையென்று சொல்லத் தகுங் குணத்தையுடைய தபோதனர், நீறும் திரு அஞ்செழுத்தும் இலா நிருபா - மகிமை பொருந்திய விபூதி பஞ்சாக்ஷரங்க ளில்லாத புத்தராசனே,

திருவம்பலம் என்று இங்குக் கூறும் பொருள் இது ஆகும் என்றான் - பொன்னம்பலம் என் றிங்கே நாங் கூறிய பொருள் இதுவேயாகு மென்றனர். புத்தன் வெகுண்டு - அப்போது அரசனோடொருங்கிருந்து இது கேட்ட புத்தகுரு கோபங்கொண்டு, தேறும் பிடகம் மூன்றும் உரை செய்யும் தலைவன் அல்லாது வேறும் கடவுள் ஒன்று உளதோ என்று உரைப்பான் - தெளிவு பொருந்திய பிடக நூன் மூன்றையுமருளிச்செய்த நங்கடவுளே யல்லது உலகத்திற்கு வேறுமொரு கடவுளுண்டோவென் றிங்ஙனங் கூறுவானாயினன்.

திருவை நீற்றுக்குங் கூட்டுக. சலியாமையும் பெருமையும் பற்றிக் குணம் குன்றாக விசேடிக்கப்பட்டது. ஈண்டுக் குணமென்றது துறவு மெய் யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களை யாகலிற் சாதியொருமை. பொருள் - காரணம். கடவுள் என்பது ஈண்டுத் தெய்வ மென்னுந் துணையாய் இருதிணைக்கும் பொதுப்பெயராக நின்று உளதோ என்னும் அஃறிணைப் பயனிலை கொண்டது. (௧௪)

சென்றே தில்லை யெனும் பதியிற் சேர்வேன் வாது செய்தவன்றா
னின்றெ நடிக்குங் கழலீடு நீடுங் கொடியு மீங்க றுப்பே
னென்றே கடவுள் புத்தனென வுலகோ ரறிய வுரைத்தந்த
மன்றே போதிநிழற் பெருமான் பள்ளியென்ன வழங்கு விப்பேன்.

இ—ள்: சென்றே தில்லை எனும் பதியில் சேர்வேன் - நான் இது பொழுதே சென்று சிதம்பரமென்னும் ஸ்தலத்தை யடைவேன், வாது செய்து அவன்றான் நின்றே நடிக்கும் கழலீடும் நீடும் கொடியும் ஈங்கு அறுப்பேன் - அங்குள்ள சைவர்களோடு வாதஞ்செய்து அக்கடவுளானவர் அனவரத நடனஞ் செய்கின்ற பாதத்திற் பிணித்த வீரக்கழலையும் உயர்த்துப் பிடிக்கின்ற விருதுக்கொடியையும் விரைந்தறுப்பேன், கடவுள் ஒன்றே - உலகத்துக்குப் பதி ஒன்றே, புத்தன் என உலகோர் அறிய உரைத்து - அப்பதியும் புத்தகடவுளே என எவருமறியப் பிரதிபாதித்துத் தாபித்து, அந்த மன்றே போதி நிழல் பெருமான் பள்ளி என்ன வழங்குவிப்பேன் - அக் கனகசபையினையே அரசமர நீழலிலிருக்கும் நம் புத்த கடவுளது பள்ளி யென்று சொல்லும்படி வழங்கச் செய்வேன் எ—று.

பரமத கண்டனமும், சுவமத ஸ்தாபனமும் முறையே செய்வேன் என்பது கருத்தென்க. (௧௫)

இந்தக் கருமந் தினமூன்றில் யானே முடிப்ப னெனவெழுந்து
தந்தச் சிவிகை மேல்கொண்டு தன்றாள் வணங்குங் கணஞ்சூழ
நந்தக் கிளருந் திரைக்கடலு நாடுங் காடு மகன்றேகிப்
புந்தித் துயரங் கொண்டொல்லை சென்றான் புத்தன் புலியூரில்.



இ—ள்: புத்தன் இந்தக் கருமம் தினம் மூன்றில் யானே முடிப்பன் என எழுந்து - புத்த குருவானவன் இக் காரியத்தை இன்று முதன் மூன்று தினங்களுள் யானே முடிப்பேனென்று பிரதிக்ஞை செய்தெழுந்து, தந்தச் சிவிகை மேல்கொண்டு தன் தாள் வணங்கும் கணம் சூழ ஏகி - யானைத் தந்தத்தினாற் செய்த சிவிகைமேலிவர்ந்து, தன் பாதங்களை வழிபடும் சீடவர்க்கம் சூழச் சென்று, நந்தக் கிளரும் திரைக் கடலும் நாடும் காடும் அகன்று - ஒன்றடங்க ஒன்றெழுந் திரைகளையுடைய கடலையும் நாட்டையுங் காட்டையுங் கடந்து, புந்தித் துயரங் கொண்டு ஒல்லை புலியூரில் சென்றான் - என் சமயத்தைச் சிதம்பரம் முதலிய இடங்களில் இதுகாறும் பரப்பாது வாளா இருந்தேனே என்று மனவியாகுலங்கொண்டு விரைவாகச் சிதம்பரத்திற் சென்றான் எ—று.

இந்தக் கருமமென்றது மேலைச் செய்யுளிற் கூறிய பரமத கண்டனம் சுவமத ஸ்தாபனமென்னு மிரண்டையும். மேல்கொள்ளல் ஒரு சொல். நந்தங்கிளரும் என்பது வலிந்துநின்றதெனினு மமையும். கடலும் நாடுங் காடுங் கடத்தலாற் புந்தித்துயரங் கொண்டென்றுமாம். (௧௬)

வே று.

மன்னனுந் தனது செல்வ மகட்குள மூகை நீங்கப்
பொன்னினம் பலத்திலேக வென்பது பொருந்த வுன்னித்
தன்னெடுந் தானை சூழத் தனிப்பெருஞ் சிவிகையேறிச்
சென்னிநன் னாடுசேர்ந்து தில்லையி னெல்லை புக்கான்.

இ—ள்: மன்னனும் தனது செல்வ மகட்கு உள மூகை நீங்கப் பொன்னின் அம்பலத்தில் ஏக என்பது பொருந்த உன்னி - புத்தராசனுந் தனது செல்வ மகட்குளதாகிய ஊமைத்தன்மை நீங்கச் சிதம்பர யாத்திரை செய்க என்று சைவ நூல்கள் விதிப்பதை யுத்தியினும் பொருந்த நினைந்து போலும், தன் னெடும் தானை சூழத் தனிப் பெரும் சிவிகை ஏறி நல் சென்னி நாடு சேர்ந்து தில்லையின் எல்லை புக்கான் - தனது மிக்க சேனைகள் சூழ ஒப்பற்ற பெரிய சிவிகையின்மீதிவர்ந்து நல்ல சோழநாட்டிற் சென்று சிதம்பரத்தி னெல்லையை யடைந்தான் எ—று.

மன்னனுமென்னு மிறந்தது தழீஇய வெச்சவும்மை புக்கானென்னும் இறந்தகாலவினை முற்றுக்கொண்டது. செல்வ மகளென்பது செல்வமாகிய மகள் செல்வம்போலும் மகள் செல்வத்துக்கு நிமித்தமாகிய மகள் செல்வத்தையுடைய மகள் என நான்கு பொருளான் மயங்கும். போலுமென்பது சொல்லெச்சம். [மன்னனுந் தனது செல்வமகட்குள மூகை நீங்க என்பதற்கு அரசனும் தன் மகட்குளதாகிய ஊமைத் தன்மை நீங்க வேண்டிய ஊழ் காரணமாக எனக் கோடலுமொன்று. விதியின்வண்ணம் மதி செல்லு

மாதலின் தன் மகளையும் உடன் கூட்டிச் செல்லவேண்டு மென்ற புத்தி அவ னுள்ளத்திற் பிறந்தது.] (௧௭)

இங்கிவன் செல்லு முன்ன ரெய்திய புத்த னங்கிச்
செங்கரன் றில்லை யெல்லைச் சிவிகையி னிழிந்து சென்று
பொங்குதண் புனல்சேர் சென்னிப் புலீச்சர வரன்பொற்கோயிற்
றங்குசெங் கனக சாலந் தயங்கு மண்டபத்தி லானான்.

இ—ள்: இங்கிவன் செல்லுமுன்னர் எய்திய புத்தன் - இப்புத்தராசன் செல்லுவதற்குமுன் சென்ற புத்தகுருவானவன், அங்கிச் செங்கரன் தில்லை எல்லைச் சிவிகையின் இழிந்து சென்று - அக்கினியைத் தரித்த சிவந்த திருக்கரத்தையுடைய சிவபிரானது தில்லைமாநகரத் தெல்லையிலே சிவிகையைவிட்டிறங்கிச் சென்று, பொங்கு தண் புனல் சேர் சென்னி அரன் புலீச்சரப் பொன் கோயில் தங்கு செம் கனகசாலம் தயங்கு மண்டபத்தில் ஆனான் - தீர்த்தங்களுண்மிக்க தண்ணியகங்காநதி பொருந்திய திருமுடியையுடைய சிவபெருமானது திருப்புலீச்சரமாகிய அழகிய ஆலயத்துள்ள நானாவிதமாகிய செம்பொன்மயமாகி விளங்கும் ஓர் மண்டபத்தை யடைந்திருந்தான் எ—று.

இங்கிவன் இரு சொல்லுமாம், சாலம் - விகற்பம், அது ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதமென நான்கு. இப்பதிதன் திருமண்டபத்தை அடைந்தமை அதிபாதகமாதலின் அதனைக் கூறுதற்கு மனம் பொருந்தாமையின் மண்டபத்தைச் சார்ந்தானெனச் சிறப்புச் சொல்லாற் கூறாது மண்டபத்திலானான் எனப் பொதுச்சொல்லாற் கூறினர். (௧௮)

ஆங்கவ னிருப்பச் சென்ற வரசனு மிறைஞ்சி யேத்தி
யோங்கிய மகிழ்ச்சி யெய்தி யமர்ந்துழி யுரக ராசி
தாங்கிய சடிலன் கோயி றன்னினுட் கருமஞ் செய்வோ
ரீங்கிவர் வரவு கண்டே யாவரு மொருங்கு சேர்ந்தார்.

இ—ள்: ஆங்கு அவன் இருப்பச் சென்ற அரசனும் இறைஞ்சி ஏத்தி ஓங்கிய மகிழ்ச்சி எய்தி இருந்துழி - அங்ஙனம் புத்தகுரு விருப்பப் பின் சென்ற புத்தராசனும் அவனைச் சமீபித்து வணங்கித் துதித்து மிக்க மகிழ்ச்சியடைந்திருக்கின்றுழி, உரக ராசி தாங்கிய சடிலன் கோயிறன்னில் உட் கருமஞ் செய்வோர் ஈங்கு இவர் வரவுகண்டு யாவரும் ஒருங்கு சேர்ந்தார் - சர்ப்பக்கொத்தைத் தாங்கிய சடையையுடைய சிவபெருமானது ஆலயத்திலே உட்பணி செய்பவர்களாகிய திருத்தொண்டர்கள் ஈண்டிவர்களது வரவைக் கண்டு அனைவரு மொருங்குதிரண்டார்கள் எ—று. (௧௯)



வேறு.

தத்தமன நொந்துகன றுமென வெகுண்டே
சித்தமயர் வெய்தும்வகை சின்மொழிகள் கூறு
வத்தனுறை தில்லைநக ரெல்லையை யகன்றே
புத்தகடி தேகிது பொறோமென வுரைத்தார்.

இ—ள்: தத்தம் மனம் நொந்து கனறுமென வெகுண்டு - அங்ஙனந் திரண்ட சைவர்களெல்லாந் தங்கள் தங்கள் மனம் வருந்தி அக்கினி யென்று சொல்லும்படி மகா கோபங்கொண்டு, சித்தம் அயர்வு எய்தும் வகை சில் மொழிகள் கூறு - அப்புத்தர்கள் கேட்டு மனந் திகைக்கும்படி சில குரூர வார்த்தைகளைப் பேசி, அத்தன் உறை தில்லைநகர் எல்லையை அகன்றே புத்த கடிது ஏகு - நம்பரமபிதாவாகிய சிவபெருமான் வீற்றிருக்கப் பெறுகின்ற இத்தில்லைமாநகரினெல்லையை விட்டுப் புத்தகுருவே நீ சீக்கிரம் ஓடிப்போய்விடு, இது பொறோம் என உரைத்தார் - இவ்வபசாரத்தை நாம் எவ்வாற்றானும் சகிக்கமாட்டோமென்று கூறினர் எ—று.

இது கலிவிருத்தம் (௨௦)

தார்வளவன் முன்னருயர் தர்க்கவுரை கொண்டே
நீர்பரவு சைவநிலை யன்றென மறுத்துச்
சீர்மருவு புத்தனுயர் தெய்வமென விப்போ
தேர்பெற நிறுத்தியல தேகுவதி லென்றான்.

இ—ள்: தார்வளவன் முன்னர் உயர் தர்க்க உரை கொண்டு - வெற்றிமாலையைத் தரித்த சோழராசாவுக்கெதிரே உயர்வாகிய தர்க்கஞ் செய்து, நீர்பரவு சைவம் நிலை யன்று என மறுத்து - நீவிர் அனுசரிக்கும் சைவசமயம் பொய்ச்சமயமென்று அதனை நிராகரித்து, சீர்மருவு புத்தன் உயர் தெய்வம் என இப்போது ஏர்பெற நிறுத்தி அலது - புகழையுடைய நம் புத்தனே உலகத்துக்கு முதற்கடவுளென் றிந்தக்ஷணமே தர்க்க நீதி பொருந்தத் தாபித்தல்லது, ஏகுவது இல் என்றான் - யாமிவ்விடத்தை விட்டுப் போவதில்லையென்று கூறினான் எ—று.

உரை - நூல்; ஆகுபெயர்; வினவிடைகளென்றலு மொன்று. (௨௧)

புத்தகுரு வின்னன புகன்றபி னெவர்க்கு
மித்திற முரைக்குவ மெனக்கடி தகன்றே
மெய்த்தவர்கள் வேதமுத லோர்பரி கலத்தோர்
தத்தமனை தோறுமிது சாற்றினர்க ளன்னோர்.

இ—ள்: புத்தகுரு இன்னன புகன்றபின் - புத்தகுரு இன்னோரன்ன வார்த்தைகளைக் கூறியபின்னர், அன்னோர் எவர்க்கும் இத்திறம்

உரைக்குவம் எனக் கடிது அகன்று - அச்சைவர்கள் சிதம்பரதலவாசிகளெவர்கட்கு மிச்சமாசாரத்தைச் சொல்வேமென் றவ்விடத்தை விட்டகன்று, மெய்த்தவர்கள் வேதமுதலோர் பரிகலத்தோர் தத்தமனை தோறும் இது சாற்றினர்கள் - உண்மையாகிய தபோதனர்களுக்கும் வேதவித்துக்களாகிய தில்லைவாழந்தணர்களுக்கும் ஏனைப் பரிகலத்தோர்கட்கும் அவ்வவரில்லங்கடோறும் சென்றிதனைக் கூறினர்கள் எ—று.

இன்ன அன்ன என்பது இன்னனவென மரீஇயிற்று. பரிகலத்தோர்-பரிவாரசனம்; கோயிற்குரிய உட்டொழும்பு பூண்டொழுகுவோர் என்றதாம். பரிகரத்தோர் என்று பாடமோதுவாருமுளர். (௨௨)

புண்ணுழையும் வேனிகர் புகன்றமொழி கேளா
வண்ண லுறை கோயிலிடை யாவரு மடைந்தே
வண்ணமணி மண்டபம தெய்திவரு புத்த
னெண்ணமது கேட்குவ மெனக்கடிது சென்றார்

இ—ள்: புண் நுழையும் வேல் நிகர் புகன்ற மொழி கேளா - புண்ணின்கணுழையும் வேற்படைபோலும் அவ்வார்த்தையை அவர்களனைவருங் கேட்டு, அண்ணல் உறை கோயில் இடை யாவரும் அடைந்து - எப்பொருட்கு மிறைவராகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற பேரம்பலத்தின்கண் வந்தனைவரு மொருங்கு திரண்டு, வண்ணமணி மண்டபம் அது எய்தி - இனி நாம் புலீச்சரத்திலுள்ள அழகிய அவ்விரத்தின மண்டபத்தின்கட் போய், வரு புத்தன் எண்ணம் அது கேட்குவம் எனக் கடிது சென்றார் - அம்மண்டபத்தின்கண் வந்திருக்கும் புத்த குருவினது மனக்கருத்தென்னையென்று கேட்டறிவோமென்று அங்ஙனம் விரைந்து சென்றார்கள் எ—று.

நிகர்மொழி, புகன்றமொழி எனத் தனித்தனி முடிபுசெய்க. எண்ணமது எண்ணமாகிய அது. ஈண்டது வென்றது முக்கிய விஷயமென்னுங் கருத்திற்று. (௨௩)

தெய்வநர ரானவர்கள் செல்லவெதிர் வாரா
மெய்யுணர்வில் புத்தனை வெகுண்டுபல சொல்லா
வுய்வதறி யாதவொரு நீபயமு றாதே
யிவ்வகை யிருந்தமதி யாமையெது வென்றார்.

இ—ள்: தெய்வ நரரானவர்கள் செல்ல - பூசுரர்களாகிய தில்லைவாழந்தணர்கள் அங்கே செல்ல, எதிர் வாரா மெய் உணர்வு இல் புத்தனை வெகுண்டு பல சொல்லா - எதிர்கொண்டு வாராத மெய்யறிவற்ற புத்தகுருவைக் கோபித்துப் பலவற்றைப் பேசி, உய்வது அறியாத ஒரு நீ பயம் உறாது இவ்வகை இருந்த மதியாமை எது என்றார் - உய்யுநெறி அறியாத



மூழுமகனாகிய நீ ஒருசிறிதும் அச்சமின்றி இங்ஙன மிறுமாந்திருந்த அவமதிப்புக்குக் காரண மென்னை யென்று வினவினர் எ—று.

பரமபதியாகிய சபாநாயகர் "நாமிவரிலொருவர்" என்றெடுத்தருளிச் செய்யப்பெற்ற தெய்வத்தன்மையையுடைய நரர் என்பார் தெய்வ நரர் என்றொன்றனுமொன்று. அவர் வரவுக் கெதிர்கொண்டு சேறல் புண்ணியமும் செல்லாதொழிதல் பாவமுமாமென்னு முண்மையறிவு தலைப்படாத புத்தகுரு என்பார் செல்ல வெதிர்வாரா மெய்யுணர்வில் புத்தன்என்றும், குற்றஞ் செய்தாரைத் தண்டித்தல் தகுதியேயாமாகலின் நன்கு மதியாமையேயாகிய இக்குற்றஞ் செய்த புத்த குருவை ஈண்டுக் கோபித்துரைத்தல் தக்கதேயாமென்பார் புத்தனை வெகுண்டுபல சொல்லா என்றும், இன்னோரன்ன தூலவறிவுமில்லாத நீ உன்னுயி ருய்தற்கேற்ற சூக்குமவறிவு முடையையல்லையாதலின் மேல், "தன்னிலத்தினிற்குறுமுயறந்தியின்வலிது" என்பதறியாது நமது நிலத்துத் தனிவந்த நீ என்பார் உய்வதறியாதவொரு நீ என்றும், அஞ்சவேண்டுழி அஞ்சாமை மேலும் இங்ஙன மிறுமாந்திருத்தற்கேற்ற மகிமை ஒன்றும் நின்னிடத்தின்றென்பார் பயமுறாதே, யிவ்வகையிருந்த மதியாமை யெதுவென்றார் என்றுங் கூறினர். (௨௪)

அங்கமறை யாகம புராண மவை யாலே
நுங்கடவு ளேகடவு ளென்றுநவில் வீரே
லெங்கடவு ளேகடவு ளென்றுநவில் வேன்யா
னிங்கெனெதிர் கூறுமென வேபவ னிசைத்தான்.

இ—ள்: அங்கம் மறை ஆகம புராணம் அவையாலே நும் கடவுளே கடவுள் என்று நவல் வீரேல் - ஆறங்கம் நால்வேதம் இருபத்தெட்டாகமம் பதினெண்புராணமாகிய நுஞ்சமய சாஸ்திரங்களினாலே உமது சிவனே உலகத்துக்கு முதற் கடவுளென்று நீவிர் பிரதிபாதித்தல் கூடுமாயின் அதனை நிராகரித்து, எம் கடவுளே கடவுள் என்று யான் நவில்வேன் - நஞ்சமய சாத்திரங்களைக் கொண்டு எம் புத்தகடவுளே உலகத்துக்கு முதற் கடவுளென்று யான் பிரதிபாதிப்பேன், இங்கு என் எதிர் கூறும் எனவே அவன் இசைத்தான் - ஆகலின், இங்கெனக்கெதிரே நீவிர் வாதஞ் செய்யுங்களென்று அப்புத்தகுரு கூறினான் எ—று.

ஆறங்கம்: வியாகரணம், தர்க்கம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பன. ஏனைய வெளி. அவை தொகுதி. நம்மை ஒட்டி வாதிக்க வந்தமையின் மதியாதிருந்தே னென்றா னென்பது கருத்து. (௨௫)

போற்றுமறை யந்தணர்கள் புத்தனை வெகுண்டே
தோற்றனை யெனக் கலைஞர் சொல்லவுனை வெல்வோ
மாற்றமினி யுன்னுட னுரைக்குமது மற்றோர்
சேற்றினெதிர் கல்லெறிதல் செய்வதலதுண்டோ.

இ—ள்: போற்றும் மறை அந்தணர்கள் புத்தனை வெகுண்டு - யாவராலும் துதிக்கத்தகும் வேதங்களை அத்தியயனஞ் செய்யுந் தில்லைவாழந்தணர்கள் இங்ஙனங் கூறிய புத்தகுருவைக் கோபித்துப் பார்த்துக் கூறுவாராயினர், தோற்றனை எனக் கலைஞர் சொல்ல உனைவெல்வோம் - நீ தோற்றனை யென்று தார்க்கீகர் சொல்லும்படி நாம் உன்னைத் தப்பாது வெல்வோம், இனி மற்று ஓர் மாற்றம் நின்னுடன் உரைக்கும் அது - அஃதொழிந்து இனிப் பிறிதொரு வார்த்தையை நின்னோடு கூறுமக் கூற்று, சேற்றின் எதிர் கல் எறிதல் செய்வது அலது உண்டோ - சேற்றின்மீது கல்லுவிட்டெறிந்தவழி அச்சேறு எறிந்தார்மீது தெறித்தல்போல அவப்பிரயோசனமாவதல்லது சற்பிரயோசனமாவதுண்டோ எ—று.

இல்லை யென்பதாம். உரைக்குமது என்பதனில் அது என்பதனைப் பகுதிப்பொருள் விகுதி எனினும் அமையும். மற்று - வினைமாற்று. (௨௬)

நன்றிதரு வாருமொரு ஞாளிகுரை செய்தா
னின்றதன் வெகுட்சியை நிறுத்தல் கடனுமா
வின்றிழியு நின்னுட னிகழ்ச்சியெனி னுஞ்சீ
ரொன்றுமிலை யானவுனை யோருரையில் வெல்வேம்.

இ—ள்: நன்றி தருவார் ஒரு ஞாளி குரை செய்தாலும் நின்று அதன் வெகுட்சியை நிறுத்தல் கடனும் - தமக்கும் பிறர்க்கும் நன்மையை ஈட்டும் புருஷோத்தமர் ஒரு நாய் குரைக்கினும் அங்ஙனந் தங்கி நின்று அதன் வெகுளியைத் தணித்தல் அவருக்கு முக்கிய கடமையாகும், அது போல, இன்று இழியும் நின் உடன் இகழ்ச்சி எனினும் - இத்தின மிழிவு பொருந்திய நின்னோடு வாதஞ் செய்தல் எமக்கிழிவாயினும், சீர் ஒன்றும் இலை ஆன உனை ஓர் உரையில் வெல்வேம் - சமயவாதஞ் செய்தற்கு வேண்டப்படுஞ் சிறப்பிரண்டினுள் ஒரு சிறப்புமில்லாத ஓராக்ஷேபத்தில் வெல்வேம் எ—று.

சிறப்பும்மை பிரித்துக் கூட்டியுரைக்கப்பட்டது. உரை ஈண்டு ஏற்புழிக்கோடலான் வினவுரையின்மேற்று. சமயவாதஞ் செய்தற்கேற்ற கல்விச்சிறப்புச் சமயச்சிறப்பென்னு மிரண்டனுள் ஒன்றுமுடையை யல்லையாகலின் விரைவில் வெல்லுது மென்பார் சீரொன்றுமிலையானவுனை யோருரையில் வெல்வே மென்றா ரென்க. வேதமாகிய மதாநுசாரியாயுள்ள நின்னோடொட்டி வாதஞ் செய்தல் நஞ் சமயக் கொள்கைக்குத் தகுவதன்றாயினும் உலகவழக்குப்பற்றி வாதித்து ஒருதலையாக விரைவில் வெல்லுதுமென்றாரென்பது கருத்தென்க. வேதபாகியம் வேதத்திற்குப் புறமானது. (௨௭)

மிக்கதிறன் மன்னவரு மெய்யுணர்வி னோருந்
தொக்கசபை முன்னர்நம தர்க்கவுரை சொன்னாற்



றக்கதென லாமிது தகாதிது வென்றா
லெக்கலக மும்மிலை யிதேகரும மாமால்.

இ—ள்: மிக்க திறல் மன்னவரும் மெய் உணர்வினோரும் தொக்க சபை முன்னர் நம தர்க்க உரை சொன்னால் - மிக்க வலிமையையுடைய அரசர்களும் மெய்யுணர்வையுடைய சகலகலா பண்டிதர்களு மொருங்கு திரண்ட மகாசபைக்கெதிரே நாமிருதிறத்தேமும் நம்முடைய பக்க சபக்க விபக்கங்களைக் கொண்டு சுட்டி வாதித்தால், இது தக்கது இது தகாதது எனலாம் - இது குணம் இது தோஷம் என்று அவர்களே வாதசித்தாந்தஞ் செய்துவிடலாம், என்றால் - அங்ஙனஞ் சித்தாந்தஞ் செய்யப்படின், எக் கலகமும் இலை - ஒரு கலகமுமில்லை ஆகலின், இதே கருமம் ஆம் - இதுவே ஈண்டுச் செயற்பாலதாகிய காரியமாம் எ—று.

கலகந் தோன்றினு மடக்கி இடையீடின்றி வாதத்தை நடத்தற்கு மிக்க திறன் மன்னவரும், வாத விகற்பங்களை உள்ளவாறுணர்ந்து நடுநின்று விஷய சித்தாந்தஞ் செய்தற்கு மெய்யுணர்வினோரும் சபைக்கங்கமாக வொருதலையான் வேண்டப்படுதலின் மிக்கதிறன் மன்னவரு மெய்யுணர்வினோருந் தொக்கசபை யென்றும், சபைகூட்டிப் பேசுதலே துணிந்த கருமமென்பார். பிரிநிலை ஏகாரந் தந்து இதே கருமமாமென்றுங் கூறினார். (௨௮)

உத்தர முரைக்கவறி யாதுபுலி யூரர்
புத்தனை முனிந்தனர் புடைத்தனர்க ளென்றே
யித்தல முரைத்துவிடு மென்றுவள வன்பான்
மெய்த்தவர் விரித்தெழுது மோலையை விடுத்தார்.

இ—ள்: மெய்த்தவர் - மெய்மையாகிய தவத்தையுடைய தில்லைவாழந்தணர்கள், புலியூரர் உத்தரம் உரைக்க அறியாது புத்தனை முனிந்தனர் புடைத்தனர்கள் என்று இத்தலம் உரைத்துவிடும் என்று - சிதம்பரதலவாசிகள் புத்தகுருவின் வினாக்கட்கு விடைகூற வகையறியாமல் அப்புத்தகுருவை வெகுண்டு புடைத்தார்களென் றிவ்வுலகந் தப்பாது தம்மை அபவாதஞ் சொல்லுமென் றாலோசித்து, வளவன் பால் விரித்து எழுதும் ஓலையை விடுத்தார் - சோழராசாவினிடத்துச் சம்பவங்களைக் கூறுபட விரித்தெழுதி, அவனது வரவை அபேக்ஷிக்கும் ஒரு திருமுகமனுப்பினார்கள் எ—று.

உரைத்துவிடு மென்பது வந்துவிட்டா னென்பதுபோலத் தவறாது சொல்லுமெனுந் துணிவுப் பொருடந்து நின்றது. புலியூர ரென்றது ஈண்டுத் தில்லைவாழந்தணர்களை.

அந்தணர் பெருந்தவ ரருங்கலை யுணர்ந்தோ
ரந்தணுகு நாளைமணி மன்றுதொழ வென்றே

புந்திமகி ழோலைபல போக்கியபின் வெய்யோன்
முந்துற வொளித்தனன் முளைத்தன னிராவோன்.

இ—ள்: அந்தணர் பெருந்தவர் அருங்கலை உணர்ந்தோர் - பிராமணர்களும் பெரிய தபோதனர்களும் அரிய சகலகலா பண்டிதர்களும், மணிமன்று தொழ நாளை வந்து அணுகும் என்று புந்திமகிழ் ஓலைபல போக்கிய பின் - அழகிய கனகசபையைத் தரிசித்து வணங்க நாளை இங்ஙனம் வந்து சேருங்களென்று வாசிப்பவர் கேட்பவராது மனம் மகிழுதற்கேதுவாகிய திருமுகங்கள் பலவற்றை எழுதியனுப்பியபின்னர், வெய்யோன் முந்துற ஒளித்தனன் - சூரியன் முன்னர் அஸ்தமயனமாயினான், இராவோன் முளைத்தனன் - சந்திரன் பின்புதயஞ்செய்தான் எ—று.

அரசனாதலின், அச்சத்தாற் சம்பவங்களைச் சிறப்புவகையாற் றெரித்தெழுதி முன்னர்த் திருமுகமனுப்பினானென்பார் மேலைச் செய்யுளில் வளவன்பான் மெய்த்தவர் விரித்தெழுது மோலையை விடுத்தார் என்றும், அவ்வச்சமின்மையின் அந்தணர் முதலாயினோர்க்குச் சம்பவங்களைப் பொதுவகையாற் பின்னர் விதவாதெழுதினானென்பார் இச்செய்யுளில் அந்தணர் பெருந்தவ ரருங்கலை யுணர்ந்தோர் வந்தணுகு நாளை மணிமன்றுதொழ வென்றே புந்திமகிழோலைபல போக்கியபின் என்றும், இழிந்த புத்தனுடன் வாதுசெய்ய வருகவென்றெழுதல் எழுதுவோர் எழுதப்படுவோரென்னுமிருவர்க்குந் தகுதியன்மையின் சிறந்த பிறிதோரேதுவின்மேல் வைத்து மணிமன்றுதொழ வென்றெழுதினானென்றுங் கூறினார். அரசனை வருகவென்று பணியாதெழுதியதூஉம், ஏனையோரை வருகவென்று பணித்தெழுதியதூஉம் அக்கருத்தேபற்றி யென்க. (௩0)

வேறு.

துங்கவா னென்னு மாதின் சுடர்நுதற் றிலக மென்னக்
கங்குலா மடந்தை பார்க்குங் கவின்கொள் கண்ணடி யென்னச்
சங்கவார் குழையார்க் கிட்ட தாளவெண் கவிகை யென்னத்
திங்கண்மா கடவு டோன்றச் சிறந்தது ஞால மெல்லாம்.

இ—ள்: துங்க வான் என்னும் மாதின் சுடர் நுதல் திலகம் என்ன - உயர்ச்சி பொருந்திய ஆகாயமென்னும் பெண்ணின தொளியை யுடைய நெற்றியின்கண் விளங்குஞ் சிந்தூர திலகம்போலவும், கங்குல் ஆம் மடந்தை பார்க்குங் கவின் கொள் கண்ணடி என்ன - இராக்காலமாகிய பெண் தன் வடிவழகைநோக்கு மழகிய கண்ணடியைப்போலவும், சங்கவார் குழையார்க்கு இட்ட தாளவெண் கவிகை என்ன - நெடிய சங்கக் குண்டலத்தையுடைய சிவபெருமானுக் கிந்திரன் கவித்த வெண்மையாகிய முத்துக்குடையைப் போலவும், திங்கள் மா கடவுள் தோன்ற — தெய்வத்தன்மையையுடைய சந்திரனுதிக்க, ஞாலம் எல்லாம் சிறந்தது-இவ்வுலகமுழுதும் சிறப்படைந்தது.



சந்திரனுதிக்கும்போது சிவந்து தோன்றுதலின், அதுபற்றிச் சிந்தூர திலகமாக அதனையுவமிப்பார் அதற்கேற்ப ஆகாயத்தைப் பெண்ணுரு வுருவகஞ் செய்து வானென்னு மாதின் சுடர்நுதற் றிலகமென்ன என்றும், மாலைக்காலத்து மயங்கிருளான் மறைந்த உருவங்களை விளக்குதலின், அவ்விளக்கமுடைமைபற்றி அதனைக் கண்ணடியாக உவமிப்பார் அதற்கேற்ப இராப்பொழுதைப் பெண்ணுரு உருவகஞ் செய்து, கங்குலா மடந்தை பார்க்குங் கவின்கொள் கண்ணடியென்ன என்றும், உலகமே உருவமாகிய கடவுட்குங் கவிக்குங் குடை உலகெங்கும் நிழற்றுமாகலின், அவ்விசேடம்பற்றி அதனைக் கடவுளது வெண்கொற்றக்குடையாகஉவமிப்பார் சங்கவார் குழையார்க்கிட்ட தாளவெண் கவிகை யென்ன என்றும், பகற்போதிற் சூரியனது உஷ்ண கிரணங்களானுய வெம்மையைத் தன் அமுதகிரணங்களாற் றணித் திராப்போதில் உலகத்தை இன்புறுத்தி யழகுசெய்தலின், அவ்வேதுப்பற்றித் திங்கண்மா கடவுடோன்றச் சிறந்தது ஞாலமெல்லாம் என்றுங் கூறினார். உவமவுருபிடைச் சொல்லடியாகப் பிறந்த என்ன வென்னும் செயவெனெச்சங்கண் மூன்றும் தோன்ற வென்னும் காரணப்பொருட்டாய வினையெச்சத்தைத் தனித்தனி கொண்டன; இது அறுசீரடியாசிரிய விருத்தம். (௩௧)

இன்றொரு தினமுந் தோரா விங்கிரு நாளை யாங்க
ளுன்றன துயர்ச்சி யின்மை காட்டுது முலகிற் கென்று
நன்றிகொண் மனையிற் சென்றே யாருநல் லுணவு மாந்தி
யன்றிருண் மேன்மை யாள ரருந்துயில் பயிலுங் காலை.

இ—ள்: மேன்மையாளர் - மகிமையையுடைய தில்லைவாழந்தணர்கள், தேரா இன்றொரு தினமும் இங்கு இரு - புத்த குருவே இவ்வொரு தினமாத்திரம் நீயிங்கிரு, நாளை யாங்கள் உன்றனது உயர்ச்சியின்மை உலகிற்குக் காட்டுதும் என்று - நாளை நாம் உன்னுடைய இழிவை உலகிற்கு நேரே காட்டுதுமென்று கூறி, நன்றி கொள் மனையில் சென்று யாரும் நல் உணவு மாந்தி - நன்மையை யுடைய தம்மில்லங்களிற் சென்றனைவரும் நல்ல உணவுகளை யுட்கொண்டு, அன்று இருள் அரும் துயில் பயிலும் காலை- அவ்விராக்காலத்தின்கண் அரிய நித்திரை செய்யும்போது எ—று.

இருள் ஆகுபெயர். தில்லைவாழந்தணர் அறுவகைச் சைவருண் மேம்பட்ட ஆதிசைவரென்பார் மேன்மையாளர் என்றும், விருந்தினரை யுபசரித்தன் முதலிய நன்மைகளைக் கடைப்பிடிக்கு மனையாளையுடைய இல்லங்களென்பார் இடத்து நிகழ்பொருளின் றொழிற்பண்பை இடத்தின்மேலேற்றி நன்றிகொண்மனை யென்றும், அதிதிமுதலாயினார்க்கு உதவி யுண்ணு மறுசுவைப் போனக மென்பார் நல்லுணவென்றும், புறப்புறச்சமயிகளாகிய புத்தரைச் சிதம்பரத்தின் எல்லையினின்றும் ஓட்டுதற்குரிய யோசனைமேலிடு மிகவுமுடையரென்பார் அருந்துயிலென்றுங் கூறினார். நடேசபிரான் கனவில் வெளிப்படுந் துயிலென்பார் அருந்துயிலென்றாரெனினு மமையும். (௩௨)

அழகுற மன்றி லாடு மையர்கைப் பிரம்பு தாங்கித்
தழைசடை முடியு மேனி சாத்திய நீறு மாகி
விழைதரு வடிவங் கொண்டு வெளிப்படக் கனவில் வெய்யோ
னெழுவதன் முன்ன ரெய்தி யாவர்க்கு மிதுபு கன்றார்.

இ—ள்: அழகு உற மன்றில் ஆடும் ஐயர் - தரிசித்த பக்குவான்மாக்கள் பரமுத்தி யடையும்படி கனகசபையின்கண்ணே ஞான நடனஞ் செய்தருளும் பரமபிதாவாகிய சபாநாயகர், கைப் பிரம்பு தாங்கி - தமதருமைத் திருக்கரத்திற் பொற்பிரம்பைத் தாங்கி, தழை சடை முடியும் மேனி சாத்திய நீறும் ஆகி - தழைத்த சடாமுடியையும் திருமேனியிலே தரித்த விபூதியையு முடையவராகி, விழைதரு வடிவம் கொண்டு - எவரும் விரும்பத்தகும் பேரழகு பொருந்திய ஒரு சித்த வடிவங்கொண்டு, கனவில் வெய்யோன் எழுவதன் முன்னர் வெளிப்பட எய்தி - அவ்வந்தணரது சொப்பனவத்தையிற் சூரியோதயத்திற்கு முன்னர் நான்காஞ் சாமத்தில் வெளிப்பட வந்தருளி, யாவர்க்கும் இது புகன்றார் - அவரனைவர்க்கும் இதனைத் திருவாய்மலர்ந்தருளினார் எ—று.

அழகிய பொருள்களெவற்றினும் மிக வழகிய பொருண் முத்தியாகலின் அஃ தீண்டு அழகெனப்பட்டது. நாடகநூல் அழகமைய நடிப்பவராகலின் அழகுற மன்றிலாடு மையரென்றா ரெனினு மமையும். வெய்யோனெழுவதன்முன்னரெனவே கடைச்சாமமென்ப தினிதுபெறப்படும். படவே, அக்காலத்துக் காணுங் கனவின் பலன் உடனே பலிதமா மென்னுங் கனவு நூற்றுணிபுங் குறிக்கப்பட்டதாயிற்று. (௫௫)

வருந்துவ தொழிமி னம்மூ ரெல்லையின் வைகி யன்பா
லிருந்தனன் வாத வூர னிவ்வுரை கேட்ட போதே
பொருந்திய தர்க்க நூலாற் புத்தரை வெல்வா னின்னே
யருந்தவ முடைய நீர்போ யழைத்திடு மவனை யென்றார்.

இ—ள்: வாதவூரன் அன்பால் நம் ஊர் எல்லையில் வைகி இருந்தனன்- திருவாதவூரன் உண்மை யன்பினன் நமது தில்லைமாநகரின் புறவெல்லையிற் சிவயோகஞ் செய்துகொண் டிருக்கின்றனன், இவ்வுரை கேட்டபோதே பொருந்திய தர்க்கநூலால் புத்தரை வெல்வான் - இவ்வார்த்தையை நீவிர் சொல்லக் கேட்ட துணையானே சித்தாந்தத்திற் பொருந்திய தர்க்கநூல் விதிப்படி பௌத்தர்களைத் தவறாது வாதித்து வெல்வான், அரும் தவம் உடைய நீர் இன்னே போய் அவனை அழைத்திடும் - அரிய தவத்தையுடைய நீவிர் இப்பொழுதே போய் அவனைத் தப்பாது அழையுங்கள், வருந்துவது ஒழிமின் என்றார் - இஃதன்றி வெல்லுதற்கண் ஐயுற்று மனம் வருந்துதலை இனி நீக்கிவிடுங்க ளென்றருளிச்செய்தார் எ—று.



சிதம்பரம் பூலோகசிவலோக மாகலின் அதன் உள்ளெல்லைக்குள் வசித்தல் சிவஞானிகட்குத் தகாதென்னு முண்மையைத் திருவாதவூரடிகள் தம் மெய்யன்போ டுணர்ந்து அதன் புறவெல்லையில் வசித்தலின், நம்மூ ரெல்லையில் வைகி யிருந்தனனென் றொழியாது அன்பா லிருந்தனனென்றும், சைவசித்தாந்தத்திற்குப் பொருந்தாத தர்க்கநூற் பாகுபாடுகளும் உண்மையின், அவற்றை யொழித்தற்குத் தர்க்க நூலென வாளாகூறாது பொருந்திய தர்க்க நூலென்றும், சிவாநுபூதிமானாகிய திருவாதவூரனைக் கண்டு வசனித்தற் கேற்ற அரிய தவத்தைச் செய்த நீவிர் என்பார் அருந்தவமுடைய நீர் என்றும், இது பொய்க்கனவென் றிகழா தொருதலையான் அவனைச் சென்றழையுங்களென வற்புறுத்துவார் அழையுமென்னாது அழைத்திடு மென்றும், அவன் வரின் நீவிர் வெல்லுதல் நிச்சயமென்பார் வருந்துவதொழிமினென்றுங் கூறினார். வைகியிருத்தலென்னுமொருபொருட் பன்மொழி நன்கிருத்தலென்னும் பொருட்டாய், ஈண்டுச் சிவயோகஞ் செய்துகொண் டிருத்தன் மேலதாயிற்று. ஊரெல்லை யென்றது ஈண்டுக் கிழக்கெல்லையின் புறத்துள்ள வில்வவனத்தை. அது, "விண்டுழாவியகுடுமி மன்றுடையான் றிருவாக்கான் மிகுந்த நேயங், கொண்டுபோய்க் குணதிசையி லருந்தவர்வாழ் தபோவனத்தைக் குறுகி" என வழிநூலாசிரியர் விதந்து கூறியவாற்றானுமுணர்க. (௫௬)

கண்டனர் கனவு தன்னில் விழித்தனர் கனக மன்றி
லொண்டொடி பாக னன்பா லுரைத்தது கருத்தி லாய்ந்து
கொண்டனர் மகிழ்ச்சி செங்கை குவித்தனர் முடியிற் கோயின்
மண்டப மிசையே யெல்லா மாந்தரும் வந்து தொக்கார்.

இ—ள்: கனவு தன்னில் கண்டனர் விழித்தனர் - சொப்பனவத்தையின்கண் இங்ஙனங் கண்ட தில்லைவாழந்தணர்கள் நித்திரைவிட் டெழுந்து, கனக மன்றில் ஒண் தொடி பாகன் அன்பால் உரைத்தது கருத்தில் ஆய்ந்து மகிழ்ச்சி கொண்டனர் - கனகசபையின் கண்ணே திருநிருத்தஞ் செய்தருளும் ஒளி பொருந்திய வளையலைத் தரித்த சிவகாமி யம்மை சமேதராகிய சபாநாயகர் தம்மாட்டு முகிழ்த்த பெருங்கருணைத் திறத்தாற் றாமாகவே வந்து திருவாய்மலர்ந்தருளிய தர்க்க ஜயோபாயத்தைத் தம்முள்ளத்தின்கட் பலகாற் சிந்தித்துத் தெளிந்து மனமகிழ்ச்சி கொண்டார்கள், முடியில் செம் கை குவித்தனர் - சிரசிலே சிவந்த கைகளைக் கூப்பிவைத் தஞ்சலி செய்தார்கள், கோயில் மண்டப மிசையே எல்லா மாந்தரும் வந்து தொக்கார் - பின்னர் அவ்வாலயத்தின் பேரம்பலமாகிய திருமண்டபத்தின்கண் அவரனைவரும் வந்து ஒருங்கு கூடினார்கள் எ—று.

தில்லைவாழந்தணர்கள் ஓர் நிமித்தத்தின்மேல் வைத்துச் சபை கூடுங்கால், அது கூடுமிடம் பேரம்பலமே என்பதைக் கன்னபரம்பரையானும், தற்கால அனுபவத்தானுமறிக. (௫௭)

புல்லறி வுடைய புத்தன் புகன்றதற் கிரங்கிப் பின்ன
ரெல்லையில் கருணை யான்வந் திருங்கன வதனி லெய்தச்
சொல்லிய மொழியி னாலே சோதிகொள் முகத்த ராகி
வல்லிருட் கொடுங்கி வெய்யோன் வரவிரி கமல மொத்தார்.

இ—ள்: புல் அறிவு உடைய புத்தன் புகன்றதற்கு இரங்கி - மேற்கூறிய பிரகாரம் பேரம்பலத்தின்கண் வந்து ஒருங்கு கூடிய தில்லைவாழந்தணர்கள் அற்ப அறிவையுடைய புத்தகுரு முன்னர் "எங்கடவுளே கடவுள் என்று நவில்வேன் யான்" எனக் கூறிய அக் கூற்றிற்குத் தம் முக மொளி குன்றி வாடப்பெற்று, பின்னர் எல்லை இல் கருணையான் இரும் கன வதனின் வந்து எய்தச் சொல்லிய மொழியினாலே சோதிகொள் முகத்தர் ஆகி- அதன் பின்னர் முடிவற்ற பேரருளையுடைய சபாநாயகர் பெரிய சொப்பனவத்தையின் கண் வந்து வாதவூரடிகளிடத்துத் தம்மைச் சென்று சொல்லும்படி பணித்தருளிய திருவாக்கினாலே அவ்வொளி நிறையப்பெற்று மலரு முகத்தை யுடையவராகி, வல் இருட்கு ஒடுங்கி வெய்யோன் வர விரி கமலம் ஒத்தார் - செறிந்த இருளையுடைய இராக் காலத்திற்குக் குவிந்து சூரியனுதிக்க மலரும் தாமரை மலரை ஒத்தனர் எ—று.

வல்லிருட் குடைந்து எனவும் பாடம். (௫௬)

தெய்விக மான மன்றிற் றிருநடம் புரியு நாதன்
றைவரு நீறுஞ் செய்ய சடையுநற் பிரம்புந் தாங்கி
மைவிரி கங்குற் காலை வந்துநன் மகிழ்ச்சி யெய்த
விவ்வகை மொழிந்தா ரென்றே யாவருங் கனவு சொன்னார்.

இ—ள்: தெய்விகம் ஆன மன்றில் திரு நடம் புரியும் நாதன் - தெய்வத் தன்மை பொருந்திய கனகசபையின் கண்ணே திருநடனஞ் செய்தருளுஞ் சபாநாயகர், தைவரு நீறும் செய்ய சடையும் நல் பிரம்பும் தாங்கி மைவிரி கங்குல் காலை வந்து - பரவப் பூசிய விபூதியும் சிவந்த சடாமுடியும் பொற் பிரம்புங் கொண்டு இருள் விரிந்த இவ்விராக்காலத்தின்கண் நமது சொப்பனவத்தையில் வந்து, இவ்வகை மொழிந்தார் என்று யாவரும் கனவு சொன்னார் - இந்தப் பிரகாரந் திருவாய்மலர்ந் தருளினார் என்று அவர் அனைவருந் தாங்கண்ட கனவு நிலையைத் தனித்தனி ஒருவர்க்கொருவர் மாறின்றிக் கூறினார் எ—று.

நாதன் மொழிந்தார் என்பதனைச் சிவபெருமான் வந்தார் என்பது போலச் சமய சம்பிரதாயமாகக் கொள்க. கனகசபை பராசத்தியால் அதிட்டிக்கப்பட்ட சுத்தமாயாரூபமாகலின் தெய்விகமான மன்றென்றும், கொண்ட சித்த வடிவமும், கண்ட காலமும், கனவு நிலையும் எமக்கெல்லா மொத்திருந்தன என்பார் தைவருநீறுஞ் செய்ய சடையுநற் பிரம்புந் தாங்கி



மைவிரி கங்குற் காலைவந்து நன் மகிழ்ச்சி யெய்த, இவ்வகை மொழிந்தா ரென்றே யாவருங் கனவு சொன்னார் என்றுங் கூறினார். மைவிரி கங்குலென்றது கண்டஉடனே பயத்தற்குரிய குமரி இருள் செறிந்த விடியற் காலத்தை உணர்த்திற்று. (௫௭)

அத்தனை மன்று ளாடு மையனை வியந்து கூறித்
தத்தமி லன்புகூர்ந்து தரித்துள வருத்த நீங்கி
மெய்த்தவ வாத வூரர் மேவிடத் தணுகு வோமென்
றுத்தம பன்ன சாலை யொல்லையிற் குறுகி னார்கள்.

இ—ள்: அத்தனை மன்றுள் ஆடும் ஐயனை வியந்து கூறி - பரமபிதாவும் கனகசபையின்கண் நடிக்கும் பூசிதை யுடையவருமாகிய சபாநாயகரது திருவருட் டிறத்தை எடுத்துத் தோத்திரஞ் செய்து, தத்தமில் அன்பு கூர்ந்து தரித்துள வருத்தம் நீங்கி - தங்க டங்களுள் அன்பு மிக்குத் தாங்கொண்ட சமய வாதத்தைச் சுட்டிய மனவருத்தத்தினின்று நீங்கி, மெய்த்தவ வாதவூரர் மேவு இடத்து அணுகுவோம் என்று - மெய்ம்மையாகிய தவத்தையுடைய திருவாதவூரடிகள் வீற்றிருக்கு மிடத்தை அடைவோமென்று கருதி, உத்தம பன்னசாலை ஒல்லையில் குறுகினார்கள் - அவரது நல்ல பன்னசாலையை அதிசீக்கிரத்தி லடைந்தார்கள் எ—று.

தில்லைவாழந்தணர்கள் தாமெல்லா மீண்டொருங்கு கூடியவழித் திருவருளால் நிகழ்ந்த கனவு நிலைபற்றி முன்னையினும் மிகச் சபாநாயகர் மாட்டுப் பேரன்புடையர்களாயினார்க ளென்பார், அத்தனை மன்றுளாடு மையனை வியந்து கூறித், தத்தமி லன்புகூர்ந் தென்றும், இடத்து நிகழ் பொருளின் விசேடத்தை இடத்திற் கேற்றிக் கூறுவார் உத்தம பன்னசாலை யென்றும், வாதவூரடிகளைக் காண்டற்கண் வேணவாவோடு சென்றன ரென்பார் ஒல்லையிற் குறுகினார்க ளென்றுங் கூறினார். (௫௮)

கூடினர் பன்ன சாலை கூரருட் குன்றை யன்பா
னாடின ருவந்து கண்டார் நளினவா சனத்தின் மீது
பீடின ரிருந்த யோகம் பெயர்ந்தனர் பிறங்கு மன்றி
லாடின னுரைத்த வெல்லா மாங்கவர்க் கியம்பினார்கள்.

இ—ள்: பன்னசாலை கூடினர் - இங்ஙனம் வில்வ வனத்துள்ள பன்னசாலையை யடைந்த தில்லைவாழந்தணர்கள், கூர் அருள் குன்றை அன்பால் நாடினர் உவந்து கண்டார் - ஒருகாலைக் கொருகால் மிக்கோங்கும் திருவருட்குன்றாகிய வாதவூரடிகளைப் பேரன்போடு நாடி மனமுவந்து தரிசிக்கப்பெற்றுக்கொண்டனர், பீடினர் நளின ஆசனத்தின்மீது இருந்த யோகம் பெயர்ந்தனர் - அப்பொழுது சிவபத்த சிரோமணியாகிய எம்பெருமான் பதுமாசனமாக வீற்றிருந்து சாதித்த சிவயோகங் குலைந்தெழுந்தனர்,

அங்ஙனமெழுதலும், பிறங்கு மன்றில் ஆடினர் உரைத்த எல்லாம் ஆங்கவர்க்கு இயம்பினர்கள் - பஞ்ச சபைகளுள் மேம்பட்டு விளங்குங் கனகசபையின்கட் பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்தருளுகின்ற சபாநாயகர் தமக்குச் சொப்பனு வத்தையின்கண் வெளிப்பட்டுத் திருவாய் மலர்ந்தருளிய மங்கல சமாசாரங்களை யெல்லாம் அவ்வடிகட் கவ்வந்தணர் விரித்து விண்ணப்பஞ் செய்தனர் எ—று.

கூடினர் என்பது வினையாலணையும் பெயர். ஆங்கவர் ஒரு சொல். நாடல் - விரும்பல். எதிர்காலத்துள்ள பக்குவான்மாக்கள் ஓதி முத்திபெற் றுய்யும் வண்ணந் திருவாசகமாகிய தமிழ் வேதத்தைத் திருவாய் மலர்ந்தரு ளும் அசைவற்ற கிருபாமூர்த்தியாகலிற் கூரருட் குன்றென்றும், அறிவாகிய வுள்ளீட்டாற் றமக்கும் பிறர்க்கும் பயன்பட்ட பெருந்தகைமையினராகலிற் பீடினர் என்றுங் கூறினர். பதுமாசனம் அட்டாங்க யோகாசனத்து ளொன்று; அஃது இருகாலையும் மடக்கி இரு தொடைமேல் இரண்டுள்ளடி களையும் மாறி வைத்திருத்தல். (௩௯)

வேறு.

அந்தமொழி யன்பினர் செவிப்புல னிலங்குதலு
மன்றிறை பணித்த துணரா
வந்தவரு டன்கடிது சென்றுதிரு மன்றனை
வணங்கியருள் பெற்று மயலாஞ்
சிந்தைய ரிருந்தமணி மண்டபம டைந்தியவர்
தீயமுக நாடி விடரே
நந்துமென வேயெழினி கொண்டுமறை வித்தெதி
ரிருந்தனர் நலங்கொ ளணைமேல்.

இ—ள்: அந்த மொழி அன்பினர் செவிப்புலன் இலங்குதலும் - அவ் விண்ணப்ப வாசகம் சிவபத்திமானாகிய திருவாதவூரடிகளது செவிப்புலங் கட்கு விடயமாதலும், அன்று இறை பணித்தது உணரா - திருப்பெருந் துறையின்கண் ஞானோபதேசஞ் செய்த அக்காலத்துப் பரமாசாரியர் தமக் காஞ்ஞாபித்தருளிய அவ் வாஞ்ஞையை நினைந்து, வந்தவர் உடன் கடிது சென்று திருமன்றனை வணங்கி அருள் பெற்று - தம்மிடத்துவந்த தில்லைவா ழந்தணர்களோடு விரைந்து சென்று அழகிய சபாநாயகரைத் தரிசித்து வணங்கித் திருவருள் பெற்று, மயல் ஆம் சிந்தையர் இருந்த மணி மண் டபம் எய்தி - ஐயந்திரிபறியாமையாகிய மயக்கங்கள் பொருந்திய மனத்தை யுடைய புத்தர்களிருக்கும் இரத்தின மண்டபத்தை யடைந்து, அவர் தீய முகம் நாடில் இடரே நந்தும் எனவே எழினி கொண்டு மறைவித்து - அப்புத்தர்களது துர்முகத்தை நாம் நேரே நோக்கிற் பாவமே மிகுமென்று



இடுதிரை கொண்டு அவர்களைத் தமக்கு வெளிப்படாதிருக்கும்படி மறையச் செய்து, எதிர் நலம் கொள் அணைமேல் இருந்தனர் - அவர்கட்கெதிரே அழகுபொருந்திய ஆசனத்தின்மீது வீற்றிருந்தருளினர் எ—று.

இடர் ஆகுபெயர். வேதத்துக்குப் புறமாகிய மித்தியாசமயிகளைக் காணிற் சைவசித்தாந்திகட் கது பெரும் பாவமென்பதுண்மைநூற்றுணிபாத லாலும், இப்புத்தமதம் பொய்மதமாதலானும், அவர் தீயமுக நாடி விடரே நந்துமெனவே யெழினிகொண்டு மறைவித்தென்றும், சிவஞானிகள் திரு வருளை முன்னிட்டல்லது தற்போத முனைப்பை முன்னிட்டொன்று செய் பவரல்லராகலின் வந்து திருமன்றனை வணங்கியருள் பெற்றென்றுங் கூறி னர். இது எழுசீரடியாசிரிய விருத்தம். (௪௦)

மன்னுமறை யந்தணர் புராணிக ரருங்கலைகள்
வல்லவர்நல் லோர்க ளுடனே
சென்னிவள வன்கடிது வந்துதிரு மன்றனெதிர்
சென்றுதொழு தங்க ணகலா
மின்னுமணி மடண்பம டைந்தியரு ளன்பரை
வியந்தடி வணங்கி யருகா
நன்னரணை யின்புற மிருந்தனன் விரிந்தகலை
நாணிறைவு கொண்ட மதிபோல்.

இ—ள்: சென்னி வளவன் - தமிழ்நாட்டு மூவேந்தருள்ளும் சிரஸ் தானமாக வைத்து நன்கு மதிக்கற் பாலனாகிய சோழமகாராசா, மன்னும் மறை அந்தணர் புராணிகர் அரும் கலைகள் வல்லவர் நல்லோர்கள் உடனே கடிது வந்து - நிலைபெற்ற வேத சிவாகமங்களிலே மகா பாண்டித்திய முடைய பிராமணர்களும் பௌராணிகர்களும் அரிய கலை ஞானங்களில் வல்ல விற்பன்னர்களுமாகிய இந் நல்லவர்களுடனே விரைந்து சிதம் பரத்திற்கு வந்து, திரு மன்றன் எதிர் சென்று தொழுது அங்கண் அகலா மின்னு மணி மண்டபம் எய்தி - அழகிய சபாநாயகரது சந்நிதியை யடைந்து தரிசித்து வணங்கி அவ்விடத்தைவிட்டகன்று திருப்புலீச்சரத் துள்ள இரத்தினமண்டபத்தை யடைந்து, அருள் அன்பரை அடி வணங்கி வியந்து - திருவருளையுடைய மெய்யன்பராகிய திருவாதவூரடிகளது திரு வடிகளை வணங்கி ஸ்தோத்திரஞ் செய்து, விரிந்தகலை நாள் நிறைவு கொண்ட மதிபோல் அருகா நன்னர் அணையின்புறம் இருந்தனன் - சோடச கலைக ணிறைந்த பூரண சந்திரனைப்போல் அவ்வடிகளதொரு திருமருங் காக இடப்பட்ட நல்ல ஆசனத்தின்மீது வீற்றிருந்தனன் எ—று.

சென்னிவளவன் இரு பெயரொட்டுப் பண்புத் தொகை யென்றுமாம்; வேத சிவாகமங்களாகிய முதல்நூல்க ளிரண்டும் ஆதி நித்தியமாகலின்

மன்னுமறை யென்றும், தன் கலைகண் முழுவதும் தன்மாட்டுநிறையப்பெற்ற பூரண சந்திரனைப்போல அறுபத்துநான்கு கலைகளும் தன்னகத்து நிறையப் பெற்ற புலமைத்திறத்தோ டிருந்தா னென்பார் விரிந்தகலை நாணிறைவு கொண்டமதிபோனன்னரணையின்புற மிருந்தனன் என்றுங் கூறினர். தன்னைச் சார்ந்து வந்தவர்கள் புடைசூழ இருந்த அரசன் நக்ஷத்திரங்களினடுவிற் பிரகாசிக்கின்ற பூரணசந்திரன் போன்றானெனினு மமையும். (௪௧)

ஈழவள நாடனு மெழுந்தடி பணிந்துதிறை
யிட்டகுறை நல்கி யிறைவா
வாழிமிக வாழியென நின்றபொழு தங்கவனை
மன்னர்பெரு மானு மகிழா
வேழமிவை நல்லவிலை யில்லையிம் மணிக்கென
வியந்தரு கிருத்தி யெவருஞ்
சூழுமவை தங்குதலு மங்கப விருந்தனர்கள்
சூழ்ந்துகரி சொல்லு மயலோர்.

இ—ள் ஈழ வள நாடனும் எழுந்து அடி பணிந்து திறை இட்ட குறை நல்கி - வளம் பொருந்திய ஈழமண்டலாதிபதியும் சோழமண்டலாதிபதியைக் கண்டு விரைந்தெழுந்து பாதங்களை வணங்கி முன் கொடுத்தெஞ்சிய திறைப் பொருட் குறையைக் கொடுத்து, இறைவா வாழி மிக வாழிஎனநின்றபொழுது-மகாராசாவே நீடூழிவாழ்க வாழ்கவென்று துதித்து நிற்குந் தருணத்து, அங்கவனை மன்னர் பெருமானும் மகிழா - அப்புத்தராசாவைச் சோழராசாவும் மனமுவந்து நோக்கி, வேழம் இவை நல்ல - நீதந்த இவ்வியானைகள் மிகவும் நல்லன, இம்மணிக்கு விலை இல்லை என வியந்து அருகு இருத்தி - இவ்விரத்தினங்கட்கு விலைமதிப்பென்ப தொன்றிலையெனப் புகழ்ந்து தன்பக்கத்திருத்தி, எவரும் சூழும் அவை தங்குதலும்-அனைவரும் சூழ்ந்திருக்கு மச்சபையின்கட்டானு மிங்ஙனம் நடுநாயகமாக வீற்றிருத்தலும், சூழ்ந்து கரிசொல்லும் அயலோர் அங்கு இருந்தனர்கள் - வாதி பிரதிவாதிகளது விக்ஷேப ஆக்ஷேபங்களை ஆராய்ந்துணர்ந்து செய அபசெயங்களை நடுநின்று வரையறுத்து நிச்சயித்துக்கூறும் மத்தியஸ்தர்களாகிய நொதுமலர் அவ்வரசனுக்குப் பக்கத்தே யிருந்தார்கள் எ-று.

கரி -சாட்சியம். நொதுமலர் பகை நட்பென்னு மிரண்டினும் படாதவர். புத்தராசா குறுநில மன்னனாகலின் அதை விளக்கிய அவனை ஈழநாடனென்றும், சோழராசா நெடுநில வரசனாகலின் அவனை மன்னர் பெருமானென்றும், ஈழதேயத்து யானையும் மாணிக்கம் வைடூரியம் முத்து முதலிய ரத்தினங்களும் ஏனைத்தேயத்து யானையினு மிரத்தினங்களினும் மிகச் சிறந்தனவாகலின் வேழ மிவை நல்ல விலை யில்லை இம்மணிக்கென வியந்தென்றுங் கூறினர். அடுக்குவப்பின் கண்ணும் உம்மைபுயர்வு சிறப்



பின் கண்ணும் வந்தன. உம்மையிரண்டனுள் முன்னையது உயர்வு சிறப்போடு எதிரது தழீஇயவெச்சமுமாம்; ஈழவழநாடனும் பணிந்தெனவே பணியத்தக்கவர் பிறரும் பணிந்தென்பது முன்னர்ப் பெறப்படுதலினென்க. (௪௨)

தில்லைநக ரந்தணர் தபோதனர் சிறந்தினி
திருந்துழி விரிந்த சிவநூல்
வல்லவ ரிழிந்தகுண புத்தனுடன் வாதுசெயு
மன்னுசபை காண வருவோர்
தொல்லைமறை தந்தவன் முகுந்தன்முனி வோரெழுவர்
சூழுமிரு நான்கு திசைமே
லெல்லையி லிருப்பவ ருருத்திரர்கள் விஞ்சைய
ரிராப்பக லிலங்கு கதிரோர்.

இ—ள்: தில்லை நகர் அந்தணர் தபோதனர் சிறந்து இனிது இருந்துழி - இவ்வாற்றானே தில்லைவாழந்தணர்கள் தபோதனர்களோடு மனமகிழ் சிறந்தினிதாக வீற்றிருக்கும் பொழுது, விரிந்த சிவ நூல் வல்லவர் இழிந்தகுண புத்தன் உடன் வாது செயும் மன்னு சபை காண வருவோர் - பரந்த சிவாகமங்களில் வல்ல திருவாதவூரடிகள் இழி குணம் பொருந்திய புத்த குருவோடு சமயவாதஞ் செய்யும் நிலைபெற்ற சபையைக் காணும்படி இன்னும் வந்தவர்கள் யாரெனின், தொல்லை மறை தந்தவன் - பழைய வேதங்களை இந்நிலவுலகிற் றந்து பரப்பிய பிரமாவும், முகுந்தன் - விஷ்ணுவும், முனிவோர் எழுவர் - சத்த விருடிகளும், சூழும் இரு நான்கு திசை மேல் எல்லையில் இருப்பவர், இவ்வுலகைச் சூழ்ந்த அட்டதிக்கின் முடிவுகடோறும் வசிக்குமிந்திரன் முதலிய திக்குப்பாலகரெண்மரும், உருத்திரர் - உருத்திரர்களும், விஞ்சையர் - வித்தியாதரர்களும், இராப் பகல் இலங்கு கதிரோர் - சந்திரசூரியர்களும் பிறருமாம் எ—று.

இறுதிக்கண் ஆமென்னும் வினைப்பயனிலை கொடாது அவாய் நிலையான் முடித்தமையான் இன்னோரன்ன மேலுலகவாசிகள் பிறரும் வந்தாரென்பது பெற்றாம். இனிக் கீழிரண்டடியினரையும் எழுவாயாக்கி வருவோர் என்பதனைப் பயனிலையாகக் கொண்டு முடித்தலு மொன்று. தில்லைவாழந்தணர்கள் சபை கூட்டுதற்கட் கருத்தாக்களாகிச் சிறந்தமையின் அது பற்றி அவரை முன்னர் விதந்து தில்லைநக ரந்தணர் என்றும், அவர்களோடுடன் வைகுதற்குத் தக்கவர்கள் தபோதனர்களேயாதலின் அதன்பின்னர்த் தபோதனர் என்றும் தாமே வேறல் நிச்சயமென்னுந் துணிவான் ஓர் கவலையுமற்றிருந்தா ரென்பார், சிறந்தினி திருந்துழி யென்றும், சிவாகமங்களிருபத்தெட்டும் இருபத்தெட்டுக்கோடி கிரந்தங்களுடைமையின் விரிந்த சிவ நூல் என்றும், அபரஞானமாகிய சிவாகமங்களைப் பரஞான

மாகிய அநுபூதிஞானத்தோடொட்டி யுணர்ந்தவராகலின் சிவநூல் வல்ல வரென்றும், இருதிறத் தரசர் முன்னும் சமயவாதஞ் செய்து பதி நிச்சயம் பண்ணும் மகாசபையாகலின் மன்னுசபை யென்றுங் கூறினர். தொல்லை மறை யென்பதற்கு மேன் மன்னுமறை என்பதற் குரைத்தாங் குரைக்க. எல்லையென்னாது மேலெல்லை யென்றார் திகந்தமென்பது விளக்குதற்கு. திருமுகம் பெறாது தாமே அறிந்துவந்த மேலுலக வாசிகளாதலின், இவரை வேறு செய்யுளான் இறுதிக்கட்டந்து கூறினர். சபையின்கண் வருவோர் என இடம்பற்றிக் கூறாது சபை காண வருவோர் எனச் செயல்பற்றிக் கூறினமையின், இவரெல்லாம் ஆகாயநெறிக்கண் வந்து நின்று ஈண்டைச் சபைநிகழ்ச்சி கண்டு பின்னர் அந்நிலையே மீண்டாரென்பது பெற்றாம். (௪௫)

வேறு.

தன்பெருந் தானை சூழ விருந்ததண் பொன்னி நாடன்
றென்பெருந் துறைசூழ் நாடன் றிருவடி வணங்கி நின்று
நின்பரஞ் சைவ ஞான நிலைமையை நிறுத்தல் பின்ன
ரென்பரம் புத்தர் தம்மை யீங்குயிர் செகுப்ப தென்றான்.

இ—ள்: தன் பெரும் தானை சூழ இருந்த தண் பொன்னி நாடன் - தன் மிக்க சேனைகள் சூழச் சபாநாயகமாக வீற்றிருந்த தண்ணிய காவிரி நாட்டை யுடைய சோழமகாராசா அப்பொழுதெழுந்து, தென் பெருந் துறை சூழ் நாடன் திருவடி வணங்கி நின்று - தெற்கின்கணுள்ள திருப் பெருந்துறையைச் சூழ்ந்த பாண்டிநாட்டை யுடைய திருவாதவூரடிகளது திருவடிகளை வணங்கி நின்று, சைவ ஞான நிலைமைய நிறுத்தல் நின் பரம் - சிவஞான நீர்மையை யுடைய நமது சித்தாந்த சைவத்தைத் தாபித் தல் தேவரீரது கடமையாகும், புத்தர் தம்மை ஈங்கு உயிர் செகுப்பது என் பரம் என்றான் - அதனைத் தாமே நிராகரிக்க ஈண்டு வந்த இப் புத்தர்களைத் தப்பாது உயிர் வதை செய்வது தமியேனது கடமையென்று விண்ணப்பஞ் செய்தான் எ—று.

திருப்பெருந்துறை உபதேசத் தானமாகலின் அவ்வுரிமை தோன்றப் பாண்டி நாட்டைத் தென்பெருந் துறை சூழ் நாடென விசேடித்தார். முப் பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நின்ற செம்பொருளைச் சிவஞானம் வாயிலாக உள்ளவாறு உணர்த்துவது சித்தாந்த சைவமொன்றே யாகலின் அதனையே ஈண்டுத் தாபிக்க என்பான் நின் பரஞ் சைவ ஞான நிலைமையை நிறுத்தல் என்றும், சிவநிந்தகர் வேதசிவாகம நிந்தகர்களுக்குப் பிராண தண்டமே பிராயச்சித்தமென்பது உண்மைநூற் றுணிபாகலின், அது தப் பாது செய்வேன் என்பான், என்பரம் புத்தர் தம்மை யீங்குயிர் செகுப்ப தென்றான் என்றுங் கூறினர். சித்தாந்தசைவக் கடவுளாகிய முதற்பொருள்



பூதமுதலிய முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்து நின்றதென்பது, "மொய் தரு பூத மாதி மோகினி யந்தமாகப், பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும் புகன்று, மெய்தரு சைவமாதி யிருமூன்றும் வித்தை யாதி, யெய்து தத் துவங்க ளேயு மொன்றுமின் றெம்மி றைக்கே" என்பதனானறிக. சிவ நிந்தகர்களைக் கோறலே பிராயச்சித்த மென்பது, "கண்டன னுயின் முக் கட் கடவுளை நிந்திப் போனைத், தண்டனை புரிந்து கொல்க வரிதெனிற் சமிக்க நின்று, மண்டனில் வலிய னன்றேல் வான்செவித் துளைகள் பொத் திக், கொண்டவ ணகன்று செல்க குலைகுலைந் தமல பத்தன்" என்பதனானு மறிக. இது அறுசீரடி யாசிரியவிருத்தம். (௪௬)

வளவனிவ் வகையிற் கூற வந்தபொய்ப் புத்த ரெல்லா
முளமயர் வெய்த வாத வூரருண் மகிழ்ச்சி யெய்திக்
களவுரை பகர்வோய் வந்த காரண முரைநீ யென்னக்
கிளர்செவி நுழைவே லென்னக் கேட்டவ னிதனைச் சொல்வான்.

இ—ள்: வளவன் இவ்வகையில் கூற - சோழமகாராசா இந்தப்பிர காரம் வாதவூரடிகளுக்கு விண்ணப்பஞ் செய்ய, வந்த பொய்ப் புத்தர் எல் லாம் உளம் அயர்வு எய்த - இலங்கையினின்றும் வந்த பொய்ச்சமயிகளாகிய பௌத்தர்களெல்லாம் அது கேட்டு மனமயர்ச்சி யடைய, வாதவூரர் உள் மகிழ்ச்சி எய்தி - திருவாதவூரடிகள் மனமகிழ்ச்சி யடைந்து, களவு உரை பகர்வோய் நீ வந்த காரணம் உரை என்ன - மயக்க வார்த்தைகளைப் பேசும் புத்தகுருவே நீ ஈண்டு வந்த காரணமென்னை சொல் என்று வினவ, கிளர் செவி நுழை வேல் என்னக் கேட்டவன் இதனைச் சொல்வான் - கிளரா நின்ற செவித்துவாரங்களில் நுழையும் பழுக்கக் காய்ச்சிய வேலைப்போல அவ்விளியுரை வினாவுரைகளைக்கேட்ட புத்தகுரு இதனைச் சொல்வான் எ-று.

விளியுரையான் வெகுளியும், வினாவுரையான் அவரது சொற் சாதுரிய முதலியவற்றிற் கழுக்காறுங் கொண்டா னென்பார், கிளர்செவி நுழை வேல் என்னக் கேட்டவனென்றார். களவு - மயக்கம்; திருட்டென்பாருமுளர். கலு என்னும் வடமொழி தமிழிற் களவெனத் திரிந்ததென்றுமாம்; தீய தென்னும் பொருட்டு. உளம் மயர்வெய்த வெனக் கண்ணழித்தலும் ஒன்று, சோழமகாராசாவினது சிவபத்தி மேலீட்டை நோக்கி வாதவூ ரடிகள் உண்மகிழ்ந்தாரென்க. (௪௭)

மன்னுமெங் கடவு ளல்லான் மற்றிலை கடவு ளென்றே
யிந்நெடும் பதியி லெய்தி யியம்பியிங் கெவருங் காணப்
பொன்னினம் பலத்தே யெங்கள் புத்தரை வைத்தல் வேண்டி
யென்னல்வந் திருந்தே னிங்கு வேறிலை நினைந்த தென்றான்.

இ—ள்: இந் நெடும் பதியில் எய்தி - இப் பெரும்பதியின் கண்வந்து, மன்னும் எம் கடவுள் அல்லால் மற்றுக் கடவுள் இலை என்று இயம்பி - நிலை பெற்ற நம் புத்த கடவுளல்லது உலகிற்கு வேறு கடவுளில்லையென்று நும்மோடு வாதித்து வென்று, இங்கு எவரும் காணப் பொன்னின் அம்பலத்தே எங்கள் புத்தரை வைத்தல் வேண்டி - இங்கே நீவிரெல்லீருங் காணக் கனக சபையின்கண்ணே நம் புத்த கடவுளைத் தாபனஞ் செய்யும்படி கருதி, நென்னல் வந்து இருந்தேன் - முன்னை நாளின்கண் வந்திருந்தேன், இங்கு நினைந்தது வேறு இலை என்றான் - இங்கே நான் எண்ணி வந்த காரியம் பிறிதொன்றில்லை என்று கூறினான் எ—று.

நுமது வாதத்தான் நங்கடவுள் கடவுளல்லரென இடையே வாதிக்கப் படமாட்டாத நித்தியரென்பான் மன்னுமெங் கடவுளென்றும், நும்மை வாதில் வென்று நம் புத்த சமயக் கொள்கைக் குடம்படுத்தி நுமது சம்மதமுங் கொண்டே நங்கடவுளைக் கனகசபையிற் றாபனஞ் செய்வே னென்பான் இங்கெவருங் காணப் பொன்னினம்பலத்தே யெங்கள் புத்தரை வைத்தல் வேண்டி என்றுங் கூறினான். (௪௬)

என்றலும் வாத வூரெம் மிறைவர்புன் முறுவ லெய்தி
முன்றவ மொன்று மில்லாய் முயலிப மாவ துண்டோ
நன்றது நிற்க வுன்ற னற்பெருங் கடவு டானுஞ்
சென்றவ னடியிற் சேருஞ் செய்தியுஞ் செப்பு கென்றார்.

இ—ள்: என்றலும் - என்றிங்ஙனம் புத்தகுரு கூறுதலும், வாதவூர் எம்மிறைவர் புன்முறுவல் எய்தி - நஞ் சமயகுரவராகிய திருவாதவூரடிகள் திருப்புன்னகை செய்து, முன் தவம் ஒன்றும் இல்லாய் - பூர்வ சன்ம தவம் ஒரு சிறிதுமில்லாத புத்தகுருவே, முயல் இபம் ஆவது உண்டோ - எவ்வாற்றானும் முயல் யானையாவது முளதோ, நன்று - நீ கூறிய இது மிகவும் நன்று, அது நிற்க - அஃதவ்வளவினிற்க, உன்றன் நல்பெரும் கடவுடானும் அவன் அடியில் சென்று சேரும் செய்தியும் செப்புக என்றார் - உனது நல்ல பெரிய கடவுளினது இலக்கணத்தையும் உயிர்கள் அக்கடவுளதடியிற் சென்றடையு முத்தி இலக்கணத்தையும் இங்கே சொல்லுக வென்று வினவியருளினார் எ—று.

என்றலு மென்பது உம்மீற்று வினையெச்சம்; "அன்ன மரபிற் காலங் கண்ணிய, வென்ன கிளவியும்" என்பதனாற் கொள்க. ஒகாரம் எதிர்மறை. நன்றென்பது குறிப்பு மொழியாய்த் தீதென்னும் பொருடந்தது. முயல் இபமாயின், நீயும் நஞ் சைவ மதகண்டனமும் நின் புத்தமத ஸ்தபானமும் செய்து, கனகசபையிலே நஞ் சடாசாயகரை நீக்கி நின் புத்தகடவுளைத் தாபனஞ் செய்வாய்; முயலிபமாகாமையின், நீயும் அங்ஙனஞ் செய்ய வல்லையல்லை



என்பார் ஒட்டென்னு மலங்கார நெறியான் முயலிபமாவதுண்டோ என்றார். ஒட்டெனினும் பிறிதுநவிற்சி யெனினு மொக்கும். (௪௭)

அண்ணலா ருரைத்த போதி லாங்கவன் வெகுட்சி யெய்திக்
கண்ணிலா தவற்கு வெய்யோன் கதிரொளி காட்ட லாமோ
நண்ணலா வெங்க ணாத னற்புக ழுரைக்கி னன்னு
வெண்ணிலா யிரங்கள் வேண்டு மென்றுபி னிதுபு கன்றான்.

இ—ள்: அண்ணலார் உரைத்த போதில் - பெருமையிற் சிறந்த திருவாதவூரடிகள் இவ்வாறு வினவிய சமயத்தில், ஆங்கவன் வெகுட்சி எய்தி - அப் புத்தகுரு கோபங்கொண்டு, கண் இலாதவற்கு வெய்யோன் கதிர் ஒளி காட்டல் ஆமோ - பிறவிக் குருடனுக்குச் சூரியகிரணத்தின் ஒளியைக் காட்டுதல் கூடுமோ கூடாதன்றே அதுபோல, நண்ணலா எங்கள் நாதன் நல் புகழ் உரைக்கின் - நும்மறிவு சென்றறிதற்கரிய நங்கடவுளது உத்தமலக்கணத்தைச் சொல்லப் புகின், நல் நா எண் இல் ஆயிரங்கள் வேண்டும் என்று - அஃதிவ்வொரு நாக்கிற்கு அமையுமோ நல்ல பல்லாயிரம் நாக்குக்கள் வேண்டுமென்று முன்னர்ப் பொதுவகையாற் கூறி, பின் இது புகன்றான் - பின் சிறப்பு வகையால் இதனைக் கூறத் தொடங்கினான் எ—று.

ஈண்டொரு சொன் னீர்மைப்பட்டு நின்ற நண்ண லாகாத வென்னும் எதிர்மறைப் பெயரெச்சம் நண்ணலாகா வெனக் குறைந்து நின்றது. அறி வென்னும் வினைமுதல் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. புகழ் ஆகுபெயர். கண்ணிலாதவற்கு வெய்யோன்கதிரொளி காணப்படாதவாறுபோல நுண்ணறிவில்லாத நும்மனோர்க்கு நங்கடவுளது இலக்கணமறியப்படாதென்பது கருத்து. அக்கடவுளது புகழாகலின் நற்புகழ் என்றும், அப்புகழைக் கூறும் நாவாகலின் நன்னாவென்றும் விசேடித்தான். சேடன் போல்வார்க் கல்லது நம்போல்வார்க்கு விரித்துரைக்க முடியாதென்பதாம். (௪௮)

அறந்திகழ் பிடக நன்னூ லோதியன் புடைய னாகிப்
பிறங்குபல் யோனி தோறும் பிறந்துயிர்க் குறுதி செய்து
மறந்தரு கோற லாதி நால்வகை யொழித்து மாண்பு
சிறந்துள போதி நீழற் சேர்வனெம் மிறைவ னாவான்.

இ—ள்: எம் இறைவன் ஆவான் - நங் கடவுளாவார், அறம் திகழ் நல் பிடக நூல் ஓதி - கொல்லாமை முதலிய தருமங்களை விரித்து விளங்கும் நல்ல பிடகநூல்களைக் கூறி, அன்பு உடையன் ஆகிப் பிறங்கு பல் யோனி தோறும் பிறந்து - உயிர்களிடத்து அன்புடையவராகி விளங்காநின்ற பல யோனிகடோறும் பிறந்து, உயிர்க்கு உறுதி செய்து - அவ்வுயிர்கட்கு நன்மைகளைச் செய்து, மறம் தரு கோறல் ஆதி நால்வகை ஒழித்து - வன்கண்மையை யுடைய ஜாத்மவாத முதலிய குற்றங்க ணான்கையு நீக்கி, மாண்பு

சிறந்துள போதி நீழல் சேர்வன் - மகிமை சிறந்துள்ள அரசமர நீழலில் உருவத் திருமேனிகொண்டு வீற்றிருப்பர் எ—று.

கோறலாதிநால்வகை மேற் செயிர் நான்கென்புழி விஸ்தரிக்கப்பட்டன. தம்பொருட்டன்றி ஆன்மாக்களாகிய பிறர்பொருட்டுச் செய்யப்படுவனவாய் ஆகி யென்ப தொழித் தொழிந்த வினையெச்சங்களுன்கானும் அடையடுத்த பயனிலையானும் விளக்கிய இவ்வைந்தும் இவை போல்வன பிறவும் நங் கடவுட்கு இலக்கணமென்று மென்பது கருத்து. இவை போல்வன பிறவு மென்பது முன்னர் நிராகரிக்கப்படுகின்றுழி இனிது விளங்கும். இதனுன் வினுவிரண்டனுட் கடவுட் செய்தி கூறென்னும் முதல் வினுவுக்கு விடை கூறப்பட்டது. சென்றவனடியிற் சேருஞ் செய்திகூறென்னும் இரண்டாம் வினுவுக்கு விடை வருஞ்செய்யுளாற் கூறப்படும். (௪௯)

மேவிய கருவிற் சேரு முருவம் வேதனை குறிப்புப்
பாவனை யுடன்விஞ் ஞானப் பஞ்சகந் தங்கள் கூடி
யோவில்பல் லுணர் வுண்டாகி யொழிவது பிறவித் துன்ப
மாவது பொன்றக் கேடா யழிவது முத்தி யென்றான்.

இ—ள்: மேவிய கருவில் சேரும் உருவம் வேதனை குறிப்புப் பாவனை உடன் விஞ்ஞானம் பஞ்ச கந்தங்கள் கூடி - உதாத்திற் பொருந்திய கருப்பத்தின்கட் சேரும் உருவம் வேதனை குறிப்புப் பாவனை விஞ்ஞானமாகிய இப்பஞ்சகந்தங்களுங் கூடித் தேகஞ் ஜனித்து, ஓவில் பல் உணர்வு உண்டாகி ஒழிவது பிறவித் துன்பம் - ஒழிவற்ற பலதிற அறிவுகளு முதித்துப் பின்பு தாங் கூடியவாறே அக்கந்தங்களின் கூட்டம் ஒவ்வொன்றாய் அழிவைப் பொருந்துவதே பிறவித் துன்பமாம், ஆவது பொன்றக் கேடாய் அழிவது முத்தி என்றான் - அங்ஙனங் கூடிய அப் பஞ்சகந்தக் கூட்டமும் இல்லை யென்னும்படி நாசமாயழிவதே நமது முத்தியென்று புத்தகுரு கூறினன் எ—று.

" தூக்கிற்சுட்டு, நீளின் யகாமுந் தோன்றுத னெறியே " என்புழி நெறியே என்னு மிலேசாற் சுட்டு நீண்டவழி யகரந் தோன்றாது வகரந் தோன்றிற்று. துன்பமாவதெனக்கூட்டிப் பின் மொழியை எழுவாய் வேற்றுமையின் சொல்லுருபென்றலு மொன்று. இப்பஞ்சகந்தங்களின் பாகுபாடும் பிறவும் மேன் முந்தும் பிடகமென்னும் செய்யுளுரையில் விரித்துக் கூறினும்; ஆண்டுக் காண்க. பிறவித் துன்பமாகிய பந்தகாரியத்தை முன்னர் விளக்கிய வழி யல்லது பந்த நீக்கமாகிய முத்தியின்பம் தெற்றென விளங்காமையின், மேவிய கருவிற்சேரு முருவம் வேதனை குறிப்புப், பாவனையுடன் விஞ்ஞானப் பஞ்சகந்தங்கள் கூடி, யோவில் பல் லுணர்வுண்டாகி யொழிவது பிறவித் துன்பமென அதனை முன்னர் விளக்கி, ஆவது



பொன்றக் கேடா யழிவது முத்தியென இதனைப் பின்னர்க் கூறினு னென்க. (௫௦)

வாதவூ ரண்ண லாரும் வண்புனற் பொன்னி நாடன்
றீதிலா முகத்தி னூடு சிறந்தருட் பார்வை நல்கிப்
பேதையா யறிமால் கொண்டு பித்துரை பகரும் புத்தற்
கேதியா மின்று சொல்வ தென்று பின்னிது புகன்றார்.

இ—ள்: வாதவூர் அண்ணலாரும் பொன்னி வண் புனல் நாடன் - பெருமையிற் சிறந்த திருவாதவூரடிகளும் காவிரிநதி வளஞ் சுரக்கும் புனனுட்டையுடைய சோழமகாராசாவினது, தீது இலா முகத்தின் ஊடு சிறந்த அருள் பார்வை நல்கி - நன்முகத்தின்கட் பொருந்தத் திவ்விய கிருபாநோக்கஞ் செய்து, பேதையாய் அறிமால் கொண்டு பித்து உரை பகரும் புத்தற்கு - முழுமகனுய் அறிமடம் பூண்டு ஒன்றற்கொன்று சம்பந்தமற்ற பித்துரைகளை வசனிக்கும் இப்புத்த குருவுக்கு, யாம் இன்று சொல்வது ஏது என்று - யாமின்று சொல்லற்பால தென்னையோவென்று சிறிது சிந்தித்து, பின் இது புகன்றார் - பின்னர் இதனைக் கூறியருளுவாராயினர் எ — று.

உம்மை இறந்தததழீஇயிற்று. பேதை - யாதுமறியாதவன். அறிமால் - அறிமடம். அஃதாவது தான் சிற்றறிவின னுகவே யிருந்துகொண்டு தன்னைப் பேரறிவினனுக வைத்து நன்கு மதித்தல். அது "காணுதாற் காட்டுவான் றான்காணுன் காணுதான், கண்டானுந் தான் கண்ட வாறு" என்பதனுனு முய்த்துணர்க. ஈண்டியாங் கூறப்புகுவன தெற்றென விளங்கும் அறிவிலனுகலின் யாதுசொல்லி விளக்குதுமென்பார் பித்துரை பகரும் புத்தற் கேதியா மின்று சொல்வ தென்றும், தருக்கமுகத்து வாளாவிருத்தல் தோல்வித் தானத்தின்பாற் படுமாகலின் பின்னிது புகன்றார் என்றுங் கூறினர். அறிமால், அறிமடம், புல்லறிவென்பன ஒரு பொருட்கிளவி. (௫௧)

தருமமுண் டென்று நன்னூல் சாற்றினன் றலைவ னென்பை
மருவிய வுணர்வுண் டாகி மறைந்திடுங் கணத்தி னென்பை
பொருளுட னுரைநீ தேடிப் புகலுமுன் னுணர்வு போனு
லிருடரு நின்னூல் சொல்வ தெப்படி யியம்பல் வேண்டும்.

இ—ள்: தருமம் உண்டு என்று நல் நூல் தலைவன் சாற்றினன் என்பை - கொல்லாமை முதலிய அறங்களுண்டென்று நல்ல பிடகநூல்களை நங் கடவுள் கூறினுரென்று முற்கூறினை, மருவிய உணர்வு உண்டாகிக் கணத்தில் மாய்ந்திடும் என்பை - பொருந்திய அறிவுண்டாகிப் பின்னர்

அது கணப்பொழுதிற் கெடுமென்று பிற்கூறினை, உரை உடன் பொருள் தேடிப் புகலும் முன் உணர்வு போனால் - சொல்லையும் பொருளையுந் தேடி நூல் செய்வதன் முன்னமே அவ்வறிவு க்ஷணபங்கமுறுமேயானால், இருள் தரும் நின் நூல் சொல்வது எப்படி நீ இயம்பல் வேண்டும் - மயக்கத்தைத் தரும் நின் பிடகநூல்களை நுங் கடவுள் கூறிய தெங்ஙனம் நீ சொல்வாயாக எ-று.

இரண்டும் பரஸ்பர விரோதமாகலின் நங்கடவுள் நூல் செய்தாரென நீ கூறியது அசம்பாவிதமே என்பதாம். இதனால் அறந்திகழ் பிடகநன்னூலோதி என்னும் முதலாங் கூறு மறுக்கப்பட்டது. (௫௨)

ஆதலா லறநூ லென்ப துனக்கிலை யுயிர்கட் காகப்
பேதமாம் யோனி தோறும் பிறந்தன னிறைவ னென்றாய்
தீதுசே ரொருவர் மாலைத் தீர்க்கவந் தவர்க டாமும்
போதமால் கொள்ளி னம்மால் போவதங் குள்ள தாமோ.

இ—ள்: ஆதலால் அற நூல் என்பது உனக்கு இலை - ஆதலினாலே தருமசாஸ்திரமென்ப தொன் றுனக்கில்லை, அதுநிற்க, உயிர்கட்கு ஆகப் பேதம் ஆம் யோனி தோறும் இறைவன் பிறந்தனன் என்றாய் - உயிர்கண் மாட் டன்பு பூண்டு அவைகட்காக நாநா பேதமாகிய யோனிகடோறும் நங்கடவுள் பிறந்தாரென்றனை, (சனனமானது மயக்கந் தருவது சாதமேயாகலின்), தீதுசேர் ஒருவர் மாலைத் தீர்க்க வந்தவர்கள் தாமும் போதமால் கொள்ளின் - தீமை பொருந்திய ஒருவரது மயக்கத்தை நீக்கும்படி வந்தவர்கள் தாமும் அவரினும் மிக மயக்கத்தைக் கொள்ளின், அம் மால் அங்குப் போவது உளது ஆமோ - அம்மயக்கம் அங்கீகரிக்கப்படுபவரினின்றும் நீங்குவது உண்மையாகுமோ எ—று.

ஆகாதென்பார் எதிர்மறை யோகாரந்தந்து உள்ளதாமோ என்றும், பிறர் மயக்கந் தீர்க்கவந்து தாம் மயங்குதலே பெரு மயக்கென்பார் போதமால் கொள்ளின் என்றும் கூறினர். இனிப் போதமால் என்பதனைப் போதம் மால் எனக் கண்ணழித்து, அறிவு மயக்கம் என்றலு மொன்று. இதனால் அன்புடையனாகிப் பிறங்குபல் யோனிதோறும் பிறந் துயிர்க் குறுதி செய்தென்னும் இரண்டாங் கூறு மறுக்கப்பட்டது. (௫௩)

கொல்வது கருதா னெங்கள் கோவென வுரைத்தாய் முன்னம்
பல்வகை யோனி தோறும் பார்மிசைப் பிறக்கு நாளில்
வெல்புலி நரியே யாகி வெம்பசி யுற்றான் மற்றுப்
புல்லொடு தழையோ தின்பா னின்பெரும் போதி நாதன்.

இ—ள்: எங்கள் கோ கொல்வது கருதான் என முன்னம் உரைத்தாய் - நங்கடவுள் உயிர்க் கொலை செய்ய நினைக்கவும் மாட்டாரென்று முன்னர்க் கூறினாய், நின் பெரும் போதி நாதன் பல்வகை யோனி தோறும் பார்மிசைப் பிறக்கும் நாளில் - அதற்கு முன்னர்க் கூறியபிரகாரம் அக்கடவுள் நானாவித யோனிகடோறும் பூமியிற் பிறந்து திரியுங் காலத்தில், வெல் புலி நரி ஏ ஆகி வெம் பசி உற்றால் - தன் பகையை வெல்லும் மாமிச பக்ஷணிகளாகிய புலியும் நரியுமாய்ப் பிறந்து கொடும்பசி பொருந்தப்பெறின், மற்றுப் புல்லொடு தழையோ தின்பான் - அவ்வுயிர்க் கொலைக் கேதுவும் பயனுமாய ஊன் றின்பதை விட்டுப் புல்லையும் பச்சிலைகளையுமா தின்பார், சொல்வாயாக எ—று.

ஆண்டுப் புல்லையுந் தழையையுந் தின்னார் ஊனையே தின்பாரெனப் பொரு டருதலின் மற்றுப் பிறிதென்னும் பொருட்கண் வந்தது; வினை மாற்றெனினு மமையும். ஆகவே, ஊன் றின்றல் எவ்வாற்றானும் உயிர்க் கொலையை இன்றியமையாமையின், கொல்வது கருதா னெங்கள்கோ என்றதும் அசம்பவமே என மறந்தரு கோறலாதி நால்வகை யொழித்தென்னும் மூன்றாங்கூறு மறுக்கப்பட்டவாறாயிற்று. பொறுத்தற்கரிய பசியென்பார் வெம்பசி என்றார். பசியுற்றாலென்பது, "நீரின் றமையா துலகெனின்" என்புழிப்போல ஈண்டுச் சங்கேத திருட்டாந்த வாய்ப்பாடாய் நின்று பசியுறு மென்பதை வலியுறுத்திற்று. புலி பசியுறினும் புற்றின்னாமையை, "புலியது பசியுறிற் புல்லுந் துய்க்குமோ" என்பதனானுமறிக. ()

கரவெனு முன்ற னூலிற் கந்தமைந் துடனே கூடி
யுருவமு மழியுமென்றா யுன்னிறைக் குருவ மெங்கே
விரவிய யோனி தோறு முயிர்க்கருள் செய்ய வேண்டி
மருவொரு வடிவங் கொண்டா னென்பதே மதியி லாதாய்.

இ—ள்: கரவு எனும் உன்றன் நூலிற் கந்தம் ஐந்து உடனே கூடி உருவமும் அழியும் என்றாய் - பொய்யென்று சொல்லப்படும் நின் பிடக நூலிற் கூறியபிரகாரம் பஞ்சகந்த சகிதமாகி உருவமும் பங்கமுறுமென்றனை, உன் இறைக்கு உருவம் எங்கே - இதுவே நின்மத சித்தாந்தமாயின், நின் கடவுட்கு நின் பிடகநூல் உண்டென்று கூறுமுருவம் பின்னர் யாண்டையதோ, மதி இலாதாய் - இங்ஙனம் கொள்கின்ற கழிமடவோனே, விரவிய யோனிதோறும் உயிர்க்கு அருள் செய்யவேண்டி மருவு ஒரு வடிவங் கொண்டான் என்பதே - பொருந்திய பல யோனிகடோறும் ஆன்மாக்கட் கருள் செய்ய விரும்பி நங்கடவுள் அதற்கியைந்த வடிவங் கொண்டு பிறந்தாரென்று நீ கூறலாமா! அங்ஙனங் கூறின், அத்திருஷ்டாந்தங்கள் பரஸ்பர விரோதமுறுகின்றன வன்றோ எ—று.

அப்பஞ்சகந்தங்களையன்றி உருவமும் பங்கமுறுமெனப் பொருடருதலின் உம்மை இறந்ததுதழீஇயிற்று. முன்னர் நங்கடவுட் குருவமுண்

டென்று கூறிப் பின்னர் அது பங்கமுறு மென்றல் விரோதம்; அதன் பின்னர் நங் கடவுள் ஆன்மாக்கட் கருள்செய்ய விரும்பி யோனிகடோறும் உருவங்கொண்டு பிறந்தா ரென்பது அதன்மேல் விரோதமாகலிற் பரஸ்பர விரோதமுறத் தருக்கிக்கும் நீ குதர்க்கியென்பார் மதியிலாதாய் என்றார். பரஸ்பர விரோதம் ஒன்றற்கொன்று விரோதம். (௫௫)

காரண வுயிரிற் கூடுங் காரிய வுருவின் றேலுஞ்
சீரணி போதி நீழற் சேரிறைக் குருவ மில்லை
பூரண ஞான மில்லாய் பொன்றுதன் முத்தி யென்னும்
பேருணர் வில்லா வுன்றன் பிடகநூல் யாவர் சொன்னார்.

இ—ள்: காரண உயிரில் கூடும் காரிய உரு இன்றேல் - காரண வஸ்துவாகிய ஆன்மாவோடு கூடும் காரியமாகிய உருவம் இவ்வாற்றானில்லையாயின், சீர் அணி போதி நீழல் சேர் நின் இறைக்கு உருவம் இல்லை - அழகு பொருந்திய அரசமர நீழலிலிருக்கும் நின் புத்த கடவுட் குருவந்தான் இல்லையே, பூரண ஞானம் இல்லாய் - அற்ப வறிவையுடைய புத்தகுருவே, பொன்றுதல் முத்தி என்னும் பேர் உணர்வு இல்லா உன்றன் பிடக நூல் யாவர் சொன்னார் – பஞ்சகந்தமுங் கெடுதலே முத்தியென்று கூறும் பேரறிவற்ற நின் பிடகநூலை வேறு யாவர் கூறினார், சொல்வாயாக எ—று.

ஒருவாற்றான் முறையே ஆன்மாவுக்கு முருவத்திற்கும் காரண காரிய சம்பந்தம் உண்டென்பார் காரணவுயிரிற் கூடுங் காரிய வுருவென்றும், நின்மதத்திற் கஃதில்லை யென்பார் இன்றேல் என்றும், இல்லையாகவே நின்கடவுட் குருவமில்லை யென்பதும் பெறப்படு மென்பார் நின் சீரணி போதி நீழற் சேரிறைக்குருவமில்லை என்றும், இவ்வவசித்தாந்தம் நினக் குடன்பாடாயது நின் அற்ப ஞானத்தானென்பார் பூரண ஞானமில்லாய் என்றும், இறத்தலே முத்தியென்று கூறும் நின் விபரீத நூல் அஞ்ஞான நூலென்பார் பொன்றுதன் முத்தியென்னும் பேருணர்வில்லா வுன்றன் பிடகநூலென்றும், அந்நூலை உருவமில்லாத கடவுள் கூறமாட்டாராகலிற் பாரிசேடத்தால் உருவமுடைய ஏனைப் பசுக்களே கூறியிருத்தல் வேண்டுமென்பார் நின் பிடகநூல் யாவர் சொன்னார் என்றுங் கூறினார். ஆன்மாவுக்கு முருவத்திற்கு மொருவாற்றாற் சம்பந்தமுண்மை முன்னர்ப் பெறப்படும். இவ்விரு செய்யுளானும் உருவமின்மை சாதித்தன்மேல் வைத்து, மேன்மை சிறந்துள போதிநீழற் சேர்வனெம் மிறைவனுவான் என்னும் நாலாங் கூறு மறுக்கப்பட்டது. (௫௬)

இருபதிற் றொருவ ராக வெண்ணுமுன் புத்த ரெல்லாம்
வருவது சிறந்த தாயர் வயிற்றினைப் பீறி யென்பை



பரிவொடு சுமந்து பெற்றார் றுயிர் கெடப் பழுது செய்தே
யருநர கத்தில் வீழு மவர்களோ கடவு ளாவார்.

இ—ள்: இருபதிற்று ஒருவர் ஆக எண்ணும் உன் புத்தர் எல்லாம் வருவது சிறந்த தாயர் வயிற்றினைப் பீறி என்பை - தண்ணங்காரன், மகாவீரன் முதலாக இருபதிற் றொருவராகச் சொல்லப்படும் நின் புத்த கடவுளரெல்லாம் பிறப்பது ஐவகைத் தாயருட் சிறந்த தமது நற்றாயது வயிற்றைப் பிளந்தென்று கூறுவை, பரிவு ஒடு சுமந்து பெற்றார் உயிர் கெடப் பழுது செய்து அரு நரகத்தில் வீழும் அவர்களோ கடவுளாவர் - வருத்தத்தோடு பத்துத்திங்கள் சுமந்து தம்மைப் பெற்ற நற்றாயரை உயிர் துறக்கும் வண்ணங் கொன்று முடிவில் அப்பாவத்தாற் பிறர்புக்கழுந்துதற்கரிய நரகக்குழியின்கண் வீழ்ந்தழுந்தும் அவ்வதி பாதகர்களோ கடவுளரென்று கொள்ளத்தக்கவர், இது சாலவும் நன்று எ—று.

அருநரகம் வேதனை சகித்தற்கரிய நரகமென்றுமாம். ஐவகைத் தாயராவார்: பாராட்டுந் தாய், கைத்தாய், ஊட்டுந்தாய், மூலைத்தாய், நற்றாயென்பவர். பசு வர்க்கத்துள்ளும் அதி பாதக காரிகளாகிய இவரைப் பதியென்று கோடல் பெரும் பேதைமை என்பது கருத்து. இதனான் நாலாங் கூற்றிற் பெறப்பட்ட இறைவனுவான் என்பது பன்மை பற்றியும் செயல் பற்றியும் இறைவனல்லனென மறுக்கப்பட்டது. (௫௭)

கரவுடைப் பூத நான்கின் கலப்பினிற் பேத மல்லா
துருவினுக் குயிர்வே றின்றென் றுரைப்பைநின் பொய்ம்மை நூலி
லிரவினிற் றுயிலுங் காலுன் முகத்தினி லேறிப் போகு
மரவினைப் பூத பேத மறிந்ததோ வறிவி லாதாய்.

இ—ள்: கரவு உடைப் பூதம் நான்கின் கலப்பினில் பேதம் அல்லாது உருவினுக்கு உயிர் வேறு இன்று என்று நின் பொய்ம்மை நூலில் உரைப்பை - தத்தங் காரணதன்மாத்திரைக ளுள்ளே அடங்கி மறைதலையுடைய பிருதிவி முதலிய சாதுர்ப்பூத சம்மிச்சிரத்தானய ஓர் வேறுபாடே யல்லது இவ்வுருவத்தின்கண் இதற்கு அந்நியமாக உயிரென்றொரு பதார்த்த மில்லையென்று நின் பொய்யாகிய பிடகநூற் கோட்பாடு பற்றிக் கூறுவை - இரவினில் துயிலுங்கால் உன் முகத்தினில் ஏறிப் போகும் அரவினைப் பூத பேதம் அறிந்ததோ அறிவு இலாதாய் - இராக்காலத்து நீ நித்திரை செய்யும்போது அச்சாதுர்ப்பூத சம்மிச்சிரத்தானய வேறுபாடு நின்மாட்டுளதேயாகவும் நின் முக முதலிய உறுப்புக்களினேறிச் செல்லும் பாம்பை அப்பூதபேதம் அறியாத தென்னையோ மூழ மகனே நீ சொல்வாயாக எ—று.

சத்ததன் மாத்திரையும் அதன்கணொடுங்கு மாகாய பூதமும் ஆசீர்வகர்க் குடம்பாடன்மையின், ஏனை நான்கு தன்மாத்திரைகளும் அவற்றின்க

ணெடுங்கும் எனை நான்கு பூதங்களுமே ஈண்டுக் கொள்ளப்பட்டன. அவை அவ்வாற்று ஒடுங்குதலைச் சங்காரக் கிரமத்தின் வைத்துக் கண்டுகொள்க. பாக்கு வெற்றிலை சுண்ணம்பென்னும் இம்மூன்றும் தம்முட்கூடுங் கூட்டத்தின்கண் ஓர் நிற வேறுபாடு தோன்றுதல் போலப் பிருதிவி முதலிய நான்கு பூதமும் தம்முட் கூடுங் கூட்டத்தின்கண் ஓர் அறிவு வேறுபாடு தோன்றுவதல்லது உடம்பின்கண் அதற்கு அந்நியமாக உயிரென்றொரு பதார்த்தமில்லையென்று இங்ஙனம் பொய்ப்பொருளைக் கற்பித்துப் பிடகநூல் கூறுதலின் அதனைப் பொய்ம்மை நூலென்றும், பாம்பு எனை ஊர்வன பல வற்றுள்ளும் மிக அஞ்சிப் பரிகரித்தற்குரிய தொன்றாகலின் அதனையே விதந்து அரவினை என்றும், அந்நான்கு பூதக்கலப்பும் துயிலுங்காலத்து முள்ளதே யாகவும் ஆண்டை நிகழ்ச்சியை அறியாமையின் பூத பேதக் கலப்பான் ஆண்டோரறிவு தோன்று மென்றல் ஒருவாற்றானும் பொருந்தா தென்பது நின் காட்சி யளவையான் அறிதற்பால தொன்றே யாகவும் அதனை யறியாது பிணங்கும் நீ பெரிதும் பேதைமையை யுடையை யென்பார் அறிவிலாதாய் என்றும் கூறினார். சம்மிச்சிரம் - கலப்பு. (௫௮)

உருவமு முயிருங் கூடு முணர்வுனக் கில்லை யிந்த
வுருவமிங் கிறந்த காலை யுயிர்கடி தகன்று போகு
முருவமு முயிரும் கூடிப் பிறக்குமே லிதனு லுன்ற
னுருவமு முயிரும் வேறு மென்றுரை யுன்றன் வாயால்.

இ—ள்: உருவமும் உயிருங் கூடும் உணர்வு உனக்கு இல்லை - மேற்கூறியவாறல்லது உடம்பு முயிரும் தம்முட் கூடுதலானே அறிவு நிகழு மென்னும் உண்மையறிவு நின் மதத்திற்கில்லை, அற்றேல் அங்ஙனங் கூடிய உடம்பு முயிரும் பின் யாது செய்யுமெனின்?, உருவம் இங்கு இறந்த காலை உயிர் கடிது அகன்று போகும் - இவ்வுடம்பு இங்ஙனம் இறந்தவழி அவ்வுயிர் சூக்கும தேகத்தோடு தன் வினைகாட்டும் கதி நிமித்தம் பற்றி விரைந்து செல்லும், சென்றபின் யாது செய்யுமெனின்? மேல் உருவமும் உயிரும் கூடிப் பிறக்கும் - மேலும் அவ்வாறே தன் வினைக்கீடாகப் பொருந்துவதோர் தூலதேகமும் அவ்வுயிருங் கூடிப் பிறக்கும், இதனால் - இவ்வாற்றான் உடம்பு முயிருங் கூடியவழியே அறிவு நிகழக் காணும் இவ்வனுமான அளவையால், உன்றன் உருவமும் உயிரும் வேறும் என்று உன்றன் வாயால் உரை - உன் உடம்பு முயிரும் தம்முள் வேறும் என்னும் நமது சித்தாந்தமே கொள்ளற்பாலதென்று நீயே உன் வாயால் இட்ட பங்கஞ் சொல்லக்கடவை எ—று.

சொற்பொருட் பின்வருநிலை. மேலுமென்னுமெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. வாயாலெனை வேண்டா கூறினார், பஞ்சகந்தங்கட் கந்நியமாய் உயிரென்பதொன்றில்லை யெனச் சாதித்த வாயென அதன் புன்மை



விளக்குதற்கும், இன்னும் இதன்கட்படுங் கடாவிடைகளை யெல்லாம் ஈண்டுத் தந்துரைத்துக் கொள்க வென்னும் தந்துணிபு முடித்தற்கு மென்க. உடம்பிறத்தல் நின் காட்சிப்பிரமாணத்தான் அறிந்து கொள்ளற்பாலதொன்றென்பார் உருவமிறந்தகாலை யென்னாது உருவமிங் கிறந்தகாலை யென்றும், உருவமிறக்கின்றுழி உயிர் அவ்வுடம்பினின்றும் முற்பிற்பாடற நீங்குமென்பார் உயிர் கடிதகன்று போகு மென்றும் கூறினார். மேலைச் செய்யுளான் நான்கு பூதக் கலப்பானே அறிவு நிகழுமென்னும் அவன் மதம் மறுக்கப்பட்டது. இதனால் உடம்பு முயிருங் கூடிய வழியே அறிவு நிகழுமென்னும் சுவமத ஸ்தாபனம் அவாய்நிலைப் பொருள் கோளான் மேலைச் செய்யுளோ டுளதாகிய இயைபுபற்றிச் சாதிக்கப்பட்டது. இவை இரண்டற்கும் தம்முள் வேற்றுமை. புத்த சமயிகளுக்குக் காட்சியும் அனுமானமுமென்னும் இரண்டுமே பிரமாணமாம். ஆகமப் பிரமாணம் அவர்கட் கின்று. அது, "மருவிய வளவை காட்சி மானமென் றிரண்டி வற்றால்" என்னும் பரபக்கச் செய்யுளானுமறிக. (௫௯)

வானமு மில்லை வானத் தோசையு மில்லை வான
மானதில் வழக்க தாமென் றரற்றுவை யுன்ற னூலிற்
கானிலம் புனறீ நான்குங் கலப்பதற் கிடம தாகும்
நீநவி லோசை வானி னிகழ்ந்துள செய்தி யென்பாய்.

இ—ள்: வானமும் இல்லை வானத்து ஓசையும் இல்லை வானமானது இல் வழக்காம் என்று உன்றன் நூலில் அரற்றுவை - ஆகாயமென்றொரு திரவியமுமில்லை அதன்கட் சத்தமென்றொரு குணமுமில்லை அவ்வாகாயமென்பது இல் வழக்காமென்று நின் பிடகநூற் கோட்பாடு பற்றிப் பிதற்றுவாய், நீ நவில் ஓசை - நீ வானமுமில்லை வானத்தோசையு மில்லை வானமானது இல்வழக்கதாம் என்றிங்ஙனம் தன்னை மறுத்துக் கூறிய இச் சத்த குணந்தானும், நிலம் புனல் தீ கால் நான்கும் கலப்பதற்கு இடம் ஆகும் வானின் நிகழ்ந்துள செய்தி என்பாய் - பிருதிவி முதலிய நான்கு பூதமுங் கூடிப் பரிணமித்துத் தொழிற்படுதற்குத்தான் இன்றியமையாது வேண்டப்படும் இடமாயிருக்கும் அவ்வாகாயத்தின்கட் சம்பவித்த காரியமே யென்று நீயே உடம்பட்டுக் கூறக்கடவாய் எ—று.

அரற்றுதல் பயனில் சொற்களைப் பலகாற் பேசுதல்; இழித்தற்கண் வந்தது. ஆகுமென்னும் பெயரெச்சம் வானென்னும் இடப்பெயர் கொண்டது. செய்தி - காரியம். நினக்குப் பிரத்தியட்சம் பிரமாணமாதலானும், சத்த குணமென்பது ஒன்றுண்மை நீ தன்னை ஈண்டில்லை யென அழித்துக் கூறும் இக் கூற்றின்கண்ணும் பிரத்தியட்சமாகத் தெளியக் கிடத்தலானும், அச் சத்தகுணத்துக்குப் பிருதிவியாதி எனை நான்கும் குணியல்லாமையிற் பாரிசேடத்தால் ஆகாயமே குணியென்பது பெறப்படுதலா

னும், படவே, அதுவுமோர் திரவியமெனக் கோடலே நினக்கினி யமைவுடைத்தென அவனைத் தம்மதத்திற் குடம்படுத்துவார் கா னிலம் புனறீ நான்குங் கலப்பதற்கிடமதாகு, நீ நவிலோசை வானி னிகழ்ந்துள செய்தியென்பாய், என்றார். இதனால் ஆகாய பூதமும் அதன்கட் சத்த குணமும் இல்லை யென்னும் அவன் மதம் முறையே காரியவேதுப்பற்றியும் காட்சிப் பிரமாணம்பற்றியும் மறுக்கப்பட்டது. (௬௦)

இடமிகுந் திசைதா னென்ப தில்வழக் கென்னுநீயே
வடநெடுந் திசையிற் போதி மரமென வணக்கஞ் செய்வை
புடவியி லறிவி லாரும் பித்தரும் பொய்ம்மை யோரு
முடனிக ழவையிற் கூறி னொக்குநீ யுரைப்ப வெல்லாம்.

இ—ள்: இடம் மிகும் திசை என்பது தான் இல்வழக்கு என்னும் நீயே நெடும் வட திசையில் போதி மரம் என வணக்கம் செய்வை - மிகவும் விசாலமாகிய திசையென்பதொரு திரவியமானது இல்வழக்கென்று கூறும் நீயே அதனோடு மாறுபட உயர்வாகிய உத்தர திக்கின்கணுள்ள அரசமரமென அதனைக் குறித் தீண்டிருந்து நமஸ்காரஞ் செய்வாய், புடவியில் அறிவு இலாரும் பித்தரும் பொய்ம்மையோரும் உடன் நிகழ் அவையில் கூறின் - இப்பூமியின்கண் மந்தமதிகளும் பித்தாதிக்க ரோகிகளும் குதர்க்கிகளும் ஒருங்கிருக்கும் அவைக்களத்தின் மாத்திரம் கூறப்படின், நீ உரைப்ப எல்லாம் ஒக்கும் - நீ கூறுவன வெல்லாம் பொருந்தும் எ—று.

கூர்த்த விவேகிகளாகிய கல்விமான்களது அவைக்களத்துக்கூறப்படின் நின் கூற்றுள் ஒன்றும் அங்கீகரிக்கப்பட மாட்டாதென்பது குறிப்பெச்சம். முன் இல்வழக்கென்றதனைப் பின் உள்வழக்கெனக் கொண்டு இங்ஙனம் வெளிப்பட முன்னொடு பின் மலைய மயங்கிக் கூறும் நின்னொடு வாதித்தல் நம்போல்வார்க்குத் தகாதென்பது கருத்து. அரசு வெள்ளரசு. அது தன் கடவுட்கு வாசஸ்தானமாகலின் வணங்கற்பாலதென்பது அவன் மத சித்தாந்த மென்க. உரைப்ப என்பது அன்பெறா அகாவீற்றஃறிணைப் பலவறி சொல். இதனாலே திசையென்ப தில்வழக்கென்னும் அவன் மதம் மறுக்கப் பட்டது. (௬௧)

மரமுயி ரல்ல வென்பை மன்னுமைம் பூத மான
வுருவினர் போல நன்னீ ருணவினாற் கிளைகொண் டோங்குஞ்
சருகெழு முணவின் றாயி னுதலாற் சனனபேதத்
தருவினை யருத்த வெங்கோ னுருயிர்க் கமைத்த தென்பாய்.

இ—ள்: மரம் உயிர் அல்ல என்பை - புன்மா முதலியவற்றை உயிரில்லாத சடப்பொருளென்று சொல்வாய், மன்னும் ஐம்பூதம் ஆன உருவினர் போல நல் நீர் உணவினால் கிளை கொண்டு ஓங்கும் - அவை நிலை



பெற்ற பஞ்சபூத காரியமாகிய சரீரத்தையுடைய நம்மனோர் உணவுள் வழி அங்க விருத்தியும் அஃதில்வழி அங்கக்ஷீணமும் அடைவது போல நல்ல நீராகிய உணவுண்டாயிற் கவடு கோடு கொம்பு வளார் முதலிய கிளைகளை ஈன்று செழித்தோங்கி வளராநிற்கும், உணவு இன்று ஆயின் சருகெழும் - அவ்வுணவில்லையாயிற் சருகாய் உலர்ந்தழியும், ஆதலால் - இங்ஙனமாதலினாலே, சனன பேதத்து அருவினை அருத்த எங்கோன் ஆருயிர்க்கு அமைத்தது என்பாய் - பல திறத்தனவாகிய பூர்வ சன்மங்களிற் செய்து கொண்ட அனுபவித்தற்கரிய தீவினைப் பயன்களை நுகர்வித்தற்கு நங்கடவுள் அரிய ஆன்மாக்கட்கியற்றியது அப்புன்மா முதலிய அசர வடிவமென்று நீயே சொல்வாயாக எ—று.

சருகெழுமென்பது ஈண்டொரு சொன்னீர் மைத்து. எனை நில நீர் முதலிய சடப் பொருள்கள் போலத் தம்மியற்கையானன்றிப் புன்மா முதலியவை உணவுடைமையாகிய செயற்கையான் வளர்தலும் அஃதின்மையான் வளராது கெடுதலும் கண்கூடாகக் காண்டலின், நின்பிரமாணங்களிரண்டனுள் ஒன்றாகிய பிரத்தியக்ஷப் பிரமாணத்தானும் அவை உயிர்ப்பொருளாமென் றுடம்படுதலே நினக்கினிச் சால்புடைத் தென்பார் எங்கோனாருயிர்க் கமைத்த தென்பாய் என அவனையே அங்ஙனங் கூறென்றார். இதனாற் புன்மா முதலிய ஓரறிவுயிர்களை உயிரல் பொருளென்னும் அவன் மதம் மறுக்கப்பட்டது. (௬௨)

வன்பெரும் பழுது கோறன் மண்மிசைப் பிறர் செகுத்த
புன்புலா றின்ன னன்றென் றுரைப்பைநின் பொய்ம்மை நூலிற்
றின்பையென் றுனக்கு நல்லூ னுடலுயிர் செகுத்தே யூட்டி
யுன்பசி தணித்தார் பாவ மெய்துவ துனக்கு நன்றோ.

இ—ள்: கோறல் வன் பெரும் பழுது - யாதானுமோருயிரை அதற்கு நிலைக்களமாகிய உடம்பினின்றும் தாமாகவே கொன்று நீக்கி அவ்வூனை உண்ணுதலே ஒருவர்க்குப் பெருங் கொடும் பாவமாம், மண் மிசைப் பிறர் செகுத்த புன் புலால் தின்னல் நன்று என்று நின் பொய்ம்மை நூலில் உரைப்பை - அஃதன்றி இவ்வுலகத்து ஒருவர் கொன்ற புல்லிய ஊனை மற்றொருவர் உண்ணுதல் பாவமாகாதென்று நின் பொய்ம்மையாகிய பிடகநூற் கோட்பாடு பற்றிப் பேசுவை, உடல் உயிர் செகுத்து நல் ஊன் தின்பை என்று உனக்கு ஊட்டி உன் பசி தணித்தார் - உயிரை உடம்பினின்றுங் கொன்று நீக்கி இந் நல்ல ஊனை உண்பாயென்று உபசாரத்தோடு உனக்கூட்டி இங்ஙனம் உன் பசியைத் தணித்தவர், பாவம் எய்துவது உனக்கு நன்றோ - அக்கொலைப்பாவத்தை அடைவது அவ்வூனை மகிழ்ந்துண்ட உனக்கு நல்லதோ எ—று.

நன்றாகாதென்பார் எதிர்மறை யோகாரந் தந்து நன்றோ என்றும், இங்ஙனம் குற்றத்தைக் குணமாகத் திரித்துக்கூறும் நின்னூல் மெய்நூலன் றென்பார் அதனைப் பொய்ம்மை நூலென்றுங் கூறினார். பாவமென வந் தமையின், முன் அதனைச் சாதிக்க வந்த பழுதென்பது பாவமென்பதும், நன்றென்பது பாவமாகாமை என்பதும் தாமே போதருமென்க. உட லுயிர் செகுத்தேயூட்டி என்பது எதிர்நிரனிறை. ஊன் முன்னும் கொலை யால் வந்தமையின் ஊனுண்டல் கொலைப் பாவத்திற்குக் காரியமாதலும், பின்னும் கொலையை உண்டாக்குதலின் அதற்குக் காரணமாகலும் ஒருங் குடைமையானும், செய்ந்நன்றி மறத்தலாகிய உய்தியில் குற்றந் தங்குத லானும், பிறர் கொன்ற ஊனை உண்ணுதலும் பெரும் கொடும் பாவமென் பது இதனாற் சாதிக்கப்பட்டது. செய்ந்நன்றி மறத்தல் உய்தியில் குற்ற மென்பது, "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந் நன்றி கொன்ற மகற்கு" என்பதனானுமறிக. இருபதிற் றொருவ ரென்னுஞ் செய்யுண் முதல் இதுகாறுமுள்ள எழு செய்யுட்களானும் பின் வரும் ஐந் தாங் கூற்று ளடங்காது எஞ்சிநின்ற புத்தமத ஆபாசங்களுட் சில அவாய் நிலைப் பொருள்கோளானும் இடையே ஈண்டெடுத்தோதி மறுக்கப்பட்டன. இனி ஐந்தாங் கூறு மறுப்ப. (௬௩)

காரண நிற்க வென்றுங் காரியங் கெடுதல் வீடென்
றாரணம் பரவு மெங்கோ னாகமம் புகல்வார் சொல்வார்
போரணங் குயிருஞ் சேரப் பொன்றுதன் முத்தி யென்று
பேரணங் குற்ற நீயே பிறிவறி யாது சொன்னாய்.

இ—ள்: காரணம் (என்றும்) நிற்க என்றும் காரியம் கெடுதல் வீடு என்று - காரணமாகிய ஆன்மா நித்தியப் பொருளாய் நிற்க என்றும் காரியப் பொருளாகிய சரீரம் கேடடைதலே முத்தியென்று, ஆரணம் பரவும் எங்கோன் ஆகமம் புகல்வார் சொல்வார் - வேதங்களுந் துதிக்கும் பசு பதியாகிய சிவபெருமான் அருளிச்செய்த ஆகமங்களை ஓதியுணர்ந்த மகான்கள் கூறுவர், போர் அணங்கு உயிரும் சேரப் பொன்றுதல் முத்தி என்று - ஐம்புலன்களாகிய வேட்டுவரால் நிகழும் பிரபஞ்சப் போரால் வருந்து முயிரும் அச்சரீரத்தோடு தீரக்கெடுதலே முத்தியென்று, பேர் அணங்கு உற்ற நீயே பிறிவு அறியாது சொன்னாய் - கழிமடச் செயலையுடைய நீயே அவற்றின் வேறுபாடுகளை யுணராது இங்ஙனம் கூறினாய் எ—று.

அணங்கு பின்னையதாகுபெயர்; இயற்பெயரெனக்கொண்டு பைசாச மென்பாருமுளர். காரியப்பொருள் - இடையே ஆக்கப்படும் பொருள். (௬௪)

அழிந்திடி னைந்து கந்த முத்தியென் றுரைத்தா யைந்து
மழிந்திடின் முத்தி பெற்றா ராரென வினவுங் காலை



யழிந்திடு மைந்தி னுண்டா முணர்வென வுரைக்கி னைந்து
மழிதன விலையா முத்தி யாவது மில்லை யென்றார்.

இ—ள்: ஐந்து கந்தம் அழிந்திடின் முத்தி என்று உரைத்தாய் - பஞ்ச கந்தங்களுந் தீரக் கெடின் அதுவே முத்தியென்று நீ கூறினாய், ஐந்தும் அழிந்திடின் முத்தி பெற்றார் ஆர் என வினவும் காலை - அவ் வைந்து மங்ஙன மழிந்தவழி ஆண்டு முத்தி பெற்றவர்தாம் யாவரென்று வினவுமிடத்து, அழிந்திடும் ஐந்தின் உண்டாம் உணர்வு என உரைக்கின் - அழிந்த அப் பஞ்சகந்தங்களினு முளதாகிய அறிவென நீ விடைகொடுக் கின், ஐந்தும் அழிந்தன இலையாம் - அப் பஞ்சகந்தங்களும் அழிந்தனவல்ல வாகும், முத்தி ஆவதும் இல்லை என்றார் - ஆகவே அம்முத்தியு மொன் றில்லை யெனத் திருவாதவூரடிகள் புத்தமத ஆபாசங்களை யெடுத்து விளக்கி இங்ஙனம் பரமத கண்டனஞ் செய்தருளினார் எ—று.

சொற்பொருட் பின்வருநிலை. புத்தகுருவே, நின் முத்தியாவது பஞ்ச கந்த நாசமாம். அவை நாசமாகவே, முத்திபெற்றவர் யார் என்பார்க்கு அப்பஞ்ச கந்தங்களி னுண்டாகி நிகழும் அறிவென்பையாயின், அவ்வறிவு அப்பஞ்சகந்தங்க ளுள்வழி உள்ளதாய், அவை இல்வழித் தானும் இல்லை யாம். ஆகவே, அப்பஞ்சகந்தங்க ளழிய அவ்வறிவு முடனழியு மென்பது நன்கு சித்தித்தலின், அறிவே முத்திபெற்றதென்று நீ அவ்வறிவை உள் பொருளாகக் கோடல் பொருந்தாது. பொருந்தின், அப்பொழுது பஞ்ச கந்தமு மழியாமை நிச்சயமெனவே படும். படவே, பஞ்சகந்தமுமழிதலே தனக்கிலக்கணமாகவுடைய நின் முத்தியும் இல்லையென்றா ரென்பதாம். இவ்விரு செய்யுளானும் பஞ்சகந்தங்க ளழிந்துழியும் முத்திப்பே றின்று, அழியாவழியும் முத்திப்பேறின்றென மேவிய கருவிற் சேரு மென்னுஞ் செய்யுளிற் கூறிய ஐந்தாங்கூறு மறுக்கப்பட்டது. (௬௫)

வேறு,

பொங்கு புகழ் மங்கியுள புத்தனும் வெகுண்டே
யெங்கடவு ளேதுபெறு முத்தியெது வென்றீ
ருங்கடவுள் யாதுமது முத்தியெது வென்னத்
தங்குசிவ ஞானமுனர் சைவரிது சொல்வார்.

இ—ள்: பொங்கு புகழ் மங்கி உள புத்தனும் வெகுண்டு - இதுகாறும் மேன் மேற் கிளரும் தன் புகழாகிய தீபம் ஈண்டொளி மழுங்கப்பெற்ற புத்த குருவும் அதுகேட்டுக் கோபங்கொண்டு, எம் கடவுள் ஏது பெறு முத்தி எது என்றீர் - நீர் நமக்குக் கடவுளும் நம்மாற் பெறப்படும் முத் தியுமில்லையென் றித்துணையுஞ் சாதித்தீர் அதுநிற்க, உம் கடவுள் யாது உமது முத்தி எது என்ன - நுங் கடவுளிலக்கணம் யாது? நீர் பெறும்

முத்தியாவதென்னை? சொல்லுமென்று வினவ, தங்கு சிவஞானம் உணர் சைவர் இது சொல்வார் - சைவாகமங்களிற் கூறப்படும் சிவஞானத்தை அநுபூதியில் வைத்துணர்ந்த சைவாசாரியராகிய திருவாதவூரடிகள் அவ் வினாக்கட்கு இங்ஙனம் விடைகொடுத்தருளுவாராயினர் எ—று.

குறிப்புருவகம். ஏது வென்பது ஏதுவெனக் குறுகிற்று. வினாவிரண்டும் ஈண்டு இன்மை குறித்து நின்றன; எவன் என்னும் வினாப்பெயர் இன்மை குறித்து நிற்புழிப்போல. இனி எங்கடவு ளேதுபெறு முத்தியெது வென்றீர் என்பதற்கு நமது கடவுள் யாது நம்மாற் பெறப்படும் முத்தி யாது என்று நீர் முன் வினவினீர் எனப் பொருள் கூறி, ஆதலின், யானும் அவ்வாறு உம்மை வினாவுகின்றே னென்பது தாற்பரிய மாக்குவாரு முளர். இது கலிவிருத்தம். (௬௬)

ஆலமணி நீழலி லிருந்தற முரைக்குங்
கோலமது கண்டுபலர் கும்பிட நடிப்போன்
மேலணியு நீறனுமை கூறனருள் மேவுஞ்
சீலனவ னற்பெருமை செப்பவெளி தாமோ.

இ—ள்: மணி ஆல நீழலில் இருந்து அறம் உரைக்கும் - நங்கடவுள் அழகிய கல்லால விருக்ஷ நீழலிலே தக்ஷிணாமூர்த்தியாயிருந்து சனகர் முதலிய முனீந்திரர்களுக்குத் தருமோபதேசஞ் செய்பவர், கோலம் பலர் கண்டு கும்பிட நடிப்போன் - தந்திருமேனியைத் தம்மடியவர் பலரும் தரிசித்து வழிபடும் பொருட்டு இங்கே கனகசபையின்கண் அநவரததாண்டவஞ் செய்தருளுபவர், மேல் அணியும் நீறன் - திருமேனியி லணிந்த விபூதியை யுடையவர், உமை கூறன் - உமாதேவியை வாமபாகமாகவுடையவர், அருள் மேவும் சீலன் அவன் நல் பெருமை செப்ப எளிது ஆமோ - திருவருள் நிரம்பும் சுபாவ குணத்தை யுடையவராகிய அக்கடவுளது நல்ல மகிமை இவ்வியல்பிற்றென்று நாஞ் சொல்வதற்கு அது எளியதோ எ—று.

நற்பெருமை - மெய்ப்பெருமை. உரைக்கு மென்பது செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று லணையும் பெயர். உரைக்கும் கோலமெனப் பெயரெச்சமாகக் கோடலும், அருண்மேவுஞ் சீலனென்பதனை அடைமொழியாக்காது மேலனவற்றோடு வைத்தெண்ணி அடைகொளி யாக்கலும் பொருந்தாமை, முன்னர்த் தோஷாரோகணஞ் செய்யப்படுகின்றுழியும் அத் தோஷம் பரிகரிக்கப்படுகின் றுழியும் உய்த்துணர்க. தோஷாரோகணம் - குற்றமேற்றல். (௬௭)

தில்லைமணி மன்றிலுறை திங்களணி யெங்கோ
னெல்லையுள னேமொழிய வென்றருள் புரிந்தே
சொல்லுமளவிற் பல தொடுத்து முயலாதே
நில்லுமிது கூறுமென நீசனி துரைத்தான்.



இ—ள்: தில்லை மணி மன்றில் உறை திங்கள் அணி எம் கோன் - இத் தில்லைமாநகரின்கணுள்ள அழகிய கனகசபையில் வீற்றிருக்கும் வாக்கு மனாதீத கோசரப்பொருளாகிய நங் கடவுளானவர், மொழிய எல்லை உளனே என்று அருள் புரிந்து சொல்லும் அளவில் - இவ்வியல்பின ரென்று வரையறுத்துக் கூறி நாம் நினக்கு விளக்குதற்கு அவர் ஓர் வரையறையுள் அகப்பட்டவரோ அல்லராகலான் நினக்கெங்ஙனம் விளக்குதுமெனத் திருவாதவூரடிகள் கூறியருளி, அப்பாலும் ஒருவாறு தூலநிலையில் வைத்து விளக்கத் தொடங்குகின்றுழி, பல தொடுத்து முயலாது நில்லும் - நீர் மேலும் நானாவித சொற்பிரயோகஞ் செய்து பரக்கச் சொல்லாது நுங்கூற்றை இவ்வளவி னிறுத்தும், இது கூறும் என நீசன் இது உரைத்தான் - இவ்வினாவிற்கு விடைகூறுமென்று பதிதனாகிய புத்தகுரு இதனைக்கூறுவானாயினான்.

எல்லை - அளவை. திங்க ளணிதல் எல்லையில னாதலைச் சாதிக்க வந்த குறிப்பேது. வாக்கு மனாதீதகோசரம் - வாக்கையும் மனத்தையுங் கடந்து வெளிப்படுவது. (௬௮)

முன்னர்வட நீழலி லிருந்தற மொழிந்தா
னென்னிறைவ னென்னுமுரை யென்னெதி ருரைத்தீர்
மன்னுசெப மாலைகொ டிருக்குமது மற்றோ
ருன்னரிய நற்கடவு ளுண்டென நினைந்தோ.

இ—ள்: என் இறைவன் - நங்கடவுளானவர், வட நீழலில் இருந்து அறம் மொழிந்தான் என்னும் உரை என் எதிர் முன்னர் உரைத்தீர் — கல்லாலவிருக்ஷ நிழலிலிருந்து தருமோபதேசஞ் செய்தாரென்னும் வார்த்தையை நீர் எனக்கெதிரே முன்னர்க் கூறினீர், மன் செபமாலை கொடு இருக்குமது - அக்கடவுள் செபமாலை கையிற்கொண்டிருக்கு மத்தன்மை, மற்று ஓர் உன்னரிய நல் கடவுள் உண்டு என நினைந்தோ - தமக்குப் பிறிதோர் தியானித்தற் கரிய முதற்கடவுள் உண்டென்று கருதிப்போலும் எ—று.

கருத்ததுவாயின், அம்முதற்கடவுள் நம் புத்தகடவுளேயாமென அறிதி ரென்பது குறிப்பெச்சமென்க. உகரம் சாரியை. மன்னுதல் நிலைபெறுதலுமாம். இதனால் ஆலமணிநீழலிலிருந் தறமுரைக்குமென்னும் முதலாங் கூற்றிற்குத் தோஷங் கற்பிக்கப்பட்டது. (௬௯)

மல்லலுல கத்தவர் வணங்கிட நடிப்பன்
றில்லையிறை யென்னவுரை செப்பினிர் செகத்தே
நல்லறிவி னோர்கள்சிலர் நாடுபவ ருண்டா
யல்லதுத மிச்சைதனி லாடுபவ ருண்டோ.

இ—ள்: தில்லை இறை - நம் சிதம்பர சபாநாயகர், மல்லல் உலகத்தவர் வணங்கிட நடிப்பன் என்ன உரை செப்பினிர்-வளவிய இவ்வுலகத்தவர்

தரிசித்து வணங்கி வழிபட அனவரத தாண்டவஞ் செய்தருளுவா ரென்று கூறினீர், செகத்தே நல் அறிவினோர்கள் சிலர் நாடுபவர் உண்டாய் அல்லது தம் இச்சைதனில் ஆடுபவர் உண்டோ - இவ்வுலகின்கண்ணே தம்மினும் நல்லறிவை உடையோர் ஒரு சிலராயினும் காண்போர் உள்ளவிடத்தல்லது சுவேச்சையான் நடனஞ்செய்பவருமுண்டோ இல்லையே எ—று.

ஆதலால், நங்கடவுளது நடனம் அவரினும் மேம்பட்டவர் நோக்கும் பொருட்டுச் செய்யப்படுமென்பது பெறப்படும்; படவே, அம் மேம்பட்டவர் நம் புத்த கடவுளேயாமென வறிதிரென்பது குறிப்பெச்சமென்க. உண்டாயவழி யல்லதென்பது உண்டாயல்லதெனத் திரிந்து நின்றது. உம்மிரண்டும் விகாரத்தாற் றொக்கன. உலகத்தவரென்றது தம்மிற் சூழ்ந்த பசுக்களென்னுந் துணையாய்நின்றது. இதனாற் கோலமதுகண்டுபலர் கும்பிடநடிப்போன் என்னும் இரண்டாங் கூற்றிற்குத் தோஷம் கற்பிக்கப்பட்டது. (௭௦)

வையமுழு துய்யமணி மன்றினு ணடிப்போன்
மெய்யணியு நீறனென மேன்மைகொ டுரைத்தீர்
செய்யவொளி தங்குதிரு மேனிதனி னீறே
துய்யதென வோவுமது தொல்லிறை புனைந்தான்.

இ—ள்: வையம் முழுது உய்ய மணி மன்றினுள் நடிப்போன் - உலக முழுவது முய்யும் வண்ணம் அழகிய கனகசபையின்கண்ணே திருநடனஞ் செய்தருளும் நங்கடவுளானவர், மெய் அணியும் நீறன் என மேன்மைகொடு உரைத்தீர் - திருமேனியி லணியும் விபூதியையுடையவரென அதனை நமக்கோர் மேம்பாடாகக் கொண்டு கூறினீர், உமது தொல் இறை - நும் பழைய கடவுள், செய்ய ஒளி தங்குதிருமேனிதனின் நீறு துய்யது எனவோ புனைந்தான் - செவ்வொளி பொருந்திய திருமேனியிலே விபூதி அதி பாவனமென்று கருதிக்கொல்லோ தரித்தார் எ—று.

தந்திருமேனி அதி சுத்தமுள்ளதென்று கருதின், அதன்மீது நீற்றைப் புனைய நினையார்; அதினும் அதிசுத்தமுள்ளதென்று கருதியே நீற்றைப் புனைந்தாராகலின், நுங் கடவுள் நிருமல தேகியல்லர் சமலதேகியேயா மென்பது நமக்கு முடன்பாடுபோலு மென்பது குறிப்பெச்ச மென்க. அதிபாவனம் - அதிசுத்தம். இதனான் மேலணியு நீறனென்னும் மூன்றாங் கூற்றிற்குத் தோஷம் கற்பிக்கப்பட்டது. (௭௧)

மங்கையொரு பங்கனென வண்மைகொ டுரைத்தீர்
பங்குபடு பெண்வடிவு பாரின்மிசை யுண்டோ
வங்கமொரு பாதிமட மாதினுரு வானா
லுங்களிறை நீர்துறவி லுற்றதவ மன்றே.



இ—ள்: மங்கை ஒரு பங்கன் என வண்மை கொடு உரைத்தீர் - நங்கடவுள் எஞ்ஞான்றும் மங்கைப்பருவத்தையுடைய உமாதேவியை வாமபாகமாகவுடையவரென்று அதனையுமோர் மேம்பாடாகக் கொண்டு கூறினீர், பெண் பங்குபடு வடிவு பாரின்மிசை உண்டோ - ஸ்திரீ புருஷ ரூபமாய்ப் பங்குபட்ட வடிவமொன் றிவ்வுலகத்தின்கணுள்ளதோ இல்லையே ஆதலான் அஃதசம்பாவிதமே அதுநிற்க, உங்கள் இறை அங்கம் ஒருபாதி மடமாதின் உருவு ஆனால் - நுங்கடவுள் தந்திருமேனியிற் செம்பாதி ஸ்திரீ ரூபமாயின், நீர் துறவில் உற்றது அவம் அன்றோ - நீர் இல்லறத்தை யொழித்துத் துறவறத்தைமேற்கொண்டநுட்டிப்பது பயனில் முயற்சியாய் முடியுமன்றோ.

ஸ்திரீ புருஷ ரூபமாய்ப் பங்குபட்ட வடிவமொன்றுண்மை இவ்வுலகத் திதுகாறுங் கேட்கவும் படாமையின், மங்கையொரு பங்கனென நுங் கடவுட்கு நீர் கூறிய அர்த்தநாரீசுவர வடிவமும் அசம்பாவிதமே என்பான் பங்குபடு பெண்வடிவு பாரின்மிசை யுண்டோ வென்றும், வித்தின்க ணுள்ளதே விளைவின்கண்ணும் வருவதாகலின், நமக்கெல்லாம் பெரியதோர் ஆதாரமாகிய நுங்கடவுள் அர்த்தநாரீசுவரராய் இல்லறத்தை அநுட்டிக்க, அவர்வழிப்பட்ட நீர் அவ்வில்லறத்தை ஆகாதென் றொழித்ததும் துறவறத்தை ஆகுமென மேற்கொண் டநுட்டிப்பதும் அதனோடு மாறுபட்டுப் பயனின் முயற்சியாய் முடியுமன்றோ என்பான், அங்கமொரு பாதி மட மாதின் உருவானா, லுங்களிறை நீர் துறவி லுற்றதவமன்றோ என்றுங் கூறினான். தவமென்னோ என்பதூஉம் பாடம். இதனால் உமைகூற னென்னும் நாலாங் கூற்றிற்குத் தோஷங் கற்பிக்கப்பட்டது. (௭௨)

என்றவன் மொழிந்தபி னிகழ்ச்சிநகை செய்தே
மன்றனடி யார்கள்பெரு வாழ்வுபெற வந்தார்
நன்றியுப தேசமிது நற்றவ மிலாதா
யுன்றனெதிர் சொல்வதல வென்றிதுரை செய்வார்.

இ—ள்: என்று அவன் மொழிந்த பின் - என்றிங்ஙனம் அப்புத்தகுரு கூறிய பின்னர், மன்றன் அடியார்கள் பெரு வாழ்வு பெற வந்தார் இகழ்ச்சி நகை செய்து - சிவனடியார்கள் பேரானந்தப் பெரு வாழ்வு பெற்றுய்யும் வண்ணம் ஈண்டு அவதாரஞ் செய்த திருவாதவூரடிகள் அவனது அறிவின்மையைக்குறித்து அவமதிபயப்பச் சிரித்து, இது நன்றி உபதேசம்-நின் னாக்ஷேபங்கட்கு நம்மாற் கூறத்தகும் சமாதானங்களாகிய இவை வேத சிவாகமங்களிலே உள்ள நல்ல ரகசிய உபதேசப் பொருள்களாம், ஆகலான், நல் தவம் இலாதாய் உன்றன் எதிர் சொல்வது அல என்று - நல்ல பூர்வ சன்ம தவமில்லாத புத்தகுருவே பதிதனாகிய உனக்கெதிரே சொல்லற்பாலன வல்லவென்று மறுத்து, இது உரை செய்வார் - மற்றிஃதொரு சமாதானஞ் செய்யத் தொடங்கியருளினர் எ—று.

பதிதனாகிய புத்தகுருவுக் கெதிரே வேத சிவாகமங்களிலுள்ள சூக்குமார்த்தங்களைக்கொண்டு சமாதானஞ் செய்யப்புகின், அது அதிபாதகத்தின்பாற்படு மாகலான் அந்நெறியானன்றி ஸ்தூலார்த்தங்களி னாற்றல் கொண்டு பிறிதொரு நெறியாற் சமாதானஞ் செய்யத் தொடங்கினா ரென்பார், நன்றியுபதேசமிது நற்றவமிலாதா, யுன்றனெதிர் சொல்வதல வென்றிதுரை செய்வாரென்றும், அச் சமாதானங்கள் இந்நிலைமைக்கண் வெளிவாராதிருப்பினும் தமது நெஞ்சத்துண்மையின் இதுவெனத் தன்மையாற் சுட்டியுங் கூறினார். நகை உவகை முதலிய பலதிறத்தனவாகலிற் பிறிதோடியைபு நீக்கிய விசேடணத்தான் ஈண்டிகழ்ச்சிநகை என்றார். சுட்டு முன்னையது சாதியொருமை.

ஒங்குசெப மாலைகொ டிருத்தலுல கெல்லா
மீங்குயர் தவங்கள்செய வென்றினிது கொள்ளாய்
தாங்கிய படைத்தொழில்கள் சார்பொடு பழக்கும்
பாங்குள பணிக்கர்கர பத்திரம தாகும்.

இ—ள்: ஒங்கு செப மாலைகொடு இருத்தல் - நங்கடவுள் உயர்ந்த செபமாலையைத் திருக்கரத்திற்கொண்டு கல்லாலவிருக்ஷ நீழலில் வீற்றிருத்தல், ஈங்கு உலகு எல்லாம் உயர் தவங்கள் செய என்று இனிது கொள்ளாய் - இவ்வுலகத்தவர்க ளெல்லாம் உயர்ந்த தவங்கள் செய்யும் பொருட்டென்று நன்கறிந்து கொள்ளக் கடவாய், தாங்கிய படைத் தொழில்கள் சார்பொடு பழக்கும் பாங்கு உள பணிக்கர் கரபத்திரம் ஆகும் - அது கைகளிலே தாங்குகின்ற படைக்கல வித்தைகளை மாணாக்கர்க் கன்போடு பயிற்றும் கடப்பாட்டையுடைய ஆசிரியர்களது கையின்கணுள்ள வாட்படை போலாகும் என்றறிந்துகொள்ளக் கடவாய் எ—று.

மறுபொருளுவமை. நங்கடவுள் செபமணி மாலையைத் தந் திருக்கரத்திற் கொண்டு வடவிருக்ஷ நீழலில் வீற்றிருத்தல் தம் பொருட்டன்றி ஆன்மாக்கட்கு யோகநிலையை அறிவுறுத்தும் பொருட்டென் றறிந்துகொள்ளக் கடவாய் என்றாரென்பது கருத்தென்க. அவர் பேரருளின் வயத்தராகலின், அவர்க்கதுவே கடப்பாடு, அஃதொழிந்து வாளாவிருத்தல் அவரது பேரருட்கு இழுக்காய் முடியுமெனப் பொருட்கோதி வலியுறுத்துவார் சார்பொடு பழக்கும் பாங்குள பணிக்கர் கரபத்திரமதாகும் என உவமைக் கடைகொடுத்தோதி வலியுறுத்தினார். இதனால் மன்னுசெபமாலைகொ டிருக்குமது மற்றோ, ருன்னரிய நற்கடவு ளுண்டெனநினைந்தோ என முதலாங் கூற்றில் ஆரோபித்த கற்பனாதோஷம் பரிகரிக்கப்பட்டது. கரபத்திரம் - வாள். ஆரோபித்தல் - ஏற்றுதல். (௭௪)

ஈட்டிய தவப்பய னிலாதவர்கள் போலூ
னாட்டமுடை யாரெதிர் நடித்திடுவ னென்றாய்
காட்டவனல் போலுடல் கலந்துயிரை யெல்லா
மாட்டுமொரு நட்டுவனெம் மண்ணலென வெண்ணாய்.



இ—ள்: ஈட்டிய தவப் பயன் இலாதவர்கள்போல் ஊன் நாட்டம் உடையார் எதிர் நடித்திடுவன் என்றாய் - சனனங்கடோறு மீட்டிய புண்ணியப் பயனாகிய அனுபவப் பொருளில்லாத இவ்வுலகத்து நாடகர்களைப் போல நங்கடவுள் ஊனக்கண்ணை யடைய இவ்வுலகத்துப் பேதைகள் காண அவர்கட்கெதிரே ஊனநடனஞ் செய்வாரென்று கூறினாய், எம் அண்ணல் - நங்கடவுள், காட்ட அனல் போல் உடல் கலந்து உயிரை எல்லாம் ஆட்டும் ஒரு நட்டுவன் என எண்ணாய் - விறகின்கண்ணே தீயைப் போல உடம்பின்கண் வியாபித்து நின்று உயிர்களை யெல்லாம் பஞ்சகிருத்தியத்துள் அகப்படுத்தியக்கி இகபரங்களில் விட்டாட்டி ஞானக்கண்ணையுடையார்க்கு மாத்திரம் ஒருவாறு புலப்படும் ஓர் ஞானநாடகவாசிரியரென்று அறிந்துகொள்ளக் கடவாய் எ—று.

பஞ்சகிருத்தியத்துள் அகப்படுத் தியக்கி ஆட்டும் ஞானநாடக வாசிரியரெனவே, ஆன்மாக்கள் பாசபந்த வேதனை யகன்று கைவல்லிய சுக மடைதல் சத்தியமென்பது தாற்பரிய மாகலின், தம்மின் மேம்பட்டவரொருவருமின்றித் தாமே மேம்பட்டவர் என்பது தானே போதருமென்க. காட்டம் - விறகு. விறகின் கட்டீ அந்தர்ப்பவித்திருத்தலை, "விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியா, னுறவுகோ னட் டுணர்வு கயிற்றினன், முறுகவாங்கிக் கடைய முன் னிற்குமே" என்னுந் திருவாக்கானு மறிக. ஊனக்கண் ஞான நடனத்தை யுணராமையை, "ஊனக்கண் பாச முணரா பதியை ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி" என்பதனானு முய்த்துணர்க. இதனால் நல்லறிவினோர்கள் சிலர் நாடுபவ ருண்டா, யல்லதுத மிச்சைதனி லாடுபவருண்டோ என இரண்டாங் கூற்றின்மேல் ஆரோபித்த கற்பனா தோஷம் பரிகரிக்கப்பட்டது. (௭௫)

நீற்றினை யணிந்ததுவெ னின்னிறைவ னென்றே
சாற்றினை யுயிர்க் கிடர் தணிக்கவென வெண்ணாய்
தோற்றியுள தம்புதல்வர் துன்பமுறும் வெந்நோய்
மாற்றும்வகை யன்னைய ருந்திய மருந்தாம்.

இ—ள்: நின் இறைவன் நீற்றினை அணிந்தது என் என்று சாற்றினை - நங்கடவுள் தமது செம்பவளத் திருமேனியின்மீது விபூதிதாரணஞ் செய்ததென்னையென்று முன்னர் ஆக்ஷேபித்தனை, உயிர்க்கு இடர் தணிக்க என எண்ணாய் - அது, ஆன்மாக்களது பிறவித்துன்பத்தை நீக்கியருளும் பொருட்டென் றறியக் கடவாய், தோற்றி உள தம் புதல்வர் துன்பம் உறும் வெம் நோய் மாற்றும் வகை அன்னையர் அருந்திய மருந்து ஆம் - அஃது, தங்கணவராற் றம்மாட்டே தோற்றுவிக்கப்பட்டுள்ள தங் குழந்தைகளது துன்பமிக்க கொடிய நோயை நீக்கும்பொருட்டு நற்றாயர் உட்கொண்ட மருந்து போல்வதாம் எ—று.

ஈண்டுத் தோற்றி என்பது பிறவினைப் பொருளில் வந்தது; "தொல் காப்பியனெனத் தன் பெயர் தோற்றி" என்புழிப்போல; தன் வினைப்பொருளில் வந்ததெனக் கோடலு மொன்று. (எசு)

புல்லறிவு கொண்டுபல பொத்துமொழி புத்தா
நில்லவனை லாலொருவர் நீறணிவ துண்டோ
நல்லதிரு நீற்றினுள நன்குமறை தானே
சொல்லுமத லாலொருவர் சொல்லவெளி தாமோ.

இ—ள்: புல் அறிவு கொண்டு பல பொத்து மொழி புத்தா நில் - அற்ப வறிவைக்கொண்டு பல பொய் வார்த்தைகளைக் கற்பித்துக் கூறும் புத்த குருவே இனி அவ்வளவி னின் குதர்க்கத்தை நிறுத்து, அவன் அலால் ஒருவர் நீறு அணிவது உண்டோ - அக்கடவுளல்லது மற்றொருவர் பிறர் துன்பத்தைத் தீர்க்கும் பொருட்டுத் தந்திருமேனியில் விபூதி தரிப்பது முண்டோ, இல்லையே, நல்ல திருநீற்றின் உள நன்கு மறை தானே சொல்லும் - நல்ல விபூதியினிடத்துள்ள மகிமையை வேத சிவாகமங்களே பிரசங்கிக்கும், அது அலால் ஒருவர் சொல்ல எளிது ஆமோ - அம்முதனூல்களல்லது மற்றெருவர் சொல்ல அஃதெளியதோ எ—று.

மற்றொருவர் பிறர் துன்பத்தைத் தீர்க்கும் பொருட்டுத் தந் திருமேனியில் விபூதி தரித்தவழி அது தீருமாயி னன்றே அங்ஙனந் தரிப்பர், தரியாதொழிந்தமையின் அது தீராதென்பதும், தரித்துத் தீர்த்தலாற் சிவபெருமானொருவரே உலகிற்கு மெய்க்கடவுளென்பதும் இனிது பெறப்படுமாகலின், இஃதொன்றுமே பதிநிச்சயம் செய்தற்கமையும். அமையவே, இனி நின் குதர்க்கத்தை இவ்வளவி னிறுத்தென்பார் புல்லறிவுகொண்டு பல பொத்துமொழி புத்தா, நில்லவனலா லொருவர் நீறணிவதுண்டோ வென்றும், பவரோகத்துக்குப் பரம ஔஷதமாகலின் நல்ல திருநீறென்றும், முற்றறிவுடைய முதல்வன் வாக்காகலின் அது சொல்லுதல் கூடுமென்பார் மறை தானே சொல்லுமென்றும், ஏனையர் சிற்றறிவையுடைய பசுக்களாதலின் அவராற் சொல்லப்படுதல் கூடாதென்பார் ஒருவர் சொல்ல வெளிதாமோ என்றுங் கூறினர்; மறை சாதியொருமை. பொத்து - பொய். மகிமை சுசியுடைமை முதலாயின இவ்விரு செய்யுளானும் செய்ய வொளி தங்கு திருமேனி தனினீறே, துய்யதென வோவுமது தொல்விறை புனைந்தான் என மூன்றுங் கூற்றின்மேல் ஆரோபித்த கற்பனாதோஷம் பரிகரிக்கப்பட்டது. (எஎ)

பாகமதி லுத்தமியை வைத்தல்பழு தென்றாய்
போகமுல குக்கருள் புரிந்தருள வென்றே
மாகமுகி லொத்தகுழன் மங்கையொ டிருந்தான்
யோகமுயிர் கட்குதவ யோகவுரு வானான்.



இ—ள்: பாகமதில் உத்தமியை வைத்தல் பழுது என்றாய் - நங் கடவுள் தம்பாகத்தே உமாதேவியை இருத்தியருளியது குற்றமென்று கூறினாய், உலகுக்குப் போகம் புரிந்தருள என்றே மாக முகில் ஒத்த குழன் மங்கை ஒடு இருந்தான் - அபக்குவான்மாக்கட்குப் போகமூட்டித் தொலைப்பாகம் வருவித்தற் பொருட்டென்றே ஆகாயத்தின்கட் சஞ்சரிக்கும் முகிலையொத்த கரிய கூந்தலையுடைய உமாதேவியோடு கூடிப் போகவடிவாயிருந்தனர், உயிர்கட்கு யோகம் உதவ யோக உருவு ஆனான் - பக்குவான்மாக்கட்கு யோகமுத்தி யுதவுதற்பொருட்டு யோகவடிவா யிருந்தருளினார் எ—று.

நங்கடவுள் தம்பாகத்து உமாதேவியை இருத்தியருளியது தம்போக விச்சையின் பொருட்டன்று, போக விச்சை தீர்ந்தவழியே பாகம்வர, முத்தி சித்திக்குமாகலின், அபக்குவான்மாக்கட்குப் போகத்தை யூட்டித் தொலைத்துப் பாகம் வருவித்தற்பொருட்டே என்பது, பக்குவான்மாக்கட்கு யோக முத்தி யுதவுதற் பொருட்டு யோகவடிவாயிருத்தலான் நிச்சயித் தறியப்படுமென்பார் மேற் பெறப்பட்டதனையே ஈண்டுத் தந்து யோக முயிர்கட்குதவ யோகவுருவானான் என்றும், அபக்குவான்மாக்களென்பார் உலகென்றும், பக்குவான்மாக்களென்பார் உயிர் என்றும் கூறினார். போக விச்சை தீர்ந்த வழியே முத்தி சித்திக்கு மென்பது, "பேசிலந்நாட்டினோரே, சேருவர் வீடும் போகந் தீர்ந்துழிச் சேர்தலாலே" என்பதனானுமறிக. என்றே - எனத் திருவுளங் கொண்டே. "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார், யோகியா யிருந்துமுத்தி யுதவுதலதுவுமோரார், வேகியானாற்போற் செய்த வினையினை வீட்டலோரா, ரூகியாமூடரெல்லா மும்பரி லொருவனென்பார்" "முன்புலனீன்ற முகிழ்முலைக் கன்னியோ, டின்புறும் யோகி யெழுபுவிக்கரசே" என்பனவு மிக்கருத்தே பற்றி வந்தன. அநாதியே தொடர்ந்த கன்மங்களனைத்தும் அநுபவித்தன்றித் தொலையாமையானும், அக்கன்மங்களை இயற்றுதற்கு இச்சையே முக்கிய கருவி யாதலானும், அவ்விச்சைதான் பெரும்பான்மையும் காமரூபத்துள் அந்தர்ப்பவித்தலானும், அக்காமம் இவ்வுலகத்துப் பெண்களால் அடையப்படுதலானும், உலகானுக்கிரக சத்தியையே ஈண்டுமையாகிய பெண்ணாக ரூபீகரித்தமையானும், அச்சத்தியோடு கூடி உத்தியோகித்துப் போக மூர்த்தியும், அவ்வநுக்கிரகம் பெற்ற பின்னர் அச்சத்தி வேண்டப்படாமையின் அச்சத்தியினின்றும் பிரிந்து யோக மூர்த்தியும் ஆயினரென்பது நஞ்சைவத்துள்ளுறை யென்க. இன்னோரன்ன சைவத் துள்ளுறை யுண்மைகளை யுய்த்துணராமையிற் பரசமயிகள் தம்முட் பிணங்கித் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாங் கூறி இங்ஙன மிடர்ப்படுவாராயினரென்பது. ஈண்டுச் சத்தியென்பதற்கு வல்லமையென்பது பொருளன்றிப் பெண்ணென்பது பொருளன்று. இதனாற் பங்குபடு பெண்வடிவு பாரின்மிசை யுண்டோ என்னும் நாலாங் கூற்றின்மேல் ஆரோபித்த கற்பனா தோஷம், அங்கமொரு பாதிமடமாதினுருவானா, லுங்களிறை நீர்துறவி லுற்றதவமன்றோ என்னும் அவாந்தர தோஷத்தோடும் பரிகரிக்கப்பட்டது. (எஅ)

அந்தர்கர முற்றதடி யன்றியறி யார்போ
லிந்தமொழி கற்றனை யினிப்பிறிது தேராய்
மைந்துபுனை சந்தவிடை யான்மலரின் மன்னுங்
கந்தமென நின்றநிலை கண்டிலைக ணில்லாய்.

இ—ள்: அந்தர் கரம் உற்ற தடி அன்றி அறியார் போல் - குருடர் தங்கையிலகப்பட்ட ஊன்றுகோலை யல்லது பிறிதொன்றை அறியமாட்டார் அது போல, இந்தமொழி கற்றனை - இவ்வாக்ஷேபங்களை மாத்திரம் வினவக் கற்றுக்கொண்டனை, இனிப் பிறிது தேராய் - இனி இவ் வாக்ஷேப சமாதான மின்னதென் றறியமாட்டாய், கண் இல்லாய் - அறிவில்லாதவனே, மைந்து புனை சந்த விடையான் மலரின் மன்னும் கந்தம் என நின்ற நிலை கண்டிலை - வலிமை பொருந்திய அழகிய விஷ்ணுவாகிய இடபத்தை வாகனமாகக் கொண்ட நஞ் சிவபிரான் மலரின்கண் மணம் போல உலகெங்கும் வியாபித்து மறைந்து நிற்கும் அகண்ட பரிபூரண சச்சிதானந்த நிலையை நீ சிறிது மறிந்தாயில்லை எ—று.

அந்நிலையை நீ ஒரு சிறிதறிதல் கூடுமாயின் இங்ஙனம் பிணங்கி வாதிக்க மாட்டாயென்பது கருத்து. பிறிது சாதியொருமை. அந்தகரன்றி அந்தரென்பதும் குருடருக்கோர் பரியாயநாமமென்க. அது "அத்தினபுரி யதனிலைவருட னரியுஞ்சென் றந்தன்முன்னர்ப், பத்தியின விறைஞ்சுதலும்" என்பதனு மறிக. கண் - அறிவு. அது "கடவுட் கண்ணே" என்புழிக் "கண அறிவு" என்னும் பொழிப்புரையானு மறிக. கண்டிலையென்பதற்கேற்பக் கண் என்றதை ஞானக்கண்ணெனச் சொற்சித்திரம் பட வைத்துரைக்க. காண்டல் ஈண்டறிதன்மேற்று. (௭௯)

ஆதிசிவ யோகிமிகு போகியரு வாகுஞ்
சோதிவெகு ரூபிசுக வாரிதுய ரில்லா
நீதிமணி மன்றதனி னின்ற நிலை யல்லால்
யாதுமுடி யாதுபதம் யாரறிவ ரென்றார்.

இ—ள்: சிவயோகி - தக்ஷிணா மூர்த்தியும், மிகுபோகி - அர்த்த நாரீசுவரரும், அரு ஆகும் சோதி - விந்து நாத சக்தி சிவங்களும், வெகுரூபி - பிரம விஷ்ணு உருத்திர மகேசுவரர்களும், சுகவாரி - சதாசிவ மூர்த்தியும், துயர் இல்லா நீதி - இந்நவந்தரு பேதங்களையுங் கடந்த நிராமய நீதியுமாகிய, ஆதி - அதிசயநிலையையுடைய நங்கடவுள், மணிமன்றதனில் நின்ற நிலை அல்லால் - அழகிய கனகசபையின்கட் சகளீகரித்து நிற்கும் அநவரத தாண்டவ நிலையை ஒரு சிறிதறிவதல்லது, முடி யாது பதம் யாது - அவருக்குத் திருமுடி யாது திருவடி யாது, யார் அறிவர் என்றார் - அவரை யாவர்தாம் அறிய வல்லுந ரென்று திருவாதவூரடிகள் சுவமதஸ்தாபனஞ் செய்தருளினார் எ—று.



ஆதி - அதிசயம்; ஆகுபெயர். அதிசய நிலை உருவம் அருவம் ரூபமென்னும் இம் மூத்திற வடிவங்களும் தம்முள் ஒன்றோ டொன்று வேறுபட்டநிலை. இனி ஆதி முதற்கடவுளென்றுமாம், நீதி - நடத்துபவர். அது "நீதியாய் நியமாய் நியமாவதற், கேதிலாதவர்" என்பதனானு மறிக. துறவியாகிய தமக்கு உபதேசமூர்த்தியாதன்மேல் ஏற்புடைக் கடவுளுமாயிருத்தலின், யோக ரூபியாகிய தக்ஷிணாமூர்த்தியை. வெகுரூபி என்பதனுட் பெறப்பட்ட மஹேசுவர வர்க்கத்தினின்றும் வேறுபிரித்தோதினார். யோக வடிவுக்குப் போகவடிவம் வேறுபட்டதாகலிற் போகியாகிய அர்த்த நாரீசுவரரையும் அவ்வாறு பிரித்தோதினார். புத்தி முத்தி யிரண்டுந் தருதலிற் சதாசிவமூர்த்தியைச் சுகவாரி யென்றார். நங்கடவுள் வாக்கு மனாதீத கோசரப் பொருளாதலின், தமதுண்மை நிலையைத் தாமே அறிவிக்க நாம் அவரது திருவருளை முன்னிட்டு நின்று ஒரு சிறிதறியின் அறிவதல்லது நம்மியல்பானறிய நாம் வல்லேமல்லேம் என்பது கருத்து. "சீலமோ வுலகம் போலத் தெரிப்பரிதஞன்நிற்குங், கோலமு மறிவாரில்லை" "பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர், போதார் புனைமுடிபு மெல்லாப் பொருண்முடிபே, பேதை யொருபாற் திருமேனி யொன்றல்லன், வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலு, மோத வுலவா வொருதோழன் றொண்டருளன், சோதில் குலத்தான்றன் கோயிற் பிணாப்பிள்ளைகா, ளேதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலா, ரேதவனைப் பாடும் பரிசேலோரெம்பாவாய்" என்னும் திருவாக்குக்களும் இக்கருத்தேபற்றி வந்தன. இன்னும் இச்செய்யுட்கு, நங்கடவுள் சிவயோகியும், மிகுபோகியும், நிஷ்களரும், சகளரும், சுகோததியுமாயிருப்பவர். அவர் பிறவித் துயரை இலதாகச் செய்யும் பராசத்தியால் அதிட்டிக்கப்பட்ட கனகசபையில் நின்றருளும் நிலையை அறிவதல்லது அவருக்கு ஆதியு மந்தமு மில்லை அவரை யாவர் அறிய வல்லுநர் என்றார் எனக்கோடலு மொன்றென்க. இப்பொருட்குத் துயரில்லா நீதி யென்பதனை "மலைவில்லார்" என்பது போலக் கொள்க. (௮௦)

மைந்தர்மட வார்தமது வாக்கிறைவி நீயே
யிந்தவகை பொய்ம்மொழி யியம்புவதெ னென்றே
யந்தமில வாகிய வருங்கலைகள் வல்லார்
முந்துகலை மாதினை முனிந்திது மொழிந்தார்.

இ—ள்: அந்தம் இல ஆகிய அரும் கலைகள் வல்லார் - முடிவற்ற அரிய கலை ஞானங்களில் வல்ல திருவாதவூரடிகள், மைந்தர் மடவார் தமது வாக்கு இறைவி நீயே - ஆடவர் மகளிரது வாக்கிலிருந்து வசனிப்பிக்கும் தலைவியாகிய நாமகணீயே, இந்தவகை பொய் மொழி இயம்புவது என் என்றே கலை மாதினை முந்து முனிந்து - இந்தப் புத்தகுரு முதலிய புத்தர்களது வாக்கிலிருந்து இந்தப்பிரகாரம் பொய்வார்த்தைகளைக்

கூறுவிப்பதென்னையென்று முன்னர்க் கோபித்து, இது மொழிந்தார் - பின்னர் இதனைக் கூறியருளுவாராயினார் எ—று.

இயம்புவ தென்னுமொருமை அத்தொழின்மே னின்றது. இயற்றும் வினை முதலாகிய புத்தகுரு முதலாயினார் செய்யும் சிவநிந்தைக் குற்றம் ஏவும் வினை முதலாகிய நாமகண்மாட்டும் எய்துதல் ஒருதலையென வலியுறுத்துவார் அவ்வேவுதற் கருத்தாவை இயற்றுதற் கருத்தாவாக வைத்து மைந்தர் மடவார் தமது வாக்கிறைவி நீயே, இந்தவகை பொய்ம்மொழி யியம்புவதென்னென்றும், கலைமகளை முனிந்து கோடற்கேற்ற உரிமை விசேடம் திருவருளானன்றி அவரது கல்வித்திறத்தானு முண்டென்பது விளக்குவார் அந்தமிலவாகிய வருங்கலைகள் வல்லார், முந்துகலை மாதினை முனிந்தென்றுங் கூறினார். சிவபெருமானைப் புகழ்வித்தற்குரிய நீயே இகழ்விப்பது நினக்குய்தியில் குற்றமா மென்றார் என்பது கருத்து. இதனை வருஞ் செய்யுளான் இனிது விளக்குப. (௮௧)

வேறு.

தொக்க நான்மறை சொல்லுநீ யிவை சொல்வ தென்கலை மாதராய்
தக்கன் வேள்வியி லுன்ற னாசி தடிந்ததின்று மறப்பதே
முக்க ணானரு ளில்லை யென்றிடு மூகர் நாவை யகன்றுநீ
நக்க னார்திரு வாணை யேகென நாம டந்தையு மஞ்சினாள்.

இ—ள்: கலை மாதராய் - கலை மகளே, தொக்க நால் மறை சொல்லும் நீ யிவை சொல்வது என் - தொகுதியாகிய சதுர்வேதங்களைச் சிவபிரானே பரமபதியென்று பிரமாவின் வாக்கிலிருந் துண்மை கூறிய நீ ஈண்டதற்குமாறாக இப்புத்தகுரு முதலாயினார் வாக்கிலிருந்து அவர் பரமபதி யல்லரென்றற் றொடக்கத்துப் பொய்ம்மொழிகளாகிய இன்னோரன்னவற்றைக் கற்பித்துக் கூறுகின்றதென்னையோ, தக்கன் வேள்வியில் உன்றன் நாசி தடிந்தது இன்று மறப்பதே - சிவபிரானை நிந்தித்தியற்றிய தக்கனது யாகத்தில் உடம்பட்டிருந்த நின் மூக்கை வீரபத்திர ருத்திரர் துணித்த தண்டத்தை நீ இப்பொழுது மறந்துவிடலாமா, முக்கணான் அருள் இல்லை என்றிடு மூகர் நாவை அகன்று நீ நக்கனார் திருவாணை ஏகென - சோம சூரியாக்கினிகளாகிய மூன்று திருக்கண்களையுடைய சிவபிரானது திருவருள் உலகிற்கில்லை யென்று மறுக்கும் இப்பதிதர்களது நாக்கை விட்டகன்று நீ சிவாஞ்ஞைப்படி போய்விடென்று கடிந்து கழற, நாமடந்தையும் அஞ்சினாள் - அதற்கு நாமகளும் அச்சம் கொண்டனள் எ—று.

விகாரத்தாற் றொக்க நான்மறையு மென்னும் முற்றும்மை எச்சமுமாகிச் சிவாகமங்களையும் தழீயிற்று; ஏகாரம் எதிர்மறை. நாமடந்தையு மென்னும் உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்தது. முக்கணானருளில்லை



யென்பது தாற்பரியத்தாற் பதியல்லர் என்னும் பொருள் பயப்ப நின்றது. தக்கனது யாகத்தில் நாசி தடியப்பெறுதலாகிய முன்னை நிகழ்ச்சியை ஈண்டெடுத்துக்காட்டி அநுபவத்தில் வைத்து வலியுறுத்தன்மேலும், நக்கனார் திருவாணையுந் தந்து அஞ்சுவித்தலின் நாமடந்தையும் அஞ்சினா ளென்றும், அவ்வாணையது கடத்தற்கரிய விசேட ஆற்றலை யுணர்த்துதற்கு நக்கனாரை யென்னாது நக்கனார் திருவாணை யென்றும் கூறினார். மூகர் எளியவர். இது எழுசீரடியாசிரிய விருத்தம். (௮௨)

அஞ்சி வஞ்சகர் நாவி னின்று மகன்ற பின்பவர் தாமெலா
நஞ்சை யின்றவர் போலொ டுங்கி நடுங்கி மூகர்க ளாயினார்
நெஞ்ச நொந்துபி னீழ நாட னிறைந்தி டுஞ்சிவ ஞான நூ
லெஞ்ச லின்றிய செல்வர் பாத மிறைஞ்சி நின்றிது கூறுவான்.

இ—ள்: அஞ்சி வஞ்சகர் நாவில் நின்றும் அகன்றபின்பு - நாமகள் அதற்கச்சங்கொண்டு கபடிகளாகிய புத்தர்களது வாக்கினின்று நீங்கிய பின்னர், அவர் எல்லாம் நஞ்சு அயின்றவர் போல் ஒடுங்கி நடுங்கி மூகர்கள் ஆயினார் - அப்புத்தர்களனைவரும் விஷத்தை உண்டவர்களைப்போல மனமொடுங்கிச் சரீர நடுங்கி ஊமைகளாயினர், பின் ஈழ நாடன் நெஞ்சம் நொந்து - அதன் பின்னர் ஈழமண்டலாதிபதி கண்டு மனம் வருந்தி, நிறைந்திடும் சிவஞான நூல் எஞ்சல் இன்றிய செல்வர் பாதம் இறைஞ்சி நின்று இது கூறுவான் - திரிபதார்த்த லக்ஷணங்கணிறைந்த சிவஞான நூல்களில் ஒரு சிறிதுங் குறைவற்ற அருட்செல்வராகிய திருவாதவூரடிகளது திருவடிகளை வணங்கி எழுந்து நின்று இதனை விண்ணப்பஞ் செய்வான் எ—று.

தாமென்பது கட்டுரைச் சுவைக்கண் வந்தது. அரசன் கபடசிந்தை யிலனும் வாதத்திற் கந்நியனுமாகலின் ஊமையாகற் கேதுவின்மைகாட்டி விலக்குவார் கபடிகளும் வாதத்திற் கந்நியர்களுமாகிய ஏனைப் புத்தர்களை ஈண்டு வஞ்சகரென்றார். அரசன் கபடசிந்தையிலனாதல் முன்னை நிகழ்ச்சி பற்றித் தெள்ளிதிற் றுணியப்படும். படுமாயின், நெஞ்ச நொந்ததெற்றுக் கெனின், இந்நாள்காறும் உயிர்க்குறுதி பயவாத இப்பொய்ச்சமயத்தை மெய்ச்சமயமெனக் கொன்னே விசுவசித் துழன்றேனே என்னறி விருந்தவா றென்னை என்னும் துக்கமிகுதி பற்றியென்க. தேசாபிமானம்பற்றி எனக் கோடலுமொன்று. ஈண்டு வஞ்சகரென்றது புத்தகுருவையும் உசாத் துணைவரையும் சீடரையுமென்க. வாதிற் றோற்றவர்களைக் கோறலே தண்டமெனச் சோழமகாராசாவான் மேல் விதிக்கப்பட்டமையின் ஈண்டபசயமடைந்த புத்தர்கள் அதனை நினைந்து வருந்தி நடுங்கினாரென்பார் நஞ்சயின்றவர்போ லொடுங்கி நடுங்கி என்றார். (௮௩)

சொல்ல வல்லவர் மூகை யாயினர் சொல்லிலா வொரு மூகையாம்
வல்லி யென்புதல் விக்கு மூகை மறைந்து நல்லுரை கூடினு
னல்ல தொண்ட னுமக்கு நானென நாய னாரவ டன்னைநீ
யொல்லை யிங்கழை யென்ன வந்தவ ளுண்மை சேரவை நண்ணினள்.

இ—ள்: சொல்ல வல்லவர் மூகை ஆயினர் - பிறவி தொடுத்துப் பேச வல்ல புத்தர்கள் இதுபொழுது ஊமைகளாயினர்கள், சொல் இலா ஒரு மூகை ஆம் வல்லி என் புதல்விக்கு - பிறவி தொடுத்துப் பேசுஞ் சத்தியற்ற ஒரு ஊமைப் பெண்ணாகிய காமவல்லி போலும் என் மகளுக்கு, மூகை மறைந்து நல் உரை கூடினால் - அவ்வூமைத்தன்மை நீங்கி நல்ல சொற்களை வசனிக்கும் வாக்கு வன்மை கைகூடுமாயின், நான் உமக்கு நல்ல தொண்டன் என - தமியேன் தேவரீருக்கு நல்ல அடிமையென்று விண்ணப்பஞ் செய்ய, நாயனார் அவள்தன்னை நீ இங்கு ஒல்லை அழை என்ன - திருவாதவூரடிகள் அப்புதல்வியை நீ இங்கே விரைவாக அழையென்று பணித்தருள, அவள் (ஒல்லை) வந்து உண்மைசேர் அவை நண்ணினாள் - அப் பெண் பிதாவாகிய பௌத்த ராசனால் விரைவாக அழைக்கப்பட்டு வந்து உண்மை பொருந்திய அச்சபையை அடைந்தாள் எ—று.

பேசுவாரை ஊமைகளாக இயற்றுதலினும் ஊமையைப் பேச இயற்றுதலே அருமையுடைத்தென்றானென்பார் சொல்ல வல்லவர் மூகையாயினர் சொல்லிலா வொரு மூகையாம், வல்லியென் புதல்விக்கு மூகை மறைந்து நல்லுரை கூடினால் என்றும், புத்தசமய விசுவாசஞ் சிறிதுமின்றிச் சைவசமய விசுவாசியாவேனென்று கூறினானென்பார் நல்ல தொண்டனென்றும், ஏனைப் புத்தர் சைவராதற்கு இந்நிலைமைக்கண் உறுதிகூறமாட்டேனென்றானென்பார் நான் என்றும், வாதத்தின் முடிவாகிய வேறலை இடையீடின்றிச் சபைக்குணர்த்த விரும்பினார் என்பார் ஒல்லையிங் கழையென்றும், மெய்ச்சமய நிச்சயஞ் செய்யும் சபை யாகலின் உண்மைசேரவை யென்றுங்கூறினார்; நாயனார் தலைவரென்னும் பொருட்டு. (௮௪)

நண்ணி யங்குமு னின்ற கன்னியை நன்மையாளரு நாடியே
கண்ணி னின்னருள் செய்து பின்னர் கரைத்து முன்னிருத்தியே
யுண்ணடுங்கி யிருந்த புத்த னுரைத்த தர்க்க மவைக்கெலாம்
தண்ண றுங்குழல் வல்லி நல்லுரை சாற்று கென்று விளம்பினார்.

இ—ள்: அங்கு நண்ணி முன் நின்ற கன்னியை நன்மையாளரும் கண்ணின் நாடி இன் அருள் செய்து - அங்ஙனம் வந்து தமக்கெதிரே நிற்கின்ற செய்மைக்கண்ணிற்கும் அக்கன்னிகையை எல்லா நன்மைகளையும் ஒருங்கு கடைப்பிடித்தொழுகும் அத்திருவாதவூரடிகளும் கிருபாகடாக்ஷ வீக்ஷணஞ் செய்து, பின்னர் கரைத்து முன்னர் இருத்தியே - அதன்பின்னர் இங்ஙனம் வருகவென்று அதிசமீபத்தழைத்துத் தமதபிமுகத்திருக்க வைத்துக்கொண்டு, தண் நறும் குழல் வல்லி - தண்ணிய நறிய கூந்தலையுடைய சிறுமியே, உள் நடுங்கி இருந்த புத்தன் உரைத்த தர்க்கம் அவைக்கெல்லாம் நல் உரை சாற்றுக என்று விளம்பினார் - அச்சத்தான் மனம் நடுங்கி ஈண்டிருக்கும் புத்த குரு நங் கடவுண்மீது தோஷாரோபண நிமித்தம் வினவிய தருக்க வினாக்கட்கெல்லாம் இனி நீயே நியாய சல்லாபங்களைச் சொல்லுகவென்று பணித்தருளினார் எ—று.

கண்ணினாடியென வேண்டா கூறினார் இந்நாட்டம் அக் கன்னிகையது அஞ்ஞான விருத்திகளை அகற்றிச் சைவசமயப் பிரவேசமுந் தந்தமையிற் சக்ஷு தீக்ஷையாயிற் றென்னுந் தந்துணிபு முடித்தற்கென்க. முன்பு தம்மை வாதத்தில் வென்று பின் ஊமைக ளாக்கினமையின், இனிச் சமயவாத வெற்றி அவரதே யென்னு மச்சத்தான் மனம் நடுங்கி இருந்த புத்தகுருவென்பார் உண்ணடுங்கியிருந்த புத்தனென்றார்; கரைந்தென்பது வலிந்து நின்றது. கிருபாகடாக்ஷவீக்ஷணம் - கிருபையையுடைய கடைக்கண்ணினது பார்வை. சல்லாபம் வினாவும் விடையுங்கூடிய சொல்; அங்ஙனம் வருமாற்றைத் திருச்சாழலுட் காண்க. (௮௫)

பற்று நன்குணரா த புத்தர் பகர்ந்த தர்க்க மவைக்கெலாங்
கற்று ணர்ந்தவர் போல மன்னிய கன்னி மாறுரை கூறினள்
மற்று மங்கையர் சாழ லாய்விளை யாட லாக மகிழ்ச்சியா
லுற்ற தன்பொரு டன்னை வாசக மாக வுண்மைய ரோதினார்.

இ—ள்: பற்று நன்கு உணராத புத்தர் பகர்ந்த தர்க்கம் அவைக்கு எலாம் - தம்மாற் பற்றப்படும் சற்சமய மின்னதென் றிதுகாறு மறிந்து கொள்ளமாட்டாத புத்தர்கள் வினவிய தருக்க வினாக்கட்கெல்லாம், மன்னிய கன்னி கற்று உணர்ந்தவர்போல மாறு உரை கூறினள் - ஈண்டும் நிலைபெற்ற அக்கன்னிகை வேதசிவாகமங்களை ஓதியுணர்ந்த மகா பண்டிதர்களைப்போல எதிருத்தரம் கூறினாள், உண்மையர் - அப்பொழுது மெய்யுணர்வையுடைய திருவாதவூரடிகள், அதன்பொரு டன்னை உற்று - அவ்வினவுத்தரங்களின் முடிந்தபொருளை எதிர்காலத்தவர்க்குணர்த்தும்படி திருவுளங்கொண்டு, மற்றும் மங்கையர் சாழல் ஆம் விளையாடல் ஆக மகிழ்ச்சியால் வாசகமாக ஓதினார்-அக்கன்னியர்கள் தம்முட்கூடிக் கைகொட்டி விளையாடும் சாழல்விளையாட்டின்பயத்ததாக மனமகிழ்ச்சியோடு 'பூசுவதும்வெண்ணீறு' என்றெடுத்துத் திருச்சாழலென்னும் திருவாசகமாகப்பாடியருளினார்.

பற்றுதல் - அங்கீகரித்தல். நன்கு - ஆகுபெயர். வாதி புத்தகுரு ஒருவனேயாகலின், மேல் உண்ணடுங்கியிருந்த புத்தனென ஒருமைப்பாலாற் கூறினார்; ஈண்டு, அவற்கொரு சாலை மாணாக்கராகிய உசாத்துணைவரையும்

சீடவர்க்கத்தினரையும் அவ்வாதியோடு சேர்த்து, எத்திறத்துச் சகல வினுக்கட்கும் அக்கன்னிகை விடைகூறினுள் என்னும் பொருள் பயப்பப் புத்தரெனப் பன்மைப்பாலாற் கூறினாராகலிற் பால்வழுவின்மையுணர்க. அப்பெண் இராசகன்னிகையாயினும் மூகத்துவமுடைமையின் ஒரு சிறிதும் கற்றிலளென்பார் கற்றுணர்ந்தவர்போலென்றும், ஈண்டும் அக்கன்னிகையது புகழுடம்பு நிலைபெறுதல் விளக்குவார் மன்னிய கன்னியென்றும், விடையானது விதிவினை மறைவினைகளின் வைத்து நோக்குமிடத்து இருதிறப்படுமாகலின், அவற்றுள் இஃது யாதோ என்னும் ஆசங்கை யகற்றுதற்கு மாறுரை என்றும், அக்கன்னிகையது விஞவுத்தரங்கள் வேதாகமங்களின் சாரமாய் அரும் பெரும் பயத்தனவாகலின், இவற்றை எதிர்காலத்துப் பக்குவான்மாக்கள் பொருட்டு ஒருதலையா னுணர்த்தல் வேண்டுமெனத் திருவுளங்கொண்டு திருவாசகமாகப் பாடி வெளிப்படுத்தியருளினு ரென்பார் மகிழ்ச்சியா னுற்றதங்பொருடன்னை வாசகமாக வுண்மையரோதினுர் என்றுங் கூறினுர். உறுதல் - குறித்தல். அது உற்றுக்கேட்டல், உற்று நோக்கல் என்பனவற்ருனுமறிக. இனிப் "பற்றுக பற்றற்ருன் பற்றினை" என்புழிப் பற்றென்றது முத்திநெறியையாகலின் அதுபோல ஈண்டும் பற்றுநன்குணராத புத்தரென்பதற்கு முத்திநெறியை நன்குணராத புத்தரெனக் கோடலுமொன்று. (அசு)

ஈழ மன்னனு மஞ்செ ழுத்து மியம்பி நீறு புனைந்துபின்
ருழநின்றடி மைத்தி றந்தவ ருத தொண்டின னயினன்
சோழ னும்புலி யூரின் மன்னிய தொன்மை யாளரு மம்பலம்
வாழ்க வென்று துதித்து நின்றெழில் வாதவூரரை யேத்தினுர்.

இ—ள்: ஈழ மன்னனும் அஞ்செழுத்தும் இயம்பி நீறு புனைந்து - ஈழமண்டலாதிபதியாகிய புத்தராசனும் தான் முன் செய்துகொண்ட வாக்குத் தத்தத்தின்படி சிவமூலமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபித்து விபூதியைத் தரித்து, பின் தாழ நின்று அடிமைத்திறம் தவருத தொண்டினன் ஆயினன் - அதன்பின்னர் நாயனுரை வணங்கி நின்றெத்திறத்தடிமைத் தொழில்களினும் வழுவாத தாசத்துவ முடையனுயினுன், சோழனும் புலியூரின் மன்னிய தொன்மையாளரும் அம்பலம் வாழ்க என்று துதித்து நின்று - சோழமண்டலாதிபதியாகிய நஞ் சைவ அரசனும் பழைய தில்லைவாழந்தணர்களும் பிறரும் பொன்னம்பலம் நீடூழி வாழுகவென்று நெடிது வணங்கித் துதித்துப் பின்னர், எழில் வாதவூரரை ஏத்தினுர் - பரமதிமிர பானுவாகிய திருவாதவூரடிகளை வணங்கித் துதித்தனர் எ—று.

ஈழமன்னனுமென்னு மும்மை இழிவுசிறப்போ டிறந்தது மெதிரதுந் தழீஇயவெச்சமாய் நின்றது. அஞ்செழுத்துமென்னு மும்மை உயர்வுசிறப்போடு முற்றும்மை. சோழனும் தொன்மையாளரு மென்னு மும்மைகள்



எண்ணுப்பொருளோ டெச்சமுமாய் நின்றன. தாழ்ந்தென்னுஞ் செய்தெனெச்சம் தாழவெனத் திரிந்து நின்றது. தாழநின் றென்பதனைத் தாழ்ந்தென ஒருசொல்லாகக் கோடலுமாம். அச்சம் முதலிய ஏதுக்களாலன்றி உண்மை யன்பால் அடியனுயினு னென்பார் அடிமைத்திறந் தவருத தொண்டின னுயினு னென்றும், சபாநாயகர் திருவாதவூரடிகள் வாயிலாகப் புத்தரை வாதில்வென்று தந்தமையின், சோழனும் புலியூருளாரும் அந் நன்றியை மறவாதவராய் முடிவின் முறையானே சபாநாயகரை முன்னும் திருவாதவூரடிகளைப் பின்னும் வணங்கித் துதித்தன ரென்பார் சோழனும் புலியூரின் மன்னிய தொன்மையாளரு மம்பலம், வாழ்கவென்று துதித்து நின்றெழில் வாதவூரரை யேத்தினு ரென்றுங் கூறினுர். எழிலென்ற தீண்டுச் சமயவாத வெற்றியா னுயதொரு மெய்ப்பாட்டுப் பொலிவையென்க. (அஎ)

தக்க சீர்பயி லீழ மன்னுயர் சைவ னுரெதிர் நின்றுநன்
கக்க மாலை புனைந்து நீறு மணிந்து தொண்டின னுனபின்
றுக்க மாகிய சீவ ரத்துவ ராடை மூடு முடம்பினுர்
மிக்க காதர மூகை தீர்ந்திட வேண்டு மென்று வணங்கினுன்.

இ—ள்: தக்க சீர் பயில் ஈழ மன் உயர் சைவனுர் எதிர் நின்று அக்க மாலை புனைந்து நீறும் அணிந்து நன்கு தொண்டினன் ஆன பின் - கொடையோடுபட்ட செல்வத்தையுடைய ஈழநாட்டரசன் மேல் நாங் கூறியபிரகாரம் சைவாசாரியராகிய திருவாதவூரடிகளுக் கெதிரே நின் றுருத்திராக்க மணி மாலைகளையும் விபூதியையும் விதிப்படி தரித்து மிகவுந் திருத்தொண்டையுடைய சைவனுகிய பின்னர், துவர் துக்கம் ஆகிய சீவர ஆடை மூடும் உடம்பினுர் மிக்க காதர மூகை தீர்ந்திட வேண்டும் என்று வணங்கினுன் - மருதந்துவர் தோய்த்த துக்கமயமாகிய சீவர வஸ்திரத்தினுலே போர்க்கப்படும் உடம்பையுடைய இப் புத்தர்களெல்லாம் மிக அச்சத்தைத் தரும் மூகத்துவத்தினின்றும் நீங்கவேண்டுமென்று அதி விநயத்தோடு பிரார்த்தித்து அவ்வரசன் வணங்கினுன் எ—று.

சீர் - செல்வம். அதற்கு மற்றெவற்றினுந் தகுதி கொடையோடு படுதலே யாகலின் தக்கசீர் என்பதற்கு இங்ஙனம் பொருளுரைக்கப்பட்டது. காதரம் - அச்சம். அது, காதரமார்தரு மனமே கமலமல ரயனல்லை, சீதரமாயனுமல்லை சிவனும னற்றிரளல்லன்" என்பதனு னறிக. சைவாசாரியமூர்த்தியென்பது விளக்குதற்கு உயர்சைவனுர் என்றும், அவரையே தனக்குத் தீக்ஷாகுருவாகக் கொண்டு சந்நிதியினின்றும் விபூதி ருத்திராக்ஷங்களாகிய சிவசின்னங்களை விதிப்படி தரித்து உள்ளபடி சைவனுயினு னென்பார், ஈழ மன்னுயர் சைவ னுரெதிர் நின்று நன், கக்கமாலை புனைந்து நீறு மணிந்து தொண்டின னுனபின் என்றும், நரகில் வீழ்த்தும் புன்னெறியாகிய புத்த சமயிகட்குரிய தாகலின் துக்கமாகிய சீவரத் துவராடை என்றும், நாமு

மிவ்வாறு சிவ நிந்தை சிவாகம நிந்தைகளைச் செய்வோமாயின் இங்ஙனமே ஊமைகளாகத் தண்டிக்கப்படுவோமெனத் தமக்கும் பிறர்க்கும் மிக அச்சத்தைத் தரும் ஊமைத்தன்மை யென்பார், மிக்ககாதர மூகை என்றும் தானடைந்த பெரும் பேறென்று தன்கீழ் வாழும் பிரசைகளும் அடைதற்பாலதேயாயின் அதனை அங்ஙன மடைவித்தல் உத்தமலக்கணஞ் சிறந்த அரசனுக்குக் கடப்பாடாகலின், அஃதடைவிப்பான் துக்கமாகிய சீவரத்துவராடைமூடுமுடம்பினர், மிக்க காதரமூகை தீர்ந்திட வேண்டுமென்று வணங்கினனென்றுங் கூறினர். ஈழமென்ப திலங்கையை யுணர்த்துங்கால் சிங்களமென்பது பொருளன்று. பொன் என்பது பொருள். அதனைத் தக்ஷிண கயிலாயத்துக் காண்க. ஈண்டு விரிக்கின் மிகவும் விரியும். ()

இன்ன வாறருள் செய்கு வாயினி யெம்பி ரானென வன்புடன்
பொன்னி சூழ்வள நாட னும்புலி யூரு ளாரு மிறைஞ்சினர்
மன்னு சீர்புனை வாத வூரர் மகிழ்ந்து பார்வையை நல்கவே
முன்ன ராக வணங்கி யேயவர் மூகை தீர்ந்திது கூறினர்.

இ—ள்: பொன்னி வளம் சூழ் நாடனும் புலியூர் உளாரும் - அப்பொழுது காவிரிநதி வளஞ் சுரக்கும் நாட்டையுடைய சோழமகாராசாவும் தில்லைவாழந்தணர்களும் பிறரும், இனி எம்பிரான் இன்ன ஆறு அருள் செய்குவாய் என அன்பு உடன் இறைஞ்சினர் - இனி யெம்பெருமானே புத்தராசா வேண்டிக்கொள்கின்ற இந்தப்பிரகாரந் தேவரீர் திருவருள் செய்கவென்று அன்போடு வணங்கினர், மன்னு சீர்புனை வாதவூரர் மகிழ்ந்து பார்வையை நல்க - நிலைபெற்ற புகழையுடைய திருவாதவூரடிகள் அதற்கு மனமகிழ்ந்து கிருபாநோக்கஞ் செய்தருள, அவர் மூகை தீர்ந்து முன்னர் ஆக வணங்கி இது கூறினர் - அவர்கண் மூகத்துவம் நீங்கப்பெற்றுச் சந்நிதியிலே வணங்கி இதனை விண்ணப்பஞ் செய்வாராயினர் எ—று.

ஆதாரமாகிய உலகம் பொன்றுந் துணையும் ஆதேயமாகி நிற்கும் பெரும்புகழென்பார் மன்னுசீ ரென்றார். வாதிலேதோற்றவரைக் கொல்வேனென்று முன் சோழராசா கூறினமையால் அக் கொலைக்குத் தப்புவித்தல் சோழராசனுக்கும் ஈண்டுடம்பாடாதல் தோன்றப் பொன்னி நாடனும் புலியூருளாரு மிறைஞ்சின ரென்றார். பார்வை மாத்திரையான் மூகத்துவம் நீங்கிற்றென்பது கருத்து. (௮௯)

மாசி லாத மனத் தினய்முன மன்னு தீவினை செய்தலா
லாசி லாதவெ ணீற ணிந்துந லஞ்செ ழுத்துரை செய்திலேம்
பூச லாகிய நீறு டன்புனை யக்க மாலைகள் காவியாந்
தூசு தாதுவ ராடை யைச்சுடு வென்று துன்றி வணங்கினர்.

இ—ள்: மாசு இலாத மனத்தினய் - களங்கமற்ற மனத்தையுடைய சைவாசாரிய மூர்த்தியே, முனம் மன்னு தீவினை செய்தலால் - நாம் பூர்வசன்மங்களிலே மிகத் தீவினைகள் செய்திருந்தமையினால், ஆசு இலாத வெண்ணீறு அணிந்து நல் அஞ்செழுத்து உரை செய்திலேம் - குற்றமற்ற வெண்மையாகிய விபூதியைத் தரித்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபிக்கப்பெற்றிலேம் ஆயினும், பூசல் ஆகிய நீறு உடன் புனை அக்கமாலைகள் காவி ஆம் தூசுதாதுவர் ஆடையைச் சுடு என்று துன்றி வணங்கினர் - பூசத்தகும் விபூதியோடு புனையத்தகும் உருத்திராக்கமணி மாலைகளையும் காவி வஸ்திரத்தையும் எமக்கினித் தந்தருளும், துவர் ஆடையைச் சுடுஎன்று துன்றி வணங்கினர் - மருதந்துவர் தோய்த்த எமது சீவர வஸ்திரங்களை அக்கினியிலிட்டுத் தகித்துவிடுமென்று மிகச் சமீபித்து வணங்கினர் எ—று.

நாம் சைவராய் இம்மை மறுமை இன்பங்களையும் முத்தியையும் பெறுதற்கண் ஒரு சிறிதும் அழுக்காறு செய்யாத சுத்தமனமுடைய சைவாசாரிய மூர்த்தி நீரே என்பார், மாசிலாத மனத்தினய் என்றும், நாம் பூர்வசன்மங்களிலே பிராயச்சித்தங்களா னீக்கிக் கோடற்கரிய பெரும் பாவங்களைச் செய்துகொண்டமையின் இம்மையிற் செய்வன தவிர்வன அறியப்பெற்றிலேமென்பார் முன மன்னுதீவினை செய்தலா, லாசிலாத வெண்ணீ றணிந்து நலஞ்செழுத்துரை செய்திலே மென்றும், ஆயினும், இங்ஙனம் தேவரீரது தரிசன விசேடத்தாற் சைவராதற்கு அருகராயினேம் என்று உரிமையோடு வணங்கின ரென்பார் பூசலாகிய நீறுடன் புனையக்கமாலைகள் காவியாந், தூசுதாதுவராடையைச் சுடுவென்று துன்றி வணங்கினரென்றுங் கூறினர். இதனான் மாணிக்கவாசக சுவாமிகள் காவி வஸ்திரதாரிகள் என்பது தெள்ளிதிற் றுணியப்படு மென்க. (௯௦)

கோட்ட மின்றிய வுண்மை யார்நகை கோட்டுகின்ற முகத்தரா
யீட்டு முன்செய் தவத்தி னரிவ ரென்று சிந்தையி லெண்ணியே
வாட்ட ருந்திரு நீற ணிந்து வயங்குருத்திர சாதனம்
பூட்டி யங்கவர் சீவ ரங்கிளர் பொங்கு தீக்கிரை யாக்கினர்.

இ—ள்: கோட்டம் இன்றிய உண்மையார் - எஞ்ஞான்றும் தம் நிலையினின்றுங் கோணுதலில்லாத மெய்யுணர்வையுடைய திருவாதவூரடிகள், இவர் முன் செய் ஈட்டு தவத்தினர் என்று சிந்தையில் எண்ணி - இவர்கள் பூர்வசென்மங்களிற் செய்தீட்டிய தவத்தை யுடையவரென்று தந் திருவுள்ளத்திற் சிந்தித்து, நகை கோட்டுகின்ற முகத்தர் ஆய் - அதுபற்றித் திருப்புன்முறுவல் செய்கின்ற முகத்தை யுடையவராய், வாட்டு அரும் திருநீறு அணிந்து - விதிப்படி தரிப்பவரது மலவலியை வாட்டுகின்ற அரிய விபூதியைத் தந் திருக்கரத்தினல் அவர்கட்கணிந்து, வயங்கு உருத்திர சாதனம் பூட்டி - விளங்காநின்ற உருத்திராக்கமணி மாலைகளை அவர்கட்குப் பூட்டி, அங்கவர் சீவரம் கிளர் பொங்கு தீக்கு இரை ஆக்கினர் - அவரது மருதந்துவர் தோய்த்த சீவர வஸ்திரங்களை மிகவுஞ் சுவாலிக்கின்ற அக்கினிக் கிரையாகக் கொடுத்தருளினர் எ—று.

எண்ணிக் கோட்டுகின்ற முகத்தரென முடிக்க. முன்செய்து ஈட்டு தவமெனற்பாலது செய்யுணடைக்கேற்பப் பிரயோகிக்கும் வழி ஈட்டுமுன் செய்தவமெனப் பிரயோகிக்கப்பட்டது. வாட்டருந் திருநீறென்பதனை வாள் தரும் திருநீறெனக் கண்ணழித்து, ஞானத்தைத் தரும் விபூதியெனக் கோடலுமாம். உருத்திரசாதனம் உருத்திராக்ஷ மணி மாலையாகிய சாதனம். சாதனம் சாதித்தற் கருவி, உருத்திர சாதனம் உருத்திரனைச் சாதிப்பதெனக் கோடலுமாம். தமது மெய்ஞ்ஞான நிலையினின்று மெஞ்ஞான்று மொரு சிறிதுந் தவறாதவரென்பார் கோட்டமின்றிய வுண்மையாரென்றும், அவமதியானன்றி நன்கு மதிக்கற்பாட்டான் நகைத்தன ரென்பார் ஈட்டுமுன் செய் தவத்தினரென்று சிந்தையி லெண்ணியே நகை கோட்டுகின்ற முகத்தராயென்றுங் கூறினர். சீவரம் என்புழிச் சீ - நரகம். இவரம் - கேடு. வருமொழி முதலிகரம் புணர்ச்சி விகாரத்தாற் கெட்டுச் சீவரமென முடிந்தது. தன்னை யுடுப்பவரது நரகயாதனையைக் கெடுப்பதென்பதவர் கருத்தென்க. கோட்டமின்றிய நெஞ்சினர் எனவும் பாடம். இப்பாடத்திற்குக் கோட்டமென்பதற்கு மாறுபாடெனப் பொருள் கொள்க. அவர் கேட்டவரம்மூன்றனுள் ஒன்றை மாத்திரம் கொடுத்திலர் என்பது தாற்பரியம். (௬௧)

பொய்யி லாவரு ளைய ரும்புலி யூருளார்களு முன்புசேர்
மைய லாகிய வேட மின்றி வயங்கு நீறணி வார்களுந்
துய்ய காவிரி நாட னுந்துக டறு மீழர்த மன்ன னுஞ்
செய்ய மாமணி மன்று ளார்திரு முன்பு சென்று வணங்கினர்.

இ—ள்: பொய் இலா அருள் ஐயரும் - மெய்ம்மையாகிய சிவகாருண்ணியத்தை யுடைய திருவாதவூரடிகளும், புலியூர் உளார்களும் - தில்லைவாழந்தணர்களும் பிறரும், முன்பு சேர் மையல் ஆகிய வேடம் இன்றி வயங்கு நீறு அணிவார்களும் - முன்னரே பொருந்திய மயக்கத்தைத் தரும் புத்த சமய வேடத்தை யொழித்துப் பிரகாசிக்கின்ற விபூதியை யணிந்த அந்திய சைவர்களும், துய்ய காவிரி நாடனும் - சுத்தமாகிய காவிரிநதிவளஞ் சுரக்கும் நாட்டையுடைய சோழமகாராசாவும், துகள் தீரும் ஈழர்தம் மன்னனும் - புத்தசமயானுசாரமாகிய குற்றமற்ற ஈழதேயத் தரசனும், செய்ய மாமணி மன்றுளார் திருமுன்பு சென்று வணங்கினர் - அழகிய மாணிக்க மணி கொண்டு குயிற்றிய சபையை யுடைய நங்கடவுளை அவரது சந்நிதியிற் சென்று வணங்கினர்கள் எ—று.

பௌத்தர்களைக் கபடின்றி உள்ளபடி சைவர்களாக்கிய திருவருளை யுடையவராகலிற் பொய்யிலா வருளையரென்றும், இந்திரனது பூங்காவின் பொருட்டு அகத்திய முனிவரது கமண்டலத்தினின்றும் விநாயகக் கடவுளாற் கவிழ்க்கப்பட்டு விரிந்த நதி வளஞ் சுரக்கும் நாடாகலின் துய்ய காவிரி நாடென்றும், வாதநிகழ்ச்சிக்கிடனாகிய புலீச்சரத்தினின்றும் கனக சபையை யடைந்து சபாநாயகரை நேரே தரிசித்து வணங்கினாராகலிற் செய்ய மாமணி மன்றுளார் திரு முன்பு சென்று வணங்கின ரென்றுங் கூறினர். ஈழர் - ஈழதேயத்தவர். ஈழம் - பொன். இலங்கை மேருகிரியின் முடியாதலான் அதனை ஈழமென்றார். அது, "நிலையுடை வடவரை குலைய சேர்ந்தனன், றலையென விளங்கிய தபனியப்பெரு, மலையினை மும்முடி வாங்கி யோங்கி நீ, ரலைகட லிட்டன னனுமன்றாதையே" "வழுநூறு யோசனை யகலமிட்ட கீ, ழாழநூறு யோசனை" என்பனவற்றானு மறிக. (௬௨)



பொன்று கின்றது முத்தி யென்று புகன்று நின்றுழல் புத்தர்தா
மன்று கண்டு வணங்கி யன்புடன் மாபெ ருந்தவ ராவதே
யின்றி தன்பொரு ளாவ தென்பல வாறுடன் கடன் மீதிலே
சென்ற தண்புன லல்ல ரோவுயர் தில்லை யெல்லையை நண்ணினர்.

இ—ள்: பொன்று கின்றது முத்தி என்று புகன்று நின்று உழல் புத்தர் தாம் மன்று கண்டு அன்பு உடன் வணங்கி மா பெரும் தவர் ஆவதே - பஞ்சகந்தங்களு முற்றக் கெடுகின்றதனையே முத்தி யென்று கூறி நின்றுழலும் புத்தர்கடா மிங்ஙனம் சுத்த மாயாரூபமாகிய கனகசபையைத் தரிசித் தன்போடு வணங்கி மிகவும் பெரிய சைவர்களாகிய தென்னே போற்புதம், இதன்பொருள் ஆவது என் - இதனது தாற்பரியம் என்னையெனின், உயர் தில்லை எல்லையை நண்ணினர் - உயர்ந்த தில்லைமாநகரின் எல்லையை அடைந்தவர்கள், பல ஆறு உடன் கடல் மீதில் சென்ற தண் புனல் அல்லரோ - பல நதிகளாய் ஒருசேரச் சமுத்திரத்தின்கட் சென்ற நீரினியல்பை யுடையரல்லரோ எ—று.

பல நதிகளாகிச் சமுத்திரத்தின்கட் சென்ற ஆற்றுநீர் அந்நீரோடு சேர்ந்து தன்னியல்பு முழுதுங் கெட்டு அச்சமுத்திர நீரேயாய்ப் பின் மீளாதவாறு தில்லைமாநகரின் எல்லையை யடைந்த புத்தர்கள் அந்நகரின்கணுள்ள சைவர்களோடு சேர்ந்து தம்மியல்பு முழுதும் கெட்டுச் சைவர்களாய்ப் பின் புத்தசமயத்தில் மீளாராயினர்களாகலின், இதுவே அதன் றாற்பரியமென்பார் இதன் பொருளாவதென் பலவாறுடன் கடன் மீதிலே சென்ற தண்புனலல்லரோ வுயர்தில்லை யெல்லையை நண்ணினர் என்றார். தில்லைத் தல விசேடம் மூர்த்திவிசேடம் தீர்த்த விசேடங்கள் கூறியவாறென்பது நுண்ணிதினுணர்க. எனினென்பது விகாரத்தாற்றொக்கது. "பன்னிறங் களவைகாட்டும் படிகம்போலுள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த்திட், டந்நிறங்க ளன்னிற மன்றென்று தன்ற னெழில்நிறங் கண்டருளினலந்நிறத்தின் வேறாய்ப், பொய்ந்நிற வைம்புல னிறங்கள் பொய்யென மெய் கண்டான் பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னர், முன்னிறை நீர்சிறை முறிய முடுகி யோடி முந்நீர் சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்" என்பதனானுமறிக. (௬௩)

*மன்ற கன்றபின் யாவ ருஞ்செல வாத வூருறை வள்ளலார்*
*சென்றி லங்கு திருப்பு லீசர் சிறந்த பாதம் வணங்கியே*
*நன்றி துன்றிய வங்கண் வைகினர் நல்ல தில்லையு ளாரெலா*
*மென்று மிங்கிரு மையர் நீரினி யென்று தம்மனை யேகினர்.*

இ—ள்: மன்று அகன்றபின் யாவரும் செல - கனகசபையை விட்டு நீங்கியபின்னர் மற்றை யனைவரும் தத்தமுறைவிடங்கட்குச் செல்ல, வாத வூர் உறை வள்ளலார் - வரையாது கொடுக்கும் உதாரகுண சீலராகிய திரு வாதவூரடிகள், சென்று இலங்கு திருப்புலீசர் சிறந்த பாதம் வணங்கி- மறித்துஞ் சென்று விளங்காநின்ற திருப்புலீச்சரத்தில் வீற்றிருக்கும் சிவ பெருமானுடைய அழகிய திருவடிகளை வணங்கி, நன்றி துன்றிய அங்கண் வைகினர் - தமக்கும் பிறர்க்கும் நன்மை மிகும்படி அங்கே சிவயோகத்தில் வீற்றிருந்தருளினர், நல்ல தில்லையுளார் எலாம் ஐயர் நீர் இனி என்றும் இங்கு இரும் என்று தம்மனை ஏகினர் - நல்ல தில்லைவாழந்தணர்களும் பிற ரும் சுவாமீ நீர் இனி வில்வாரணியத்துக்குச் செல்லாது எம்பொருட்டு எப் பொழுது மிங்கே தேவரீர் சிவயோகம் பயின்றிருமென்று கூறித் தம்மில்லங் களிற் சென்றார் எ—று.

துன்றிய என்பது செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். பிறக்க முத்திதருந் திருவாரூரினும் இறக்க முத்திதருங் காசியினும் ஒரு காற் றரிசிக்க முத்திதருந் தில்லை சிறந்ததென்பார் நல்லதில்லை என்றார். இச்செய்யுளால் திருவாதவூரடிகள் சிவஞான முதிர்ச்சி யுடையவராயினு ராகலின் அரசன் முதலாயினோர் வேண்டிக்கொண்ட பிரகாரம் வில்வாரணி யத்துச் செல்லாது தில்லையிலே வாசஞ்செய்துகொண்டிருந்தார் என்பதூஉம், இதன்பின் னிவ்வடிகண்மாட்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகளெல்லாம் தில்லையை யிட மாகக் கொண்டே நிகழ்ந்தன என்பதூஉம் பெற்றாம். (௬௪)

*பொன்னி நாடனு மீழநாடு புரந்த மன்னனு முன்புசேர்*
*மன்னு தீவினை தீர மன்று வணங்கி நீறணி வார்களு*
*முன்ன ராக விறைஞ்சி ஞானமுதிர்ந்த கோவை யகன்றுபோய்*
*மின்னு மாமணி மாட மாளிகை தம்மி லன்புடன் மேவினர்.*

இ—ள்: பொன்னி நாடனும் - காவிரி நதி வளஞ் சுரக்கும் நாட்டை யுடைய சோழமகாராசாவும், ஈழ நாடு புரந்த மன்னனும் - ஈழதேயத் தரச னும், முன்பு சேர் மன்னு தீவினை தீர மன்று வணங்கி நீறு அணிவார் களும், பூர்வசன்மங்களில் ஆர்ச்சித்த நிலைபெற்ற பாவம் நீங்கக் கனக சபையைத் தரிசித்து வணங்கி விபூதியை அணிந்த புத்தர்களாகிய அந்திய சைவர்களும், ஞானம் முதிர்ந்த கோவை முன்னர் ஆக இறைஞ்சி அகன்று போய் - சிவஞானத்தின் மிக்க சமயகுரவராகிய திருவாதவூரடிகளைச் சந் நிதியில் வணங்கி அநுமதிபெற்றவ்விடத்தைவிட் டகன்றுபோய், மின்னு



மாமணி மாட மாளிகை தம்மில் அன்பு உடன் மேவினர் - பிரகாசிக்கின்ற ரத்தினங்கள் குயிற்றிய மேன்மாடங்களினும் திருமாளிகைகளினும் குரு லிங்க சங்கம பத்தியோ டங்கிருந்தனர் எ—று.

திருவாதவூரடிகளது சகவாசத்தாற் குருலிங்க சங்கமங்களில் விசேட பத்தி செய்திருந்தன ரென்பார் ஞானமுதிர்ந்த கோவையகன்று போய் அன்புடன் மேவினர் என்றார். அன்புடனெனப் பொதுப்படக் கூறுதலாற் குரு லிங்க சங்கமங்களிலென்பது பெற்றாம். இதனானே திருவாதவூரடிகள் புத்தரை வாதில்வென்ற பின்னர்த் திருப்புலீச்சரத்திலே சிவயோகம் பயின்றிருப்பச் சோழ மகாராசாவும் ஈழதேயத் தரசனும் அந்தியசைவர் களும் அவரிடத் தநுமதிபெற்றுக் கொண்டு சென்று சிதம்பராலய வீதியிலே யுள்ள சோழ மகாராசாவினது மாடமாளிகைகளில் அன்று அவ்வாச னுப சரிக்கத் தங்கினரென்பது பெறப்பட்டது. (௬௫)

*புன்மை வேட மகன்று நீறு புனைந்து ளார்களு மன்னனுந்*
*தொன்மை யார்திரு வாத வூரர் துலங்கு பாதம் வணங்கியே*
*நன்மை யார்மணி மன்றி றைஞ்சி நயந்து நெஞ்சினில் வஞ்சமாம்*
*வன்மை யான தொழிந்து தில்லை மன்னு மூரென வைகினர்.*

இ—ள்: புன்மை வேடம் அகன்று நீறு புனைந்துளார்களும் மன்ன னும் - புல்லிய புத்த சமயவேடத்தைக் களைந்து விபூதியைத் தரித்த அந் திய சைவர்களும் அவர்கட்கரசனும், தொன்மை ஆர் திரு வாதவூரர் துலங்கு பாதம் வணங்கி - பழைய திருவாதவூரடிகளது விளங்கா நின்ற திருவடிகளை நாடோறும் போய் முன்னர்த் தரிசித்து வணங்கி, நன்மை ஆர் மணி மன்று இறைஞ்சி - அதன்பின்னர் நன்மை பொருந்திய அழகிய கனகசபையை யடைந்து சபாநாயகரைத் தரிசித்து வணங்கி, நெஞ்சி னில் வஞ்சம் ஆம் வன்மை ஆனது ஒழிந்து - அவ்வழிபாடு வாயிலாகத் தம்மனத்தின்கட் புத்த சமய வாதனுபலம் பற்றியுள்ள கபடமாகிய முரண் தானே நீங்கப்பெற்று, தில்லை நயந்து தம் மன்னும் ஊர் என வைகினர் - தில்லைமாநகரை விரும்பித் தமது சனனவூராகக் கொண்டு அங்கிருந்தனர்.

தொன்மை திருவாதவூரரை விசேடித்து நின்றது. தம்மை யுள்ளபடி விசுவசித்து வழிபடு மன்பர்களது இருதயத்தின்கண் விளங்கித் தோன்றும் பாதங்களாகலிற் றுலங்கு பாத மென்றும், சம்சார வழக்கறுக்கும் புண் ணிய சபை யாதலின் நன்மையார் மணி மன்றென்றுங் கூறினர் குரு வாகலிற் றிருவாதவூரடிகளை முன்னும் அவராற் காட்டப்பட்ட கடவுளா கலிற் சபாநாயகரைப் பின்னும் வணங்கின ரென்க. (௬௬)

புத்தரை வாதில் வென்ற சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௫௪௰.

---

உ

# திருவடிபெற்ற சருக்கம்.

உடம்படப் பொய்யை மெய்யா வுரைத்திடு சமய மென்னுந்
தடங்கயத் திரளை வெல்லுந் தனிப்பெரு மடங்க லன்னார்
நெடுந்தவப் பெருமை யாலே நினைப்பருஞ் சைவ ஞான
மிடம் படப் புகல்வார் பின்ன ரெய்திய செய்தி சொல்வாம்.

இ—ள்: பொய்யை மெய் ஆ உடம்பட உரைத்திடு சமயம் என்னும் தடம் சயத் திரளைத் தனி வெல்லும் பெரு மடங்கல் அன்னார் - தமது பொய்ச் சமயத்தை நமது மெய்ச்சமயம் போலத் தார்க்கிகர்களும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் வாதிக்கவல்ல பௌத்த சமயமாகிய பெரிய காட்டின் கண் வாழும் புத்தர்களாகிய யானைக்கூட்டங்களைத் தனிநின்று வென்ற ஒரு சிங்கவேறு போல்பவரும், நெடும் தவப்பெருமையாலே நினைப்பு அருஞ் சைவஞானம் இடம்படப் புகல்வார் - அனந்தகோடி பூர்வ சன்மங்களிற் செய்துகொண்ட சிவபுண்ணிய விசேடத்தினாலே நம்மனோர் இவ்வியல்பிற்றென்று நினைத்தற்குமரிய சிவஞானத்தை அத்தியற்புத அதிமதுர சுத்தச் செந்தமிழ் மொழியினாலே திருவாசகமாக அகலவிரித்துப் பிரசங்கிக்குஞ் சமயகுரவராகிய திருவாதவூரடிகள், பின்னர் - இங்ஙனம் புத்தரை வாதில் வென்றருளிய பின்னர், எய்திய செய்தி சொல்வாம் - சபாநாயகரது திருவடிபெற்ற சரித்திரத்தை இனி யாங் கூறுவாம் எ—று.

பொய், மெய், தடம் என்பன ஆகு பெயர். தடமென்பதனை இயற்பெயரெனக் கொண்டு மலைப்பக்க மென்றலு மொன்று. தடக்கய மெனற்பாலது மெலிந்து நின்றது. ஆக்கம் உவமப்பொருட்கண் வந்தது; தனி வெல்லு மடங்கல், பெருமடங்கலெனத் தனித் தனி கூட்டுக. ஒருவரே பலரை வென்றார் என்பார் தடங்கயத் திரளை வெல்லுந் தனிப்பெரு மடங்கலன்னார் என்றும், இவ்வொரு பிறப்பிற் செய்த தவந்தானே அமையாதென்பார் நெடுந்தவப் பெருமையா லென்றும், திருவடிஞானமாகலின் அதனை நினைப்பருஞ் சைவஞான மென்றும், சூக்குமமாகிய அச் சிவஞானத்தையே நம்போலிகளும் ஒருவா றுணரும் வண்ணம் திருவாசகமாக மிகவும் விரித்துப் பாடியருளினார் என்பார் சைவஞான மிடம்படப் புகல்வார் என்றும் கூறினார். திருவடி பெற்ற சருக்கமென்புழி அடியென்றது சித்தாந்தசைவ சுத்தாத்துவித முத்தியை யாகலின் அஃதீண்டுபசாரத்தின் பாற்படுமென்க. சைவஞான மிடம் படப் புகல்வார் என்பதற்குத் தாம் முன்னுபதேசிக்கப் பெற்ற சிவஞானபோதப் பொருளைப் பின்னர் உலகங் கடைத்தேறும் பொருட்டுத் திருவாசகமாக விரித்துரைப்பவர் என்றலு



மொன்று, சிவஞான போதப் பொருள் திருவாசகத்து ளடங்கியிருத்தலை, "வேதம் பசுவதன்பால் மெய்யாகம நால்வ, ரோதுந் தமிழதனினுள்ளுறு நெய் - போதமிகு, நெய்யினுறு சுவையா நீள் வெண் ணெய் மெய் கண்டான், செய்த தமிழ் நூலின்றிறம்" என்பதனானு மறிக. (௧)

ஆடல்வெம் படையி னாட்சி யெழுச்சியோ டச்சோ வென்னும்
பாடலுந் தெய்வ லோக யாத்திரைப் பத்து மோதித்
தேடலுந் திகைப்பு மீளத் தெளிதலுஞ் சிறுமை கொண்டு
வாடலுங் களிப்பு மில்லா நற்பெரு வாழ்வி லானார்.

இ—ள்: ஆடல்வெம் படையின் ஆட்சி எழுச்சி ஒடு - திருவாதவூரடிகள் விரும்பத் தகும் ஞானவெற்றியினையுடைய, கண்களிரண்டும் வன் கழல் கண்டு களிப்பனவாகாதே" என்பதை முதலாகவுடைய திருப்படை ஆட்சியும் "ஞானவா ளேந்துமையர் நாதப் பறை யறைமின்" என்பதை முதலாகவுடைய திருப்படை யெழுச்சியும், அச்சோ என்னும் பாடலும் - "அச்சோ" என்பதனை இறுதியாகவும் "முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல் வேனை" என்பதை முதலாகவுடைய அச்சோப் பதிகமும், தெய்வலோக யாத்திரைப் பத்தும் ஓதி "பூவார் சென்னி மன்ன னெம் புயங்கப் பெருமான் சிறியோமை" என்பதை முதலாகவுடைய சிவலோகயாத்திரைப்பத்துமாகிய திருவாசகங்களைத் திருவாய்மலர்ந்தருளி, தேடலுந் திகைப்பும் மீளத் தெளிதலும் சிறுமை கொண்டு - தமது அகதரிசனத்துக்ககப்படும் அறிவுருவாகிய சிவத்தை ஒரோருகான் மறந்து தேடுதலும் தேடியவழிக் காணாது திகைக்கலும் பின்பு கண்டு தெளிதலுமாகிய ஆன்மபோதச்சேட்டைக ளென்னும் சிறுமைகளைப் பொருந்தி, வாடலும் களிப்பும் இல்லா நல் பெரு வாழ்வில் ஆனார் - அவற்றாற் றுன்புறதலு மின்புறுதலுமாகிய சிவோபாதிகளில்லாத சதா தரிசனமெனப்படும் நல்ல பேரின்ப வாழ்வையுடைய சிவஞானச் செல்வராயினார் எ—று.

வெம்மென்பதற்குப் படை யென்பதற்கேற்ப வெவ்விய வெனவும் பொருள் கூறுக. படையென்பது எழுச்சியோடுங் கூட்டப்பட்டது. தேடலுந் திகைப்பும் பற்றி வாடலும், மீளத் தெளிதல்பற்றிக் களித்தலுமில்லாத வாழ்வென்க. தேடுதன் முதலிய வைந்துமில்லாத வாழ்வென்றலு மொன்று. ஓதி ஆனார் எனக் காரணகாரிய முறையாக வைத்து முடித்தலின், இத்திருவாசகங்களை ஓதி இச் சிவோபாதிகளை நீங்கினார் என்பது பெற்றாம். "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து, குறியாதே குறித் தந்தக்கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகிற், பிரியாத சிவன்றானே பிறிந்துதோன்றிப் பிரபஞ்ச பேதமெல்லாம் தானாய்த் தோன்றி, நெறியாலே யிவையெல்லா மல்லவாகி நின்றென்றுந் தோன்றிடுவ னிராதாரனாயே" என்பதூஉம் இக்கருத்தே பற்றிவந்தது.

(௨)

போற்றுமஞ் செழுத்து நீறும் புவிமிசை விளங்கத் துன்ப
மாற்றிடுஞ் சைவ ஞான வாசகம் புகல வந்தார்
சீற்றமில் புலியும் பாம்பும் சீர்பெற விளங்கு மன்றி
லேற்றினன் புலியூர் மேலைச் சிவபத மென்று கண்டார்.

இ—ள்: போற்றும் அஞ்செழுத்தும் நீறும் புவிமிசை விளங்க - விதிப்படி அன்போடு செபிப்பவரையும் தரிப்பவரையுஞ் சனனசாகரத் தமிழ்ந்தாது காக்கும் சிவமூல மந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரமும் சிவசின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களும் இந்நிலவுலகெங்கும் பிரகாசிக்கும்படி, துன்பம் மாற்றிடும் சைவ ஞானவாசகம் புகல வந்தார் - ஆன்மாக்கட்குப் பாகம் வருவித்துப் பிறவித் துன்பத்தைத் தப்பாது நீக்கவல்ல சிவஞானத்தையே பொருளாகவுடைய திருவாசகத்தைப் பாடியருளும்வண்ணந் திருவவதாரஞ் செய்தருளிய சமய குரவராகிய திருவாதவூரடிகள் சீற்றம் இல் புலியும் பாம்பும் சீர் பெற விளங்கும் மன்றில் ஏற்றினன் புலியூர் - வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும் பதமுத்தி பெற்றுய்யும் பொருட்டுப் பராசத்தியால் அதிட்டிக்கப்பட்ட சுத்த மாயா மயமாய் விளங்கும் கனகசபையை யுடைய சிவபெருமானது சிதம்பரத்தை, மேலைச் சிவபதம் என்று கண்டார் - எவ்வுலகங்கட்கு மேலாகிய சிவலோகமென்று தம்மநுபூதியிற் கண்டு தெளிந்தார் எ—று:

உருத்திராக்ஷம் உப லக்கணத்தான் வருவிக்கப்பட்டது. விளங்கப், புகல, வந்தார் எனக் காரிய காரண முறையானே ஒரு தொடராக வைத்து முடிக்க. விளங்கவந்தார் புகலவந்தார் எனத் தனித்தனி முடித்தலு மொன்று. மாற்றிடும் வாசகமென்க. சீற்றமில் புலியும் பாம்பு மென்பன பிறிதி னியைபு நீக்கிய விசேடணமாய் நடைமலை என்பதுபோ னின்ற குறிப்பு மொழிகள். விலங்கினுட் புலியும் ஊர்வனவற்றுட் பாம்பும் மிக்க சீற்றத்தை யுடையனவாகலின் இவ்வாறு கூறினர். சீர் ஈண்டு முத்தி; மன்றிலேற்றினன் புலியூர் என்புழி ஏற்றினனென்ப திடைப் பிறவரல். போற்றல் துதித்தலுமாம். அஞ்செழுத்தும் நீறும் புவிமிசை விளங்குதற்குக் காரணம் திருவாசகம் புகன்றருளினமையும், அதற்குக் காரணம் திருவவதாரமுமா மென்பார் போற்றுமஞ்செழுத்து நீறும் விளக்கத் துன்ப மாற்றிடுஞ் சைவஞான வாசகம் புகலவந்தாரென்றும் சிதம்பரம் பூலோக சிவலோக மென்ப தநுபூதியில் வைத்து நிச்சயித் தறிந்தா ரென்பார் புலியூர் மேலைச் சிவபதமென்று கண்டார் என்றுங் கூறினர். (௫)

ஐயரங் குறையு நாளி லாடக மன்றி லாடு
மெய்யர்தங் கருணை யாலோர் வேதிய வடிங் கொண்டு
துய்யமுப் புரிநூன் மார்புந் துலங்கு புத்தகமுந் தோன்றச்
செய்யமென் பாத நோவச் சென்றுமுன் னாக நின்றார்.



இ—ள்: ஐயர் அங்கு உறையும் நாளில் - திருவாதவூரடிகள் அங்ஙனம் சிவயோகஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள், ஆடக மன்றில் ஆடும் மெய்யர் - கனகசபையிலே பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்தருளும் அருட்டிருமேனியையுடைய சபாநாயகர், தம் கருணையால் - தந்திருவுள்ளத்து முகிழ்த்த கைம்மாறற்ற பெருங்கருணைத் திறத்தினாலே, மார்பு துய்ய முப்புரிநூலும் துலங்கு புத்தகமும் தோன்ற ஓர் வேதிய வடிவம் கொண்டு - திருமார்பிலே சுத்தமாகிய உபவீதமும் திருக்கரத்திலே வெண்மை விளங்கும் புத்தகமும் வெளிப்படு மாறோர் பிராமண வடிவங் கொண்டு, செய்ய மெல் பாதம் நோவச் சென்று முன் ஆக நின்றார் - சிவந்த மெல்லிய திருவடிகள் கன்றி வருந்த நடந்து திருப்புலீச்சுரத்திற் சென்று அவ்வடிகட்கெதிராக நின்றருளினார் எ—று.

ஐயரென்பது சமனுக்கரம். அது "போலி யெழுத்தைப் போற்றுதல் கடனே" என்பதனாற் கொள்க. மார்புமென்னு மும்மை மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. தோன்றக் கொண்டு, நோவச் சென்று நின்றாரென முடிக்க. பிரமதேஜஸை வைத் தருவதாகலிற் றுய்யமுப்புரிநூலென்றும், எழுதி மைக்காப்பிடுதல்செய்யா வெண்புத்தகமாகலிற் றுலங்கு புத்தகமென்றும், அம்மை தடவக் குழைந்து கன்றும் பாதமாகலிற் செய்ய மென்பாதமென்றுங் கூறினர். (௬)

முன்புற நின்ற வேத முதல்வரை முகத்தி னோக்கி
யின்புற வாதவூர ரிருமென விருந்த பின்னர்க்
கொன்புனை மறையின் மிக்கீ ரெங்குளீர் கூறு மென்ன
மன்பெரு வளஞ்சேர் பாண்டி மண்டலத் திருப்பே மென்றார்.

இ—ள்: முன்பு உற நின்ற வேத முதல்வரை - இங்ஙனம் தமக்கெதிருறவந்து நிற்கின்ற வேதவித்தாகிய சிவபெருமானை, வாதவூரர் இன்புற முகத்தில் நோக்கி இருமென - திருவாதவூரடிகள் இனிதாக முகத்திற் பொருந்த நோக்கி இங்கே இருமென்று சொல்ல, இருந்த பின்னர் - அவரிருந்தருளியபின்னர், கொன் புனை மறையின் மிக்கீர் எங்கு உளீர் கூறும் என்ன - பெருமை பொருந்திய வேதத்தில் வல்ல அந்தணரே உமது சனனதேயம் யாது சொல்லுமென்று வினவ, மன்பெரு வளம்சேர் பாண்டி மண்டலத்து இருப்பேம் என்றார் - அதற்கவர் நிலைபெற்ற பெரிய வளம் பொருந்திய பாண்டிமண்டலத்தின்கண் ணிருப்பே மென்று கூறியருளினார் எ—று.

இன்புற என்னுமிடையை இருத்தலுங் கூறுதலுமாகிய இரண்டிற்கும் பொதுவாகக் கொள்க; யோகக் காட்சியினன்றிச் சாக்கிரத்திற் கண்டன ரென்பார் முகத்தினோக்கி என்றும், மறைந்த பொருளுடையதாய் வியாசமுனிவர் முதலிய எத்துணை நுண்ணறிவாளரையும் மயக்கும் பெரு

மையை யுடையதாகலிற் கொன்புனைமறை என்றும், பாண்டி மண்டலம் ஞானசாரியராய் வெளிவந் துபதேசித்த தேயமாகலின் அதுபற்றிப் பாண்டி மண்டலத் திருப்பே மென்றுங் கூறினார். இருவருக்கு மொருதேயமாயின் அத்தேசாபிமானம்பற்றித் தம்வேண்டுகோட் கெளிதி னுடம்படுவாரெனக் கருதிக் கூறும் நம்மனோர் போலக் கூறினாரென்பார் பாண்டிமண்டலத் திருப்பேமென்று கூறினார் என்றலுமாம். முகத்தினேக்கியென வேண்டா கூறினார்; அம்முகம் அத்துணைப் பேரழகுடைய தெனத் தாம் வேண்டிய துமுடித்தற்கென்க எனினு மமையும். மன்பெரு வளஞ்சேர் பாண்டி யென விசேடித்தார் கல்விவளம் செல்வவள மிரண்டு மொருங்குடைமையினென்க. (௫)

பாண்டிநா டென்ற பின்னர்ப் பரிவுடன் செறிவு கூறி
யீண்டுநீர் வருதல் வேண்டுங் காரிய மியம்புமென்ன
வாண்டநா யகன்ற னாணை யாகிய கரும நம்மைக்
காண்டலே யென்று பின்னுங் கருத்துற விதனைச் சொன்னார்.

இ—ள்: பாண்டி நாடு என்ற பின்னர் - அவ்வந்தணர் நந்தேயம் பாண்டிதேயமென் றருளிச்செய்த பின்னர், பரிவு உடன் செறிவு கூறி - அதுகேட்ட திருவாதவூரடிகள் முன்னையினும் அன்போடு கலப்பு வார்த்தைகளைக் கூறி, ஈண்டு நீர் வருதல் வேண்டும் காரியம் இயம்பும் என்ன - இங்கே நீர் வரவேண்டுங் காரியமென்னை சொல்லுமென்று வினவ, ஆண்ட நாயகன்றன் ஆணை ஆகிய கருமம் - அது உம்மைத் திருப்பெருந்துறையின்கண் அடிமைக்கொண்ட ஆன்மநாதராகிய சிவபெருமானது ஆஞ்ஞையாகிய காரியமே, நம்மைக் காண்டலே என்று - அது நம்மைக் காணுதலான் முடிவதாமென்று முன்னர்ப் பொதுவகையாற் கூறி, பின்னும் கருத்து உற இதனைச் சொன்னார் - பின்னரும் அவரது மனத்திற் பதியுமாறு சிறப்பு வகையான் இதனைக் கூறியருளினார் எ—று.

பாண்டியனாடு பாண்டிநாடென மரீஇயிற்று. மேற் பாண்டிமண்டலமென்றதுமது. செறிவு ஆகுபெயர். காண்டலான் முடிவதைக் காண்டலென் றொழிந்த துபசாரம். நாம் ஈண்டுவருங் காரியம் நும்மையாண்ட சிவபெருமானது ஆஞ்ஞையாகிய காரியமேயாகலின் அது நம்மைக் கண்டவுடன் எளிதின் முடியுமென்பார் ஆண்டநாயகன்றனாணையாகிய கருமம் நம்மைக் காண்டலே யென் றுபசரித்தும், அது அவ் வடிகளது மனத்தை ஈர்க்க வல்லதென்பார் கருத்துற என்றும் கூறினார். மதுரைச் சோமசுந்தரக்கடவுள் பரிமேலழகராகியும், அருமைத் திருமுடிமேன் மண்சுமந்தும், அடியுண்டும், தம்மைப் பாதுகாத்த தேயம் பாண்டிதேயமாகலின், அதுபற்றிப் பாண்டிநாடென்றபின்னர்ப் பரிவுடன் செறிவு கூறினாரென்றலு மொன்று. தக்கார் ஒருவர் மாட்டு மற்றொருவர் சென்றுழி ஈண்டு நீர் வந்ததென்னையென வினு நிகழுங்காற் றிருவருளை முன்னிட்டுத் தம்



மைப் பார்க்குமாறு வந்தேனென முன்னர்ச் சற்காரங் கூறிப் பின்னர்த் தாம் வந்த காரியங் கூறுதலே உலகவழக்காகலின், அவ்வாறு கூறியருளினாரென்பார், ஆண்டநாயகன் றனாணையாகிய கரும நம்மைக் காண்டலே யென்று பின்னருங் கருத்துற விதனைச் சொன்னார் எனினுமமையும். (௬)

மண்ணிடைப் புகுந்து மேலை வானிடைப் பறந்து முன்னர்க்
கண்ணனு மயனுந் தேடிக் காண்பதற் கரியார் தம்மைப்
புண்ணிய மன்றி லாடும் புனிதரைப் பரியிலேறப்
பண்ணுநும் பெருமை யாலே வாழ்ந்தது பாண்டி நாடு.

இ—ள்: முன்னர்க் கண்ணனும் அயனும் - முன்னொருஞான்று விஷ்ணுவும் பிரமாவும், மண் இடைப் புகுந்தும் மேலை வான் இடைப் பறந்தும் - மண்ணின்கட் பன்றியாகி அகழ்ந்து நுழைந்தும் மேலாகிய ஆகாயத்தின்கண் அன்னமாகிப் பறந்தும், தேடிக் காண்பதற்கு அரியார் தம்மை - முறையே அடிமுடிகளைத் தேடிக் காணுதற்கரியவரும், புண்ணிய மன்றில் ஆடும் புனிதரை - சுத்தமாகிய வெள்ளியம்பலத்தின்கண்ணே பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்கள் பொருட்டுத் திருநடனஞ் செய்தருளுபவருமாகிய சோமசுந்தரக் கடவுளை, பரியில் ஏறப்பண்ணும் நும் பெருமையாலே - (இடபத்தின்கணன்றிக்) குதிரையிலிவர்ந் தெழுந்தருளும்படி செய்த உம்முடைய விசேட மகிமையினாலே, பாண்டிநாடு வாழ்ந்தது - பாண்டிநாடு மற்றைச் சேர சோழ நாடுகளினும் பெருவாழ்வடைந்தது எ—று.

மண்ணின் கீழும் வானுண்மையின் மேலைவானென்றது பிறிதினியைபு நீக்கிய விசேடணம். ஐ சாரியை. கண்ணனும் அயனும் மண்ணிடைப் புகுந்து வானிடைப் பறந்துமென்பது நிரனிறை. கண்ணன் - பாகதச் சிதைவு. சிருட்டி திதி கருத்தாக்களாகிய பிரம விஷ்ணுக்கள் அங்ஙனந் தேடியுங் காணாமைக்கேது யானெனதென்னும் அகங்கார மமகாரங்களும், திருவாதவூரடிகள் இங்ஙனம் மிக எளிதிற் குதிரையிலிவர்ந் தெழுந்தருளச் செய்தமைக் கேது அகங்கார மமகாரக் கேடுமாகலின், அவற்றையொழித்து மெய்யன்பு பூண்டு, அத்திருமூர்த்தி பரனையே முழுமுதலென்றும், அவரை வழிபடும் சைவ சமயத்தையே மெய்ச்சமய மென்றும் உள்ளவாறு விசுவசித்து வழிபட்டுப் பெரும்பான்மையும் பெருவாழ்வடைதற்குரியார் அந்நிகழ்ச்சியை நேரே கண்டுங் கேட்டு மறிந்த பாண்டி நாட்டின்கணுள்ளவரே யாகலின், அவர்களே அந்நிரதிசய வின்பத்தைத் தப்பாது பெறுதற்குரிய ரென்பார் நும் பெருமையாலே வாழ்ந்தது பாண்டி நாடு என இங்ஙனங் கூறியருளினார். (௭)

தென்பெருந் துறையி லையன் றிருவடி சேவை செய்து
துன்பமொன் றின்றி வாவி சூழ்கழுக் குன்றிற் சென்று

பொன்பொலி மன்றி லெய்திப் புத்தரை வாதில் வென்றீ
ரென்பது கேட்டுப் பின்னர் யாவரு மகிழ்ச்சி கொண்டார்.

இ—ள்: தென் பெருந்துறையில் ஐயன் திருவடி சேவை செய்து - நீர் மதுரையைவிட்டு நீங்கியபின்பு தெற்கின்கணுள்ள திருப்பெருந்துறையிலே பரமாசாரியரை யடைந்து அவருடைய திருவடிகளைத் தரிசித்து வணங்கித் துதித்து, துன்பம் ஒன்று இன்றி வாவி சூழ் கழுக் குன்றில் சென்று - வழிவருத்தஞ் சிறிதுமின்றித் தடாகங்கள் சூழ்ந்த திருக்கழுக் குன்றத்தை யடைந்து சுவாமிதரிசனஞ் செய்து, பொன் பொலி மன்றில் எய்தி - அதன்பின்னர் மீண்டுவந்து இச் சிதம்பரத்திலே கனகசபையை யடைந்து, புத்தரை வாதில் வென்றீர் என்பது கேட்டு - இலங்கையினின் றும் வந்த புத்தர்களைத் தருக்கத்திற் செயித்தீர் என்பதனைக் கேட்டறிந்து, பின்னர் யாவரும் மகிழ்ச்சி கொண்டார் - அதன்பின்னர் நமது பாண்டி நாட்டின்கணுள்ளவர்கள் அனைவரும் உம்மிடத்து மிகப் பிரீதி கொண்டனர் எ—று.

தென் அழகுமாம். ஒன்றுமென்னு மும்மை விகாரத்தாற் றொக்கது. கேட்டென்பதனுல் யாவருமென்றது பாண்டிநாட்டின்கணுள்ளவர்களையே என்பது பெற்றும். திருப்பெருந் துறையினின்றும் மிகவும் சேய்மைக்கணுள்ள திருக்கழுக்குன்றத்திற்குச் சென்றது சிவாஞ்ஞை பற்றியே யாகலின், அங்ஙனஞ் செல்கின்றுழி யெல்லாம் திருவருடுணையாகவே சென்றமை தோன்றத் துன்பமொன்றின்றி வாவிசூழ் கழுக்குன்றிற் சென்றென்றும், உயர்வாகிய கொங்கிற்பொன்னுற் பொலிந்த மன்றாகலிற் பொன்பொலி மன்றென்றும், திருவாதவூரடிகளுக்குப் புத்தரை வாதில் வென்றமை முதலியவற்றான் வந்த புகழெல்லாம் பாண்டி நாட்டார் தேசாபிமானம் சமயாபிமானம்பற்றித் தம்புகழாகவே கொண்டு மகிழ்ந்தாரென்பார் புத்தரை வாதில் வென்றீ ரென்பது கேட்டுப் பின்னர் யாவரு மகிழ்ச்சி கொண்டார் என்றுங் கூறியருளினர். துன்பமொன் றின்றி என்பதற்கு "உடையானே நின்றனை யுள்கியுள்ள முருகும் பெருங்காத, லுடையா ருடையாய் நின்பாதஞ் சேரக்கண்டிங் கூர்நாயிற், கடையானே னெஞ்சுருகாதேன் கல்லாமனத்தேன் கசியாதேன், முடையார் புழுக்கூடிது காத்திங் கிருப்பதாக முடித்தாயே" என்றாந் துன்பமொன்றின்றி யென்றுமாம். சோழ சேர நாட்டின்கணுள்ளாரையுந் தழீஇக்கோடற்கு யாவருமென்றுரைன்றலு மொன்று. (அ)

ஆதியை மன்று ளாடு மையனை யன்பி னுலே
யோதிய தமிழின் பாட லுள்ளவை யோத வெண்ணி
மாதுய ரகல வின்னே வந்தன மெழுதல் வேண்டும்
வேதியர் பெருமா னின்று விளம்பிடும் விளங்க வென்றார்.



இ—ள்: வேதியர் பெருமான் - பிராமணோத்தமரே, ஆதியை - முதல்வரும், மன்றுள் ஆடும் ஐயனை - சபையின்கட் பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்தருளும் பரமபிதாவாகிய சிவபெருமானைத் துதித்து, அன்பினுலே ஓதிய தமிழின் பாடல் உள்ளவை - மெய்யன்பு காரணமாக நீர் பாடிய அருட்பாக்களனைத்தையும், மாதுயர் அகல ஓத எண்ணி இன்னே வந்தனம் - பெரிய பிறவித்துன்பம் நீங்கப் பாராயணஞ் செய்யும்படி கருதி இங்கே வந்தேம், எழுதல் வேண்டும் - யாமவற்றை எழுதல் வேண்டும், விளங்க இன்று விளம்பிடும் என்றார் - அவைகளை ஈண்டுத் தெளிவாகச் சொல்லுமென்றனர் எ—று.

மாதுயரகலுதலை எதிர்காலத்துச் சிவபத்தர்கண்மீதேற்றுக. வேண்டுமென்பது இருதிணையைம்பான் மூவிடங்கட்கும் பொதுவாகித் தேற்றப் பொருடருவதோர் தொழிற்பெயர். அனைத்தையு மென்பார் உள்ளவை என்றும், அநாதியாகவரும் பிறவித்துன்பமென்பார் மாதுய ரென்றும், ஒருவர்மாட்டொன்று பெறக் கருதினோர் அவரை உயர்த்தவ துலகவழக்காகாகலின் வேதியர் பெருமானென்றும், எழுதற்கேற்ப மெல்லெனக் கூறுக வென்பார் விளம்பிடும் விளங்க என்றுங் கூறியருளினர். (௯)

விண்ணகம் பரவுநாத னிவ்வகை விளம்பச் சிந்தை
நண்ணுமன் புடையராகி நற்சடை முடியார் தம்மை
யெண்ணருந் தமிழின் பாட்டா லியம்பிய வைய ரப்போ
துண்ணெகிழ்ந் துளமெஞ் ஞான வாசக முவந்து சொன்னார்.

இ—ள்: விண்ணகம் பரவும் நாதன் இவ்வகை விளம்ப - விண்ணுலகவாசிகளாகிய தேவர்களுந் துதிக்கும் சிவபெருமானாகிய அவ்வந்தணர் இந்தப்பிரகாரம் சொல்லியருள, நல் சடை முடியார் தம்மை - நல்ல சடாமுடியையுடைய சிவபெருமானை, சிந்தை நண்ணும் அன்பு உடையர் ஆகிய எண் அரும் தமிழின் பாட்டால் இயம்பிய ஐயர் - மனத்தின்கட் பொருந்தும் அன்பை யுடையவராகி மதித்தற்கரிய தமிழ்ப் பாக்களினுலே முன்பு துதிசெய்த துறவியாகிய திருவாதவூரடிகள், அப்போது உள் நெகிழ்ந்து - அது கேட்டவுடன் மனம் நெக்குநெக்குருகி, மெய்ஞ்ஞானம் உள வாசகம் உவந்து சொன்னார் - மெய்ஞ்ஞானமாகிய பொருளையுடைய திருவாசகங்களை மனமுவந்து அடைவே சொல்லியருளினர் எ—று.

விண்ணகம் ஆகுபெயர். விண்ணகமு மென்னு முயர்வுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. உடையராகி இயம்பிய ஐயரென முடிக்க. மனத்தோடு பட்ட அடிகளது மெய்யன்பைச் சிந்தை நண்ணு மன்பென்றும், சந்திரனது சாப நிவிர்த்திக் கிடமாகிய சடையாகலின் நற்சடை என்றும், மெய்ஞ்ஞான வாசகமாகலின் எண்ணருந் தமிழின் பாட்டென்றும், ஓர் காமுகனுக்குத் தன்னால் விரும்பப்பட்ட வனிதையைப் பற்றிப் புகழ்ந்து

பேசுதற்கண் விரைவும் அவா மிக்குடைமையும் உளவாமாறு போலச் சிவ பத்திமானாகிய திருவாதவூரடிகளுக்குத் தம்மால் விரும்பப்பட்ட சிவ பிரானைப்பற்றிப் புகழ்ந்து கூறுதற்கண் விரைவும் அவா மிக்குடைமையும் உளவாமாகலின் அப்போ துண்ணெகிழ்ந்துள மெய்ஞ்ஞான வாசக முவந்து சொன்னா ரென்றுங் கூறினார். (௧௦)

அங்கவ ருரைத்த வெல்லா மம்பலத் தாடு மையர்
செங்கையி லேடு வாங்கித் தெளிவுற வரைந்த பின்னர்ப்
பொங்கிய வருளி னாரும் புகன்றிட ரகலத் தையல்
பங்கினர் தம்மைக் கோவை பாடுதல் வேண்டு மென்றார்.

இ—ள்: அங்கு அவர் உரைத்த எல்லாம் - அங்கே அத்திருவாதவூரடிகள் சொல்லிய திருவாசகங்களை யெல்லாம், அம்பலத்து ஆடும் ஐயர் செம் கையில் ஏடு வாங்கித் தெளிவு உற வரைந்த பின்னர் - கனகசபையிலே திரு நடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமானானவர் தமது சிவந்த அருமைத் திருக்கரத்தினாலே ஏட்டை எடுத்துத் தெளிவாக எழுதி முடித்த பின்னர், பொங்கிய அருளின் ஆரும் புகன்று இடர் அகல - பேரன்பினாலே எதிர் காலத்துள்ள சைவர்களனைவரும் ஓதித் தமது பிறவித் துன்பத்தினின்று நீங்குமாறு, தையல் பங்கினர் தம்மைக் கோவை பாடுதல் வேண்டும் என்றார் - சிவகாமியம்மை சமேதராகிய சபாநாயகரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ஒரு கோவை பாடுதல் வேண்டுமென்றருளினர் எ—று.

பங்கினர் தம்மைக் கோவை பாடுதல் வேண்டு மென்றா ரென்பது பங்கினரானவர் தம்மைக் குறித்து நீர் ஒரு கோவை பாடுதல் வேண்டு மென்றாரென உண்மை வெளிப்பட வேறுமொரு பொருடோன்ற நின்றவாறு கண்டுகொள்க. ஏடு - பனையேடு. புகன்றிட ரகல என்புழிப் புகன்றென்பது காரணப்பொருட்டாய செய்தென் வாய்பாட்டு வினையெச்சம். கோவை யென்னும் பிரபந்தமாவது உருவுந் திருவும் பருவமும் குலனும் குணமும் அன்பும் முதலியவற்றாற் றம்மு ளொப்புமை யுடையராய தலைமகனும் தலை மகளும் பிறர் கொடுப்பவு மடுப்பவுமின்றிப் பால்வகையான் ஓர் பொழிலிடத் தெதிர்ப்பட்டு, எண்வகைவேதமன்றலுட் காந்தருவ விவாகநெறியாற் புணர் தல் பிரிதன் முதலிய பாகுபாடு பற்றிவரும் இயற்கைப் புணர்ச்சி முதலிய களவிக்கொத்துக்களை யுடையதாய்க் காட்சி முதலிய நானூறு துறை களைக் கொண்டு, கட்டளைக்கலித்துறையாற் பாடப்படுவது. அது, "கோ வையே யகப்பொருட் கூறுபா டிசைப்பட, நாவலர் கலித்துறை நானூ றிசைத்தலே" என்றற் றொடக்கத்துச் சூத்திரங்களானறிக. (௧௧)

மன்னிய தவத்தின் மிக்கா ரதற்குள மகிழ்ந்து கூற
முன்னுற விருந்து கோவை யெழுதினர் முடிந்த பின்னர்ப்



பொன்னவிர் வேணி யார்தாம் புத்தகஞ் சேமித் தங்கண்
மின்னென மறைந்தார் சொன்ன வித்தக ரயர்ச்சி கொண்டார்.

இ—ள்: மன்னிய தவத்தின் மிக்கார் அதற்கு உளம் மகிழ்ந்து கூற - நிலைபெற்ற தவத்தான் மேம்பட்ட திருவாதவூரடிகள் அக்கேள்விக் கிசைந்து மனமுவந்து "திருவளர் தாமரை" என்றெடுத்துத் திருக்கோவை பாடி யருள, பொன் அவிர் வேணியார் தாம் முன் உற இருந்து கோவை எழு தினர் - பொன்போல விளங்கும் சிவந்த சடையையுடைய சபாநாயகர் தாம் அவ்வடிகட்கு எதிரே யிருந்து திருக்கோவையாரை எழுதினார், முடிந்த பின்னர் - அஃதெழுதி முடிந்த பின்னர், புத்தகம் சேமித்து அங்கண் மின் என மறைந்தார் - அத்திருமுறையைத் திருக்காப்புச் செய்துகொண்டு அங்கே மின்னலைப்போல மறைந்தருளினார், சொன்ன வித்தகர் அயர்ச்சி கொண்டார் - அவைகளைச் சொல்லியருளிய செந்தமிழ்க் கொருவராகிய திருவாதவூரடிகள் அதுகண்டு இவர் நம் பரமாசாரியர் போலுமென்று பிரமித்துத் தம்வசமழிந்தார் எ—று.

பொன்னவிர் வேணியென்றது நிறம்பற்றி வந்தமையிற் பண்புவமமும், மின்னென மறைந்தாரென்றது செயல்பற்றி வந்தமையிற் றொழிலுவமமு மாம், சபாநாயகர் இங்ஙனம் கோவை பாடுகவென்று தமதருமைத் திரு வாக்காற் கேட்டருளுதற்கேற்ப அனந்தகோடி பூர்வசன்மங்களிலே ஆர்ச் சித்த தவவிசேட முடையவ ரென்பார் அவ்வடிகளை மன்னிய தவத்தின் மிக்கா ரென்றும், அக் கேள்வியை மனமுவந் தேற்றுக்கொண்டு உடனே விரைவிற் கூறினாரென்பார் அதற்குள மகிழ்ந்து கூற என்றும், பாடுவோ ருக் கெழுதுவோர் எதிரிலிருந் தெழுத வேண்டுமாகலின் முன்னுறவிருந்து கோவை யெழுதின ரென்றும், திருமுறையையு முடன்கொண்டு அவர்க் குத் தம்மை யுணர்த்த வேண்டி விரைவின் மறைந்தருளினா ரென்பார் பொன்னவிர் வேணியார் தாம் புத்தகஞ் சேமித் தங்கண், மின்னென மறைந் தாரென்றும், கோவை பாடுக என்ற துணையானே அத்தியற்புத அதிமதுர சுத்தச் செந்தமிழ் மொழியினாலே பஞ்சலக்கணங்கட்கும் பிறவற்றிக்கும் மகாலக்கியமாக இறைவனூற்பொருளும் உலகநூல்வழக்குமு மென்னும் இருபொருளும் நுதலி யெடுத்துக்கொண்டு சிறிதும் தடையின்றிப் பாடினா ராகலின், அவ்வதுலசாதுரியந் தோன்றச் சொன்ன வித்தகரென்றும், இவர் நங்குருமூர்த்தியாயின், இவரைப் பணிகொண்ட சிவாபராதத்திற்கு இனி யாதுசெய்வேனென்று மயங்கினாரென்பார் அயர்ச்சிகொண்டார் என்றுங் கூறினார். அதுலம் - ஒப்பின்மை. (௧௨)

எழுந்தன ரெங்கு மோடி நாடின ரென்கொ லென்னா
வழிந்தனர் மன்று ளாடு மாதியென் றறிந்த பின்னர்ப்
பொழிந்தனர் கண்ணீ ரெங்கே போயினை யென்று மண்மேல்
விழுந்தனர் பரமானந்த வேலை வெள்ளத்து ளானார்.

இ—ள்: எழுந்தனர் - அங்ஙன மயர்ச்சியடைந்த திருவாதவூரடிகள் பின்ன ரவ்வயர்ச்சிநீங்கி விரைந்தெழுந்தனர், எங்கும் ஓடி நாடினர் - அவரை எவ்விடங்களினு மோடித் தேடினார், என் கொல் என்று அழிந்தனர் - ஓரிடத்துங் காணாமையால் இஃதென்னை அற்புத மென்று மறித்து மன மழிந்தனர், மன்றுள் ஆடும் ஆதி என்று அறிந்தபின்னர் - பின்னுமொரு பிரகாரந் தெளிந்து அவ்வாதி வருண வடிவங் கொண் டெழுந்தருளி வந்தவர் கனகசபையின் கண்ணே பஞ்சகிருத்தியநிருத்தஞ் செய்தருளும் சபாநாயகரேயாமென்று பலவேதுக்களினான் நிச்சயித்தறிந்த பின்னர், கண்ணீர் பொழிந்தனர் - அன்பு கூர்ந்து கண்களினின்று மிகவு மானந்த வருவி சொரிந்தனர், எங்கே போயினை என்று மண்மேல் விழுந்தனர் - என்னுயிர்த் துணைவரே தேவரீர் இதுபொழு தெங்கே மறைந்தருளினி ரென்று மறித்துஞ் செயலற்று விழுந்தனர், பரம ஆனந்த வேலை வெள்ளத்துள் ஆனார் - முடிவிற் சிவானந்தமாகிய சமுத்திர மத்தியிற் படிவாராயினார் எ—று.

பின்னர் என்பதனை ஏற்குமிடமெங்குங் கூட்டிப் பொருள் கொள்க. அருட்டிரு மறையவரே தம்மாட் டன்புடையராய் வந்தளவளாவிப் பின்னரேதுவுமின்றி மறைந்தமையின் மனமழிந்தனரென்பார் அழிந்தனரென்றும், அவரே தம் பாடலை யுவந்து கூறுவித்து, அருமைத் திருக்கரத்தால் எழுதியருளினமையை நினைக்குந்தோறும் சிவானந்தம் பெருகிற் றென்பார் பரமானந்தவேலை வெள்ளத்துளானார் என்றுங் கூறினார். (க௫)

செந்தமிழ்க் கன்பு மிக்கார் சென்றுதம் மன்றி லெய்தி
யந்தரத் தவரை மாலை யயனைநன் முகத்து நாடி
நந்தமக் கடிமை பூண்டு நயந்தவ னொருவன் சொன்ன
விந்தநற் பாடல் கேண்மி னென்றவர்க் கெடுத்துச் சொன்னார்.

இ—ள்: செந்தமிழுக்கு அன்பு மிக்கார் - செந்தமிழ் மொழியினாலே செய்யப்படுந் தோத்திரங்களில் அன்பு மிக்க நஞ்சிவபெருமானானவர், சென்று தம் மன்றில் எய்தி - அங்ஙனந் திருமுறையுடன் மறைந்து சென்று தங்கனகசபையை யடைந்து, மாலை அயனை அந்தரத்தவரை நல் முகத்து நாடி - அரிபிரமேந்திராதி தேவர்களைத் திருமுகமலர்ச்சியோடு பார்த்து, நந்தமக்கு அடிமை பூண்டு நயந்தவன் ஒருவன் சொன்ன - நம்மைக் காதலித்து நமக்குத் தாசத்துவம்பூண்ட ஒரு அன்பன் பாடிய, இந்த நல் பாடல் கேண்மின் என்று எடுத்து அவர்க்குச் சொன்னார் - இந்த நல்ல செந்தமிழ்ப் பிரசுரங்களைக் கேளுங்களென் றவர்கட்குத் தமதருமைத் திருவாக்கினாலே விதந்து வாசித்துக் காட்டியருளினார் எ—று.

வனைக் கொடுந்தமிழினீக்குதற்குச் செந்தமிழென விசேடிக்கப்பட்டது. செந்தமிக் கென்புழிக் குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரிக்க. செய்யுளாகலின் அந்தரத்தவரை மாலை அயனை என முறை பிறழவைக்கப்பட்டது. நந்தமக் கடிமைபூண்டு நயந்தவனென்பது நயந்து நந்தமக் கடிமை பூண்டவனென விகுதி பிரித்துக் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. தம்மால் அருளிச் செய்யப்பட்ட வேதசிவாகமங்கட்கும் அவற்றின் சாரமாகிய இச் செந்தமிழ்ப் பிரபந்தங்கட்கும் பேதமின்மை விளக்குதற்கு நற் பாடலென விசேடித்தார். காமுகனொருவன் தன்னைப் புகழ்ந்து தன்னாலுரைக்கப்பட்ட வாக்கினும் தன் காமக்கிழத்தியர்வாய்த் தோன்றிய வாக்கில் விருப்ப மிக்குடையனாய் வசீகரிக்கப்படுமாறு சிவபிரான் தம்மைப் புகழ்ந்து தம்மாலுரைக்கப்பட்ட வேதசிவாகமங்களினுந் தம் மெய்யன்பராகிய திருவாதவூரடிகள்வாய்த் தோன்றிய திருவாசகந் திருக்கோவையாரென்னும் செந்தமிழ்ப் பிரபந்தங்களில் விருப்பமிக்குடையராய் வசீகரிக்கப்படுதலின், இங்ஙனங் கூறியருளினாரென்பது கருத்து. சர்வஞ்ஞத்துவமுடைய அதிபரமாப்தராகிய சிவபெருமானே வேதசிவாகமங்களை அருளிச்செய்த தமது அருமைத் திருவாக்கினாலே அவ்விரு பிரபந்தங்களையும் இந்தநற்பாடலென்று வியந்து அரிபிரமேந்திராதி தேவர்கட்குத் தாமே வாசித்துக் காட்டியருளிக் கேட்பிப்பதுஞ் செய்வாராயின், சிற்றறிவுடைய பசு வர்க்கத்துள்ளும் மிகத் தாழ்ந்த 'பருவத்தையுடைய நாயினும் கடையேமாகிய நாமா அப்பிரபந்தங்களின் கீர்த்திப்பிரதாபங்களை எடுத்து விதந்துரைக்க வல்லேம். (க௬)

மெய்த்தவ வாத வூரன் விளம்பிட வெழுது மிந்தப்
புத்தக மன்றுளாடல் புரிந்தவ னெழுத்தா மென்று
முத்தியை யுதவுங் கோவை முடிவிடத் தெழுதிப் பின்னர்ச்
சித்திர மலர்க்கை யாலே திருந்தமைக் காப்புஞ் செய்தார்.

இ—ள்: பின்னர் - அதன்பின்பு சபாநாயகர், மெய்த்தவ வாதவூரன் விளம்பிட - மெய்ம்மையாகிய தவத்தையுடைய வாதவூரன் கூற, எழுதும் இந்தப் புத்தகம் - எழுதிய இப்புத்தகம், மன்றுள் ஆடல் புரிந்தவன் எழுத்தாம் என்று - கனகசபையின்கட் பஞ்சகிருத்திய நடனஞ் செய்யும் அழகிய திருச்சிற்றம்பலமுடையானது கையெழுத்தாமென்று, முத்தியை உதவும் கோவை முடிவு இடத்து எழுதி - பாராயணஞ் செய்யும் பக்குவிகட்கு முத்தியைக் கொடுக்க வல்ல திருக்கோவையார் முடிவிடமாகிய "ஊரன் மற்றியாவர்க்கு மூதியமே" என்பதன் பின்னர் எழுதி, சித்திர மலர்க்கையாலே திருந்த மைக் காப்பும் செய்தார் - சித்திரமாகிய தாமரைமலர்போலும் அருமைத் திருக்கரங்களினாலே திருத்தமுற மைக் காப்புஞ் செய்தருளினார் எ—று.

அன்விகுதி முன்னையது படர்க்கையினும் பின்னையது தன்மையினும் வந்தன. என்று எழுதிச் செய்தாரென முடிக்க. முடிவிடம் இறந்தகால

வினைத்தொகை. உம்மை இறந்ததும் எதிரதுந்தழீஇயிற்று; இழிவு சிறப்புமாம். உலகநூனுதலிய வெனைக் கோவைகளெல்லாம் புத்தியைக் கொடுப்பனவாக, இஃதொன்றே இறைவனூற்பொருளுநுதலியமுத்தியைக் கொடுப்பதென்பார் முத்தியை யுதவுங் கோவையென்றும், விரிதலுங் குவிதலுமாகிய விகாரமில்லாத தாமரை மலர்போலுந் திருக்கரமென்பார் சித்திர மலர்க்கையென்றும், அவ்வருமைத் திருக்கரங்களினாலே இங்ஙனஞ் செய்தருளினரென்பார் திருந்தமைக்காப்புஞ் செய்தாரென இழிவு சிறப்பும்மை கொடுத்துங் கூறினர். சித்திரம் - அதிசயம், நூதனம். (௧௫)

வெண்பிறை முடித்த வேணி வித்தக ருலகுக் கெல்லா
நண்புடை வாத வூரர் நற்றவ முணர்த்த வெண்ணி
யெண்பெறு முனிவர் விண்ணோ ரிறைஞ்சு மம்பலத்து வாயில்
வண்படி மீதே யுண்மை வாசக முறையை வைத்தார்.

இ—ள்: வெண் பிறை முடித்த வேணி வித்தகர் - வெண்மையாகிய பாலசந்திரனை யணிந்த சடையையுடைய சர்வகர்த்திருத்துவ சாதுரியராகிய சிவபெருமானானவர், உலகுக்கு எல்லாம் நண்பு உடை வாதவூரர் நல் தவம் உணர்த்த எண்ணி - இவ்வுலகிற்கெல்லாம் நட்பையுடைய திருவாதவூரடிகளது நல்ல தவத்தை உணர்த்தி உய்விக்கத் திருவுளங்கொண்டு, எண்பெறு முனிவர் விண்ணோர் இறைஞ்சும் அம்பலத்து வாயில் வண்படி மீதே - மூவாயிரமென்னுந் தொகைபெறுந் தில்லைவாழந்தணர்களும் அரிபிரமேந்திராதி தேவர்களும் தம்மை வணங்கி வழிபடும் சிற்சபையின் வாய்தலிலுள்ள வளவிய பஞ்சாக்ஷரப்படியின்மீதே, உண்மைவாசக முறையை வைத்தார் - சத்திய நின்மல ஞானத்தையே பொருளாகவுடைய திருவாசகப் புத்தகத்தை வைத்தருளினர் எ—று.

உலகுக்கென்னும் நான்கனுருபை நண்புடைமையோடும் உணர்த்துதலோடும் தனித்தனி முடிக்க. உலகுக்கெல்லாம் நட்புடைமையாவது சமய குருத்துவமுடைமை; சீவகாருண்ணிய முடைமை யென்றுமாம். நட்புடைய என்பது மெலிந்தும் தொக்கும் நின்றது. எண்பெறு முனிவர் என்பதற்கு இரண்டென்னுந் தொகைபெறும் பதஞ்சலி வியாக்கிரபாதரென்னு மிருடிகளென்றும், தேவர்களினும் முன்வைத்து நன்கு மதிக்கப்படும் முனிவர்களென்றுமாம். இடத்து நிகழ்பொருட்குரிய விசேடத்தை இடத்திற் கேற்றி இறைஞ்சுமம்பலமென்றூர் என்றலு மொன்று. இறைஞ்சும் வாயிலென முடிப்பினு மமையும். உண்மை ஆகுபெயர். சிவபெருமானது சர்வகர்த்திருத்துவ சாதுரியத்தைத் தக்கனு விடருற்றுவந்த சந்திரனது சாபநிவிர்த்தியின்மேல் வைத்து விளக்குவார் வெண்பிறை முடித்தவேணி வித்தகரென்றும், அவரது கிருத்தியங்களெல்லாம் யாண்டுந் தம்பொருட்டன்றி ஆன்மாக்களாகிய பிறர்பொருட்டே செய்யப்படுமென்பார் உலகுக்கெல்லா, நண்புடை வாதவூரர் நற்றவ முணர்த்த வெண்ணி யென்றும், ஒரோவழி நாமே பிரமமென்னும் செருக்கையுடைய தேவர்களினும் அஃதியாண்டுமில்லாத முனிவர்களே அடிமைத்திறத்திற் சிறந்தவரென்பார் அவரை முன்வைத்து எண்பெறு முனிவர் விண்ணோ ரென்றும், பஞ்சாக்ஷரப்படி என்பது விளக்குதற்கு வண்படி என்றும் கூறினர். சர்வகர்த்திருத்துவம் எல்லாவற்றையுஞ் செய்தற்கு வினைமுதலாந் தன்மை. (௧௬)



வைத்தபின் பூசை செய்யு மந்தணர் வந்து கண்டிப்
புத்தக மிங்கு நண்ணும் புதுமை தைவிகமா மென்று
சித்தமங் குருகி நின்று தில்லையுள் ளார்கட் கெல்லா
மித்திறங் கூறல் வேண்டு மென்றுமன் றகன்று போந்து.

இ—ள்: வைத்தபின் - திருமுறையை நடராசர் அங்ஙனம் வைத்தருளிய பின்னர், பூசை செய்யும் அந்தணர் வந்து கண்டு - சுவாமிக் கருச்சனை செய்யும் தில்லைவாழந்தணராகிய ஆதிசைவரொருவர் வந்து அதனைக் கண்டு, இப் புத்தகம் இங்கு நண்ணும் புதுமை தைவிகம் ஆம் என்று - நாம் அர்த்தயாம பூசை முடித்துத் திருக்கதவந் திருக்காப்புச் செய்துழி ஈண்டில்லாத இப்புத்தகம் இப்பொழுதிங் கிருக்கு மற்புதம் தேவச் செயலேயா மென்று நிச்சயித்து, அங்குச் சித்தம் உருகி நின்று - அங்ஙனம் தம்மனம் நெக்குநெக்குருகிச் சிறிது போது தம் வயமின்றி நின்று, தில்லை உள்ளார்கட்கு எல்லாம் இத்திறம் கூறல் வேண்டும் என்று - பின்னர் இச் சிதம்பர தல வாசிகட்கெல்லாம் இவ்வத்தியற்புத சமாசாரத்தை விரைந்து சொல்லுதல் வேண்டுமென்று கருதி, மன்று அகன்று போந்து - அக்கனக சபையைவிட்டு அரிதில் நீங்கிச் சென்று எ—று.

தேவ சம்பந்தம் - தைவிகமென்க. அந்தணர் கண்டென்றது பூசை செய்யும் அந்தணர் வந்து கண்டென ஈண்டு விதத்தலானும், எம்மிறையுறையு மன்றுட், டேவரும் புகுதவொண்ணு தெய்விக மிதுவென் றெண்ணி யென முன்னர் விதத்தலானும், அவ்வந்தணர் அது கண்ட காலம் உஷக்காலமென்பது பெற்றும். கடைகாப்பின் றிட்ப முதலியவெல்லாம் அவ்வருச்சகர்க் கினிது விளங்குமாகலின், இது மானுஷியமன்று தைவிகமே யென அனுமானப் பிரமாணம் பற்றி அவரான் நிச்சயிக்கப்படுதல் சாலுமென்க. இந்நிகழ்ச்சி பராசத்தியா னதிட்டிக்கப்பட்ட சுத்த மாயாமயமாகிய கனகசபையின்கண்ண தாகலின், தைவிகமென்றது சபாநாயகரது செயலையே குறித்தலின், அதுபற்றி மனம் நெக்கு நெக்குருகியவழித் தம்மை மறந்து சிறிதுபோழ்து வாளாநிற்றலமையுமாகலிற் சித்தமங் குருகி யென்றொழியாது சித்தமங் குருகி நின்றென்றூர். சித்தமங்குருகி யென்ற விதப்பால் அரிதினீங்கி யென்பது தானே போதருமென்க. (௧௭)

செந்திரு மருவுந் தொல்லைத் தில்லைநன் னகரி னுள்ளார்
தந்திரு முன்பு சென்று சாற்றின ரிந்த நீர்மை
யந்தணர் மொழிந்த பின்ன ரதிசய மிதுவென் றோடி
வந்தவர் படிமே லண்ணல் வைத்த புத்தகங் கண்டார்கள்.

இ—ள்: செந்திரு மருவுந் தொல்லைத் தில்லை நல் நகரில் உள்ளார் தம் திரு முன்பு சென்று - இலக்குமி வசிக்கும் பழைய தில்லைமாநகர வாசிகளது சமீபத்திற் போய், இந்த நீர்மை சாற்றினர் - இவ் வத்தியற்புத சமாசாரத்தைக் கூறினர், அந்தணர் மொழிந்த பின்னர் - அவ்வந்தணர் அங்ஙனங் கூறியவுடன், இது அதிசயம் என்று ஓடி வந்தனர் - இது பேரற்புதமென்று வல்விரைந்து வந்தவர்களெல்லாம், அண்ணல் படிமேல் வைத்த புத்தகம் கண்டார்கள் - சபாநாயகர் பஞ்சாக்ஷரப்படியின்மீது வைத்தருளிய திருமுறையை நேரே கண்டார்கள் எ—று.

செந்திரு வென்புழிச் செம்மென்பது இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயரடையாகலிற் பிறிதினியை புடைமை நீக்கிய விசேடணமென்க. வந்தவர் வினையாலணையும் பெயர். அருட்செல்வம், பொருட்செல்வமென்னும் இரண்டு மொருங்குடையரென்பார் செந்திரு மருவுந் தொல்லைத் தில்லைநன்னகரினுள்ளா ரென்றும், அதிசமீபத்திற் சென்றென்பார் திருமுன் சென்றென்றும், இது முன்னோர்காலுங் கண்டுங் கேட்டுமறியாத பேரதிசயமென்பார் அதிசயமிதுவென்றும், ஈண்டுக் கேட்டறிந்தவர் நேரே இனிக் கண்டுமறிதற்பொருட்டு மிகக்கடுகிநடந்தமைதோன்ற ஓடிவந்தவரென்றுங்கூறினர்.

யாவருந் தம்மு ணாடி யெம்மிறை யுறையு மன்றுட்
டேவரும் புகுத வொண்ணா தெய்விக மிதுவென் றெண்ணி
மேவுமன் பதனா லண்ணல் விளம்பிய சைவ நூலோ
தாவுசெந் தமிழோ வென்று பார்ப்பது தக்க தென்றார்.

இ—ள்: யாவரும் தம்முள் நாடி - அவரனைவரும் தம்முளாராய்ந்து, எம் இறை உறையும் மன்றுள் தேவரும் புகுத ஒண்ணா - நம் முழுமுதலாகிய சபாநாயகர் வீற்றிருக்கும் கனகசபையின்கண்ணே அர்த்தயாம பூசை முடித்துத் திருக்கதவந் திருக்காப்பிட்ட பின்னர் அரிபிரமேந்திராதி தேவர்களும் உட்பிரவேசிக்கக் கூடாது, இது தெய்விகம் என்று எண்ணி - ஆதலான் இது நங்கடவுள் செயலேயாமென்று தீர்க்க நிச்சயம் செய்து, மேவும் அன்பு அதனால் அண்ணல் விளம்பிய சைவநூலோ - இத்திருமுறை ஆன்மாக்களாகிய நம்மாட்டுத் திருவுள்ளத்து முகிழ்த்த கைம்மாறற்ற பெருங்கருணைத் திறத்தினாலே சதாசிவநாயனார் திருவாய்மலர்ந்தருளிய வடமொழிச் சைவாகமமோ, தாவு செந்தமிழோ என்று பார்ப்பது தக்கது என்றார் - அல்லது முச்சங்கத்திலும் பரவிய செந்தமிழ் நூலோவென்று நாம் பார்ப்பதுவே இனிச் செயற்பாலது என்று ஒருங்கு கூறினர்கள் எ—று.



ஒண்ணாதென்னுந் தொழிற்பண்பின்மேனின்ற முற்றுவிகுதி குறைந்து ஒண்ணாவென நின்றது. நூலென்பதனைத் தமிழென்பதனோடுங் கூட்டுக. எல்லாரும் ஆண்டை நிகழ்ச்சிகளெவற்றையும் ஒருங்கொப்பக் கூறினரென்பார் யாவரும் என்னுமெழுவாயை முதலினும், என்றா ரென்னும் பயனிலையை முடிவினுந் தந்து, யாவரும் என்றார் என முடித்தார். (௧௯)

தேக்கிய வருளு மன்புஞ் சிறந்தவ ரெல்லாஞ் சொல்லும்
வாக்கினி லொருவர் சென்று மலர்கொடு வணக்கஞ் செய்து
பூக்கமழ் சடையோன் வைத்த புத்தகம் தன்னைச் சேம
நீக்கின ரோதி னார்முன் னீதிகொ ளகவ னான்கும்.

இ—ள்: தேக்கிய அருளும் அன்பும் சிறந்தவர் எல்லாம் சொல்லும் வாக்கினில் - நிறைந்த சீவகாருண்ணியத்தினாலும் சிரத்தையினாலும் விசேடித்த தில்லைவாழந்தணர்களெல்லாம் ஒருங்கொப்பச் சொல்லிய சொல்லின் வண்ணமே, ஒருவர் சென்று மலர் கொடு வணக்கம் செய்து - அவ்வந்தணருட் சிறந்தவரொருவர் திருமுறைக்குச் சமீபத்திற் சென்று மலர்களைக்கொண் டருச்சித்து வணங்கி, பூக் கமழ் சடையோன் வைத்த புத்தகந் தன்னைச் சேமம் நீக்கினர் - கொன்றை மாலை நறுமணம் கமழும் சடையை யுடைய சபாநாயகர் பஞ்சாக்ஷரப்படியின்மீது வைத்தருளிய அப் புத்தகத்தைக் கட்டவிழ்த்து, முன் நீதி கொள் அகவல் நான்கும் ஓதினர் - முதற்கண் நீதியையுடைய சிவபுராணம் கீர்த்தித்திருவகவல் திருவண்டப்பகுதி போற்றித்திருவகவலென்னும் ஆசிரியப்பா நான்கையும் வாசித்தனர் எ-று.

தேங்கிய வென்பது தொடை நோக்கி வலிந்து நின்றது. ஐந்தனுருபு ஏதுப்பொருட்கண் வந்தது. நீக்கினர் என்பதெச்சமுற்று. நீதி-முறைமை. ஈண்டுக் கூறிய திருவாசகம் நான்கனுட் கீர்த்தித்திருவகவன் முதன் மூன்றையும் அகவலென்றதொக்கும், சிவபுராணம் கலிவெண்பா வாதலின், அதனையும் அகவலென்றதென்னை வழுவாம் பிறவெனின்? கமுகந்தோட்டம் என்றாற்போல மிகுதிபற்றிய குறியாதலின் அது வழுவன்றென்க. (௨௦)

வேறு.

திருச்சதக முதலாகச் சிறந்ததமி ழறுநூறும்
விரித்தவகப் பொருட்கோவை விளங்கவொரு நானூறு
முரைத்தனர்பின் முடிந்தவிடத் தயர்வாத வூரன்மொழி
தரித்தெழுது மம்பலவ னெழுத்தென்று சாற்றினார்.

இ—ள்: திருச்சதகம் முதலாகச் சிறந்த தமிழ் அறுநூறும் - திருச்சதகம் முதலாக அச்சோப்பதிக மீறாகவுள்ள சீரிய தமிழ் வேதமாகிய திருவாசகம் அறுநூறும், அகப்பொருள் விளங்க விரித்த கோவை ஒரு நானூறும் உரைத்தனர் - காட்சி முதல் ஊதியமெடுத்துரைத்தாடறீர்த்தலீறாகிய

அகப்பொருட்டுறைகளைத் தெளிவுற விரித்துக் கூறிய திருக்கோவையார் நானூறுமாகிய அருட்பாக்களை வாசித்தனர், பின் முடிந்த இடத்து - பின்னர் அது முடிந்த முடிவின்கண், உயர் வாதவூரன் மொழி - இப்பிரபந்தங்களை உயர்ந்த வாதவூரன் பாட, தரித்து எழுதும் (எழுத்து) அம்பலவன் எழுத்து என்று சாற்றினர் - ஏட்டையு மெழுத்தாணியையுந் தாங்கி எழுதிய இவ்வெழுத்தானது அழகிய திருச்சிற்றம்பலமுடையானது கையெழுத்தென்று நெட்டெழுத்தையும் அவ்வந்தணர் வாசித்தனர் எ—று.

மொழிய வென்னுஞ் செயவெனெச்சத்தீறு விகாரத்தாற் றொக்கது. மொழி வாக்குமாம். எழுத்தென்பது மேலுங் கூட்டப்பட்டது. சிறந்த என்பதனைக் கோவைக்குங் கூட்டுக. சிதம்பரத்துள்ள சிற்சபை, கனகசபை நிருத்தசபை, தேவசபை, இராசசபை யென்னும் பஞ்சசபைகளுட் சிற்சபையில் சபாநாயகரது திருவருளாற் கனகசபையில் அபிஷேகிக்கப்படும் சிவலிங்கப்பெருமானே அழகிய திருச்சிற்றம்பலமுடையாரென்க. அவரே திருவாதவூரடிகளிடஞ்சென் றிவ்வருட்பாக்களை எழுதியருளினரென்பதான்றோர் வழக்கமாம். திருச்சதகமுதலாக அறுநூற்றுச் சேடத்தை அறுநூறென்றது தலைமைபற்றிய தொகையென்க. திருச்சதகம் முதலாகத் திருவாசகம் அறுநூற்றைம்பத்திரண்டும், அகவல் மூன்றும், கலிவெண்பா ஒன்றும், கோவை நானூறுமாக, ஆக ஆயிரத்தைம்பத்தாறென்க. இது கொச்சகக் கலிப்பா. (௨௧)

கேட்டவர்க ளெல்லோருங் கிளர்புளகங் குறுவேர்வு
காட்டிடவொண் கண்ணீருங் கசிந்துருகு சிந்தையுமா
யீட்டியமெய்த் தவமுடையோ ரியம்பியவித் தமிழன்றி
வீட்டுநெறிக் கினிச்சிவநூல் வேறுளதோ வென்றார்கள்.

இ—ள்: கேட்டவர்கள் எல்லோரும் - இப் பிரபந்தங்களையும் நெட்டெழுத்தையும் அவ்வந்தணர் வாசிக்கக் கேட்ட சிதம்பரதலவாசிகளனைவரும், கிளர் புளகம் குறுவேர்வு காட்டிட - தங்கட் கிளராநின்ற புளகமும் குறுவேர்வையு மாகிய மெய்ப்பாடுகளைப் பிறர்க்குத் தஞ் சரீரம் காட்டாநிற்ப, ஒண் கண்ணீரும் கசிந்து உருகு சிந்தையும் ஆய் - ஆனந்த பாஷ்பமும் நெக்குநெக்குருகு மனமுமாய், ஈட்டிய மெய்த்தவம் உடையோர் இயம்பிய இத்தமிழ் அன்றி - அனந்தகோடி பூர்வசன்மங்களிலே அரிதினர்ச்சித்த மெய்ம்மையாகிய தவத்தையுடைய திருவாதவூரடிகள் திருவாய்மலர்ந்தருளிய இத் தமிழ்ப் பிரபந்தங்களல்லது, வீட்டு நெறிக்குச் சிவநூல் இனி வேறு உளதோ என்றார்கள் - மோக்ஷவழிக்குச் சிவசாத்திரம் இனி வேறொன்றுளதோவென மிகவும் வியந்து பேசினார்கள் எ—று.



வீட்டு நெறி நான்கு அவை சரியை, கிரியை, யோகம், ஞானமென மேலுங் கூறினும். ஓகாரம் எதிர்மறை. சிவநூல் சிவாகமம்; ஆனந்த பாஷ்பமென்பது போதா ஒண்கணீரெனவும், சிவபுண்ணியமென்பது விளக்குதற்கு மெய்த்தவமெனவும், திருவாதவூரடிகள் பசுகரண நீங்கிச் சிவகரணமுற்ற பெருந்தகையினராதலின் அவர் செய்த நூலை இத்தமிழன்றி வீட்டு நெறிக்கினிச் சிவநூல் வேறுளதோ வென்றும் கூறினார்களென்க. (௨௨)

பூணரவன் றிருநாமம் புகழுமருந் தவர்சொல்ல
யாணரிதன் பொருட்டேனை யின்றுணர்வோ மென்றெண்ணி
மாணுடைமன் றகன்றேகி மறைவல்லார் போதிநிழல்
வினைருடன் பெருவாது வென்றவர்முன் சென்றார்கள்.

இ—ள்: மறை வல்லார் - அதன்பின்பு வேதத்தில் வல்ல தில்லைவாழந்தணர்கள், இதன் பொருள் யாணர்த்தேனை - இந் நூற்பொருளாகிய புதிய தேனை, பூணரவன் திருநாமம் புகழும் அருந்தவர் சொல்ல - சர்ப்பாபரணத்தையுடைய சிவபெருமானை நமச்சிவாய நாமம் முதலிய அளவிறந்த திருநாமங்களாலே துதி செய்த அரிய தவத்தையுடைய திருவாதவூரடிகளாகிய ஆக்கியோரே சொல்லியருள, இன்று உணர்வோம் என்று எண்ணி - நாமின்றறியக்கடவோமென்று சிந்தித்து, மாண் உடை மன்று அகன்று ஏகி - மாட்சிமை பொருந்திய கனகசபையைவிட்டு நீங்கி, போதிநிழல் வீணருடன் பெருவாது வென்றனர் முன் சென்றார்கள் - அரசமரநிழலை நன்கு மதிக்கும் பொறியிலிகளாகிய புத்தர்களோடு சமயவாதஞ் செய்து வென்ற ஆசாரியசுவாமிகளாகிய திருவாதவூரடிகளது சந்நிதியில் ஒருங்கு சென்றனர் எ—று.

பூணரவன் என்பதனை அரவப் பூணனென விகுதி பிரித்துக் கூட்டுக. யாணர் - புதுமை. உண்ணுகின்றுழி மாதுரியச் சுவை பயப்பதாய்ப் பின் புளிச் சுவைபயக்கும் ஏனைத் தேன்போலாது இப்பொருட்டேன் என்றும், மாதுரியச் சுவையே பயத்தலின் அதனை யாணரிதன்பொருட்டேனென்றும், சமுசார வழக்கறுக்கும் மன்றாகலின் மாணுடை மன்றென்றும், புத்தசமயாசாரியராகிய கௌதமமுனிவர் காயாவனத்துள் ஓரரசமர நீழலின்கணிருந்தருந்தவமியற்றித் தம் மதஞானம் மிகவும் பெற்றுக்கொண்டமையின், அச்சார்புபற்றி அம்மரநிழலைத் தமக்கு விசேட தருநிழலாகக் கொண்டவர் அது சேட்டைக் குறைவிடமென்பதறியார்போலு மென்பார் அவரைப் போதிநிழல் வீணரென்றுங் கூறினர்.

சென்றவர்தந் திருமுன்பு திருமுறைவைத் தண்டர்பிரான்
னின்றுசெயுஞ் செயலிதுவென் றியம்பினர்கின் றெல்லோரு
மொன்றுறுமென் புன்பாட லுவந்தருளப் புவிமீதி
லென்றுசெயுந் தவமறியே னென்றழுதா ரன்பாளர்.

இ—ள்: எல்லோரும் சென்று - தில்லைவாழந்தணரனைவரும் வில்வவனத்துச் சென்று, அவர் தம் திரு முன்பு திருமுறை வைத்து - அவ்வடிகளது சந்நிதியிலே அத்திருமுறையைப் பீடத்தோடு வைத்து, அண்டர்பிரான் இன்று செயும் செயல் இது என்று நின்று இயம்பினர் - தேவநாயகராகிய சிவபெருமான் இத்தினஞ் செய்தருளிய திருவிளையாடல் இதுவேயாமென்று வணங்கி யெழுந்து நின்று விண்ணப்பஞ் செய்தனர், அன்பு ஆளர் - அப்பொழுது அன்பையாளுந் திருவாதவூரடிகள், புன்(மை) ஒன்றுறும் என் பாடல் உவந்தருள - எளிமைபொருந்துமென் பிரபந்தங்களை நம தான்மநாயகர் திருவுளமுவந்து தமதருமைத் திருக்கரங்களினாலே எழுதியருள, புவிமீது அன்றுசெயும் தவம் அறியேன் என்று அழுதார் - பூர்வசன்மங்களில் இக் கன்மபூமியிற் செய்த தவத்தைத் தமியேன் இன்னதென்றறியேனென்றழுதார் எ—று.

இன்னதென்றறியின் இன்னும் இத்தவத்தையே செய்வேன் என்பது கருத்து. இதுவென்றது திருமுறையைப் பஞ்சாக்ஷரப்படியின்மீது அகாலத்தில் வைத்தருளினதையும், இப்பிரபந்தங்களை வாதவூரன் பாட இவற்றை எழுதிய எழுத்து அழகிய திருச்சிற்றம்பலமுடையானெழுத்தென் றெழுதியருளினதையுமாம்; தொகுதியொருமை. "வானிடத்தவரு மண்மேல்வந்தரன்றனை யர்ச்சிப்பர்" என்பவாதலிற் புவியிலென்றார். கன்மபூமி பரதகண்டம். அத்தவமாவது அன்பையாளுந் தன்மையே பிறிதில்லையென்பார் அன்பாளரென உடம்பொடு புணர்த்துக் கூறினார். (௨௪)

புண்ணியரிங் கிவ்வாறு புலம்பினர்பின் புலியூரி
லெண்ணருமன் புடையார்க ளிதமுடனஞ் சலிசெய்து
பண்ணுலவுஞ் சிவஞானப் பாடல்கொளும் படிநப்பா
னண்ணுமரன் செய்ததென்னீர் நவிலுமெனச் சொன்னார்கள்.

இ—ள்: புண்ணியர் இங்கு இவ்வாறு புலம்பினர் - புண்ணிய புருஷராகிய திருவாதவூரடிகள் இங்ஙனம் பிரலாபித்தனர், பின் - அதன் பின்பு, புலியூரில் எண் அரும் அன்பு உடையார்கள் - சபாநாயகர்மாட்டெல்லையற்ற அன்பையுடைய தில்லைவாழந்தணர்கள், இதம் உடன் அஞ்சலி செய்து - பிரீதியோடு கைகுவித்துக் கும்பிட்டு வணங்கி, பண் உலவும் சிவஞானப் பாடல் கொளும்படி நம்பால் நண்ணும் அரன் - பண்பொருந்தும் சிவஞானப் பொருளையுடைய இவ்வருட்பாக்களைப் பாடுவித்துக்கொள்ளும் பொருட்டுத் தேவரீர்மாட்டெழுந்தருளிய அரசபதத்தையுடைய சபாநாயகர், செய்தது என் - செய்தருளிய அற்புதம் யாது, நீர் நவிலும் எனச் சொன்னார்கள் - தேவரீர் சொல்லியருளுமென்று பிரார்த்தித்தார்கள் எ—று.



பண்ணுலவும் பாடலென முடிக்க. புலியூரி லெண்ணருமன்புடையார்கள் என்பதற்குப் புலியூரிலெல்லையற்ற அன்பையுடையார்களென்றுரைப்பினு மமையும். புண்ணியர் வரபுருஷரென்னும் பொருட்டு. அரன் பக்குவான்மாக்களது பாசத்தை யரிப்பவன். அவ்வடிகளல்ல தவ்வற்புதத்தை உள்ளபடி தங்கட்குச் சொல்லியருளுவார் பிறரொருவருமின்மையானும், அவ்வற்புதங் கேட்டல்லதொழிதலாகாமையானும், அடிகளை அந்தணர் இவ்வாறு கேட்டல் வேண்டிற்றென்பார் நீர் நவிலுமெனச் சொன்னார்களென்றார். (௨௫)

அல்லலெனும் பிறவியிலா ரண்ணல்செயுஞ் செயல்யாவுஞ்
சொல்லினர்பின் புலியூரர் தொழுதுமனங் களிகூர்ந்து
தில்லையிலெம் பெருமானைச் செப்பியவித் தமிழ்மாலை
நல்லவரும் பொருள்கேட்க வேண்டுமென நவின்றார்கள்.

இ—ள்: அல்லல் எனும் பிறவி இலார் - முழுதுந் துன்பத்திற்கேதுவாகிய பிறப்பிறப்பற்ற திருவாதவூரடிகள், அண்ணல் செயும் செயல் யாவும் சொல்லினர் - சர்வ லோகைகநாயகராகிய சிவபெருமான் தம்மாட்டெழுந்தருளிவந்து செய்தருளிய அற்புத சமாசாரங்கள் அனைத்தையும் சொல்லியருளினார், பின் - அங்ஙனஞ் சொல்லியருளியபின்னர், புலியூரர் மனம் களி கூர்ந்து தொழுது - தில்லைவாழந்தணர்கள் அதுகேட்டு மனம் மிக மகிழ்ச்சியடைந்து அவ்வடிகளை வணங்கி, எம் தில்லையில் பெருமானைச் செப்பிய இத் தமிழ் மாலை நல்ல அரும் பொருள் - நம் சிதம்பர சபாநாயகரையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய இத்தமிழ்ப் பிரபந்தங்களுதலிய நன்மையாகிய அரிய அர்த்தத்தை, கேட்கவேண்டுமென நவின்றார்கள் - தமியேம் தேவரீரிடம் கேட்க வேண்டுமென்று அதிவினயத்துடன் பிரார்த்தித்தார்கள் எ—று.

அல்லலெனும் பிறவி என்றது காரிய காரண வுபசாரம். மாலைக்கென நான்காவது விரிப்பினுமமையும். மாலைபோன்றலின் நூலை மாலையென்றார். நல்ல பொருள் அரும் பொருளெனத் தனித்தனி முடிக்க. நல்லவரும் பொருளென விசேடித்தார் ஞானார்த்தமென்பது விளக்குதற்கு. அறிவிலாதார் முட்பூவிற் றேன்போல ஒருவாறின்பமெனக் கொள்ளினும், அறிவுடையார் முட்போல முழுவதும் துன்பமெனக் கொள்ளும் பிறவி யென்பார் அல்லலெனும் பிறவி என்றாரெனக் கிளந்துரைக்க. அவ்வடிகளது பெருந்தகைபற்றிக் கூறுக என்னுது நாம் கேட்க வேண்டுமென உபசாரமாகக் கூறினாரென்க. அது முன்னர்த் தில்லையுள்ளார் பொருள் கேட்ப என்பதனானுமறிக. கேட்க என்னும் பாடத்தை மாற்றி வேறுபாடம் கற்பிப்பாருமுளர்.

ஓங்குபுகழ்த் திருவாத வூருறையெம் பெருமானுந்
தேங்கியமெய்ச் சிவஞான சிந்தையுடன் களிகூர்ந்து

பூங்கனகப் பொதுவெதிரே போய்ப்புகல்வே னெனப்போக
வாங்கவர்முன் சென்றுரு மன்பொடுபின் சென்றார்கள்.

இ—ள்: ஓங்கு புகழ்த் திருவாதவூர் உறை எம்பெருமானும் - ஒரு காலைக் கொருகான் மிக்கோங்கித் தழைக்கும் பெரும்புகழையுடைய திருவாதவூரிலே திருவவதாரஞ்செய்து வசித்த நஞ் சமயகுரவராகிய மாணிக்கவாசகசுவாமிகளும், களி கூர்ந்து - அதுகேட்டு மனம் மிகக் களிப்படைந்து, மெய்ச் சிவஞானம் தேங்கிய சிந்தை உடன் - மெய்ம்மையாகிய சிவஞானம் பொங்கி வழிகின்ற இருதயத்துடன், பூம் கனகப் பொது எதிரே போய்ப் புகல்வேன் எனப் போக - பொலிவாகிய கனகசபைக் கெதிரே போய் இவைகளின் பொருளை உங்கட்குச் சொல்வேனென்று கூறிச் சென்றருள, ஆங்கு அவர் முன் சென்றுரும் அன்பு ஒடு பின் சென்றார்கள் - அவ் வில்வவனத்து அவர்மாட்டு முன்சென்ற தில்லைவாழந்தணர்களும் அவர்மீதன்பு கூர்ந்து அவ்வடிகட்குப் பின்னுகச் சென்றனர் எ—று.

ஓங்குபுகழ் நிகழ்காலவினைத்தொகை. உறை பெருமானென்ப திறந்தகாலவினைத்தொகை. உம்மை முன்னையது உயர்வுசிறப்பும், பின்னையது இறந்ததுதழீஇயவெச்சமுமாம். சிந்தையுடன் போகவென வினையும். சென்றுரென்பது வினையாலணையும் பெயர். திருவாதவூரடிகளது திவ்விய சரித்திரம் புதிதுபுதிதாகக் கேட்கப்படுந்தோறும் ஒருகாலைக் கொருகான் மிக்கோங்கித் தழைக்கும் பெரும் புகழையுடைய திருவாதவூரென்பார் ஓங்குபுகழ்த் திருவாதவூரென்றும், அவ் வந்தணராற் கேட்கப்பட்டது தம் பரமாசாரிய சுவாமிகளது விஷயமே யாதலாற் களிகூர்ந்தென்றும், பொருள் சொல்லும்படி கேட்ட துணையானே தம்வயமின்றிச் சிறிதும் தடையற்றுச் சென்றுரென்பார் தேங்கிய மெய்ச் சிவஞான சிந்தையுடன் போக என்றும், தங் கேள்விக் கிசைந்தமையின் முன்னையினும் அவர்மீது அன்புகூர்ந்து பின் சென்று ரென்பார் ஆங்கவர்முன் சென்றுரு மன்பொடு பின் சென்றார்கள் என்றுங் கூறினர். (உஎ)

நின்றபுகழ்ப் புலியூரார் நேயமுடன் புடைசூழச்
சென்றருளுக் கிடமான செம்பொனினம் பலமெய்தி
யொன்றியவித் தமிழ்மாலைப் பொருளிவரென் றுரைசெய்து
மன்றதனிற் கடிதேகி மறைந்தனரங் கவர்காண.

இ—ள்: வாதவூர் உறை எம் பெருமான் - நஞ் சமயாசாரிய சுவாமிகளாகிய திருவாதவூரடிகள், நின்ற புகழ்ப் புலியூரார் நேயம் உடன் புடை சூழச் சென்று, திரிகாலத்தும் நிலை பெற்ற கீர்த்தியையுடைய சிதம்பரதல வாசிகளெல்லாம் பத்திமையோடு பக்கத்தே சூழ்ந்து சேவித்து வரச் சென்று, அருளுக்கு இடம் ஆன செம்பொனின் அம்பலம் எய்தி - பராசத்தியால் அதிட்டிக்கப்பட்ட சுத்த மாயா ரூபமாகிய கனகசபையை



யடைந்து, இத் தமிழ்மாலை ஒன்றிய பொருள் இவர் என்று உரை செய்து - இத் தமிழ்ப்பிரபந்தங்க ளுதலிய பொருள் இச் சிற்சபா மத்தியில் விளங்கும் சபாநாயகரேயாமென்று திருவாய்மலர்ந்து, மன்றதனில் கடிது எகி அவர் காண அங்கு மறைந்தனர் - அச் சிற்சபையின்கண் விரைந்து சென்று அவர்கள் சமஸ்தரும் நேரே காண அங்கே மறைந்தருளினர் எ—று.

வினைமுதல் மேலைச் செய்யுளி னின்றும் வருவிக்கப்பட்டது. தில்லைவாழந்தணர்களோடு இடைநெறிக்கண் வந்து சேர்ந்த சிதம்பர தல வாசிகள் பிறரும் அவ் வடிகண்மீ தன்புகூர்ந்து சென்று ரென்பார் ஈண்டும் புலியூரர் நேயமுடன் புடைசூழச் சென்றென்றார். 'தற்பரமாய்ப் பரபதமாய்த் தாவிலநுபூதியதாய், யற்புதமா யாரமுதா யானந்த நிலய வொளிப், பொற்பினதா யறிவரிதாய்ப் பொருளாகி யருளாகுஞ், சிற்பரமா மம்பரமாந் திருச்சிற்றம்பலம்போற்றி" என்பதனுலே திருவாதவூரடிகள் அந்தர்த்தானமான சிற்சபையினியல்பை அறிக. மறையெனினும் அந்தர்த்தானமெனினுமொக்கும். ( )

செய்காட்டுங் கமுகடவித் தில்லையுளார் பொருள்கேட்கக்
கைகாட்டித் தம்முருவங் காட்டாமன் மறைந்தாரைப்
பைகாட்டும் பேரரவப் பணியுடையார் தமக்கன்பு
மெய்காட்டிப் பாலுடனே மேவியநீ ராக்கினர்.

இ—ள்: செய் காட்டும் கமுகு அடவித் தில்லை உளார் பொருள் கேட்க - வயல்கள் தம்மிடத்துக்கொண்டு சேய்மைக்கட் காட்டும் கமுகங் காடு சூழ்ந்த தில்லைவாழந்தணர்கள் இப் பிரபந்தங்கட்குப் பொருள் என்னையென்று வினவ, கை காட்டித் தம் உருவம் காட்டாமல் மறைந்தாரை - அதற்குத் தங் கையினுலே சபாநாயகரைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தந் திருமேனியைக் காட்டாது மறைந்தருளிய திருவாதவூரடிகளை, பை காட்டும் பேர் அரவப் பணி உடையார் - படத்தை விரித்துக் காட்டும் பெரிய சர்ப்பத்தை ஆபரணமாகவுடைய சபாநாயகர், தமக்கு மெய் அன்பு காட்டி - தம்மிடத்து அவர் கொண்ட மெய்யன்பை நம்மனோர்க்கு இந்நிகழ்ச்சிகளாற் காட்டிவிட்டு, பால் உடனே மேவிய நீர் ஆக்கினர் - பாலோடு கலந்த நீர் அப் பாலாமாறு தம்மோடு கலந்து தாமாந் தன்மைப் பேரின்பப் பெருவாழ்வடையும்படி செய்தருளினர் எ—று.

சிவபெருமானது திருவருட் செயல்களெல்லாம் தம்பொருட்டன்றிப் பிறர் பொருட்டே செய்யப்படுவன என்பதனுனு மறிக; பிறர்பொருட்டன்றுயிற் நமக்கிந் நிகழ்ச்சிகளாற் போந்த பயனென்னை ஒன்றுமின்றென்பது தாற்பரியமாகவி னென்க. செய் - வயல். மிகுதிதோன்ற அடவியென்றார். பாலொடுகலந்த நீர் பிரிக்கப்படுதலு முண்மையின், இது கலப்புறுதற் ெருழிலைபற்றி வந்த ஒருபுடை யுவமையென்க. (உக)

வேறு.

அண்டனை யண்டர் கோனை யன்பின ரடையு மாறு
கண்டனர் புளக மெய்திக் கம்பித மாகி நின்று
விண்டனர் கசிந்து சிந்தை வேர்த்தனர் மேனி யெங்கும்
கொண்டனர் மகிழ்ச்சி செங்கை குவித்தனர் தில்லை யுள்ளார்.

இ—ள்: தில்லையுள்ளார் - அப்பொழுது சிதம்பரதலவாசிகளெல்லாம், அண்டனை - சிதாகாசரூபரை, அண்டர்கோனை - மகாதேவரை, அன்பினர் அடையும் ஆறு கண்டனர் - சிவபத்திமானாகிய திருவாதவூரடிகள் சித்தாந்தசைவ சுத்தாத்துவித முத்தியடையுந் தன்மையைக் கண்டார்கள், புளகம் எய்திக் கம்பிதம் ஆகி நின்று சிந்தை கசிந்து விண்டனர் - குதூகலங்கொண்டு சரீரம் விதிர்விதிர்த்து நின்று மனம் நெக்குநெக்குருகினார்கள், மேனி எங்கும் வேர்த்தனர் - சரீரமெங்கும் வியர்வை கொண்டார்கள், மகிழ்ச்சி கொண்டனர் - பரமானந்தமடைந்தார்கள், செங்கை குவித்தனர் - சிவந்த கைகளைக் கூப்பிக் கும்பிட்டு வணங்கினார்கள் எ—று.

சிந்தைவிண்டனர், மேனி வேர்த்தனர் என்பன சினைவினை முதலோடு முடிந்தன. புளகமும் சிந்தை விள்ளுதலும் செங்கை குவித்தலும் அன்பானும், கம்பிதமும் வெயர்வையும் அச்சத்தானும் வந்த மெய்ப்பாடுகளென்க. செய்யுளாகலின் விரவிக் கூறினார். இது அறுசீரடியாசிரிய விருத்தம். (௬௦)

வேறு.

பூத நடங்க டொடங்கின போத மகிழ்ந்தணு குங்கண
நாதர் புகழ்ந்தனர் தும்புரு நாரத ரங்கிசை கொண்டனர்
வேதமொ டந்தர துந்துபி மீது முழங்கி யெழுந்தன
மாதவ ரிந்திர ரைந்தரு மாமலர் சிந்தி வணங்கினர்.

இ—ள். அணுகும் பூதங்கள் போத மகிழ்ந்து நடம் தொடங்கின - அப்பொழுதாகாயமார்க்கமாக வந்த பூதங்கள் மிக மகிழ்ந்து ஆனந்தக் கூத்தாடின, கணநாதர் புகழ்ந்தனர் - சிவகணநாதர்கள் துதித்தார்கள், தும்புரு நாரதர் அங்கு இசை கொண்டனர் - தும்புருவும் நாரதரும் அவ்வாகாயத்திலே சாமவேத கீதம் பாடினார், வேதம் ஒடு அந்தர துந்துபி மீது எழுந்து முழங்கின - வேதங்களும் தேவதுந்துபிகளும் ஆகாயத்திலே யெழுந்து மிக்கொலித்தன, மாதவர் இந்திரர் ஐந்தரு மாமலர் சிந்தி வணங்கினர் - பெரிய தபோதனர்களும் இந்திராதி தேவர்களும் பஞ்சதருக்களின் சுவர்ண புஷ்பாஞ்சலி செய்து அவ்விருவரையும் வணங்கித் துதித்தார்கள். எ—று.

ஒடு எண்ணொடு; உயர்பின்வழித்தாய ஒருவினை ஒடுச்சொல்லென்றலும் ஒன்று. விகுதிகள் பிரித்துக் கூட்டப்பட்டன. நடனபேதங்கள் விளக்குதற்கு நடங்களென்றாரெனினு மமையும். மகிழ்ந்து அணுகும் என்னு மெச்சங்களை ஏற்குமிடமெங்குங் கூட்டிப் பொருள்கொள்க. வேதமொடந்தர துந்துபி முழங்கின என்பது கருமகருத்தா. மாதவ ரிந்திரர் என்பதற்கு அரிபிரமேந்திராதி தேவர்க ளென்பாருமுளர். அணுகுமென்றார் இச்செய்யுள் ஆகாயவாசிகள் செய்தியும் மேலைச் செய்யுள் சிதம்பர தலவாசிகள் செய்தியும் என்னும் வேறுபாடு தெரித்தற்கென்க. (௬௧)



ஞான நடம்பயில் சங்கர நாம மிருந்துள நெஞ்சினர்
மோன சுகந்த முடன்சிவ பூசை முயன்று நயந்தவ
ரூனமி லன்பொடு தென்புலி யூரி லுறைந்து சிறந்தவர்
வானக மும்பர வுந்திரு வாசக வின்ப நுகர்ந்தனர்.

இ—ள்: ஞான நடம் பயில் சங்கரன் நாமம் இருந்துள நெஞ்சினர் - சூக்கும நடனஞ் செய்தருளும் சிவபெருமானது திருநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரம் குடிகொண்டிருக்கும் மனத்தையுடைய யோகிகளும், மோன சுகந்தம் உடன் சிவபூசை முயன்று நயந்தவர் - மௌனத்தோடும் சுகந்தவர்க்கங்களோடும் சிவபூசையை விடாது முயன்று செய்து நன்மையை யடைந்த கிரியாவான்களும், ஊனம் இல் அன்பு ஒடு தென் புலியூரில் உறைந்து சிறந்தவர் - குற்றமற்ற அன்பினுடனே தெற்கின்கணுள்ள சிதம்பரத்தில் வசித்தலான் முன்னை யிருவரோ டொப்பச் சிறந்த சரியாவான்களும், வானகமும் பரவும் திருவாசக இன்பம் நுகர்ந்தனர் - விண்ணுலக வாசிகளாகிய தேவர்களும் துதிக்கத் தகும் திருவாசகந் திருக்கோவையார் என்னுந் தமிழ்வேதங்களின் சொற்சுவை பொருட்சுவைகளை நன்கனுபவித்தனர் எ—று.

ஞானநடம்பயில் சங்கர நாமமிருந்துள நெஞ்சினரென உட்டொழிலே பற்றி ஓதுதலின் யோகிகளென்பதூஉம், புலியூரிலுறைந்து சிறந்தவரெனப் புறத்தொழில்பற்றி ஓதுதலிற் சரியையாளரென்பதூஉம் பெற்றாம். உடனென்னும் சொல்லுருபு மோனமுடனென முன்னுங் கூட்டப்பட்டது. வானகம் ஆகுபெயர். உம்மை சிறப்பும்மை. சுகந்தம் சந்தனம் புஷ்பம் முதலியன வாசனைவர்க்கம்; மோனமாகிய சுகத்தின் அந்தத்தில் உடனே செய்யப்படும் சிவபூசை யென்றுமாம். நயம் நன்மை; அஃதீண்டுப் பிறந்ததினாற் பெறும் பேரின்பமேனின்றது. புலியூரிலுறைந்து சிறந்தவரெனவே சிவாலயசேவை முதலிய தொண்டுசெய்யும் கிரியையாளர்க்கும் அவை செய்தற்கட் சிதம்பரமே சிறந்த தலமென்பதூஉம் போதருமென்க. (௬௨)

வேறு.

ஈனமிருந் துளதோறு மென்புநரம் புஞ்சீயு
மானவுடல் சிவரூபமா மிதனைத் தெளியாம
லூனுடலுக் கிரைதேடி யுழன்றுலகிற் றடுமாறி
மாநரகிற் புகுதுமதோ மாயைவலைப் படுவார்கள்.

இ—ள்: மாயைவலைப் படுவார்கள் - மாயாகாரியமாகிய பிரபஞ்சவலையிற் சிக்குண்ணும் நம்மவர்கள், ஊனம் மிகுந்துள தோலும் என்பும் நரம்பும் சீயும் ஆன உடல் - இழிவு மிகுந்துள்ள தோலும் எலும்பும் நரம்புஞ் சீயும் முதலிய சத்த தாதுக்கண் மயமாகிய திருவாதவூரடிகளது உடம்பும், சிவரூபம் ஆம் இதனைத் தெளியாமல் - ஈண்டுச் சிவரூபமாகிய இதற்குக் காரணமென்னை யென ஆராய்ந்து அது சிரத்தை யன்பேயா மெனத் தெளிந்து தாமும் அவ்வன்பைச்செய்து உய்யாமல், ஊன் உடலுக்கு இரை தேடி உலகில் உழன்று தடுமாறி - தசைப் பொதியாகிய இவ்வுடம்பிற்கு உணவைத் தேடி அதுநிமித்தம் உலகெங்கும் சுழன்று தடுமாறித் திரிந்து, மா நரகில் புகுதும் அது ஓ - முடிவிற் பெரிய நரகத்தின்கண் வீழ்ந் தழுந்தும் அதுவோ தெளிந்து செய்யத்தக்கது! ஐயையோ! இஃதென்னை தகவின்மை! எ—று.

உடல் சிவரூபமாதல் சதேகமுத்தி யடைதல். இது சொரூபமானந்த முத்தியெனவும் பெயர் பெறும். விதேகமுத்தியென வேறொன் றுண்மையின் இங்ஙனம் விதந்து கூறினர். உடல் மாயேயமாகிய மலமாகலின், அது ஈண்டுச் சிவரூபமாம் என்றது, கட்புலனாகாது ஞானக்கினியாற் றகிக்கப்படும் விசேடம்பற்றி நேர்ந்த துதிவாதமெனவுய்த்துணர்ந்து தெளிக. இதற்குப் பிறிது கூறுவாருமுளர். ஊன மிகுந்துள தோலு மென்பு நரம்புஞ் சீயு, மான என்னும் அடை உடம்புகட்கெல்லாம் பொதுத்தன்மையை விசேடித்து நின்றது. ஓகாரம் கழிவிரக்கப்பொருட்கண் வந்தது. ஒரு சொன்னீர்மைப்பட்டு நிற்கும் தெளிந்து செய்யத் தக்கதென்னும் தோன்று எழுவாய் அவாய்நிலையானும், ஐயையோ இஃதென்னை தகவின்மை என்பது இசையெச்சத்தானும் வருவிக்கப்பட்டன. உழலல் உதர நிமித்தம் தொழின் முயற்சிகளை மேற்கோடற்கும் மேற்கொண்டவற்றை வழுவாது செய்தற்கும் ஒருகாற் சென்றழிப் பலகாற் சேறல். தெளிதல் - உண்மையுணர்தல். அங்ஙனந் தெளியாமைக்கேது பாசத்தடையே பிறிதில்லையென்பார் மாயைவலைப் படுவார்களென அவ்வேதுவை உடம்பொடு புணர்த்துக் கூறினர். உட்கொள்ளப்பட்ட ஆவினறும் பாலும் சருக்கரையும் முப்பழங்களும் தேனும் கண்டும் இவை போல்வன பிறவும் பின் மலமாய் வெறுப்பொடு கழிக்கப்படுதல் அப்பொருள்களின் குற்றமன்று; உடம்பின் குற்றமே யென்பார், ஊன மிகுந்துள தோலு மென்பு நரம்பும் சீயு, மானவுடலென விசேடித்தார். அது, "ஆனமுதுஞ் சருக்கரையு மருங்கனியும் பசுந்தேனு, மூனமுறு மலமாத லுதரமதிற் புகுந்தன்றே, கானுலவு நறுந் தெண்ணீர் கடியுமுவர்ப் புனலாத, லீனமிகு முடைக்குரம்பை யிதிற் புகுதப் பெய்தன்றே" "நறுந்தவளத் துகிலழுக்காய் நாறுதற்கு நவையுடம்பினுறுந் தவறு தனையன்றி யொரு நிமித்தம் பிறிதுண்டோ" என்பவற்றானுமறிக. ஆசிரியர் தாம் செய்யுள் செய்ய எடுத்துக்கொண்ட திருவாதவூரடிகளது சரித்திரமாகிய நுதலியபொருண் மேலைச்செய்யுள் காறுங் கூறப்பட்டு முடிந்தவழி இச்செய்யுளால் இச்சரித்திர சாரமாய்த் தம்முள்ளத்துத் தோன்றிய பாவமெனப்படும் அபிப்பிராயத்தை இந்நூல் பயில்வோரை நோக்கிக் கூறியவாறென்க. இது கொச்சகக்கலிப்பா. (௬௬)



வேறு.

வாதவூ ரந்தணர் தந்திரு வாய்மை விளங்கு திருக்கதை<br>
யோதின ரன்புட னொண்செவி யூடு முகந்தது கேட்டவர்<br>
போதமெய்ஞ் ஞான முறுஞ்சுக போக முடன்புகழ் பெறுவர்க<br>
ளேதில் பவங்க டொலைந்துபின் சேர்குவர் வண்சிவ லோகமே.

இ—ள்: திருவாதவூர் அந்தணர் தம் வாய்மை விளங்கு திருக்கதை - அழகிய தண்ணளியையுடைய திருவாதவூரடிகளது சரித்திரவுண்மையை விளக்கும் இத்திருப்புராணத்தை, அன்பு உடன் ஓதினர் - அன்போடு வாசித்தவர் பொருள் சொன்னவர்களும், ஒண் செவி ஊடு முகந்து அது கேட்டவர் - அழகிய செவிகளான் முகந்து அதனை உற்றுக் கேட்டவர்களும், போத மெய்ஞ் ஞானம் உறும் சுக போகம் உடன் புகழ் பெறுவர்கள் - இறப்பவும் மெய்ஞ்ஞானத்தையும் தகுதியாகிய சுகபோகவாழ்வையும் புகழையும் இம்மைக்கட் பெறுவார்கள், பின் பவங்கள் தொலைந்து ஏதில் வண் சிவலோகம் சேர்குவர்—தேகாந்தத்திற் பிறவிக்கேதுவாகிய இருவினைகடொலையுமாறு தீதற்ற வளவிய சிவலோகத்தை அடைவார்கள் எ—று.

விளக்கெனற்பாலது இன்னிசைபற்றி விளங்கென மெலிந்து நின்றது; வாய்மை தானே வெளிப்பட்டு விளங்கு திருக்கதை என்றுமாம். பவம் ஆகுபெயர். தொலைய என்னும் காரியப்பொருட்டாய செயவென் வாய்பாட்டு வினையெச்சம் தொலைந்தெனத் திரிந்து நின்றது. அரச வாழ்வென்பது விளக்குதற்கு உறுஞ் சுகபோகவாழ்வென விசேடித்தார். அது புத்திமகிழப் புவிபுரப்பர் என மேற்கூறியவாற்றானுமறிக. அன்பின்றி ஓதினோர்க்கும் கேட்டோர்க்கும் அதனாற் பெரும் பயனின்மையின் அன்புடனென்றும், ஒருவற்கு இம்மைக்கண் மெய்ஞ்ஞானமும் புகழு மின்றிப் பெறுஞ் சுகபோகவாழ்வு விலங்கின் வாழ்வோடு ஒக்குமாகலின் இக் நன்மக்கள் சுகபோகவாழ்வுடன் அவற்றையும் பெறுவார் என்பார் 'போத மெய்ஞ்ஞானமுறுஞ் சுகபோகமுடன் புகழ் பெறுவர்கள் என்றும், பின் படிமுறையானே பரமுத்தி யடைதற்கேதுவாகிய சிவலோகமென்பார் ஏதில் பவங்கடொலைந்து பின் சேர்குவர் வண்சிவலோகம் என விசேடித்துங் கூறினர். ஞாபகங் கூர்வித்து வலியுறுத்தற்கு நூற்பயன் இறுதிக்கண்ணும் கூறுதல் ஆன்றோராசாரமென்க. இது அறுசீரடி ஆசிரியவிருத்தம். (௬௭)

வேறு.

பூதல மாதும் வாழ்க பொன்மழை பொழிந்து வாழ்க<br>
வேதவா கமமும் வாழ்க வேந்தர்செங் கோலும் வாழ்க<br>
தீதிலந் தெழுத்து நீறுஞ் சிவனடி யாரும் வாழ்க<br>
வாதவூ ரிறைபு ராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க.

இ—ள்: வேந்தர் செங்கோலும் வாழ்க - அரசரது செங்கோலும் நீடூழி வாழுக, பொன் மழை பொழிந்து வாழ்க - பொன்போலும் மழையும் மாத மும்மாரி பொழிந்து நீடூழி வாழுக, பூதல மாதும் வாழ்க - பூமிதேவியும் நீடூழி வாழுக, தீதில் ஐந்தெழுத்தும் நீறும் சிவன் அடியாரும் வாழ்க- தீதற்ற சிவமூலமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரமும் சிவசின்னங்களாகிய விபூதி உருத்திராக்ஷங்களும் சிவபத்தர்களும் நீடூழி வாழுக, வாதவூரிறை புராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க - இத் திருவாதவூரடிகள் புராணத்தை நியமமாக அன்போடு வாசித்தவர் பொருள் சொன்னவர்களும் கேட்டோர்களும் நீடூழி வாழுக எ—று.

பொன்மழையுமென எண்ணும்மை விரிக்க; பொன் போலப் போற்றிக் கொள்ளப்படும் மழை என்றவாறு; வேதவாசக மென்பது தமிழ்நான் முடிபு. இவ் வாதவூர், முதன் மூன்று யுகங்களினும் முறையே ஆதித்தபுரம், சோமபுரம், அசுவினிபுர மெனவும், இக்கலியுகத்தில் வாதபுரமெனவும் பெயர்பெற்றதென்க. அது, "ஆதி யாதித்தன் சோம னசுவினி யிவர்தம் பேரால், வேதியர் தமைவந் தேற்றி விமலனை யுகங்கண் மூன்றுங், காதலின் வணங்கக் கண்டு கடையுகம் வாதராச, னீதியால் வணங்க வாதபுர மென நிகழ்ந்த தன்றே" என்பதனானுமறிக. இவையும், இவரும் இங்ஙனம் நின்று நிலவின் இந்நூல் இனிதுநின்று நிலவுமாகலின், இவ்வேதுக்கள் வாயிலாக இந்நூற்கு இறுதிக்கண் மங்கலவாழ்த்துக் கூறியவாறென்க. ஈண்டிறை என்பது தலைவர் என்னும் பொருட்டாய் அடிகள் என்னுந் தாற்பரியத்தைத் தந்து நின்றது, அது, "ஆளுடைய பிள்ளைதிரு வடிபோற்றி யரன்காழி ஆளுடைய வரசுதிரு வடிபோற்றி யணியதிகை, ஆளுடைய நம்பிதிரு வடிபோற்றி யாரூரெம், ஆளுடைய வடிகடிரு வடிபோற்றி யருள்போற்றி" என்புழியும் பிறண்டும் வரும் ஆன்றோராட்சி பற்றித் தெள்ளிதிற் றுணியப்படுமென்க. (௫௫)

திருவடிபெற்ற சருக்கம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம், ௬சச.

திருவாதவூரடிகள் புராணம் முற்றுப்பெற்றது

**திருவாதவூரடிகள் திருவடிவாழ்க.**

மெய்கண்ட தேசிகன் றிருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

திருவாத வூரடிகள் சரிதையே சிவசரிதை
திருவாத வூரடிகண் ஞானமே சிவஞானந்
திருவாத வூரடிக டிருவாக்கே சிவவாக்குத்
திருவாத வூரடிகள் சிவமிஃதென் சிந்திதமே.